# வரலாற்று மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்களும், வழிபாட்டு அமைப்புகளும்

## - ஓர் ஆய்வு



மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கம்

2022

Cetakan pertama 2022

**ISBN 978-967-26985-0-0**



நூல் வெளியீடு:
**மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கம்,**
21-C, Taman Sentosa, Bukit Baru,
75150 Melaka.
eMail: peruraju@yahoo.com

Perpustakaan Negara Malaysia Data Pengkatalogan-dalam-Penerbitan

Persatuan Pengkaji Sosial Sukarela Melaka, 2022

Harga Buku: RM100.00

1. Malaysia - History - Hindu Temples in Melaka
2. Malaysia - Pendidikan - Sejarah Penubuhan Kuil Hindu di Melaka
3. Agama Hindu - Kuil Hindu di Negeri Melaka
4. Melaka - Kuil dan Pertubuhan Agama Hindu di Negeri Melaka

I Judul : வரலாற்று மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்களும், வழிபாட்டு அமைப்புகளும் - ஓர் ஆய்வு

II Pengkelasan Dewey : 294.5350720595118

Reka Bentuk / Reka Letak : Metro Digital Design (001969299-K) Tel: +6017- 2210 884

Font : Murasu - TAM Alli
Saiz Teks : 11 point

Muka surat : 464

Dicetak oleh :
FIRDAUS PRESS SDN.BHD. (986966-A)
No 28, Jalan PBS 14/4, Taman Perindustrian Bukit Serdang,
43300 Seri Kembangan, Selangor Darul Ehsan.

நூல் கிடைக்குமிடம்:
உமா பதிப்பகம்,
85, Jalan Perhentian, Sentul, 51100 Kuala Lumpur.
Tel : 03-4041 1617 & 03-4044 0441
eMail : umapublications@gmail.com




# KATA-KATA ALUAN<br>KETUA MENTERI NEGERI MELAKA



**Salam Sejahtera dan Salam Melakaku Maju Jaya,**
**Rakyat Bahagia, Menggamit Dunia.**

Terlebih dahulu, bagi pihak Kerajaan Negeri Melaka, Saya merakamkan tahniah kepada Persatuan Pengkaji Sosial Sukarela Melaka atas usaha untuk mengkaji sejarah serta kedudukan 146 kuil Hindu yang masih wujud di Negeri Melaka. Saya difahamkan terdapat sebanyak 44 kuil di daerah Melaka Tengah, 46 kuil di daerah Jasin dan 56 kuil di daerah Alor Gajah yang masih mengadakan perayaan tahunan serta mempunyai bilangan penganut yang ramai.

Negeri Melaka memang terkenal sebagai pusat interaksi pelbagai kaum, bahasa dan agama sejak zaman Kesultanan Melayu Melaka. Mengimbau lembaran sejarah, Masyarakat Chitty Melaka yang wujud daripada proses asimilasi pedagang Hindu yang berkahwin dengan wanita tempatan sejak zaman Kesultanan Melayu Melaka, masih mempunyai 10 kuil di Negeri Melaka sehingga hari ini. Kuil-kuil lain pula dibina semasa zaman penjajahan Inggeris apabila pekerja beragama Hindu dibawa ke Negeri Melaka untuk bekerja khususnya di ladang-ladang getah. Sebanyak 101 kuil Hindu yang masih wujud di Negeri Melaka dibina sebelum negara kita merdeka pada tahun 1957.

Sejarah penempatan masyarakat India dapat dilihat melalui taburan kuil-kuil Hindu di negeri Melaka. Namun, pembangunan pesat di Negeri Melaka, menyebabkan penganut agama Hindu terpaksa berpindah, memerlukan kesanggupan masyarakat Hindu untuk melakukan perubahan-perubahan yang sesuai supaya amalan agama mereka dapat dilaksanakan tanpa sebarang masalah di negeri ini.

Besar harapan saya agar penerbitan buku ini bukan sahaja menjadi satu rekod sejarah, malah juga mencetuskan anjakan paradigma agar segala berkaitan kuil dan agama Hindu dapat diselaraskan dengan diberikan bimbingan oleh para pemimpin mereka secara wajar. Semoga penerbitan buku ini membawa pemahaman serta rujukan tentang kuil-kuil dan pertubuhan Hindu di Negeri Melaka kepada umum.

Sekian, terima kasih.

**“MELAKAKU MAJU JAYA, RAKYAT BAHAGIA, MENGGAMIT DUNIA”**

**(DATUK SERI UTAMA HAJI SULAIMAN BIN MD ALI)**
*Ketua Menteri Melaka*



**KOPERASI NLFCS BERHAD**

தேசிய நில நிதி கூட்டுறவு சங்கம் லிமிடெட்
National Land Finance Co-operative Society Limited

Level 10, Wisma Tun Sambanthan, No.2, Jalan Sultan Sulaiman, Peti Surat 12133, 50768, Kuala Lumpur, Malaysia
Tel: 03-22731250 / Fax: 03-22740826 / Email: info@nlfcs.com.my

## தேசிய நில நிதி கூட்டுறவு சங்க நிர்வாக இயக்குனர் மதிப்புமிகு டத்தோ பா.சகாதேவன் அவர்களின் வாழ்த்துச் செய்தி



வணக்கம்.

தீபகற்ப மலேசியாவில் வரலாற்றுச் சிறப்பு மிக்க மாநிலமாக திகழும் மலாக்கா, 2008ம் ஆண்டில் யுனேஸ்கோ நிறுவனத்தால் ஒரு பாரம்பரிய தளமாக அறிவிக்கப்பட்டது. புராதனங்களுக்கு பிரபலமான மலாக்கா மாநிலத்தின் சிறப்புகளுக்கு இந்த அங்கீகாரம் மேலும் ஒரு மைல் கல்லாகும்.

இந்த மாநிலத்தில் உள்ள கோயில்களையும் இந்து அமைப்புக்களையும் குறித்த ஓர் ஆய்வினை மேற்கொண்டு, காலத்திற்கேற்ற பதிவினை செய்துள்ள மலாக்கா தன்னார்வ சமூக ஆய்வாளார்கள் சங்க குழுவினருக்கு எனது வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் உரித்தாக்கிக் கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன். மாநிலத்தில் உள்ள 146 கோயில்களையும், பதினேழு இந்து சமயம் சார்ந்த அமைப்புக்கள் குறித்த விளக்கங்களும் இந்த நூலில் இடம் பெற செய்துள்ளது மிகப்போற்றத்தக்கப் பணி மற்றுமின்றி, காலத்திற்கேற்ற ஒரு முக்கியப் பதிவாகவும் அமைகின்றது.

இந்த உன்னதப் பணியின் மூலம், நமது இந்து சமயத்தைப் பற்றியும், வழிபாட்டு முறைகளைப் பற்றியும், நம் நாட்டின் மற்ற இனங்கள் தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படும். உலகில் மூத்த இனம் என்றும், நம்மொழியே மூத்த மொழியென்றும் கொண்டாடும் நாம், நமது, சமயம், கலை, கலாச்சாரம், பாரம்பரிய பண்பாடுகளை உலகம் முழுதும் கொண்டு சேர்க்கும் பணியிலும் பங்காற்ற வேண்டும்.

நமது தொன்மையான மொழி, மதம், சமயம் சார்ந்த வரலாறுகளின் வேர்களைத்தேடி அதனை பதிவு செய்வதென்பது அடுத்து வருகின்ற தலைமுறைகளுக்கு நாம் விட்டுச்செல்லக்கூடிய ஆவணப்பதிவுகளாகும்.

நன்றியும் வாழ்த்துக்களும்.

அன்புடன்

**டத்தோ பா.சகாதேவன்** PJN, SSA, PPT, ANS
நிர்வாக இயக்குனர்
தேசிய நில நிதி கூட்டுறவு சங்கம்.
*DS/ps*




# வாழ்த்துரை

**மாண்புமிகு திரு வி.பி. ஷண்முகம்**
ஆட்சிக்குழு உறுப்பினர்
(இளைஞர் மற்றும் விளையாட்டு மேம்பாட்டுத் துறை
மற்றும் அரசு சார்பற்ற அமைப்புகள்)



வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்த நூலுக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெரும் மகிழ்வு கொள்கிறேன். அன்றிலிருந்து இன்று வரை சமூகத்தின் வரலாற்றை மலாக்கா மாநிலத்தில் பரவலாகக் காணப்படும் இந்துக் கோயில்கள் பிரதிபலிக்கின்றது என்பதை உறுதியாகக் கூறலாம். மலாக்கா நகரில் உள்ள மலாக்கா செட்டிகள் சமூகத்தினரின் கோயில்கள் பல நூற்றாண்டுகளாக இவர்கள் இங்கு வசித்து வருவதைப் பிரதிபலிக்கின்றது. அதே போல், மலாக்கா தெங்கா, ஜாசின் மற்றும் அலோர் காஜா மாவட்டங்களில் உள்ள கோயில்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் தற்போது வரை இந்து சமூகம் வாழ்ந்த பகுதிகளைக் காட்டுகின்றன.

பல்வேறு வகையான இந்துக் கோவில்கள் இந்த மாநிலத்தில் முதலில் குடியேறிய இந்து சமூகத்தின் வரலாற்றைக் குறிப்பது மட்டும் அல்லாமல், மேலும் அவர்கள் வாழ்ந்த பின்னணியின் விவரங்களைக் காண முடிகின்றது. இந்த ஆய்வில் உள்ள 146 கோவில்களில் 101 கோவில்கள் நம் நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்பே கட்டப்பட்டவை என்பதால், அவற்றில் பல அன்றைய இந்து சமூகத்தின் பணியிடமாக இருந்த ரப்பர் தோட்டங்களில் இருந்தன. அச்சமயத்தில் இந்தக் கோவில்களுக்கு அரசு தரப்பினரின் எந்த அனுமதியும் தேவையில்லாமல் இருந்தது. பல தோட்டங்கள் எண்ணெய்ப்பனைக்கு மாறியுள்ள இந்நிலையில் சில தோட்டங்களில் உரிமையாளர்களும் மாறியுள்ளனர். மேலும், சில தோட்டங்கள் தொழில் துறை அல்லது குடியிருப்புப் பகுதிகளாக மாற்றப்பட்டுள்ளன. இதனால் பல இந்துக்கள் பல ஆண்டுகளாகப் பாரம்பரியமாக வசித்த அந்தத் தோட்டங்களிலிருந்து வெளியேற வேண்டிய கட்டாயச் சூழ்நிலை எழுந்துள்ளது.

இத்தகைய மாற்றங்களால் இந்த மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்கள் செயல்படுவதில் பல்வேறு நிலைகளில் பிரச்சினைகளை எதிர்நோக்கியுள்ளன. மலாக்கா மாநிலத்தில் 56 கோயில்கள் மட்டுமே தனக்குச் சொந்தமான நிலத்தில் இருப்பதும், மீதமுள்ளவை பிற தரப்பினருக்குச் சொந்தமான நிலத்தில் இருப்பதும் ஆச்சரியப்படுவதற்கில்லை. 2019 மற்றும் 2020 இல் இருந்த கோயில்களின் நிலவரத்தைப் பதிவு செய்யும் முயற்சியே இந்த ஆய்வு. இதன் மூலம் மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக்களின் பாரம்பரியத்தை வருங்கால சந்ததியினர் தொடர்ந்து புரிந்து கொள்ள முடியும் என்பதோடு மேலும், மலாக்காவில் உள்ள இந்துக்கள் இன்று இங்கிருக்கும் இந்தக் கோயில்களின் எதிர்காலம் மற்றும் எதிர்காலத்தில் இவை எதிர்நோக்கும் பல்வேறு சவால்கள் அவற்றை எதிர்கொள்வதற்கான வழிமுறைகளைப் பற்றி சிந்திக்க வழி ஏற்படுத்தப்பட்டுள்ளது எனலாம்.

எனவே, இந்த ஆய்வு இன்றைய சூழலில் பொருத்தமான ஒன்றாக நான் கருதுகின்றேன். மேலும், மலேசியாவில் உள்ள மற்ற மாநிலங்களை ஒப்பிடும்போது இந்த முயற்சி முதலாவது என்பதில் நான் பெருமைப்படுகிறேன். மேலும், பல இன சமய சமூகத்தில் வாழும் இந்துக்களின் மேன்மைக்காகவும் மற்றும் ருக்குன் நெகாரா கொள்கைக்கேற்ப மலாக்கா மாநிலத்தில் உள்ள கோவில்கள் மற்றும் அனைத்து இந்து சமய விவகாரங்களையும் எவ்வாறு ஒருங்கிணைக்க முடியும் என்பதைக் கோவில்களிலும் மற்ற அமைப்புகளிலும் உள்ள அனைத்து இந்து மதத் தலைவர்கள் மற்றும் பொறுப்பாளர்களும் ஒன்றிணைந்து செயல்படுவார்கள் என்று நம்புகிறேன்.

நன்றி.

**(வி.பி. ஷண்முகம்)**



# மலேசிய இந்துதர்ம மாமன்றம்
# MALAYSIA HINDHUDHARMA MAAMANDRAM

(PPM-003-10-07051982)

No. 61, 2A -2nd floor, Pearl Court, Jalan Thamby Abdullah,
50470 Brickfields, Kuala Lumpur. Tel. No: 03-2276 1256

## தேசியத் தலைவர் அவர்களின் வாழ்த்துச் செய்தி



**நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா**
**நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்**
**புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்**
**பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்**
**தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்**
**சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்**
**அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்**
**ஆரூரா என்றென்றே அலறா நில்லே**

- திருநாவுக்கரசர் தேவாரம் - திருமுறை 6

ஸ்ரீ மீனாட்சி சமேத ஸ்ரீ சுந்தரேஸ்வர சுவாமி பொற்பாத திருவருள் பரிபூரணமாக யாவருக்கும் கிட்டிட பிரார்த்திக்கின்றோம். மலேசிய திருநாட்டின் வரலாற்றில் மகுடமாக விளங்குவது மலாக்கா மாநிலம். ஆதிகாலம் தொட்டே இந்து சாம்ராஜ்யமாகவும் உலகின் கிழக்கு மேற்கு வாணிப கப்பல் வழி பயணத்தின் மத்திய பன்னாட்டு வாணிப மைய துறைமுகமாகவும் மலாக்கா திகழ்ந்துள்ளது. இவ்வாணிபத்தில் இந்திய வணிகர்கள் குறிப்பாகத் தமிழர்களின் பங்கு அளப்பரியது. அவர்களில் சிலர் அன்று மலாக்காவில் குடியேறி தங்கள் வழிபாட்டிற்கு கோயிலை நிறுவி நம் பாரம்பரியத்தை இன்று வரை பேணிக்காத்து வருகின்றனர். பின்னர் ஆங்கிலேயர் காலத்தில் தோட்டப்புறங்களில் குடியேறிய இந்துக்கள் தமிழ்ப்பள்ளிகளையும் கோயில்களையும் தோட்டங்கள் தோறும் நிறுவி தங்கள் பாரம்பரியத்தைக் கட்டிக்காத்து வந்தனர். அன்று நம் முன்னோர்கள் அடித்தளம் இட்டதனால் இன்றும் நாம் இந்துக்களாக வாழ்வதோடு ஆலயங்கள் நமது பாரம்பரியத்தின் அடையாளச் சொத்துக்களாக அமைந்துள்ளன.

அவ்வகையில் மலாக்கா மாநிலத்திலுள்ள 146 இந்துக் கோயில்களுள் நாடு சுதந்திரமடைவதற்கு முன்பே நிறுவப்பட்ட 101 ஆலயங்களையும் ஆய்வுக்கு உட்படுத்தி முழுமையாகத் தரவுகளைச் சேகரிக்க ‘மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் குழு ஒன்று உதிக்க வித்திட்ட மதிப்பிற்குரிய மலாக்காவின் தமிழ் மாணிக்கம் தொ.க. நாராயணசாமி அவர்கள் பாராட்டுக்குரியவர். பின்னர் மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கத்திற்கு பேராசிரியர் டத்தோ முனைவர் திரு. பரமசிவம் முத்துசாமி அவர்களைத் தலைவராக நியமித்து அவர் தலைமையில் ஆய்வாளர்களால் திரட்டப்பட்ட தரவுகளைத் தொகுத்து ‘வரலாற்று மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோவில்களும், வழிபாட்டு அமைப்புகளும்: ஓர் ஆய்வு’ எனும் தலைப்பில் சிறந்த நூலாக வெளியிட்டுள்ளது போற்றுதற்குரியது.

இந்த ஆய்வு நூல் காலத்தின் கட்டாயம் மட்டுமின்றி ஒரு வராலாற்றுப் பதிவாகவும் விளங்குகிறது. மலேசியாவிலேயே முதன் முறையாக வெளி வந்துள்ள இத்தகைய ஆய்வு நூலில் மலாக்கா மாநிலத்திலுள்ள தமிழ் இந்துக் கோயில்கள், இந்து சமயத்திற்குக் குருக்கள்மார்களின் பங்கு, இவற்றையொட்டிய படங்கள், மாநிலத்தில் இயங்கும் இந்து இயக்கங்கள் எனும் தலைப்புகளில் நான்கு பகுதிகளாக உள்ளடக்கங்கள் பகுக்கப்பட்டுள்ளன.

மேலும், மாநில ஆலயங்கள் எழுந்தருளியுள்ள நிலங்களின் உரிமம், ஆலயங்களின் பதிவுத் தகுதிகள் பற்றிய புள்ளி விபரங்கள் மிகவும் துல்லியமாக வழங்கப்பட்டுள்ளன. அதோடு கோயில்கள் எதிர்கொள்ளும்

சவால்களும் அவற்றிற்கான தீர்வுகளையும் பரிந்துரைகளாக வழங்கியுள்ளது பாராட்டுக்குரியது. ஆலயங்களை வட்டார இந்துக்களின் பங்களிப்போடு சமூக மேம்பாட்டு மையங்களாகத் திகழச் செய்ய வேண்டும் என்ற பரிந்துரை போற்றுதலுக்குரியது.

இந்த அணுகுமுறையைப் பின்பற்றி மற்ற மாநிலங்களில் வாழும் இந்துக்களும் அவசியம் மேற்கொள்ள வேண்டிய ஒரு சமூகப் பணியாக இதனைக் கருத வேண்டும். ஒவ்வொரு ஆலயத்தைப் பற்றிய புள்ளி விபரங்கள் அந்தந்த ஆலயங்களின் வரலாற்றுப் பின்னணியைப் பதிவு செய்வதற்கு மட்டுமின்றி அவற்றின் மேம்பாட்டிற்கும், அரசாங்க உதவிகளைப் பெறுவதற்கும், இந்துக்கள் எளிதில் ஆலயங்களுக்கு ஸ்தல யாத்திரைகள் மேற்கொள்வதற்கும், மாநில சுற்றுலாத் துறை மேம்பாட்டிற்கும், பொது இயக்கங்களின் பயன்பாட்டிற்கும் பேருதவியாக விளங்கும் என்பது திண்ணம். இச்சீரிய ஆய்வினை வெற்றிகரமாக மேற்கொண்டு அதனை ஆய்வு நூலாக வெளியிட்ட மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கத்திற்கு மலேசிய இந்து தர்ம மாமன்றம் தமது மனம் நிறைந்த நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறது.

திருச்சிற்றம்பலம். மங்களம்.

அன்புடன்,

அடியவன்

**இராதாகிருஷ்ணன் அழகுமலை** A.M.N.
*தேசியத் தலைவர்*
**மலேசிய இந்துதர்ம மாமன்றம்**
Tel: 019-2648667
alaradha5669@gmail.com

23.3.2022

# முன்னுரை

மலாக்கா, மலேசியத் தமிழர்களின் வாழ்வியல், கலை, சமயம் போன்ற கூறுகளின் வரலாற்று விழுமியங்களைக் காட்டுகின்ற மாநிலம் என்றால் அது மிகையாகாது. ஒட்டு மொத்த தமிழர்களின் பின்னணிகளுக்கு மலாக்கா மாநில வரலாற்றில் தமிழரின் சுவடுகளே முக்கியச் சான்றுகளாகும்.

தொன்மை மிக்க மலாக்கா வரலாற்றை ஆராய்ந்தால், அங்கே பழந்தமிழர்களின் வேர்களையும் தடங்களையும் நாம் காணவியலும். பழங்கால மலாக்காவில் சைவசமயத்தைச் சார்ந்த தமிழ்வணிகர்களின் வருகையே மலாயாவில் தமிழரின் வாழ்வியல் தொடக்கம் என்று குறிப்பிடலாம். மலாக்காவிற்கு வந்த தமிழ் வணிகர்கள் செல்வந்தர்களாகவும் சமயநெறி மிகுந்தவர்களாகவும் இருந்தவர்கள் என்பதனால் பழங்காலந் தொட்டு மலாக்கா மண்ணில் பல கோயில்கள் கட்டப்பட்டதனால் அதுவே, மலாயா தமிழரின் வாழ்வியலுக்கும் வித்துட்டுள்ளது என்று குறிப்பிடலாம். அவற்றுள் பல கோயில்கள் கால ஓட்டத்தில், ஆட்சி மாற்றங்களினால் மறைந்து போயிருந்தாலும், இன்றளவும் இருக்கும் மலாக்கா செட்டி சமூகத்தின் கோயில்கள் இந்த உண்மையைப் பறைசாற்றுகின்றன.

பழங்காலம் முதல் தொன்றுதொட்டு தமிழர் வாழ்வியல் நெறியினை வளர்த்தும் காத்தும் வரும் கோயில்களின் உன்னத நிலையை இன்று எவ்வாறு இருக்கின்றது என்பதை, ஆராய்வு மூலம், வெளிக் கொணர்ந்து இன்றைய தலைமுறையினரிடையே அதனைக் காட்டுவது காலத்தின் கட்டாயமாக இருக்கின்றது.

நம் நாடு சுதந்திரமடைவதற்கு முன்பே உருவாக்கப்பட்டுள்ள 101 கோயில்கள் இந்த ஆய்வில் காணப்பட்டுள்ளன. கட்டுப்பாடுகள் அதிகம் இல்லாத காலத்தில் அமைக்கப்பட்ட கோயில்களின் நிலைமை பல இடங்களில் சர்ச்சைப் பொருளாக இருப்பதும், நம் நாட்டில் இந்துக் கோயில்கள் ஆங்காகே உடைபடும் செய்திகள் தொடர்ந்து வருவதும், அச்சமயங்களில் இந்து பக்தர்கள் மத்தியில் பதட்டம் மேலோங்குவதும் ஒரு தொடர்கதையாக இருப்பதையும் காண்கிறோம். இந்த நிலையைக் களையும் திடமான நடவடிக்கைகளை இதுவரை அரசோ, பொது அமைப்புகளோ முறையாகச் செய்ய முன்வராத நிலையையும் கண்டோம்.

போதிய தரவுகள் இல்லாமல் நாம் இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண எத்தகைய பரிந்துரையும் கொடுக்க இயலாத நிலையில் நம் இந்து சமூகம் இருக்கிறது. பிரச்சினை எழும் சமயங்களில், குறிப்பிட்ட அந்த ஒரு கோயில் பிரச்சினை மட்டுமே முன்னெடுக்கப்பட்டு விவாதிக்கப்படுவது வழக்கமாகியுள்ளது. இத்தகைய பாணியே அரசியல் ரீதியில் இலகுவாக இருப்பதாகப் பலரால் கருதப்படுவதும், நாடு சுதந்திரமடைந்து அறுபது ஆண்டுகளுக்கு மேல் ஆகியும், இந்த நிலையை ஓர் இயல்பான நிலை என பலரையும் எண்ண வைத்துள்ளது.

மேலும், இந்தப் பிரச்சினையால் ஒட்டுமொத்த இந்து சமயத்தினரின்பால் மற்றவர்களின் பார்வை தவறாகிக் கொண்டிருப்பதையும் நாம் பார்க்கிறோம். இதற்கான நடவடிக்கைகளை இந்து சமூகமே எடுக்காவிடில், மேம்பாட்டுத் திட்டங்கள் அதிகமாகும் இக்காலக்கட்டத்தில் மேலும் சிக்கல்களை இந்துக் கோயில்கள் எதிர்கொள்ள வேண்டியிருக்கும் என கணிக்கலாம்.

எனவேதான், சிரமமான செயல் எனத் தெரிந்தும், பல சவால்களை எதிர்நோக்கக் கூடிய நிலைமைகளை அறிந்தும், மற்றவர் ஆதரவை எதிர்பார்க்காமல் வரலாற்று மலாக்கா மாநில ரீதியில், எங்கள் சக்திக்குட்பட்ட இந்த ஆய்வை மேற்கொள்ள எண்ணினோம். அதன் அடிப்படையில், பலருடனும் கலந்தாலோசித்தப் பின், மலாக்காவாழ் இந்துக்களின் சார்பில், இந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்டே, தக்கவர்களின் நிபுணத்துவத்தை முன் நிறுத்தி, ஒரு சுதந்திரமான ஆய்வை மேற்கொள்ள முடிவுசெய்து, ஆய்வுப் பணியை முடித்துள்ளோம்.

இப்பணியை மேற்கொண்ட மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வுக் குழுவினர், மலேசிய புத்ரா பல்கலைக்கழகத்தோடு சேர்ந்து மலாக்காவில் இருக்கின்ற கோயில்களின் வரலாறு, நிர்வாகம், நில உரிமம், அதிகாரப்பூர்வமான பதிவு, கோயில் வளாகத்திலுள்ள வசதிகள், விழாக்கள், சமய-கல்வி-கலை-பண்பாட்டு நடவடிக்கைகள், கோயில்களின் பொருளாதார நிலை, போன்றவற்றை ஆராய்ந்து, அவை எதிர்நோக்கும்

சவால்களையும், கோயில் நிர்வாகங்களிடமுள்ள அவற்றைக் களையும் ஆற்றல்களையும் கணித்து, இன்றைய நிலையில் எத்தகைய முறைகளில் கோயில்கள் எதிர்கொள்ளும் சவால்களைக் கையாளலாம் என்பதற்கான பரிந்துரைகளை இந்த ஆய்வின் வழி முன்வைத்துள்ளது.

அதோடு, மலாக்கா மாநிலத்தில் அமைந்துள்ள இந்துக் கோயில்கள் இந்த மாநிலத்தில் இந்துக்களின் குடியிருப்பு வரலாற்றைக் காட்டுவதால், அவற்றைப் பற்றிய விவரங்கள் ஆவணப் படுத்தப்படுவதின் அவசியத்தையும் உணர்ந்தோம். முறையான இந்து சமயக் கல்வியைப் பெற இயலாத நிலையில் நம் இந்து பக்தர்கள் இருப்பதையும் உணர்ந்ததால், கோயில்களைப் பற்றிய ஆய்விற்கு அப்பால், வேறு பல விவரங்களையும், கட்டுரைகளையும் இந்த நூலில் இணைத்துள்ளோம்.

முதல் பகுதியில் மலாக்கா மாநிலத்தில் அமைந்துள்ள தமிழ்-இந்துக் கோயில்கள் பற்றிய ஆய்வறிக்கையைக் காணலாம். இந்து சமயம் பற்றிய ஒரு கண்ணோட்டத்தையும், கோயிலில் குருக்களின் முக்கியத்துவத்தையும் இரண்டாம் பகுதியிலும், மலாக்கா மாநிலத்தில், இந்த ஆய்வில் காணப்பட்ட கோயில்களைப் பற்றிய குறிப்புகளையும், அவற்றின் படங்களையும் மூன்றாம் பகுதியிலும் காணலாம். நான்காம் பகுதியில், மலாக்கா மாநிலத்தில் இயங்கும் இந்து சமயம் சார்ந்த அமைப்புகளைப் பற்றிய கட்டுரைகளை இணைத்துள்ளோம். இவை அனைத்தையும், ஆர்வமுள்ள அனைவருக்கும் பயனளிக்கும் வகையில் தமிழிலும், மலாய் மொழியிலும், தொகுத்து, நூலாகப் படைத்துள்ளோம். நம் இந்துக்களில் எல்லாருக்கும் தமிழ் படிக்க இயலாத நிலை இருப்பதால், மலாய் மொழியிலும் இந்த நூலைக் கொடுத்துள்ளோம். நாட்டின் தலைமைத்துவத்திற்கும் இந்தத் தேசிய மொழி நூல் பயனுள்ளதாக இருக்கும் என நம்புகிறோம்.

கோயில்களைப் பற்றிய ஆய்வு முடிவுகளின்வழி நான்கு முக்கிய சவால்களை நாம் முக்கியமானவைகளாகக் கருதலாம். முதலாவதாக - ஆய்வுக்கு உட்பட்ட 146 கோயில்களில், 88 (60.27%) கோயில்கள், ஏதாவது ஒருவகை பதிவினைப் (மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவு, அல்லது அறங்காப்பகப் பதிவு) பெற்றுள்ளன. இதர 58 (39.73%) கோயில்கள் எத்தகைய பதிவும் பெறாத கோயில்களாகத் தொடர்கின்றன. அரசின் பதிவகங்களில் முறையாகப் பதிவு செய்யவேண்டும் என்பதையும், நிபந்தனைகளைப் பூர்த்தி செய்ய முயலவேண்டும் எனும் எண்ணமும் பல கோயில் நிர்வாகங்களிடம் இன்னும் எழவில்லை என்பதை இந்த ஆய்வு காட்டுகிறது.

இரண்டாவதாக, 90 கோயில்கள், அல்லது 61.6% விழுக்காட்டுக் கோயில்கள் இந்த மாநிலத்தில் மற்றவர்களின் நிலத்தில் இருக்கின்றன. சிலவற்றிற்கு மட்டுமே எழுத்துப்பூர்வமான அனுமதிகள் இருக்கின்றன. 56 கோயில்கள் அல்லது 38.4% விழுக்காட்டுக் கோயில்கள் மட்டுமே சொந்த நிலங்களில் நிறுவப்பட்டுள்ளன. நில உரிமம் ஒரு சவாலாகவே நீடிக்கிறது.

மூன்றாவதாக, 40% விழுக்காட்டிற்கு மேற்பட்ட கோயில்கள், தற்பொழுது, இந்துக்கள் அதிகம் வாழாத தோட்டப்புறம் அல்லது ஒதுக்குப்புறப் பகுதிகளில் இருக்கின்றன. இவை முறையான பராமரிப்பு, நிர்வாகம், மறுசீரமைப்பு, நிலம், மிகக் குறைவான பக்தர்கள், போதுமான நிதியின்மை போன்ற பல சிக்கல்களை எதிர்நோக்கியிருப்பதை இந்த ஆய்வு தெளிவாகக் காட்டுகிறது

நான்காவதாக, ஆய்வுக்கு உட்பட்ட 80% விழுக்காட்டுக் கோயில்கள் நித்திய பூஜைகள், திருவிழாக்கள், சிறப்பு வழிபாடுகள் போன்ற ஆகம நடவடிக்கைகளுக்கே, தொடக்கக் காலமுதல் இன்றுவரை, முக்கியத்துவம் தந்து வருகின்றன. கால மாற்றத்திற்கேற்ப இந்து சமூகத்தினருக்குத் தேவையான மென்திறன்கள்; மனித மேம்பாட்டுத் திறன்கள் - மொழி, முறையான சமயக் கல்வி, கலை-பண்பாடு-சமூக மேம்பாடு, ஒற்றுமை போன்றவற்றிற்கு 20 விழுக்காட்டுக் கோயில்களுக்கும் குறைவானவையே முக்கியத்துவம் கொடுப்பதைக் காண முடிகிறது.

இந்து தர்மம், “ஓர் ஊரில் புதிதாகக் கோயில் கட்டப்பட்டு நன்னீராட்டு விழா கண்டால், அவ்வூரில் இருக்கின்ற சிறைச்சாலை மூடப்பட வேண்டும் அல்லது மூடப்படும் சூழ்நிலை உருவாகும்” என்று சொல்கிறது. இது எதைக் குறிக்கிறது என்றால் ஓர் ஊரிலே இருக்கின்ற கோயில் அங்கு வாழும் இந்துக்களின் அடையாளமாகவும், பூஜை, திருவிழா நடத்தும் ஒரு மையமாக விளங்குவதோடு, அந்த ஊர் மக்களுக்குச்

சமய சிந்தனைகளின் வழி, நல்வழி காட்டி, அவர்களை மேநிலை அடைய வைப்பதோடு, அவர்களைச் சார்ந்துள்ள குடும்பங்களையும், சமுதாயத்தையும், பண்பட்டதாக்கி, அதன்வழி கடமையுணர்ச்சிமிக்க குடிமக்களை உருவாக்கும் தன்மையைக் கொண்டது. அத்தகையப் பங்கை நம் கோயில்கள் ஆற்றினால்தான் நாம் மகிழ்ச்சிக் கொள்ள முடியும்.

இவ்வாய்வின் வழி மலாக்கா கோயில்கள் தொடர்பான புள்ளி விபரங்கள், எதிர்நோக்கும் சவால்கள், தற்போதைய நிலைமை, அவை நடத்தும் சமய விழாக்கள் போன்ற முக்கியமான கூறுகளை மையமாக வைத்து, ஆறு பரிணாமங்கள் வழி ஆய்வுப் பணிகளின் முடிவுகள் காட்டப்பட்டுள்ளன. ஆய்வு முடிவுகளை முன் வைத்து, பல நிலைகளில் பல அமைப்புகளோடும் குழுவினரோடும் கலந்தோசித்தப் பின், மலாக்கா மாநிலத்தில் நம் கோயில்கள், மற்றும் இந்து சமய பக்தர்கள் எதிர்நோக்கும் பல சவால்களுக்கு மொத்தம் 74 பரிந்துரைகள் வழங்கப்பட்டுள்ளன.

ஆய்வாளர்கள் எனும் முறையில் பரிந்துரைகளை முன்மொழிந்து, அவற்றை எத்தகைய முறைகளில் செயல்படுத்தலாம் எனும் ஆலோசனைகளையும் வழங்கியுள்ளோம். மலாக்கா மாநிலத்தில் வாழும் இந்துக்கள் அனைவருக்கும், மலாக்கா மாநில அளவில் சமூக, அரசியல், அரசு தலைவர்களுக்கும், ஆர்வமுள்ள மற்றவர்களுக்கும், தேசிய அளவிலுள்ள தலைவர்களுக்கும், இந்துக்களுக்கும், ஆய்வின் அடிப்படையிலான இந்த நூலை அர்ப்பணிக்கிறோம். எங்கள் சிந்தனைகளில் உதித்த பரிந்துரைகளைப் படைத்துள்ளோம்; அவற்றை ஏற்றுக்கொள்வதும், ஏற்றுக்கொள்ளாததும் அவரவர்களைப் பொறுத்தது. ஏற்றுக்கொள்ளாத நிலையில் அவரவர் மாற்றுப் பரிந்துரைகளையும் திட்டங்களையும் முன்மொழிந்து செயல்படுத்தினால் அருமையாக இருக்கும்.

2018-ஆம் ஆண்டில் தொடங்கிய இந்த ஆய்வு முறைப்படி 2020-ஆம் ஆண்டில் பூர்த்தியாகி நூலாக வெளிவந்திருக்கவேண்டும். பல இடர்களால், காலம் தாழ்த்தி, 2022-ஆம் ஆண்டில்தான் வெளிவருகிறது.

எங்களின் எதிர்பார்ப்பு யாதெனில், மலேசியாவின் வரலாற்றில் மலாக்கா மாநிலமே முதன்மை; பழங்காலம் முதல் இன்று வரை அதற்குத் தக்கச் சான்றாக இருப்பவை கோயில்களே. இத்தகைய வரலாற்றுப் பின்னணி வழி வந்த கோயில்கள், இன்றையக் கால மாற்றத்திற்கு ஏற்ப தொடர்ந்து தமிழர்களின் சமய அடையாளத் தலங்களாக இருப்பது மட்டுமில்லாமல், ஒட்டு மொத்த தமிழர்கள் நல்வாழ்வு, இறைநெறி, கலைப் பண்பாடு போன்றவை மேலோங்குவதற்கும் அரணாக இருத்தல் வேண்டும். மலாக்காவில் இருக்கின்ற கோயில்கள் மலேசியாவிற்கே எடுத்துக்காட்டாகத் திகழ முடியும். அதற்கான நடவடிக்கைகளை முறையாக, தக்காரைக் கொண்டு முடுக்கிவிட்டால் இது சாத்தியமே! இந்த எதிர்பார்ப்பை மலாக்கா மாநில இந்து சமய பக்தர்கள், அவர்களுடைய தலைவர்கள் முன் வைத்துள்ளோம். யார் யாருடைய உதவிகள் தேவையோ, அவற்றைத் தேடி செயல்படுத்தினால் வெற்றி கிட்டும் வாய்ப்பு உள்ளது. அத்தகைய ஆக்ககரமான நடவடிக்கைகளுக்கு இந்த நூல் தூண்டுகோலாக இருந்தால் சிறப்பு!

நன்றி.

**பேராசிரியர் டத்தோ முனைவர் பரமசிவம் முத்துசாமி,**
*தலைவர்,*
**மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வுக் குழுவினர்.**
*ஏப்ரல், 2022*

# பொருளடக்கம்

## மலாக்கா மாநில இந்து ஆலயங்களின் ஆய்வுப் பணியின் பின்னணி 2019/2020

மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் வரலாறு, பின்னணி மற்றும், அதன் நிர்வாக முறைகளை ஆய்வு செய்யும் ஆர்வம் சில காலமாகச் சில தரப்பினரிடம் இருந்து வந்துள்ளது. மலாக்காவில் செயல்படும் இந்து சங்கம் 1980-ஆம் ஆண்டுகளில் இதைச் செய்ய முயன்றனர். ஆனால், அதன் வரைஎல்லையின் நோக்கமும் முடிவுகளும் குறிப்பிட்ட வரம்பிற்கு உட்பட்டவையாகவே இருந்தன; அதாவது, அதன் நோக்கம் சொந்தப் பயன்பாட்டிற்காக மட்டுமே இருந்தது. மலாக்கா மாநில மலேசிய இந்தியக் காங்கிரஸ், மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களைப் பட்டியலிட முயன்றாலும் முற்றுப் பெறவில்லை. 2009-ஆம் ஆண்டில், தமிழர் திருநாள் நிகழ்ச்சிகளின் ஒரு பகுதியாக மலாக்கா தமிழர் சங்கம் மலேசியப் புத்ரா பல்கலைக்கழக விரிவுரையாளர் முனைவர் மு.பரமசிவத்துடன் இணைந்து மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் எண்ணிக்கை குறித்து ஆய்வு நடத்தியது. இந்த ஆய்வு மலாக்காவில் உள்ள 99 இந்துக் கோயில்களை அடையாளம் கண்டது. இவற்றின் சில விவரங்கள் மற்றும், பட்டியல் தமிழில் சிறு புத்தகமாக 2016-ஆம் ஆண்டில் டாக்டர் மு. பரமசிவம் அவர்களை ஆசிரியராகக் கொண்டு செம்மூதாய் பதிப்பகத்தாரால் “மலாக்கா தமிழர்: கல்வி - சமயம் - சமூக அமைப்புகள்” என்ற தலைப்பில் வெளியானது.

இந்தப் புத்தகத்தில் கல்வி, அதாவது, தமிழ்ப் பள்ளிகள், இந்திய அல்லது தமிழ்ச் சமூக அமைப்புகள் மற்றும், மலாக்காவிலுள்ள இந்து ஆலயங்கள் ஆகிய மூன்று துறைகளைப் பற்றிய விவரங்கள் இடம்பெற்றன. இவற்றுள் ஆலயங்களைப் பற்றிய ஆய்வு முழுமை பெறாததாக இருந்ததை உணர முடிந்தது. மலாக்காவில் 99 இந்துக் கோயில்கள் இருப்பதாக இந்த ஆய்வு காட்டியது என்றாலும் இந்த எண்ணிக்கை மலாக்கா இந்து சங்கம் கொடுத்திருந்த எண்ணிக்கையைவிட சற்று அதிகமாக உள்ளதாக இருந்ததால் எதிர்காலச் சமுதாயத்தினரின் உபயோகத்திற்கும் மற்றும், மேற்கோள்களுக்கும் சான்றாக அமைய கோயில்களைப் பற்றிய தகவல்களை முழுமையாகவும் முறையாகவும் பதிவுசெய்ய வேண்டும் எனும் அவா எழுந்தது.

மேலும், இன்றுவரை மலாக்கா மாநிலத்திலும் சரி அல்லது மலேசியா முழுமையிலும் சரி இங்குள்ள அனைத்து இந்துக் கோயில்களும் அதிகாரப்பூர்வமாக எந்த ஓர் அரசு தரப்பினர் கண்காணிப்பின் கீழ் வழி நடத்தப்படுவதில்லை. இங்குள்ள கோயில்கள் பெரும்பாலும் தொடக்கத்திலிருந்தே அதிகாரப்பூர்வ அனுமதி இன்றி ஆங்காங்கே தாங்கள் வாழும் இடங்களிலும் அல்லது தாங்கள் வேலை செய்யும் இடங்களின் முதலாளிமார்களின் ஆசியோடும் உருவாக்கப்பட்டு வந்துள்ளன. இவ்வாலயங்களைக் கட்டுவதற்கான செலவுகளை ஆங்காங்குள்ள மக்களே ஏற்றுக்கொண்டு வந்துள்ளனர். அவரவர்களின் தகுதிக்கு ஏற்ப மற்றும், நிதி நிலைமையைப் பொறுத்து கோயில்கள் சிறியதாகவோ பெரிதாகவோ கட்டப்பட்டு வந்தன. நகரங்களில் மட்டுமே கோயில்களைக் கட்டுவதற்கு நிலத்தை வாங்க வேண்டி இருந்தது. சொந்த நிலத்தில் கோயில் கட்டிடம் கட்டுவதற்கு நகராட்சி மன்றத்திடம் அனுமதி பெற வேண்டும். இருப்பினும், புறநகர்ப் பகுதிகளில், அங்கு வாழ்ந்த இந்துக்களால் அரசாங்க அனுமதியின்றி அரசு நிலத்திலேயே கோயில்கள் அமைக்கப்பட்டிருப்பதையும் காணலாம்.

இந்த நிலைமை உருவாவதற்குக் காரணம், மலேசியா / மலாக்காவுக்கு அழைத்து வரப்பட்ட பெரும்பாலான இந்தியர்கள் / தமிழர்கள் ரப்பர்த் தோட்டங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டனர். அங்கு அவர்களுக்குக் குடியிருப்புப் பகுதிகளும் செய்து கொடுக்கப்பட்டன. அதோடு, அரசு இலாகா ஊழியர்களுக்கும் அதேபோன்று குடியிருப்புப் பகுதிகளும் அமைத்துக் கொடுக்கப்பட்டன. இதனால், இந்துத் தொழிலாளர்கள் தங்கள் வசிப்பிடத்திற்கு அருகில் தங்கள் வசதிக்கேற்ப தங்கள் மேலாளர்களின் ஒப்புதலோடு வழிபாட்டு இல்லங்களை அமைத்துக் கொண்டார்கள். முதலாளிமார்களைப் பொறுத்தவரை, இது ஒரு பிரச்சனையாக அன்று அவர்களுக்குப் புலப்படவில்லை. ஏனெனில், தங்களிடம் வேலை செய்யும் தொழிலாளர்கள் தங்கள் பணியிடங்களில் வசதியாக வாழ இது உதவும் என எண்ணினர். அரசின் ஊழியர் வீடமைப்புப் பகுதிகளைப் பொறுத்தவரை, இந்துக்கள் அங்கு பெரும்பான்மையாக இருந்ததால் அங்கு அவர்கள் தங்கள் வசிப்பிடத்திற்கு அருகில் கோயில்களை அரசின் எவ்வித ஒப்புதல் இல்லாமல் அமைத்துக் கொண்டனர்.

1957-ஆம் ஆண்டில் நாடு சுதந்திரமடைவதற்கு முன்னர் வரை இந்த நிலைமை இருந்தது. சுதந்திரத்திற்குப் பிறகும் மலேசியாவில் அல்லது குறிப்பாக மலாக்காவில் பெரும்பாலான இந்துக் கோயில்கள் தோட்டங்களில் அதாவது, தனியார் நிலங்களில் இருந்ததால் அவற்றைப் பதிவு செய்வதில் அதிகமான ஆர்வம் ஏற்படவில்லை.

இருப்பினும், தற்போது ஒரு சில காரணங்களால் முறையான பதிவு அல்லது அனுமதி இல்லாத கோயில்களை இடிக்க வேண்டிய சூழ்நிலை எழுந்தபோது சம்பந்தப்பட்ட ஆலய பக்தர்கள் மற்றும், அரசு சாரா அமைப்புகள் அரசு இலாகாகளின் நடவடிக்கைகளை எதிர்க்கத் தொடங்கினர். இதன் எதிரொலியாக இந்த நாட்டில் வாழும் பல இன மக்களிடையே பதற்றத்தையும் இச்சூழ்நிலைகள் ஏற்படுத்தின.

1998-ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் ஓர் இந்து வழிபாட்டுத்தலம் தொடர்பாக பினாங்கில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே மோதல் ஏற்பட்டது. இதனைத் தொடர்ந்து, சட்டப்பூர்வமாகக் கட்டப்படாத இந்து வழிபாட்டுத் தலங்கள் பற்றி மறு ஆய்வு செய்யப்படும் என்பதோடு சட்ட ரீதியாக நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் மலேசிய அரசு அறிவித்தது. இருப்பினும், அந்த உத்தரவை அமல்படுத்துவதில் சுணக்கம் ஏற்பட்டதோடு அதன் பின்னர் இப்பிரச்சினை அதிகாரப்பூர்வ நிலையில் விவாதிக்கப்படவில்லை.

சுதந்திரத்திற்குப் பின், பல தலைமுறைகளாக ரப்பர் தோட்டங்களில் வசித்து வந்தப் பெரும்பாலான இந்து-தமிழர்கள், தங்களின் பூர்வீகக் குடியிருப்பாகக் கருதிய தோட்டங்களிலிருந்து வேறு வேலை வாய்ப்புக்களைத் தேடி இடம்பெயர வேண்டிய கட்டாயச் சூழ்நிலைக்கு ஆளாக்கப்பட்டார்கள். பிரிட்டிஷ்காரர்களுக்கு உரிமையாக இருந்த தோட்டங்கள் உள்ளூர் நிறுவனங்களுக்குக் கைமாறிய அதே நேரத்தில் ரப்பர் மரங்கள் செம்பனைக்கு மாறத் தொடங்கியது. மேலும், பல தோட்ட நிலங்கள் வீடமைப்பு மற்றும், தொழிற்சாலைகள் போன்ற மேம்பாட்டுத் திட்டங்களுக்கும் பயன்படுத்த வேண்டிய நிலைமையும் உருவானது.

ரப்பர்த் தோட்டங்களில் இருந்து வெளியேறிய இந்து-தமிழ்த் தொழிலாளர்கள் புறநகர் பகுதிகளில் உருவான புதிய வீடமைப்புத் திட்டங்கள், புதியக் கிராமங்கள், சிறுசிறு பட்டணங்கள் மற்றும், நகரங்களின் புறம்போக்குக் குடிசைப் பகுதி போன்ற இடங்களில் குடியேறத் தொடங்கினர். இப்புதிய சூழல் பல்வேறு இனங்களுக்கு மத்தியில் வாழ்வதற்கான புதிய அனுபவங்களை அவர்களுக்கு வழங்கியதோடு இவர்களது வாழ்க்கை நடைமுறைகள் சில சமயங்களில் மற்ற இனத்தவர்களுக்குச் சில சங்கடங்களை ஏற்படுத்தி உரசல்களை ஏற்படுத்தின. கடந்த காலங்களில் பெரும்பாலான இந்துக்கள் ரப்பர்த் தோட்டங்களில் மற்றும், இதர தொழிலாளர்கள் குடியிருப்புப் பகுதிகளில் வசித்து வந்திருந்தாலும், அருகில் இருக்கக்கூடிய கிராமங்கள் மற்றும், குடியிருப்புப் பகுதிகளில் இருந்து இவர்கள் இருக்கும் இடங்களுக்கு இவர்களோடு வேலை செய்ய வரும் இந்து அல்லாதவரோடு கலந்து உறவாடும் வாய்ப்பு இருந்தது. அதோடு, மட்டுமல்லாமல் எந்தவிதப் பாரபட்சமும் இன்றி ஒற்றுமையாகவும் நெருக்கமாகவும் இவர்கள் வாழ்ந்து வந்தனர் என்பதை அனைவரும் அறிவர்.

இன்றையப் புதுச் சூழலில் முன்னாள் தோட்டத் தொழிலாளர்கள் பல்வேறு இனங்களுடனும், பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்களுடனும் ஒன்றாக அருகருகே வசித்து வந்தாலும் இவர்கள் அனைவரும் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வேலைகளைச் செய்வதால் இவர்களிடையே கலந்து உறவாடும் வாய்ப்பு மிகக் குறைவாகக் காணப்பட்டதால் அணுக்கம் குறைந்து இடைவெளி அதிகரித்தது.

இதுவே இவர்களிடையே இலகுவாகச் சிறுசிறு உரசல்கள் அல்லது மோதல்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இன்றுவரை இருக்கின்றன. இஸ்லாம் சமயத்தைச் சேர்ந்த மலாய்க்காரர்கள் அதிகம் வசிக்கும் இடங்களில், இந்துச் சமயச் சடங்குகளில் குறிப்பாக இவர்களால் பயன்படுத்தப்படும் சமய அடையாளங்களால் ஒரு சங்கடமான சூழ்நிலை உருவாகி வந்துள்ளது.

2006-ஆம் ஆண்டு ஏப்ரல்/மே மாதங்களில் கோலாலம்பூர் மற்றும், சிலாங்கூர் போன்ற இடங்களில் சில கோயில்களில் தெய்வ விக்ரகங்களை உடைத்த சம்பவங்களும் இதன் காரணமாகவே ஏற்பட்டிருக்கலாம். முறையான அனுமதியின்றியும் மேலும், சட்டத்திட்டங்களை மீறியதாகக் காரணம் கூறி ஸ்ரீமலையம்மாள் ஸ்ரீசெல்வ காளியம்மன் கோயிலைக் கோலாலம்பூர் மாநகராட்சி மன்றம் 2006-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இடித்துத் தள்ளிய சம்பவத்தை ஓர் உதாரணமாகக் கூறலாம். கோயில் தரப்பினரோ நூறு வருடங்களுக்கு மேலாக, அதாவது, உள்ளாட்சி அரசு சட்டத்திட்டங்கள் உருவாக்கியதற்கு முன்பே இந்தக் கோயில்கள் இருந்து வந்துள்ளதாகத் தங்கள் வாதத்தை முன்வைத்தனர். மேலும், எந்தத் தரப்பினரிடமிருந்தும் எழுத்து மூலமாக அனுமதி பெற வேண்டும் என்ற ஒரு தேவை அந்தச் சமயத்தில் இருந்ததில்லை என்பதையும் சுட்டிக்காட்டினர்.

இந்த நாட்டில் இந்து ஆலயங்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள், உள்ளாட்சி மன்றங்களின் நடவடிக்கை முறை, கோயிலில் அத்துமீறி நுழைந்து அங்கு உள்ள தெய்வ விக்ரகங்களை நாசப்படுத்தும் ஒரு சில கும்பல்களின் அராஜகச் செயல் ஆகிய அனைத்தும் இந்துக்களிடையே பெரும் சங்கடத்தை ஏற்படுத்தியது. இதன் விளைவாக இத்தகைய பிரச்சினைகளைக் கையாளுவதற்கு அரசு சார்பற்ற இயக்கங்களும் மற்றும்,

பிற இயக்கங்களும் நடவடிக்கைக் குழுக்களை உருவாக்கின. 2007-ஆம் ஆண்டு 'ஹிண்ட்ராப்' மாபெரும் போராட்டம் ஒன்றை நடத்தியது. இந்த நிகழ்வு அரசுக்குப் பெரும் சங்கடத்தை ஏற்படுத்தியது எனவும் கூறலாம்.

அரசும், இருக்கும் பிரச்சனைகளைக் களையும் பொருட்டு, தகுந்த வழிமுறைகளை ஆராய மலேசிய இந்து சங்கம், மலேசிய இந்துதர்ம மாமன்றம், மலேசிய இந்திய இளைஞர் மன்றம் (ஹிண்ட்ராப்பைத் தவிர்த்து) போன்ற அமைப்புகளை அழைத்து ஒரு கலந்துரையாடலை நடத்தியது. ஆனால், இதற்குப் பிறகு எத்தகைய நடவடிக்கை எடுக்கப்பட்டன என்பதைப் பற்றிய விவரங்கள் இல்லை; பெரிய மாறுதல்கள் ஏற்படவில்லை.

வழக்கமாக, மேம்பாட்டுத் திட்டங்களினால் பாதிப்புறும் கோயில்கள் மாற்று இடங்களுக்குக் கொண்டு செல்ல வற்புறுத்தப்படும் பொழுது அல்லது இடிக்கப்படும் சூழ்நிலை உருவாகும்போதுதான் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. இதனால், பிரச்சினைகளும் உருவாகின்றன. அதோடு, இந்துக் கோயில்கள் உடைபடும் சமயத்தில் இப்பிரச்சினை பெரிதாகி ஒரு பதற்றமான சூழ்நிலையை உருவாக்குகின்றது. மற்ற நேரங்களில் இதைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை.

2016-ஆம் ஆண்டில் தெய்வ விக்ரகங்களை அல்லது சிலைகளைச் சேதப்படுத்தும் நிகழ்வுகள் மறுபடியும் தலைதூக்கின. பினாங்கு மாநிலத்தில் மட்டும் மூன்று கோயில்கள் அதாவது, முத்து மாரியம்மன் கோயில் (Ara Kuda) ஸ்ரீ மதுரை வீரன் கோயில் (Sungai Nibong Kecil) மற்றும், ஸ்ரீ முனீஸ்வரர் கோயில் (Jalan Baru) போன்ற இடங்களில் இதுபோன்ற அத்துமீறல்கள் நடந்துள்ளன. பெட்டாலிங் ஜெயாவில் உள்ள முனீஸ்வரர் ஆலயத்தில் இது போன்ற சம்பவம் அதே ஆண்டில் நடைபெற்றது.

இந்த ஆலயங்களில் மறைகாணி எனும் சி.சி.டி.வி கேமராக்கள் இல்லாததால் யார் அந்தக் கோயில்களுக்குள் அத்துமீறி நுழைந்தனர் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எனவே, போலீசார் கோயில் நிர்வாகத்திடம் மறைகாணிகளை விரைவில் பொருத்துமாறு கேட்டுக் கொண்டனர். அதோடு, கோயில்களைப் பாதுகாக்க பாதுகாவலர்களையும் நியமிக்குமாறு கேட்டுக் கொண்டனர். இருப்பினும், பெரும்பாலான கோயில்கள் இவற்றைக் கடைப்பிடிப்பதற்குப் போதுமான நிதி வசதியைப் பெற்றிருக்கவில்லை. எந்தவிதத் தெளிவான சான்றுகளும் இல்லாமல் யாரையும் கைது செய்யவோ நீதியின் முன் நிறுத்தவோ முடியவில்லை.

2016-ஆம் ஆண்டு சிலாங்கூர் மாநில அரசு ஷா ஆலாம் செக்சன் 19-இல் உள்ள ஓர் இந்துக் கோயிலை செக்சன் 23-க்கு இடமாற்றம் செய்ய விரும்பியது. ஆனால், இந்த இடமாற்றத்தில் திருப்திக் கொள்ளாத ஒரு கும்பல் தங்கள் எதிர்ப்பைக் காண்பிக்க மாநில அரசு வளாகமான சுல்தான் சலாவுதீன் அப்துல் அஜீஸ் கட்டிடத்திற்கு முன்னால் ஒரு மாட்டின் தலையை வைத்துவிட்டுச் சென்றனர். மாடு என்பது இந்துக்களுக்குப் புனிதமானது என்பதால் இச்செயல் சிலாங்கூரில் மட்டுமல்லாமல் நாடு முழுவதும் உள்ள இந்துக்களிடையே கோபத்தையும், கொந்தளிப்பையும் அதோடு, கவலையையும் உண்டு பண்ணியது எனலாம்.

2006-ஆம் ஆண்டிற்குப் பிறகு மலாக்காவிலும் இதுபோன்ற கோயிலை இடிக்கும் சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன. அரசின் அனுமதி இன்றியும் மற்றும், மேம்பாட்டுத் திட்ட வளாகத்தில் அனுமதியின்றி கட்டப்பட்ட சில கோயில்களும் உள்ளூராட்சி மன்றத்தினால் இடிக்கப்பட்டுள்ளன. மற்றவர்களின் நிலங்களில் அனுமதியின்றி கட்டப்பட்ட கோயில்கள், அந்த நிலங்கள் மேம்பாட்டுத் திட்டங்களுக்குப் பயன்படுத்தப்படும் பொழுது இடிக்க வேண்டிய சூழ்நிலை உருவாகின்றது. அதோடு, புதிய வீடமைப்புத் திட்டங்களில், அங்கு குடியேறும் இந்துக்களால், அரசின் அனுமதியின்றி கட்டப்படும் கோயில்களும், உள்ளூராட்சி மன்றத்தினால் இடிக்கப்படும் சூழ்நிலைக்கு ஆளாகின்றன.

மலாக்கா மாநிலத்தில் முன்பிருந்தே பெரும்பாலான இந்துக்கள் கோயிலுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் மட்டுமே கோயில் கட்டுவது என்ற ஒரு முறையை வழக்கமாக்கிக் கொண்டதில்லை. இதற்குக் காரணம் இந்து ஆலயங்களை ஒருங்கிணைக்கவும் மற்றும், அவற்றின் கட்டுமான பணிகளைக் கண்காணிக்கவும் மாநில அரசிலும் சரி, மத்திய அரசிலும் சரி, ஒரு முறையான வழிகாட்டுதல் இல்லாமல் இருந்து வந்துள்ளது. அதோடு, தோட்டங்களின் உரிமையாளர்கள் தங்கள் தோட்டங்களில் உள்ள கோயில்களைக் கட்டாயம் பதிவு செய்யவோ புதிய கட்டடங்களைக் கட்டுவதற்குக் கட்டாய அனுமதி பெற்றிருக்க வேண்டும் என்றோ விதிமுறைகள் அப்போது இல்லை.

இருப்பினும், மலாக்கா வரலாற்றைக் காணும் பொழுது, 1905-ஆம் ஆண்டில் பிரிட்டிஷ் ஆட்சி நிர்வாகத்தின் கீழ் சட்ட எண்: 92 (Ordinance No 92) இந்து இஸ்லாம் அறவாரியங்கள், இஸ்லாம் மற்றும், இந்துச் சமய விவகாரங்களை அதிகரிக்கவும், தேவைப்படும் உதவிகளைச் செய்வதற்கும் மலாக்கா நீரிணை மாநிலங்களான - சிங்கப்பூர், மலாக்கா மற்றும், பினாங்கு ஆகிய இடங்களில் இதை அமைத்திருந்தனர்.

துரதிர்ஷ்டவசமாகப் பெரும்பாலான கோயில்கள் தோட்டப்புறங்களிலும் மற்றும், புறநகர்களில் அரசாங்கப் பணியாளர்களின் குடியிருப்புப் பகுதிகளிலும் அமைந்திருந்ததோடு நிதி வளம் குன்றி தினசரி வழிபாட்டுக்கு மட்டுமே இவை பயன்பட்டு வந்ததால், இந்தச் சட்டத்தின் கீழ் எந்தவிதப் பயனையும் இவை பெறவில்லை. இந்தச் சட்டம் நகரத்தில் உள்ள கோயில்களுக்கு மட்டுமே பயன்பட்டு வந்திருக்கலாம்; ஆனால், இதனுடைய மேல் விபரங்கள், அதாவது, இந்துச் சமய விவகாரங்களில் எப்படி அமல்படுத்தப்பட்டது என்பது பற்றிய விவரங்கள் எங்கும் முறையாகப் பதிவு செய்யப்பட்டிருக்காத காரணத்தால் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை.

நாடு சுதந்திரத்திற்குப் பிறகு இந்தச் சட்டங்கள் அமலாக்கம் பெறவில்லை. சுதந்திரத்திற்கு முன்னாலும் இந்தச் சட்டங்கள் இந்துக் கோயில்கள் மீதும் மற்றும், இந்துச் சமய விவகாரங்கள் மீதும் எந்தவிதப் பெரிய தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. சிங்கப்பூர் மற்றும், பினாங்கில் மட்டும் இந்தச் சட்டம் இந்து அறப்பணி வாரியம் எனவும் இஸ்லாமியச் சமய விவகார மன்றம் எனவும் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. மலாக்காவில் இஸ்லாம் சமய விவகார மன்றம் மட்டும் அமைவதற்கு இந்தச் சட்டம் அடிப்படையாக அமைந்தது எனலாம். மலாக்காவில் இந்துச் சமய விவகாரங்களைப் பற்றி எதுவும் கண்டுகொள்ளாமல் அப்படியே விடப்பட்டது. இதனால், மலாக்காவில் தற்போது இந்துக் கோயில்களையும், இந்துச் சமய விவகாரங்களையும் கண்காணிப்பதற்கு எந்தவிதச் சட்டமோ அமைப்போ / வாரியமோ இல்லாமல் இருக்கிறது.

இந்த ஆய்வு தொடக்கப்பட்ட சமயத்தில் (2019), மலாக்காவின் இந்து அறப்பணி வாரியம் ஒன்றை அமைக்க அப்போதைய ஆட்சிக் குழு உறுப்பினர் மாண்புமிகு ஜி சாமிநாதன் அவர்களால் அன்றைய மாநில முதலமைச்சர் மாண்புமிகு அட்லி சஹாரி அவர்களின் ஆசியோடு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. எவ்வாறாயினும், 2020-ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் மலாக்கா அரசாங்கத்தின் தலைமைத்துவம் மாறியபோது இந்தத் திட்டம் காணாமல் போனது. அதைச் செயல்படுத்த பல்வேறு படிகளைக் கடந்து செயல்முறைகளை அமல்படுத்த கால அவகாசம் தேவைப்பட்டதால் திட்டமிடப்பட்டவை அப்படியே கைவிடப்பட்டுள்ளன. இந்த விருப்பத்தைத் தொடர விரும்பும் இந்துச் சமயத்தைப் பின்பற்றும் இந்திய வம்சாவளியைச் சேர்ந்த ஒரு தலைவர் புதிய மலாக்கா மாநில அரசில் தற்போது இல்லை.

கோயிலை அமைப்பதற்கான அனுமதியைக் கொடுப்பதற்கும் முறையாக அதன் நடவடிக்கைகளைக் கண்காணிப்பதற்கும் எந்த ஓர் அரசு நிறுவனமும் பொறுப்பாக இல்லை. விண்ணப்பம் செய்யும் ஆலயங்களின் நிர்வாகத்தினரை மலேசிய சங்கங்களின் பதிவு அதிகாரியின் அலுவலகம் பதிவு செய்கின்றது. சங்கங்களில் பதிவதிகாரியிடம் பதிவு செய்து கொள்வதில் ஆர்வமில்லாத ஆலயங்களும் எந்தவொரு பதிவும் இல்லாமல் தொடர்ந்து இயங்கத்தான் செய்கின்றன.

ஓர் இடத்தில் புதியக் கோயிலைக் கட்ட விரும்பினால், அதற்கான விண்ணப்பத்தை நகராட்சி அல்லது ஊராட்சி மன்றத்தின் ஒப்புதலுக்காக சம்பந்தப்பட்ட தரப்பினரால் அனுப்பிவைக்கப்படுகிறது. கோயில் மற்றும், பிற இஸ்லாம் அல்லாத வழிபாட்டு மையங்களை நிர்மாணிப்பதற்கு ஒப்புதல் அளிப்பதற்கு முன்னர் பல்வேறு உள்ளூர் துறைகள் மற்றும், உள்ளூர் சமூகங்களிடமிருந்து எதிர்வினைகள் மற்றும், கருத்துக்களைப் பெற்ற பின்னர் மாநில அரசு மட்டத்தில் இஸ்லாம் அல்லாத வழிபாட்டுக் குழுவிற்கு (RIBI) மேற்கண்ட விண்ணப்பம் அனுப்பப்படுகின்றது. எவ்வாறாயினும், மலாக்கா மாநிலத்தில் உள்ள அனைத்து இஸ்லாம் அல்லாத வழிபாட்டு மையங்கள் பற்றிய தகவல்களை இந்தக் குழு கொண்டிருந்த போதிலும், தற்போதுள்ள இஸ்லாம் அல்லாத வழிபாட்டு மையங்களுக்கு ஆலோசனை வழங்கும் அல்லது ஒருங்கிணைக்கும் ஓர் அமைப்பாக அது செயல்படவில்லை. மாநில அரசின் பயனுக்காக மட்டுமே அது செயல்படுகிறது.

மலேசியாவில் இந்துச் சமயத்திற்கு ஒரு தாய் அமைப்பாக இருப்பதோடு, இந்துச் சமய விவகார மன்றமாகச் செயல்படும் மலேசிய இந்து சங்கம் தோற்றுவிக்கப்பட்டிருந்தாலும், இந்த அமைப்பு மலேசிய நிறுவனங்களில் ஆணையின் (SSM) கீழ் ஒரு நிறுவனமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதைப் போன்றே தேசிய அளவில் மலேசிய இந்துதர்ம மாமன்றம் என்ற ஓர் அமைப்பும் உள்ளது. இந்த இரு அமைப்புகளுக்கும் மாநில அளவில் கிளைகள் இருந்தாலும், அவற்றின் நடவடிக்கைகள் குறிப்பிட்ட சில கோயில்கள் மற்றும், அவற்றின் நிர்வாகங்களை மட்டுமே ஈர்க்கின்றன.

மலேசிய இந்து சங்கம் மலேசியாவில் உள்ள அனைத்துக் கோயில்களையும் தங்களின் கிளைகளின் மூலம் பதிவு செய்யும் முயற்சியினை மேற்கொண்டிருந்தாலும் அது முழுமை பெறவில்லை. இதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். குறிப்பாகக் கோயில் நிர்வாகங்கள் ஒன்றிணைவதின் முக்கியத்துவத்தை இன்னும் புரியாது இருக்கலாம்; அதோடு, ஒரு சில நிர்வாகத்தினர் இவர்களின் விதிமுறைகளுக்கு ஒத்துப்போக முடியாமல் இருக்கலாம்.

இருப்பினும், 2009 மற்றும், 2012-ஆம் ஆண்டுகளில் டான்ஸ்ரீ ஜி.ஞானலிங்கம் தலைமையிலான இண்டஸ் கல்வி அறக்கட்டளை மலேசியா முழுவதும் உள்ள இந்துக் கோயில்கள் பற்றிய தகவல்களைச் சேகரிக்க மலேசிய இந்து சங்கத்திற்கு ரிங்.150,000 நன்கொடை அளித்தது. பின்னர், இந்துக் கோயில்களின் விவகாரங்களில் ஓர் ஒருங்கிணைப்பை விரும்பிய மலேசியாவின் அப்போதையப் பிரதமர் மாண்புமிகு டத்தோஸ்ரீ நஜிப் ரசாக் அவர்கள், அதே முயற்சிக்கு ரிங். 350,000-ஐக் கொடுக்க ஒப்புதல் அளித்தார். மலேசிய இந்து சங்கத்திற்கு உண்மையிலேயே இந்துக் கோயில்களின் தரவு சேகரிக்கும் பொறுப்பு வழங்கப்பட்டது. எனினும், ஆய்வின் முடிவுகளை அவர்கள் வெளியிடவில்லை.

பின்னர், பிரதமர் துறையின் கீழ் மலேசிய இந்தியர்களின் உருமாற்றதிற்காக செடிக் (SEDIC) அமைப்பு நிறுவப்பட்டபோது, அதன் அடையாள மற்றும், பங்கேற்புப் பிரிவு, இந்து சங்கம் சேகரித்த அனைத்து தகவல்களையும் இந்து சங்கத்திடமிருந்து கோரியதோடு, மேலும், சங்கங்களின் பதிவதிகாரியின் துணையுடனும் மற்றும், அதன் சொந்த முயற்சிகளுடனும் நாட்டில் உள்ள இந்துக் கோயில்களின் பட்டியலைத் தயாரித்தது. இந்த விவரங்கள் அடிப்படையில் மலேசிய இந்து சங்கத்தினால் தொடக்கத்தில் சேகரிக்கப்பட்டவையாக இருந்தாலும், அவை பிரதமர் துறையின் அடையாள மற்றும், பங்கேற்பு பிரிவால் 2017-ஆம் ஆண்டு ஒருங்கிணைக்கப்பட்டன. மேலும், ஆலயங்களுக்கு உதவும் நோக்கில் நடைமுறைகளைத் திட்டமிட `செடிக்‘(SEDIC)கிற்கு உண்மையில் இந்தத் தரவுகள் பெரும் பங்கு வகிக்கும் என்று கணிக்கப்பட்டது. இருப்பினும், 14-ஆவது பொதுத் தேர்தலில் நாட்டின் தலைமைத்துவம் மாறியதால், `செடிக்‘ என்பது `மித்ரா’ ஆக மாறி ஒற்றுமைத்துறை அமைச்சின் கீழ் கொண்டுவரப்பட்டதால், இந்த முயற்சிகள் சுணங்கின. இந்த ஆய்வின் முடிவுகள் இதுவரை அதிகாரப்பூர்வமாக, முழுமையாகப் பொதுமக்களின் பார்வைக்காக வெளியிடப்படவில்லை.

**அட்டவணை 1 : மாநில வாரியாக உறுதி செய்யப்பட்ட மற்றும் உறுதி செய்ய இயலாத கோயில்கள்**

| எண் | மாநிலம் | உறுதி செய்யப்பட்டது | உறுதி செய்ய முடியாமை | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1 | பெர்லிஸ் | 10 | - | 10 |
| 2 | கெடா | 229 | 26 | 255 |
| 3 | பினாங்கு | 141 | 4 | 145 |
| 4 | பேரா | 380 | 24 | 404 |
| 5 | செலாங்கூர் | 611 | 49 | 660 |
| 6 | கோலாலும்பூர் | 219 | 18 | 237 |
| 7 | நெகிரி செம்பிலான் | 221 | 6 | 227 |
| 8 | **மலாக்கா** | 108 | 2 | 110 |
| 9 | ஜோகூர் | 223 | 25 | 248 |
| 10 | பகாங் | 119 | 6 | 125 |
| 11 | கௌாந்தான் | 23 | 1 | 24 |
| 12 | திராங்கானு | 4 | - | 4 |
| 13 | சபா | 6 | - | 6 |
| 14 | சரவா | 4 | - | 4 |
| 15 | லாபுவான் | 1 | - | 1 |
| 16 | அடையாளம் காணப்படாதது | - | 35 | 35 |
| | மொத்தம் | 2299 | 196 | 2495 |

**ஆதாரம் : அடையாள மற்றும், பங்கேற்புப் பிரிவு (செடிக்) 13 Julai, 2017**

மலேசியா முழுவதும் 2,495 இந்துக் கோயில்கள் உள்ளன என்பதை இப்பதிவு காண்பிக்கின்றது. அவற்றுள் 2,299 கோயில்கள் தரவு சேகரிப்பாளரால் சரியென உறுதி செய்யப்பட்டவை. மற்ற 196 கோயில்களை அவற்றின் நிர்வாகத் தரப்பினரை அடையாளம் காண இயலாத நிலையில் அவற்றை உறுதி

செய்ய இயலவில்லை. மலாக்காவில் இருக்கும் 110 கோயில்களில் 108 கோயில்கள் சரியென உறுதி செய்யப்பட்டன, 2 கோயில்களைத் தரவு சேகரிப்பாளர்களால் சரிபார்க்க இயலவில்லை. இந்த ஆய்வில், மரங்களுக்கு அடியில் அல்லது குடும்ப இல்லத்தின் வளாகத்தில் செயல்படும் கோயில்கள் சேர்க்கப்படவில்லை.

இந்த ஆய்வில் பட்டியலிடப்பட்ட விசயங்கள் கோயிலின் முகவரி, நில உடைமை - கோயிலுக்குச் சொந்தமானவை, அல்லது எழுத்துப்பூர்வமாக ஒதுக்கப்பட்ட அரசாங்க நிலம், அல்லது ஆக்கிரமிக்கப்பட்ட அரசு நிலம், தோட்ட நிலம், மூன்றாம் தரப்பினர் நிலம், அல்லது, யார் உரிமையாளர் எனத் தெரியாத நிலம் எனும் பிரிவுகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. மேலும், மூலத்தெய்வங்கள் வாரியாக, அம்மன் (56.9%), முனீஸ்வரன் (21.1%), முருகன் (8.3%), விநாயகர் (4.2%), சிவன் (2.5%) விஷ்ணு (2.3%) மற்றும், பிற (4.7%) என கோயில் பெயர்கள் பகுக்கப்பட்டுள்ளன. பதிவு செய்யப்பட்ட மற்றும், பதிவு செய்யப்படாத கோயில்களின் எண்ணிக்கையும், அவற்றின் வகைகள் இல்லாமல் வழங்கப்பட்டுள்ளன. கூடுதல் ஆய்வுகள் அல்லது தொடர்ந்த திட்டமிடல்களைச் செய்ய முயற்சிகளை மேற்கொள்வதாக இருந்தால் இந்த அடிப்படை விவரங்கள் உண்மையில் பயனுள்ளதாக இருக்கும். எனினும், ஆய்வறிக்கை முழுமையாக வெளியிடப்படாததால் பலரும் விவரங்களை அறியவியலாத நிலை உள்ளது.

எவ்வாறாயினும், மலாக்கா மாநிலத்தில் மேற்கொள்ளப்படும் இந்த ஆய்வு உண்மையில் இங்குள்ள கோயில்களின் நிலையை, குறிப்பாக நிர்வாகம் மற்றும், அவற்றின் நடவடிக்கைகள், திட்டங்கள் உட்பட பிற விசயங்களையும் விரிவாகவும், ஆழமாகவும் அறியும் நோக்கில் செய்யப்பட்ட முனைப்பான ஒன்றாகும்.

மலேசியாவில் வாழக்கூடிய இந்துக்களில் பெரும்பாலோர் வெவ்வேறு பின்னணிகளைக் கொண்டுள்ளதோடு இவர்கள் பின்பற்றும் இந்துச் சமய நடைமுறைகள் இந்தியாவில் எந்தப் பகுதியில் இருந்து வந்தார்களோ அதற்கு ஏற்ப வேறுபாடு கொண்டதாகவும், ஒன்றுக்கொன்று முரணானதாகவும் இருப்பதால் சமயம் சம்பந்தமான பார்வை ஒருவருக்கொருவர் வேறுபடுகிறது. இதனால், எல்லோரும் ஒருமித்த முடிவை அடைவது கடினம். உள்ளூர் இந்துக்களிடையே விழிப்புணர்வு முயற்சிகள் இல்லாமல், மலேசிய இந்து சங்கம் போன்ற அமைப்புகளால் வழங்கப்படும் எந்த வழிகாட்டுதல்களும் குறிப்பாகப் பரம்பரை நடைமுறைகளைத் தொடர்ந்து கடைபிடித்துவரும் பக்தர்கள் மத்தியில் பயனுள்ளதாக இருக்காது.

மேலும், காலனித்துவ ஆட்சியின் போது ஆட்சியாளர்கள் மிகவும் தந்திரமாகக் கையாண்ட பிரித்தாளும் கொள்கையின் போது தென்னிந்தியாவிலிருந்து அதாவது, தமிழ்நாடு மற்றும், ஆந்திரப் பிரதேசம் போன்ற இடங்களிலிருந்து தொழிலாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கு கொண்டுவரப்பட்டனர். மாறாக கேரளாவிலிருந்து தோட்டங்களில் மேற்பார்வையாளர்களாக வேலை செய்யக் கல்விக் கற்றவர்கள் கொண்டு வரப்பட்டனர். அதே போன்று அரசாங்க அலுவலகங்களில் அதிகாரிகளாகப் பணிபுரிய இன்று ஸ்ரீலங்கா எனப்படும் சிலோனில் இருந்து கல்விக் கற்றவர்கள் இங்கு வரவழைக்கப்பட்டனர்.

தென் இந்தியாவிலிருந்து அதாவது, தமிழ்நாடு மற்றும், ஆந்திரப் பிரதேசத்தில் இருந்து கொண்டுவரப்பட்ட தொழிலாளர்களில் பெரும்பாலோர் இந்துக்களாக இருந்தாலும், இவர்கள் தங்களின் பூர்வீகக் கிராமங்களில் உள்ளது போன்று வெவ்வேறான சமய நடைமுறைகளை இங்கும் அமல்படுத்தினர். கேரளாவில் இருந்து இங்கு கொண்டு வரப்பட்ட மேற்பார்வையாளர்கள் பெரும்பாலும் கிறிஸ்துவர்களாக இருந்ததால் தேவாலயங்களின் வழியாகத் தோட்ட நிர்வாகத்தினருடன் கலந்துறவாட வாய்ப்பு இருந்தது. இவர்கள் தமிழ் மொழியைப் புரிந்துகொள்ளும் அளவில் அறிந்திருந்ததால் இலகுவாகத் தமிழ் / தெலுங்கு தொழிலாளர்களைக் கண்காணிக்க முடிந்தது. ஸ்ரீலங்காவில் இருந்து கொண்டுவரப்பட்ட யாழ்ப்பாணத் தமிழர்கள் இந்துக்களாக இருந்தனர். இவர்கள் பேசும் யாழ்ப்பாணத் தமிழ் தென்னிந்தியத் தமிழை விட உச்சரிக்கும் முறையில் சற்று மாறுபட்டதாக இருந்தது. யாழ்ப்பாணத் தமிழர்களாகிய இவர்கள் ஆங்கிலக் கல்வியைக் கற்று உயர்ப்பதவி வகித்து வந்ததால் இவர்கள் இறுமாப்பு மிகுந்தவர்களாகத் தமிழ்த் தொழிலாளர்களைத் தாழ்வாக மதித்தனர். இத்தகைய சூழல் இந்த நாட்டு வரலாற்றில் மறுக்க முடியாத உண்மை மட்டுமில்லாமல் இன்றும் அதன் தாக்கங்களைப் பார்க்கின்றோம். இவர்கள் தென்னிந்தியாவில் இருந்து வந்திருந்த தொழிலாளர்களை என்றும் சமமாக மதித்ததில்லை.

இந்தப் பிரிவின் தாக்கம் தொடர்ச்சியாக இன்றும் பொருளாதாரம், கல்வி, சமூக அந்தஸ்து போன்றவற்றில் மட்டுமின்றி இந்துக் கோயில்களின் உரிமையிலும் இதனை நாம் காண்கிறோம். நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவிடவும் இங்கு முதலீடு செய்வதற்கும் மற்றும், கடன் உதவி போன்ற சேவைகளை வழங்குவதற்கும் ஆங்கிலேயர்கள் தமிழ்நாட்டிலிருந்து தமிழ் முதலீட்டாளர்களான நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகத்தினரை இங்கு வர வழைத்தனர். இன்று நாம் காணும் பொருளகச் சேவைகள் அன்று இல்லை. இவர்கள் அன்றைய மலாயாவில் இருந்த மலாக்கா உட்பட பெரும் பட்டணங்களில் தங்கி தேவைப்பட்டோருக்கு வட்டிக்குப் பணம் கொடுத்து முதலீட்டிலும் கவனம் செலுத்தினர். மலாக்காவில் கம்போங்

கெலிங் என அழைக்கப்படும் ஹங் ஜெபாட் சாலையில் தங்களது வசிப்பிடத்தை அமைத்துக்கொண்டனர். முதலீடு செய்யும் சமூகமாக இருந்த இவர்களும் தங்களது அந்தஸ்துக்கு ஏற்ப இந்நாட்டின் தமிழ்த் தொழிலாளர்களின் விவகாரங்களில் பெரும்பாலும் கலந்து கொண்டதில்லை. செட்டியார்கள் சமூகம் ஏற்கனவே மலாக்காவில் பல ரப்பர் தோட்டங்களுக்கு உரிமையாளர்களாக இருந்ததோடு அங்கு தமிழ்-இந்துச் சமயத் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தியிருந்தனர். இருந்தாலும், இத்தொழிலாளர்களுக்கும் இவர்களுக்கும் இடையே பிரிவினைக் கோட்டை ஏற்படுத்தியிருந்தனர். சான்றாக, நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தால் பட்டணங்களில் அமைக்கப்பட்ட எல்லா கோயில்களும் இன்றுவரை அவர்களாலேயே பிரத்தியேகமாக நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

இந்த வேறுபாடுகளால் நாடு முழுவதும் தாங்கள் வசிக்கும் இடங்களில் மற்றத் தரப்பினரின் கட்டுப்பாடோ கண்காணிப்போ இன்றி பலவகையான கோயில்கள் உதயமாகக் காரணமாகத் தமிழ்/தெலுங்கு இந்து தொழிலாளர்கள் இருந்தனர். இதே நிலைதான் மலாக்கா மாநிலத்திலும் நிலவியது.

சுதந்திரத்திற்கு முன்னால் இருந்த சூழ்நிலை சுதந்திரத்திற்குப் பிறகும் தொடர்ந்தது. நாங்கள் இப்பிரச்சினையை ஆராயும் சமயத்தில், கோயில்களைப் பற்றிய விவரங்கள் எந்தத் தரப்பினரிடமும் முழுமையாக இல்லை என்பதை அறிந்தோம். மேம்பாட்டுத் துறையில் இம்மாநிலம் துரிதமாக வளர்ச்சி கண்டு வரும் இச்சமயத்தில் தோட்டங்களில் மற்றும், புறநகரில் உருவாக்கப்பட்ட பல ஆலயங்கள் கைவிடப்படும் சூழ்நிலையிலும் அல்லது புதிய குடியிருப்புப் பகுதிகளில் இருந்து தூரத்தில் இருக்கக்கூடிய கட்டாய நிலைக்கும் தள்ளப்பட்டுள்ளன. மேம்பாடு மற்றும், இடம் பெயர்வு காரணமாகவும், ஒரு சில ஆலயங்கள் காலத்தால் மறைந்தும் போகலாம். கால தாமதம் ஆவதற்கு முன்னால், மலாக்கா மாநிலத்தில் உள்ள அனைத்து கோயில்களையும் ஆய்வு செய்து கோயில்களைப் பற்றிய எழுத்து வடிவிலான ஓர் ஆவணத்தைத் தயார் செய்வது அவசியம் என்பதை நாங்கள் உணர்ந்தோம்.

ஆரம்பக் காலங்களிலிருந்து மலாக்காவில் இந்துக்களின் குடியேற்றம் எங்கெங்கெல்லாம் நடைபெற்றன என்பதை வரலாற்று ரீதியாக ஒரு சிறந்த கண்ணோட்டத்தை மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்கள் கொடுக்கின்றன. இந்தக் கோயில்கள் வரலாற்று ரீதியில் இந்து மக்கள் கூட்டாக வாழ்ந்த இடங்களையும் படம் பிடித்துக் காண்பிக்கின்றன. ஏனென்றால், இந்துக்களைப் பொறுத்தவரை, அவர்கள் வசித்த இடங்களிலும் மற்றும், அவர்கள் பணிபுரியும் இடங்களிலும் வழிபாட்டுத் தலங்களை நிறுவுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இவ்வாறு, இந்துச் சமுதாயத்தின் வரலாறும் இந்துக் கோயில்களின் வரலாறும் இந்த மாநிலத்தில் நெருங்கியத் தொடர்புடையவை, மற்றும், பிரிக்க முடியாதவை. காலங்காலமாகத் தமிழர்கள் பின்பற்றி வரும் 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற பழமொழிக்கேற்ப தாங்கள் வாழும் இடங்களிலெல்லாம் இதைப் பின்பற்றி வந்துள்ளனர்.

ஆனால், பல ரப்பர் தோட்டங்கள் செம்பனைத் தோட்டங்களாக மாறிய சமயத்தில் இந்து அல்லாத வெளிநாட்டுத் தொழிலாளர்களின் வருகையாலும் மேலும், சில தோட்டங்கள் தொழில்துறை மற்றும், குடியிருப்புப் பகுதிகளை உருவாக்க நிலமேம்பாட்டாளர்களுக்கு விற்கப்பட்டதாலும், இவ்விடங்களில் ஏற்கனவே இருந்த கோயில்களின் எதிர்காலம் கேள்விக்குறியாகி உள்ளது. அண்மையக் காலங்களில் இத்தகைய மாற்றங்கள் வேகமாகத் தொடர்கின்றன. இப்போதே முயற்சிகள் மேற்கொள்ளப்படாவிட்டால், மலாக்காவில் தொடக்கத்தில் குடியேறிய இந்திய-இந்துச் சமூகத்தின் வரலாறு அடுத்தத் தலைமுறையின் நினைவிலிருந்து காணாமல் போகலாம்.

மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களைப் பற்றிய விரிவான ஆய்வு செய்வதற்கான எங்கள் முன்மொழிவு குறித்து சமூகத் தலைவர்களிடையே நாங்கள் கலந்துரையாடியபோது, இந்துக் கோயில்களை அப்படியே விட்டுவிடுவதுதான் சரி: இந்தப் பிரச்சினை அந்தந்தக் கோயில்களில் உள்ள தெய்வங்களுக்கும் அவற்றை வழிபடுபவர்களுக்கும் இடையில் உள்ள தனிப்பட்ட விவகாரமாகும். ஆகவே, மற்றவர்கள் அதனைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை என்ற அடிப்படையில் சிலர் எங்கள் முயற்சிகளை ஆதரிக்கத் தயங்கினர். இத்தகைய ஆய்வு, மலாக்காவில் உள்ள கோயில்களுக்கு மட்டுமல்லாது நாடு முழுமையும் உள்ள கோயில்களுக்கு ஏதும் பிரச்சினைகளைக் கொண்டுவருமோ என்றும் சிலர் அஞ்சினர். காரணம் அரசாங்கமும் தற்போது ஆலயங்களைப்பற்றி எதையும் பொருட்படுத்தாது அப்படியே விட்டு வைத்துள்ளது. அதை ஏன் தொடவேண்டும் எனும் வாதமும் எழுந்தது.

அரசாங்கம், பிரதமர், மாநில முதல்வர், அமைச்சர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள் மற்றும், சட்ட மன்ற உறுப்பினர்கள் போன்ற தேர்ந்தெடுக்கப்பட்ட தங்களின் பிரதிநிதிகள் மூலமாக ஆலயங்களுக்குத் தொடர்ந்து மானியம் கிடைத்து வருவதானது அரசின் ஆதரவு ஆலயங்களுக்கு இருப்பதைக் காட்டுவதால், இந்த ஆய்வு வீணானது எனவும் சிலர் கருத்து தெரிவித்தனர்.

அதே சமயத்தில் இந்த ஆய்வு முக்கியமானது என்று கூட்டத்திற்கு வந்திருந்த பெரும்பாலோர் ஒப்புக் கொண்டாலும், மேலே குறிப்பிட்டுள்ள கசப்பான அல்லது எதிர்மறையான சில கருத்துகள் மலாக்காவில் உள்ள தமிழ்-இந்துச் சமூகத்தினர் எவ்வாறான மனப்பான்மையைக் கொண்டுள்ளனர் என்பதைப் பிரதிபலிக்கின்றது. இருப்பினும், இந்த ஆய்வைத் தொடர முடிவு செய்வதற்கு முன்னால் இது போன்ற கருத்துக்களையும் உணர்வுகளையும் நாங்கள் கருத்தில் கொண்டோம்.

கோயில்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் அடையாளம் காணப்பட வேண்டும் என்பதோடு, அரசாங்க நடவடிக்கைக்குக் காத்திராமல் அவற்றைத் தீர்ப்பதற்கான முயற்சிகள் இந்துச் சமூகத்தினரால் தொடங்கப்பட வேண்டும் என்று நாங்கள் கருதினோம். சில சமயங்களில் அரசு எடுக்கும் எதிர்மறை நடவடிக்கைகளை எதிர்கொள்ளும்போது வருத்தப்படுதல் மற்றும், உணர்ச்சிவசப்படுவதற்குப் பதிலாக, இருக்கும் சட்டவிதிகளைப் புரிந்துகொள்வதோடு உள்ளூர், மாநில அல்லது தேசிய அளவில் இந்து ஆலயங்கள் சட்டப்பூர்வமாகச் செயல்பட, குறிப்பாக மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்கள் முன்னேற்பாடான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

தரவுகளைச் சேகரிப்பதற்கும், அதைப் பகுப்பாய்வு செய்வதற்கும், கிடைக்கும் முடிவுகளின் அடிப்படையில், கோயில் நிர்வாகத்திற்கும், இந்துச் சமய பக்தர்களுக்கும் புரிந்துணர்வையும், விழிப்புணர்வையும் ஏற்படுத்துவது அவசியம் என நாங்கள் தீர்மானித்தோம். இதன் வழி உள்ளூர் மக்கள் அனைவருக்கும் சாதகமாகப் பயனளிக்கும் வகையில் ஆலயங்கள் கல்வி/ சமூக மையங்களாகச் செயல்பட முடியும். இந்தப் பணியை மேற்கொள்வது எவ்வளவு கடினம் என்பதை நாங்கள் உணர்ந்தாலும், எங்கள் ஆய்வுப் பணிகளின் வழி கிடைக்கும் முடிவுகள் மலாக்காவில் உள்ள இந்துச் சமூகத்தினருக்கு உதவும் நோக்கில் ஆலயங்கள் இயங்குவதற்கும் மற்றும், மேற்கண்ட பங்கினை இந்த ஆலயங்கள் ஆற்றுவதற்கும், அதோடு, மற்றச் சமுதாய அமைப்புகளுக்கும் இது வழிகாட்டியாக இருக்கும் என்று நாங்கள் நம்புகின்றோம்.

மேலும், அரசின் சம்பந்தப்பட்ட துறைகள் அல்லது தரப்பினர்கள் இந்துக் கோயிலின் நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கவும், கிடைக்கக்கூடிய அரசின் உதவிகளை வழங்குவதற்குத் தகுதியான கோயில்களைத் தேர்ந்தெடுப்பதற்கும் மற்றும், இந்துக் கோயிலுக்கு நிலத்தைக் கையகப்படுத்த / நில உரிமம் சம்பந்தமான சட்டவிதிகள் குறித்தும் அல்லது ஒரு பகுதியில் புதியக் கோயிலைக் கட்டுவதற்கான விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்து முடிவை எடுப்பதற்கும் இந்த ஆய்வின் முடிவுகள் உதவும்.

இந்த ஆய்வு, மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்கள் தங்கள் பங்கைச் செவ்வென ஆற்றமுடியாமல் இருப்பதற்கு முட்டுக்கட்டையாக உள்ள பிரச்சினைகளையும் வெளிக்கொணரும். ஆலய நிர்வாகத்தினர், அவர்களின் உறுப்பினர்கள், அந்த வட்டாரத்தில் வாழும் இந்துப் பக்தர்கள் மற்றும், அவ்வப்போது தார்மீக ஆதரவு மற்றும், நிதி பங்களிப்புகளை வழங்கும் தலைவர்களின் கவனத்திற்கும் சில முடிவுகளையும் பரிந்துரைகளையும் முன்வைக்கத் திட்டமிட்டுள்ளோம். அதோடு, அரசு அதிகாரிகளுக்கு ஒரு வழிகாட்டியாகவும் இது அமையும்.

நாம் எதிர்பார்க்கும் ஒரு நேர்மறையான விளைவு என்னவெனில் கோயிலின் உரிமம் - குறிப்பாக நாட்டின் சுதந்திரத்திற்கு முன்னர் அமைக்கப்பட்ட பழையக் கோயில்கள் - மற்றும், இந்தப் பழையக் கோயில்களை ஒரு புதிய இடத்திற்குக் கொண்டுசெல்வதன் மூலம் அல்லது அவற்றை நில வசதியுடைய மற்றக் கோயில்களுடன் இணைப்பதன் மூலம் தொடர்ந்து நிலை நாட்டப்படும். ஆலயம் சம்பந்தப்பட்ட முழுமையான விவரங்களை முன்வைப்பதன் வழி, அரசாங்கத்தின் ஒத்துழைப்புடன் சமூகத் தலைவர்கள் ஓர் ஏற்புடைய முறையான நடைமுறை முடிவை எட்டுவதற்கு நில உரிமையாளர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த இயலும்.

அரசாங்கம் இந்துக் கோயில்களைப் பதிவு செய்யும் விவகாரத்தைப் பொறுத்தவரை, தற்போதைய சங்கங்களின் பதிவதிகாரி நடைமுறையில் சில கட்டுப்பாடுகள் இருப்பதை இந்த ஆய்வு எடுத்துக்காட்டுகிறது. மேலும், சம்பந்தப்பட்ட வெவ்வேறு அரசு அதிகாரிகளால் அவரவர்களின் அதிகாரத்திற்கு ஏற்ப முறையாகப் பரிசீலித்தப்பிறகு எவ்வாறு அனைத்துக் கோயில்களும் பதிவு செய்யப்பட வேண்டும் என்பதற்கான பரிந்துரைகள் இந்த ஆய்வில் இருக்கும்.

கோயிலின் நிர்வாகத்தைப் பொறுத்தவரை, அவர்களின் பொறுப்பு மிகவும் சுமையானது. மேலும், கோயிலின் எல்லா நிகழ்ச்சிகளும் அதன் அனைத்து மக்களின் சமூகநலன் மற்றும், பொது நன்மைக்கு முன்னுரிமை கொடுக்கப்படுவதாக இருக்க வேண்டும். மேலும், ஒரு நேர்மையான மற்றும், வெளிப்படையான நிர்வாகப் பாணி மிகவும் முக்கியமானது. இதன் தொடர்பான முடிவுகள் மற்றும், பரிந்துரைகள் இந்த ஆய்வில் தெரிவிக்கப்படும்.

இந்துக்களைப் பொறுத்தவரை, மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்கள் அனைத்தும் வழிபாட்டிற்கும் மற்றும், திருவிழா நடத்தும் இடமாக மட்டுமில்லாமல் ஒரே சமயத்தில் தார்மீக மற்றும், ஆன்மீக கல்வி மையங்கள் எனக் கருதப்பட வேண்டும். ஆலயங்களில் ஏற்பாடு செய்யப்படும் பொருத்தமான நிகழ்வுகளில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த பல்வேறு வயதினரும் தொடர்ந்து பங்கெடுப்பதன் மூலம் இவர்கள் இந்துச் சமயத்தின் அடிப்படை போதனைகளை அறிந்து பின்பற்றுபவர்களாகப் பிரதிபலிப்பர். இத்தகைய நடவடிக்கைகள் பல இன சமய மக்கள் வாழும் இந்த நாட்டில் நல்லிணக்கத்தோடு வாழவும், ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையோடு ருக்குன் நெகரா கோட்பாட்டை மதித்து வாழ்கின்ற ஒரு சூழ்நிலையை உருவாக்கும்.

இந்துச் சமயத்தைச் சேர்ந்த இளைஞர்கள் குற்றச் செயல்களில் ஈடுபடும் எண்ணிக்கையைக் காணும்போது இவர்கள் தங்களின் இந்துச் சமய அற நெறிகளைச் சிறிதும் அறியாதவர்களாக இருப்பதை இது காட்டுகின்றது. இதைக் கருத்தில் கொண்டு, குறிப்பாக மலாக்காவிலும், பொதுவாக மலேசியாவிலும் உள்ள இந்துக் கோயில்கள் ஆண்டு முழுமையும் இருபாலருக்கும் உரிய எல்லா வயதினரையும் கவரும் நிகழ்ச்சிகளை ஒழுங்கமைப்பது முக்கியமானது. மலேசிய மைந்தர்கள் என்ற முறையில் உள்ளூர் இந்து இளைஞர்களைக் கோயில் நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபடச் செய்வது அவர்களின் தலைமைத்துவப் பண்புகளையும், நிகழ்வுகளைத் திட்டமிடல், அவற்றைச் செயல்படுத்துதல், நிர்வகித்தல் மற்றும், பொது-சமூக-சமய அறிவையும் வலுப்படுத்த உதவும் என்பது திண்ணம்.

அத்தகைய நோக்கத்தில்தான் 2018-ஆம் ஆண்டின் இறுதியில் இந்த ஆய்வைத் தொடர நாங்கள் முடிவு செய்தோம். மேலும், ஆய்வுக்குரிய வினாக்களைத் தயாரிக்கவும், மலாக்கா மாநிலத்தில் உள்ள ஒவ்வொரு கோயிலிலிருந்தும் தரவுகளைச் சேகரிக்கவும், தரவைப் பகுப்பாய்வு செய்யவும், பகுப்பாய்விலிருந்து முடிவுகளைத் தயாரிப்பது, அறிக்கைகளைத் தயாரிப்பது இறுதியில் அவற்றைச் சமூகத் தலைவர்கள் மற்றும், இந்துச் சமயத்தைப் பின்பற்றுபவர்கள் பயனுக்காக மலாய் மற்றும், தமிழ் மொழிகளில் புத்தக வடிவில் வெளியிடவும் திட்டமிட்டோம். பல பிரச்சினைகளைத் தாண்டி இந்த எங்கள் முயற்சிகள் 2021 இறுதிக்குள் அல்லது 2022 ஆண்டு ஆரம்பத்தில் நிறைவடையும் என்று நம்புகிறோம்.

## தயார் நிலை

இந்த ஆய்வில் பங்கேற்கத் தன்னார்வலர்களை அடையாளம் காணும் முயற்சிகள் 2018-ஆம் ஆண்டு இறுதி முதல் நடந்து வந்தன. ஆரம்பத்தில், ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டத்தில் சுமார் 20 பேர்கள் கலந்துகொண்டனர். எந்த ஓர் அமைப்பையும் சாராத நடுநிலைக் குழுவாக இது இயங்கும் என்பதால் இந்த ஆய்வை நடத்துவதற்கு ஆதரவைப் பெற சில அரசு சார்பற்ற இயக்கங்களின் ஒத்துழைப்பைப் பெற முயற்சித்தோம். ஆனால், பெரும்பாலானவர்கள் சமயம் சம்பந்தப்பட்ட ஆய்வுகளில் ஈடுபட விரும்பாததால் எங்களின் இம்முயற்சி தோல்வியடைந்தது.

யாரையும் சார்ந்திராத, சுதந்திரமான குழு என்ற முறையில் மலாக்கா இந்து சங்க அலுவலகத்தில் ஆர்வம் காட்டிய சிலருடன் கலந்துரையாடியதில் இந்தக் குழு சில முடிவுகளை எடுத்தது. இந்தக் குழுவே தயாரித்த சில வழிகாட்டுதல்களின் அடிப்படையில் நேர்மையாகவும், வெளிப்படையாகவும் இந்த ஆய்வைச் செய்யவேண்டும் என்ற முடிவு எடுக்கப்பட்டது. இந்த ஆய்வு அதன் சுதந்திரத்திற்குப் பங்கம் விளைவிக்கக்கூடிய சில சிரமங்களை எதிர்கொள்ள நேரிடும் என்பதால், தற்போதுள்ள எந்தவொரு அமைப்புகளின் கீழ் / கட்டுப்பாட்டிற்குள் அடங்காமல் சுதந்திரமாகச் செயல்பட முடிவு செய்தோம். எனவே, 2019-ஆம் ஆண்டின் நடுப்பகுதியில் இந்த ஆய்வின் அடிப்படையாக ‘மலாக்கா சமூகத் தன்னார்வ ஆய்வாளர் சங்கம்’ என்ற பெயரில் சங்கப்பதிவாளரிடம் ஒரு சிறப்பு அமைப்பைப் பதிவு செய்தோம்.

மலேசியா புத்ரா பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் டத்தோ டாக்டர் எம்.பரமசிவம் அவர்கள் அப்பல்கலைக்கழகத்தின் ஆய்வு நிபுணத்துவத்தை வழங்க ஒப்புக்கொண்டார். மலாக்காவில், குறிப்பாக எல்லாக் கோயில்களுக்கும் சென்று தரவுகளைச் சேகரிக்க எங்களுக்கு உதவ தன்னார்வலர்கள் இருந்தனர். முதலில் நாங்கள் மலாக்கா மாநில அரசாங்கத்தின் ஆசியைப் பெற மலாக்கா முதல்வரைச் சந்தித்தோம். அவர் எங்களின் நோக்கங்களுக்கு ஆதரவு கொடுத்ததோடு சட்டசபை உறுப்பினரும் ஆட்சிக்குழு உறுப்பினராகவுமிருந்த மாண்புமிகு திரு ஜி.சாமிநாதன் அவர்களையும் மற்றும், மாநில அரசின் துணை நிறுவனமான துன் பேராக் நிறுவனத்தின் இயக்குனரையும் அழைத்து முடிந்தவரை எங்களுக்கு உதவுமாறு கேட்டுக்கொண்டார். இந்த ஆய்வைத் தொடங்குவதற்கான அடிப்படை நிதியுதவியை மாண்புமிகு திரு ஜி. சாமிநாதன் அவர்கள் எங்களுக்கு வழங்க முன் வந்தார்.

ஆய்வுக்கான வினாக்கள் தயாரிக்கப்பட்டு, 2019-ஆம் ஆண்டு ஜனவரியில் அவை மதிப்பாய்வு செய்யப்பட்டன. இருக்கின்ற தன்னார்வலர்களுடன் 20 கோயில்களில் முன்னாய்வு நடத்தப்பட்டன. ஆரம்பக் கூட்டங்களில் கலந்துகொண்டவர்களில் பெரும்பாலோர் இதில் தொடர்ந்து ஈடுபட முன்வரவில்லை. இருந்தாலும், 10 பேர்கள் மட்டுமே இதில் ஈடுபட ஆர்வம் காட்டினர். ஆரம்பத்தில் போக்குவரத்து செலவிற்கு ஏதும் கொடுக்கப்படவில்லை. அதோடு, இந்த 20 கோயில்களுக்குச் சென்று ஆய்வு செய்யப் பல மாதங்கள் பிடித்தன. 2019-ஆம் ஆண்டு மார்ச் மாத இறுதியில், முதல் 20 கோயில்களுக்கான தரவுகள் சேகரிக்கப்பட்டன. இந்த அனுபவத்தின் அடிப்படையில், மற்றக் கோயில்களுக்கு வருகை தருவதற்கு முன்பு ஆய்வுக்கான வினாக்களில் சிறிது மாற்றம் செய்யப்பட்டன. பின்னர் மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களுக்குச் சென்ற ஆய்வுப்பணி உதவியாளர்களுக்குப் போக்குவரத்து செலவைச் சிறிது ஈடுகட்ட மாண்புமிகு திரு ஜி. சாமிநாதன் அவர்களின் பங்களிப்பு அனுமதித்தது.

## ஆய்வு வினாக்கள்

மலாக்கா மாநிலத்தில் உள்ள ஒவ்வோர் இந்துக் கோயிலின் நிர்வாகத்திடமிருந்தும் தகவல்களைப் பெற ஆய்வு வினாக்கள் அடங்கிய வினாத்தாள் வழங்கப்பட்டது. தேவையான தரவு பின்வரும் பரிமாணங்களைக் கொண்டு அமைந்தது.

| | |
|---|---|
| **முதல் பரிமாணம்** | • கோயிலின் அடிப்படையான விவரம் மற்றும், அதன் வரலாறு<br>• இந்தப் பரிமாணத்தில் பதினெட்டு பிரிவுகள் உள்ளன. |
| **இரண்டாம் பரிமாணம்** | • தற்போதைய கோயில் நிர்வாகம்<br>• இந்தப் பரிமாணத்தில் ஒன்பது பிரிவுகள் உள்ளன. |
| **மூன்றாம் பரிமாணம்** | • நிதி நிலைமை<br>• இந்தப் பரிமாணத்தில் நான்கு பிரிவுகள் உள்ளன. |
| **நான்காம் பரிமாணம்** | • கோயிலின் பிற நிகழ்வுகள்<br>• இந்தப் பரிமாணத்தில் பத்து பிரிவுகள் உள்ளன. |
| **ஐந்தாம் பரிமாணம்** | • கோயிலின் மேம்பாட்டுத்திட்டங்கள், சவால்கள் மற்றும், கருத்துகள்<br>• இதில் ஐந்து பிரிவுகள் உள்ளன. |
| **ஆறாவது பரிமாணம்** | • ஆய்வின் பரிந்துரைகளும் மற்றும், முடிவுகளும். |

**முதல் பரிமாணம் :**

இதன் நோக்கம் கோயிலின் பெயர், அது அமைந்திருக்கும் மாவட்டம் மற்றும், அதன் முகவரி, பதிலளித்த கோயில் பொறுப்பாளர் மற்றும், அதன் விவரங்கள், கோயிலை நிர்வகிக்கும் செயலவைக்குழுவின் விவரங்கள், கோயில் அமைந்திருக்கும் இடத்திலிருந்து 5 கி.மீ. தூரத்திற்குள் உள்ள கோயில்கள், நிறுவப்பட்ட ஆண்டு, அதன் அசல் பெயர், தோற்றுவித்தவர்கள், நிகழ்ந்த மாற்றங்கள், கடந்த காலங்களில் கோயில் உறுப்பினர்களின் எண்ணிக்கை, நிலப்பரப்பு, நில உரிமத்தின் விவரங்கள், தற்போதைய நில உரிமை நிலை, கோயிலின் சட்டத்திட்டங்கள், சங்கங்களின் பதிவதிகாரியிடம் (ROS) கோயில் பதிவு விவரங்கள், மலேசிய இந்து சங்க உறுப்பியம், ஆண்டுப் பொதுக் கூட்டம், கோயிலின் தனிச் சிறப்பு, கோயில் கட்டிட வகை, மற்றும், கோயிலுள்ள பிற வசதிகள் போன்றவற்றை அறிய உதவுகிறது.

**இரண்டாவது பரிமாணம்:**

தற்போதைய நிர்வாகம், சம்பந்தப்பட்ட நிர்வாக உறுப்பினர்கள் மற்றும், அவர்களின் தகுதி நிலை, மொத்தக் கோயில் உறுப்பினர்கள், உறுப்பினர் கட்டணம், கோயிலுக்கு வருகை தரும் குடும்பங்களின் எண்ணிக்கை, வெளி வட்டாரத்திலிருந்து வருபவர்கள் போன்றவற்றை அறிய உதவுகிறது. மேலும், முக்கிய வழிபாட்டுத் தெய்வங்கள் / பிற தெய்வங்கள், நடைபெறும் தினசரி பூஜைகளின் எண்ணிக்கை, இந்தப் பூஜைகளில் / முக்கியப் பண்டிகைகளில்/ உபயங்களில் பக்தர்களின் சராசரி வருகை, பூஜைக்கு வசூலிக்கப்படும் கட்டணம், வருடாந்திரத் திருவிழா, இதில் கலந்துகொள்வோர் எண்ணிக்கை, திருவிழா நடத்தப்படும் முறை, தேர் ஊர்வலம், உபயங்கள்/ செலவை ஏற்பவர், கும்பாபிஷேகம், சைவம் அல்லது அசைவம், கோயிலில் திருமண நிகழ்ச்சிகள் மற்றும், திருமணப் பதிவுகள் போன்ற விவரங்களையும் அறிய உதவுகிறது.

**மூன்றாவது பரிமாணம்:**

கோயிலின் நிதிவளம் அதாவது, கோயிலில் சொந்தக் கணக்கு உள்ளதா, கணக்குகளைப் பராமரிப்பவர், பொதுக்கூட்டங்களில் கணக்கு விபரங்கள் சமர்ப்பிக்கப்படுகின்றதா, நிரந்தர நன்கொடையாளர்கள், அரசாங்க நன்கொடைகள், கோயிலின் இதரச் சொத்துக்கள், மூன்று ஆண்டுகளின் நிதி சம்பந்தப்பட்ட (2016, 2017 மற்றும், 2018) வருடாந்திர அறிக்கைகள் போன்றவற்றை அறிய உதவும்.

**நான்காம் பரிமாணம்:**

பூஜை மற்றும், வழிபாட்டு நிகழ்ச்சிகளைத் தவிர கோயிலில் நடைபெறும் வேறு நிகழ்வுகள், அதாவது, இந்துச் சமயத்தைப் பின்பற்றுவோருக்கு ஏற்பாடு செய்யக்கூடிய இந்துச் சமயக் கல்வி மேம்பாட்டு நடவடிக்கைகள், தமிழ் மொழி / கல்வி / விழிப்புணர்வு இது போன்ற சமூக நலன் சார்ந்த சமுதாயத்திற்குத் தேவையான நிகழ்வுகள், உறுப்பினர்களுக்கான கல்வித் திட்டங்கள்; அதன் செயற்குழு உறுப்பினர்களின் சமயக்கல்வி மேம்பாடு, சமய உரைகள், சமய போதனைகள், பிற நடவடிக்கைகள் மற்றும், கோயிலுக்கு ஒத்துழைப்பு வழங்கக்கூடிய பிற அமைப்புகள் போன்ற விவரங்களை அறிய உதவுகிறது.

**ஐந்தாவது பரிமாணம்:**

அடுத்த ஐந்தாண்டுகளுக்கான கோயில் செயல் குழுவின் வளர்ச்சித் திட்டங்கள், அது எதிர்கொள்ளும் சவால்கள், கோயிலின் நடைமுறை குறித்த நிர்வாகத்தின் கருத்து மற்றும், அதன் சில ஆதரவாளர்களின் கருத்து ஆகியவற்றை மதிப்பாய்வு செய்கிறது.

**ஆறாவது பரிமாணம்:**

இந்த ஆய்வின் முடிவுகள் அல்லது கணிப்புகள் மற்றும், இந்த ஆய்வின் விளைவாக எழுந்த பரிந்துரைகளை உள்ளடக்கியது.

FORMAT SURVEY

## KAJIAN TENTANG KUIL HINDU DI NEGERI MELAKA

Tanda ( √) di mana yang sesuai

| A | DIMENSI PERTAMA | BUTIR ASAS KUIL & SEJARAHNYA |
|---|---|---|

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| i | Nama Kuil | | | | | |
| ii | Alamat Kuil | | | | | |
| iii | Daerah | | | | | |
| iv | Pegawai kuil yang ditemui | | | | | |
| v | Jawatannya dalam Kuil | | Pekerjaan: | | No. Telefon: | |
| vi | Alamatnya | | | | | |

| vii | Jawatankuasa yang mentadbirkan kuil | | | | | |
|---|---|---|---|---|---|---|
| Bil | Nama | Kelulusan | Jawatan | Sejak tahun | Alamat | No. Telefon |
| 1 | | | | | | |
| 2 | | | | | | |
| 3 | | | | | | |
| 4 | | | | | | |
| 5 | | | | | | |
| 6 | | | | | | |
| 7 | | | | | | |

| viii | Kuil-kuil lain dalam lingkungan 5 km |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |

| ix | Tahun Penubuhan | | Nama Asal | |
|---|---|---|---|---|
| Ditubuhkan oleh | | | | |

| x | Perkembangan / Tambahan / Perubahan yang dilakukan pada kuil hingga sekarang |
|---|---|
| | |

| xi | BILANGAN AHLI KUIL<br>[dari dahulu hingga sekarang (ANGGARAN)] | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| Sebelum 1957 | | Tahun 1980-an | | Tahun 2000-10 | | Tahun 2017/18 | |

| xii | PERIHAL TANAH KUIL |
|---|---|

| Luas tanah kuil | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | Ekar / kaki persegi | | | | |
| Pemilikan Tanah Kuil | | | | | | | |
| Atas Nama Kuil | | Orang Perseorangan | | Tanah Syarikat / Ladang | | Tanah lain | |
| Atas Pertubuhan Penganut | | Di bawah Perintah Mahkamah (Trust Deed) pada Pemegang Amanah Kuil | | Tanah kerajaan | | | |
| Nama Pemilik Tanah | | | | | | | |
| | | | | | | | |
| Jika pemilik tanah lain, wujudkah persetujuan daripada pemilik untuk kuil ini? | | | | | | | |
| Ada kebenaran bertulis | | Ada kebenaran lisan | | Tiada Kebenaran | | | |
| Jika tanah bukan kepunyaan kuil, pernahkah ada usaha untuk membeli tanah berkenaan daripada tuan punya? | | | | Tidak Penah | | Pernah | |
| Jika pernah, apakah keputusan yang diperoleh? | | | | | | | |
| | | | | | | | |

| xiii | PERLEMBAGAAN | | | | |
|---|---|---|---|---|---|
| Adakah kuil ini mempunyai Perlembagaan atau Undang-Undang pentadbiran secara bertulis? | | Ada | | Tiada | |
| Bilakah peraturan-peraturan ini diwujudkan? | | Tahun | | | |
| Adakah Perlembagaan kuil ini berdaftar dengan Pendaftar Pertubuhan Malaysia (ROS)? | Tahun Berdaftar | No. Pendaftaran | | Belum berdaftar | |
| | | | | | |
| Pendaftaran dengan ROS | Atas Nama Kuil | Atas nama Persatuan Penganut | | Lain-lain | |
| | | | | | |

| xiv | Adakah kuil ini berdaftar dengan *Malaysia Hindu Sangam?* | Ya | | Tiada | |
|---|---|---|---|---|---|

| xv | MESYUARAT AGUNG | | | | | |
|---|---|---|---|---|---|---|
| Adakah Jawatankuasa yang mentadbirkan kuil ini dipilih dalam mesyuarat agungnya? | | | | | | |
| Ya | | Tidak | | Jika ` **tidak**' cara JK dilantik | | |
| Mesyuarat Agung Kuil ini diadakan | | | | Setiap/ dwi Tahun | Pada Bulan | |
| Atau | | | | | | |
| AJK dipilih setiap tahun | | Dua tahun sekali | | Atau | | |
| Adakah sebarang `Trust Deed' atau perintah mahkamah tentang kepunyaan kuil ini? | | | Ada | | Tiada | |

| xvi | KEISTIMEWAAN |
|---|---|
| Apakah keistimewaan kuil ini dari segi sejarahnya, atau dari segi-segi lain? | |
| | |

| xvii | BANGUNAN (Jenis) | | | | |
|---|---|---|---|---|---|
| A | Kompleks Bangunan batu dalam kawasan tanah yang luas | | B | Pondok simen-kayu | |
| C | Bangunan batu dalam kawasan tanah yang terhad | | D | Kuil Terbuka - di bawah pokok / kaki batu besar dan sebagainya. | |
| E | | | F | | |

| xviii | KEMUDAHAN KUIL | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | Dewan Sembahyang | | Dewan Serbaguna | | Tempat makan-minum | | Tempat tinggal untuk petugas | |
| | Meja | | Kerusi | | Meja/Kerusi | | Tempat letak kereta | |
| | Ther/Pedati | | Berpagar | | Tandas | | | |
| | | | | | | | | |

| B | DIMENSI KEDUA | PENTADBIRAN KUIL PADA HARI INI |
|---|---|---|

| i | PENTADBIR UTAMA KUIL<br>(Jika lain daripada senarai J/K di bahagian A |
|---|---|

| Bil | Nama | Umur | Pekerjaan | Kelayakan / pelajaran | Jawatan | No.Telefon |
|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | |
| 2 | | | | | | |
| 3 | | | | | | |
| 4 | | | | | | |
| 5 | | | | | | |

| ii | PENGAMAL AGAMA HINDU (*IYER/PANDARAM* ), AHLI MUZIK (*NADHASWARAM/ MELAM*), PENTADBIR /PEKERJA YANG DIUPAH OLEH KUIL |
|---|---|

| | Nama | Kerakyatan | Umur | Peranan | Kelayakan | Penuh masa / Sambilan | Upah |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | | | | | | | |
| 2 | | | | | | | |
| 3 | | | | | | | |
| 4 | | | | | | | |
| 5 | | | | | | | |
| Jika tiada pegawai agama yang diupah, siapakah mengetuai upacara agama | | | | | | | |
| | | | | | | | |

| iii | JUMLAH KEAHLIAN KUIL / KEHADIRAN | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| **Mengikut Jenis** | | | | | | | |
| Ahli Seumur Hidup | | Ahli Biasa | | Ahli Kehormat | | Pemegang Amanah | |
| **Yuran keahlian** | | | | | | | |
| Ahli seumur hidup | RM | Ahli Biasa | RM | Setahun | RM | Sebulan | RM |
| **Bilangan keluarga Hindu** di lokasi yang menggunakan kuil ini? | | | | | | | |
| Anggaran **jumlah ahli keluarga** itu yang menggunakan kuil ini secara rutin? | | | | | | | |
| **Purata penganut dari luar lokasi kuil** yang datang untuk bersembahyang di kuil ini dalam masa sebulan | | | | | | **Keistimewaan** | |
| Purata **pelawat dari luar** yang datang untuk mengunjungi kuil ini atas keistimewaannya dalam Masa sebulan? | | | | | | **Tarikan** | |

| iv | DEWA /DEWI | | |
|---|---|---|---|
| Kuil ini khusus untuk ***dewa / dewi*** | | | |
| *Dewa/dewi* lain yang ditempatkan di sini | | | |
| | | | |

| v | ***POOJA*** **/KEHADIRAN** | | | | |
|---|---|---|---|---|---|
| Masa ***pooja*** diadakan | | | | | |
| Pagi, tengah hari dan petang setiap hari | | Pagi dan Petang setiap hari | | Sekali pada pagi sahaja setiap hari | |
| Sekali pada petang sahaja setiap hari | | …………. kali seminggu | | Pada waktu-waktu tertentu mengikut takwim Hindu | |
| Pada waktu perayaan -perayaan utama sahaja | | | | | |

| Hitung panjang bilangan penganut yang menghadiri *pooja* harian / berkala? | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| Pagi & tengah hari | | Petang | | Hari Perayaan agama | | *ubayam* | | Waktu *thiruvizha* | |

| *pooja-pooja* khas diadakan mengikut takwim Hindu seperti berikut | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| Ponggal | | Rama Navami | | Guru Purnima | | Deepavali | |
| Thaipoosam | | Gauri pooja | | Naga Pancami | | Navarathri | |
| Maasimagam | | Ciththirai Puthaandu | | Varaletcumi viratham | | Sarva pitru amavasai | |
| Citra Purnima | | Ugadi | | Onam | | Krishna Jayanthi | |
| Maha Sivarathri | | Hari Wesak | | Vinayaga Sathurthi | | Ekathasi | |
| Syasti | | Aadi puuram | | | | | |

| Bayaran yang dikenakan pada penganut yang menyertai jenis-jenis ***pooja*** di kuil ini yang ditentukan oleh pihak Kuil |
|---|
| |

| vi | PERAYAAN KHAS (THIRUVIZHA) | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| **Nama Perayaan** | | **Lama diadakan** | | **Bulan** | | **Sejak bila diadakan** | |
| | | | | | | | |
| Adakah perarakan *dewa/dewi* dengan menggunakan `***ther***' diadakan? | | | | Jika ya, `*ther*' yang digunakan kepunyaan sendiri | | disewa / dipinjam | |
| Ya | | Tidak | | Bilangan yang dimiliki | | | |
| Semasa *thiruvizha* hal-hal berikut diadakan | | | | | | | |
| Paalkudam | | *Kavadi* | | Pertunjukan Kebudayaan | | Jualan | |
| Adakah **bantuan polis** dipohon untuk mengawasi perarakan? | | | | Ya | | Tidak | |

| vii | ***UBAYAM*** | | | |
|---|---|---|---|---|
| Adakah `***ubayam***' dibiayai oleh penganut agama di kuil ini? | Ya | | Tidak | |
| Jika ada, kira-kira berapa `*ubayam*' dilakukan di kuil ini dalam masa setahun? | | | | |
| Adakah *ubayam* dbuka pada semua penganut untuk ditaja | | | | |
| Atau cuma ahli-ahli tertentu yang ditentukan oleh pentadbir kuil ini | | | | |
| Purata bayaran tajaan yang dikenakan | | | | |

| viii | KUMBABISHEGAM | | | | |
|---|---|---|---|---|---|
| Pernahkah kuil ini mengadakan *kumbabishegam*? | | Ya | | Tidak pernah | |
| Jika ya, berapa kali? | | Kali terakhir pada tahun | | Kali akan datang | |
| Makanan yang dibenarkan di kuil ini? | | Sayur-sayuran sahaja | | Daging dibenarkan | |

| ix | PERKAHWINAN | | | |
|---|---|---|---|---|
| Adakah perkahwinan tradisional diadakan di kuil ini? | Ada | | Tiada | |
| Jika `ada', adakah pendaftaran perkahwinan dijalankan di kuil ini? | Ada | | Tiada | |
| Adakah kuil mempunyai pendaftar perkahwinan yang sah tersendiri? | Ada | | Tiada | |

| C | DIMENSI KETIGA | KEWANGAN |
|---|---|---|

| i | PENGENDALIAN KEWANGAN KUIL | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| **Akaun** | | **Akaun atas Nama** | | | | | |
| Ada | Tiada | **Kuil** | **Persatuan Penganut** | **Badan Amanah** | **Nama Perseorangan** | **Nama** | **Jawatan di JK Kuil** |
| | | | | | | | |
| **Penyata Kewangan** dibentangkan dalam Mesyuarat Agung Tahunan untuk diluluskan | | | | | Ya | | Tidak |
| Wang Tunai yang dibenarkan pada Bendahari pada sesuatu masa | | | | | | | |

| ii | Selain pungutan yuran daripada ahli, apakah cara-cara dana dikutip untuk menjayakan aktiviti kuil ini? | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| Pungutan derma daripada ahli & orang ramai | | Undiyal / Jualan Barangan | | Sumbangan daripada dermawan khas | | Cabutan Bertuah | |
| Ahli politik / Kerajaan Negeri / Kerajaan Pusat | | Sewa kemudahan kuil/ bangunan kepunyaan kuil | | Projek khas anjuran kuil | | | |
| | | | | | | | |

| iii | BANTUAN KEWANGAN | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| Adakah kuil ini menerima **bantuan kewangan** (lebih RM 1,000.00 setahun) daripada **dermawan perseorangan** yang berterusan? | | | | | | | |
| Ya | | tidak | | Jika `Ya', bil penderma | | | |
| Pernahkah kuil ini menerima **bantuan kewangan daripada kerajaan / ahli-ahli politik** | | | | | | | |
| Pernah | Tidak Pernah | Jika pernah, dalam tiga tahun kebelakangan ini berapa sumbangannya? | | | | | |
| | | Tahun | RM | Tahun | RM | Tahun | RM |
| | | | | | | | |
| Adakah kuil ini mempunyai harta lain? | | | Ada | | Tiada | | |

| iv | PENDAPATAN DAN PERBELANJAAN KUIL SELAMA 3 TAHUN YANG LALU | | |
|---|---|---|---|
| **PENDAPATAN** | | | |
| **Perihal** | **2016** | **2017** | **2018** |
| Yuran Keahlian | | | |
| Undiyal / *Pooja* | | | |
| Derma Perayaan | | | |
| Sumbangan individu atau Badan swasta kpd Kuil | | | |
| Sumbangan kerajaan | | | |
| Projek Khas | | | |
| Lain-lain | | | |
| | | | |
| | | | |
| **JUMLAH** | | | |

| **PERBELANJAAN** | | | |
|---|---|---|---|
| **Perihal** | **2016** | **2017** | **2018** |
| Pentadbiran | | | |
| Upah / Gaji | | | |
| Perayaan | | | |
| Pembaikan Kuil | | | |
| Projek Khas | | | |
| Lain-lain | | | |
| | | | |
| | | | |
| **JUMLAH** | | | |

| D | DIMENSI KEEMPAT | PROGRAM-PROGRAM TAMBAHAN KUIL INI |
|---|---|---|

| i | AKTIVITI BERKAITAN AGAMA HINDU YANG DIANJURKAN OLEH KUIL INI UNTUK PENGANUT HINDU DAN AHLI-AHLINYA (3 TAHUN YANG LALU SAHAJA) |
|---|---|

| TARIKH | AKTIVITI | TEMPAT | PENYERTAAN |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |
| | | | |
| | | | |

(Please use the back of this sheet to continue, if needed)

| ii | AKTIVITI BERKAITAN BAHASA TAMIL / PENDIDIKAN / KESEDARAN YANG DIANJURKAN OLEH KUIL INI UNTUK PENGANUT AGAMA HINDU DAN KELUARGA AHLI-AHLINYA (3 TAHUN YANG LALU SAHAJA) |
|---|---|

| TARIKH | AKTIVITI | TEMPAT | PENYERTAAN |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |

(Please use the back of this sheet to continue, if needed)

| iii | AKTIVITI AMAL - MEMBANTU ORANG MISKIN DENGAN MENGHULURKAN DERMA / MAKANAN / BARANGAN, MENYEDIAKAN KEMUDAHAN PENGINAPAN KEPADA FAKIR MISKIN, MEMBANTU PELAJAR MISKIN DENGAN BANTUAN KEWANGAN/ ALATAN SEKOLAH, MENYEDIAKAN BIASISWA KEPADA PELAJAR- DALAM 3 TAHUN KEBELAKANGAN INI |
|---|---|

| TARIKH | AKTIVITI AMAL | TEMPAT | BIL PENERIMA FAEDAH |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |

| iv | AKTIVITI LAIN YANG MEMBERIKAN FAEDAH KEPADA PENGANUT AGAMA HINDU MAHUPUN MASYARAKAT TEMPATAN DALAM 3 TAHUN YANG LALU, DIANJURKAN OLEH KUIL |
|---|---|

| TARIKH | AKTIVITI | TEMPAT | PENYERTAAN |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |

| v | PROGRAM PENDIDIKAN DALAM HAL-HAL AGAMA HINDU YANG DISERTAI OLEH AHLI-AHLI KUIL INI DALAM 3 TAHUN KEBELAKANGAN INI (TIDAK TERMASUK CERAMAH AGAMA) |
|---|---|

| TARIKH | PROGRAM | ANJURAN | BIL PENYERTAAN |
|---|---|---|---|
| | | | |
| | | | |
| | | | |

| vi | CERAMAH / FORUM AGAMA HINDU YANG DISERTAI OLEH AHLI-AHLI KUIL INI DALAM 3 TAHUN KEBELAKANGAN INI | | |
|---|---|---|---|
| TARIKH | TAJUK | PENCERAMAH / PEMUDAHCARA | BIL AHLI YANG HADIR |
| | | | |
| | | | |
| | | | |

| vii | PROGRAM PENDIDIKAN DALAM HAL-HAL AGAMA HINDU YANG DISERTAI OLEH AHLI-AHLI KUIL INI DALAM 3 TAHUN KEBELAKANGAN INI (TIDAK TERMASUK CERAMAH AGAMA) |
|---|---|

| TARIKH | KURSUS | ANJURAN | TEMPOH | PESERTA |
|---|---|---|---|---|
| | | | | |
| | | | | |
| | | | | |
| | | | | |

| viii | KOS PENGENDALIAN AKTIVITI TAMBAHAN / KURSUS |
|---|---|

| | | | | | |
|---|---|---|---|---|---|
| DIBIAYAI OLEH KUIL | | DIBIAYAI MELALUI DERMA | | DITANGGUNG PENUH OLEH PESERTA | |
| DIBIAYAI BERSAMA OLEH KUIL DAN PESERTA | | DIBIAYAI OLEH DERMAWAN KHUSUS | | DARIPADA SUMBANGAN KERAJAAN | |
| SECARA KERJASAMA DENGAN BADAN LAIN | | | | | |

| ix | BADAN-BADAN LAIN YANG KERJASAMA DENGAN PIHAK KUIL DALAM MENGENDALIKAN AKTIVITI TAMBAHAN | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | | 2 | | 3 | |
| 4 | | 5 | | 6 | |

| x | BADAN-BADAN SERTA MASYARAKAT TEMPATAN (KAWASAN) YANG MENERIMA FAEDAH DARIPADA AKTIVITI KUIL INI | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | | 2 | | 3 | |
| 4 | | 5 | | 6 | |

| E | DIMENSI KELIMA | RANCANGAN PEMBANGUNAN, CABARAN DAN KESIMPULAN |
|---|---|---|

| i | RANCANGAN PEMBANGUNAN DALAM MASA 5 TAHUN AKAN DATANG(TERMASUK ANGGARAN KOS SERTA PERSEDIAAN YANG SUDAH / SEDANG DILAKUKAN) |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |

| ii | CABARAN, MASALAH YANG DIHADAPI OLEH KUIL INI DARI SEGI PANDANGAN PIHAK KUIL |
|---|---|
| 1 | |
| 2 | |
| 3 | |
| 4 | |

| iii | PADA PANDANGAN PIHAK KUIL, SAMBUTAN PENGANUT TEMPATAN TERHADAP KUIL |
|---|---|

| | |
|---|---|
| CEMERLANG: KERANA SAMBUTAN DAN PENYERTAAN HAMPIR SEMUA KELUARGA HINDU | |
| SEDERHANA: KERANA CUMA SBILANGAN KELUARGA MEMBERI SOKONGAN KEPADA KUIL INI | |
| KURANG BAIK: KERANA SAMBUTAN KELUARGA-KELUARGA HINDU AGAK KURANG | |

| iv | PANDANGAN KESELURUHAN PIHAK KUIL INI DARI SEGI KEISTIMEWAAN KUIL INI, PERANANNYA DALAM MASYARAKAT HINDU / TAMIL TEMPATAN, KEJAYAAN-KEJAYAANNYA SETAKAT INI SERTA HARAPANNYA (BEBAS) |
|---|---|

.....................................................................................................................................................

.....................................................................................................................................................

.....................................................................................................................................................

.....................................................................................................................................................

.....................................................................................................................................................

| v | NOTA TAMBAHAN / KOMEN, JIKA ADA |
|---|---|

**TERIMA KASIH ATAS SEGALA KERJASAMA DAN BANTUAN YANG DIBERIKAN TERHADAP KAJIAN INI.**

**JAWATANKUASA KAJIAN KUIL HINDU NEGERI MELAKA, 2019**

| NAMA PEMUDAHKAJI | | TARIKH | |
|---|---|---|---|

**KAJIAN TENTANG PANDANGAN PENGANUT AGAMA HINDU TERHADAP KUIL HINDU YANG TERLETAK DI KAWASAN KEDIAMANNYA / ATAU YANG SELALU DIKUNJUNGINYA**

<table>
<tr><td>NAMA KUIL</td><td colspan="5"></td></tr>
<tr><td>ALAMAT</td><td colspan="5"></td></tr>
<tr><td>NAMA PENGANUT</td><td colspan="5"></td></tr>
<tr><td>ALAMATNYA</td><td colspan="5"></td></tr>
<tr><td colspan="5">BERAPA LAMA TINGGAL DI SITU</td><td></td></tr>
<tr><td colspan="5">BERAPA LAMA MENGUNJUNGI KUIL INI</td><td></td></tr>
<tr><td>BERAPA AHLI KELUARGANYA</td><td>LELAKI</td><td></td><td>PEREMPUAN</td><td></td><td></td></tr>
<tr><td colspan="5">ADAKAH SEMUA AHLI KELUARGANYA MENGUNJUNGI KUIL INI UNTUK BERIBADAT?</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="5">ADAKAH MENJADI AHLI KUIL?</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="5">MENGHADIRI MESYUARAT KUIL?</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="5">MEMBERIKAN SUMBANGAN TERHADAP KUIL INI?</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="5">Jika ` IA’, berapakah SUMBANGAN WANG SETAHUN?</td><td></td></tr>
<tr><td colspan="5">Sumbangan tenaga semasa perayaan /hal ehwal kuil</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="5">PERNAH MENGANGGOTAI JAWATANKUASA KUIL INI?</td><td>YA/TIDAK</td></tr>
<tr><td colspan="6">PANDANGAN TERHADAP KEISTIMEWAAN KUIL INI SERTA SAMBUTAN PENGANUT HINDU TEMPATAN TERHADAPNYA</td></tr>
<tr><td colspan="6"></td></tr>
<tr><td colspan="6">PANDANGAN TERHADAP PENTADBIRAN KUIL INI</td></tr>
<tr><td colspan="6"></td></tr>
<tr><td colspan="6">PEMBAIKAN YANG DIHARAPKAN</td></tr>
<tr><td colspan="6"></td></tr>
</table>

Terima kasih.

## ஆய்வின் ஆரம்பம்

முதல் 20 கோயில்களில் தரவுகளைச் சேகரிக்கும்போது ஏற்பட்ட பிரச்சினைகள் குறித்து விவாதித்த பின்னர், 2019-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், ஆரம்பச் சுற்றுகளில் ஈடுபட்ட தன்னார்வலர்களிடையே பணிகள் பிரித்துக் கொடுக்கப்பட்டன.

கோயில் நிர்வாகத்தினர் சிலர் ஒத்துழைக்க விரும்பவில்லை என்பதையும், சிலர் சந்திப்பதற்கான சரியான தேதியையும் நேரத்தையும் வழங்கத் தயங்கினர் என்பதையும் நாங்கள் கண்டறிந்தோம். இங்கு எழுந்த பிரச்சினை என்னவென்றால், பெரும்பாலான கோயில் நிர்வாகம் தங்கள் கோயில்களின் பதிவுகளை - குறிப்பாக ஆவணங்களை - வைத்திருக்கவில்லை, அதே நேரத்தில் பலர் ஆண்டு அறிக்கைகளை வழங்கவோ அவர்களின் கோயில்களின் நிதிவளம் குறித்து விவரிக்கவோ தயங்கினார்கள். கோரப்பட்ட மூன்று ஆண்டுகளுக்கான வருடாந்திர வருமானத்தைச் சமர்ப்பிக்க ஒரு சில கோயில்கள் மட்டுமே தயாராக இருந்தன. ஆவணச் சான்றுகள் தேவைப்படும் கேள்விகளைத் தவிர்க்கப் பல்வேறு காரணங்கள் முன்வைக்கப்பட்டன.

இந்தச் சிக்கலைப் பரிசீலித்தப் பின்னர், இவ்வாறான சிரமங்களை எதிர்கொள்ளும்போது வருமானம் மற்றும், செலவுகள் குறித்த தோராயமான ஒரு மதிப்பீட்டைப் பெற முடிவு செய்தோம். எந்த ஆவணங்களும் இல்லாத நிலையில், இந்த ஆய்வைத் தொடர நிர்வாகத்தினரின் நினைவிலிருந்து தகவல்களைப் பெற முடிவு செய்தோம். எங்களால் முடிந்தவரை, அவை அனைத்தும் மறந்து, மறைந்து போவதற்கு முன்னர் கிடைக்கக்கூடிய விவரங்களைப் பதிவு செய்வது உசிதமானது என்று நாங்கள் கருதினோம். மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களின் நிர்வாகம் தங்களின் கோயில்களைப் பற்றிய ஆழமான விவரங்களைப் பிற தரப்பினர் கேட்டு அறியும் ஒரு சூழ்நிலையைச் சந்தித்ததில்லை; ஆகவே, இந்த நிலையில், இந்த ஆய்வில் சம்பந்தப்பட்ட தன்னார்வலர்கள் தங்களுடைய பணியைச் செய்யும்பொழுது மிகவும் கவனமாக அணுக வேண்டும் என்று அவர்களுக்கு நினைவுறுத்தப்பட்டது.

எனவே, எங்கள் தன்னார்வலர்கள் இந்திய / தமிழ்ச் சமூக விவகாரங்களில் அனுபவம் வாய்ந்தவர்களாக இருக்க வேண்டியிருந்தது. மேலும், இவர்கள் கோயில் நிர்வாகத்தினருக்குத் தெரிந்தவர்களாக இருக்கும் சமயத்தில் அவர்கள் எளிதில் சந்தேகமின்றி தொடர்புகொள்ள இலகுவாக இருக்கும் என்பதையும் உணர்ந்தோம். இந்த ஆய்வின் நோக்கத்தை விளக்கும் ஒரு சிறப்பு கடிதத்தையும் கோயிலின் ஒவ்வொரு நிர்வாகத்தினருக்கும் நாங்கள் வழங்கினோம். மேலும், நாங்கள் பெறும் இந்த விவரங்கள் இந்த ஆய்வின் நோக்கத்திற்காக மட்டுமே பயன்படுத்தப்படும் என்பதையும் தெளிவாகத் தெரிவித்திருந்தோம். இருப்பினும், சில கோயில்களின் நிர்வாகத்தினர் எளிதில் ஒத்துழைக்கவில்லை. அவர்களில் சிலரைச் சந்திக்க எங்களுக்கு ஒத்துழைப்பு கொடுக்கக்கூடிய வேறொரு கோயில் நிர்வாகத்தினரையோ, தனி நண்பரையோ தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது.

## ஆய்விற்கான கோயில்களின் வரையறை

ஒரு சிலர் தங்கள் வீட்டுக்கு முன்புறத்தில் வழிபாட்டுத்தலங்கள் அமைப்பதை ஆர்வமாகக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். - இதனால், விக்ரகங்கள் / தெய்வச் சின்னங்கள் வெளியிலிருந்து பார்க்கக்கூடிய நிலையில் வீட்டின் வளாகத்தில் அமைந்துள்ளதைக் காண முடியும். உள்ளூராட்சி அல்லது நகராட்சி மன்றங்களின் அங்கீகரிக்கப்பட்ட இடத்தைத்தவிர குடியிருப்பு பகுதிகளில் மற்ற இடங்களில் வழிபாட்டுத்தலங்களை நிர்மாணிக்க அனுமதி தருவதற்கான சட்டவிதிகள் இல்லை. இருப்பினும், வீட்டின் முன்புறங்களில் உள்ள இந்துச் சமயச் சின்னங்கள் அவ்வளவு பெரியதாக இல்லாததால் இது போன்ற சூழ்நிலையை உள்ளாட்சித் துறை அவ்வளவாகப் பொருட்படுத்துவதில்லை.

மேலும், கிராமப்புறங்களில், தோட்டங்களில், மற்றும், அரசு வீடு குடியிருப்புப்பகுதிகளில் (quarters) வாழும் தமிழ் மக்களிடையே பொதுவாக அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட வழிபாட்டுத்தலங்கள் / இடங்கள் / மரங்கள் / கற்பாறை போன்ற இடங்கள் தனித்துவமானது மட்டுமல்லாது மிகுந்த சக்தி உடையது என்று அவர்களால் நம்பப்படுகிறது. இது போன்ற வழிபாட்டுத் தலங்கள் காலப்போக்கில் நல்ல வரவேற்பைப் பெற்று, பின்னர் அவை சமூகக் கோயில்களாக மாறியுள்ளன. அதே நேரத்தில் குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள்-உறவினர்கள் மட்டுமே இத்தகைய சில இல்லக் கோயில்களில் வழிபடுகிறார்கள். நடைமுறையில், ஆடுகள் மற்றும், கோழிகளைப் பலிகொடுப்பதை அனுமதிக்கும் கோயில்களும் உள்ளன. இது பழங்கால நடைமுறையாகும் - இது இன்றைய இந்துச் சமயப் போதனைகளுக்கு முரணானது - இருப்பினும், சிலர் இதைச் சம்பிரதாயமாகக் கருதிச் செயல்படுகிறார்கள்.

இதனால், ஒரு கோயிலின் நிலையை நாங்கள் வரையறுக்க வேண்டியிருந்தது, ஆகவே, தனிப்பட்ட பயன்பாட்டிற்காக ஒரு குடும்பம் வைத்திருக்கும் சிறிய வழிபாட்டுத் தலங்கள் இந்த ஆய்வில் சேர்க்கப்படவில்லை. இந்த ஆய்வின் நோக்கத்திற்காகப் பொது மக்கள் மற்றும், பக்தர்கள் கலந்துகொள்ளும் வருடாந்திரத் திருவிழாவை நடத்தும் வழிபாட்டுத் தலங்களைப் பட்டியலிட முடிவு செய்தோம். சிலவற்றில் குறிப்பிட்ட வருடாந்திர திருவிழாக்கள் இல்லை என்றாலும், நீண்ட காலமாகப் பதிவு செய்யப்பட்டு பொதுமக்களுக்குச் சேவை செய்யும் நோக்கில் செயல்பட்டு வரும் கோயில்கள் இந்த ஆய்வில் சேர்க்கப்பட்டன.

2019-ஆம் ஆண்டு அக்டோபர் மாத இறுதியில், மத்திய மலாக்காவில் 43 கோயில்களும், ஓர் இந்து பண்பாட்டுக் கலை இயக்கமும், ஜாசின் மாவட்டத்தில் 46 கோயில்களும், அலோர் காஜா மாவட்டத்தில் 56 கோயில்களும், ஆக மொத்தம் 146 கோயில்கள்/இந்துப் பண்பாட்டுக் கலை இயக்கம் இருப்பதைக் கண்டறிந்தோம். மாண்புமிகு திரு ஜி. சாமிநாதன் அவர்களின் ஒத்துழைப்புடன், சங்கங்களின் பதிவாதிகாரியிடம் (ROS) பதிவு செய்யப்பட்ட கோயில்களை ஆய்வு செய்ய மலாக்காவின் சங்கங்களின் பதிவதிகாரியைச் சந்திக்க முடிந்தது. மாண்புமிகு உறுப்பினர்களின் ஆதரவுக்கடிதம் இருந்தும் மற்ற அரசு அதிகாரிகளின் ஒத்துழைப்பைப் பெறுவதில் சிரமத்தை எதிர்நோக்கினோம். மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களின் நில உரிமம் சம்பந்தமான நிலையைச் சரிபார்க்கவும் உறுதிப்படுத்தவும் மாவட்ட அதிகாரிகள் அலுவலகம் மற்றும், ஊராட்சி மன்ற பொறுப்பாளர்களின் ஒத்துழைப்பையும் நாங்கள் நாடினோம். தேவைப்படும் ஆதரவு கிடைக்கவில்லை.

எங்கள் முயற்சியின் அடிப்படையில் கிடைத்தத் தரவுகள் பகுப்பாய்விற்குத் தயார் செய்யப்பட்டதோடு, அவற்றின்வழி கிடைத்த முடிவுகளைப் பின்வரும் அத்தியாயங்களில் படிக்கலாம். மேலும், கோயில் அல்லாத வழிபாட்டு மையங்களான சாய் பாபா மையம், ஸ்ரீடி சாய் பாபா மையம், மலாக்கா சீக்கிய குருத்வாரா கோயில், மலாக்கா குஜராத்தி அம்பாஜி கோயில், ஆகியவற்றுடன் மலாக்காவில் பதிவு பெற்று தொடர்ந்து இயங்கிக் கொண்டிருக்கும் பிற இந்து அமைப்புகளைப் பற்றியும், இந்து சமயம் தொடர்பான கட்டுரைகளையும் சேகரித்து, இணைக்க முடிவு செய்தோம். இந்த ஆய்வு நூல் மேலும், முழுமை பெற இவற்றை பின் இணைப்பில் சேர்த்துள்ளோம்.

## ஆய்வு முறைகள்

இந்த ஆய்வு ஒரு பண்புசார்ந்த (qualitative) அடிப்படையில் நடத்தப்பட்டது. ஏனெனில், இது மலாக்கா மாநிலத்தில் உள்ள அனைத்துக் கோயில்களையும் உள்ளடக்கியது. சில மாதிரிக் கோயில்களைத் தேர்ந்தெடுத்து நாங்கள் ஆய்வு செய்வதைத் தவிர்த்தோம். காரணம் இந்தக் கோயில்களில் சேகரிக்கப்பட்ட தரவுகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையாக இருப்பதால் ஆய்வு முழுமையாக இருக்காது என்பதைக் கருத்தில் கொண்டோம். இதற்குக் காரணம் பல வகையான கோயில்கள், அதை நிர்வகிக்கும் வெவ்வேறான நிர்வாகத்தினர், இவர்களின் தகுதி மற்றும், திறன் அடிப்படையில் இந்தத் தரவுகள் சேகரிக்கப்பட்டன. மாதிரிகளை வைத்து நடத்தும் ஆய்வுகள், உண்மையான/ துல்லியமான நிலவரத்தைக் காட்டாது என்பதால் நாங்கள் இந்த அணுகுமுறையை கையாண்டோம்.

தரவுகளின் நம்பகத்தன்மையைப் பொறுத்தவரை, இந்த ஆய்வின் சில அம்சங்கள் பதிலளித்தவர்களால் வழங்கப்பட்ட தோராயமான மதிப்பீடுகளைச் சார்ந்து இருக்க வேண்டியிருந்தது. ஏனெனில், அவர்களிடம் எந்தப் பதிவும், பத்திரமும் இல்லை; அல்லது பதிலளித்தவர்கள் தங்களிடம் இருக்கும் பதிவுகளை வழங்கத் தயங்கினர்/ மறுத்தனர். குறிப்பாக நிதி விவரங்களைப் பற்றி ஆய்வு செய்யப்பட்ட பெரும்பாலான கோயில்களில் சரியான விவரங்களைப் பெற முடியவில்லை என்பதை ஆய்வாளர்கள் ஒப்புக்கொண்டனர். ஆனால், இந்த ஆய்வின் வழி முதல் முயற்சியில் கிடைக்கப்பட்ட தோராயமான மதிப்பீடுகளே நாம் செய்யக்கூடியதில் சிறந்ததாக விளங்கியது.

இந்த ஆய்வு மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கியது, ஏனெனில், இது போன்ற எந்தவொரு ஆய்வும் இதுவரை நடத்தப்படவில்லை - எனவே, இந்தக் கோயில்களின் எந்தவொரு குறிப்பிட்ட அம்சத்திலும் ஆர்வமுள்ள ஆய்வாளர்களுக்குத் தொடர்ந்து ஆய்வுகளை எதிர்வரும் காலங்களில் மேற்கொள்ள இது ஒரு வாய்ப்பை வழங்குகிறது.

## மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்களைக் கண்டறிதல்

மலாக்கா மாநிலத்திற்கு இந்துச் சமூகத்துடன் நீண்ட வரலாறு உண்டு. மலாக்கா சுல்தான்களின் காலத்தில் இருந்தே இந்துச் சமூகத்தின் செல்வாக்கு இங்கு இருந்து வந்துள்ளது. இன்றுவரை வாழ்ந்துவரும் மலாக்காச் செட்டிச் சமூகத்தினர் இதற்குச் சான்றாகும். பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பின் போது, பொருளாதார நடவடிக்கைகளுக்காக மலாக்கா மாநிலம் திறக்கப்பட்டபோது, ஆங்கிலேயர்கள், தங்களுடைய ஆட்சியின் கீழ் இருந்த தென்னிந்தியாவிலிருந்து பல தொழிலாளர்களை இங்குக் கொண்டு வந்தனர்.

கெர்னியல் சிங் சாந்து எனும் வரலாற்றாசிரியரின் கூற்றுப்படி 1840 - 1860-இல், பிரிட்டிஷார், தென்னிந்தியாவிலிருந்து தொழிலாளர்கள் மற்றும், சிப்பாய்களை மலாக்காவுக்குக் கொண்டு வந்தனர். 1871-ஆம் ஆண்டில் மலாக்கா அச்சமயத்தில், சிங்கப்பூர் மற்றும், பினாங்கைக் காட்டிலும் சிறந்த சாலை அமைப்பைக் கொண்டிருந்ததோடு 3277 இந்தியத் தொழிலாளர்களைக் கொண்டிருந்தது. 1891-ஆம் ஆண்டில் மலாக்காவில் இருந்த நான்கு தோட்டங்கள் தென்னிந்தியாவிலிருந்து 231 தமிழ்த் தொழிலாளர்களைப் பெற்றன. 1910-ஆம் ஆண்டில் மலாக்கா மாநிலத்தில் ரப்பர் தோட்டங்களில் 6,000 தமிழ்த் தொழிலாளர்கள் இருந்தனர் அல்லது இவர்கள் மக்கள் தொகையில் 6% இருந்தனர். இந்த எண்ணிக்கை 1920-ஆம் ஆண்டில் 13,000 ஆகவும், 1930-ஆம் ஆண்டில் 15,755 ஆகவும் அதிகரித்தது.

**1827 மற்றும், 1970-ஆம் ஆண்டுகளுக்கு இடையில் மலாக்காவில் இந்திய வம்சாவளியைச் சேர்ந்தவர்களின் எண்ணிக்கையைக் காட்டும் புள்ளிவிவரங்கள் பின்வருமாறு:**

**அட்டவணை 2** — **மலாக்கா இந்திய வம்சாவளியினரின் மொத்த மக்கள் தொகை கணக்கெடுப்பு 1827-1970**

| ஆண்டு | 1827 | 1834 | 1860 | 1871 | 1881 | 1891 |
|---|---|---|---|---|---|---|
| இந்திய மக்கள் | 2,342 | 2,403 | 1,026 | 3,277 | 1,891 | 1,647 |
| மொத்த மக்கள் தொகை | 33,162 | 34,339 | 67,267 | 77,756 | 93,579 | 92,170 |

| ஆண்டு | 1901 | 1911 | 1921 | 1931 | 1947 | 1957 | 1970 |
|---|---|---|---|---|---|---|---|
| இந்திய மக்கள் | 1,276 | 7,527 | 18,857 | 23,237 | 19,718 | 23,266 | 31,619 |
| மொத்த மக்கள் தொகை | 95,487 | 124,952 | 153,691 | 186,877 | 239,356 | 291,211 | 404,135 |

(Sumber: Kernial Singh & Paul Wheatley, MELAKA – THE TRANSFORMATION OF A MALAY CAPITAL c 1400-1980, Institute of South East Asian Studies, OUP 1983, Vol 2, Hal 196)

குறிப்பு: 1931-1947 ஆம் ஆண்டுகளுக்கிடையில், இரண்டாம் உலகப் போரின் விளைவு மற்றும், இந்திய அரசு நிர்வாகத்தினர் புதிய தொழிலாளர்களை அனுப்ப அனுமதி தராததால் மலாக்காவில் வசித்த இந்தியர்களின் எண்ணிக்கை குறைந்தது.

Malaya Indians Bukit Lintang Estate Ayer Molek Malacca 1895



Malaya Indians Bukit Lintang Estate Ayer Molek Malacca 1899



Malaya Indians Bukit Lintang Estate Ayer Molek Malacca 1899



பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தங்கள் மூலதனத்தைப் பெருக்குவதற்கும் உள்ளூர் தொழில் முனைவர்களுக்கு, குறிப்பாகச் சீனர்களுக்கு, பொருளாதார மேம்பாட்டுக்காகக் கடன் வழங்குவதற்காகவும் தமிழ்நாட்டின் நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்திலிருந்து முதலாளீட்டாளர்களை அழைத்து வந்தனர்.

சஞ்சி எனப்படும் ஒப்பந்தத்தின் வழியாகவும் மற்றும், கங்காணி முறையில் அரசாங்கத்தால் கொண்டுவரப்பட்ட தொழிலாளர்களைத் தவிர ஆசிரியர்கள், மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், கணக்காளர்கள் போன்ற தொழில்முறை அதிகாரிகளாகவும், வர்த்தகர்களாகவும் தங்கள் தகுதிகளுக்கு ஏற்பச் சொந்த வேலை வாய்ப்பைத்தேட சொந்தமாகத் தனிப்பட்ட முறையில் இங்கு வந்தனர். 1924-ஆம் ஆண்டில், தென்னிந்தியாவிலிருந்து குடியேறியவர்களில் 28% பேர் தங்கள் சொந்தச் செலவில் வேலை தேடி இங்கு வந்தவர்கள் ஆவர்.

2010-ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி, மலாக்காவில் 821,110 பேர் இருந்தனர். இதில் 506,662 மலாய் / பழங்குடி மக்கள்; சீன வம்சாவளியைச் சேர்ந்தவர்கள் - 199,588; 47,186 - இந்தியர்கள்; மற்ற இனத்தவர் 3,835 பேர் இருந்தனர். சமய வாரியாக, மலாக்காவின் மக்கள் தொகையில் 66.1% - முஸ்லீம்கள்; 24.7% - புத்த மதத்தினர்; 5.7% அல்லது 46,803 பேர் - இந்துச் சமயத்தினர்; 3% - கிறிஸ்த்தவர்கள், மற்றச் சமயத்தினர் - 1%.

மலாக்கா மூன்று மாவட்டங்களை உள்ளடக்கியது, அதாவது, மத்திய மலாக்கா 314 சதுர கி.மீ பரப்பளவில் 1 சதுர கி.மீ.க்கு 1,600 மக்கள் அடர்த்தியைக் கொண்டது; அலோர் காஜா 660 சதுர கி.மீ பரப்பளவில் 1 சதுர கி.மீ.க்கு 280 மக்கள் அடர்த்தியைக் கொண்டது; மற்றும், ஜாசின் 676.07 சதுர கி.மீ. பரப்பளவில் 1 சதுர கி.மீ.க்கு 200 பேர் கொண்ட மக்கள் தொகை அடர்த்தியைக் கொண்டது. மலாக்கா நகரம் மத்திய மலாக்கா பகுதியில் அமைந்துள்ளது. மற்றும், இப்பகுதி பரப்பளவில் சிறியதாக இருந்தாலும், அதன் மேம்பாட்டு வளர்ச்சியின் காரணமாக அதன் மக்கள்தொகை அடர்த்தி மற்ற மாவட்டங்களை விட அதிகரித்து வந்துள்ளது. பெரும்பாலான ரப்பர்த் தோட்டங்கள் அலோர் காஜா மற்றும், ஜாசின் மாவட்டங்களில் அமைந்திருப்பதால், இந்துச் சமூகத்தின் மக்கள் தொகை மத்திய மலாக்காவை விட இந்த இடங்களில் அதிகமாக உள்ளது. இருப்பினும், மலாக்கா மாநிலத்தின் வரலாறு காரணமாகப் பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து இந்துச் சமூகங்கள் சம்பந்தப்பட்ட வரலாற்று கோயில்கள் மத்திய மலாக்கா பகுதியில் அமைந்துள்ளன.

இந்த ஆய்வுக்காக மொத்தம் 146 இந்துக் கோயில்களை மலாக்கா முழுவதும் அடையாளம் கண்டோம். மத்திய மலாக்காவில் 44 கோயில்களும், ஜாசினில் 46 கோயில்களும் மற்றும், அலோர் காஜாவில் 56 கோயில்களும் உள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள இந்துக்களை அவர்கள் வசிக்கும் இடங்களை அடையாளம் கண்டதன் மூலமும், கோயில்களுக்குச் சென்று கோயிலின் நிர்வாகத்தைச் சந்தித்ததன் மூலமும் இந்த ஆய்வினை மேற்கொண்டோம். சில வேளைகளில் பொறுப்பாளர்களின் ஓய்வின்மையின் காரணமாகக் கோயிலில் சந்திப்பை ஏற்பாடு செய்ய முடியாத நேரங்களில் அவர்களை அவர்களது வீட்டில் தனியாகச் சந்திக்கக்கூடிய சூழ்நிலைகளும் ஏற்பட்டன. சில கோயில்கள் குறிப்பாக அலோர் காஜா மற்றும், ஜாசின் வட்டாரங்களில் தோட்டங்களின் உட்புறத்தில் அமைந்திருந்தன. சில நேரங்களில் ஒரே தோட்டத்தில் பெரிய கோயில்களும் சிறிய கோயில்களும் இருந்ததைப் பார்த்தோம். இவை திருவிழா நிகழ்ச்சிகளைத் தனித்தனியாக நடத்தி வருவதையும், சமயங்களில் வெவ்வேறு செயற்குழுவினரைக் கொண்டிருப்பதையும் கண்டோம்.

**இந்த ஆய்விற்காக மாவட்ட ரீதியாக, அடையாளம் காணப்பட்ட மலாக்காவில் உள்ள கோயில்கள் பின்வருமாறு:**

**அட்டவணை 3 : மத்திய மலாக்காவில் அமைந்திருக்கும் கோயில்கள்**

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| MT1 | ஸ்ரீ சன்னாசி மலை ஆண்டவர் ஆலயம் | Batu 5, Jalan Kerubung, Cheng, 75250 Melaka. (நாட்டுக்கோட்டை செட்டியார்களின் கோயில்) | 1868 |
| MT2 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Jalan Tukang Emas, Bandar Melaka (மலாக்கா செட்டிகள் கோயில்- 1900 ஆம் ஆண்டு முதல் மலாக்கா நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தின் நிர்வாகத்தினரால் நிர்வகிக்கப்படுகிறது) Lot:TA XII 62 | 1781 |
| MT3 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | 119, Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TA1 59 (மலாக்கா செட்டிகளின் கோயில்) | 1822 |
| MT4 | ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 95 | 1887 |
| MT5 | ஸ்ரீ அங்கால பரமேஸ்வரி ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 94, 118 | 1888 |
| MT6 | ஸ்ரீ லெங்காதரியம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. *(Tanah Syt. Tong Bee – நிலம் பெறும் தருவாயில்)* | 1888 |
| MT7 | ஸ்ரீ அய்யனார் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 81 | 1870 |
| MT8 | ஸ்ரீ காத்தாயீ அம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka Lot: TAV 100 | 1875 |
| MT9 | ஸ்ரீ காளியம்மன் ஆலயம் | Kampung Lapan, Bachang, Melaka. Lot: TA XXXI | 1804 |
| MT10 | ஸ்ரீ தர்மராஜா ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 88 | 1770 |
| MT11 | ஸ்ரீ அம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 88 | 1770 |
| MT12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM14, Tambak Paya, Ayer Molek, 75460 Melaka. Lot:1345 | 1977 |
| MT13 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Taman Paya Rumput Perdana, Paya Rumput, 76450 Melaka. | 1937 |
| MT14 | ஸ்ரீ வனத்தாண்டவர் ஆலயம் | Lot: 14555, Batu 12¼, Sungei Udang, 76300 Melaka. | 1960 |

| MT15 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 11, Ladang Bukit Kajang, Melaka. | 1906 |
|---|---|---|---|
| MT16 | அருள்மிகு ஸ்ரீ மகா சமயபுரம் மாரியம்மன் நாகேஸ்வரி அம்மன் ஆலயம் | (sebelah Sungai Melaka – di belakang Tzu Chi, Batu Berendam) d/a 19, Taman Merdeka Baru, Fasa 3, 75350 Melaka. | 1970 |
| MT17 | ஸ்ரீ சுந்தர மூர்த்தி விநாயகர் ஆலயம் | PBB 5, Jalan Bachang Baru, 75350 Melaka. Lot: 9324 (முன்பு மலாக்கா பெரிய மருத்துவமனை வளாகத்தில் அமைந்திருந்த கோயில்) | 1952 |
| MT18 | தேவி ஸ்ரீ ஓம் சக்தி மகா முனீஸ்வரர் & ஸ்ரீ வீர காளியம்மன் ஆலயம் | Lot 15152, Taman Merdeka Jaya, 75350 Melaka. (இரண்டு கோயில்களின் இணைப்பு) *(Kuil kedua dari Bachang dahulu)* | 2004 |
| MT19 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | PT 2456, Taman Bukit Melaka, Bukit Beruang, 75450 Melaka. (புக்கிட் பெருவாங் முச்சந்தியில் முன்பிருந்த ஆலயம்) | 1960 |
| MT20 | தேவி ஸ்ரீ நாக காளியம்மன் ஆலயம் | Kampung Tampoi, Batu 7½, Jalan Industri,Krubong, 75250 Melaka. | 1930 |
| MT21 | ஸ்ரீ மதுரை வீரன் (முனீஸ்வரர்)ஆலயம் | Kawasan Perindustrian Krubung, 75250 Melaka. | 2015 |
| MT22 | ஸ்ரீ சுப்ரமணியர் தேவஸ்தானம் | Lot 88-89, Solok Bangsal, Jalan Keretapi Lama, Batu Berendam, 75350 Melaka. | 1965 |
| MT23 | ஸ்ரீ வனபத்ர காளியம்மன் ஆலயம் | No.70, Jalan Sri Krubong, Jalan PK 26, Taman Perindustrian Krubong, 75250 Melaka. *(Di belakang Gereja Lady of Guadalupe)* | 1930 |
| MT24 | தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் | Lot 1551, Bertam Ulu, Jln.Tanjung Minyak, 75250 Melaka. (பழைய பெயர்: முனியாண்டி ஆலயம்) | 1900 |
| MT25 | ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி அம்மன் ஆலயம் | No.75, Lorong 4, Batu 7, Kampung Baru, Tanjung Minyak, 75250 Melaka. | 1981 |
| MT26 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bertam, Paya Rumput 76450 Melaka. | 1904 |
| MT27 | கிருஷ்ண பலராம் இந்திய பண்பாட்டு, கலை இயக்கம் | Lot 2679, Jln Sri Rama 3, Taman Muzaffar Shah, 75450 Melaka. | 2002 |
| MT28 | தேவி ஸ்ரீ துர்கையம்மன்/ பத்ர காளியம்மன் ஆலயம் | Batu 7¼, Paya Rumput, 76450 Melaka. | 1900 |
| MT29 | கரடிமலை ஸ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Jalan Dahlia 6, Taman Bunga Raya, Bukit Beruang, 75450 Melaka. | 1974 |

| MT30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Genting Cheng, Bahagian Cheng, Paya Rumput, 76450 Melaka. | 1930 |
|---|---|---|---|
| MT31 | அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மன் | 23A, Batu 12, Tanah Merah, Krubong, 75250 Melaka. | 1990 |
| MT32 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tanah Merah (Bertam, Bhg. Krubong) d/a 23A, Batu 12, Tanah Merah, Krubong, 75250 Melaka. (புதிய கோயிலுக்கான நிலத்தைப் பெறும் தருவாயில்) | 1930 |
| MT33 | ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி ஆலயம் | 792-C, Jalan Emas 6, Taman Kerjasama, Bukit Beruang, 75450 Melaka. | 1940 |
| MT34 | ஸ்ரீ உத்திர காளியம்மன் ஆலயம் | Bekas tanah kubur, Bukit Serindit. d/a C1-7, Rumah Pangsa, Taman Anika, Lorong Pandan, 75250 Melaka. | 1970 |
| MT35 | ஸ்ரீ மகா சாமுண்டேஸ்வரி அம்மன் ஆலயம் | 21-C Kampung Tujuh, Jalan Gajah Berang 75200 Melaka. (முன்பு மலாக்கா செட்டி சமூகத்தின் ஆலயம்) | 1870 |
| MT36 | ஸ்ரீ மாவீரன் ஆலயம் | 197-A, Jalan Puteri Hang Li Poh, 75100 Melaka. | 1952 |
| MT37 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | 91-C, Pengkalan Rama Pantai, 75100 Melaka. (முன்பு: மலாக்கா மாநகராட்சி மன்ற குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்தது) | 1930 |
| MT38 | ஸ்ரீ சுப்ரமணியர் திரௌபதை அம்மன் ஆலய பரிபாலன சபை | Jalan Gajah Berang, 75400 Melaka. (முன்பு மலாக்கா செட்டி சமூகத்தின் ஆலயம்) | 1865 |
| MT39 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (குதிரைக் கோயில்) | Lot 1213, Jalan Hujung Padang, Batu 6¾, Paya Rumput, 76540 Melaka. | 1890 |
| MT40 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | No. 7, Lorong 4, Jalan TTP 3, Taman Tambak Paya Permai, Ayer Molek, 75460 Melaka. | 1928 |
| MT41 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 8 ½ , Pengkalan Minyak, 75460 Melaka. (Dulu: Ldg Diamond Jubilee, Bahagian Union) | 1930 |
| MT42 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lim Kok Wah, Bukit Lintang, 75460 Melaka. (Dulu: Ldg. Leong Watt Hin, Pungkai, Tiang Dua) | 1930 |
| MT43 | ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம் | PT 1107, Tanjung Minyak, Cheng, 75250 Melaka. | 1924 |
| MT44 | ஸ்ரீ மகா முனீஸ்வரர் ஆலயம் | Kg. Solok Jeram, Paya Rumput, 76450 Melaka. | 2002 |

அட்டவணை 4 : ஜாசின் மாவட்டத்தில் அமைந்திருக்கும் கோயில்கள்

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| J1 | ஶ்ரீ சித்தி விநாயகர் ஆலயம் | Jalan Air Kangkung, Pekan Selandar, 77500 Jasin, Melaka. (Lot: 2136) | 1930 |
| J2 | ஶ்ரீ மகா மாரியம்மன் (மயில்) ஆலயம் | Batu 16, 77200 Jasin, Melaka. (Lot:4692) | 1910 |
| J3 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan, 77100 Asahan, Melaka. | 1915 |
| J4 | தேவி ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM23, Jalan Jasin, Bemban, 77200 Melaka. (Lot: 14712 ) | 1930 |
| J5 | தேவி ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 1192, Jalan Besar Batang Melaka. 77500 Selandar, Melaka | 1936 |
| J6 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஶ்ரீ முத்தப்பன் ஆலயம் | Ladang Jasin Lalang, 77200 Bemban, Jasin, Melaka. | 1900 |
| J7 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Asahan, Bukit Katong, Rim, 77000 Jasin, Melaka. | 1900 |
| J8 | ஶ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Ladang Diamond Jubilee, 77000 Jasin, Melaka. | 1890 |
| J9 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Taman Maju, 77000 Jasin, Melaka. (Lot: 9422) | 1890 |
| J10 | ஶ்ரீ சிவன் ஆலயம் | Jalan Besar Jasin, 77000 Jasin, Melaka. (Lot: 1722) | 1880 |
| J11 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Jasin Lalang, Bhg. Bukit Chermin d/a J 9939, Bukit Tinggi, Jalan Merlimau, Simpang Kerayong, 77000 Jasin, Melaka. | 1902 |
| J12 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Jasin Lalang, Bahagian Batu Lang, Merlimau, Melaka. | 1940 |
| J13 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, Bahagian Jasin, 77000 Jasin, Melaka. | 1915 |
| J14 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tebong, Bahagian Batang Melaka (Bemban) 77500 Batang Melaka, Melaka. (dalam proses pindah ke Taman Sri Hilir) | 1930 |
| J15 | ஶ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 18, Selatan Baru, Bahagian Merlimau, Kempas Estate, Merlimau, 77300 Melaka. | 1950 |

| J16 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, Bahagian Kemendore. 77000 Jasin, Melaka. | 1936 |
|---|---|---|---|
| J17 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lau Leong Estate, Kemendore Div, 77000 Jasin, Melaka. | 1910 |
| J18 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | Ladang Diamond Jubilee, Jalan Asahan, 77000 Jasin, Melaka. | 1900 |
| J19 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nyalas (Gubah Div), Lot 813, Jalan Nyalas, Kampung Masjid Baru, 77100 Nyalas, Jasin, Melaka. | 1970 |
| J20 | ஸ்ரீ மகா காளியம்மன் முனீஸ்வரர் துவா பெக் கோங் ஆலயம் | Lot 58, Kampung Bukit Panjang, 77100 Asahan, Melaka. | 1997 |
| J21 | ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Pekan Merlimau, 77300 Merlimau, Melaka. | 1969 |
| J22 | ஸ்ரீ சுப்ரமணியர், ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, 77300 Merlimau, Melaka. | 1890 |
| J23 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Merlimau, Jalan Jasin, 77300 Merlimau, Melaka. | 1904 |
| J24 | தேவ ஸ்ரீ மதுரை வீரன் ஆலயம் | 14, Batu 17, Paya Buluh, 77300 Merlimau, Melaka. | 1970 |
| J25 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Taman Bistari, Jalan Jasin, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J26 | அருள்மிகு ஸ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Ladang Selatan Baru, Batu 18,Tepi Jalan Merlimau-Jasin, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J27 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 6516, Batu 17 ½ , Jalan Jasin-Merlimau, Kampung Paya Buloh, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J28 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Batu 18 ½ , Jalan Kesang, Kesang Pajak, 77000 Jasin, Melaka. (Lot 1293) | 1900 |
| J29 | ஸ்ரீ ஜெய் மலை முனியாண்டி ஆலயம் | JB 865, Taman Bemban Utama, 77200 Bemban, Melaka. | 1996 |
| J30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Yew Watt Hing Estate, Jalan Asam Kumbang, 77200 Bemban, Jasin, Melaka. | 1950 |
| J31 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan 'D' Division, 77100 Asahan, Melaka. | 1948 |
| J32 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan, Ayer Tekah Div., 77100 Asahan, Jasin, Melaka. | 1970 |

| J33 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nyalas, Mantai Division, 77100 Nyalas, Melaka. | 1950 |
|---|---|---|---|
| J34 | ஸ்ரீ மதுரை வீரன், ஸ்ரீ ராஜ கருமாரியம்மன் தோ பெக் கோங் ஆலயம் | Batu 12, Bukit Tinggi A, Simpang Kerayong, Jalan Merlimau, 77000 Jasin, Melaka. (Lot:5575) | 1970 |
| J35 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kempas (Devon), Jalan Jasin-Merlimau, 77000 Jasin, Melaka. | 1890 |
| J36 | தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம் | Batu 16 ½ , J8451, Kampung India, 77000 Jasin, Melaka. | 1965 |
| J37 | ஸ்ரீ பிரித்தியங்கரா தேவி சக்தி பீடம் | JA 3371, Jalan Ria Satu, Taman Ria, Kesang Pajak 77000 Jasin, Melaka. | 1999 |
| J38 | கைகொடுக்கும் ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | J7520, Blok F, Rumah Awam, Simpang Kerayong 77000 Jasin, Melaka. | 1950 |
| J39 | ஸ்ரீ நாகேஸ்வரி அம்மன் ஆலயம் | J7177, Blok O, Taman Chenderawasih, 77000 Jasin, Melaka. | 1890 |
| J40 | ஓம் ஸ்ரீ முனியாண்டி முனீஸ்வரர் காளி கருமாரியம்மன் ஆலயம் | Jalan Bemban-Ayer Keroh, GAPAM, (d/a Lorong 17, JB 2084, Taman Sri Serkam, Merlimau, 77300 Melaka.) | 1992 |
| J41 | தேவி ஸ்ரீ மாரியம்மன் ஸ்ரீ முனியாண்டி ஆலயம் | Ladang Merlimau, Lanchang Division (d/a JB2983, Jalan MU6, Taman Merlimau Utara 77300 Merlimau, Melaka.) | 1945 |
| J42 | ஸ்ரீ முனியாண்டி ஆலயம் | 7952, Jalan Bukit Tinggi A, Simpang Kerayong, 77000 Jasin, Melaka. | 1930 |
| J43 | ஸ்ரீ மகா சிவசக்தி ஆலயம் | No.3490 Taman Batang Melaka Baru, Batang Melaka, 77500 Selandar, Melaka. | 1970 |
| J44 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 21, Pondok Kempas, 77500 Selandar, Melaka. | 1950 |
| J45 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lim Kok Wah Sdn. Bhd, Kg.Bukit Singgeh, 77500 Selandar, Melaka. | 1960 |
| J46 | ஸ்ரீ அய்யனார் ஆலயம் | Genting Berhad/SAMB, Taman Batang Melaka Baru, 77500 Batang Melaka, Melaka. | 1940 |

அட்டவணை 5 : அலோர் காஜா மாவட்டத்தில் அமைந்திருக்கும் கோயில்கள்

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| AG1 | ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Ladang Bertam, 76100 Durian Tunggal, Melaka. | 1950 |
| AG2 | ஸ்ரீ அஸ்ட தச புஜ காளியம்மன் ஆலயம் | No.10817, Jalan Ayer Semubuk 2, 76100 Durian Tunggal, Melaka. | 1998 |
| AG3 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஸ்ரீ பால சுப்ரமணியர் ஆலய பரிபாலன சபை | Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1934 |
| AG4 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Sing Lian, Ayer Resam, 76100 Durian Tunggal, Melaka. (Scientex Corporation) | 1960 |
| AG5 | ஸ்ரீ வீர பத்ர காளி ஆலயம் | 14, Taman Sri Bukit Tambun, 76100 Durian Tunggal, Melaka. | 1994 |
| AG6 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Kemuning Kru, Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1890 |
| AG7 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 18 ½, Simpang Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1911 |
| AG8 | ஸ்ரீ மகா பத்ர காளியம்மன் ஆலயம் | Lorong Balai Arshad, Jln Keretapi Lama, (PT638) Kampung Gangsa, 76100 Durian Tunggal, Melaka. | 2006 |
| AG9 | ஸ்ரீ சித்தி புத்தி விநாயகர் ஆலயம் | Batu 21, Ladang Sungei Baru, 78300 Masjid Tanah, Melaka. | 1924 |
| AG10 | ஸ்ரீ ஆதி கோட்டை முனீஸ்வரர் ஆலயம் | Batu 21, Ladang Sungei Baru, 78300 Masjid Tanah, Melaka. | 1950 |
| AG11 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Lendu (Klemak) 78000 Alor Gajah, Melaka. (Dulu: Ladang Lendu) | 1945 |
| AG12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (நாகக்கன்னி) | Ladang UMB Ramuan China Besar, Paya Lebar, 78300 Masjid Tanah, Melaka. | 1910 |
| AG13 | ஸ்ரீ மகா மாரியம்மன் தேவஸ்தானம் | Ladang Sungei Baru, Home Division, 78300 Masjid Tanah, Melaka. | 1930 |
| AG14 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Bukit Chempedak Estate, Kuala Sungai Baru, 78200, Melaka. | 1920 |

| AG15 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரரேஸ்வரர் ஆலயம் (இன்னும் கட்டிடம் இல்லை) | MT2521 Jalan 3, Taman Bandar Baru, 78300 Masjid Tanah, Melaka. (கோயில் நிலம் கையகப் படுத்தும் பணி) Lot 1716, GM154, Jalan Hujan Panas, Taman Harmoni, 78300 M.T. sedang dilakukan) | 2012 |
|---|---|---|---|
| AG16 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Genting Tebong (Tebong Estate) 76460 Tebong, Melaka. | 1919 |
| AG17 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kemuning, Home Division, 76460 Tebong, Melaka. | 1939 |
| AG18 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Renopinang Estate, 76460 Tebong, Melaka. (dulu Leong Watt Hin Estate) | 1960 |
| AG19 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Hor Ng Lih Yuan (KVL Rembia), 78000 Alor Gajah, Melaka. | 1961 |
| AG20 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Guthrie Rubber Sdn Bhd., 76460 Tebong, Melaka. | 1919 |
| AG21 | தேவ ஸ்ரீ பால தண்டாயுதபாணி ஆலயம் | Jalan Naning Lama, Kampung Kemus, Jalan Simpang Ampat, 73000 Alor Gajah, Melaka. (asal Ladang Gadek, Naning Division) | 1935 |
| AG22 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் ஆலயம் | FELDA Hutan Percha, 78000 Alor Gajah, Melaka. | 1980 |
| AG23 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | PS 1996, Taman Malinja Wangi, Pulau Sebang 73000 Alor Gajah, Melaka. (kuil asal Ladang Peguh) | 1936 |
| AG24 | தேவி ஸ்ரீ மாரியம்மன் ஆலயம் | Batu 27, Kampung Baru (Paya Mengkuang) 78200 Kuala Sungei Baru, Alor Gajah, Melaka. (dlm proses) (asal: Ladang Kempas, Bkt, Bachang Division) | 1910 |
| AG25 | ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Kampung Tersusun, (Yayasan Melaka) Melaka Pindah, 78000 Alor Gajah, Melaka. (asal: Ladang Bertam, Parit Melana Division) | 1936 |
| AG26 | ஸ்ரீ மீனாட்சி அம்மன் ஆலயம் | Ladang Yayasan, Jalan Satelit, Lendu, Bukit Hantu, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1945 |
| AG27 | ஸ்ரீ கருமாரியம்மன் ஆலயம் | Lorong Bukit Hantu, Jalan Lendu, Rembia 78000 Alor Gajah, Melaka. | 1930 |
| AG28 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang New Kru, Hutan Percha, 78000 Alor Gajah, Melaka. | 1948 |

| AG29 | ஸ்ரீ மகா துர்கையம்மன் ஆலயம் | Endau Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1920 |
|---|---|---|---|
| AG30 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | 89. Jalan Fairuz, Rumah Awam, Paya Datuk, 78000 Alor Gajah, Melaka. | 2010 |
| AG31 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | United Melaka Berhad, Machap Estate, 76100 Durian Tunggal, Melaka. | 1890 |
| AG32 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | UMRE Melaka Pindah Estate, Lesung Batu, 78000 Alor Gajah, Melaka. | 1890 |
| AG33 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lian Ho, Rantau Panjang, Ayer Paabas, 78000 Alor Gajah, Melaka. | 1960 |
| AG34 | ஸ்ரீ வீரபத்ர காளியம்மன் ஆலயம் | Jalan Machap, Sri Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1971 |
| AG35 | ஸ்ரீ வைத்தீஸ்வரர் தையல் நாயகி அம்மன் ஆலயம் | Jalan Keretapi, Pulau Sebang, 73000 Melaka. (Pengambilan tanah dlm.proses) | 1916 |
| AG36 | ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1913 |
| AG37 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tebolang (d/a 118, Jln 5, Tmn Sri Chahaya, 76460 Tebong), Melaka. | 1920 |
| AG38 | ஸ்ரீ மூகாம்பிகை ஆலயம் | Jalan Kampung Pahla, Alam, Simpang Ampat, 78000 Alor Gajah, Melaka. (asal: Ladang Pegoh, Home Division) | 1910 (2008) |
| AG39 | அருள்மிகு மகா கரு மாரியம்மன் தேவஸ்தானம் | No. RM 109, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1918 |
| AG40 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Kampung Baru Vinayagar Lot 1530, Jalan Vinayagar, Batu 17, Ganun, 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG41 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | No.24, Ladang Kemuning, Bhg. Rembia, Rembia 78000 Alor Gajah, Melaka. | 1920 |
| AG42 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Ayer Paabas, Lendu 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG43 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Jalan Ayer Paabas, Lendu 78000 Alor Gajah, Melaka. | 2010 |

| AG44 | ஸ்ரீ வடபத்ர காளியம்மன் ஆலயம் | Jalan Batu Belaga, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1960 |
|---|---|---|---|
| AG45 | தேவி ஸ்ரீ மகா அசா மலை முனியப்பன் ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Vinayagar PD64, Jalan 5, Taman Bukit Nangka, Sebang, 78000 Alor Gajah, Melaka. | 1969 |
| AG46 | ஸ்ரீ மகா வீர காளியம்மன் ஆலயம் | MC414, Taman Mawar Jaya, Machap Umboo,78000 Alor Gajah, Melaka. | 2001 |
| AG47 | ஓம் ஸ்ரீ சடைமுடி ஆலயம் | No.65, Rumah Awam Sri Lendu, Lendu, 78000 Alor Gajah, Melaka. | 1997 |
| AG48 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Kampung Bukit, Pulau Sebang, 78000 Alor Gajah, Melaka. (asal: Ladang Peguh) | 1945 (1996) |
| AG49 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kempas, Bhg. Bukit Bachang, Lubuk China, 78300 Masjid Tanah, Melaka. | 1940 |
| AG50 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lendu San, Lendu, 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG51 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Kampung Air Molek, 78200 Kuala Sungai Baru, Melaka. (Ladang Kuala Sungei Baru) | 1910 |
| AG52 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | 389, Jalan Keretapi Lama, Kampung Pengkalan 78000 Alor Gajah, Melaka. | 2000 |
| AG53 | ஸ்ரீ சப்த கன்னி அம்மன் ஆலயம் | Lendu Estate, Jelawai, 78000 Alor Gajah, Melaka. | 1920 |
| AG54 | ஸ்ரீ கருப்புசாமி ஆலயம் (சங்கிலிக்கருப்பன்) | Ladang Lendu, Jelawai, 78000 Alor Gajah, Melaka. | 2003 |
| AG55 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nam Bee Co. Sdn. Berhad, 76460 Tebong, Melaka. (Nama Lama: Ladang Batu Berkarat) | 1957 |
| AG56 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Keretapi Lama, Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1931 |

2020-ஆம் ஆண்டு மார்ச் முதல் அக்டோபர் வரை இந்தக் கோயில்களுக்கு வருகை மேற்கொள்ளத் திட்டமிட்டபோது, ஆய்வில் கலந்துகொள்ளும் தன்னார்வலர்களுக்குக் கோயில்களின் பொறுப்பானவர்களை அணுகுவதற்கான வழிகள் குறித்து விளக்கமளிக்கப்பட்டது. ஏனெனில், பெரும்பாலான பொறுப்பாளர்கள் கோயில் சம்பந்தமான விஷயங்களை வெளியே விவாதிப்பதில்லை. அதனால், மலாக்காவில் அமைந்துள்ள கோயில்களின் சுதந்திரத்தை இந்தத் தரவு சேகரிப்பு முயற்சிகள் கட்டுப்படுத்தக்கூடும் எனச் சிலர் கருதலாம். பெரும் ரகசியம் எனக் கருதக்கூடிய சில விஷயங்கள் உள்ளன - நிதி விஷயங்கள் மற்றும், கோயில் சொத்து போன்றவை - பெரும்பாலும் இது போன்ற விவரங்களை வெளியிட விரும்பமாட்டார்கள். எனினும், இக்கோயில்கள் ஏற்கனவே சங்கங்களின் பதிவதிகாரியிடம் பதிவு செய்யப்பட்டிருந்தால் இவற்றின் கணக்குகளை அவ்வப்போது சங்கப் பதிவதிகாரியிடம் சமர்ப்பிக்க வேண்டும் எனும் சட்டவிதி உள்ளது. இவ்வாறு பதிவுப் பெற்றக் கோயில்களும் இவ்விசயத்தில் மிகுந்த தயக்கத்தைக் காட்டின. இருப்பினும், இந்த ஆய்வின் நோக்கம் நிறைவேற நிதி சம்பந்தமான தகவல்களைப் பகிர்ந்து கொள்ள தயங்குகின்ற இந்த மாதிரியான சந்தர்ப்பங்களில், ஆரம்ப ஆய்வுகளை முடிக்கக் கோயிலிலிருந்து தோராயமான நிதி நிலைமையைக் கேட்டறிந்தோம். .

இதற்கு முன்னர் அதாவது, ஆரம்பத்தில் ஆய்வு செய்த 20 கோயில்களை முன்னோடியாக வைத்து அவற்றில் கிடைத்த அனுபவங்களைக் கொண்டு, கோயில் பொறுப்பாளர்களைச் சந்திக்க மற்றும், அவர்களுடன் விவாதிக்கவும் தேவையான தரவுகளைச் சேகரிக்கும்போது அவர்களின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கும் செய்ய வேண்டிய வழிமுறைகள் குறித்து விரிவாக விவாதிக்கப்பட்டன. அரசியல் செல்வாக்கு மிகுந்த கோயில் நிர்வாகிகளும் இருந்தனர், சில வேளைகளில் நாங்கள் அனுப்பிய தன்னார்வலர்கள் குழுவை அவர்கள் ஏற்றுக் கொள்வதை உறுதிப்படுத்த வேண்டியிருந்தது. சமாளிக்கச் சிரமம் எனக் கருதப்படும் கோயில் நிர்வாகத்தினர்களைச் சந்திக்க அனுபவம் வாய்ந்த தன்னார்வலர்களை அனுப்பி வைத்தோம். எனினும், தரவுகளைச் சேகரிப்பதில் ஏற்பட்ட சிரமங்களைக் கருத்தில் கொண்டு சில தன்னார்வ ஆய்வாளர்கள் பின்வாங்கினர். ஆர்வமுள்ளவர்களே தொடர்ந்தனர்.

இதற்கிடையில், மலாக்கா மாநில அரசு, அதன் மாநிலச் சட்டமன்ற உறுப்பினர், மாண்புமிகு திரு ஜி.சாமிநாதன் அவர்கள் மூலம் கோயில்களின் எண்ணிக்கை, கோயில் நிலத்தின் உரிமம் நிலை மற்றும், குறிப்பாகச் சங்கங்களின் பதிவாளரிடம் அதன் பதிவின் நிலை போன்றத் தரவுகளை மாநில அரசு அறிந்து கொள்ள, வழங்குமாறு கேட்டுக்கொண்டது. மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளை எவ்வாறு தீர்ப்பது என்பது குறித்தக் கொள்கைகளை வகுக்க, இந்தத் தகவல்கள் மலாக்கா மாநில அரசுக்குப் பயனுள்ளதாக இருக்கும் என்பது அவருடைய கருத்தாகும். இந்த ஆய்வின் தொடக்கத் தரவுகளின் அடிப்படையில் மாண்புமிகு திரு ஜி.சாமிநாதன் கோயில் தலைவர்களை அதிகாரப்பூர்வமாகச் சந்தித்துப் பேசவும் செய்தார்.

துரதிர்ஷ்டவசமாக, 2020-ஆம் ஆண்டின் முற்பகுதியில் இந்த ஆய்வின் தரவு சேகரிக்கும் பணி நடைபெற்றுக் கொண்டிருந்தபொழுது, மாநில அரசின் தலைமைத்துவத்தில் மாற்றம் ஏற்பட்டது. இதன் காரணமாக இந்த விசயத்தில் புதிய தலைமைத்துவத்தின் அணுகுமுறை முற்றிலும் வேறாக இருந்தது. இருப்பினும், புதிய, மாண்புமிகு முதல்வருக்கு இந்த ஆய்வு சம்பந்தமான விவரங்களையும் மற்றும், முறையான விண்ணப்பத்தையும் நாங்கள் சமர்ப்பித்து, ஆதரவு கோரினோம். எனினும், தார்மீக ஆதரவு மட்டுமே கிட்டியது. ஆய்வு முடியும் வரை ஆக்ககரமான ஆதரவு கிட்டவேயில்லை.

இந்த ஆய்வின் நோக்கத்திற்காக, மலாக்கா மாநிலத்தில் உள்ள சங்கங்களின் பதிவாளரைச் சந்திக்க பாக்காத்தான் ஹரப்பான் கீழ் இருந்த மாநில அரசு எங்களுக்கு உதவியது. இந்தத் துறையின் ஒத்துழைப்பு மிகவும் ஊக்கமளிப்பதாக இருந்ததோடு எங்களுக்கு மிகவும் திருப்திகரமான பதில்களும் கிடைத்தன. மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்கள் தொடர்பான விஷயங்களைப் பற்றி விவாதிக்க மாவட்ட அதிகாரிகள் மற்றும், மலாக்கா மாநிலத்தின் உள்ளூராட்சி மன்ற அதிகாரிகள் போன்றோரைத் தொடர்புக் கொள்ள நாங்கள் எடுத்த முயற்சி பலனளிக்கவில்லை. கடந்த 2020-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில், சில தகவல்களைப் பெறவும், விளக்கங்களைப் பெறவும் இஸ்லாம் அல்லாத வழிபாட்டுக் குழுவின் (RIBI) தலைவரை மீண்டும் தொடர்பு கொண்டு சில விவரங்களைக் கேட்டோம் - கோவித்-19-ஐக் காட்டி, சுணக்கம் காட்டியதுதான் பலன்.

## முதல் பரிமாணம்
# அடிப்படையான விவரங்கள்

முந்தைய அத்தியாயத்தில் உள்ள அட்டவணைகள் 3, 4 மற்றும், 5 இல் உள்ள பட்டியல்களில் கோயில்களுக்குக் கொடுக்கப்பட்ட எண்கள் இந்த ஆய்வு முழுவதற்குமான, கோயிலை அடையாளம் காட்டும் குறிப்பு எண்கள் மட்டுமே. இந்த எண்கள் கோயில்களின் ஆய்வு வினாத்தரவுகள் பெற்றபோது அதன் வரிசையைக் குறிப்பிட பயன்படுத்தியதாகும். வேறு எந்தக் காரணமும் இல்லை.

மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களின் பரவல் இங்குக் குடியேறிய இந்து மக்களின் காலத்தைத் தெளிவாகக் குறிக்கிறது. ரப்பர் தோட்டங்கள் அல்லது அரசுத் துறைகளுக்குரிய குடியிருப்புப் பகுதிகள் இல்லாத இடங்களில் இந்துக் கோயில்கள் இல்லை. இருப்பினும், சுதந்திரத்திற்குப் பிறகு பல புதிய வீடமைப்புத்திட்டங்கள் ஆங்காங்கே உருவானபோது மற்றும், மேம்பாட்டுத் திட்டங்களுக்காக ரப்பர் தோட்டங்களை விற்பனை செய்ததன் விளைவாக இந்த இந்துச் சமூகம் புதிய வீடமைப்புத் திட்டங்களில் குடியேறிய சமயத்தில் பல கோயில்கள் இந்தப் புதிய பகுதிகளில் கட்டப்பட்டன அல்லது மாற்றி கொண்டுவரப்பட்டன. எனவே, இதைப் புரிந்து கொள்வதற்கு ஒவ்வொரு மாவட்ட ரீதியாக இந்துக் கோயில்களுள்ள பகுதிகளைப் பற்றிய ஆய்வு அவசியம்.

எளிதாக விவாதிக்கும் நோக்கத்திற்காக, இந்த ஆய்வுக்கு அடையாளம் காணப்பட்ட பகுதிகளில் உள்ள கோயில்களுக்கு வழிகாட்டியாகப் பிரதான சாலைகள் பயன்படுத்தப்படுகின்றன. இனி மலாக்காவில் உள்ள ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஏற்பக் கோயில்களைப் பற்றி விவரிப்போம்.

## மத்திய மலாக்கா மாவட்டத்தில் உள்ள கோயில்கள்

மத்திய மலாக்கா மாவட்டத்தின் மலாக்கா நகரில் மிகப் பழமையான கோயில்கள் அமைந்துள்ளன. ஸ்ரீ தர்மராஜா ஆலயம் (MT10) மற்றும், ஸ்ரீ அம்மன் ஆலயம் (MT11) காஜா பேராங் கம்போங் தூஜோவில் அமைந்துள்ள மிகப்பழமையான இவ்விரு ஆலயங்களும் 1770-ஆம் ஆண்டு துவக்கப்பட்டன. மலாக்கா செட்டிகள் சமூகத்திற்குச் சொந்தமான இவை இன்று வரை வழிபாட்டுத் தலங்களாகப் பயன்பாட்டில் இருந்து வருகின்றன. போர்த்துக்கீசிய மற்றும், டச்சு காலனித்துவ ஆட்சியின்போது ஆட்சியாளர்களின் மனப்பாங்கின் காரணமாக வர்த்தகத்திலிருந்து விவசாயத்திற்கு மாற வேண்டிய சூழ்நிலையில் மலாக்கா செட்டிகள் சமூகத்தினரால் தங்களது விவசாயப் பகுதிக்கு நடுவில் இந்தக் கோயில்கள் நிறுவப்பட்டன. இருப்பினும், இந்தக் கோயில்கள் சிறிய வழிபாட்டுத் தலங்களாக மட்டுமே தொடர்ந்து இருந்து வருகின்றன. 1781-ஆம் ஆண்டில் டச்சுக்காரர்கள் ஆட்சியின்போது அவர்கள் கொடுத்த நில பட்டாவின்வழி மலாக்கா செட்டிகள் சமூகத்தின் அன்றையத் தலைவராக இருந்த திரு தெய்வநாயகம் செட்டி அவர்களால் ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் (MT2) உருவாக்கப்பட்டது. இது மலாக்கா மற்றும், மலேசியாவின் ஆரம்பம் முதல் இன்று வரை மிகப் பழமையான, தொடர்ந்து பயன்படுத்தப்பட்டுவரும், வரலாற்றுச் சிறப்புமிக்க கோயிலாகும். மேலும், மலாக்கா செட்டிகள் சமூகத்தினரின் கோயில்களாக MT 3, 4, 5, 6, 7, 8, மற்றும், 9 ஆகிய கோயில்கள் காஜா பேராங் பகுதியில் அமைந்துள்ளன. தமிழ் வணிகர்களுக்கும் உள்ளூர் பெண்களுக்கும் இடையிலான கலப்புத் திருமணங்களிலிருந்து உருவானதுதான் மலாக்கா செட்டிகள் சமூகம் ஆகும். மேலும், அதன் வம்சாவளியினர் இந்துச் சமய நம்பிக்கையைத் தொடர்ந்து பராமரித்து வருகின்றனர். மலாக்கா சுல்தான்கள் சகாப்தத்திலிருந்து, போர்த்துகீசியம், டச்சு, பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்தின்போது நாடு சுதந்திரம் அடையும் வரை, மலாய் மொழியைத் தங்கள் தாய்மொழியாகப் பயன்படுத்திவரும் ஒரு தனித்துவமான சமூகமாக இது விளங்குகிறது. மலாக்கா செட்டிகளின் அனைத்து 10 கோயில்களும் இன்னும் மலாக்காவில் உள்ளன. தற்போது 9 கோயில்களை மலாக்கா செட்டிகள் சமூகம் நிர்வகித்து வருகிறது.

**அட்டவணை 6 : பகுதிவாரியாக மத்திய மலாக்காவில் உள்ள கோயில்கள்**

| பகுதி | கோயில்கள் | மொத்தம் |
| --- | --- | --- |
| மலாக்கா நகரம் | MT2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 34, 35, 36, 37, 38 | 15 |
| மஸ்ஜிட் தானா வழியில் | MT14 | 1 |
| அலோர் காஜா வழி (செங், பாயா ரும்புட், மற்றும், குருபோங்) | MT1, 13, 20, 21, 23, 24, 25, 26, 28, 30, 31, 32, 39, 43, 44 | 15 |
| பத்து பெரண்டாம் வழியில் (பாச்சாங், புக்கிட் பெருவாங் மற்றும், ஆயர் குரோ) | MT16, 17, 18, 19, 22, 29, 33, & 27 (pusat budaya / seni) | 8 |
| ஜாசின் மெர்லிமாவ் வழியில் (ஆயர் மோலே, தியாங் டுவா மற்றும், தம்பா பாயா) | MT12, 15, 40, 41, 42 | 5 |
| **மொத்தம்** | | **44** |

மலாக்கா செட்டிகள் காலத்திலிருந்தே இருந்த கோயிலான ஸ்ரீ சுப்ரமணியர் திரௌபதை அம்மன் ஆலய பரிபாலன சபை (MT38) 1930-ஆம் ஆண்டுகளில் இலங்கைத் தமிழ்ச் சமூகத்தின் கைக்கு மாறியது. மலாக்கா நகரில் உள்ள பெரிய கோயிலாகிய இது பெரும் செலவில் புனரமைப்பிற்குப் பிறகு 4 கோபுரங்களுடன் இன்று கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சியின்போது செல்வாக்குமிகுந்த இலங்கை தமிழ்ச் சமூகம் மலாக்காவில் அரசுத் துறைகளில் முக்கியமான பதவிகளை வகித்து வந்த சமயத்தில் அவர்களுக்கென ஒரு பிரத்தியேக ஆலயத்தை அமைத்துக்கொள்ள விரும்பினர். பல மலாக்கா செட்டிகள் அரசு ஊழியர்களாக இருந்ததால், நகர்புறத்தில் அவர்களின் பல கோயில்களில் ஒன்றை இந்த இலங்கைத் தமிழர்களுக்கு 1930-ஆம் ஆண்டுகளில் விட்டுக் கொடுத்தனர். இந்தச் சமூகத்தின் செல்வாக்கு நாட்டின் சுதந்திரத்திற்குப் பிறகு மங்கத் தொடங்கியதால், தற்பொழுது தனித்துவத்தைத் தவிர்த்து மலாக்காவில் உள்ள அனைத்து இந்துக்களும் இந்தக் கோயிலின் உறுப்பினராகலாம் எனும் நிலை உருவாகியுள்ளது. மலாக்கா செட்டிகள் சமூகத்துடன் தொடர்புப்படுத்தப்படும் மற்றொரு கோயில் காஜா பேராங்கில் உள்ள ஸ்ரீ மகா சாமுண்டீஸ்வரி அம்மன் ஆலயம் (MT35) ஆகும். இப்போது மலாக்கா செட்டிகள் சமூகத்தைச் சார்ந்த குடும்ப வாரிசுகளால் நடத்தப்படும் இந்த ஆலயம் ஒரு தனியார் மேம்பாட்டு திட்ட நிலத்தில் அமைந்துள்ளது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலேயர்கள் மலாக்கா மாநிலத்தை அவர்கள் வசம் கொண்டு வந்தபோது மலாக்காவில் உள்ள கம்போங் கெலிங் எனப்படும் இடத்தில் நகரத்தார் எனப்படும் நாட்டுக்கோட்டை செட்டியார்கள் குடியேறத் தொடங்கினர். அந்த நாட்களில் கடன் கொடுப்பவர்கள் என்ற முறையில் நன்கு பிரபலமடைந்த இவர்கள் வாழ்ந்த இடத்தில் சொந்தக் கோயிலைக் கட்ட அனுமதி கிடைக்காததால், அருகில் இருந்த மலாக்கா செட்டிகள் சமூகத்திற்குச் சொந்தமான ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி கோயிலை (MT2) 1900-ஆண்டு முதல் ஓர் ஒப்பந்தத்தின்வழி சொந்தமாக நிர்வகிக்க ஆரம்பித்தனர். இன்றுவரை இந்த ஒப்பந்தம் அமுலில் இருக்கின்றது.

அப்போதைய பிரிட்டிஷ் அரசாங்கம் மலாக்கா நகரில் இவர்களுக்கென்று ஒரு சொந்தக் கோயிலைக் கட்ட அனுமதிக்காததால், அவர்கள் தங்களது சொந்த ஆலயத்தை ஸ்ரீ சன்னாசிமலை ஆண்டவர் (MT1) எனும் பெயரில் 1868-ஆம் ஆண்டில் செங் பகுதியில் நான்கு ஏக்கர் நிலப்பரப்பில் அமைத்தனர். இந்தக் கோயில் தங்கள் சொந்த நாட்டில் உள்ள வழக்கப்படி, தேவையான அனைத்து வசதிகளுடன் கட்டினர். இதில் நடத்தப்படும் ஆண்டுத் திருவிழாவான மாசிமகத் திருவிழா ஒரு லட்சத்திற்கும் அதிகமான பக்தர்களைக் கவர்ந்துள்ளது. ஆண்டுதோறும் மலாக்காவில் நடைபெறும் கோயில் திருவிழாக்களில் இதுவே மிகப் பெரிய விழாவாகும். விலைமதிப்பு மிகுந்த ஒரு வெள்ளி இரதமும் இந்தக் கோயிலுக்குச் சொந்தமாக உண்டு. திருவிழாக் காலங்களைத்தவிர மாநில அல்லது தேசிய நிகழ்ச்சிகளில் ஊர்வலமாக இந்த இரதம் பயன்படுத்தப்பட்டதுண்டு.

பெங்கலான் ராமாவில் உள்ள முன்னாள் மலாக்கா முனிசிபல் இந்துத் தொழிலாளர்கள், தாங்கள் கட்டிய கோயிலான ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயத்தை (MT37) அதன் பழைய இடத்திலேயே தக்க வைத்துக் கொண்டுள்ளனர். அதே சமயத்தில் குபு / பாச்சாங் பகுதியில் இருந்த TNB அல்லது தேசிய மின்சார

நிறுவனத்திற்குச் சொந்தமான குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்த ஸ்ரீ வீர காளியம்மன் ஆலயம் (MT18) தற்போது பத்து பிரண்டாம் தாமான் மெர்டேகா வீடமைப்புத் திட்டத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. இருப்பினும், மலாக்கா நகரில் ஏற்கனவே மலாக்கா செட்டி கோயில்களும், நாட்டுக்கோட்டை செட்டியார் கோயில்களும் இருந்ததால் அங்குப் பணிபுரிந்த அரசுத் துறை ஊழியர்கள் வேறு கோயில்களை அமைப்பதில் ஆர்வம் கொண்டதில்லை.

சுதந்திரத்திற்குப் பிறகு, நீர்ப்பாசன மற்றும், வடிகால் துறை (JPS) தொழிலாளர்கள் (பழைய பெயர்: வடிகால் மற்றும், வடிகால் துறை (JPT)) பத்து பிரண்டாம், மலாக்கா ஆற்றின் கரையில் 1965-ஆம் ஆண்டில் ஸ்ரீ சுப்பிரமணியர் தேவஸ்தானத்தை (MT22) அமைப்பதில் வெற்றிகண்டனர். அது தற்போது மத்திய மலாக்காவில் ஒரு முக்கியக் கோயிலாக உருமாறி வருகிறது.

ஸ்ரீ வனத்தாண்டவர் ஆலயம் (MT14), 1960-ஆம் ஆண்டில் சுங்கை ஊடாங் இராணுவ முகாம் பகுதியில் காமன்வெல்த் படையினர் வெளியேறிய பின்னர் அங்கிருந்த இந்துப் பாதுகாப்புப் படையினரால் நிறுவப்பட்டது. இது கடற்கரை வழியாக மஸ்ஜித் தானாவிற்கு செல்லும் வழியில் உள்ள ஒரே இந்துக் கோயிலாகும். இந்தக் கடலோரப் பகுதியில் இந்தியக் குடியிருப்புகள் இருந்தது இல்லை என்பதை இது காட்டுகிறது; அதாவது, - இந்த இடங்களில் ரப்பர் தோட்டங்களோ அல்லது பிரிட்டிஷ் காலத் தொழிலாளர்கள் குடியிருப்புப் பகுதிகளோ இல்லை.

மலாக்கா பொது மருத்துவமனையில் பணிசெய்த தொழிலாளர்கள் 1952-ஆம் ஆண்டில் தங்கள் குடியிருப்புப் பகுதியில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி விநாயகர் ஆலயம் (MT17) ஒன்றை கட்டி இருந்தனர். ஆனால், மலாக்கா மருத்துவமனையின் மேம்பாட்டிற்காகக் குடியிருப்புப் பகுதிகள் எடுத்துக்கொள்ளப்பட்டபோது இந்தக் கோயில் பாச்சாங்கில் உள்ள மலாக்கா ஆற்றின் கரைக்கு மாற்றப்பட்டு 1996-ஆம் ஆண்டில், சொந்த மாற்று நிலத்தில் கட்டப்பட்டுள்ளது.

செங், தஞ்சோங் மிஞ்ஞா, பாயா ரும்புட், குருபோங், ஆயர் மோலெக், தியாங் டுவா, புக்கிட் காஜாங் மற்றும், தம்பா பாயா போன்ற பகுதிகளில் அதிகமான ரப்பர் தோட்டங்கள் இருந்தன. எனவே, இந்தப் பகுதிகளில் இந்துக் கோயில்கள் அதிகம் இருப்பது ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. இங்குள்ள ரப்பர் தோட்டங்கள் பல மேம்பாட்டுத் திட்டங்களுக்கு இலக்காகியுள்ளன. ஆனால், இந்தத் தோட்டங்களில் உள்ள கோயில்கள் பல - குறிப்பாக நல்ல நிர்வாகங்களைக் கொண்டவை - தொடர்ந்து தங்கள் கோயில்களைத் தற்காத்துக் கொண்டுள்ளன. எடுத்துக்காட்டாக, தாமான் பாயா ரும்புட் பெர்மாய் வீடமைப்புத் திட்டத்தில் உள்ள ஸ்ரீ மஹா கருமாரியம்மன் ஆலயம் (MT13) - 1937-ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை வரலாற்றைக் கொண்ட இந்த ஆலயம், அதே இடத்தில் நிலத்தைப் பெறுவதில் வெற்றி பெற்றதோடு தங்களது நடவடிக்கைகளை எவ்வித தடைகளும் இன்றி தொடர்ந்து மேற்கொண்டு வருகின்றது. அதேபோன்றுதான் 1900-ஆம் ஆண்டு தஞ்சோங் மிஞ்ஞா பகுதியில் தொடங்கப்பட்ட தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (MT24), 1900-ஆம் ஆண்டில் பாயா ரும்புட்டில் உருவாக்கப்பட்ட தேவி துர்கையம்மன் / பத்ரகாளியம்மன் ஆலயம் (MT28), அதே பாயா ரும்புட் பகுதியில் 1890-இல் துவக்கப்பட்ட குதிரைக்கோயில் எனப்படும் ஸ்ரீ மாரியம்மன் ஆலயம் (MT39), தஞ்சோங் மிஞ்ஞா பகுதியில் 1924-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட மேட்டுக்கோயில் எனப்படும் ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம் (MT43) போன்றவை தோட்டங்கள் இல்லாத நிலையிலும் இயங்கிவருகின்றன.

குருபோங் பகுதியில் திரு ராமன் செட்டியார் அவர்களின் தோட்டம் லாம் ஜூ நிறுவனத்தின் கைவசம் சென்றபிறகு, அவ்விடம் வீடமைப்பு மற்றும், தொழிற்சாலைகள் அமைக்கும் மேம்பாட்டு திட்டங்களுக்கு உட்படுத்தப்பட்டது. தற்போது இந்தப் பகுதியில் 1930-ஆம் ஆண்டில் உருவான MT20 ஆலயம் அமைந்துள்ளது. இந்தக் கோயில் சாலை அமைப்பதற்காக ஒதுக்கப்பட்ட பகுதியான பொதுப்பணி துறையின் இருப்பு நிலத்தில் அமைந்துள்ளதால் இந்தக் கோயிலை அகற்றுவதற்கான அரசின் கோரிக்கை உள்ளது. இதையொட்டி மாற்று இடத்தைத் தேடுவதில் இக்கோயிலின் நிர்வாகம் முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. செங் பகுதியில் கெந்திங் தோட்டத்தில் உள்ள 1930-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட MT30 கோயில்; யூனியன் பிரிவின் டைமண்ட் ஜூப்ளி தோட்டத்தில் உள்ள 1930-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட MT41 கோயில் - இப்போது பாடுவான் ரியால்டி நிறுவனத்திற்குச் சொந்தமான நிலத்தில் உள்ளது; மற்றும், புக்கிட் லிந்தாங், லிம் கோக் வா தோட்டத்திலுள்ள MT42 கோயில், 1930-ஆம் ஆண்டில் துவக்கப்பட்டது. எனினும், தொழிலாளர்கள் இங்கு வசிக்கவில்லை என்றாலும் இன்னும் அந்தந்தத் தோட்டங்களிலேயே இக்கோயில்கள் உள்ளன. புக்கிட் காஜாங் தோட்டத்தில் உள்ள கோயில் (MT15) 1906-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டு இன்று வரை உள்ளது.

சில கோயில்கள் அரசு நிலங்களில் அமைக்கப்பட்டுள்ளதையும் காணலாம். எடுத்துக்காட்டாக, 1970-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட MT16 கோயில், நீர்ப்பாசன மற்றும், வடிகால் துறைக்கு (JPS) - சொந்தமான நிலத்தில் அமைந்துள்ளது. அதேபோன்றுதான் 2004-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட தாமான் மெர்டேகாவில் உள்ள MT18 கோயில்; குருபோங் தொழில்துறை பகுதியில் 2015-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட MT21 கோயில்; 1930-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட MT23 கோயில்; மற்றும், 1930-ஆம் ஆண்டில் துவங்கப்பட்ட பெங்களான் ராமா பந்தாய் MT37 கோயில் போன்ற கோயில்கள் ஆகும். மேலும், புக்கிட் பெருவாங், தாமான் பூங்கா ராயாவில் 1974-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட MT29 கோயில்; புக்கிட் பெருவாங் தாமான் கெர்ஜா சமா பகுதியில் 1940-ஆம் தொடங்கப்பட்ட MT33 கோயில் போன்றவை அரசு நிலத்தில் உள்ளன. இந்தக் கோயில்களின் நிர்வாகத்தினர் அனைவரும் நிலத்தைக் கையகப்படுத்த உதவுமாறு அரசுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளனர். ஆனால், இந்தக் கோயில்களில் சில, பொருத்தம் இல்லாத இடங்களில் அமைந்திருப்பதாகச் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கருதுகின்றனர்.

இடுகாடு அல்லது தகனம் செய்யும் இடங்கள் குறிப்பிட்ட தெய்வங்களை வழிபடும் இடங்களாகக் கருதப்பட்டு வந்துள்ளன. புக்கிட் சிரெண்டிட் மயான நிலத்தில் 1970-ஆம் ஆண்டு முதல் ஸ்ரீ உத்ரகாளியம்மன் ஆலயம் (MT34) இருந்து வருகிறது. தற்போது இந்தக் கோயிலில் உறையும் தெய்வத்தின் மீது நம்பிக்கை கொண்ட பல இனத்தைச் சார்ந்த மக்கள் இங்கு வழிபட வருகின்றனர். இக்கோயில் இருக்கும் இடத்தைக் கையகப்படுத்தும் முயற்சி பல ஆண்டுகளாக நடந்து வருகிறது.

ஆற்றோரங்களிலும் வழிபடும் இடங்கள் இருக்கின்றன. ஏற்கனவே குறிப்பிடப்பட்ட பத்து பிரண்டாம் பகுதியில் உள்ள MT17 மற்றும், MT22 தவிர்த்து, மேலும், இரண்டு கோயில்கள் மத்திய மலாக்கா மாவட்டத்தில் ஆற்றோரங்களில் அமைந்துள்ளன. முதலாவது 1970-ஆம் ஆண்டில் பத்து பிரண்டாம் அருள்மிகு ஸ்ரீ சமயபுரம் மாரியம்மன் நாகேஸ்வரி அம்மன் ஆலயம் (MT16), மற்றொன்று 1930-ஆம் ஆண்டு முதல் குருபோங் பகுதியில் ராமன் செட்டியாருக்கு உரிமையாக இருந்த தோட்டத்தில் இருந்த ஸ்ரீ வனப்பத்ர காளியம்மன் ஆலயம் (MT23) ஆகும்.

புதியக் குடியிருப்புப் பகுதிகளில் புதியக் கோயில்களும் அல்லது வேறு ஓர் இடத்திலிருந்து மாற்றம் செய்யப்பட்ட கோயில்களும் உருவெடுத்துள்ளன. புக்கிட் பெருவாங் மற்றும், ஆயர் குரோ பகுதிகளில் முன்பு தொழிலாளர்கள் வீடுகளோ ரப்பர் தோட்டங்களோ இருந்தது கிடையாது. ஆனால், இந்தப் பகுதிகளில் புதிய வீடமைப்புத் திட்டங்கள் தோன்றியபோது, புக்கிட் பாரு - புக்கிட் பெருவாங் சாலை முச்சந்தியில் அமைந்திருந்த ஸ்ரீ முத்துமாரியம்மன் ஆலயத்தை (MT19), சாலையை அகலப்படுத்த வேண்டி இருந்ததால், 1993-ஆம் ஆண்டில் புக்கிட் பெருவாங்கிலுள்ள புக்கிட் மலாக்கா வீடமைப்புத் திட்டத்திற்குள் மாற்றப்பட்டது. மலாக்காவில் உள்ள ஸ்ரீ கிருஷ்ணா பக்தர்கள், நவீன சிந்தனைகளுடன், வழிபாட்டையும் உள்ளடக்கிய ஸ்ரீ கிருஷ்ண பலராம் இந்து பண்பாட்டு, கலை மையத்தை (MT27), ஆயர் குரோவில் 2002-இல் நிறுவினர்.

சில பக்தர்கள் தங்களின் வசிப்பிடங்களுக்கு அருகில் பொது இடங்களில் கோயில்களை அமைத்தப் பிறகு முறையான அனுமதியைப் பெறுவதில் பல சிரமங்களை எதிர்கொள்கின்றனர். இதற்கான காரணங்கள் என்னவென்றால் முன்பு இவர்கள் ரப்பர் தோட்டங்களிலோ அரசாங்கத் தொழிலாளர் குடியிருப்புப் பகுதிகளிலோ வாழ்ந்த காலத்தில் யாரிடமும் எந்தவித அனுமதியுமின்றி தங்களுக்கு வசதியான இடங்களில் கோயில்களை அமைத்துக் கொண்டனர். இதற்கு யாரும் தடை விதித்ததும் கிடையாது. மத்திய மலாக்கா மாவட்டத்தில் புதிய குடியிருப்புப் பகுதிகளில் வசிக்கும் சில இந்துக்களிடையே இது போன்ற வழக்கம் இன்றும் உள்ளது. சில கோயில்கள் தனிப்பட்ட முறையில் தனியார் இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. ஆயர் மோலேக் பகுதியில் MT12; தஞ்சோங் மிஞ்ஞா பகுதியில் MT25; குருபோங்கில் MT31; மலாக்கா நகரில் MT36; மற்றும், பாயா ரும்புட் MT44 ஆகியன இந்த வகையைச் சேர்ந்த கோயில்கள் ஆகும்.

சில கோயில்கள் குடும்ப உறுப்பினர்களால் நிர்வகிக்கப்படுகின்றன. சிலர் கோயிலைத் தங்கள் சொந்த நிலத்திலேயே கட்டியிருக்கின்றனர். மற்றவர்கள் கோயிலை வீட்டிற்காக உள்ள வாடகை நிலத்தில் கோயிலை எழுப்பியுள்ளனர். ஆனால், அந்த இடத்தில் அவர்கள் நீண்ட காலமாக வசித்து வருவதால், மரியாதை நிமித்தமாக நில உரிமையாளர்கள் ஒன்றும் சொல்ல இயலாத நிலையில் அனுமதியோடோ அனுமதி இன்றியோ கோயிலை வீட்டிற்கு முன் அமைத்துள்ளார்கள்.

## ஜாசின் மாவட்டத்தில் உள்ள இந்துக் கோயில்கள்

ஜாசின் மாவட்டத்தில் பல ரப்பர் தோட்டங்கள் உள்ளன. பெரும்பாலான இந்துக் கோயில்கள் கடந்த காலங்களில் ரப்பர் தோட்டங்களில் அமைந்திருந்தன. ஜாசின் ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J9) ஜாசின் ரப்பர் தோட்டத்தில் 1890-ஆம் ஆண்டில் துவக்கப்பட்ட வரலாறு உண்டு. அதே ஆலயத்தின் நிர்வாகக் குழுவின் கீழ் உள்ள ஸ்ரீ சிவன் கோயில் (J10) 1880-ஆம் ஆண்டு முதல் ஜாசின் பொதுப்பணித் துறை தொழிலாளர் குடியிருப்புப் பகுதியில் அமைந்திருக்கிறது. சிலாண்டரில் அங்குள்ள பொதுப்பணித் துறையின் தொழிலாளர்கள் 1930-ஆம் ஆண்டுக்கு முன்னர் ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயத்தை (J1) எழுப்பியுள்ளனர். ஜாசின்-தங்காக் சின்-சின் சாலையில் பொதுப்பணித் துறை தொழிலாளர் குடியிருப்புப் பகுதியில் 1930-ஆம் ஆண்டு முதல் இருந்த ஸ்ரீ முனியாண்டி ஆலயம் (J42) 2004-இல் எம்.ஆர்.எஸ்.எம். புதிய கல்லூரி நிர்மாணிப்பின் காரணமாக சிம்பாங் கெராயோங் புதிய குடியிருப்புப் பகுதிக்கு மாற்றப்பட்டுள்ளது.

**அட்டவணை 7 : பகுதிவாரியாக ஜாசின் மாவட்டத்தில் உள்ள இந்துக் கோயில்கள்**

| பகுதி | கோயில்கள் | மொத்தம் |
|---|---|---|
| சிலாண்டார் / ஞாலாஸ் /கீசாங் | J1, 5, 14, 19, 28, 33, 37, 43, 44, 45, 46 | 11 |
| அசகான்/ சிம்பாங் பெக்கோ/ ரிம் | J3, 7, 8, 18, 20, 31, 32 | 7 |
| ஜாசின் / கெமெண்டோர் | J9, 10, 13, 16, 17 | 5 |
| ஜாசின்- மலாக்கா வழியில் | J2, 4, 6, 29, 30, 36 | 6 |
| தங்கா- மெர்லிமாவ் வழியில் | J11, 34, 35, 38, 39, 42 | 6 |
| மெர்லிமாவ் | J12, 15, 21, 22, 23, 24, 25, 26, 27, 40, 41 | 11 |
| **மொத்தம்** | | **46** |

மேம்பாட்டுத் திட்டங்களுக்காக ரப்பர் தோட்டங்களை விற்பனை செய்ததன் தாக்கமாக கடந்த காலங்களில் சில இந்துக் கோயில்களுக்கான நில உரிம பிரச்சினைகள் தீர வகை செய்துள்ளது. கோயில் நிர்வாகங்கள் நிலத்தைக் கையகப்படுத்தவும் அதே இடத்தில் நிலைநிறுத்தவும் சில சூழ்நிலைகளில் கோயிலை இடமாற்றம் செய்யவும் முயற்சிகளை மேற்கொண்டன. எடுத்துக்காட்டாக, ஜாசின் 16-ஆவது கல்லில், 1910-ஆம் ஆண்டு முதல் அமைந்திருக்கும் ஸ்ரீ மகா மாரியம்மன் (மயில்) ஆலயம் (J2); பெம்பான் பகுதியில் 1930-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J4); பத்தாங் மலாக்காவில் 1935-ஆம் ஆண்டு முதல் இருக்கும் தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J5); 1900-இல் ரிம் பகுதியில் உருவாக்கப்பட்ட ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J7); மற்றும், 1900-இல் கீசாங் பாஜா ஸ்ரீ மகா கருமாரிம்மன் ஆலயம் (J28), ஆகியவை இந்த வகைக்குள் அடங்கும். கோயிலுக்குப் பொருத்தமான நிலத்தைக் கண்டுபிடிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் கோயில்களில் பத்தாங் மலாக்கா பிரிவின் தெபோங் தோட்டத்தில் 1930-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J14); செர்க்காம் தோட்டத்தில் 1890-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் (J22); மற்றும், மெர்லிமாவ் தோட்டத்தில் 1904-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J23) போன்றவை ஆகும்.

சில கோயில்கள் குடியிருப்புப் பகுதிகளில் அல்லது தனியார் நிலங்களில் அமைக்கப்பட்டுள்ளன. 1997-ஆம் ஆண்டு அசகானில் கட்டப்பட்ட ஸ்ரீ மகா காளியம்மன் முனீஸ்வரர் துவா பெக் கோங் ஆலயம் (J20); 1970-இல் மெர்லிமாவ் பாயா பூலோவில் உருவான ஸ்ரீ மதுரை வீரன் ஆலயம் (J24); பாயா பூலோ இந்தியர் கிராமத்தில் 1965-ஆம் ஆண்டு கட்டப்பட்ட ஸ்ரீ வீர பத்ர காளியம்மன் ஆலயம் (J36); 1999-ஆம் ஆண்டு கீசாங் பாஜாக்கில் உருவாக்கப்பட்ட ஸ்ரீ ப்ரிதியங்கரா தேவி சக்தி பீடம் (J37); மற்றும், 1970-ஆம் ஆண்டில் உருவான பத்தாங் மலாக்கா ஸ்ரீ மகா சிவசக்தி ஆலயம் (J43) போன்றவை இந்த ரகத்தைச் சேர்ந்தவை.

அதே சமயம், 1990-ஆம் ஆண்டு மெர்லிமாவ், பிஸ்தாரி பார்க் ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J25); மற்றும், 1990 ஆம் ஆண்டு மெர்லிமாவ், பாயா பூலோ கிராமத்தின் தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J27) போன்ற கோயில்கள் சொந்த நிலங்களைப் பெற்றுள்ளன.

மெர்லிமாவில், அரசுத் துறையின் குடியிருப்புப் பகுதியின் அருகில் 1969-ஆம் ஆண்டில் எம்.சி.எல். (MCL) எனப்படும் மலாய்க்காரர்களுக்குச் சொந்தமான நிலத்தில் அமைந்திருந்த ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் (J21) இப்போது மெர்லிமாவ் நகரில் தேசிய எரிசக்தி நிறுவனத்திற்குச் (TNB) சொந்தமான இடத்தில், உயர் மின்னழுத்த மின்சாரக் கம்பியின் கீழ் அமைந்திருப்பதால் இவ்விடத்திலிருந்து கோயிலை அப்புறப்படுத்த வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளது. ஆகவே, இப்பொழுதுள்ள இடம் பொருத்தமானது இல்லை என்பதை உணர்ந்த கோயில் நிர்வாகம் கோயிலைப் புதிய இடத்திற்கு மாற்றுவதற்கு முயற்சிகளை மேற்கொண்டுவருகின்றது.

இப்பகுதியில் உள்ள பல கோயில்கள் தோட்டப்புறங்களில் உள்ளன - பெரும்பாலான ரப்பர் தோட்டங்கள் இன்று செம்பனை தோட்டங்களாக மாறியுள்ளதோடு வெளிநாட்டு நிறுவனங்களிடமிருந்து சைம் டார்பி (Sime Darby), ஐ.ஓ.ஐ.(IOI), மற்றும், கெந்திங் (Genting) போன்ற உள்நாட்டு பெருந்தோட்ட நிறுவனங்களால் கையகப்படுத்தப்பட்டுள்ளன. அதோடு, இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்களின் எண்ணிக்கை இந்தத் தோட்டங்களில் பெரும் வீழ்ச்சி கண்டுள்ளது. பெரும்பாலான இந்துக் குடும்பங்கள் இப்போது அருகில் இருக்கும் புதிய வீடமைப்புப் பகுதிகளில் வசித்து வரும் வேளை, அவர்கள் முன்பு பாரம்பரியமாகத் தோட்டங்களில் வழிபட்டு வந்த கோயில்களைத் தொடர்ந்து பராமரிக்க முயற்சித்து வருகின்றனர்.

புக்கிட் அசகான் தோட்டத்தில் 1915-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட J3 கோயில்; ஜாசின் லாலாங் தோட்டத்தில் 1900-ஆம் ஆண்டு துவக்கப்பட்ட J6 கோயில்; டைமண்ட் ஜூப்ளி தோட்டத்தில் 1890-ஆம் ஆண்டில் உருவான J8 கோயில்; ஜாசின் லாலாங் தோட்டத்தின் புக்கிட் செர்மின் பிரிவில் 1902-ஆம் ஆண்டில் உருவான J11 கோயில்; ஜாசின் லாலாங் தோட்டத்தின் பத்து லாங் பிரிவில் 1940-ஆம் ஆண்டில் துவங்கப்பட்ட J12 கோயில்; செர்க்காம் தோட்டத்தின் ஜாசின் பிரிவில் 1915-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட J13 கோயில்; கெம்பாஸ் தோட்டத்தின் செலாத்தான் பாரு பிரிவில் 1950-ஆம் ஆண்டு உருவான J15 கோயில்; செர்க்காம் தோட்டத்தின் கெமெண்டோர் பிரிவில் 1936-இல் உருவான J16 கோயில்; லவ் லியோங் தோட்டத்தின் கெமெண்டோர் பிரிவில் 1910-இல் உருவான J17 கோயில்; ஞாலாஸ் தோட்டத்தின் கூபா பிரிவில் 1970-இல் உருவாக்கப்பட்ட J19 கோயில்; மெர்லிமாவ், செலாத்தான் பாரு தோட்டத்தில் 1990-இல் உருவான J26 கோயில்; பெம்பான் யூ வாட் ஹின் தோட்டத்தில் 1950-இல் உருவான J30 கோயில்; புக்கிட் அசகான் தோட்டத்தின் D பிரிவில் 1948-இல் கட்டப்பட்ட J31 கோயில்; புக்கிட் அசகான் தோட்டத்தில் ஆயர் தெக்கா பிரிவில் 1970-இல் உருவான J32 கோயில்; ஞாலாஸ் தோட்டத்தின் மந்தாய் பிரிவில் 1950-இல் உருவான J33 கோயில்; கெம்பாஸ் தோட்டத்தின் டேவோன் பிரிவில் 1890-ஆம் ஆண்டு அமைந்த J35 கோயில்; டத்தோ கான் சகோதரர்களுக்கு உரிமையான தோட்டத்தில் 1950-ஆம் ஆண்டில் அமைந்த J38 கோயில்; கிம் யுன் நிறுவனத்தினருக்குக் சொந்தமான நிலத்தில் 1890-ஆம் ஆண்டில் அமைந்த J39 கோயில்; மெர்லிமாவ் தோட்டத்தின் லஞ்சாங் பிரிவில் 1945-ஆம் ஆண்டில் அமைந்த J41 கோயில்; செலாண்டார், லியன் டெக் தோட்டத்தில் 1950-ஆம் ஆண்டு அமைந்த (J44) கோயில்; செலாண்டார், லிம் கோக் வா தோட்டத்தில் 1960-ஆம் ஆண்டு அமைந்த J45 கோயில்; மற்றும், பத்தாங் மலாக்கா தோட்டத்தில் 1940-ஆம் ஆண்டு அமைந்த J46 கோயில், போன்றவை தோட்டங்களுக்குச் சொந்தமான நிலத்தில் அமைந்துள்ள கோயில்களாகும். இந்தத் தோட்டங்களில் சிலவற்றில் இன்னும் வேலை செய்யும் அல்லது இங்கு வாழும் இந்துக்களின் எண்ணிக்கை பெரிதும் குறைந்திருப்பினும் அல்லது அறவே இல்லாமல் இருந்தும் ஒரு சில பக்தர்கள் இப்போதும் இந்தக் கோயில்களைத் தங்கள் வழிபாட்டிற்குப் பயன்படுத்துகிறார்கள்.

இவற்றைத் தவிர்த்து, கப்பாம் பகுதியில் ஓர்னா கிளப்பிற்குச் சொந்தமான நிலத்திலும், (இந்த நிலம் தற்போது வேறொரு மேம்பாட்டாளர் கைவசம் மாறியுள்ளது) மற்றும், அரசுக்குச் சொந்தமான நிலத்திலும் உள்ள J40 கோயில் 1992-இல் அமைக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயில் இடம் மாறவேண்டும் எனும் கோரிக்கை அரசாங்கத்தால் விடுக்கப்பட்டுள்ளது. தாமான் பெம்பான் உத்தாமா பகுதியில் அரசு நிலத்தில் J29 கோயில், 1966-இல் உருவாக்கப்பட்டுள்ளது.

இந்த மாவட்டத்தில் சிம்பாங் கொராயோங் பகுதியில் உள்ள ஸ்ரீ மதுரை வீரன், ஸ்ரீ ராஜ கருமாரியம்மன் மற்றும், தோ பெக் கோங் (J34) கோயில் (1970) மற்றும், அசகானில் உள்ள ஸ்ரீ மகா காளியம்மன் முனீஸ்வரர் தோ பெக் கோங் (J20) கோயில் (1997), எனும் இரண்டு கோயில்களும் இந்துச் சமயம் மற்றும், தாவோயிசம் போன்ற இரு சமய வழிபாட்டுகளின் நம்பிக்கைகளைப் பின்பற்றுகின்றன. இந்தக் கோயில்களின் நிர்வாகக் குழுக்களில் இரு இன / சமய நம்பிக்கைகளைச் சேர்ந்தவர்கள் பங்கு கொண்டு இக்கோயில்களை நிர்வகிக்கின்றனர். இந்தக் கோயில்களின் தோற்றம் நெடுங்காலமாக அண்டை அயலாராக வாழ்ந்து வந்த இரு இனங்களுக்கிடையேயான அரவணைப்பைப் பிரதிபலிக்கிறது. மேலும், இரண்டு சமய நடைமுறைகளில் காணப்படும் ஒற்றுமையைப் புரிந்து கொண்டவர்கள், ஒரே கோயிலில் இணைந்து வழிபடுகின்றனர்.

இந்த மாவட்டத்தில், இந்துத் தொழிலாளர்கள் தோட்ட உரிமையாளர்களின் கொள்கைகளால் இடம்பெயர்ந்து வெளியேறியதாலும், பிற வேலைகளைத் தேடி சென்றதாலும் ஏற்பட்டத் தாக்கங்களைக் காணமுடிகிறது. இதன் விளைவாக, குறிப்பாகத் தாங்கள் வசிக்கும் இடங்களிலிருந்து கோயிலுக்குச் செல்லும் தூரம் தொலைவாக இருப்பதால் ஒவ்வொரு நாளும் வழிபாடு நடைபெறும் கோயில்களில் கலந்துகொள்ளும் பக்தர்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. அதோடு, தங்கள் தோட்டங்களில் உள்ள கோயில்களின் விவகாரங்களை நிர்வகிக்க இந்துக்கள் மீது திறந்த கொள்கையைக் கடைப்பிடிக்கும் தோட்ட உரிமையாளர்கள் சிலர் இருந்தாலும், தங்கள் தோட்டங்களில் கோயில் நிர்வாகிகளைத் தாங்களே நியமிப்பதன் மூலமும், கோயிலில் எந்தப் பழுதுபார்ப்புகளையும் செய்ய அனுமதிக்காததன் மூலமும், அங்கு வேலை செய்யாதவர்கள் எவ்விதக் கோயில் பொறுப்புகளில் இருக்கக் கூடாது போன்ற பல நிபந்தனைகளை வைக்கும் தோட்ட உரிமையாளர்களும் இருக்கின்றனர். இதனால், இந்தக் கோயில்கள் நீண்ட காலம் நீடிக்குமா என்ற கேள்வியும் எழும்புகிறது.

## அலோர்காஜா மாவட்டத்தில் உள்ள இந்துக் கோயில்கள்

கடந்த காலத்தில் அலோர்காஜா மாவட்டத்தில் அதிகமான ரப்பர் தோட்டங்கள் இருந்ததால் இந்தப் பகுதியில் அதிக எண்ணிக்கையிலான இந்துக் கோயில்கள் இருப்பதை இந்த ஆய்வில் காணலாம். அலோர்காஜா நகரில் பெங்காளான் பகுதியில் ஆற்றங்கரை ஓரத்தில் 1935-ஆம் ஆண்டு முதல் வரலாற்றைக் கொண்டுள்ள ஸ்ரீ சித்தி விநாயகர் ஸ்ரீ பாலசுப்பிரமணியர் பரிபாலன சபை (AG3) எனும் கோயில் நன்கு பராமரிக்கப்படும் கோயில்களில் ஒன்றாகும்.

**அட்டவணை 8: பகுதிவாரியாக அலோர்காஜா மாவட்டத்தில் உள்ள இந்துக் கோயில்கள்**

| பகுதி | கோயில்கள் | மொத்தம் |
|---|---|---|
| மஸ்ஜிட் தானா / சுங்கை பாரு | AG 9, 10, 12, 13, 14, 15, 24, 33, 49, 51 | 10 |
| லெண்டு / ரெம்பியா | AG 11, 19, 26, 27, 29, 39, 41, 42, 43, 44, 47, 50, 53, 54 | 14 |
| அலோர் காஜா / பெங்காளான்/ மலாக்கா பீண்டா | AG 3, 25, 30, 32, 34, 52,56 | 7 |
| பூலாவ் செபாங் / காடெக் / சிம்பாங் அம்பாட் | AG 6, 7, 21, 23, 35, 36, 38, 40, 45, 48 | 10 |
| டுரியான் துங்கால் / மாச்சாப்/ ஹஜோத்தான் பெர்ச்சா | AG 1, 2, 4, 5, 8, 22, 28, 31, 46 | 9 |
| தெபோங் / பத்தாங் மலாக்கா | AG 16, 17, 18, 20, 37, 55 | 6 |
| **மொத்தம்** | | **56** |

இந்தப் பகுதியில், தற்போது தோட்டப்பகுதியில் இருந்தாலும், கோயில் நிர்வாகத்திற்குச் சொந்தமான கோயில்கள்: முன்பு 1935-ஆம் ஆண்டு முதல் காடேக் தோட்டத்திலிருந்த இன்று சிம்பாங் அம்பாட் பகுதியில் இருக்கும் ஸ்ரீ பால தண்டாயுதபாணி ஆலயம் (AG21); முன்பு பெகோ தோட்டத்தில் 1936-இல் உருவான, இன்று பூலௌ செபாங், தாமான் மாலின்ஜா வாங்கி எனும் இடத்தில் இருக்கின்ற ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (AG23); லூபோக் சீனா, கேம்பாஸ் தோட்டத்தின் புக்கிட் பாச்சாங் பிரிவில் 1910-இல் உருவான, இன்று பாயா மேங்குவாங் பகுதியில் உள்ள தேவி ஸ்ரீ மாரியம்மன் ஆலயம் (AG24); முன்பு பெர்த்தாம் தோட்டத்தின் பாரிட் மெலானா பிரிவில் 1936-ஆம் ஆண்டு உருவான, இன்று யாயாசான் மலாக்காவிற்குச் சொந்தமான மலாக்கா பிண்டா கம்போங் தெர்சுசுன் பகுதியில் அமைந்திருக்கும் ஸ்ரீ சுப்பிரமணியர் ஆலயம் (AG25); பெகோ தோட்டத்தில் 1910-இல் உருவான இன்று சிம்பாங் அம்பாட், தாமான் நானிங் பகுதியில் உள்ள ஸ்ரீ முகாம்பிகை ஆலயம் (AG38); மற்றும், ரெம்பியா பகுதியில் 1918-இல் உருவான அருள்மிகு ஸ்ரீ மகா கருமாரியம்மன் தேவஸ்தானம் (AG39) ஆகியவை. இந்தக் கோயில்கள் ஆரம்பத்தில் ரப்பர் தோட்டங்களில் இருந்தன. இருப்பினும், கோயில் நிர்வாகத்தினரின் கடும் முயற்சியால் கோயிலுக்குச் சொந்த நிலத்தைச் சாலையோரங்களில் பெற்றுள்ளனர் அல்லது பெறும் தருவாயில் உள்ளனர்.

தோட்டப்புறங்களில் இன்னும் தோட்டத்திற்குச் சொந்தமான நிலத்தில் இருக்கும் கோயில்கள்: டூரியான் துங்கால், பெர்த்தாம் தோட்டத்தில் 1950-இல் உருவான AG1 கோயில்; டூரியான் துங்கால், சிங் லியான் தோட்டத்தில் (இப்போது சைன்டெக்ஸுக்குச் சொந்தமானது) 1960-இல் உருவாக்கப்பட்ட AG4 கோயில்; காடேக் கெமுனிங் குரு தோட்டத்தில் 1890-இல் உருவான AG6 கோயில்; சிம்பாங் காடேக், காடேக் தோட்டத்தில் 1911-இல் தோற்றம் கண்ட AG7 கோயில்; மஸ்ஜித் தானா, சுங்கை பாரு தோட்டத்தில் 1924-இல் உருவான AG9 கோயில்; மஸ்ஜித் தானா, சுங்கை பாரு தோட்டத்தில் 1950-இல் உருவான AG10 கோயில்; மஸ்ஜிட் தானா, ராமுவான் சீனா பெசார் பகுதியில் உள்ள யுஎம்பி தோட்டத்தில் 1910-இல் உருவான AG12 கோயில்; மஸ்ஜிட் தானா, சுங்கைபாரு தோட்டத்தின் ஹோம் பிரிவில் 1930-இல் எழுந்த AG13 கோயில்; கோலா சுங்கை பாரு, புக்கிட் செம்படாக் தோட்டத்தில் 1920-இல் எழுந்த AG14 கோயில்; தெபோங் தோட்டம் என முன்பு அழைக்கப்பட்ட தெபோங் கெந்திங் தோட்டத்தில் 1919-இல் உருவான AG16 கோயில்; தெபோங், கெமுனிங் தோட்டத்தின் ஹோம் பிரிவில் 1939-இல் உருவான AG17 கோயில்; தெபோங்கில், முன்பு லியோங் வாட் ஹின் தோட்டம் என அழைக்கப்பட்ட ரெனோபினாங் தோட்டத்தில் 1960-இல் உருவாக்கப்பட்ட AG18 கோயில்; கே வி எல் ரெம்பியா எனப்படும் ஹோர் ங லின் யுவான் தோட்டத்தில் 1961-இல் உருவான AG19 கோயில்; தெபோங், கத்ரி ரப்பர் நிறுவனத்திற்குச் சொந்தமான பகுதியில் 1919-இல் உருவாக்கப்பட்ட AG20 கோயில்; லெண்டு யாயாசான் தோட்டத்தில் 1945-இல் அமைக்கப்பட்ட AG26 கோயில்; லெண்டு, லோரோங் புக்கிட் ஹந்து எனும் தோட்டப்பகுதியில் 1930-இல் உருவாக்கப்பட்ட AG27 கோயில் (இன்று இந்தத் தோட்டம் ஒரு மலாய் தொழில்முனைவருக்குச் சொந்தமாக உள்ளது).

ஹுத்தான் பெர்ச்சா பகுதியில் நியூ குரு தோட்டத்தில் 1948-இல் உருவாக்கப்பட்ட AG28 கோயில்; செட்டியார் தோட்டத்தில் 1920-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட AG29 கோயில் (இன்று இத்தோட்டம் ஆ சோங் குடும்பத்திற்குச் சொந்தமாக உள்ளது); டூரியான் துங்கால் மாச்சாப் தோட்டத்தில் 1890-ஆம் ஆண்டு உருவான AG31 கோயில்; லெசோங் பத்து, மலாக்கா பீண்டா தோட்டத்தில் 1890-ஆம் ஆண்டு எழுந்த AG32 கோயில்; அலோர் காஜா, ரந்தாவ் பாஞ்சாங், லியான் ஹோ தோட்டத்தில் 1960-ஆம் ஆண்டு கட்டப்பட்ட AG33 கோயில்; அலோர் காஜா காடேக் தோட்டத்தில் 1913-ஆம் ஆண்டு கட்டப்பட்ட AG36 கோயில்; தெபோங், தெபோலாங் தோட்டத்தில் 1920-ஆம் ஆண்டு உருவெடுத்த AG37 கோயில்; கெமுனிங் தோட்டத்தின் ரெம்பியா பிரிவில் 1920-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட AG41 கோயில்; லெண்டு கெச்சில் தோட்டத்தில் (தற்போது இந்தத் தோட்டம் ஒரு சீன தொழிலதிபருக்குச் சொந்தமாக உள்ளது) 1940-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட AG42 கோயில் மற்றும், அதே தோட்டத்தில் 1930-ஆம் ஆண்டில் உருவான AG43 கோயில்; லுபோக் சீனா, கெம்பாஸ் தோட்டம், புக்கிட் பாச்சாங் பிரிவில் 1940 இல் உருவான AG49 கோயில்; லெண்டு, லெண்டு சான் தோட்டத்தில் 1940-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட AG50 கோயில்; ஆயர் மோலேக், கோலா சுங்கை பாரு தோட்டத்தில் 1910-ஆம் ஆண்டு எழுந்த AG51 கோயில்; மற்றும், முன்பு லெண்டு தோட்டத்தில் 1920-இல் உருவான, இன்று சோங் பீ நிறுவனத்திற்குச் சொந்தமான நிலத்தில் அமைந்துள்ள AG53 கோயில்; அதோடு, 1957-ஆம் ஆண்டு தெபோங் நம் பீ தோட்டத்தில் உருவான AG55 கோயில் போன்றவை ஆகும். 1980-இல் உருவாக்கப்பட்ட ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் ஆலயம் (AG22) ஃபெல்டா ஹுத்தான் பெர்ச்சா நிலத்திட்டத்தில் அமைந்துள்ளது.

அலோர்காஜா, லெண்டு தோட்டத்தை சி.சி.பி. உணவு விநியோகிப்பாளர்கள் நிறுவனம் தங்களுடைய வளர்ச்சித்திட்டங்களுக்காக வாங்கியபோது, அத்தோட்டத்தில் 1945-இல் அமையப்பெற்ற ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயத்திற்கு (AG11) நிலத்தை ஒதுக்கியுள்ளனர். நிலத்தைக் கோயிலுக்குக் கையகப்படுத்தும் வேலைகள் செயல்பாட்டில் உள்ளது.

நிலத்தின் உரிமையாளர்களுக்குச் சொந்தமான இடத்தில் அமைந்துள்ள கோயில்கள்: டூரியான் துங்கால் பகுதியில் 1998-ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட ஸ்ரீ அஷ்ட தச பூஜ காளியம்மன் ஆலயம் (AG2), தற்போது 2019-ஆம் ஆண்டில் அதிகாரப்பூர்வமாகக் கோயிலுக்கு அதன் நிலம் ஒப்படைக்கப்பட்டுள்ளது; அலோர்காஜா, கானுன் பகுதியில் 1940-ஆம் ஆண்டில் உருவான விநாயகர் புதுக்கிராமத்தில் உள்ள ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் (AG40); மற்றும், அலோர்காஜா கானுன் பகுதியில் உள்ள விநாயகர் தோட்டத்தில் 1965-இல் உருவான தேவி ஸ்ரீ மகா அசா மலை முனியப்பன் ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் (AG45) போன்றவை ஆகும்.

வீட்டு வளாகத்தில் அமைக்கப்பட்ட கோயில்கள்: டூரியான் துங்கால், புக்கிட் தம்பூன் குடியிருப்புப் பகுதியில் 1994-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்ட ஸ்ரீ வீர பத்ர காளி ஆலயம் (AG5); டூரியான் துங்கால், கங்சா, பகுதியில் லோரோங் பிலால் அர்ஷத் பகுதியில் 2006-இல் துவக்கப்பட்ட ஸ்ரீ மகா பத்ர காளியம்மன்

ஆலயம் (AG8); அலோர் காஜா பாயா டத்தோ மலிவு வீடமைப்பு குடியிருப்புப் பகுதியில், ஃபைரூஸ் சாலையில் 2010-இல் எழுந்த ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் (AG30); அலோர்காஜா, ஸ்ரீ லெண்டு மலிவு வீடு குடியிருப்பில் 1997-ஆம் ஆண்டு உருவான ஓம் ஸ்ரீ சடா முடி ஆலயம் (AG47); மற்றும், புலாவ் செபாங், கம்போங் புக்கிட் பகுதியில் 1945-இல் உருவான ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (AG48) போன்றவையகும்.

பல கோயில்கள் அரசு நிலத்திலும் அமைந்துள்ளன. எடுத்துக்காட்டாக, ரெம்பியாவின் பத்து பெலாகா பகுதியில் 1984-இல் உருவான ஸ்ரீ வட பத்ர காளியம்மன் ஆலயம் (AG44) அமைந்துள்ள இடம் ஒரு காலத்தில் டிராகன் தோட்டப் பகுதியாக இருந்தது. இன்று அது தேசிய எரிசக்தி நிறுவனத்திற்குச் (TNB) சொந்தமாக உள்ளது. அதோடு, உயர் மின்னழுத்த மின்சாரக் கம்பிகளின் கீழ் அமைந்திருப்பதால் கோயிலை அங்கிருந்து நகர்த்த வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளது; மாச்சாப் உம்பு, தாமான் மாவார் ஜெயா குடியிருப்புப் பகுதியில் 2001-ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட ஸ்ரீ வீர காளியம்மன் ஆலயம் (AG46) அரசாங்க நிலத்தில் இருப்பதால் இதற்கும் கோயிலை அங்கிருந்து அகற்ற வேண்டுகோள் விடுக்கப்பட்டுள்ளது;

பூலாங் செபாங், இரயில்வே வளாகத்தில் 1916-இல் இரயில்வே (KTM) தொழிலாளர்களால் அமைக்கப்பட்ட ஸ்ரீ வைத்தீஸ்வரர் - தையல் நாயகி அம்மன் ஆலயம் (AG35) இரயில்வே துறைக்குச் சொந்தமான நிலத்தில் உள்ளது. கோயில் உள்ள நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. கம்போங் பெங்களான் பழைய இரயில்வே சாலையில் 1931-ஆம் ஆண்டு லியான் ஹுவாட் தோட்டத்தில் உருவாகி இந்த நிலத்திற்கு மாறிய AG56 ஸ்ரீ மாரியம்மன் ஆலயமும், 2000-ஆம் ஆண்டு அமைந்த (AG52) ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயமும், முன்பு இரயில்வே துறையின் கீழிருந்த (KTM) நிலமாக இருந்தபோதும் தற்பொழுது மலாக்கா மாநில அரசின் கீழ் உள்ள நிலத்தில் அமைந்துள்ளன. அதே நேரத்தில் 2003-ஆம் ஆண்டு லெண்டு தோட்டத்தின் ஒதுக்குப் புறத்தில் உருவாக்கப்பட்ட ஸ்ரீ கருப்பண்ணசாமி ஆலயம் (AG54) அரசாங்க நிலத்தில் இருப்பதாகக் கருதப்படுகிறது.

ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயத்தை (AG15) மஸ்ஜித் தானா பகுதியில் அமைக்க 2012-இல் பதிவு செய்யப்பட்டது. இதற்கு முன்னர் வாக்குறுதியளிக்கப்பட்ட நிலம் சர்ச்சைக்குள்ளானதால் இதுவரை கட்டடம் ஏதும் எழுப்பப்படவில்லை. 2020-ஆம் ஆண்டில்தான் 1716 எண் கொண்ட லாட், தாமான் ஹார்மோனி குடியிருப்புப் பகுதியில் நிலம் பெறப்பட்டுள்ளது. மற்றும், அதன் நிலப்பட்டா பெறுவதற்கான சட்டச் செயல்முறைகள் தற்போது நடைபெற்று வருகின்றன. அனைத்து ஒப்புதல்களும் பெற்ற பின்னரே கோயில் கட்டும் திருப்பணிகள் ஆரம்பிக்கப்படும்.

இந்த ஆய்வில், இந்த அலோர் காஜா மாவட்டத்தில் வாழ்ந்த பெரும்பாலான இந்துக்கள் தோட்டங்களில் பணி புரிந்ததால், அதிகமான கோயில்களைத் தோட்டப்புறங்களில் காணலாம் - அதே நேரத்தில் நகரங்களில் உள்ள கோயில்கள் அரசுத் துறைகளில் பணிபுரிந்த தொழிலாளர்கள் மற்றும், அதிகாரிகளால் உருவாக்கப்பட்டன.

இருப்பினும், ஜாசின் மாவட்டத்தைப் போலவே, இந்துச் சமயத்தைச் சார்ந்த குடும்பங்கள் மற்றத் துறைகளில் வேலை தேடி இடம் பெயர்ந்தது மற்றும், புதிய வீடமைப்புத் திட்டங்கள் ஆங்காங்கே உருவானபோது சொந்தமாக வீடுகள் வாங்கக்கூடிய வாய்ப்பு போன்றவை குறிப்பிடத் தக்க தாக்கங்களை உண்டு பண்ணியுள்ளது. இதன் விளைவு, முன்பு தோட்டப்புறங்களில் உள்ள கோயில்களுக்கு அருகில் வசிக்கும் இந்துக்கள் இன்று குறைந்து வருகின்றனர். அதோடு, தங்கள் தோட்டங்களில் வேலை செய்யாத எவரையும் கோயில்களை நிர்வகிக்கும் குழுவில் இடம்பெறக்கூடாது எனும் நிபந்தனை, வெளியாட்கள் மீது கூடுதல் நிபந்தனைகளை விதிப்பது போன்ற தோட்ட உரிமையாளர்களின் கொள்கை மிகவும் கறாராக உள்ளது - மேலும், இந்துத் தொழிலாளர்கள் இல்லாத பெரும்பாலான தோட்டங்களில் கோயில்களின் எதிர்காலம் ஒரு கேள்விக்குறியாகவே உள்ளது.

## கோயில்கள் உருவான திகதி

இந்தத் தகவல்கள் எந்தவொரு ஆவணத்திலும் இருந்து பெறப்பட்டவை அன்று. கோயில் நிர்வாகத்தினரின் நினைவிலிருந்தே இவை அனைத்துதையும் பெற்றோம். இந்தக் கோயில்களில் பெரும்பாலானவற்றில், கோயில் நிர்வாகத்தினரின் தொடர்ச்சி இருக்கிறது. மேலும், கோயிலில் வழிபடும் தங்கள் சொந்தக் குடும்பங்களில் தலைமுறையினருடன் கோயிலின் தேதியை இணைக்க முடிகிறது. ரப்பர் தோட்டங்களில் இது குறிப்பாக உண்மை, ஏனெனில், தோட்டங்களில் அமைந்துள்ள குடும்பங்கள் பல தலைமுறைகளாகத் தோட்டத்தில் வாழ்ந்து வருகின்றனர். தொழிலாளர்களின் பிள்ளைகள் தொழிலாளர்களாக

மாறுவதோடு தொடர்ந்து தங்கள் குடும்பம் தங்குவதற்கு வீடு கிடைப்பதை இவ்வகையில் உறுதிப்படுத்திக் கொண்டுவந்துள்ளனர்.

நாடு சுதந்திரம் பெற்ற பின்னர் தேசியக் கல்வி முறை நடைமுறைக்கு வந்தபோதுதான் இந்த வட்டம் துண்டிக்கப்பட்டது. மேலும், இடைநிலைக் கல்வி மற்றும், அதற்கு மேற்பட்ட கல்வித் தகுதியைப்பெற்ற தொழிலாளர்களின் பிள்ளைகள் இந்தத் தோட்டங்களிலிருந்து வெளியேறத் தொடங்கினர். எவ்வாறாயினும், 1973-ஆம் ஆண்டின் முராட் அறிக்கை அல்லது மாணவர்கள் பள்ளியை இடையில் கைவிடல் சம்பந்தமான அறிக்கையில் காணும் புள்ளி விவரங்களின்படி படிப்பை முடிக்காமல் கைவிடும் மாணவர்களில் தோட்டப்புறத்திலிருந்த தமிழ்ப்பள்ளிகளிலிருந்து வரக்கூடிய மாணவர்களின் சதவிகிதமே அதிகம் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. இடை நிலைப் பள்ளியில் நுழைவதற்கு முன்பாகவோ, அல்லது 3-ஆம் படிவம் மற்றும், 5-ஆம் படிவம் தேர்வுகளின் நடுப்பகுதியில் கல்வியை இடையில் கைவிடும் நிலை அதிகம் இருந்தது. இவர்களில் பெரும்பாலோர் சுற்றி இருக்கின்ற தோட்டப்புறங்களின் இந்துக் குடும்பத்தினர்களைச் சார்ந்தவராக இருந்ததால், அங்கேயே தொடர்ந்து வாழ்ந்து வந்துள்ளனர். இவர்கள்தான் இந்து ஆலயங்களை நிர்வகிக்கின்றனர். வெகு அரிதாகவே வெளியாட்கள் அல்லது புதியவர்கள் இதில் கலந்துகொள்கின்றனர்.

சுதந்திரத்திற்குப் பிறகு பல்லாண்டுக் காலமாக, கல்வியில் வெற்றிபெறும், மற்றும், நகரங்களில் வேலை தேடும் தோட்டத் தொழிலாளர்களின் பிள்ளைகள் ஏராளமாக இல்லை. இந்தச் சூழ்நிலை தோட்டங்களில் பெரும்பாலான இந்துக் குடும்பங்களைத் தொடர்ச்சியான வறுமை வட்டத்திற்குள் புகுத்தி, அவர்களைத் தோட்டத்திற்குள்ளேயே வைத்திருக்கச் செய்தது. ரப்பர் மரங்களுக்குப் பதிலாகச் செம்பனை மரங்களை நடவு செய்தபோது, மற்றும், பல தோட்டங்கள் பெருந்தோட்ட நிறுவனங்களான சைம் டார்பி, ஐ.ஓ.ஐ., மற்றும், கெந்திங் பிளான்டேஷன்ஸ் ஆகியவற்றிற்குச் சொந்தமானபோது, இந்துச் சமயத் தொழிலாளர்களைத் தங்கள் தோட்டங்களில் தக்கவைத்துக்கொள்வதை விட வெளிநாட்டுத் தொழிலாளர்களை ஏற்றுக்கொள்வதை இந்தப் புதிய உரிமையாளர்கள் விரும்பினர். இதனால், இந்து-தமிழ்த் தொழிலாளர்களின் பெரும்பாலான குடும்பங்கள் இத்தோட்டங்களை விட்டு வெளியேற வேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டார்கள்.

இந்த மாற்றம் பரம்பரை பரம்பரையாகத் தோட்டத்தில் வாழும் சூழ்நிலையைத் தகர்த்ததோடு பெரும்பாலான குடும்பங்கள் தங்களின் வாழ்க்கை பிழைப்பிற்காகத் தோட்டங்களை விட்டு வெளியே வர வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாக்கப்பட்டனர். இவர்களது வாழ்வில் பூர்வீகமாகக் கருதப்பட்ட தோட்ட வாழ்க்கைமுறை துண்டிக்கப்பட்டதன் விளைவு, இவர்களது இன்றைய வாழ்க்கையில் பல்வேறு தாக்கங்களை ஏற்படுத்தியதை இன்றும் நாம் காணலாம்.

**அட்டவணை 9 : மலாக்காவில் கோயில்கள் உருவான ஆண்டு (ஏறத்தாழ)**

| ஆண்டு | மத்திய மலாக்கா | | ஜாசின் | | அலோர் காஜா | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| | கோயில் | மொ | கோயில் | மொ | கோயில் | மொ | |
| 1800-க்கு முன்பு | 2,10,11 | 3 | | 0 | | 0 | 3 |
| 1801 – 1850 | 3, 9 | 2 | | 0 | | 0 | 2 |
| 1851 – 1899 | 1, 4, 5, 6, 7, 8, 35, 38, 39 | 9 | 8, 9, 10, 22, 35, 39 | 6 | 6,31,32 | 3 | 18 |
| 1900 – 1925 | 15, 24, 26, 28, 43 | 5 | 2, 3, 6, 7, 11, 13, 17, 18, 23, 28 | 10 | 7, 9, 12, 14, 16, 20, 24, 29, 35, 36, 37, 38, 39, 41, 51, 53 | 16 | 31 |
| 1926 – 1940 | 13, 20, 23, 30, 32, 33, 37, 40, 41, 42 | 10 | 1, 4, 5, 12, 14, 16, 42, 46 | 8 | 3, 13, 17, 21, 23, 25, 27, 40, 42, 43, 49, 50, 56 | 13 | 31 |
| 1941 – 1957 | 17, 36 | 2 | 15, 30, 31, 33, 38, 41, 44 | 7 | 1, 10, 11, 26, 28, 48, 55 | 7 | 16 |

| 1958 – 1970 | 14, 16, 19, 22, 34 | 5 | 19, 21, 24, 32, 34, 36, 43, 45 | 8 | 4, 18, 19, 33, 44, 45 | 6 | 19 |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 – 2000 | 12, 25, 29, 31 | 4 | 20, 25, 26, 27, 29, 37, 40 | 7 | 2, 5, 22, 34, 47, 52 | 6 | 17 |
| 2001 – 2018 | 18, 21, 27, 44 | 4 | | 0 | 8, 15, 30, 46, 54 | 5 | 9 |
| பகுதி | 44 | | 46 | | 56 | | 146 |

## 1899-ஆம் ஆண்டுக்கு முன்னர் எழுந்தக் கோயில்கள்

அட்டவணை 9-ஐக் காணும்போது மலாக்கா செட்டி சமூகத்தினரின் கோயில்கள் மலாக்காவில் மிகப் பழமையானவை என்பதை அறியமுடிகிறது. மத்திய மலாக்கா மாவட்டத்தில் 1800-ஆம் ஆண்டுக்கு முன்னர் மூன்று கோயில்கள் மட்டுமே உருவாக்கப்பட்டு இருந்தன. பிறகு 1850-ஆம் ஆண்டு வரை, செட்டி கிராமத்தில் மேலும், இரு கோயில்கள் கட்டப்பட்டன. அவை இன்றும் உள்ளன.

மலாக்கா செட்டி சமூகத்தைப் பொறுத்தவரை, மலாக்கா சுல்தான்களின் ஆட்சிக் காலத்தில் இருந்தே இந்தச் சமூகம் இருந்து வருவதால் பல வழிபாட்டுத் தலங்களை அமைத்திருக்க வேண்டும். எனினும், தொடக்கக் காலக் கோயில்கள் தற்பொழுது இல்லாமல் போனதற்குக் காரணங்கள் அவர்கள் கட்டிய கோயில்கள் நிரந்தரமற்றதாக இருந்திருக்கலாம் அல்லது போர்த்துகீசிய, டச்சு மற்றும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் நிர்வாகத்தைத் தங்களுக்குக் கீழ் கொண்டுவந்தபோது மலாக்காவில் ஏற்பட்ட நிர்வாக மாற்றம் காரணமாக அங்குள்ள கோயில்கள் இடிக்கப்பட்டு இருக்கலாம். மேற்கத்திய சக்திகள் மலாக்கா நிர்வாகத்தைக் கையிலெடுத்துக் கொண்டிருந்த சமயத்தில் குறிப்பாகக் கிறிஸ்தவ சமயத்திற்கு முன்னுரிமை கொடுக்கப்பட்டதால், கிட்டதட்ட அனைத்து உள்ளூர் அடையாளங்களாக இருந்த அரண்மனைகள் மற்றும், உள்ளூர் வழிபாட்டுத் தலங்கள் போன்றவை இடிக்கப்பட்டன. துரதிர்ஷ்டவசமாகப் பதினெட்டாம் நூற்றாண்டிற்கு முந்தைய வழிபாட்டுத் தலங்கள் குறித்த வரலாற்றுப் பதிவுகள் எதுவும் இல்லை. குறிப்பாக, இந்தச் சமூகமே இதனைப் பற்றிய பதிவை வைத்திருக்கவில்லை. இந்தச் செட்டி சமூகம் வெவ்வேறு சாதிகளாகப் பிரிந்து இருந்ததால், ஒவ்வொரு பிரிவினரும் கடந்த காலங்களில் வழிபடுவதற்காக ஒரு சிறிய அல்லது தற்காலிக வழிபாட்டு இடங்களை அமைத்திருந்தனர். மேலும், இந்த மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டபோதுதான் அவர்களால் உருவாக்கப்பட்ட கோயில்கள் இன்றும் பாரம்பரியமாக உள்ளன. இருப்பினும், தற்பொழுது அவற்றுள் 4 கோயில்கள் மட்டுமே (MT2, MT3, MT4 மற்றும், MT5) திடமான கட்டிடங்களைக் கொண்ட கோயில்களாகக் கருத முடியும். இந்தச் சமூக நிர்வாகத்தின் கீழ் உள்ள மற்றவை சிறிய ஆலயங்கள் எனக் கருதலாம். தெய்வ வழிபாட்டுத் தலங்கள் அனைத்தையும் கோயில்களாகக் கருதுவதால், கோயில் கட்டிடங்கள் சிறியது அல்லது பெரியது போன்ற அளவு வித்தியாசங்கள் இந்துச் சமயத்தில் இல்லை.

1851 மற்றும், 1899-ஆம் ஆண்டு காலக்கட்டங்களில் மத்திய மலாக்கா மாவட்டத்தில் 9 கோயில்களும், ஜாசினில் 6 கோயில்களும், அலோர்காஜாவில் 3 கோயில்களும் ஆக மொத்தம் 18 இந்துக் கோயில்கள் தொடங்கப்பட்டு, இன்றும் உள்ளன. அவற்றில் 7 கோயில்கள் மலாக்கா செட்டிச் சமூகத்துடன் தொடர்புடையன (MT4, MT5, MT6, MT7, MT8, MT35, MT38). மற்றொன்று, மத்திய மலாக்காவில் செங் பகுதியில் உள்ள நாட்டுக்கோட்டை செட்டியார் (MT1) சமூகத்தால் நிறுவப்பட்ட கோயில்; அதோடு, செங் ஜெலுத்தோங் தோட்டத்தில் உருவான MT39 கோயில் ஆகியன ஆகும். அலோர்காஜா மாவட்டத்தில் லெசோங் பத்து, மலாக்கா பீண்டா தோட்டத்தில் உருவான கோயில் (AG32), மற்றொன்று மாச்சாப் தோட்டத்தில் உள்ள கோயில் (AG31). மேலும், கெமுனிங் குரு தோட்டத்தில் நிறுவப்பட்ட AG6 கோயில் போன்றவை இப்பிரிவில் அடங்கும். ஜாசின் மாவட்டத்தில் இதே காலக்கட்டத்தில் உருவான கோயில்கள்: டைமண்ட் ஜூபிளி தோட்டத்தில் உள்ள கோயில் (J8), பழைய ஜாசின் தோட்டத்தின், இன்றைய தாமான் மாஜூ கோயில் (J9), ஜாசின் பட்டணத்தில் உள்ள கோயில் (J10), செர்க்காம் தோட்டத்தில் உள்ள கோயில் (J22), கெம்பாஸ் (டேவோன்) தோட்டத்தில் உள்ள கோயில் (J35), மற்றும், ரிம் செண்டராவாசே கோயில் (J39) போன்றவை இந்தப் பிரிவில் அடங்கும்.

1899-ஆம் ஆண்டுக்கு முன்னர் கட்டப்பட்ட 23 கோயில்கள் மலாக்கா மாநிலத்தில் இன்னும் உள்ளன. அவற்றில் பெரும்பாலானவை, மலாக்கா செட்டி மக்களுடன் தொடர்புடையவை. அதாவது, 12 கோயில்கள், நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சமூகத்திற்குத் தொடர்புடையது ஒரு கோயில். மற்ற 9 கோயில்கள்

ரப்பர் தோட்டப்புறங்களிலும் ஒரு கோயில் பட்டணத்தில் இன்றும் உள்ளன. ஆரம்பத்தில் தோட்டங்கள் திறக்கப்பட்டபோது, அங்கு வேலை செய்யச் சென்றத் தொழிலாளர்கள் பல தற்காலிக வழிபாட்டுத் தலங்களை உருவாக்கி இருக்கலாம். ஆனால், ஆய்வு செய்த சமயத்தில் தொடர்ந்து பராமரிக்கப்பட்டு வந்த கோயில்கள் மட்டுமே இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 1900 மற்றும் 1925-ஆம் ஆண்டுகளுக்கு இடையில் உருவாக்கப்பட்ட கோயில்கள்

1900 முதல் 1925-ஆம் ஆண்டுகளுக்கு இடையில் இம்மாநிலத்தில் 31 கோயில்கள் எழுப்பப்பட்டன. ஏனெனில், இந்தக் காலக்கட்டத்தில்தான் அதிகமான இந்துத் தொழிலாளர்கள் மலாக்கா மாநிலத்திற்குக் கொண்டு வரப்பட்டனர். MT15 கோயில் (புக்கிட் கஜாங் தோட்டம்); MT24 (தஞ்சோங் மிஞ்ஞா); MT26 (பாயா ரும்புட், பெர்த்தாம் தோட்டம்); பாயா ரும்புட் ஜெலாவை MT28 கோயில் மற்றும், MT43 (புக்கிட் ரம்பாய், தஞ்சோங் மிஞ்ஞா), போன்றவை மத்திய மலாக்கா மாவட்டத்தில் உள்ள 5 கோயில்கள் ஆகும். சிம்பாங் காடேக்கில் AG7 கோயில்; சுங்கை பாரு தோட்டத்தில் உள்ள AG9 கோயில்; ராமுவான் சீனா பெசார் யு.எம்.பி. தோட்டத்தில் உள்ள AG12 கோயில், கோல சுங்கை பாரு, புக்கிட் செம்படாக் தோட்டத்தின் AG14 கோயில்; தெபோங் தோட்டத்தின் AG16 கோயில்; தெபோங் கத்ரி AG20 கோயில்; லுபோக் சீனா கெம்பாஸ் தோட்டத்தில் உள்ள AG24 கோயில்; எண்டாவ்-ரெம்பியா தோட்டத்தின் AG29 கோயில்; புலாவ் செபாங் இரயில் நிலையம் அருகே உள்ள AG35 கோயில்; காடேக் தோட்டத்தில் உள்ள AG36 கோயில்; தெபோலாங் தோட்டத்தில் உள்ள AG37 கோயில்; பெகோ தோட்டத்தில் உள்ள AG38 கோயில்; ரெம்பியாவில் உள்ள AG39 கோயில்; கெமுனிங் தோட்டத்தின் AG41 கோயில்; மஸ்ஜித் தானா, ஆயர் மோலெக் பகுதியில் உள்ள AG51 கோயில்; மற்றும், லெண்டு தோட்டத்தின் AG53 கோயில் ஆகிய 16 கோயில்கள் அலோர் காஜா மாவட்டத்தில் உள்ளன.

ஜாசின் மாவட்டத்தில் ஜாசின் ஹோம் பிரிவின் ஆயர் பானாஸ் தோட்டத்தில் உருவான J2 கோயில், புக்கிட் அசகான் தோட்டத்தில் J3 கோயில், ஜாசின் லாலாங் தோட்டத்தில் J6 கோயில், ஜாசின் ரிம் தோட்டத்தில் உள்ள J7 கோயில், ஜாசின் லாலாங், புக்கிட் செர்மின் தோட்டத்தின் J11 கோயில், செர்க்காம் தோட்டத்தில் உள்ள J13 கோயில், கெமெண்டோர், லவ் லியோங் தோட்டத்தில் உள்ள J17 கோயில், டைமண்ட் ஜுப்ளீ தோட்டத்தில் உள்ள J18 கோயில், மெர்லிமாவ் தோட்டத்தில் உள்ள J23 கோயில் மற்றும், கெசாங் பாஜா பகுதியில் உள்ள J28 கோயில் ஆகிய 10 கோயில்களாகும்.

ஆகவே, இக்காலக்கட்டத்தில் ரப்பர் தோட்டங்களில் மட்டுமே புதிய கோயில்கள் உருவாக்கப்பட்டு இருந்தன.

## 1926 முதல் 1940-ஆம் ஆண்டுகளுக்கிடையில் உருவான கோயில்கள்

கோயில்களை அமைக்கும் முயற்சிகள் 1926 முதல் 1940-ஆம் ஆண்டுகளுக்கிடையில் தொடர்ந்தன. இச்சமயத்தில் 31 கோயில்கள் எழுந்தன. 1900 -1940-ஆம் ஆண்டுகளுக்கிடையில் இன்னும் அதிகமான ரப்பர் தோட்டங்களைத் திறக்க அதிகமான தமிழ்த் தொழிலாளர்கள் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருந்த மலாயாவுக்குக் கொண்டுவரப்பட்டனர் என்று புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன.

மத்திய மலாக்கா மாவட்டத்தில் 1926-1940-ஆம் ஆண்டுகளுக்கிடையில் தொடங்கப்பட்ட 10 கோயில்கள் இன்னும் உள்ளன. அதாவது, பாயா ரும்புட் பகுதியில் அமைந்த MT13 கோயில், குருபோங், ராமன் செட்டியார் (லாம் ஜுு) தோட்டத்தில் அமைந்த MT20 கோயில் மற்றும், MT23 கோயில்; செங், கெந்திங் தோட்டத்தின் MT30 கோயில்; குருபோங் தானா மேரா பெர்த்தாம் தோட்டத்தின் MT32 கோயில்; புக்கிட் பெருவாங்கில் உள்ள MT33 கோயில், பெங்களான் ராமா பந்தாயில் உள்ள MT37 கோயில், ஆயர் மோலெக்கில் உள்ள MT40 கோயில்; யூனியன் பிரிவு, டைமண்ட் ஜுபிளி தோட்டத்தின் MT41 கோயில் மற்றும், தியாங் டுவா, லியோங் வாட் ஹின் தோட்டத்தில் உள்ள MT42 கோயில்; போன்றவை ஆகும்.

இந்தக் காலக்கட்டத்தில் ஜாசினில் 8 கோயில்கள் உருவாகின. அதாவது, ஜாசின் செலாண்டாரில் உள்ள J1 கோயில், பெம்பான் ஆயர் பானாஸ் தோட்டத்தில் J4 கோயில், பத்தாங் மலாக்கா J5 கோயில், பத்து லாங் பிரிவு, ஜாசின் லாலாங் தோட்டத்தில் J12 கோயில், தெபோங் தோட்டத்தில் J14 கோயில்; செர்க்காம் தோட்டத்தில் (கெமண்டோர்) J16 கோயில்; சிம்பாங் கெராயோங் J42 கோயில்; மற்றும், பத்தாங் மலாக்காவின் கெந்திங் தோட்டத்தில் உள்ள J46 கோயில் ஆகும்.

இந்தக் காலக்கட்டத்தில் அலோர் காஜா மாவட்டத்தில் 13 கோயில்கள் உருவெடுத்தன. பெங்களானில் AG3 கோயில்; மஸ்ஜிட் தானா சுங்கை பாரு தோட்டத்தில் உள்ள AG13 கோயில், தெபோங் கெமுனிங் தோட்டத்தின் AG17 கோயில்; நானிங், காடேக் தோட்டத்தின் AG21 கோயில்; பெகோ தோட்டத்தின் AG23 கோயில், பாரிட் மெலனா பிரிவு பெர்த்தாம் தோட்டத்தின் AG25 கோயில்; ரெம்பியா, லெண்டு சாலையில் உள்ள AG27 கோயில்; காணுன் விநாயகர் தோட்டத்தின் AG40 கோயில்; மற்றும், லெண்டு கெச்சில் தோட்டத்தின் AG42 மற்றும், AG43 கோயில்கள்; புக்கிட் பாச்சாங் பிரிவின் கெம்பாஸ் தோட்டத்தில் AG49 கோயில்; லெண்டு சான் தோட்டத்தில் உள்ள AG50 கோயில், மற்றும், ஜாலான் கரேத்தா அப்பி லாமா, பெங்காளானில் அமைந்துள்ள AG 56 ஸ்ரீமாரியம்மன் ஆலயம் போன்றவை ஆகும்.

## 1941 முதல் 1957-ஆம் ஆண்டுகளுக்கிடையில் தொடங்கப்பட்ட கோயில்கள்

1941 முதல் 1957-ஆம் ஆண்டுகளுக்கிடையில் இரண்டாம் உலகப் போர், ஜப்பானிய ஆக்கிரமிப்பு, கம்யூனிச எதிர்ப்பு நடவடிக்கைகள் மற்றும், அனைத்து மேற்கத்திய காலனிகளிலும் சுதந்திரம் கோருவதற்கான போராட்டங்கள் ஆகியவற்றால் இந்தியாவிலிருந்து தொழிலாளார்களைக் கொண்டுவருவது கிட்டத்தட்ட நிறுத்தப்பட்டது. அச்சமயத்தில் இந்திய அரசும் அங்கிருந்து தொழிலாளர்களைத் தருவிப்பதற்குத் தடை விதித்தது. இருப்பினும், இந்தக் காலக்கட்டத்தில் இந்துக்களில் சிலர் தமிழ்நாட்டிலிருந்து தாமாகவே மலாக்காவுக்கு வந்தனர். ஆனால், அவர்கள் ஏற்கனவே இந்துக்கள் வாழ்ந்த இடங்களிலும் நகர்ப்புறங்களிலும் குடியேறினர்.

இருப்பினும், இங்குள்ள இந்துச் சமூகம் இந்தக் காலக்கட்டத்தில் இன்னும் 16 இந்துக் கோயில்களைக் கட்டியுள்ளது. மலாக்காவின் மத்திய மாவட்டத்தில் 2 கோயில்கள் அதாவது, மலாக்கா பொது மருத்துவமனையின் பணியாளர்கள் குடியிருப்புப் பகுதியில் உள்ள MT17 கோயில், மற்றும், மலாக்கா புத்ரி ஹாங் லி போ பகுதியில் உள்ள MT36 கோயில் ஆகியன.

ஜாசின் மாவட்டத்தில் 7 கோயில்கள் அதாவது, ஜாசின், செலாத்தான் பாரு, கெம்பாஸ் தோட்டத்தில் J15 கோயில், பெம்பான், யூ வாட் ஹின் தோட்டத்தில் J30 கோயில், புக்கிட் அசகான் டி பிரிவு தோட்டத்தில் J31 கோயில், மந்தாய் பிரிவு, ஞாலாஸ் தோட்டத்தில் கோயில் J33, சிம்பாங் கெராயோங்கில் J38 கோயில், லஞ்சாங் பிரிவின் மெர்லிமாவ் தோட்டத்தில் J41 கோயில் மற்றும், செலாண்டார், போண்டோ கெம்பாஸ் J44 கோயில் ஆகியன உருவாகின.

இந்தக் காலக்கட்டத்தில் அலோர்காஜா மாவட்டத்தில் 7 கோயில்கள் கட்டப்பட்டன, டுரியான் துங்கால் பெர்த்தாம் தோட்டத்தில் உள்ள AG1 கோயில், மஸ்ஜித் தானா, சுங்கை பாரு தோட்டத்தில் AG10 கோயில், கௌாமாக், லெண்டு தோட்டத்தில் AG11 கோயில், ரெம்பியா, லெண்டு தோட்டத்தில் AG26 கோயில், அலோர் காஜா ஹூத்தான் பெர்ச்சா நியூ குருவில் உள்ள AG28 கோயில், அலோர்காஜா, பெகோ தோட்டத்தில் உள்ள AG48 கோயில் மற்றும், தெபோங் பத்து பெர்காராட் (நம் பீ) தோட்டத்தில் அமைந்துள்ள AG55 கோயில் ஆகியன.

இந்த ஆய்வில் நம் நாட்டின் சுதந்திரத்திற்கு முன்பு மலாக்காவில் கட்டப்பட்ட 101 இந்துக் கோயில்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. இந்த ஆய்வின்போது இந்தக் கோயில்கள் இன்னும் தொடர்ந்து செயல்படுகின்றன என்பதைக் கண்டோம். இந்தக் காலக்கட்டத்தில் கட்டப்பட்ட கோயில்களில், பல்வேறு காரணங்களால் சில கோயில்கள் மறைந்தும் இருக்கலாம். அவற்றுள் தோட்டங்கள் விற்பனை செய்தல், ஒரு கோயிலை நிறுவிய குடும்பங்களின் இடப் பெயர்வு, தொடர்ந்து வழிபட பக்தர்கள் இல்லாதது, போன்ற இன்னும் பல காரணங்களால் கோயில்கள் மறைந்திருக்கலாம்.

## சுதந்திரத்திற்குப் பிறகு

### 1958 - 1970-ஆம் ஆண்டுகளில் உருவான கோயில்கள்

1958-1970-ஆம் ஆண்டுகளுக்கிடையிலான காலம் சுவாராஸ்யமானது, ஏனெனில், இச்சமயத்தில் நாடு முழுவதும் தமிழர் திருநாள் விழாக்கள் நடத்துவதற்குச் சிங்கப்பூரிலிருந்து தமிழ் முரசு தினசரி வழியாகச் சமூக ஆர்வலர் மறைந்த தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்கள் முன்னோடியாகத் திகழ்ந்தார். தமிழ் நாட்டில் ஈ.வே. ராமசாமி அல்லது பெரியார் அவர்களால் தோற்றுவிக்கப்பட்ட திராவிடர் கழக இயக்கத்தினால் உருவான தீவிரமான சிந்தனைப் புரட்சி தமிழ் மக்களிடம் கோயில் மீதிருந்த ஆர்வத்தைக் குறைத்ததோடு, புது சிந்தனைகள் தமிழ் மக்களிடையே விதைக்கப்பட்டது. மேலும், அறிஞர் அண்ணா என்றழைக்கப்பட்ட சி. என். அண்ணாதுரை அவர்களால் உருவாக்கப்பட்ட சமூக-அரசியல் அமைப்பான திராவிட முன்னேற்றக் கழகம் இளைய, அறிவார்ந்த சிறந்தப் பேச்சாளர்களைக் கொண்டதோடு, தமிழ் மொழியில் வெளியிடப்பட்ட பல நூல்களும், இதழ்களும், திரைப்படங்களும் இளைஞர்களிடையே பெரும் தாக்கத்தை உண்டாக்கின. இதற்கு இங்குள்ள தமிழர்களும் விதிவிலக்கல்ல. பல பிரமுகர்கள் மலாக்காவிற்கு உரையாற்றவும் வருகை மேற்கொண்டனர். தமிழ் நாட்டில் வெளியிடப்பட்ட நூல்களும், சஞ்சிகைகளும் இங்கே படிக்க இலகுவாகக் கிடைத்தன. பிராமணர்களுக்குச் சாதகமாக இருக்கும் இந்துச் சமயப் போதனைகளைக் கடைப்பிடிக்காமல் தமிழர்கள் தங்கள் தமிழ்சார்ந்த கலாச்சார நடைமுறைகள் மற்றும், வாழ்க்கை முறைகளைப் பற்றிப் பெருமைகொள்ள வேண்டும்; தமிழ் பண்பாட்டையும் நம்பிக்கைகளையும் இந்துச் சமயம் புறந்தள்ளியது எனும் கருத்துகள் இந்துச் சமயத்தைப் பற்றிய தமிழர்களின் பார்வையை ஓரளவு மாற்றியது எனலாம். இருப்பினும், இந்துச் சமயத்தை நீண்ட காலமாகக் கடைப்பிடித்து வந்த முதியவர் மத்தியிலும் கல்வி அறிவு குறைந்தவர்கள் மத்தியிலும் சமயப் பற்று மிக்கவர்கள் மத்தியிலும், திருமண, ஈமச் சடங்கு போன்ற வைபவங்களின்போதும் இந்துச் சமய நடைமுறைகள் தொடரவே செய்தன.

1958-1970-ஆம் ஆண்டுகளுக்கிடையில் மலாக்கா முழுவதும் 19 கோயில்கள் தோன்றின. மத்திய மலாக்காவில் 5 கோயில்கள் அதாவது, சுங்கை ஊடாங்கில் உள்ள MT14 கோயில்; பத்து பிரண்டாம் ஆற்றின் கரையில் உள்ள MT16 கோயில்; புக்கிட் பெருவாங் MT19 கோயில்; பத்து பிரண்டாம், சோலோக் பங்சாலில் உள்ள MT22 கோயில்; மற்றும், மலாக்காவின் புக்கிட் செரிண்டிட்டில் உள்ள MT34 கோயில் ஆகியவை. இந்தக் கோயில்கள் மத்திய மலாக்கா பகுதியில் உள்ள ரப்பர் தோட்டங்களுக்கு வெளியே உள்ளன. இவை வேலை தேடி நகரத்திற்கு வந்த இந்துக்களால், அவர்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்வதற்காகத் தோட்டங்களிலிருந்து வெளியே வந்து, மத்திய மலாக்காவில் எழுந்த புதியக் குடியிருப்புப் பகுதிகளில் குடியேறியவர்கள் இந்தக் கோயில்கள் உருவாகக் காரணமாக இருந்தனர் எனலாம். சுங்கை ஊடாங் கோயில், சுதந்திரத்திற்குப் பிறகு சுங்கை ஊடாங் இராணுவ முகாமில் இருந்து காமன்வெல்த் வீரர்கள் வெளியேறியதும் அங்குள்ள இந்துச் சமயத்தை சேர்ந்த இராணுவ வீரர்களால் உருவாக்கப்பட்டது.

ஜாசினில், இந்தக் காலக்கட்டத்தில் 8 கோயில்கள் அமைக்கப்பட்டன, அதாவது, கூபா பிரிவின் ஞாலாஸ் தோட்டத்தில் J19 கோயில்; மெர்லிமாவில் உள்ள J21 கோயில்; கம்போங் பாயா பூலோவில் உள்ள J24 கோயில்; ஆயர் தெக்கா பிரிவில் உள்ள புக்கிட் அசாகான் தோட்டத்தில் உள்ள J32 கோயில்; மற்றும், சிம்பாங் கெரயோங்கில் உள்ள J34 கோயில். ஜாசின் கம்போங் இந்தியா J36 கோயில், லஞ்சாங் பிரிவின் மெர்லிமாவ் தோட்டத்தில் அமைந்துள்ள J41 கோயில், செலாண்டார், புக்கிட் செங்கே பகுதியில் இருக்கும் லிம் கோக் வா தோட்டத்தில் உள்ள J45 கோயில் போன்றவை ஆகும். இவற்றுள் 4 கோயில்கள் தோட்டங்களிலும் மற்ற 4 கோயில்கள் ரப்பர் தோட்டங்களுக்கு வெளியேயும் அமைந்துள்ளன.

இதே காலக்கட்டத்தில் அலோர்காஜாவில் 6 கோயில்கள் அமைக்கப்பட்டன, அதாவது, டுரியான் துங்கால் சிங் லியான் தோட்டத்தில் AG4 கோயில்; திபோங்கின் லியோங் வாட் ஹின் தோட்டத்தில் உள்ள AG18 கோயில்; ரெம்பியாவின் ஹோர் எங் லி யுவான் தோட்டத்தில் உள்ள AG19 கோயில்; ரந்தாவ் பாஞ் சாங், லியான் ஹோா தோட்டத்தில் உள்ள AG33 கோயில்; ரெம்பியா, டிராகான் தோட்டத்தில் உள்ள AG44 கோயில், மற்றும், கானூன் விநாயகர் தோட்டத்தில் உள்ள AG45 கோயில் ஆகியன. இந்தக் கோயில்கள் அனைத்தும் ஏற்கனவே கோயில்கள் இல்லாத ரப்பர் தோட்டப்புறப் பகுதிகளில் அமைந்துள்ளன.

## 1971 முதல் 2000-ஆம் ஆண்டுகளுக்கிடையில் உருவான கோயில்கள்

இக்காலகட்டத்தில் மலாக்கா மாநிலம் முழுவதும் மேலும், 17 கோயில்கள் அதிகரித்தன. மத்திய மலாக்காவில் 4 கோயில்கள் மட்டுமே அமைக்கப்பட்டன. ஆயர் மோலேக் தம்பா பாயாயில் உள்ள MT12 கோயில்; தஞ்சோங் மிஞ்ஞா கம்போங் பாருவில் உள்ள MT25 கோயில்; புக்கிட் பெருவாங், தாமான் பூங்கா ராயாவில் அமைந்திருக்கும் MT29 கோயில்; மற்றும், குருபோங் தானா மேராவில் உள்ள MT31 கோயில் ஆகியன ஆகும். இந்தக் காலக்கட்டத்தில் இவற்றுள் எந்தக் கோயிலும் ரப்பர் தோட்டத்தில் அமையவில்லை. இவை, சொந்த நிலம் அல்லது அரசு ஒதுக்கிய நிலத்தில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்தக் காலக்கட்டத்தில் 7 கோயில்கள் ஜாசின் மாவட்டத்தில் உருவாக்கப்பட்டன. அதாவது, அசகான் நகரில் உள்ள J20 கோயில்; தாமான் மெர்லிமாவ் பிஸ்தாரியில் உள்ள J25 கோயில்; மெர்லிமாவ், செலாத்தான் பாரு தோட்டத்தில் உள்ள J26 கோயில்; மெர்லிமாவ், கம்போங் பாயா பூலோவில் உள்ள J27 கோயில்; தாமான் பெம்பான் உத்தாமாவில் உள்ள J29 கோயில்; கெசாங் பாஜாவில் உள்ள J37 கோயில்; மற்றும், கப்பாம் பகுதியில் உள்ள J40 கோயில் ஆகியன. J26 கோயிலைத் தவிர, மற்றவை ரப்பர் தோட்டங்களுக்கு வெளியே உள்ளன. இவை தோட்டங்களிலிருந்து வெளியே கொண்டுவரப்பட்ட கோயில்கள் அல்லது வீடமைப்புத் திட்டங்களுக்கு அருகில் கட்டப்பட்டக் கோயில்கள் ஆகும்.

இதே காலக்கட்டத்தில் அலோர்காஜா மாவட்டத்தில் 6 கோயில்கள் கட்டப்பட்டன. டுரியான் துங்கால் ஆயர் செமுபோக் பகுதியில் உள்ள AG2 கோயில்; டுரியான் துங்கால் புக்கிட் தம்புனில் உள்ள AG5 கோயில்; ஹுத்தான் பெர்ச்சா ஃபெல்டா பெர்ச்சாவில் AG22 கோயில்; அலோர்காஜா, ஸ்ரீபெங்களானில் உள்ள AG34 கோயில்; மலிவு வீடமைப்புத் திட்டமான ஸ்ரீலெண்டுவில் உள்ள AG47 கோயில்; மற்றும், அலோர்காஜா, கம்போங் பெங்களானில் உள்ள AG52 கோயில் ஆகியன. சில கோயில்கள் தோட்டத்திலிருந்து வெளியே மாற்றப்பட்டவை; குடியேறிகளுக்குச் சொந்தக் கோயிலை ஃபெல்டா அமைத்துத் தந்தது. ஆனால், பெரும்பாலானவை தோட்டப்புறங்களுக்கு வெளியே குடியிருப்புப் பகுதிகளில், சொந்த நிலத்தில் அல்லது இந்துக்கள் குடியிருக்கும் வீடமைப்புப் பகுதிகளுக்கு அருகில் அமைந்திருக்கின்றன.

## 2001 முதல் 2018-ஆம் ஆண்டுகளுக்கிடையில் நிறுவப்பட்ட கோயில்கள்

2001-2018-ஆம் ஆண்டுகளுக்கிடையில் மலாக்கா மாநிலத்தில் 9 புதியக் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. மத்திய மலாக்காவில் 4 கோயில்கள் உள்ளன, அதாவது, தாமான் மெர்டேக்கா ஜெயாவில் MT18 கோயில்; குருபோங் தொழில்துறை பகுதியில் MT21 கோயில்; மலாக்காவின் ஆயர் குரோவில் உள்ள MT27 ஸ்ரீ கிருஷ்ணா பலராம் பண்பாட்டு, கலை மையம்; மற்றும், பாயா ரும்புட், கம்போங் சோலோக் ஜெராமில் MT44 ஆகியவை. அனைத்தும் தோட்டங்கள் தொழில்துறை பகுதிகளாக மாறிய போது அல்லது புதிய குடியிருப்புப் பகுதிகளில் உருவானவை.

இந்தக் காலக்கட்டத்தில் ஜாசினில் எந்தக் கோயில்களும் அமைக்கப்படவில்லை. இதற்கிடையில், அலோர்காஜா மாவட்டத்தில், இந்தக் காலக்கட்டத்தில் 5 கோயில்கள் அமைக்கப்பட்டிருப்பது கண்டறியப்பட்டது. டுரியான் துங்கால், கம்போங் கங்சா AG8 கோயில்; மஸ்ஜிட் தானா கட்டிடம் இல்லாமல் பதிவு செய்யப்பட்டுள்ள AG15 கோயில்; அலோர் காஜாவின் பாயா டத்தோ மலிவு குடியிருப்புப் பகுதியில் AG30 கோயில்; மாச்சாப் உம்பு தாமான் மாவார் ஜெயாவில் உள்ள AG46 கோயில்; மற்றும், அலோர்காஜா, லெண்டு தோட்டத்தின் புறப்பகுதில் உள்ள AG54 கோயில் ஆகியன. இச்சமயத்தில் தோட்டங்களில் கோயில் கட்டும் நடைமுறை காணப்படவில்லை. அதே நேரத்தில் கோயிலைத் தோட்டத்திலிருந்து வேறு இடத்திற்கு மாற்ற முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வந்தன.

## கோயில்களைக் குடியிருப்பு வீட்டு வளாகத்தில் கட்டும் போக்கு

எனினும், வசிக்கும் வீட்டு வளாகத்தில் கோயில்களைக் கட்டும் புதியப் போக்கு ஒன்று தற்போது நம் நாட்டில் நிலவுகிறது. மலாயா பல்கலைக்கழகத்தின் இந்திய ஆய்வுத் துறையைச் சேர்ந்த டாக்டர் மணிமாறன் சுப்பிரமணியம் அவர்கள் ‘மலேசிய இந்துக்களிடையே சமய நடைமுறைகளில் வளர்ந்து வரும் ஒரு போக்கு: குடியிருப்பு வீடுகளின் முன் எழுப்பப்படும் சன்னதிகள் பற்றிய ஒரு நிலை நேர் ஆய்வு, ஒரு புதிய நிகழ்வு’

எனும் தலைப்பில் F.R.G.S. திட்டத்தின் (ER018-2013A), மூலம் தயாரித்த ஓர் ஆய்வுக் கட்டுரையில், இந்தப் போக்கு சம்பந்தமான விவரங்கள் மற்றும், இந்த நாட்டின் உள்ளூராட்சி மன்றங்களின் ஒப்புதல் போன்ற விஷயங்களில் எவ்வாறான விளைவுகளை இது ஏற்படுத்துகிறது என்பதும் விவரிக்கப்பட்டுள்ளது.

மலாக்காவில் இந்தப் போக்கு தங்களது குடியிருப்பு வீட்டு வளாகத்தில் கோயில்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்துள்ளது. குறிப்பாக ரப்பர்த் தோட்டங்களிலிருந்து பக்தர்கள் இடம் பெயர்ந்தபோது புதிய குடியிருப்புப் பகுதிகளில் இந்துக் கோயில்கள் இல்லாததால், சில பக்தர்கள் தங்கள் சொந்த வீட்டின் முன்புறம்/ அருகில்/ முற்றத்தில் வழிபாட்டுத் தலத்தை அமைத்தனர். மேலும், தமிழ்நாட்டில் உள்ளது போன்று, குறிப்பாகக் கிராமப்புறங்களில் பின்பற்றப்படும் 'குல தெய்வம்' அல்லது அவர்களது சொந்த வகுப்பினரின் தெய்வத்தை வணங்கும் போக்கு மேலும், இதனை ஊக்கப்படுத்தி வருகிறது. சிலர் தங்கள் வீட்டின் வளாகம் என்பதால் உள்ளாட்சி மன்றத்தின் ஒப்புதல் பெறாமல் பெரிய கட்டுமானங்களை எழுப்பியுள்ளனர்.

இது போன்ற கோயில்களில் சில ஏற்கனவே உள்ள விதிமுறைகளை மீறியதற்காக உள்ளாட்சி மன்றத்தினால் இடிக்கப்பட்டுள்ளன. உதாரணத்திற்கு, ஜாசின், தாமான் மாஜு, மாவார் சாலையில் 5753 எண் கொண்ட வீட்டின் முன்புறம் அமைந்திருந்த ஸ்ரீ விஷ்ணு துர்கையம்மன் திருத்தலம் எனும் ஆலயம் 2010-ஆம் ஆண்டில் ஜாசின் நகராட்சி மன்றத்தின் நடவடிக்கையால் உடைக்கப்பட்டது. சங்கங்களின் பதிவகத்தில் இந்தக் கோயில் (பிபிஎம் -020-04-26112013) ஒரு பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டிருந்தது. ஆனால், அது இப்போது செயல்படவில்லை; அதனால், இந்த ஆய்வில் இக்கோயில் சேர்க்கப்படவில்லை.

இருப்பினும், இந்தப் பிரிவின் கீழ் புக்கிட் தம்பூனில் உள்ள AG5; கங்சாவில் AG8; பாயா டத்தோவில் AG30; லெண்டுவில் AG47; தஞ்சோங் மிஞ்ஞா MT25; பாயா ரும்புட்டில் MT44; மற்றும், பத்தாங் மலாக்காவில் J43 போன்ற கோயில்கள் உள்ளன. இந்தப் பிரிவில் இது போன்ற கோயில்களில் பல உள்ளன. இந்தக் கோயில்களில் வெளியார்களை அழைத்து வெளிப்படையாகத் திருவிழாக்களை நடத்துவதில்லை. ஆனால், அவை தங்கள் சொந்தக் குடும்ப உறுப்பினர்கள்-நண்பர்கள் மட்டுமே வழிபடச் சிறப்பாக அமைக்கப்பட்டவையாகும். இது போன்ற கோயில்கள் இந்த ஆய்வில் சேர்க்கப்படவில்லை. அரசு அதிகாரிகளிடமிருந்து உரிய அதிகாரப்பூர்வ அங்கீகாரத்தைப் பெறுவதற்காகச் சிலர் இந்த வகை கோயில்களுக்காகப் பக்தர்கள் சங்கத்தையும் பதிவு செய்துள்ளனர். ஆனால், இந்த வழிபாட்டுத் தலங்கள் தங்கள் சொந்தக் குடும்பங்களின் நலனுக்காக வழிபாடு செய்வதற்கும் ஆடு-சேவல் பலி கொடுப்பதற்கும், பெரும்பாலும் குலதெய்வமாக உருவாக்கப்பட்டவை. இவற்றைப் பொதுக் கோயில்களாகக் கருதவியலாது என்பதால் இந்தக் கோயில்களும் ஆய்வில் சேர்க்கப்படவில்லை.

இந்த ஆய்வின்போது நடத்தப்பட்ட ஓர் அதிகாரப்பூர்வமற்ற விசாரிப்பில், அண்டை அயலாரிடமிருந்து சத்தம், அங்கு நடைபெறும் செயல்கள் அல்லது விரும்பத்தகாதக் கூட்டம், நிகழ்வுகள் மற்றும், சிலையின் வெளியாரை ஈர்க்கும் கட்டமைப்பு போன்ற காரணங்களால் புகார்கள் வரும்போது அமலாக்க அதிகாரிகள் தீர்க்கமாகச் செயல்படுவதாகக் கண்டறியப்பட்டது. இருப்பினும், உண்மையில் இது இந்துக்களுக்காக ஒதுக்கப்பட்ட குடியிருப்பு பகுதிகளில் உருவாக்கப் பட்டிருந்தால், உள்ளூர் அதிகாரிகள் இதனைப் பற்றி அதிகம் கவலைப்படாததோடு விதிகளைக் கண்டிப்புடன் அமல்படுத்துவதில்லை என்பதும் தெரியவந்தது.

மேலும், 2000-ஆம் ஆண்டுகளில் புதிய கோயில்களை உருவாக்க பக்தர்களை உறுப்பினர்களாகக் கொண்ட சங்கங்களைப் பதிவுசெய்யும் முயற்சி இருந்தது. உதாரணமாக, ஸ்ரீ சிவன் ஆலயம் ஒன்றை ஞாலாஸ் பகுதியில் நிறுவுவதற்கான முயற்சி 2002-ஆம் ஆண்டில் நடந்தது. இன்றுவரை பொருத்தமான நிலம் கிடைக்கவில்லை; எனினும், இந்தக் குழு தொடர்ந்து பொருத்தமான இடத்தைத் தேடி வருகிறது; 2013-ஆம் ஆண்டில் ஆயர் குரோவில் உள்ள ஸ்ரீ வீர சிவா கோயிலின் வழிபாட்டாளர்களின் பதிவு பொருத்தமான நிலம் பெற இயலாததால் கைவிடப்பட்டது; தொடர்ந்து, கோயிலின் பதிவின் அமைப்புக்குழு கலைக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. இத்தகைய பதிவுபெற்று, நிலமில்லாமல் செயல்படவியலாத கோயில்கள் இந்த ஆய்வில் இடம்பெறவில்லை.

## கோயில் நிலங்களின் உரிமை

இந்த ஆய்வில் சொந்த நிலத்தில் 56 கோயில்கள் மட்டுமே கட்டப்பட்டுள்ளன என்பதை அறிய முடிந்தது. ஆய்வின்போது அவை கோயிலின் பெயரிலோ அல்லது அதன் ஆதரவாளர்களின் பெயரிலோ அல்லது தனிப்பட்ட கோயில் உரிமையாளர்களின் பெயரிலோ, கையகப்படுத்தும் நிலையிலோ இருந்தன. மீதமுள்ள 90 கோயில்கள் மற்றவர்களுக்குச் சொந்தமான நிலங்களில் கட்டப்பட்டுள்ளன; அவற்றில் எம்.சி.எல். எனப்படும் மலாய் வழக்கு நிலங்கள் (6), அரசு நிலம் - டி.ஐ.டி, ஜே.கே.ஆர், உள்ளூராட்சி, மாநில அரசு, மலாக்கா அறங்காப்பகம் (18), ஃபெல்டா, டி.என்.பி, கே.டி.எம் (4) - சைம் டார்பி (23), ஐ.ஓ.ஐ. கெந்திங், கத்ரி, (11), பிறருக்குச் சொந்தமான தோட்ட நிலங்கள் (21), மற்றும், முன்பு தோட்டமாக இருந்த நிலத்தை தங்களுக்கு உரிமையாக்கிய பிற நிறுவனங்கள் (7) ஆகியவற்றின் கீழ் இக்கோயில்கள் உள்ளன.

கோயில் நிர்வாகத்தினரில் சிலர் தங்கள் கோயில்களுக்கு நிலங்களைப் பெற சம்பந்தப்பட்ட தோட்டம் அல்லது நிறுவனங்களின் உரிமையாளர்களை நாடியுள்ளனர் - ஆய்வின்போது இந்தச் செயல்முறை ஆரம்பக் கட்டத்திலேயே இன்னும் இருந்து வந்தது. மற்றும் சிலர் அதன் முயற்சிகளில் பல்வேறு தடைகளை எதிர்நோக்கி இருந்தனர். ஏற்கனவே அங்கீகரிக்கப்பட்ட நிலத்திற்கு நில உரிமையாளர்களுக்கு நிலத்தின் கிரயத்தைச் செலுத்துவதிலும், மாநில அரசு விதிக்கும் பிரிமியங்களைக் கட்டுவதிலும் சிரமங்களை எதிர்நோக்கியுள்ளனர். நன்கொடையாளர்கள், அரசியல்வாதிகள் மற்றும், அரசு மான்யங்கள் போன்ற வெளியார் உதவிகள் இல்லாமல் இந்தக் கோயில்களில் பல, நிலங்களைக் கையகப்படுத்தப் போதுமான நிதி இல்லாத நிலையில் உள்ளன.

இருப்பினும், தோட்டத்தின் முன்னாள் தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்த பெரும்பாலான ஆலயங்கள் சாலையிலிருந்து உள்ளே வெகு தூரத்தில் இருப்பதால் இவற்றைச் சாலையோரங்களில் மாற்றுவதற்கான முயற்சிகளில் பெரும் சிரமத்தை எதிர்நோக்குகின்றன. மேலும், இந்தத் தோட்டங்களில் பலவற்றில், இன்னும் பணிபுரியும் இந்துக்களின் எண்ணிக்கை குறைந்து வருகிறது அல்லது கிட்டத்தட்ட இல்லாதிருக்கிறது. இப்படிப்பட்ட கோயில்களுக்கு முன்னாள் இந்துத் தோட்டத் தொழிலாளர்களின் குடும்ப உறுப்பினர்கள் வருவது தற்போதைய உரிமையாளர்களால் சர்ச்சையாக்கப்படுகின்றது.

ஒரு காலத்தில் தங்கள் குடும்ப உறுப்பினர்கள் பணிபுரிந்த தோட்டங்களுக்கு அருகில் உள்ள வீடமைப்புத் திட்டங்களில் வசிக்கும் முன்னாள் தொழிலாளர்களின் குடும்பங்கள், நில உரிமையாளர்களின் அனுமதியுடன் தங்கள் முன்னோர்கள் வழிபட்ட கோயில்களை அத்தோட்டத்திலேயே தொடர்ந்து நிலையாக வைத்திருக்க விரும்புகின்றனர். அல்லது, நில உரிமையாளர்களின் அனுமதியின்றி தங்கள் கோயில்களைப் பயன்படுத்துவதற்கு ஏதுவாகத் தங்களுடைய வசதிக்காக அவற்றைச் சாலைக்கு அருகில் கொண்டு வரும் முயற்சியினை மேற்கொண்டு வருகின்றனர். இருப்பினும், முன்பு போல் இந்துக்கள் அதிகமாக ஒரே இடத்தில் வசிப்பதற்கான வாய்ப்புகள் தற்பொழுது ஏறக்குறைய இல்லாததால், பெரும்பாலான இந்துக்கள் தற்போதைய தங்கள் குடியிருப்புப் பகுதிகளுக்கும் தாங்கள் வழிபடும் கோயிலுக்கும் இடையில் உள்ள தூரச் சிக்கலை எதிர்நோக்குகின்றனர். மேலும், குடியிருப்புப் பகுதிகளில் கூட இவர்களின் எண்ணிக்கை மற்ற இனத்தவரோடு ஒப்பிடும்போது குறைவுதான். முன்னாள் தோட்டத் தொழிலாளர்களின் பொருளாதாரம் இன்னும் பலவீனமாக இருப்பதால், இந்தக் கோயில்களை நிர்வகிக்கும் குழுக்கள், கோயில்களுக்கு மாற்று இடங்களைக் கண்டுபிடித்துக் கொடுக்கவும் புதியக் கோயில்களைக் கட்டுவதற்கு நிதி உதவி பெறவும் அரசியல்வாதிகள் மற்றும், நன்கொடையாளர்களையே நம்பியுள்ளனர்.

இந்த ஆய்வின்போது, தோட்டங்களில் உள்ள கிட்டத்தட்ட 60 கோயில்களும், அரசு நிலங்களில் அல்லது அரசு நிறுவனங்களில் உள்ள 20 கோயில்களும் தங்கள் கோயில்களுக்கு நிலங்களைப் பெறுவதில் பிரச்சினைகளை எதிர்நோக்கியுள்ளனர். இதைத் தவிர, மற்றக் கோயில்களில் தங்கள் கோயில்களுக்கு நிலம் பெறும் நோக்கம் கொண்ட நிர்வாகக் குழுக்கள் இருப்பதாக இந்த ஆய்வின்போது தெரியவில்லை. மேலும், இந்தக் கோயில்கள் நீண்ட காலம் அதே இடங்களில் நிலைத்திருக்க அதிக வாய்ப்புகள் இல்லை.

**அட்டவணை 10: 2019-ஆம் ஆண்டு மலாக்கா மாநில இந்துக் கோயில்களின் நில உரிமம்**

| நில உரிமம் | மத்திய மலாக்கா | | அலோர் காஜா | | ஜாசின் | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| ஆலயம் / பக்தர்கள் சங்கம்/ அறங்காப்பகம் | 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 14, 17, 19, 22, 24, 27, 38, 39, 40, 43 | 21 | 3, 21, 23, 24, 25, 38, 39, | 7 | 1, 2, 4, 5, 7, 9, 14, 22, 25, 27, 28, 34, | 12 | 40 |
| ஆலய உரிமையாளர் | 25, 44 | 2 | 2, 5, 8, 30, 40, 45, 47, 48 | 8 | 20, 24, 36, 37, 42, 43 | 6 | 16 |
| தனியார் / மலாய் பாரம்பரிய நிலம் | 12, (28), 31,36 | 3 (+1) | 15, 27, 34 | 3 | - | 0 | 6 (+1) |
| அரசு/நீர் வடிகால்துறை/ மராமத்து /உள்ளாட்சி/ இருப்பு/ யாயாசான் | 13, 16, 18, 20, 21, 23, 28, 29, 33, 34, 37 | 11 | 46, 52, 54, 56 | 4 | 10, 29, 40 | 3 | 18 |
| KTM/TNB/FELDA | - | 0 | 22, 35, 44 | 3 | 21 | 1 | 4 |
| சைம் டார்பி தோட்டங்கள் | 15 | 1 | 6, 7, 9, 10, 13, 17, 28, 37, 41, 49, 51 | 11 | 3, 8, 15, 16, 18, 23, 26, 31, 32, 35, 41 | 11 | 23 |
| ஐ ஓ ஐ / கெந்திங் / கத்ரி தோட்டங்கள் | 26, 30 | 2 | 1, 14, 16, 20 | 4 | 6, 11, 12, 13, 46 | 5 | 11 |
| பிற தோட்டங்கள் | 42 (Lim Kok Wah) | 1 | 12 UMB<br>18 Reno pinang<br>19 Ho Lim Yuan<br>26 Ladang Yayasan<br>31 UMB<br>32 RMB<br>33 Lian Ho<br>54 Chong Bee<br>42 Kel. Cina<br>43 Kel.Cina<br>50 Kel.Cina<br>55 Nam Bee | 12 | 17 Lau Leong<br>19 Gubah, Nyalas<br>30 Yew Watt Hing<br>33 Nyalas Rubber<br>38 Gan Bros<br>39 Kim Yun<br>44 Lian Tek<br>45 Lim Kok Wah | 8 | 21 |
| பிற நிறுவனங்கள் | (16) TsuChi<br>32 Poh Bros<br>35 Kenanga Dev<br>(37) Tong Nam<br>40 Paduan Reality | 3 (+2) | 4 Scientex<br>11 CCB Food Supp<br>29 Kel.Ah Chong<br>36 Syt. Eks. Pesona | 4 | Orna Golf | (+1) | 7 (+3) |
| **மொத்தம்** | 44 (+3) | | 56 | | 46 (+1) | | 146 (+4) |

குறிப்பு: (+) கோயில் நில உரிமை - ஒன்றுக்கு மேற்பட்ட உரிமையாளர்கள். அடைப்புக்குள் இருக்கும் எண் இரண்டாவது நில உரிமையாளரைக் குறிக்கிறது.

**அட்டவணை 11 : மலாக்கா மாநிலத்தில் கோயிலை உருவாக்கிய தனியார், அல்லது, பக்தர்களின் சங்கம், அல்லது ஆலய நிலத்தில் உள்ள கோயில்கள்**

| எண் | KOD KUIL | கோயில் | முகவரி | நிலம் |
|---|---|---|---|---|
| 1 | MT1 | ஸ்ரீ சன்னாசி மலை ஆண்டவர் ஆலயம் | Batu 5, Jalan Krubong, Cheng, Melaka | (*Nattukottai Chettiar* Trust) |
| 2 | MT2 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Jalan Tukang Emas, Bandar Melaka | (Melaka *Chitty* Trust) TAXIII 62 15,879 kp |
| 3 | MT3 | ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் ஆலயம் | 119, Kampung *Chitty*, Gajah Berang, 75000 Melaka | TAI 59 53,933 kp |
| 4 | MT4 | ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம் | Kampung *Chitty*, Gajah Berang, 75000 Melaka | TAV 95 |
| 5 | MT5 | ஸ்ரீ அங்கால பரமேஸ்வரி ஆலயம் | Kampung *Chitty*, Gajah Berang, 75000 Melaka | TAV94, 118 |
| 6 | MT6 | ஸ்ரீ கங்கா / லெங்காதாரியம்மன் ஆலயம் | Gajah Berang, 75000 Melaka | (Tong Bee) (masih dalam proses penyerahan) |
| 7 | MT7 | ஸ்ரீ அய்யனார் ஆலயம் | Gajah Berang, 75000 Melaka | TAV 81 |
| 8 | MT8 | ஸ்ரீ காத்தாயீ அம்மன் ஆலயம் | Gajah Berang, 75000 Melaka | TAV100 |
| 9 | MT9 | ஸ்ரீ காளியம்மன் ஆலயம் | Taman Kesidang, Kampung Tujuh, 75000 Bachang, Melaka | TAXXXI 1,500 kp |
| 10<br>11 | MT10<br>MT11 | ஸ்ரீ தர்மராஜா ஆலயம்<br>ஸ்ரீ அம்மன் ஆலயம் | Kampung Tujuh, Gajah Berang, 75000 Melaka | TAV88 8,000 kp |
| 12 | MT12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM14, Tambak Paya, Ayer Molek, 75460 Melaka. | Lot: 1345 Perumal Pillay |
| 13 | MT13 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Taman Paya Rumput Perdana, Paya Rumput, 76450 Melaka | (Dalam Proses Ambilan)10,000 kp |
| 14 | MT14 | ஸ்ரீ வனத்தாண்டவர் ஆலயம் | Batu 12, Sungei Udang, 76300 Melaka | Lot: 14555 32,000 kp |
| 15 | MT17 | ஸ்ரீ சுந்தர மூர்த்தி விநாயகர் ஆலயம் | PBB-5, Jln Bachang Baru, 75350 Melaka | Lot: 9324 10,000 kp |
| 16 | MT19 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | PT 2456, Taman Bukit Melaka, Bukit Beruang, 75350 Melaka | Lot: PT2456 1,858.06 mp |
| 17 | MT22 | ஸ்ரீ சுப்ரமணியர் தேவஸ்தானம் | Lot 88-89, Solok Bangsal, Jalan Keratapi Lama, Batu Berendam, 75350 Melaka | Lot:15600 (PT 12305) 1.734 ekar |

| 18 | MT24 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 1551, Bertam Ulu, Jalan Tanjung Minyak, 75250 Melaka | Lot: 1559<br>½ ekar |
|---|---|---|---|---|
| 19 | MT27 | ஸ்ரீ கிருஷ்ண பலராம் பண்பாட்டு, கலை மையம் | Lot 2679, Jln Sri Rama 3,<br>Taman Muzaffar Syah,<br>75450 Melaka | Lot: 2679<br>15,000 kp |
| 20 | MT38 | ஸ்ரீ சுப்ரமணியர் திரௌபதை அம்மன் ஆலய பரிபாலன சபை | Jalan Gajah Berang,<br>75400 Melaka | Lot: 78 31,234 kp<br>Lot: 107 29,000 kp |
| 21 | MT39 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (குதிரைக் கோயில்) | Lot 1213, Jalan Hujung Padang, Batu 6 ¼ ,Paya Rumput, 76450 Melaka | Lot: 1213<br>20,000 kp |
| 22 | MT40 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Taman Tambak Paya Permai, Melaka | Dalam proses |
| 23. | MT43 | ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம் | PT 1107, Tanjung Minyak, Cheng, 75250 Melaka | Lot: PT1107<br>1 ¼ ekar |
| 24 | J1 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயம் | Jalan Air Kangkung, 77500 Selandar, Melaka. | Lot: 2136<br>19,282 kp |
| 25 | J2 | ஸ்ரீ மகா மாரியம்மன் (மயில்) ஆலயம் | Batu 16, Jasin, 77000 Melaka | Lot: 4692<br>1481 mp |
| 26 | J4 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM 23, Jalan Jasin, Bemban, 77200 Melaka | Lot: 14712<br>4052 mp |
| 27 | J5 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 1192, Jalan Besar Batang Melaka, 77500 Selandar | Lot 1192<br>1365 mp |
| 28 | J7 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Asahan, Bukit Katong, Rim, Jasin, 77000 Melaka | Lot:<br>1 ekar |
| 29 | J9 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Taman Maju, 77000 Jasin, Melaka | Lot 9422 1¼ ekar |
| 30 | J14 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tebong, Batang Melaka Div (Bemban), 77500, Melaka | Lot:<br>1 ½ ekar |
| 31 | J20 | ஸ்ரீ மகா காளியம்மன் முனீஸ்வரர் துவா பெக் கோங் ஆலயம் | Lot 58, Kampung Bukit Panjang, Asahan, 77100 Melaka | Lot 58 PT914<br>1 ekar |
| 32 | J22 | ஸ்ரீ சுப்ரமணியர், ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, 77300 Merlimau, Melaka | Lot: 0.2842 hektar |
| 33 | J24 | தேவ ஸ்ரீ மதுரை வீரன் ஆலயம் | 14, Batu 17, Paya Buluh, 77300 Merlimau, Melaka | Lot:<br>1 ekar |

| 34 | J25 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 17 ½ , Jalan Jasin, Kampung Paya Buluh, Merlimau, Melaka | Lot 18747<br>10,000 kp |
|---|---|---|---|---|
| 35 | J27 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 18 ½ Jalan Kesang, Kesang Pajak, 77000 Jasin, Melaka | 6515 / 6516<br>344.538 mp |
| 36 | J28 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Batu 12, Bukit Tinggi A, Simpang Kerayong, Jalan Merlimau, 77000 Jasin, Melaka | Lot 1293<br>8228 kp |
| 37 | J34 | ஸ்ரீ மதுரை வீரன், ஸ்ரீ ராஜ கருமாரியம்மன் தோ பெக் கோங் ஆலயம் | J8451, Batu 16 ½, Kampung India, 77000 Jasin, Melaka | Lot 5575<br>1 ekar |
| 38 | J36 | தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம் | JA 3371, Jalan Ria Satu, Taman Ria, Kesang Pajak, 77000 Jasin, Melaka | Lot:<br>¼ ekar |
| 39 | J37 | ஸ்ரீ பிரித்தியங்கரா தேவி சக்தி பீடம் | 7952, Jalan Bukit Tinggi A, Simpang Kerayong, Jasin, Melaka | Lot<br>4,000 kp |
| 40 | J42 | ஸ்ரீ முனியாண்டி ஆலயம் | 3490, Taman Batang Melaka Baru, Batang Melaka, 77500 Melaka | Lot 7952<br>1 ¼ ekar |
| 41 | J43 | ஸ்ரீ மகா சிவசக்தி ஆலயம் | 10817, Jalan Ayer Semubuk 2, 76100 Durian Tunggal | Lot 3490<br>¼ ekar |
| 42 | AG2 | ஸ்ரீ அஸ்ட தச புஜ காளியம்மன் ஆலயம் | Pengkalan, 78000 Alor Gajah, Melaka | Lot 10817<br>3 ekar |
| 43 | AG3 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஸ்ரீ பால சுப்ரமணியர் ஆலய பரிபாலன சபை | 14, Taman Sri Bukit Tambun, 76100 Durian Tunggal, Melaka | Lot:<br>43,718 kp |
| 44 | AG5 | ஸ்ரீ வீர பத்ர காளி ஆலயம் | Lorong Bilal Arshad, Jln Keretapi Lama, Kampung Gangsa, Durian Tunggal, 76100 Melaka | Lot: Rumah No.14<br>17,000 kp |
| 45 | AG8 | ஸ்ரீ மகா பத்ர காளியம்மன் ஆலயம் | Kuil Naning Lama, Kampung Kemus, Jalan Simpang Ampat, 73000 Alor Gajah, Melaka | Lot: PT638<br>¼ ekar |
| 46 | AG21 | தேவ ஸ்ரீ பால தண்டாயுதபாணி ஆலயம் | PS 1996, Taman Malinja Wangi, Pulau Sebang,73000 Alor Gajah, Melaka | Lot:<br>¼ ekar |
| 47 | AG23 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 27, Kampung Baru (Paya Mengkuang), 78200 Kuala Sungai Baru, Melaka | Lot 3724<br>1 ¼ ekar |
| 48 | AG24 | தேவி ஸ்ரீ மாரியம்மன் ஆலயம் | Kampung Tersusun Yayasan Melaka Pindah, Alor Gajah, Melaka | Lot:<br>1.138 hektar |
| 49 | AG25 | ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | 89, Jalan Fairuz, Rumah Awam, Paya Datuk, 78000 Alor Gajah, Melaka | Lot:<br>11,000 kp |
| 50 | AG30 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | 89, Jalan Fairuz, Rumah Awam, Paya Datuk, 78000 Alor Gajah | Lot: Rumah No.89<br>3,000 kp |

| 51 | AG38 | ஸ்ரீ முகாம்பிகை ஆலயம் | 94-1D Jalan 12, Taman Sri Naning, Simpang Ampat, 73000 Alor Gajah, Melaka | Lot: 1/4 ekar |
|---|---|---|---|---|
| 52 | AG39 | அருள்மிகு மகா கருமாரியம்மன் தேவஸ்தானம் | No.RM 109, Rembia, 78000 Alor Gajah, Melaka | Lot: 30,492 kp |
| 53 | AG40 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Kampung Baru Vinayagar Batu 17 1/2, Ganun, 78000 Alor Gajah, Melaka | Lot. 1530 1/4 ekar |
| 54 | AG45 | தேவி ஸ்ரீ மகா அசா மலை முனியப்பன் ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | PD64, Jalan 5, Taman Bukit Nangka, 78000 Alor Gajah, Melaka | Lot PD 64 1/4 ekar |
| 55 | AG47 | ஓம் ஸ்ரீ சடைமுடி ஆலயம் | 65, Rumah Awam Sri Lendu, Lendu, 78000 Alor Gajah, Melaka | Lot: Rumah No 65 80 kp |
| 56 | AG48 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (பெகோ தோட்டம்) | Kampung Bukit, Pulau Sebang, 78000 Alor Gajah, Melaka | Lot: 1752 1 ekar |

இந்த விவரங்களின் அடிப்படையில், மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களில் 38.4 சதவீதம் மட்டுமே தங்களுக்குச் சொந்தமான நிலங்களைக் கொண்டிருக்கின்றன. அதே சமயத்தில் 61.6 சதவீதம் தங்களுக்குச் சொந்தமில்லாத நிலங்களில் உள்ளன.

## மலாக்கா மாநில இந்துக் கோயில்களின் நிலப்பரப்பளவு

மலாக்காவில் உள்ள பெரும்பாலான கோயில்கள் மிகவும் குறைந்த நிலப்பரப்பில் அமைந்துள்ளன. மலாக்காவில் மொத்தம் 120 அல்லது (82.2%) கோயில்கள் 1 ஏக்கருக்கும் குறைவான நிலப்பரப்பைக் கொண்டுள்ளன - அவற்றுள் 66 அல்லது (45.2%) 0.25 ஏக்கருக்கும் குறைவாகவும், 33 அல்லது (22.6%), 0.50 ஏக்கருக்கும் குறைவாகவும் உள்ளன. 1 ஏக்கருக்கு மேல் பரப்பளவை கொண்டவை 26 கோயில்கள் அல்லது (17.8%); 4 அல்லது 2.7% கோயில்கள் மட்டுமே 2 ஏக்கருக்கு மேல் பரப்பளவை கொண்டுள்ளன.

கோயிலின் மொத்த நிலப்பரப்பைக் கணக்கிடும்போது, ஏறக்குறைய அனைத்துக் கோயில்களுக்கும் தோட்டமோ, நிறுவனமோ அல்லது அரசோ கோயிலுக்காகக் குறிப்பிட்ட பரப்பளவைக் கொண்ட நிலத்தை ஒதுக்கியது கிடையாது. மேலும், கோயில் நிர்வாகம் கட்டிடத்தைச் சுற்றியுள்ள பகுதியை, பரப்பளவைத் தீர்மானிக்காமல் பயன்படுத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள், சில கோயில்கள் ஓர் ஏக்கருக்கும் மேற்பட்ட பரப்பளவு கொண்ட நிலங்களைக் கொண்டிருப்பதாகக் கூறிக்கொள்கின்றன. ஆனால், இதை உறுதி செய்ய எந்தவித ஆவணங்களோ கோயிலைச் சுற்றி எல்லைகளைக் காட்டும் வேலிகளோ இல்லை.

56 கோயில்களுக்குச் சொந்தமாக, அதன் பெயரிலோ அல்லது உரிமையாளர் பெயரிலோ நிலம் இருப்பது உறுதியாகிறது. மற்றக் கோயில்கள் பழைய அதே பூர்வீக இடத்திலோ புதிய இடத்திலோ கோயிலுக்கான நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்ளும் வேளை, வேறு சில, வாளாவிருக்கின்றன.

மேலே உள்ள அட்டவணையில் 38.4 சதவிகிதம் அல்லது 56 கோயில்கள் மட்டுமே சொந்த நிலத்தில் இருக்கின்றன. மாவட்ட நிலையைப் பொறுத்தவரை, மத்திய மலாக்காவில் அறங்காப்பகத்தின் கீழ் இருக்கும் கோயில்கள் உட்பட, 52.3 சதவிகித கோயில்கள் தங்கள் சொந்த நிலத்தில் இயங்குகின்றன. அலோர்காஜா மாவட்டத்தில் இருக்கும் 56 கோயில்களில் 26.8 சதவிகிதம் அல்லது 15 கோயில்கள் மட்டுமே சொந்த நிலங்களில் உள்ளன. அதே சமயம், ஜாசின் மாவட்டத்தில் 46 கோயில்களில் 18 கோயில்கள் அல்லது 39.1 சதவிகிதம் சொந்த நிலங்களைப் பெற்றுள்ளன.

சொந்த நிலங்களைக் கொண்ட கோயில்களை மட்டும் கணக்கிட்டால், 56 கோயில்களில் 25 கோயில்கள், அல்லது 44.6% கோயில்கள் கால் ஏக்கருக்கும் குறைவான நிலப்பரப்பிலும், 13 கோயில்கள், அல்லது 23.2% கோயில்கள் அரை ஏக்கருக்கும் குறைவான நிலப்பரப்பிலும், 8 கோயில்கள் அல்லது 14.3% கோயில்கள் ஓர் ஏக்கருக்கும் குறைவான நிலப்பரப்பிலும், 8 கோயில்கள் அல்லது 14.3% கோயில்கள் இரண்டு ஏக்கருக்கும் குறைவான நிலப்பரப்பிலும், ஏனைய 2 கோயில்கள் அல்லது 3.6% கோயில்கள் மட்டுமே இரண்டு ஏக்கருக்கும் மேல் கொண்ட நிலப்பரப்பிலும் வீற்றிருக்கின்றன. ஓர் ஏக்கருக்கும் மேல் சொந்த நிலப்பரப்புள்ள கோயில்கள் 10, அல்லது 17.9%, கோயில்கள் மட்டுமே.

**அட்டவணை 12: மலாக்காவில் இந்துக் கோயில்களின் நிலப்பரப்பளவு**

| மாவட்டம் | - ¼ EKAR | ¼ - ½ EKAR | ½ - 1 EKAR | 1-2 EKAR | LEBIH 2 EKAR | JUMLAH | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | Milik kuil | Milik Lain | Jumlah |
| மத்திய மலாக்கா | 23 (13) | 10 (3) | 5 (3) | 5 (3) | 1 (1) | (23) | 21 | 44 |
| ஜாசின் | 15 (7) | 15 (6) | 6 (3) | 9 (2) | 1 (0) | (18) | 28 | 46 |
| அலோர் காஜா | 28 (5) | 8 (4) | 10 (2) | 8 (3) | 2 (1) | (15) | 41 | 56 |
| மொத்தம் | 66 (25) | 33 (13) | 21 (8) | 22 (8) | 4 (2) | (56) | 90 | 146 |
| சதவிகிதம் | 45.2 (17.1) | 22.6 (8.9) | 14.4 (5.5) | 15.1 (5.5) | 2.7 (1.4) | (38.4) | 61.6 | |

**குறிப்பு: அடைப்புக்குறிக்குள் உள்ள எண்ணிக்கை, கோயில் அதன் சொந்த நிலத்தில் இருப்பதைக் குறிக்கிறது. கோயிலுக்குச் சொந்தமான நிலம் என்பது பக்தர்கள் சங்கம், கோயில் உரிமையாளர் மற்றும், கோயில் பெயர்களில் உள்ள நிலங்களைக் குறிக்கிறது.**

## கோயிலில் இருக்கும் வசதிகள்

இங்கு இருக்கக்கூடிய கோயில்களில் நிலத்தின் அளவு சிறியதாக இருப்பதால் பக்தர்களின் நலனுக்கும் மற்றும், வேறு பயன்களுக்கும் தேவையான விரிவான வசதிகளைச் செய்ய முடியாத நிலையில் இக்கோயில்கள் இருக்கின்றன. இக்கோயில்களில் பக்தர்கள் அடிப்படை வழிபாடு மட்டுமே செய்ய முடியும். தொடக்கத்தில் கோயில்கள் அமைந்ததன் நோக்கமும் அதுதான். அதாவது, இறைவனை வழிபடுவதற்குதான் கோயில், அவ்வப்போது கூட்டம் அதிகமாகக் கூடும் வைபவங்களுக்கு, கோத்தோங் ரோயோங்கின் மூலம் கோயிலைச் சுற்றித் தற்காலிகக் கூடாரங்கள் அமைக்கப்படுகின்றன. எனவே, கோயிலில் மிகவும் அடிப்படையான வசதிகள் மட்டுமே இருப்பதால் கோயிலின் சொத்து மற்றும், பிற வசதிகளைக் கவனித்துக்கொள்வதற்கு எந்தவொரு பாதுகாப்பு நடவடிக்கைகளும் தேவையில்லை.

கோயில்களில் இருக்கக்கூடிய வசதிகளைப் பார்க்கும்போது, 22 கோயில்களில் மட்டுமே பக்தர்களுக்குத் தேவையான பல வசதிகள் உள்ளன. அதாவது, கோயில்களுக்கான பிரதான கட்டிடத்தோடு பிற இணை கல் கட்டிடங்களும் உள்ளன. பொருட்களை வைக்கும் அறை, உதவியாளர்கள் மற்றும், குருக்கள் தங்குமிடங்கள், குளியலறைகள் போன்றவை இவற்றில் இருக்கின்றன. இவற்றுள், ஒரு கோயிலில் மட்டுமே திருமண நிகழ்ச்சிகளின்போது மணமக்கள் உடை மாற்றுவதற்குச் சிறப்பு அறைகளும் உள்ளன. மற்றொரு கோயிலில் இத்தகைய வசதிகள் தற்பொழுதுதான் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன.

## கட்டிட வகைகள்

கல் கட்டிடங்களைக் கொண்ட கோயில்கள் மொத்தம் 80 உள்ளன; இவற்றுள், சிலவற்றில் தற்காலிகமான கூடுதலான வசதிகளும் உள்ளன. பெரும்பாலான கோயில்கள் திருவிழாச் சமயங்களில் கூடாரங்கள் மற்றும், மின்சாரத்தைப் பெறுவதற்கு ஜெனரேட்டர்கள் போன்ற கூடுதல் வசதிகளை வாடகைக்குப் பெறுகின்றன.

**அட்டவணை 13: மலாக்கா கோயில்களின் கட்டிட வகைகள்**

| மாவட்டம் | பிரதான மற்றும், இணை கல் கட்டிடத்தொகுதி | ஒரே கல் கட்டிடம் | மொத்தம் |
|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 7 | 20 | 27 |
| ஜாசின் | 5 | 27 | 32 |
| அலோர் காஜா | 10 | 33 | 43 |
| மொத்தம் | 22 | 80 | 102 |

**குறிப்பு: மற்றக் கோயில்கள் சிமெண்ட்-பலகை, பலகை, தகரம், போன்றவற்றைக் கொண்ட நிர்மாணிப்பு, அல்லது திறந்த வெளியில் செயல்படுகின்றன**

பல கோயில்களில் அதன் வழிபாட்டாளர்களின் கூடுதல் நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்த பல்நோக்கு மண்டபம் இல்லை. இந்த ஆய்வின்போது, 13 கோயில்களில் மட்டுமே பல்நோக்கு மண்டபம் அமைந்திருந்தன. பெரும்பாலானவை பெரிய மண்டபங்களாக இல்லை, ஆனால், சிறிய நிகழ்ச்சிகளை நடத்தப் பயன்படுகின்றன. பெரும்பாலான கோயில்கள் வழிபாட்டு வளாகத்தையே தங்கள் நடவடிக்கைகளுக்கு ஒரு பொது மண்டபமாகப் பயன்படுத்துகின்றனர். மேலும், தேவை ஏற்பட்டால் உணவு பரிமாறும் இடத்தையும் சிலர் தங்கள் நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்துகிறார்கள்.

## குருக்களுக்கான தங்கும் இடம்

மலாக்காவில் உள்ள 41 கோயில்களில் மட்டுமே அங்கு பணிபுரியும் வழிபாட்டுக்குத் தலைமை தாங்கும் அர்ச்சகர்/ குருக்கள்/ பூசாரி இவர்களுக்குத் தங்குமிட வசதி உண்டு. இவர்கள் பெரும்பாலும் கோயிலில் இரவு நேரம் உட்பட பாதுகாவலராக இருப்பதோடு கோயிலுக்கு வழிபட வருபவர்களுக்குக் கோயில் நிர்வாகத்தினரின் பிரதிநிதியாகவும் இருந்து சேவை செய்கின்றனர். நூற்றுக்கும் மேற்பட்ட கோயில்கள் இவர்கள் தங்குவதற்கு வசதிகளைச் செய்து கொடுக்கவில்லை. மேலும், நிதி நிலைமை காரணமாகக் கோயிலின் பாதுகாப்பை உறுதி செய்ய இரவில் கண்காணிக்கக் காவலர்களையும் அவர்கள் நியமிப்பதில்லை. எனினும், இந்தக் கோயில்களில் மதிப்பு மிகுந்தப் பொருட்கள் ஏதும் இல்லாததால் பாதுகாவலர், கண்காணிப்புக் காமெராக்கள் போன்ற விஷயங்கள் முக்கியமாகக் கருதப்படுவதில்லை.

## கோயில் பாதுகாப்பு

இருப்பினும், கோயிலின் நிர்வாகம் சில வேளைகளில் கவலைப்படுகின்ற சந்தர்ப்பங்களும் உண்டாகின்றன. குறிப்பாகச் சில வேண்டத் தகாத தரப்பினர் வேண்டுமென்றே கோயிலில் இருக்கின்ற விக்ரகங்களைச் சேதப் படுத்துகின்ற நிகழ்வுகளால் கோயில் பாதுகாப்பு பற்றிக் கவலைப்படுகின்ற

சந்தர்ப்பங்கள் உள்ளன. கோயில்களில் உள்ள நிதித் தட்டுப்பாடுகள் காரணமாகவும் மற்றும், மின்சார வசதி இல்லாததாலும் இந்த விஷயத்தில் கோயில் நிர்வாகம் எந்தவித நடவடிக்கையும் எடுக்க இயலாதவர்களாக இருக்கிறார்கள். பக்தர்களின் குடியிருப்புப் பகுதிக்கு அருகில் கோயில்கள் அமைந்திருந்த காலத்தில், கோயில்களின் பாதுகாப்பு குறித்த கேள்வி எழவில்லை. ஆனால், இவர்கள் வசிக்கும் இடங்களிலிருந்து வெகுதொலைவில் கோயில்கள் அமைந்திருக்கும் இன்றைய நிலையில், இது உண்மையில் கோயில் நிர்வாகத்திற்குக் கவலை அளிக்கும் விஷயமாக இருக்கின்றது. இருப்பினும், இச்சமயத்தில் எந்தத் தீர்வும் இல்லாததற்கு நிதி நிலையே முக்கியக் காரணம் என்று சொல்லலாம்.

## நீர் / மின்சாரம்

சில கோயில்களில், முறையான நீர் மற்றும், மின்சார வசதிகள் இன்னும் இல்லை. பல கோயில்களில் தேவைப்படும்போது, குறிப்பாக ஆண்டுத் திருவிழா சமயங்களில், கிணற்று நீர் மற்றும், ஜெனரேட்டர்களைப் பயன்படுத்தப்படுகின்றன. இந்த ஆய்வின்போது மலாக்காவில் உள்ள 46 கோயில்களில் கழிப்பறை வசதிகள் இல்லை, இதற்குக் காரணம் இந்தக் கோயில்களில் நடைபெறும் எந்த ஒரு நடவடிக்கையிலும் பக்தர்களை நீண்ட நேரம் தக்க வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லாததாக இருக்கலாம்.

## கோயில்களுக்கு இடையிலான தூரம்

பல கோயில்கள் ஒன்றுக்கொன்று மிகவும் நெருங்கிய தூரத்தில் அமைந்துள்ளது கவனத்தை ஈர்க்கும் அம்சமாகும். இந்த ஆய்வில் ஒரு கோயிலிலிருந்து ஐந்து கிலோமீட்டருக்குள் இருக்கின்ற கோயில்களின் எண்ணிக்கையைப் பார்த்தால், 47 கோயில்களில், ஐந்து கிலோமீட்டருக்குள் குறைந்தது 2 கோயில்கள் உள்ளன. மற்ற 73 கோயில்களில் ஐந்து கிலோமீட்டருக்குள் மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட கோயில்கள் உள்ளன. 17 கோயில்களில் 5 கிலோமீட்டருக்குள் குறைந்தது ஒரு கோயிலாவது உள்ளது. ஆக, 146 கோயில்களில் 137-இல் ஐந்து கிலோமீட்டருக்குள் குறைந்தது வேறொரு கோயிலாவது உள்ளது.

**அட்டவணை 14 : மலாக்காவில் கோயில்களுக்கு இடையிலான தூரம் மற்றும், கூடுதல் வசதிகள்**

| மாவட்டம் | 5 கி.மீ. க்குள் அமைந்துள்ள கோயில்களின் எண்ணிக்கை | | | சமயச் சடங்குகளைச் செய்பவர்கள் தங்கும் இடம் | பல நோக்கு மண்டபம் | கழிப்பறைகள் இல்லாதது |
|---|---|---|---|---|---|---|
| | 2 | 3 அல்லது அதற்கு மேலும், | மொத்தம் | | | |
| மத்திய மலாக்கா | 5 | 32 | 37 | 13 | 7 | 20 |
| ஜாசின் | 19 | 15 | 34 | 15 | 3 | 13 |
| அலோர் காஜா | 23 | 26 | 49 | 13 | 3 | 13 |
| மொத்தம் | 47 | 73 | 120 | 41 | 13 | 46 |

வெவ்வேறு தோட்டங்களிலும் இருந்த இந்துத் தொழிலாளர்கள், அருகில் உள்ள தோட்டங்களில் அமைந்திருந்த ஆலயங்களைப் பொருட்படுத்தாமல், தங்கள் சொந்தப் பணியிடங்களில், அவர்கள் வசிக்கும் இடங்களுக்கு அருகில் தங்கள் கோயில்களை அமைக்க விரும்பினர். ஏனென்றால், ஒவ்வொரு சாராரும் தங்களுக்கென்று ஒரு வழிபாட்டுத்தலம் வசிக்கும் இடத்திற்கு அருகில் வேண்டும் என எண்ணியதே. மேலும், அந்தச் சமயத்தில், கோயில் தினசரி வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்பட்டு வந்தது. ஏனெனில், முதலாளிகள்

வழங்கிய வீடுகள் குடும்ப உறுப்பினர்களுக்கு மிகவும் குறுகியதாக இருந்ததோடு, அவர்களின் வீடுகளில் பிரார்த்தனை செய்வதற்கு இடம் இல்லாமல் இருந்ததையும் கவனத்தில் கொள்ளவேண்டும்.

கூடுதலாக, ஒரு பகுதியில் ஆதிக்கம் செலுத்தும் பக்தர்கள் ஒரு குழுவாக இருக்கும்போது அவர்கள் வழிபடும் தெய்வத்தைத் தேர்ந்தெடுக்கும் போக்கில் இந்தியாவின் தமிழ்நாட்டில் உள்ள அவர்களின் பூர்வீக இடங்களில் வழிபட்டு வந்த தெய்வத்தின் தாக்கம் இருப்பதைக் காண்கிறோம். இதன் விளைவாக அவர்கள் தங்கள் தகுதிக்கு ஏற்ப அத்தெய்வத்திற்கு ஒரு சிறப்புக் கோயிலைத் தாங்கள் வசிக்கும் இடங்களில் அமைக்க வழிவகுத்தது. இந்த வகையில், தொழிலாளர்களுக்குப் பொறுப்பாளர்களாக இருக்கும் மண்டோர்களின் செல்வாக்கு மற்றும், அவர்களின் நிலைப்பாடு இந்த விசயத்தில் முக்கியமானது. ஏனென்றால், ரப்பர்த் தோட்டங்கள் தொடங்கப்பட்டபோது, இந்த மண்டோர்களின் செல்வாக்கு மிகவும் வலுவாக இருந்தது. இன்றுவரை, அவர்களின் குடும்ப வாரிசுகள், தங்கள் முன்னோர்களால் உருவாக்கப்பட்டக் கோயிலை மற்றவர்கள் அணுகாமல் தொடர்ந்து வழிநடத்தவும், செல்வாக்கு செலுத்தவும் விரும்புகிறார்கள்; இதனால், இந்தக் கோயில்களில் சில, குடும்பக் கோயில்கள் போல் இன்றும் உள்ளன.

மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களின் வெளித்தோற்றம் இந்துக்களின் ஒட்டுமொத்த வறுமை மற்றும், இயலாமையைத் தெளிவாகக் காட்டுகிறது. இந்துக்கள் இந்தக் கோயில்களை வழிபாட்டுத் தலமாக மட்டுமே பயன்படுத்தியதால், பல்வேறு அடிப்படை வசதிகளுடன் அவற்றை அபிவிருத்தி செய்ய இயலாத நிலையில் தொடர்ந்து இருந்து வருகின்றனர். இதன் விளைவாக, பெரும்பாலான கோயில் கட்டிடங்களும், அவற்றைச் சுற்றியுள்ள நிலமும் சிறிதாக இருந்ததோடு அக்கோயில்கள் அந்தந்தப் பகுதிகளில் வாழும் பக்தர்களின் வழிபாட்டிற்கு மட்டுமே பயன்படுவதாக இருந்தன. மலாக்கா மாநிலத்தில் நிர்வாகத்தினர் வசதிக்கேற்ப ஒரு சில இந்துக் கோயில் கட்டிடங்கள் மட்டுமே இந்து ஆகம முறைப்படி ஒரு முறையான கோயிலில் இருக்க வேண்டிய அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கியுள்ளன.

வைஷ்ணவ மார்க்கத்தைப் பின்பற்றும் கல்வியறிவுடைய, வசதிபடைத்த புதியமுறையிலான வழிபாட்டு மையத்தை, அமெரிக்கா போன்ற வெளிநாடுகளில் உள்ளதைப்போல ஸ்ரீகிருஷ்ணா பலராம் கலை பண்பாட்டு மையத்தை, மலாக்கா ஆயர் குரோவில் உருவாக்கியுள்ளனர்.

## சங்கப் பதிவு அதிகாரியிடம் கோயில்கள் பதிவு (ROS)

ஆய்வின்போது இந்துக் கோயில்களைப் பதிவு செய்வதில் இரண்டு முக்கிய வகைகளையே மலேசிய சங்கங்களின் பதிவகம் கொண்டுள்ளதைக் கண்டோம். அதாவது, கோயில் நிர்வாகச் சங்கம், மற்றும், கோயிலுடன் தொடர்புடைய ஒரு கோயில் / தெய்வத்தைச் சேர்ந்த பக்தர்கள் சங்கம், இந்த வகைகள்தான் சங்கங்களின் பதிவதிகாரியால் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ளது. ஆனால், ஓர் இந்துக் கோயிலைச் சங்கப் பதிவகத்தில் பதிவு செய்யவேண்டும் எனும் கட்டாயம் ஏதுமில்லை.

## நிர்வாகம் மற்றும், கோயில் பக்தர்கள் சங்கம் ஆகியவற்றிற்கு இடையிலான வேறுபாடு

கோயிலுக்குச் சொந்தமான நிலத்தில் கோயில்கள் அமைக்கப்படும்போது, கோயிலை நிர்வகிக்கும் குழு, கோயில் நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்யப்படலாம். இந்தப் பதிவு, உண்மையில் ஒரு கோயில், சங்கங்களின் பதிவாளரிடம் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதைக் குறிக்கிறது, மேலும், அந்தக் கோயிலை அனைத்து வகையிலும் நிர்வகிக்கும் அதிகாரம் அந்தக் குழுவிற்கு உள்ளது.

இருப்பினும், நாட்டில் பெரும்பாலான இந்துக் கோயில்கள் மற்றவர்களுக்குச் சொந்தமான தோட்டங்கள் அல்லது தொழிலாளர் குடியிருப்புகளில் அமைக்கப்பட்டிருப்பதால், தற்போதுள்ள கோயிலின் தெய்வம் அல்லது தெய்வத்தைப் பின்பற்றுபவர்களுக்கு முறையான அங்கீகாரம் வழங்குவதற்காக, கோயில் தெய்வங்களின் பெயர்களில் பக்தர்கள் சங்கங்கள் நாடு முழுவதும் சங்கங்களின் பதிவதிகாரியால் அங்கீகரிக்கப்பட்டு வந்துள்ளன. இந்தச் சங்கத்திற்குக் கோயிலை நிர்வகிக்கும் உரிமை இல்லை; ஆனால், அது அதன் உறுப்பினர்களான பக்தர்களுக்குத் தேவையான செயல்பாடுகளை மட்டுமே ஒருங்கிணைக்க முடியும். 'பக்தர்கள் சங்கங்கள் பதிவு செய்யப்படும்போது, கோயிலைத் தவிர, தனியார் வீடு போன்ற மற்ற வளாகங்களின் முகவரியைப் பயன்படுத்தச் சங்கங்களின் பதிவாதிகாரியால் அனுமதிக்கப்படுகின்றன' என்று பதிவதிகாரி தெளிவுப்படுத்தியுள்ளார். அதோடு, கோயிலின் முகவரி என்றால், பக்தர் சங்க

விண்ணப்பம் அங்கீகரிக்கப்படமாட்டாது. இந்த நிலைப்பாட்டின் காரணமாக இந்தக் கோயில் குழுக்களில் பெரும்பாலானவை தலைவர் அல்லது செயலாளரின் வீட்டு முகவரியைப் பக்தர்கள் சங்கத்தைப் பதிவு செய்யப் பயன்படுத்திக்கொண்டு, தொடர்ந்து சம்பந்தப்பட்ட அவரவர்களின் கோயில்களை நிர்வகித்து வருகின்றன.

## கோயிலை நிர்வகிக்கும் பக்தர்கள் சங்கம்

பொதுவாக நிலம் அவர்களுடையது அல்ல என்றாலும், பெரும்பாலும் அனைத்து நில உரிமையாளர்களும் இந்துக்கள் அல்லாதவர்கள் என்பதால், கோயிலை இந்துக்களால் எழுப்பவும் இயக்கவும் மட்டுமே அனுமதி கொடுத்து வந்துள்ளனர். கடந்த காலங்களில் கோயிலை நிர்வகித்த அனைத்து நிர்வாக உறுப்பினர்களும் தோட்டத் தொழிலாளர் வீடுகளில் வசித்து வந்ததால், அவர்களால் தங்கள் பக்தர்கள் சங்கத்தைப் பதிவு செய்ய முடியவில்லை; எனினும், பிறகு இந்தப் பக்தர்கள் தோட்டத்தை விட்டு வெளியேற வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகி, தோட்டத்திற்கு வெளியே சொந்த வீடுகளைப் பெற்றபோது, தோட்டங்கள் மற்றும், அரசு அல்லது பிற தனியார் நிலங்களில் அமைந்துள்ள கோயில்களை நிர்வகிக்க, பக்தர்கள் சங்கங்களைப் பதிவு செய்ய அவர்கள் எளிதாகத் தங்கள் வீட்டு முகவரியைப் பயன்படுத்திக்கொண்டனர்.

இந்த வளர்ச்சியானது, கோயிலை நிர்வகிக்க பக்தர்கள் சங்கம் பதிவு போதுமானது எனும் எண்ணம் வலுப்பெற வாய்ப்பளித்துள்ளது. நிர்வாகச் சங்கத்திற்கும் பக்தர்கள் சங்கத்திற்கும் வேறுபாடு இல்லாதது போன்ற சூழலை உருவாகியுள்ளது. மற்றும், இந்த இரண்டு வகையான கோயில் பதிவுக்கும் இடையிலான வேறுபாடுகள் குறித்து பொதுமக்களுக்கு முழுமையாகத் தெளிவுப்படுத்த எந்த ஒரு முயற்சியும் எடுக்கப்படவில்லை. சமீபத்தில் தான், 2019-ஆம் ஆண்டு, சிலாங்கூரில் உள்ள மாரியம்மன் சீஃபீல்ட் கோயில் நிகழ்வைத் தொடர்ந்து சங்கங்களின் பதிவதிகாரியால் ஓர் ஒழுங்குபடுத்தும் திட்டம் மேற்கொள்ளப்பட்டது. இந்த ஆய்வின்போது இந்த மறுசீரமைப்பு தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

சங்கங்களை ஒழுங்குப்படுத்தும் திட்டத்திற்கும் சீஃபீல்ட் மாரியம்மன் கோயில் நிகழ்வுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதையும், ஆனால், இதன் நோக்கம் ஆலயத்தை நிர்வகிக்கும் மற்றும், நிர்வகிக்காத பக்தர்களின் சங்கங்களின் எண்ணிக்கையைக் கண்டறிந்து சம்பந்தப்பட்ட தரவுகளைப் புதுபிப்பதோடு, உண்மையில் ஆலயங்களை நிர்வகிக்கும் பக்தர்கள் சங்கங்களை ஆலய மேலாண்மை/ நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்ய வாய்ப்பு கொடுக்கவே இந்த மறுசீரமைப்பின் நோக்கம் என்று மலாக்கா சங்கப் பதிவதிகாரி தெளிவு படுத்தினார். இந்தத் திட்டத்தின் விளைவாக, இந்தச் சங்கங்களின் துணைப் பிரிவுகளைப் 'பக்தர்கள்' என்பதிலிருந்து 'நிர்வாகக்குழு'வாகப் புதுப்பிக்க முடிந்தது. இந்தத் திட்டம் இந்துக் கோயில்களுக்கு மட்டுமல்லாமல், சீனர்களுக்கான கோயில்களையும் உள்ளடக்கியதாகும்.

## கோயில் மேலாண்மை குழுவாக (கோயில் நிர்வாகச் சங்கம்) பதிவுப் பெற்ற கோயில்கள்

இந்த ஆய்வின்போது, மலாக்காவில் 13 இந்துக் கோயில்கள் மட்டுமே கோயில் மேலாண்மைக் குழுவாகப் பதிவு செய்யப்பட்டிருந்தன. அவற்றுள் ஒன்று இன்னும் நிறுவப்படவில்லை என்றாலும், இந்தப் பிரிவில் அது பட்டியலிடப்பட்டுள்ளது. சிலாண்டாரில் (பிபிஎம் -004-04-02062015) நவமுனீஸ்வரர் கோயில் நிர்வாகச் சங்கம் பதிவாகியுள்ளது. அதன் முகவரி J1 கோயிலின் இடமாற்றத்திற்காக முதலில் ஒதுக்கப்பட்ட இடத்தைக் காட்டுகிறது. ஆனால், J1 கோயில் குழு தனது கோயிலுக்கு ஒரு பெரிய நிலத்தைப் பெற முயற்சித்து புதிய இடத்தில் கோயிலை அமைத்தது மட்டுமல்லாமல் சிலாண்டார் ஈண்டா குடியிருப்புப் பகுதியில் ஒதுக்கப்பட்ட இந்த நிலத்தைச் செலாண்டாரில் உள்ள இந்தியச் சமூகத்திற்குக் கூடுதல் வசதிகளைச் செய்து கொடுக்க J1 கோயில் குழு முன்மொழிந்திருந்தது.

இருப்பினும், அந்த இடத்தில் மற்றொரு கோயில் கட்ட மற்றொரு குழு நவ முனீஸ்வரர் அமைப்பின் பெயரில் விண்ணப்பித்து பதிவுபெற்றுள்ளது. மேலும், இந்தக் கோயிலின் தனித்துவம் அதன் விழாக்களில் ஆடுகளைப் பலி கொடுப்பதும் அதன் இறைச்சியைத் திருவிழாவிற்கு வருகைத் தருவோருக்குப் பரிமாறுவதும் ஆகும். இந்த ஆய்வின்போது இந்தக் கோயிலுக்குக் கட்டடம் இல்லாதால் அது இந்த ஆய்வில் சேர்க்கப்படவில்லை.

கோயில் நிர்வாக அமைப்பின் கீழ் பதிவு பெற்றுள்ள சங்கங்களுக்கு நிலம் இருக்க வேண்டியது கட்டாயம் எனக் கருதினாலும் கோயிலுக்குச் சொந்தமில்லாத நிலத்தில் உள்ள சில கோயில்கள் ஏற்கனவே இந்த முறையில் பதிவு செய்யப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, (பிபிஎம் -001-004-08041977) பூலாவ்

செபாங்கில் KTM நிலத்தில் உள்ள AG35 ஸ்ரீவைத்தீஸ்வரர்-தையல்நாயகி அம்மன் கோயில், (பிபிஎம் -004-04-12011988) புக்கிட் அசகான் தோட்டத்தில் உள்ள J3 ஸ்ரீமகா மாரியம்மன் கோயில், மற்றும், (பிபிஎம் -006-04-18081983) புக்கிட் செர்மின் பிரிவில் ஜாசின் லாலாங் தோட்டத்தில் உள்ள J11, ஸ்ரீமகா மாரியம்மன் கோயில் போன்றவை ஆகும்.

இது சம்பந்தமாக சங்கங்களின் பதிவதிகாரியை நாங்கள் தொடர்பு கொண்டபோது, பின்வரும் விளக்கத்தினைப் பெற்றோம்:

கோயில்களுக்குச் சொந்தமில்லாத நிலத்தில் கட்டப்பட்டுள்ள கோயில்களை நிர்வகிக்கப் 'பதிவுசெய்யப்பட்ட நிர்வாகச் சங்கங்கள் உள்ளன என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால், இஸ்லாம் அல்லாத வழிபாட்டு இடங்களைப் பதிவு செய்வதற்கான வழிகாட்டி பற்றிய பதிவதிகாரியின் பிப்ரவரி 8, 1994 தேதியிட்ட சுற்றறிக்கை கடித எண் 2/94 வழி அறிவுறுத்தல் வழங்கப்படுவதற்கு முன்னர் இது போன்ற பெரும்பாலான சங்கங்கள் நிறுவப்பட்டுவிட்டன. இந்த அறிக்கை சங்கப் பதிவதிகாரியால் வழங்கப்பட்ட இஸ்லாம் அல்லாத வழிபாட்டுத் தலங்களைப் பதிவு செய்வதற்கான வழிகாட்டுதல்களுடன் தொடர்புடையதாக இருக்க வேண்டும். இஸ்லாம் அல்லாத வழிபாட்டுத் தலங்களைப் பதிவு செய்வது மாநில அரசின் அதிகாரம் என்று இந்த வழிகாட்டித் தெளிவாகக் கூறுகிறது. இதற்கிடையில், இஸ்லாம் அல்லாத வழிபாட்டுத் தலங்களை அமைக்க உதவும் பொருட்டு இந்த அலுவலகம் சமய (இஸ்லாம் அல்லாத) அமைப்புகளைப் பதிவு செய்யும்.

'இஸ்லாம் அல்லாத வழிபாட்டுத் தலங்களுக்கான அனைத்து விண்ணப்பங்களையும் பரிசீலிப்பதற்கும் பதிவு செய்வதற்கும் விதிமுறைகள் பின்வருமாறு:

1. பெயர்

   a. அனைத்து விண்ணப்பங்களும் தெய்வங்களின் பெயரில் ` ..... சங்கம்' அல்லது '........... பக்தர்கள் சங்கம்' அல்லது 'கிறிஸ்தவ பக்தர்கள் சங்கம்' அல்லது `............ சமய பக்தர்கள் சங்கம்' என்ற பெயரில் செய்யப்பட வேண்டும்.

   b பதிவு செய்ய பின்வரும் பெயர்கள் இனி ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது :

   i. வழிபாட்டுத்தலம்/ கோயில்/தேவாலயம்

   ii. வழிபாட்டுத்தலம்/ கோயில்/தேவாலயம் நிர்வாகக் /மேலாண்மைக் குழு

   iii. வழிபாட்டுத்தலம்/ கோயில்/தேவாலயம் / திருப்பணிச் சங்கம்

   iv. வழிபாட்டுத்தலம்/ கோயில்/தேவாலயம் ஆதரவாளர்கள் சங்கம்

2. நோக்கங்கள்:

   a. சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் முன் அனுமதியைப் பெற்றால்தான் சமய விழாக்களைக் கொண்டாடுவதற்கான நடவடிக்கைகளில் ஈடுபடமுடியும்.

   b. வழிபாட்டு இடங்கள் / சீனக் கோயில்கள் / கோயில்கள் / தேவாலயங்கள் போன்றவற்றை நிர்வாகம் செய்யவோ / மேற்பார்வையிடவோ அனுமதிக்கப்படமாட்டாது.

   c. உறுப்பினர்களுக்கு வழிபாடு செய்யும் தலத்தை உருவாக்க அனுமதி இல்லை.

3. தலைமையகம் மற்றும், மாநில அலுவலக மட்டங்களில் பரிசீலிக்கப்படும் அனைத்து விண்ணப்பங்களும் பரிசீலனை மற்றும், ஒப்புதலுக்காகத் தலைமையகத்திற்குப் பரிந்துரைக்கப்படுவதற்கு முன்னர் பத்திகள் 1 மற்றும், 2 ஆகியவற்றின் தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

4. வழிபாட்டுத்தலங்கள் / கோயில் / மற்றும், தேவாலயம் என்ற பெயரில் பதிவு செய்ய விண்ணப்பங்கள் இருந்தால், தங்கள் சொந்த நிலம் மற்றும், கட்டிடம் மற்றும், வழிபாட்டுத்தலங்கள் கட்டுவதற்கு மாவட்ட நில அலுவலுக அனுமதி போன்ற தேவைகளைப் பூர்த்தி செய்த விண்ணப்பங்கள் மட்டுமே பதிவு நோக்கங்களுக்காகப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும். அப்படியிருந்தால், இவை உறுப்பினர்களுக்கான வழிபாட்டுத் தலத்தை நிர்வகித்தல் மற்றும், மேலாண்மை செய்தல் என்பதை நோக்கங்களில் ஒன்றாகச் சேர்க்கப்படலாம்.'

இந்த ஆய்வின் கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் சில வினாக்களுக்கு மலாக்கா மாநில சங்கங்களின் பதிவதிகாரி 2020 செப்டம்பர் 04 தேதியிட்ட பிபிஎம் / எம்இஎல் / 225/2010 (8) கடித்தின் வழி விளக்கமளித்தார். மேலும், இந்த ஆய்வறிக்கையில், சங்கங்களின் பதிவதிகாரியின் விளக்கம் பற்றிய அனைத்துக் குறிப்புகளும் இந்தக் கடிதத்தையே குறிக்கின்றன.

## சங்கப் பதிவு அதிகாரியினால் பதிவு செய்யப்பட்ட இந்துக் கோயில்களின் பட்டியல்

அன்றைய ஆட்சிக்குழு உறுப்பினர் மாண்புமிகு திரு ஜி சாமிநாதன் அவர்களிடம் 2019-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் வரையில் பதிவு செய்யப்பட்ட 93 இந்துச் சமயம் சார்பான அமைப்புகளின் பட்டியல் சங்கப் பதிவு அதிகாரியினால் வழங்கப்பட்டிருந்தது.

கோயில்களில் நிர்வாகக் குழுக்கள் 13 உள்ளன. அதே சமயம் பக்தர்கள் சங்கங்களைச் சரிப்படுத்த ‘outreach - எனப்படும் ஒழுங்குப் படுத்தும் திட்டத்தில் முதல் கட்டமாகச் சம்பந்தப்பட்ட 11 சங்கங்களும் தங்கள் கோயில்களுக்கான நில உரிமை சான்றிதழைக் காண்பித்தன. 2 சங்கங்கள் தங்கள் கோயில் அரசு நிலத்தில் இருக்கும் விவரத்தைக் கொடுத்தனர், 5 சங்கங்கள் நிர்வகிக்கும் கோயில்களுக்கு இன்னும் நில உரிமை இல்லை என்பதை ஒப்புக்கொண்டன. 11 சங்கங்கள் எந்தவித ஆவணங்களையும் கொண்டு வரவில்லை, மேலும், 49 சங்கங்களும் கோயில்களில் நிர்வாகம் செய்கிறார்களா அல்லது இல்லையா என்பதை இன்னும் உறுதிப்படுத்தவில்லை, இரண்டு சங்கங்கள் மயானம் அல்லது தகனம் செய்யும் இடங்கள் சம்பந்தப்பட்டவையாக இருந்தன.

சங்கப் பதிவு அதிகாரியின் பட்டியலில் வழிபாட்டு இடங்களுக்குச் சுற்றுலா நடவடிக்கைகளை ஏற்பாடு செய்யும் பக்தர் சங்கங்கள், புரோகிதர் சங்கம், இந்து சமயப் பெயரில் சமூகத் தொண்டு செய்யும் மையங்களையும் இவற்றைப் பின்பற்றுவோர், சந்திக்கும் மையங்களையும், எடுத்துக்காட்டாக ஸ்ரீடி சாய்பாபா சங்கம் போன்றவை, கோயில்களை அடிப்படையாகக் கொண்ட பக்தர்கள் சங்கங்களின் வகையில் சேர்க்கப்பட்டுள்ளன. சங்கப் பதிவதிகாரிகளைப் பொறுத்தவரை இவற்றுக்கிடையே எவ்வித பெரிய முக்கிய வேறுபாடுகளும் இல்லையெனக் கருதி இருக்கலாம். இருப்பினும், இவை ஆற்றும் பணிகள் வெவ்வேறு என்பதை நாம் கவனிக்க வேண்டும்.

ஜாசின் ஸ்ரீசிவன் ஆலயம் பக்தர்கள் சங்கமாகப் பதிவு (பிபிஎம் -002-04-22122012) செய்திருப்பினும் ஜாசின் J9 ஸ்ரீமகா மாரியம்மன் ஆலயத்தின் நிர்வாகக்குழு (பிபிஎம் -015-04-03072011) மாரியம்மன்-சிவன் கோயில்கள் இரண்டையும் நிர்வகிப்பதால், முன்குறிப்பிட்ட சங்கத்தை ஒதுக்கியுள்ளது. இருப்பினும், சிவன் கோயிலுக்கும் ஸ்ரீமகா மாரியம்மன் கோயிலுக்கும் இடையில் சில நூறு மீட்டர்கள் தூரம் உள்ளது. மேலும், இவ்விரு கோயில்களும் தனித்தனியாக இருப்பதால் சிவன் கோயிலுக்குத் தனியாகப் பக்தர்கள் சங்கம் உருவாகக் காரணமாக இருந்திருக்கலாம். ஆகையால் இந்த இரு குழுக்களும் இன்னமும் சிவன் கோயில் நிர்வாகம் சம்பந்தமான பிரச்சினையைக் குறித்து விவாதித்து வருவதாகத் தெரிகிறது. முன்னது பக்தர்கள் சங்கம் பின்னது நிர்வாகச் சங்கம் என்பதையும் கவனிக்கலாம்.

சங்கங்களின் பதிவதிகாரியிடம் இந்த விவகாரம் சம்பந்தமாக வினவியபோது, இது பற்றி தங்களுக்குத் தெரியாதென்றும் விளக்கினார். இருப்பினும், சரிபார்த்தபோது இந்த இரண்டு அமைப்புகளின் பதிவு செய்யப்பட்ட முகவரிகள் வேறுபட்டவை என கண்டறியப்பட்டது. முதல் அமைப்பின் முகவரி ஜாலான் பூங்கா தஞ்சோங், ஆஃப் ஜாலான் மலாக்கா 77000 ஜாசின், மலாக்கா என்றும், இரண்டாவது முகவரி JB222 தாமான் ஜரீம் ஜெயா, 77000 ஜாசின், மலாக்கா என்றும் உள்ளதாக பதிவதிகாரி குறிப்பிட்டுள்ளார்.

மாச்சாப் தோட்டத்தில் உள்ள ஸ்ரீமகா கருமாரியம்மன் AG31 ஆலயத்திற்கு PPM007-04-27122013 மற்றும், PPM-018-04-08032019 என இரண்டு வெவ்வேறான பக்தர்கள் சங்கங்கள் சங்கப் பதிவதிகாரியால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. 2013-ஆம் ஆண்டில் இதைப் பதிவு செய்த குழு, கோயிலை ஸ்ரீமகா மாரியம்மன் ஆலயம் என்று பதிவு செய்து கோயிலை நிர்வகித்து வந்த வேளை, அதன் செயல்பாட்டில் திருப்தியடையாத வேறொரு குழு ஒரு புதிய குழுவை ஏற்படுத்தி, நிர்வாகத்தைக் கைப்பற்றி, கோயிலின் பெயரை ஸ்ரீகருமாரியம்மன் எனச் சிறிய மாற்றத்துடன் இன்னொரு பக்தர் சங்கத்தை 2019-ஆம் ஆண்டு பதிவு செய்து கோயிலை நிர்வகித்து வருகிறது. முதல் குழு தற்பொழுது உள்ளூர் காரணிகளின் அடிப்படையில் கோயிலுக்குள் நுழைய அனுமதிக்கப்படுவதில்லை.

இரு அமைப்புகளின் முகவரிகள் வேறுபட்டவை என்று சங்கங்களின் பதிவதிகாரி விளக்கினார். எம்.சி. 576, தாமான் மாவார் ஜெயா, மாச்சாப் உம்பு, 78000 அலோர் காஜா (2013), மற்றும், எம்.சி. 560, ஜாலான் மாவார் ஜெயா 10, தாமான் மாவார் ஜெயா, மாச்சாப் உம்பு, 78000 அலோர் காஜா (2019) ஆகிய முகவரிகளில் இந்த சங்கங்கள் பதிவாகியுள்ளன.

## சங்கப் பதிவு அதிகாரியின் ஒழுங்குபடுத்தும் திட்டத்திற்குக் கோயில் நிர்வாகங்களின் செயல்பாடு

ஆய்வு காலத்தில் சில கோயில்கள் இந்த ஒழுங்குப்படுத்தும் திட்டத்திற்காகச் சங்கங்களின் பதிவதிகாரி சமர்ப்பித்தப் படிவங்களால் குழப்பமடைந்திருந்தன. மேலும், கோரப்பட்ட ஆவணங்களைச் சேகரிக்க முடியாத பெரும்பாலானவர்கள் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. பதிவு செய்யப்படாத பல கோயில்களுக்கும், அரசாங்கத்தின் நிதி உதவி இருக்கின்றது. எனவே, சங்கம் பதிவு செய்யப் பின்பற்றப்பட வேண்டிய பல்வேறு விதிகள் மற்றும், ஒழுங்குமுறைகள் இருப்பதால் கோயிலைச் சங்கங்களின் பதிவாளரிடம் பதிவு செய்யாமல் இருப்பது நல்லது என்றும் சிலர் எண்ணுகின்றனர். பல கோயில்கள் தங்கள் நிர்வாகக் குழுவினரைப் பதிவு செய்ய முயற்சிக்கவில்லை. ஏனெனில், கோயில்கள் தோட்டத்தில் இருப்பதால் தோட்டத்தின் நிர்வாகத்திடமிருந்தோ நில உரிமையாளரிடமிருந்தோ அனுமதி இருக்கும் வரை பதிவு செய்யத் தேவையில்லையெனக் கருதுகிறார்கள்.

மேற்கண்ட ஒழுங்குப்படுத்தும் திட்டம் ‘பதிவதிகாரியின் உத்தரவு மற்றும், மாநில அரசுச் சட்டம் (இஸ்லாம் அல்லாத வழிபாட்டு இல்ல வழிகாட்டுதல்கள் (RISI)) ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பட்டது” என்று சங்கங்களின் பதிவதிகாரி விளக்கினார். இந்த மறுசீரமைப்புத் திட்டத்தின்போது, வழிபாட்டுத்தலத்தை நிர்வகித்துவரும் அல்லது வைத்திருக்கும் பக்தர்கள் சங்கம் நில உரிமத்தை ஆதாரமாகச் சமர்ப்பிக்குமாறு கேட்டுக்கொள்ளப்பட்டனர். இத்திட்டத்தில் கலந்துகொண்ட பக்தர்கள் சங்கம், ஆலயத்தை நிர்வாகம் செய்கின்றனரா அல்லது இல்லையா என்பதை உறுதிப்படுத்தக் கேட்டுக்கொள்ளப்பட்டனர். இதற்கிடையில், வழிபாட்டுத்தலம் இருப்பதாக அடையாளம் காணப்பட்ட பக்தர்களின் சங்கம் அதன் தொடர்புடைய உண்மையான பெயர், முகவரி மற்றும், துணைப்பிரிவில் மாற்றங்களைச் செய்ய நிர்வாகக் குழு அறிவுறுத்தப்பட்டது. சொந்த நிலங்களைக் கையகப்படுத்திவிட்ட பக்தர்கள் சங்கங்களுக்கு இது உதவியது.

மேற்கூறியவை சங்கங்களின் பதிவதிகாரியின் நோக்கம் என்றாலும், இப்போது தங்கள் சொந்த நிலத்தில் கோயில்களை நிர்வகிக்கும் ஒரு சிறிய எண்ணிக்கையிலான பக்தர்களின் சங்கங்களைத் தவிர, மற்றவர்கள் நிச்சயமாகத் தேவையான விவரங்களைத் சமர்ப்பிக்கவியலாது என்பதால் இவை கோயில் நில உரிமையாளர்களிடமிருந்து ‘எந்தத் தடையும் இல்லை’ எனும் பட்சத்தில் அதன் கோயில்களின் விவகாரங்களை முன்பு போலவே நிர்வகிக்கும் பக்தர்கள் சங்கமாகத் தொடர்ந்து நிலைத்து இருக்கும் வாய்ப்பு இருக்கிறது.

## கோயில் நில உரிமையாளர்கள் மற்றும், அரசியல்வாதிகளின் மனப்பான்மை

ஒரு பகுதியில் இருக்கும் வாக்காளர்களே முக்கியம் என்பதால் அரசியல்வாதிகள் கோயில்கள் பதிவு பெற்றதா இல்லையா என்பதைக் கவனத்தில் கொள்ளாது நிதி உதவிகளை வழங்குகின்றனர். சங்கங்களின் பதிவதிகாரியிடம் பதிவு செய்வதை இந்தச் செயல் குறைத்து மதிப்பிடுகிறது. முன்பு கோயில் கட்டுவதற்கு நிலத்தின் உரிமையாளரின் ஒப்புதல் தேவை இல்லாமல் இருந்தது. எனவே, தோட்டங்களின் உரிமையாளர்கள் கோயில் அவர்களின் நிலப் பகுதிக்குள் இருந்தாலும், அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. சில தோட்ட உரிமையாளர்கள் கோயிலை நிர்வகிக்கும் குழுவுக்குத் தெரிவிக்காமல், அல்லது நிலத்தை வாங்குபவரிடம் குறிப்பாக இந்துத் தொழிலாளர்களின் எண்ணிக்கையும் பெரிதாக இல்லாதபோது தோட்டத்தில் இருக்கும் கோயிலைப் பற்றி எதையும் குறிப்பிடாமல் விற்றுவிடுகின்றனர்.

## கோயில் செயற்குழுவைப் பதிவு செய்வதற்கான ஆர்வம்

1970-ஆம் ஆண்டிற்குப் பிறகு அதாவது, கோயில், நில உரிமைக்கான ஆவணங்கள் மூலம் உறுதிப்படுத்த இயலாத நிலையில் மேம்பாட்டு இடங்களில் இது போன்ற கோயில்கள் உடைப்பட்ட சமயம் கோயிலைப் பதிவு செய்வதற்கான ஆர்வம் எழுந்தது. ஒவ்வொரு முறையும் பதிவுப் பெறாத கோயில்களின் மீது நடவடிக்கை எடுக்கும் சமயங்களில் இதற்கான ஆர்வம் மேலும், கூடியது. மேலும், நில உரிமைக்கான ஆதாரம் இல்லாவிட்டாலும் பக்தர்கள் சங்கங்கள் பதிவு செய்யப்படுவதற்கான வாய்ப்புகள் அதிகம் இருந்தது. முக்கியமான கோயில் நிர்வாகிகளுக்கு, தோட்டத்திற்கு வெளியே வசிக்கும்போது, பக்தர்கள் சங்கத்தைப் பதிவு செய்யும்போது அவர்களது வீட்டு முகவரியைப் பயன்படுத்தவது அவர்களுக்கு இலகுவாக இருந்தது, மற்றவர்கள் தோட்டத்தின் உரிமையாளரால் வழங்கப்படும் சலுகையின் கீழ் தொடர்ந்து செயல்படலாயினர்.

நில உரிமையாளர் தனது சொந்த நிலத்தில் ஒரு கோயில் இருப்பதற்கு மட்டுமே ஒப்புதல் அளிக்க வேண்டும். நில உரிமையாளரின் அனுமதி உட்பட கோயில் கட்டட வரைபடங்கள் முறையான ஆவணங்களின்றி மனு செய்யும்போது உள்ளூராட்சி மன்றத்தினால் அனுமதி வழங்க இயலாது. பெரும்பாலான கோயில் நிர்வாகிகள் கோயில் பக்தர்கள் சங்கங்களைப் பதிவு செய்யப் பல ஆண்டுகளாக தொடர்ந்து முயற்சிகளை மேற்கொண்டிருந்ததால் நில உரிமையாளர்கள் சம்மதம் இல்லாமல் சுலபமாகச் சங்கத்தைப் பதிவு செய்ய முடிந்தது. இந்த நிலைமை 1994-ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் மாறியது. இருப்பினும், நில உரிமையாளரை ஈடுபடுத்தாமல் இத்தகைய பதிவுகள் கோயில் நிர்வாகத்தினருக்குத் தவறான நம்பிக்கையை ஏற்படுத்தியுள்ளன, அதே நேரத்தில் நில உரிமையாளரை எளிதில் கைக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கைக்கு இது வழிவகுத்தது. ஏனெனில், நில உரிமையாளரை தமது நிலத்தில் கட்டப்பட்டுள்ள கோயிலை பதிவு செய்யக் கட்டாயப்படுத்தும் எந்த விதிமுறையும் இல்லை.

## நில உரிமையாளரின் எழுத்து மூலமான அனுமதி பற்றி சங்கப் பதிவதிகாரியின் நிலைப்பாடு

எப்படி இருந்தாலும், கோயில்களை நிர்வகிக்க விரும்பும் பக்தர்கள் சங்கத்தைப் பதிவு செய்வதற்கு முன்பு கோயில் இருக்கும் நிலத்தின் உரிமையாளரின் அனுமதி கடிதம் கொண்டுவர வேண்டும் எனச் சங்கப் பதிவதிகாரி கோயில் நிர்வாகத்திடம் கேட்கின்றார். தோட்ட முதலாளியோ நிலத்தின் உரிமையாளரோ எழுத்து மூலமாக உத்திரவாதத்தைத் தர மறுக்கும்போது கோயில் நிர்வாகங்கள் சங்கத்தைப் பதிவு செய்ய பலவிதத் தடங்கல்களை எதிர்நோக்குவதாக ஆய்வின்போது தெரிவித்தனர். பெரும்பாலும் தோட்டங்கள் இன்று வேறு உரிமையாளருக்கு மாறியுள்ளதால் கோயில் பற்றிய புதிய உரிமையாளரின் நிலைப்பாடு வேறாக இருக்கின்றது. இந்த மாற்றத்தின் விளைவாக நில உரிமையாளர்களின் உறுதி கடிதம் இல்லாமல் தோட்டப்

புறங்களில் உள்ள கோயில்களைப் பதிவு செய்ய முடியாத நிலையில் இருக்கின்றனர். இது, சம்பந்தப்பட்ட கோயில்களின் நிர்வாகத்தினரை கவலையடையச் செய்துள்ளது. இதன் விளைவாக, சங்கங்களின் பதிவதிகாரியால் பக்தர்கள் சங்கத்தைப் பதிவு செய்வதற்கான பல விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டுள்ளன.

**அட்டவணை 15: இந்த ஆய்வில் பெறப்பட்ட தரவுக்கு ஏற்ப சங்கங்களின் பதிவதிகாரியிடம் பதிவு பெற்ற சங்கங்கள்**

| பதிவின் வகை | | மத்திய மலாக்கா (MT) | | ஜாசின் (J) | | அலோர் காஜா (AG) | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| நிர்வாக சங்கம் | சொந்த நிலம்/ கோயில் | 17 | 1 | 1, 9*, 27, 34, 42 | 5 | 3, 21, 38 | 3 | 9 |
| | மற்றவர் நிலத்தில் உள்ள கோயில் | | | 3,10*,11 | 3 | 35 | 1 | 4 |
| | | | 1 | | 8 | | 4 | 13 |
| பக்தர்கள் சங்கம் | சொந்த நிலம்/ கோயில் | 12, 13, 14, 19,22, 24, 27, 38, 39, 40, 43 | 11 | 2, 4, 5, 7, 22, 24, 25, 28, 36, 37 | 10 | 2, 4, 23, 25, 30, 39 | 6 | 27 |
| | மற்றவர் நிலத்தில் உள்ள கோயில் | 15, 16, 20, 26, 28, 29, 32, 33, 34, 35, 36, 37, 41 | 13 | 6, 8, 14, 16, 17, 21, 23, 29, 35, 38, 39, 40, 41 | 13 | 1, 5, 6, 7, 11, 15, 24, 31^, 32, 34, 46 | 11 | 37 |
| | | | 24 | | 23 | | 17 | 64 |
| மொத்தம் | | 25 | | 31 | | 21 | | 77 |

*** இரண்டு கோயில் 1 பதிவு (J 9-10): நிர்வாக சங்கம். ஆய்வில், இந்தக் கோயில்கள் வெவ்வேறு இடங்களில் அமைந்திருப்பதால் 2 கோயில்களாகக் கணக்கிட்டுள்ளோம். J10 கோயில் அரசு நிலத்தில் உள்ளது. J10 கோயில் வேறொரு பக்தர்கள் சங்கப் பதிவைப் பெற்றிருந்தாலும் அதற்குக் கோயிலை நிர்வகிக்க அனுமதி இல்லை.**

**^AG31 கோயில் 2 பக்தர்கள் சங்கங்களைப் பதிவு பெற்றிருந்தும் கடைசியாகப் பதிவுப் பெற்ற சங்கமே இக்கோயிலை நிர்வகிக்கின்றது**

## கோயிலை நிர்வகிக்கும் பண்பாட்டு, கலை அமைப்பு

2002-ஆம் ஆண்டு முதல் மலாக்காவில், ஆயர் குரோ பகுதியில் அமைந்துள்ளது (MT27) ஸ்ரீகிருஷ்ண பலராம் இந்திய பண்பாட்டு கலை மையம். இது வழிபாட்டிற்குப் பயன்படும்போதும், இதை ஓர் இந்து பண்பாட்டு, கலை இயக்கமாகவே (பி.பி.எம். 001-04-07022002) பதிவு செய்துள்ளனர். சங்கங்களின் பதிவதிகாரியால் நிர்ணயிக்கப்பட்ட பண்பாட்டு, கலை, இலக்கியப் பிரிவில் இது இயங்குகிறது. இந்த ஆய்வில் இதையும் நாம் ஒரு வழிபாட்டுத் தலமாகவே கருதி இணைத்துள்ளோம்.

இருப்பினும், சங்கங்களின் பதிவதிகாரி இதைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது, இந்த அமைப்பின் குறிக்கோள்கள் மற்றும், நோக்கங்கள் பின்வருமாறு இருகின்றன என்பதைத் தெளிவுபடுத்தினார்:

1. **‘இந்திய கலை மற்றும், கலாச்சாரம் குறித்த அறிவை உறுப்பினர்களிடையே ஊக்குவித்தல்;**
2. **சம்பந்தப்பட்ட அரசு தரப்பினரின் முன் அனுமதியுடன் சமயம் மற்றும், கலாச்சார கலை விழாக்களை நடத்துதல்;**
3. **உறுப்பினர்களின் நலனைக் கவனித்தல்;**
4. **உறுப்பினர்களிடையே ஒற்றுமையையும் நட்பையும் வலுப்படுத்துதல்;**
5. **தொண்டு முயற்சிகளுக்கு உதவுதல்;**
6. **சங்கங்களின் பதிவதிகாரி மற்றும், பிற தொடர்புடைய அரசு தரப்பினரின் முன் ஒப்புதல் பெற வேண்டியது அவசியம் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு அமைப்பின் நோக்கத்தை அடைய நன்கொடைகளைச் சேகரித்தல்;**
7. **அரசு தரப்பினரின் முன் ஒப்புதல் பெற வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு; அமைப்பின் நோக்கத்தை அடைய நிலம் மற்றும், பிற சொத்துக்களுக்கு விண்ணப்பிக்க, வாடகைக்கு எடுக்க, கையகப்படுத்த அல்லது இவற்றைச் சொந்தமாக்கிக்கொள்ளுதல்;**
8. **அமைப்பின் நோக்கங்களை மேம்படுத்த வணிக மற்றும், முதலீட்டு நடவடிக்கைகளில் ஈடுபடுதல்.**

**எந்தவொரு வியாபார அல்லது முதலீட்டு நடவடிக்கைகளிலும் ஈடுபட்டதன் விளைவாக அமைப்பினால் ஈட்டப்பட்ட அனைத்து வருமானமும், அமைப்பின் நோக்கங்களை அடைவதற்கு ஊக்குவிக்கவும், விரிவாக்கம் மற்றும், இது போன்ற செயல்களுக்கு மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும்; மேலும், வருமானத்தின் எந்தப் பகுதியும் வட்டியாகவோ, லாபமாகவோ அல்லது போனஸாகவோ அமைப்பின் எந்தவொரு உறுப்பினருக்கும் கொடுக்க, பயன்படுத்தக் கூடாது. எவ்வாறாயினும், இந்த ஆதாயங்கள் நல்ல எண்ணத்தோடு, அமைப்பின் எந்தவோர் உறுப்பினர் அல்லது பணியாளருக்கும் ஊதியமாகவோ அல்லது செலவுகளை ஈடுகட்டுவதற்கோ செலுத்தப்படுவதை இந்த விதி தடுக்கவில்லை.’**

அமைப்பின் குறிக்கோள்களைக் காணும்போது இந்த அமைப்பு கலாச்சார மற்றும், கலை ரீதியானது என்பது தெளிவாகிறது. அதன்படி, இந்த அமைப்பு, கலை மற்றும், கலாச்சாரம் என்ற பிரிவின் கீழ் பதிவு செய்யப்பட்டுள்ளது. கோயிலை நிர்வகிப்பதை அதன் அமைப்பின் நோக்கமாகக் கூறவில்லை. அதோடு, அமைப்பின் பதிவு செய்யப்பட்ட முகவரி வணிக வளாகத்திற்கு எதிரே உள்ள ஒரு தனியார் நிலத்தில் இருப்பது தெரிகிறது.

இந்த விளக்கம் பண்பாட்டு, கலை பிரிவின் கீழ் பதிவு செய்யப்பட்டுள்ள மலாக்கா கிருஷ்ண பலராம் இயக்கத்தின் சிறப்பான தன்மைகளைக் காட்டுகிறது. இத்தன்மைகளை ஆராயும்பொழுது இந்தியக் கலாச்சாரமும் கலையும் இந்துச் சமயத்திலிருந்து பிரிக்க முடியாதவை என்பது உண்மைதான் என்பதை அறியமுடியும். மேலும், மலாக்காவில் உள்ள பிற இந்துக் கோயில்களின் நிர்வாகத்துடன் ஒப்பிடும்போது இந்த அமைப்பின் நடவடிக்கைகள் இந்து சமய வளர்ச்சியில் ஒரு சிறப்பு அணுகுமுறையாகக் காணப்படுகின்றது. பொருளாதார நடவடிக்கைகளுடன் இணைந்த பண்பாட்டு-கலை நடவடிக்கைகளின் வழி இந்து சமய வழிபாட்டை இணைத்திருப்பது அமெரிக்க / ஐரோப்பிய நாடுகளில் நடைமுறையில் உள்ளதைப் போன்ற ஒரு தனித்துவமான அணுகுமுறையாகும் - இது இந்த அமைப்பின் தூரநோக்குச் சிந்தனையைக் காட்டுகிறது.

## TRUST எனப்படும் அறங்காப்பகம் மூலம் பதிவுச் செய்யப்பட்ட கோயில்கள்

மலாக்கா செட்டி சமூகத்திற்குச் சொந்தமான கோயில்கள் மலாக்கா உயர் நீதிமன்றத்தின் உத்தரவால் நிறுவப்பட்ட அறங்காப்பகத்தின் (டிரஸ்ட்) கீழ் 1962-ஆம் ஆண்டிலிருந்து பட்டியலிடப்பட்டுள்ளன. MT2,3,4,5,6,7,8,9,10,11 ஆகிய மலாக்கா செட்டிச் சமூகத்தைச் சேர்ந்த 10 கோயில்கள் இந்த நம்பிக்கை ஆவணத்தில் பட்டியலிடப்பட்டுள்ளன. ஆய்வின்போது இந்தக் கோயில்களில் சில, மற்றவர்களுக்குச் சொந்தமான நிலத்தில் அமைந்திருந்தன. இருப்பினும், இவர்கள் கோயில் நிலத்தை மலாக்கா செட்டிகள் சமூக அறங்காப்பகத்திடம் ஒப்படைக்கத் தயாராக இருந்தபோதிலும் நிலத்தைப் பிரிப்பதற்கான செலவு மற்றும், நிலத்திற்கான பிரீமியம் அவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என நிபந்தனை விதிக்கின்றனர். MT6 மற்றும், MT9 கோயில்கள் இப்போது மலாக்கா செட்டி சமூகத்தினரின் நிலங்களுக்கு வெளியே

அமைந்துள்ளன. இந்தக் கோயில்கள் மலாக்கா செட்டி சமூகத்திற்குப் பிரத்தியேகமானவை என்பதால் வெளியார் யாரும் இவர்களின் விவகாரங்களில் தலையிடுவதில்லை.

செங்கில் உள்ள MT1 கோயில் நிலத்துடன் கட்டிடச் சொத்து, மற்றும், சில அசையாச் சொத்துகள் மலாக்கா நாட்டுக்கோட்டை செட்டியார் அறங்காப்பகத்தின் கீழ் அமைந்துள்ளன. மலாக்காவில் இவர்களின் எண்ணிக்கை சிறியதாக இருந்தாலும், இன்றுவரை பிரத்தியேகமாக நிர்வகிக்கப்படும் பரப்பளவில் பெரிய கோயிலான இது, நாடு சுதந்திரம் அடைவதற்கு முன்னர் முதலாளிமார் மற்றும், செல்வந்தர்களின் நிலைப்பாட்டிற்கு ஏற்ப, நாட்டுக்கோட்டை செட்டியார் அல்லது நாகரத்தார் சமூகத்தினரிடம் இன்றும் இருக்கும் மிகப் பெரிய சொத்தாகக் கருதப்படுகிறது.

இந்த வகையான அறங்காப்பகங்களுக்குக் கீழ் சொந்தமான சொத்துகள் இருப்பதால் இந்தச் சொத்துக்களின் வழி வரும் வருமானம் கோயில்களின் விவகாரங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது. அத்தகைய அறங்காப்பகங்கள் நீதிமன்றத்தில் DEED எனப்படும் சிறப்புப் பத்திரம் மூலம் பதிவு செய்யப்பட்டுள்ளதால் அதன் கீழ் உள்ள கோயில்கள் மலேசியாவின் சங்கங்களின் பதிவாளரிடம் பதிவு செய்யத் தேவையில்லையெனக் கருதப்படுகிறது. மலாக்காவில் இரண்டு அறங்காப்பகங்களின் கீழ் மொத்தம் 11 கோயில்கள் உள்ளன. இது போன்ற அமைப்புகளைக் கண்காணிக்கத் தனி சட்டவிதிகள் உள்ளன என்பதையும் சங்கங்களின் பதிவதிகாரி தெளிவுப்படுத்தினார்.

## கோயில்களின் மொத்தப் பதிவு

முடிவாக, மொத்தம் 13 கோயில்கள் கோயில் நிர்வாகச் சங்கங்களாகவும், 63 பக்தர்கள் சங்கங்களாகவும், 1 பண்பாட்டு-கலை இயக்கமாகவும், மற்றும், 11 கோயில்கள், இரண்டு அறங்காப்பகங்களின் கீழ் இயங்குகின்றன. இந்தக் கோயில்களில் சங்கங்களின் பதிவாளரின் விதிகளின்படி கோயிலை நிர்வகிக்க முடியாத பக்தர்கள் சங்கத்தின் வகையை மட்டுமே சேர்ந்தவை 63 அல்லது 43.15% என்பது கவனிக்கத்தக்கது. இருப்பினும், மொத்தம் இருக்கும் 146 கோயில்களில் 88 (60.27%) கோயில்களே ஏதோ ஒரு வகையான பதிவைப் பெற்றிருக்கின்றன. சொந்த நிலத்தைப் பொறுத்தவரை நிர்வாகச் சங்கங்களாகப் பதிந்துள்ள 13 கோயில்களில் நான்கு கோயில்கள் தோட்ட/அரசு நிலத்தில்தான் உள்ளன. பக்தர்கள் சங்கங்களைப் பொறுத்தவரை, ஆய்வு நடைபெற்ற சமயம், 26 கோயில்கள் சொந்த நிலத்தைக் கொண்டுள்ளன. மற்ற 37 சங்கங்கள் மற்றவர்களின் நிலத்திலுள்ள கோயில்களைப் பராமரிக்கின்றன. இந்த ஆய்விலுள்ள மற்ற 58 கோயில்கள் எத்தகைய பதிவையும் பெறாதவை. ஆகையால், மொத்தத்தில் மலாக்காவில் 95 கோயில்கள், அல்லது 65.1%, மற்றவர்களின் நிலத்தில் அமைந்திருக்கும் வேளை, 51 கோயில்கள், அல்லது 34.9% மட்டுமே சொந்த நிலத்தில் இருப்பது தெளிவாகிறது.

இருப்பினும், பக்தர்கள் சங்கம் தொடர்பாக, செப்டம்பர் 4, 2020-ஆம் நாளன்று மலாக்காவில் உள்ள சங்கங்களின் பதிவதிகாரி அளித்த விளக்கம் ஒரு குழப்பமான நிலையைக்காட்டுகிறது. ஒழுங்குபடுத்தும் திட்டத்தின் வாயிலாக, ஏற்கனவே தங்கள் சொந்த நிலத்தை வைத்திருக்கும் பக்தர்களின் சங்கம் **'அதன் துணைப்பிரிவைப் புதுப்பித்துள்ளது. ஆனால், பெயரைப் பக்தர்களின் சங்கத்திலிருந்து நிர்வாகச் சங்கம் என்று மாற்ற வேண்டிய கட்டாயம் இல்லை, ஏனெனில், சம்பந்தப்பட்ட சங்கம் நீண்டகாலமாக இயங்கி வருவதோடு அந்த வட்டாரத்தில் நன்கு அறிந்த ஒன்றாக இருப்பதால் பல சிரமங்கள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளன. (வங்கி கணக்கின் பெயர், சங்கச் சொத்துக்கள், சங்க / கோயில் வாயில் போன்றவற்றில் இருக்கும் பெயர்கள்). இந்த முடிவு செப்டம்பர் 23, 2019-ஆம் நாளன்று நடந்த ஒழுங்குபடுத்தும் திட்டத்தின் 2-ஆவது தொடர் சம்பந்தமான கலந்துரையாடல் நிகழ்வில் எடுக்கப்பட்டது. இந்த நிகழ்வில் மலாக்கா மாநிலத்தின் வீட்டுவசதி, உள்ளாட்சி, சுற்றுச்சூழல் மற்றும், பசுமை தொழில் நுட்பத்திற்கான முன்னாள் ஆட்சிக்குழு உறுப்பினர் மாண்புமிகு டத்தோ தே கோக் கீயூவ் கலந்துகொண்டார்.'**

கோயில் அமைப்பின் விதிமுறையில் துணைப்பிரிவின் விவகாரம் சம்பந்தமாக மலேசிய அரசாங்க நிலையில், தேசிய நிலையில் சங்கங்களின் பதிவதிகாரியால் தீர்மானிக்கப்படுவதால் இந்த விளக்கம் சற்றே குழப்பமானதாக இருக்கிறது. மேலும், நிர்வாகச் சங்கங்கள் மற்றும், பக்தர்கள் சங்கங்கள் வெவ்வேறு செயல்பாடுகளைக் கொண்டுள்ளன. மலாக்கா மாநில நிலையில் இதன் விளைவாகக் கோயிலை நிர்வகிக்க ஒரு பக்தர்கள் சங்கம் அனுமதிக்கப்பட்டால், அது நிச்சயமாக ஒருங்கிணைக்கப்படாத நிலையை உருவாக்கித்

தேசிய அளவில் சிக்கல்களை உருவாக்கும். இது ஒரு தற்காலிக முடிவாகத்தான் நாம் கருதவேண்டியுள்ளது. ஏனெனில், இது தேசிய அளவில் முடிவு செய்யப்படும் வரை, அது இறுதியானதென ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

## குஜராத்தி மற்றும், சீக்கிய (பஞ்சாபி) சமூகத்தினரின் கோயில்கள்

இந்த ஆய்வில் மலாக்காவில் உள்ள சீக்கிய மற்றும், குஜராத்தி சமூகத்தினரின் கோயில்கள் சேர்க்கப்படவில்லை, இருப்பினும், இந்தக் கோயில்கள் குறித்த குறிப்புகளை இந்த ஆய்வின் முடிவில் கூடுதல் தகவல்களாகவும், ஒப்பிட்டுப் பார்க்கவும் இணைக்கப்பட்டுள்ளன. இந்தச் சமூகங்களின் வழிபாட்டுத் தலங்கள் மலாக்கா மாநிலத்தில் உள்ளவர்களுக்கு மட்டுமே அல்லாமல் பிற இடங்களில் உள்ளவர்களுக்கும் பெரிதும் பயன்படுகின்றன. இவை உள்ளூர் மற்றும், வெளிநாட்டு வழிபட்டாளர்களின் வரவேற்பைப் பெற்றுள்ளன. மேலும், அவை மலாக்காவில் இந்துக்கள்/தமிழர்கள் எழுப்பிய கோயில்களிலிருந்து சற்று வேறுபாடான அம்சங்களைக் கொண்டிருப்பதால் தனித்தனியாகப் பார்க்கப்பட வேண்டும் என்பதால் அவற்றைப் பற்றிய குறிப்புகள் இணைக்கப்பட்டுள்ளன.

## மலாக்காவில் உள்ள சாய்பாபா மற்றும், சிரிடி சாய்பாபா மையங்கள்/ இந்துச் சமய அமைப்புகள்

கோயிலின் வரையறைக்குள் வராத இந்துச் சமய அமைப்புகளைப் பற்றிய விவரங்களும் தனியாக இணைக்கப்பட்டுள்ளன. இந்த ஆய்வில் இந்த மையங்கள் சேர்க்கப்படவில்லை. இருப்பினும், இந்த மையங்கள் இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் வழிபடுவதற்கு வேறொரு வாய்ப்பை வழங்குவதோடு இவர்கள் ஏற்பாடு செய்யும் சமயம் சம்பந்தமான நிகழ்ச்சிகளில் இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் கலந்துகொள்கிறார்கள். ஆதலால், இந்த மையங்களின் நடவடிக்கைகளைப் பற்றிய குறிப்புகள் சுருக்கமாக இந்த ஆய்வில் பின் இணைப்புகளாகச் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த அமைப்புகளில் பெரும்பாலானவை அதன் நிறுவனர்களை முன்னோடியாகக் கொண்ட போதனைகளை முன்னிறுத்தி வழி நடத்தப்படுகின்றன. மேலும், இவை இந்த நாட்டிலும் சர்வதேச அளவிலும் கிளைகளைக் கொண்டுள்ளன என்பதையும் இந்த இணைப்புக் கட்டுரைகள் தெளிவுப்படுத்தும்.

## மலேசிய இந்துச் சங்கத்தின் உறுப்பினர் என்று ஒப்புக்கொள்ளும் கோயில்கள்

இந்த ஆய்வின்போது மலாக்காவில் உள்ள 41 கோயில்கள் மட்டுமே மலேசிய இந்துச் சங்க உறுப்பினர்களாக இருப்பதாக ஒப்புக் கொண்டாலும் இந்து சங்கம் காட்டிய எண்ணிக்கை இதைவிடச் சற்று அதிகமாக இருக்கின்றது என்பதையும் கண்டோம்.

## பதிவு செய்யப்படாதக் கோயில்கள்

இந்த ஆய்வில் உள்ள 146 கோயில்களில் மலாக்கா மாநிலத்தில் இன்னும் 58 கோயில்கள், அல்லது 39.73%, எத்தகைய பதிவையும் பெறவில்லை என்பதைக் கண்டோம். மத்திய மலாக்காவில் 8 கோயில்கள், ஜாசினில் 16 கோயில்கள், மற்றும், அலோர்காஜாவில் 35 கோயில்கள் இன்னும் பதிவு செய்யப்படவில்லை. இந்தக் கோயில்களில், பெரிய மற்றும், நன்கு பராமரிக்கப்படும் கோயில்களும் உள்ளன. ஆனால், அவை பல்வேறு காரணங்களுக்காக, குறிப்பாக கோயில் நில உரிமம் காரணங்களுக்காகப் பதிவு செய்யப்படவில்லை. எவ்வாறாயினும், தற்போது, கோயிலை வேறு இடத்திற்கு மாற்ற விரும்பும், அல்லது, ஓர் இடத்தில் ஒரு கோயிலைக் கட்ட விரும்பும் எந்தவோர் அமைப்பும், மலேசியாவின் சங்கங்களின் பதிவதிகாரியிடம் ஒரு சங்கமாகப் பதிவு செய்திருக்க வேண்டும் என்பதை ஏற்கனவே புரிந்துவைத்துள்ளனர். இருப்பினும், பல கோயில் நிர்வாகங்கள் முறையான எத்தகைய நடவடிக்கையும் எடுக்காமலேயே இருக்கின்றன.

## கோயிலின் பெயர்கள்

இந்த ஆய்வில் மலாக்காவில் உள்ள கோயில்கள் 16 ஆண் தெய்வங்களின் பெயர்களிலும் 18 பெண் தெய்வங்களின் பெயர்களிலும் காணப்படுகின்றன. இந்தப் பெயர்களில் மாரியம்மன் என்ற பெயரைக் கொண்ட ஆலயங்கள் மொத்தம் 66 ஆகும். சிறப்புப் பெயராகக் கருமாரியம்மன் என்ற பெயரில் 6 கோயில்கள் உள்ளன. மலாக்காவில் உள்ள 49.31% கோயில்கள் இந்தப் பெயரைப் பயன்படுத்துகின்றன. காளியம்மன் பெயரில் 16 கோயில்கள் உள்ளன. துர்கை அம்மன் பெயரில் ஐந்து கோயில்களும் மீனாட்சி அம்மன் என்ற பெயரில் மூன்று கோயில்களும் இருக்கின்றன. கோயில்களில் 108 அல்லது 73.97 சதவிகிதம் பெண் தெய்வங்களுக்கு அர்ப்பணிக்கப்பட்டவை. இங்கும் சரி தமிழ்நாட்டிலும் சரி, குறிப்பாக 'அம்மா' எனும் சொல் பெண் தெய்வத்தின் சின்னமாகக் காண்பதில் தமிழ் இந்துச் சமூகத்தினர் மிகுந்த ஆர்வத்தைக் கட்டுவதை இந்த ஆய்வு பகர்கின்றது.

மாறாக, ஆண் தெய்வங்களின் பெயர்களைக் கொண்ட கோயில்களைக் காணும்போது, விநாயகர் பெயரில் எட்டு கோயில்களும், முனீஸ்வரர் பெயரிலும் சுப்பிரமணியர் பெயரிலும் தலா 6 கோயில்களும் உள்ளன. மேலும், தலா மூன்று கோயில்கள் சிவன் பெயரிலும், முனியாண்டி பெயரிலும், மதுரை வீரன் பெயரிலும் இருக்கின்றன.

**அட்டவணை 16 : மலாக்காவில் மூலமூர்த்திகள் (ஆண் தெய்வங்கள்) பெயர்களைக் கொண்ட இந்துக் கோயில்களின் பெயர்கள்**

| மூலமூர்த்திகள் | மத்திய மலாக்கா | | ஜாசின் | | அலோர் காஜா | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| சிவன் /கைலாசநாதர் வனத்தாண்டவர் | 4,14 | 2 | 10 | 1 | | 0 | 3 |
| முருகன் சுப்ரமணியர் (சன்னியாசிமலை ஆண்டவர்) | 1, 22, 38 | 3 | (21), 22 | 1+1 | 1, (3), 21 | 2+1 | 6 +2 |
| விநாயகர் | 2,17 | 2 | 1,21 | 2 | 3, 9, 25, 48 | 4 | 8 |
| வைத்தீஸ்வரர் | | 0 | | 0 | 35 | 1 | 1 |
| சுந்தரேஸ்வரர் | | 0 | | 0 | (15), (22) | 0+2 | 0 +2 |
| முனீஸ்வரர் | 18, 44, (21) | 2 +1 | 18, (20), (40) | 1+2 | 10, 30, 52 | 3 | 6 +3 |
| முனியாண்டி | (43) | 0 +1 | 29, 40, (41), 42 | 3+1 | | 0 | 3 +2 |
| முனியப்பன் | | 0 | | 0 | 45 | 1 | 1 |
| முத்தப்பன் | | 0 | (6) | 0 +1 | | 0 | 0 +1 |
| கிருஷ்ண பலராம் | 27 | 1 | | 0 | | 0 | 1 |
| அய்யனார் | 7 | 1 | 46 | 1 | | 0 | 2 |
| தர்மராஜா | 10 | 1 | | 0 | | 0 | 1 |
| மாவீரன் | 36 | 1 | | 0 | | 0 | 1 |
| சடா முனி | | 0 | | 0 | 47 | 1 | 1 |
| கருப்புசாமி | | 0 | | 0 | 54 | 1 | 1 |
| மதுரை வீரன் | 21 | 1 | 24,34 | 2 | | 0 | 3 |
| **மொத்தம்** | | 14+2 | | 11+5 | | 13+3 | 38+10 |

குறிப்பு: + கோயிலின் பிரதான பெயரில் இரண்டாவது பெயராகப் பயன்படுத்தப்படும் தெய்வத்தின் பெயரைக் காட்டுகிறது

**அட்டவணை 17 : மலாக்காவில் மூலமூர்த்திகள் (பெண் தெய்வங்கள்) பெயர்களைக் கொண்ட இந்துக் கோயில்களின் பெயர்கள்**

| மூலமூர்த்திகள் | மத்திய மலாக்கா | | ஜாசின் | | அலோர் காஜா | | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| மாரியம்மன் | 3,12,15, 16,19, 24, 26, 30, 32, 37, 39, 40, 41, 42, 43 | 15 | 2, 3, 4, 5, 6, 7, 9, 11, 12, 13, 14, 15, 16, 17, 19, 22, 23, 25, 27, 30, 31, 32, 33, 35, 41, 44, 45 | 26+1 | 4, 6, 7, 11, 12, 13, 14, 16, 17, 19, 20, 23, 24, 28, 32, 33, 36, 37, 41, 42, 48, 49, 50, 55, 56 | 25 | 66+1 |
| கருமாரியம்மன் | 13, 31 | 2 | 28, (34) | 1+1 | 27, 31, 39 | 3 | 6+1 |
| காளியம்மன் | 9, (18), 20, 23, (18), 34 | 4+2 | 20, 36, 38 | 3 | 2, 5, 8, 18, 34, 43, 44, 46, 51 | 9 | 16+2 |
| துர்கையம்மன் | 28, 29 | 2 | 8, 26 | 2 | 29 | 1 | 5 |
| ராஜ ராஜேஸ்வரி | 25, 33 | 2 | | | | | 2 |
| மீனாட்சியம்மன் | | | | | 15, 22, 26 | 3 | 3 |
| அங்காலபரமேஸ்வரி | 5 | 1 | | | | | 1 |
| (கெ)லெங்காதரியம்மன் | 6 | 1 | | | | | 1 |
| காத்தாயியம்மன் | 8 | 1 | | | | | 1 |
| அம்மன் | 11 | 1 | | | | | 1 |
| நாகேஸ்வரியம்மன் | (16), (20) | 0+2 | 39 | 1 | | | 1+2 |
| சாமூண்டேஸ்வரியம்மன் | 35 | 1 | | | | | 1 |
| திரௌபதையம்மன் | (38) | 0+1 | | | | | 0+1 |
| தையல் நாயகி | | | | | (35) | 0+1 | 0+1 |
| மூகாம்பிகை | | | | | 38 | 1 | 1 |
| கன்னியம்மன் | | | | | 53 | 1 | 1 |
| பிரிதியங்கரா தேவி | | | 37 | 1 | | | 1 |
| சிவசக்தி | | | 43 | 1 | | | 1 |
| **மொத்தம்** | | 30+5 | | 35+2 | | 43+1 | 108+8 |

குறிப்பு : + கோயிலின் பிரதான பெயரில் இரண்டாவது பெயராகப் பயன்படுத்தப்படும் பெண் தெய்வத்தின் பெயரைக் காட்டுகிறது

## வாழும் இடம், செய்யும் தொழிலுக்கு ஏற்ப பெயர்கள்

மலாக்கா மாநிலத்தில் மற்றப் பெயர்களைக் கொண்ட கோயில்கள் தலா இரண்டிற்கும் குறைவாகவே காணப்படுகின்றன. பொதுவாக, நகரங்களிலும் சிறிய பட்டணங்களிலும் அமைக்கப்பட்ட கோயில்கள் சுப்பிரமணியர், விநாயகர் மற்றும், சிவன் என்ற பெயரில் உள்ளன. மலாக்காவில் உள்ள வியாபாரிகள் மற்றும், நகரவாசிகள் விநாயகர், சுப்பிரமணியர் மற்றும், சிவன் போன்றத் தெய்வங்களையே தங்களுடைய கோயிலுக்கு முக்கிய தெய்வங்களாகத் தெரிவு செய்தனர். தேவநாயகம் செட்டி 1781-ஆம் ஆண்டில் உருவாக்கிய மிகப் பழமையான கோயிலான ஸ்ரீபொய்யாத விநாயகமூர்த்தி கோயில் இதையே நிரூபிக்கின்றது. முதலில் குடியேறிய இடங்களிலும், தங்கள் பாதுகாப்புக்கு ஆபத்தானதாகக் கருதப்பட்ட இடங்களிலும் கடவுளின் பாதுகாப்பு வேண்டி, மாரியம்மன் தெய்வத்தைத் தேர்ந்தெடுத்தனர். புதிய இடங்களில் குடியேறியவர்களும் அரசாங்கத் துறை ஊழியர்களும் பெரும்பாலும் கடவுளிடம், தீய சக்திகளிடமிருந்து பாதுகாப்பு வேண்டியே வணங்குகிறார்கள்.

## உட்புறப் பகுதிகளில் காக்கும் தெய்வங்கள்

வழிபடுபவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கும் என்ற எண்ணத்தில் தெய்வங்கள் கோயில்களில் பராமரிக்கப்படுகின்றன. இந்த வழக்கம் முன்பு இவர்களின் பூர்வீகமான இந்தியாவின் தமிழ்நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்டதாகும். இதையே இங்கு மலாக்காவில் குடியேறிய தொழிலாளர்கள் வழக்கமாகப் பின்பற்றி வந்துள்ளனர். மலாக்காவின் செட்டி சமூகத்தினரும் மலாக்காவில் குடியேறியபோது இதே மாதிரியான வழக்கத்தைக் கொண்டிருந்தனர். தங்கள் விவசாய நிலங்களிலும் மற்றும், கிராமத்திலும் மாரியம்மன் கோயிலை எழுப்பினர். அதேபோலச் சிவனுக்கும் ஒரு கோயில் கிராமத்தின் நுழைவாயிலின் முன் எழுப்பப்பட்டது.

இன்றைய கோயில்களின் நிலவரம் மலாக்காவில், நகர்ப்புறங்களில் சிவன், சுப்பிரமணியர் மற்றும், விநாயகர் என்ற தெய்வங்களை வழிபாடுவோர் எண்ணிக்கை அதிகம் என்பதைக் காட்டுகிறது. செர்க்காம் தோட்டத்தில், முதல் குடியேறியவர்களில் பெரும்பாலோர் தமிழ்நாட்டின் சேலம் மாவட்டத்திலிருந்து வந்தவர்கள் என்று அறியப்படுகிறது - மேலும், அவர்கள் ஸ்ரீசுப்பிரமணியர் கோயிலை 1890-ஆம் ஆண்டில் நிறுவினர். தோட்டங்களில் இந்தப் பெயரில் பிற கோயில்கள் இந்துக்கள் இங்குக் குடியேறிய பின்னர், பிற்காலத் தலைமுறையினரால் இருபதாம் நூற்றாண்டில் அமைக்கப்பட்டவை.

இங்கு வாழ்ந்த இந்துக்களில் பலர் ஆரம்பத்தில் பல்வேறு உடல்நலக் கேடுகளையும் வனவிலங்குகளின் அச்சுறுத்தல்களையும் எதிர்கொண்டனர். வேலை செய்யும் இடங்களில் முனீஸ்வரர், முனியாண்டி, துர்கை அம்மன், காளியம்மன் போன்ற பாதுகாப்பைக் கொடுக்கக்கூடிய தெய்வங்களைப் பின்பற்றி வழிபட்டனர்.

## இந்துக் கோயில்களில் ‘டத்தோ’ வழிபாட்டின் செல்வாக்கு

மலேசியாவில் மலாய்க் கிராமங்களுக்கு அருகில் வசிக்கும் தோட்டத் தொழிலாளர்களோ அரசுப் பணியாளர்களோ உள்ளூர் மக்களின் நடைமுறைகளைப் பின்பற்றி ஆங்காங்கே இருக்கும் “டத்தோ” அல்லது “இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்தி” அல்லது “ஆவிகள்” போன்றவற்றை அங்கு வாழ்க்கை நடத்தும் அவர்களுக்குப் பாதுகாப்பு வேண்டி, வழிபட்டனர். தமிழ்-இந்து மக்களின் காக்கும் தெய்வங்களுக்கும் இதற்கும் பெருத்த வேறுபாடு இல்லை. ஆய்வு செய்த சமயத்தில் தமிழ்-இந்துச் சமூகத்தின் 20-க்கும் மேற்பட்ட கோயில்களில் “அய்யா”வை உள்ளூர் முறையைப் பின்பற்றி தங்களின் கோயில்களில் வழிபடுகிறார்கள். வழக்கமாக இந்தக் கோயில்களில் திருவிழாச் சமயங்களில் கோழி அல்லது ஆடுகளைப் பலி கொடுத்து “அய்யா”வை வழிபடுகின்றார்கள். இது தமிழ்நாட்டில் உள்ள நடைமுறையும் இங்குள்ள நடைமுறையும் கலந்த ஒன்றாக இன்றும் இங்கு இருப்பதைக் காணலாம். முன்பு இஸ்லாம் சமயத்தைச் சேர்ந்தவர்கள் புனித இடமாகக் கருதப்பட்ட மாச்சாப் மற்றும், பூலாவ் பெசார் போன்ற இடங்களில், குறிப்பாக தமிழ்-முஸ்லிம்களால் பின்பற்றப்பட்ட நடைமுறை, மலாக்காவில் உள்ள சில இந்துக் கோயில்களிலும் காணப்படுகின்றது. இந்தப் புனித இடங்கள் இந்துத் தெய்வங்களைப் போன்று தங்களைக் காக்கும் சக்தியுடையது என இந்துக்கள் கருதுகிறார்கள். இருந்தாலும், இந்தச் சூழ்நிலைகளில் சம்பந்தப்பட்ட கோயில்களில் முக்கியத் தெய்வங்களுக்கு அருகில் உப சக்தியாகவே இந்தத் தெய்வங்கள் வைக்கப்படுகின்றன.

## கோயில் பெயர்களின் ஆய்வு தனியாகச் செய்யலாம்

கோயில்களின் பெயர்களைப் பற்றியோ அவற்றின் சிறப்புகளைப் பற்றியோ தனியான ஓர் ஆய்வு நடத்தமுடியும். தற்போதைய ஆய்வில் கொடுக்கப்பட்ட விவரங்களே போதுமானவை. ஆர்வமுள்ள தரப்பினர் வரும் காலங்களில் பெயர் பற்றிய ஆய்வை மேற்கொள்ள முடியும் எனும் காரணத்தால் இதைப் பற்றி மேலும், ஆழமாகச் செல்லவில்லை.

மேலே உள்ள 15 மற்றும், 16-ஆம் அட்டவணைகள், இந்த ஆய்வின் நோக்கத்திற்காக, மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களின் பெயர்களைப் பொறுத்தவரை, போதுமானவை. ஏனெனில், கோயில்களின் அமைவு அந்தந்தப் பகுதிகளில் இருக்கும் பக்தர்களுக்கு ஏற்பக் கோயில்களின் பங்கைப் பிரதிபலிக்கிறது. கோயில் உருவான சமயத்தில் அப்பகுதியில் உள்ள சூழல் மற்றும், தொழிலின் வகை போன்றவற்றையும் இந்தப் பெயர்கள் காட்டுகின்றன.

# மலாக்காவில் இந்துக் கோயில்களின் தற்போதைய நிர்வாகம்

## மலாக்கா இந்துக் கோயில்களை நிர்வகிக்கும் நிர்வாகத்தினரின் எண்ணிக்கை

இந்த ஆய்வில் எடுத்துக்கொள்ளப்பட்ட 146 கோயில்களை 134 நிர்வாகக்குழுக்கள் நிர்வகிக்கின்றன. மத்திய மலாக்காவில் செட்டி சமூகம் மற்றும், நாட்டுகோட்டை செட்டியார் சமூகம் இவர்களின் 11 கோயில்களையும் சம்பந்தப்பட்ட இரண்டு அறங்காப்பகங்களால் நிர்வகிக்கப்படுகின்றன. இதனால், மத்திய மலாக்கா மாவட்டத்தில் உள்ள 44 கோயில்களில் 35 கோயில்களில் மட்டுமே கோயில் நிர்வாகக் குழுக்கள் இருக்கின்றன. ஜாசினில், J9 மற்றும், J10 ஒரே நிர்வாகக் குழுவைக் கொண்டுள்ளது. எனவே, 45 நிர்வாகக் குழுக்கள் உள்ளன. அதே நேரத்தில் அலோர் காஜா மாவட்டத்தில் AG42 / AG43 மற்றும், AG53 / AG54 ஆகியவை ஒரே குழுவால் நிர்வகிக்கப்படுகின்றன. எனவே, 54 குழுக்கள் மட்டுமே இம்மாவட்டத்தில் உள்ளன. இவர்கள் அனைவரும் தங்கள் சேவைகளுக்கு எந்தவித ஊதிய வெகுமதியும் பெறாமல் தன்னார்வத்தோடு தொண்டு செய்து வருகின்றனர்.

இருப்பினும், நிர்வாகக் குழு உறுப்பினர்களின் எண்ணிக்கை மிகவும் வேறுபட்டது. ஏனெனில், அனைத்தையும் நிர்வகிக்கும் ஒரு நபரிடமிருந்து மட்டுமே தொடங்கி 21 பேர்கள் வரை கோயிலின் நிர்வாகக் குழுவில் பட்டியலிடப்பட்டுள்ளனர். சங்கங்களின் பதிவாளரிடம் பதிவுசெய்யப்பட்ட கோயில்கள், அவற்றின் பதிவு பெற்ற சட்டதிட்டங்களை வழிகாட்டுதல்களாகக் கொண்டுள்ளன. ஆனால், பெரும்பாலான மற்றவற்றில் தேவையான தருணங்களில், குறிப்பாக ஆண்டுத் திருவிழா நடக்கும் சமயங்களில் நிர்வாகத்தினரைக் கூட்டாகத் தீர்மானித்துக் கொள்கின்றனர். திருவிழாச் சமயத்தில்தான் கூடுதலான நிதியுதவி பெரும்பாலான கோயில்களுக்குக் கிடைக்கிறது. இதனால், அவர்களுக்குப் பெரிய எண்ணிக்கையிலான நிர்வாக உறுப்பினர்கள் மற்ற வேளைகளில் தேவையென எண்ணுவதில்லை. இருப்பினும், தேவையானபோது உதவி செய்ய போதுமான ஆற்றல் இருக்க ஆரம்பத்தில் இருந்தே பொதுக்கூட்டங்கள் நடைபெறும் சமயங்களில் போதுமான எண்ணிக்கையிலான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் நிர்வாகங்களும் உள்ளன.

**அட்டவணை 18: மலாக்காவில் கோயில்களை நிர்வகிக்கும் நிர்வாகக்குழுவில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கை**

| மாவட்டம் | 0-6 | 7-11 | 12-15 | 16+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 6 | 12 | 14 | 3 | 35 |
| ஜாசின் | 9 | 15 | 17 | 4 | 45 |
| அலோர் காஜா | 26 | 16 | 8 | 4 | 54 |
| மொத்தம் | 41 | 43 | 39 | 11 | 134 |
| சதவிகிதம் | 30.6 | 32.1 | 29.1 | 8.2 | 100 |

## நிர்வாகக்குழுவில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கை

சில குடும்பங்களால் நிர்வகிக்கப்படும் கோயில்களில் 6-க்கும் குறைவான உறுப்பினர்களைக் கொண்டும் பொதுவாகப் பதிவு செய்யப்படாத நிர்வாகக்குழுக்கள் உள்ளன. எந்தவொரு அறிக்கையையும் கணக்குகளையும் யாருக்கும் வழங்கத் தேவையில்லை என்பதால் இந்தக் கோயில்கள் வழக்கமாக வருடாந்திரப் பொதுக் கூட்டங்களை நடத்துவதில்லை. பதிவு செய்யப்படாத கோயில்களும் அல்லது ஏதோ ஒரு காரணத்திற்காகப் பதிவு செய்ய முடியாதக் கோயில்களும், கோயில் தலைவரின் விருப்பப்படி அதிக எண்ணிக்கையிலான நிர்வாகக் குழு உறுப்பினர்களைக் கொண்டுள்ளன. வருடாந்திரத் திருவிழா நடைபெறும் சமயங்களில் குழுவினரின் ஆதரவையும் உதவியையும் பெறுவதற்கு இந்த முறை பயன்படுத்தப்படுகிறது. ஆனால், மற்ற நேரங்களில் நிர்வாகக் குழுவின் உறுப்பினர்கள் செயலற்றவர்களாக இருப்பர்.

சங்கங்களின் பதிவதிகாரியால் பதிவு செய்யும் சமயத்தில் குறைந்தது ஏழு உறுப்பினர்கள் கட்டாயமாக இருக்க வேண்டும் எனும் விதிக்குட்பட்டு பதிவுசெய்யப்பட்ட பக்தர்கள் சங்கங்கள் சில சமயங்களில் அந்த எண்ணிக்கையைக் கூட்டாமல் தங்கள் நடவடிக்கைகளைத் தொடர்ந்து மேற்கொண்டு வருகின்றன. சில நேரங்களில் கோயில்களின் நிர்வாக உறுப்பினர்கள் மட்டுமே கோயிலின் உறுப்பினர்களாக இருப்பர் - மற்றவர்கள் கோயில் பயனர்களாகவே கருதப்படுகிறார்கள்.

இருப்பினும், 82 கோயில்களில் 7 முதல் 15 பேர் வரை ஒரு நிர்வாகக்குழுவில் இருக்கின்றனர். மேலும், 11 கோயில்களில் 16-க்கும் மேற்பட்டவர்கள் நிர்வாகக்குழு உறுப்பினர்களாக இருக்கின்றனர்.

## பாரம்பரியச் சமூகச் சிந்தனையில் கோயில் தலைவரின் பங்கு

எவ்வாறாயினும், கோயிலின் தலைவராக இருப்பது பாரம்பரியமாக இந்துச் சமூகத்தில் பெருமை சேர்க்கும் ஒன்று என்பதை இந்த ஆய்வும் நிலைநாட்டுகிறது. மேலும், ஒரு பணியை முடிக்கத் தேவைக்கேற்ப வேண்டிய ஆற்றலை முடுக்கி விடுவது என்பது அவருக்கு ஒப்படைக்கப்பட்ட பொறுப்பாகும். எழுதிய சட்டதிட்டங்களின் எல்லைக்குள் உட்பட்டு செயல்படும் இன்றைய நிர்வாகக் குழு ஒட்டிய சிந்தனை முன்பு இருந்ததில்லை. மலாக்கா மாநிலத்தில், குறிப்பாக உட்புறங்களில் உள்ள பெரும்பாலான இந்துக் கோயில்களில் இந்த வழக்கம் இன்றும் உள்ளது.

## மகளிர் பங்கு

இந்த ஆய்வில் மலாக்காவில் கோயில் நிர்வாகக் குழுக்களில் பெண்களின் பங்கேற்பு பற்றி குறிப்பிட்டு ஆராயவில்லை என்றாலும், இரண்டு கோயில்களில் மட்டும் முக்கிய பதவிகளில் பெண்கள் இருந்து கொண்டு நிர்வாகம் செய்வது தெரிய வருகின்றது. பெரும்பாலான மற்றக் கோயில்களில் பெண்கள் நிர்வாகத்தில் முக்கிய அங்கம் வகிப்பதாகத் தெரியவில்லை. இந்துக் கோயில்களின் விவகாரங்களில் பாரம்பரியமாகத் தமிழ் / இந்தியச் சமூகம் ஆண்களுக்கே முன்னுரிமை அளிப்பது இந்த ஆய்வின்வழி மலாக்கா கோயில் நிர்வாகங்களில் வழி தொடர்வதைக் காணமுடிகிறது.

## மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களில் நிர்வாகக் குழுவினரின் தகுதிகள்

கோயில்களை வழிநடத்தும் நிர்வாகக் குழுவினரின் தகுதி அல்லது நிலையைப் பொறுத்தவரை, 134 நிர்வாகக்குழுக்களில் 1,192 பேர் ஈடுபட்டுள்ளனர். அவர்களுள் 218 பேர்கள், அல்லது 18.3%, பணி ஓய்வு பெற்றவர்கள் மற்றும், 184 பேர்கள், அல்லது 15.4%, வர்த்தகர்கள் ஆவர். மீதமுள்ளவர்களில் 95 பேர்கள் அல்லது 8% பேர் குறைந்தபட்சம் இளங்கலை பட்டம் அல்லது தொழில்முறை பட்டம் பெற்றவர்கள், 173 பேர்கள் அல்லது 14.5% மலேசியக் கல்வி சான்றிதழ் (எஸ்.பி.எம்) முடித்தவர்கள், 321 பேர்கள், அல்லது 27% படிவம் மூன்றை பூர்த்தி செய்துள்ளனர், அதே நேரத்தில் 16.8% அல்லது 201 பேர்கள் தொடக்கப்பள்ளி கல்வி முடித்தவர்கள் ஆவர்.

உண்மையில் இந்தக் கோயில்களை உருவாக்கி நிர்வகித்து வந்துள்ள சமூகத்தை இந்தப் புள்ளிவிவரங்கள் பிரதிபலிக்கின்றன. கல்வித் தகுதி இல்லாத போதிலும், உள்ளூர் இந்துக்களிடையே வயதானவர்களையும் மரியாதைக்குரியவர்களையும் நியமிக்கும் பண்பாடு இன்றுவரை காணப்படுகிறது. இருப்பினும், கோயிலை ஒரு புதிய இடத்திற்கு மாற்றும் முயற்சிகள் மேற்கொள்ளும்போதும் அல்லது ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டும் போதும், இந்த முயற்சிகளுக்குப் போதுமான நிதிவளத்தைத் தேடுவதற்கும் அரசு துறைகளுடன் தொடர்பு கொள்ளவும் திறன் வேண்டும் என்பதால் நாளடைவில் இந்தப் போக்குக் குறையத் தொடங்கியுள்ளதைக் காணலாம். இதன் விளைவாக, கோயில் தலைவர்கள் பலர் அரசியல் கட்சி கிளைகளில் பொறுப்புகளை வகிக்கும் அரசியல்வாதிகளாகவும் இருக்கின்றனர். தேவைப்படும்போது கோயிலுக்குப் போதுமான நிதியைத் திரட்ட முடியும் என்பதால் வணிகர்களும் தேர்ந்தெடுக்கப்பபடுகிறார்கள்.

## அலுவலகம் இல்லாதக் கோயில்கள்

கிட்டத்தட்ட எல்லா கோயில்களிலும், கோயில் நிர்வாகத்திற்கு அலுவலக இடம் இல்லை, இருப்பினும், அவர்களின் கூட்டங்கள் பெரும்பாலும் கோயில்களிலேயே நடத்தப்படுகின்றன. தலைவர், செயலாளர் மற்றும், பொருளாளர் ஆகியோர் கோயில் பதிவுகள் அனைத்தையும் அவரவர் வீடுகளில் வைத்திருக்கின்றனர்.

தேவைப்படும்போது மட்டுமே கூட்டத்திற்குக் கொண்டு வருகிறார்கள். தமது வீட்டில் அனைத்து பதிவுகளையும் வைத்திருக்கும் தலைவர்களும் உண்டு மற்றும், தமது நிர்வாகக் குழுவிற்கான அனைத்து முடிவுகளையும் அவர்களே எடுக்கும் தலைவர்களும் உண்டு. பக்தர்களின் சங்கத்தின் முகவரி முக்கியப் பொறுப்பாளரின் வீடாக இருந்தாலும், சந்திப்பதற்கு வசதியான இடமாக இருப்பதால் கூட்டம் கோயிலிலேயே நடத்தப்படுகிறது.

## நிர்வாகக்குழு உறுப்பினரிடையே பொறுப்புப் பகிர்வு

நகர்ப்புறங்களில் உள்ள கோயில்கள், மற்றும், சங்கங்களின் பதிவதிகாரி கொடுத்த வழிகாட்டுதல்களை உண்மையில் பின்பற்றி நிர்வகிக்கப்படுகின்ற கோயில்களில் நிர்வாக உறுப்பினர்களிடையே தெளிவான பொறுப்புப் பகிர்வு காணப்படுகிறது. குறிப்பிட்ட குடும்பங்களுக்கு மட்டுமே சொந்தமானவையாக இருந்தும் சங்கப் பதிவகத்தில் பதிவு பெற்ற கோயில்கள் உட்பட, இந்தக் கோயில்கள் மட்டுமே, அதன் பொதுக்கூட்டங்களில் வழங்குவதற்கான வருடாந்திர அறிக்கைகள் மற்றும், நிதி அறிக்கைகளைத் தயார் செய்கின்றன. இந்த ஆய்வின்போது, கோயில்களில் சில தொடர்ச்சியாகக் குறிப்பிட்ட நாட்களுக்குள் சமர்பிக்க வேண்டிய விவரங்களை மூன்று ஆண்டுகளாகச் சங்கங்களின் பதிவாளருக்கு வழங்காததால் சங்கங்களின் பதிவாளரிடம் இருந்து பிரச்சினைகளை எதிர்நோக்கியிருந்தன. இதனால், பதிவு ரத்து செய்யப்பட்ட பக்தர்கள் சங்கங்களும் இருக்கின்றன.

## ஆண்டுப் பொதுக்கூட்டம் மற்றும் உறுப்பினர்கள்

இந்த ஆய்வின்போது 97 கோயில்கள் மட்டுமே ஆண்டுப் பொதுக்கூட்டங்களை நடத்துவதாகக் கூறின, மேலும், 116 கோயில்கள் மட்டுமே தங்கள் கோயில்களுக்கான உறுப்பினர் பட்டியல்களைக் கொண்டிருப்பதாகக் கூறின. இந்தப் புள்ளிவிவரங்களைப் பார்க்கும்போது ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. இந்தக் கோயில்களில் சில, குறிப்பிட்ட குடும்பங்களால் தொடங்கப்பட்டதால், இன்றும் குடும்பத்தின் வாரிசுகளே இந்தக் கோயில்களைப் பராமரிக்கின்றனர். கோயில் அமைந்திருக்கும் இடங்களின் சுற்றியுள்ள பகுதிகளிலிருந்து இந்துக்களைக் கோயிலில் வழிபட அழைக்கிறார்கள்; பூஜை மற்றும், திருவிழாவில் மட்டுமே ஈடுபடச் செய்கிறார்கள். இந்தக் கோயில்களின் நிர்வாகத்தில் அவர்கள் தலையிட அனுமதிப்பதில்லை.

இந்தப் பக்தர்கள் கோயிலைப் பயன்படுத்த கோயிலின் உறுப்பினர்களாக இருக்க வேண்டிய அவசியமில்லை; ஆனால், திருவிழா சமயங்களின் போதும், அல்லது கோயிலில் எந்தவொரு வழிபாட்டு நடவடிக்கைகளுக்கும், நன்கொடை மட்டுமே கொடுத்தால் போதுமானது. இந்த வகையில் நிர்வகிக்கப்படும் சில கோயில்களில் பதிவு செய்யப்பட்ட பக்தர்கள் சங்கங்களும் இருக்கின்றன. ஆகக் குறைவான உறுப்பினர்களைக் கொண்ட இத்தகைய சங்கங்களில் கோயிலின் ‘உரிமையாளருக்கு’ மிகவும் தொடர்புடையவர்களே அதன் உறுப்பினர்களாக இருந்து வருகிறார்கள்.

## இளைஞர்களிடையே இருக்கும் ஆர்வம்

இவ்வாறு இருப்பது, கோயில் தலைவர் கோயிலைப் பயன்படுத்தும் மற்ற இந்துக்களுடன் கோயிலைப் பற்றிய தகவல்களைப் பகிர்வது தேவையில்லாமல் போகிறது. இந்த அம்சம் இளைஞர்களை இது போன்ற கோயில் நிர்வாகக் குழுக்களில் பங்கேற்கத் தயங்க வைக்கிறது. எனவே, கோயிலுக்கு வருகை தரும் வழிபாட்டாளர்களின் எண்ணிக்கை காலப்போக்கில் குறைந்து வருகிறது. இதனால், மிகச் சுதந்திரமாக இளைஞர்களால் நடத்தப்படும் புதிய கோயில்களில் மீது இளைஞர்களின் ஆர்வத்தைத் தூண்டுவதுடன், அசைவ உணவைப் பரிமாறும் அத்தகைய கோயில்களின் எண்ணிக்கையையும் கூட்டிவருகிறது. அத்தகைய கோயில்களில் இந்துச் சமய நெறிகளைக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பும் குறைவாக உள்ளது. இந்த ஆய்வின்போது, இந்த வகையான மாமிசம் புழங்கும் கோயில்கள், குறிப்பாக இளைஞர்களிடையே மிகுந்த வரவேற்பு பெற்றுள்ளதைக் காணமுடிந்தது.

## தலைவரின் நிலை

பாரம்பரியமாக, சமூகத்தில் ஓர் உயரிய சமூக அந்தஸ்தை கோயில் தலைவர் பெற்றுள்ளார். சிலர் பல ஆண்டுகாலமாகத் தலைவர் பதவியில் நிரந்தரமாக இருக்கிறார்கள். சிலர் கோயிலைத் தங்களின் அடுத்த சந்ததியிடம் (மகன்) ஒப்படைத்துள்ளனர். மொத்தத்தில், கோயில்களைத் தங்கள் சொத்துக்களாகக் கருதும்

இந்தத் தன்மை மலாக்கா மாநிலத்தில், இன்னும் உள்ளது. குறிப்பாகச் சொந்த நிலத்திலோ, மற்றும், தோட்டம் அல்லது அரசு நிலங்களில் உள்ள இது போன்ற ஆலயங்களுக்கு மற்றவர்களின் ஆதரவு அதிகம் வேண்டும் எனும் எண்ணம் இத்தகைய கோயில்களை நடத்துபவர்களுக்கு இருப்பதில்லை. சிறிய அளவில் மற்றவர்களின் தயவில்லாமல் கோயில்களைத் தங்கள் பெயர்களில் சொந்தமாகவே நிர்வகிக்க முயல்கின்றனர்.

பாட்டனார் அல்லது தந்தை எப்போதாவது கோயிலைத் தொடங்கியிருக்கலாம் அல்லது தலைவராக இருந்திருக்கலாம். இதன் காரணத்திற்காகக் கோயிலின் உரிமைகளைக் கோருவதற்கான தன்மை இன்னும் உள்ளது. இத்தகைய கோயிலுக்கு வருகை தருபவர்கள் சமயம் சார்ந்த வழிபாடுகளில் கலந்துகொள்வதோடு ஆண்டு திருவிழாவிற்குத் தங்கள் விருப்பத்தின் பேரில் நன்கொடை அளிக்கிறார்கள். சில கோயில்களில் தலைவர் அல்லது கோயிலின் உரிமையாளர் ஆண்டுத் திருவிழா நடத்துவதற்கான அனைத்து செலவுகளையுமே தாமே ஏற்றுக்கொள்கிறார். சில நேரங்களில் கோயில் தலைவரே கோயிலின் விவகாரங்களை நிர்வகிக்கும் அனைத்து செலவுகளையும் ஏற்றுக்கொள்கிறார்; மேலும், கோயிலை வழிபாட்டிற்கும், திருவிழாவிற்கும் மட்டுமே பயன்படுத்த மற்றவர்களை நாடுகிறார்.

## வாய்மொழி வழியாக ஆண்டறிக்கை மற்றும் கணக்கறிக்கையைச் சமர்ப்பிக்கும் கோயில்கள்

சில கோயில்களின் நிர்வாகங்களில் எழுத்து மூலமாக ஆண்டறிக்கை மற்றும், நிதிவளம் பற்றிய அறிக்கைகள் வழங்கப்படுவதில்லை. அவை தலைவரால் மட்டுமே வாய்மொழி வழியாகவே வழங்கப்படுகிறது. மேலும், அவரது வருடாந்திர கூட்டத்தில் கலந்துகொள்ளும் அவருக்கு விசுவாசமிக்கவர்களால், ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. நவீன நிர்வாக முறைகளின்படி கோயில் நிர்வாகக் குழுவின் ஒவ்வோர் உறுப்பினரின் பங்கு வரையறைப் படுத்தப்படுவதற்கு முன்பு இந்த முறை கிட்டத்தட்ட அனைத்து இந்துக் கோயில்களாலும் பயன்படுத்தப்பட்டு வந்தது என்பதை மறுக்கமுடியாது. பழைய கோயில்களும், சிறு குழுக்களால் தங்கள் நண்பர்களுடன் நடத்தப்படும் கோயில்களும் இந்த நடைமுறையை இன்றுவரை தொடர்கின்றன. இருந்தாலும், ஆண்டுத் திருவிழாக்களைச் சிறப்பாக நடத்த எழுத்துப்பூர்வமான அறிவிப்புகளைப் பலருக்கும் கொடுத்து அழைக்கின்றனர்.

**அட்டவணை 19: கோயில்களால் நடத்தப்படும் ஆண்டுப் பொதுக் கூட்டங்கள்**

| மாவட்டம் | JAN-MAC | APR-JUN | JUL-SEP | OKT-DIS | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 7 | 11 | 4 | 6 | 28 |
| ஜாசின் | 20 | 9 | 5 | 2 | 36 |
| அலோர் காஜா | 24 | 6 | 2 | 1 | 33 |
| மொத்தம் | 51 | 26 | 11 | 9 | 97 |

**குறிப்பு : மற்றக் கோயில் நிர்வாகங்கள் எந்தவித ஆண்டுப் பொதுக் கூட்டங்களையும் முறையான அழைப்பு அனுப்பி நடத்துவதில்லை.**

## உறுப்பினர்களின் எண்ணிக்கை

அட்டவணை 20-இல் இருக்கின்ற தகவல்கள்படி, உறுப்பினர் பதிவு ஏட்டைக் கொண்டிருப்பதாக ஒப்புக்கொண்ட கோயில்களுள் 41.4%, அல்லது 48 கோயில்கள், 30-க்கும் குறைவான உறுப்பினர்களைக் கொண்டிருப்பதாகக் கூறின. அதோடு, மேலும், 28 கோயில்கள், அல்லது 24.1%, 31 முதல் 50 வரை மட்டுமே உறுப்பினர்களைக் கொண்டுள்ளதாக ஒப்புக்கொண்டன. இதன் பொருள், உறுப்பினர் பதிவு வைத்திருப்பதாகக் கூறிக்கொண்ட 116 கோயில் நிர்வாகங்களில் 76 கோயில்கள், அல்லது 65.5%, அல்லது அவற்றில் மூன்றில் இரண்டு பகுதி, 50-க்கும் குறைவான உறுப்பினர்களைக் கொண்டிருந்தன. நான்கு கோயில்களில் 81 முதல் 100-க்கும் மேற்பட்ட உறுப்பினர்கள் உள்ளனர். மேலும், 12 கோயில்களில் 101 முதல் 200 உறுப்பினர்கள் இருக்கின்றனர். நான்கு கோயில்கள் மட்டுமே 201-க்கும் மேற்பட்ட உறுப்பினர்கள் உள்ளதாகக் கூறியுள்ளன.

எனவே, கோயில்களில் 13.8%, அல்லது 116 கோயில்களில் 16 கோயில்கள் மட்டுமே, 101-க்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்டுள்ளன. கோயில்களில் பெரும்பாலானவை ஒரு பகுதியில் உள்ள மக்கள் அல்லது ஒரு கூட்டத்தினரிடையே இருக்கின்ற குறிப்பிட்ட பக்தர்கள் மட்டுமே பயன்படுத்தும் வகையில் உருவாக்கப்பட்டு இயக்கப்படுகின்றன என்பதையும், பல பக்தர்களையும் உறுப்பினர்களாக்கும் ஆர்வம் இல்லாததையும் இது தெளிவாகக் காட்டுகிறது. மேலும், வெளிப்படையான இந்து சமய நடவடிக்கைகளின் மையமாகக் கோயில்களை மாற்றவேண்டும் எனும் எண்ணமும் இல்லை.

**அட்டவணை 20 : உறுப்பினர் பதிவு இருப்பதாக ஒப்புக்கொள்ளும் மலாக்கா இந்துக் கோயில்களின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை**

| மாவட்டம் | 1-30 | 31-50 | 51-80 | 81-100 | 101-200 | 201+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 11 | 7 | 7 | - | 5 | 2 | 32 |
| ஜாசின் | 13 | 11 | 8 | 2 | 3 | 1 | 38 |
| அலோர் காஜா | 24 | 10 | 5 | 2 | 4 | 1 | 46 |
| மொத்தம் | 48 | 28 | 20 | 4 | 12 | 4 | 116 |
| சதவிகிதம் | 41.4 | 24.1 | 17.2 | 3.5 | 10.3 | 3.5 | 100 |

**குறிப்பு: மற்றக் கோயில்கள் அதன் கோயிலுக்கு பதிவு பெற்ற உறுப்பினர்கள் இருப்பதாக ஒப்புக்கொள்ளவில்லை**

## அதிகமான உறுப்பினர்களைக் கொண்ட கோயில்கள்

100 உறுப்பினர்களைக் கொண்ட கோயில்கள் MT14 (சுங்கை ஊடாங்), MT17 (பாச்சாங்), MT19 (புக்கிட் பெருவாங்), MT37 (பெங்காளான் ராமா), MT39 (பாயா ரும்புட்), J1 (செலாண்டார்), J2 (16 ஆவது மைல், ஜாசின்), J21 (மெர்லிமாவ்), AG1 (டுரியான் துங்கால்), AG31 (மாச்சாப் தோட்டம்) AG35 (பூலாவ் செபாங்), மற்றும், AG39 (ரெம்பியா) போன்றவை ஆகும். 201 உறுப்பினர்களுக்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட கோயில்கள், MT22 (பத்து பிரண்டாம்), MT38 (காஜா பேராங்), J14 (தாமான் ஸ்ரீஹிலீர், ஓன் லோக், பத்தாங் மலாக்கா), மற்றும், AG3 (பெங்காளான், அலோர் காஜா) போன்றவை. அவற்றில் AG1 மற்றும், AG31 மட்டுமே இன்னும் தோட்ட நிலத்தில் உள்ளன. இருப்பினும், இதில் அங்கம் வகிப்பவர்கள் வெளியே உள்ள பகுதிகளிலிருந்தும் மற்றும், அருகேயுள்ள குடியிருப்புப் பகுதிகளிலிருந்தும் வருகின்றவர்கள் ஆவர். தோட்டப்புறங்களுக்கு அப்பாற்பட்ட கோயில்களைக் கல்வி கற்றவர்கள் மற்றும், நடப்பு நிர்வாகத் தேவைகளைப் புரிந்து கொண்டவர்கள் வழிநடத்துவதால் அவர்களின் கோயில்களுக்கு முழுமையான ஆதரவைப் பெற உறுப்பினர்களின் எண்ணிக்கையை விரிவுபடுத்த முயற்சியினை மேற்கொண்டுள்ளனர் என்பதை இது காட்டுகிறது.

## வரம்பிற்குட்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட கோயில்கள்

வேலை செய்யும் இடம், அமைந்திருக்கும் பகுதி, குடும்ப உறவினர்கள் மற்றும், கோயில் உரிமையாளரின் நண்பர்கள் போன்ற காரணங்களால் கோயில் உறுப்பினர்களின் எண்ணிக்கை வரம்பு கட்டுப்படுத்தப்படுகின்றது. மலாக்காவில் உள்ள கோயில்களை நிர்வகிக்கும் இரண்டு 'அறங்காப்பகங்கள்' வெளிப்படையாக உறுப்பினர்களைப் பதிவு செய்வதில்லை. ஆனால், பல ஆண்டுகளாகச் சுற்றுப்பகுதியில் உள்ள மக்களிடமிருந்து ஆதரவும் வரவேற்பும் இந்த ஆலயங்களுக்குத் தொடர்ந்து இருந்து வருகின்றது. மலாக்காவில் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான நகரத்தார் குடும்பங்களை உறுப்பினர்களாகக் கொண்ட நாட்டுக்கோட்டை செட்டியார் அறங்காப்பாளர்களால் MT1 சந்நியாசிமலை ஆண்டவர் கோயில் நிர்வகிக்கப்படுகின்றது - மேலும், அவர்கள் மட்டுமே சம்பந்தப்பட்ட கோயிலின் விவகாரங்கள் குறித்து பிரத்தியேக முடிவுகளை எடுக்க முடியும்.

ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி எனும் பெயரில் உள்ள மலாக்கா செட்டிகள் சமூகத்தினரின் அறங்காப்பகத்தினர், அவர்களின் மேற்பார்வையில் உள்ள கோயில்களில் உறுப்பினர்களை முறையாகப் பதிவு செய்ததில்லை என்பதைத் தெரிவித்தனர். ஆயினும், மலாக்கா செட்டி சமூகத்தினர் அனைவரும் இந்தக் கோயில்களுக்கு விசுவாசமான பக்தர்களாக் கருதப்படுகின்றனர்.

கோயில் விவகாரங்களில் பல்வேறு கருத்து வேறுபாடுகளால் மோதல்கள் ஏற்பட வாய்ப்புள்ளதால் அதிகமான உறுப்பினர்களைப் பதிவு செய்தால் பல்வேறு பிரச்சினைகள் உருவாகும் என்ற கருத்தும் உள்ளது. மேலும், திருவிழாவிற்கான நன்கொடைகள் அனைத்து இந்துக்களிடமிருந்தும் சேகரிக்க முடியும் என்பதால் குறைந்த எண்ணிக்கையிலான உறுப்பினர்களைக் கொண்டிருப்பது நல்லது எனவும் எண்ணுகின்றனர். அதோடு, வழக்கமான மாத அல்லது ஆண்டுச் சந்தா செலுத்தும் பக்தர்கள், கோயிலில் தொடர்ச்சியான நடவடிக்கைகளை எதிர்பார்க்கிறார்கள் - மேலும், கோயில் கும்பாபிஷேகம்/திருவிழா, உபயங்களுக்கு முன்னுரிமை அளிப்பதால், அந்தந்தக் காலங்களில் மட்டுமே நன்கொடைகளை வசூலிப்பது நல்லதென எண்ணுபவர்களும் உண்டு.

## கோயில்களில் உறுப்பினராக உள்ள இந்துக்களின் எண்ணிக்கை

மலாக்காவில் 6,500-க்கும் குறைவான இந்துக்களே மலாக்காவில் இந்துக் கோயில்களை நிர்வகிக்கும் அமைப்புகளில் அல்லது சங்கங்களில் சட்டப்பூர்வமாக உறுப்பினர்களாக இருக்கின்றனர். இந்த எண்ணிக்கை உள்ளூர் இந்துக்களுக்கு பயனளிக்கும் வகையில் இந்தக் கோயில்களில் ஏற்பாடு செய்யப்படும் நிகழ்ச்சிகள் மற்றும், நடவடிக்கைகளின் தரம் ஆகியவற்றுடன் தொடர்புடையதாக இருக்கின்றது - பின்வரும் பகுதிகளில் இதைப் பற்றி விவரிக்கப்படுகிறது. இந்த வரையறுக்கப்பட்ட உறுப்பினர் எண்ணிக்கை, கோயில்களில் இந்துச் சமய அறிவைப் பக்தர்கள் மத்தியில் பரப்பும் எண்ணம் இல்லாததையே காட்டுகிறது.

இருப்பினும், மலாக்காவில் ஒருவர் பல கோயில்களில் உறுப்பினர்களாக இருக்கிறார் என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். ஆகையால், கோயில்களில் அங்கம் பெற்றுள்ள மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை உண்மையில் 6,000-க்கு மேல் போக வாய்ப்பில்லை. ஆகவே, மலாக்காவில் உள்ள 46,800 இந்துக்களில் சுமார் 12.82% கோயிலில் அங்கம் வகிக்கின்றனர். பெரும்பாலான பிற பக்தர்கள் கோயில் நடவடிக்கைகள் மற்றும், நிகழ்ச்சிகளில் மட்டுமே பங்கெடுக்கின்றனர். ஆண்டுத் திருவிழாவின்போது அல்லது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் கும்பாபிஷேகம் போன்ற நிகழ்வுகளுக்குச் சில சமயங்களில் நன்கொடை வழங்குகின்றனர். இருப்பினும், கோயில்களில் நடைபெறும் பூஜை, உபயங்கள் மற்றும், பரிகார சடங்குகளில் கலந்துகொள்ளும் பக்தர்கள் ஒவ்வொரு கோயிலின் நிர்வாகக் குழு அல்லது குருக்கள் தீர்மானிக்கும் கட்டணங்களைக் கொடுக்கிறார்கள். உறுப்பினர்களாக இருக்கவேண்டிய அவசியமில்லை.

## குடும்பத்தைப் பிரதிநிதித்து குடும்பத் தலைவர் மட்டுமே கோயிலில் உறுப்பினர்

இருப்பினும், இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், கடந்த காலங்களில், குடும்பத் தலைவர்கள் மட்டுமே கோயிலின் உறுப்பினர்களாக இருந்தனர். அதே நேரத்தில் குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள் தனித்தனியாக உறுப்பினர்களாக இருக்கத் தேவையில்லை. இதனால்தான், குடும்பங்களின் தலைவர்களாக இருப்பதால் ஆண்கள் மட்டுமே கோயில் விஷயங்களில் முக்கியப் பங்கு வகித்துவந்தார்கள்; குடும்பத் தலைவரின் விருப்பத்திற்கு ஏற்பக் குடும்ப உறுப்பினர்கள் செயல்படுவது வழக்கமான ஒன்று.

இந்த அம்சம் நகரங்களில் அல்லது கல்வி கற்றக் குடும்பங்களில் மறைந்து போகத் தொடங்கியுள்ளது; இதனால், தற்பொழுது கணவன், மனைவி, குழந்தைகள், மருமகன் / மருமகள் ஆகியோர் கோயில் அமைப்பில் தனித்தனியாக உறுப்பினர்களாக உள்ளனர்; மற்றும், கோயில் நிர்வாகத்திலும் முக்கியப் பங்கு கொள்கின்றனர். ஆனால், இந்த மாற்றம் மலாக்காவில் உள்ள தமிழ் / இந்துச் சமூகத்தில், குறிப்பாக உட்புறப் பகுதிகளில் அவ்வளவு பரவலாக இல்லை என்பதை இந்த ஆய்வு காட்டுகிறது.

நகர்ப்புறங்கள் மற்றும், புதிய வீடமைப்புப் பகுதிகளில் இயங்கும் பதிவுசெய்யப்பட்ட கோயில்கள் நவீன சட்டதிட்டங்களுக்கு ஏற்ப தங்கள் உறுப்பினர்களின் உரிமைகள், மற்றும், பொறுப்புகளை விவரிக்கின்றன. அதோடு, இப்போது குடும்பப் பிரதிநிதியாக இல்லாமல், தனிநபர்களை உறுப்பினர்களாக ஏற்றுக்கொள்கின்றன. விரைவில் இந்த நடைமுறைகளை மற்றக் கோயில்களும் குறிப்பாகப் பதிவுசெய்யப்பட்ட கோயில்கள் பின்பற்றலாம். இருப்பினும், குறிப்பாக உட்புறங்களில் உள்ள கோயில்களில், இந்தப் புதிய முறை இன்னும் அவ்வளவாகப் பரவவில்லை.

## பூசாரி அல்லது குருக்களின் பங்கு

மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்கள் அனைத்தும் தன்னார்வ அடிப்படையில் நிர்வாகக்குழுக்களால் நிர்வகிக்கப்படுகிறது. ஆகவே, யாருக்கும் இப்பணியை ஆற்ற எந்த வித ஊதியமும் தரப்படுவதில்லை. நேரம் இருப்பவர்கள் குறிப்பாகப் பூஜை நடைபெறும் சமயங்களில் மற்றும், தீபம் ஏற்றுவதற்கும் கோயிலில் இருப்பார்கள். இந்துச் சமயச் சடங்குகளைத் தகுதியுள்ள அல்லது அனுபவம் உடைய அர்ச்சகர், குருக்கள் அல்லது பூசாரியால் நடத்தப்பட வேண்டும். இந்தக் காரணத்திற்காக, மலாக்காவில் உள்ள பெரும்பாலான இந்துக் கோயில்கள் சமயச் சடங்குகளைச் செய்பவர்களை ஊதியத்திற்கு முழுநேரமாகவோ அல்லது பகுதி நேரமாகவோ தங்களால் முடிந்த அளவு அமர்த்திக் கொள்கின்றன. மேலும், தன்னார்வத்துடன் முன்வந்து சடங்குகளைச் செய்யும் உறுப்பினர்களும் உள்ளனர். இருப்பினும், இந்துச் சமயச் சடங்குகளைச் செய்ய தகுதி உடைய இவர்களுள் சிலர் தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கின்றனர். மற்றவர்கள் இந்த நாட்டில் பயிற்சி பெற்றவர்கள் ஆவர். இருப்பினும், இந்த ஆய்வில், பூஜைகளை முன்னின்று செய்யும் பலருக்கு இந்துச் சமயத்தைப் பற்றிய முறையான, முழுமையான பயிற்சியோ தகுதியோ இல்லை என்பதும் கண்டறியப்பட்டுள்ளது.

**அட்டவணை 21: மலாக்கா மாநிலக் கோயில்களில் உள்ள குருக்கள் / பூசாரிகள்**

| மாவட்டம் | முழு நேரம் | | | மொ | பகுதி நேரம் | | | மொ | ஆக மொ | % |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மத்திய மலாக்கா | ஜாசின் | அலோர் காஜா | | மத்திய மலாக்கா | ஜாசின் | அலோர் காஜா | | | |
| பயிற்சி பெற்றோர் | 10 | 4 | 5 | 19 | 0 | 0 | 0 | 0 | 19 | 14.07 |
| வழிகாட்டலின் கீழ் | 10 | 10 | 9 | 29 | 4 | 12 | 12 | 28 | 57 | 42.2 |
| பயிற்சி இல்லாதவர் | 0 | 1 | 0 | 1 | 18 | 20 | 20 | 58 | 59 | 43.7 |
| மொத்தம் | 20 | 15 | 14 | 49 | 22 | 32 | 32 | 86 | 135 | |

## கோயிலில் குருக்களின் எண்ணிக்கை

MT1, MT2, MT17, MT24, MT27, MT37, MT38, J2, J6, J7, J17, J21, J35, J37, AG2, AG3, மற்றும், AG39 போன்ற கோயில்களில் ஒருவருக்கு மேற்பட்ட குருக்கள் இருக்கிறார்கள். இந்தக் கோயில்களில் உள்ள குருக்களில் ஒருவரோ இருவரோ சமயச் சடங்குகளில் பயிற்சிபெற்றவர்களாக இருக்கிறார்கள். J37 மற்றும், AG2 மட்டும் ஒவ்வொரு கோயிலிலும் நான்கு பயிற்சி பெற்ற குருக்கள் இருக்கிறார்கள். மேலும், மத்திய மலாக்காவில் 8 கோயில்களிலும் ஜாசின் மாவட்டத்தில் 15 கோயில்களிலும் அலோர்காஜா மாவட்டத்தில் 16 கோயில்களிலும் ஆக மொத்தம் 39 கோயில்களில் அறவே எந்த ஒரு குருக்களையோ பூசாரியையோ நியமிக்கவில்லை. இந்தக் கோயில்களில் சமயச் சடங்குகள் அந்தந்தக் கோயில்களில் உள்ள அனுபவம் உடைய தலைவர்களாலோ அல்லது நிர்வாக உறுப்பினர்கள் அல்லது குடும்ப உறுப்பினர்களாலோ நடத்தப்படுகின்றன. திருவிழாச் சமயங்களில், சிறப்புப் பூஜைகளுக்கு மட்டுமே தகுதி வாய்ந்த குருக்கள் இந்தக் கோயில்களில் சிறப்பாக அழைக்கப்படுகின்றனர்.

இந்துச் சமயத்தின் விதிகளுக்கு உட்பட்டு பல்வேறு சமயச் சடங்கு முறைகளைப் பற்றி முறையான பயிற்சி பெற்றவர்களே குருக்களாகக் கருதப்படுகின்றனர். அதே சமயத்தில் இன்னும் தகுதி பெறாத மற்றும், பயிற்சி பெறாத ஆனால், அனுபவத்தின் வாயிலாக இப்பணிகளை மேற்கொள்வோர் பூசாரிகள் எனப்படுவர்.

பிராமண குடும்பப்பிறப்பு வழியாக இப்பணியைச் செய்பவர்களை அய்யர் என்றும் அழைப்பர். சமுதாயத்தில் இந்தச் சொற்கள் வழக்கமாக, பொதுவில், சுதந்திரமாகப் பயன்படுத்தப்பட்டுவந்தாலும் இந்த ஆய்விற்காக, இந்த வேறுபாடுகளை நாங்கள் கருத்தில் கொண்டுள்ளோம். எனினும், இந்த ஆய்வில் 'குருக்கள்' எனும் சொல் பொதுவாக குருக்கள், அர்ச்சகர், பூசாரி, போன்ற சமயச் சடங்குகளை முன் நின்று செய்பவர்களை பொதுவாகக் குறிக்கிறது.

## பகுதிநேர குருக்கள்

பகுதிநேர குருக்களின் அல்லது பூசாரியின் சேவையைச் சார்ந்திருக்கும் கோயில்களின் எண்ணிக்கை மிகப் பெரிதாக இருக்கின்றது: மத்திய மலாக்காவில் 10 கோயில்களும், ஜாசினில் 12 கோயில்களும், அலோர்காஜாவில் 31 கோயில்களும் ஆக மொத்தம் 53 கோயில்கள் இவற்றுள் அடங்கும். சமயச் சடங்குகளை முறையாகச் செய்பவர்கள் இல்லாத கோயில்களைப் பார்த்தால் மலாக்காவில் மொத்தம் 92 கோயில்கள், அதாவது, 63% கோயில்கள், குருக்களின் அல்லது பூசாரியின் முழுநேர சேவையைப் பெற்றிருக்கவில்லை என்பதை நாம் காணும்போது இக்கோயில்களில் சேவையின் தரம் மற்றும், அவற்றின் இயலாமையையும் அறியமுடிகின்றது.

## குருக்களுக்கு வழங்கப்படும் ஊதியம்

பயிற்சிப் பெற்ற குருக்கள் அல்லது பூசாரி ஆகியோருக்கு மாதம் RM900 முதல் RM1500 ஊதியமாக வழங்கப்படுகிறது. மற்றும், பயிற்சிப் பெறாதவர்களுக்கு மாதம் RM700 முதல் RM1000 வரை வழங்கப்படுகிறது. அதே வேளையில், பகுதிநேரக் குருக்களுக்குச் சம்பந்தப்பட்ட கோயிலில் நடைபெறும் பூஜைகளின் எண்ணிக்கையைப் பொறுத்தும் மற்றும், அக்கோயிலின் நிதி நிலைமையைப் பொறுத்தும் மாதம் RM 200 முதல் RM 600 வரை ஊதியமாக வழங்கப்படுகிறது. பெரும்பாலும், கோயிலுக்கு வழிபட வருபவர்கள் தெய்வத்திற்குப் படைப்பதற்காகப் பழங்கள் பலகாரங்கள் மற்றும், தட்சணையாகச் சிறிது பணத்தையும் வழங்குகின்றனர். தட்சணை, கோயிலில் சமயச் சடங்குகளைச் செய்பவர்களுக்கு உரியதாகிறது. இதனால், இவர்கள் சற்றுக் கூடுதலான வருமானத்தைப் பெற முடியும். சில நேரங்களில் கோயிலில், வாழ்வில் நேரும் கஷ்டங்களை விரட்ட, ஒரு சிலர் சிறப்பு பரிகார பூஜைகளும் சிறப்பு பூஜைகளும் செய்வதுண்டு. இவ்வேளைகளில் சிறிது அதிகமான தட்சணையும் மற்றும், பொருட்களும் தெய்வத்திற்குப் படைக்கப்படுகின்றது. அதிகமான பக்தர்களை ஈர்க்கும் கோயில்களில் பூஜைகளின் மூலம் கிடைக்கும் வருமானம் அதிகமாக இருப்பதால் இது போன்ற ஆலயங்களில் பணிபுரிய குருக்கள் ஆர்வம் காட்டுகின்றனர்.

சிறப்பு உபய நாட்களின் போதும் மற்றும், இந்துச் சமய நாள்காட்டியின்படி சிறப்பு தினங்களில் நிகழும் வழிபாடுகளின் போதும் இத்தகைய பங்களிப்புகள் அதிகமாக இருப்பதை காணலாம். இப்பங்களிப்பின் விகிதம் கோயிலுக்குக் கோயில் வித்தியாசப்படுகின்றது. இதில் குறைந்தது ஒரு பங்கு குருக்களுக்கு உரிமையாக்கப்படுகின்றது. இந்த விஷயங்களைக் கருத்தில் கொண்டுதான், கோயிலின் நிர்வாகம் குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்கிறது. இருப்பினும், அத்தகைய கூடுதல் வருவாய் வருடத்தின் சில காலங்களில் மட்டுமே கிடைப்பதாகும். மேலும், இது கோயில் வகை மற்றும், அங்கு வருகை தந்து வழிபடுபவர்களின் பொருளாதார நிலைமையையும் பொருத்ததாகும்.

## குருக்களுக்கு ஊதியம் வழங்க முடியாத நிலையில் கோயில்கள்

இந்துக் கோயில்கள் நிதிப்பிரச்சினையை எதிர்நோக்குகின்றன. அதோடு, தகுதி வாய்ந்த குருக்களை ஊதியத்திற்கு நியமிக்கும் நிலைமையில் அவை இல்லை. பெரும்பாலான கோயில்கள், பயிற்சி பெற்ற குருக்களைக் கோயில்களில் நியமிக்க இந்த நிதி நெருக்கடி ஒரு தடையாக உள்ளது எனக் கூறுகின்றனர். பகுதிநேர பணியில் இருப்பவர்கள் சில நேரங்களில் மட்டுமே கோயிலில் இருப்பார்கள். இவர்களால் அங்கு இந்துச் சமய விவகாரப் பொறுப்பாளராக முறையாகச் செயல்பட முடியாது. அவர்களுக்கு இருக்கக்கூடிய குறைந்தபட்ச சமய அறிவைக்கொண்டு பூஜைகளை மட்டுமே நடத்த இயலும்.

இப்போது பல உள்ளூர் இந்து இளைஞர்கள் தகுதி பெற்ற குருக்களின் துணையைக் கொண்டு இந்தத் துறையில் ஈடுபடத் தொடங்கியுள்ளனர். இவர்களில் சிலர் மலேசிய இந்து சங்கம் மற்றும், குருக்கள் சங்கம் மலாக்காவிலும் வெளியிலும் ஏற்பாடு செய்யப்படும் குறுகிய காலப்பயிற்சிகளில் கலந்துகொண்டு வருகின்றனர். இருப்பினும், இந்தத் துறையின் மீதான ஆர்வம் கோயில்கள் வழங்கக்கூடிய போதுமான

ஊதியத்தைப் பொறுத்தே உள்ளது. மேலும், இந்தத் துறையில் சேர விரும்பும் பெரும்பாலானவர்கள் பள்ளிக்கல்வியில் வெற்றி பெற்றவர்களாக இல்லாதது கவனிக்கத்தக்கது இதனால் அவர்கள் வழங்கக்கூடிய சேவையின் தரம் ஒரு கேள்விக்குறியாகவே உள்ளது.

இந்த ஆய்வு நடைபெற்ற நேரத்தில் இந்த விஷயத்தில் எந்தவிதத் தீர்வும் காணப்படவில்லை. இதனால், இம்மாநிலத்தில் உள்ள கோயில்களின் பங்கைப் பாதிக்கும் குருக்கள் அல்லது பூசாரிகளின் தரம் சம்பந்தமாக ஏற்படும் பிரச்சினைகளின் காராணத்தால் இந்து சமய விவகாரங்களில் சேவை தருவதில் மற்றும், வழிகாட்டுதல் போன்ற விஷயங்களில் பெரும்பாலான கோயில்கள் தயார் நிலையில் இல்லை எனும் நிலை நீடிக்கவே செய்கிறது.

## உண்மையில் தகுதிவாய்ந்த குருக்களின் சேவைகள்

இருப்பினும், இந்த நிலைமை கோயில்களில் ஏற்கனவே பொதுவான நடைமுறையாக இருப்பதால் பல நிர்வாகங்கள் இந்த ஆய்வின்போது இதை ஒரு பெரிய பிரச்சினையாகக் கருதவில்லை என்பதைக் காணமுடிந்தது. ஐந்து கோயில் நிர்வாகங்கள் மட்டுமே இந்தப் பிரச்சினையை எழுப்பின. கோயிலில் பணிபுரிய உள்குடிநுழைவுத் துறையின் அனுமதியோடு தமிழ்நாட்டிலிருந்து உண்மையான தகுதிவாய்ந்த குருக்களைக் கொண்டு வர இயலும் என்ற நம்பிக்கையை இவர்கள் கொண்டுள்ளனர். இதனால், சேவை சம்பந்தமாக எழும் குருக்களின் தரம் போன்ற பிரச்சனைகளுக்கு விரைவில் தீர்வு காணலாம் என்று இவர்கள் கருதுகின்றனர்.

தற்போது மலேசிய இந்து சங்கம் தமிழ்நாட்டிலிருந்து குருக்களைத் தேர்ந்தெடுப்பது குறித்து உள்குடிநுழைவுத் துறைக்கு ஆலோசனை வழங்கி வருகிறது. குருக்களே தங்கள் நலன்களுக்காகப் போராடத் தங்களுக்கென ஒரு சங்கத்தையும் கொண்டுள்ளனர். ஒரு சிலர் இதை ஒரு முக்கிய விசயமாகக் கருதாவிட்டாலும் மலாக்காவில் உள்ள பெரும்பாலான இந்துக் கோயில்கள் அங்கு வரும் பக்தர்களுக்குத் தரமான சேவையை வழங்குவதற்காக முழு தேர்ச்சிப் பெற்ற குருக்களை வேலைக்கு அமர்த்தும் நிலையில் இல்லை என்பதையே காணமுடிகின்றது.

## கோயில்களில் பாதுகாப்பு

எல்லா கோயில்களிலும் ஊதியத்திற்குப் பணி செய்யும் காவலர்கள் இல்லை. கோயில் வளாகத்தில் ஊதியம் பெறும் குருக்களுக்கோ பூசாரிக்கோ குடியிருக்கும் வீடுகள் கொடுக்கப்பட்டிருந்தால் அவர்களே சம்பந்தப்பட்ட கோயிலில் இந்தப் பங்கையும் ஆற்றுகின்றனர். மலாக்காவில் 41 கோயில்கள் மட்டுமே இந்த வசதியைக் கொண்டுள்ளன என்பதை அட்டவணை 14 காட்டுகிறது. அதே நேரத்தில் மலாக்காவில் உள்ள நூற்றுக்கும் மேற்பட்ட பிற கோயில்களில் அவற்றின் பாதுகாப்பு நிர்வாக உறுப்பினர்களின் தன்னார்வத் தன்மையைப் பொறுத்ததாகும்.

மலாக்காவில் உள்ள கோயில்களில் மொத்தம் 24 உதவியாளர்கள் பணிபுரிகின்றனர். அவர்களின் பணி குருக்கள் மற்றும், கோயில் நிர்வாகக் குழுவினர்களுக்கு அவ்வப்போது உதவி செய்வதாகும். இவர்களில் பெரும்பாலோர் பகுதி நேரமாக வேலை செய்வதால் குறிப்பிட்ட நேரங்களில் மட்டுமே கோயிலில் இருக்கிறார்கள். கோயிலின் தூய்மையை உறுதி செய்வதே இவர்களின் பொறுப்பாக இருக்கின்றது. மற்றக் கோயில்களில் குருக்கள் அல்லது பூசாரி மற்றும், கோயிலின் நிர்வாக உறுப்பினர்கள் போன்றோரால் கோயில்களின் தூய்மை பராமரிக்கப்படுகிறது.

கடந்த சில ஆண்டுகளாகச் சில கோயில்களில் கோயில் நிர்வாகம் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவர்கள் சிபாரிசு செய்யும் நபருக்குப் பகுதி நேரமாக வாரத்தில் சில நாட்கள் கோயிலின் வளாகத்தின் சுத்தத்தைப் பராமரிக்க மாநில அரசு சிறிய ஊக்குவிப்புத் தொகையை வழங்கிவருகின்றது.

இந்த வசதி மலாக்காவில் உள்ள இந்தியச் சமூகத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் ஓர் அரசியல் கட்சியின் வேண்டுகோளின் பேரில் கிடைக்கிறது. மேலும், சம்பந்தப்பட்ட கோயில்கள் உள்ளூர் ஆட்சி மன்றப் பகுதிக்குள் இருக்க வேண்டும். தோட்டப்புறங்களில் உள்ள கோயில்கள் இந்த வசதியைப் பெறுவதில்லை.

## கோயில்களில் பூஜை

பூஜை என்பது ஒரு கோயிலில் நிகழக்கூடிய மற்றும், அங்குச் சுற்றியுள்ள இந்துச் சமயத்தைச் சார்ந்தவர்களுக்கு முக்கிய பங்காற்றும் கோயில்களுக்கு இது ஒரு முக்கிய சமயச் சடங்காகும். பூஜைகள் தினமும் காலை, நண்பகல் மற்றும், மாலை நேரங்களில் நடைபெறும். பூஜை நடைபெறும் சமயத்தில் பூசாரி/குருக்கள் எண்ணெய் விளக்குகளை ஏற்றித் தெய்வங்களுக்குப் பூமாலைகளைச் சாற்றி ஆலய மணியை ஒலிக்கச் செய்து பூஜை மணியை ஒலித்துக்கொண்டே தொடர்ந்து மந்திரங்களை ஓதுவார். அதன் பிறகு, கோயிலுக்கு வழிபட வந்தவர்கள் அவர்களின் நெற்றியில் பூசிக் கொள்ள பிரசாதமாக இந்துக்கள் புனிதமாகக் கருதப்படும் திருநீறு வழங்கப்படும். எந்தக் கோயிலிலும் நடைபெறும் நிகழ்வுகளில் பூஜை என்பது ஒரு முக்கியமான நிகழ்வாகும். சமயத் தலைவர் என்ற முறையில் இதைக் குருக்கள் அல்லது பூசாரி நடத்தித் தருவார்.

**அட்டவணை 22: மலாக்கா மாநில கோயில்களில் தினசரிப் பூஜைகள்**

| மாவட்டம் | 3 வேளைகள் | 2 வேளைகள் | ஒரு வேளை | குறிப்பிட்ட நாள் மட்டும் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 2 | 18 | 16 | 8 | **44** |
| ஜாசின் | 1 | 18 | 22 | 5 | **46** |
| அலோர் காஜா | 1 | 16 | 33 | 6 | **56** |
| **மொத்தம்** | **4** | **52** | **71** | **19** | **146** |
| **சதவிகிதம்** | 2.7 | 35.6 | 48.6 | 13.1 | |

## தினசரிப் பூஜைகளின் எண்ணிக்கை

மலாக்காவில் தினமும் 3 வேளைகளில் - காலை, நண்பகல், மாலை - என 3 வேளைகள் பூஜைகள் நடத்தும் கோயில்கள் 4 மட்டுமே உள்ளன. இந்தக் கோயில்களுக்கு எல்லா வேளைகளிலும் வழிபட பக்தர்கள் வருகை தருகின்றனர். 52 கோயில்களில் தினமும் காலையிலும் மாலையிலும் என இரு வேளைகள் பூஜைகள் நடைபெறுகின்றன. 71 கோயில்களில் மாலையில் மட்டுமே பூஜைகள் நடைபெற்று வருகின்றன. பூஜைகள் இந்து நாட்காட்டியில் குறிப்பிடப்பட்ட நேரங்களில், அவை இந்துக்கள் வழிபட பொருத்தமான நேரமாகக் கருதப்படுவதால், அந்தந்த நேரங்களில் நடத்தப்படுகின்றன. இருப்பினும், ஆலயப் பூஜைகளில் கலந்துகொள்ள வருபவர்களுக்குக் குறிப்பிட்ட நேரத்தில் கலந்துகொள்ள வேண்டும் எனும் கட்டாயம் இல்லை. எனினும், குருக்களோ பூசாரிகளோ கட்டாயமாகக் கோயிலில் இந்துச் சமய நாட்காட்டியில் குறிப்பிடப்பட்ட நேரத்தில் பூஜையைத் தொடங்க வேண்டும்.

இந்துச் சமயத்தில் புனிதமாகக் கருதப்படும் நாட்கள் இருந்தாலும், 19 கோயில்கள் வாரத்தின் சில நாட்களில் மட்டுமே தீபத்தை ஏற்றுகின்றன. இருப்பினும், இவற்றில் சில கோயில்கள் வருடத்திற்கு ஒருமுறைதான் அதாவது, திருவிழாக் காலங்களில் மட்டுமே பூஜைகளை நடத்துகின்றன. இந்தக் கோயில்களில் ஊதியத்திற்கு அமர்த்தப்பட்ட பூசாரியோ அல்லது சமயச்சடங்குகளைச் செய்பவரோ கிடையாது. இவர்கள் ஆண்டுத் திருவிழாக்களின்போது மட்டுமே அழைக்கப்படுகிறார்கள்.

## தினசரிப் பூஜைகளில் கலந்துகொள்வோர்

தினசரி வருகைபற்றிய மேலுள்ள தரவுகளுடன் தினசரிப் பூஜைகளில் கலந்துகொள்பவர்களின் எண்ணிக்கையைக் காட்டும் அட்டவணை 23-உடன் சேர்த்து காண்பது அவசியம். தினசரி பூஜைகள் நடப்பதை உறுதிப்படுத்திய 127 கோயில்களில், 13 அல்லது 10.2 சதவீத கோயில்களில் மட்டுமே தினசரி பூஜையில் 21-க்கும் மேற்பட்ட பக்தர்கள் கலந்துகொள்கின்றனர். மேலும், 27 அல்லது 21.3 சதவீத கோயில்களில் தினசரி சராசரியாக 11 முதல் 20 பேர்வரை கலந்து கொள்கின்றனர். இந்த அட்டவணையில்

31.3% அல்லது 41 கோயில்கள் 5-க்கும் குறைவான நபர்கள் கலந்துகொள்வதாகத் தெரிவிக்கின்றன, 36.2% அல்லது 46 கோயில்களில் தினசரி சராசரியாக 6 முதல் 10 வரையிலான நபர்களே கலந்துகொள்வதாகக் குறிப்பிடுகின்றன. உண்மையில், இது கோயிலில் தினசரி பூஜைகளில் கலந்து கொள்பவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு என்பதைக் காட்டுகின்றது. இந்துக்களால் புனித நாளாகக் கருதப்படும் வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே சிலர் கோயிலுக்குச் செல்வதால், அன்றும், இந்து சிறப்பு / புனித நாட்களிலும் சற்றுக் கூடுதலான பக்தர்கள் பூஜைக்கு வருகை புரிகின்றனர்.

## வீட்டில் வழிபடுவதற்கான வசதிகள்

தற்போதைய சூழ்நிலைகளில் வீடமைப்புப் பகுதிகளில் சொந்த வீடுகளில் அல்லது வாடகை வீடுகளில் வசிப்பவர்களில் பெரும்பாலோர் தங்கள் வீடுகளில் பிரார்த்தனை அல்லது வழிபாடு செய்யத் தெய்வங்களின் படங்கள், விக்கிரகங்களைக் கொண்ட சிறப்பு அறைகளையும் சாமி மேடைகளையும் கொண்டுள்ளனர். அதனால், இவர்களில் பெரும்பாலும் அருகில் உள்ள கோயில்களில் நடைபெறும் பூஜைகளில் கலந்துகொள்வது முக்கியம் எனக் கருதுவதில்லை. அதோடு, இப்போது கோயில்கள் தங்கள் வீட்டிலிருந்து சற்று தொலைவில் இருப்பதால், அங்குச் செல்வதற்கு முன்னேற்பாடுகளும் மற்றும், கூடுதல் நேரமும் தேவைப்படுகின்றன. இப்போது இருக்கும் இதர தினசரிப் பணிகளும் கோயிலுக்குச் செல்வதைக் கட்டுப்படுத்துகின்றன. இன்று தொலைக்காட்சியில் இடம்பெறும் பல்வேறு தமிழ் நாடகத் தொடர்களுடன் தொலைக்காட்சியில் உள்ள பொழுதுபோக்கு அம்சங்களும் இல்லத்தரசிகள் கோயிலில் பூஜையில் கலந்துகொள்வதற்குத் தடையாக உள்ளன. இன்று பெரும்பாலான இந்துக் குடும்பங்கள் தங்கள் சொந்த வீடுகளில் பிரார்த்தனை செய்ய வசதிகள் இருப்பதை பயன்படுத்திக்கொள்கின்றனர். இத்தகைய வசதி முன்பு தாங்கள் வாழ்ந்த சிறிய வீடுகளில், அதாவது, முதலாளிமார்களோ அல்லது அரசோ, வழங்கியிருந்த வீடுகளில், இல்லாமல் இருந்தது.

இன்று தங்கள் வீடுகளில் இது போன்ற வசதிகள் இருப்பதால் கோயில்களுக்கு ஆண்டுத் திருவிழா நடைபெறும்போதும் அல்லது கோயிலில் சிறப்பு சமய சார்பான நிகழ்ச்சிகள் நடைபெறும்போது மட்டுமே செல்பவர்களும் உண்டு.

**அட்டவணை 23: மலாக்கா மாநில இந்துக் கோயில்களில் தினசரிப் பூஜைகளுக்குச் சராசரியாக வருகைத் தருவோர்**

| மாவட்டம் | 1-5 | 6-10 | 11-20 | 21+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 8 | 11 | 9 | 8 | 36 |
| ஜாசின் | 13 | 19 | 8 | 1 | 41 |
| அலோர் காஜா | 20 | 16 | 10 | 4 | 50 |
| மொத்தம் | 41 (32.3%) | 46 (36.2) | 27 (21.3) | 13 (10.2%) | 127 |

**குறிப்பு: மற்றக் கோயில்களில் தினசரி பூஜைகள் இல்லை**

## பாரம்பரியத்தின் காரணமாக இந்துச் சமயத்தைப் பின்பற்றுவோர்

மலாக்காவில் இந்துச் சமயத்தைப் பின்பற்றுவோரில் பெரும்பாலோர் முறையான சமயக் கல்வியைப் பெற்றவர்கள் அல்லர்; மாறாக இவர்கள் தங்கள் பெற்றோரிடமிருந்து கற்றுக்கொண்ட நடைமுறைகள், அவர்களைச் சுற்றியுள்ள சமூகம், தொலைக்காட்சி, திரைப்படங்கள் மற்றும், சமூகத் தொலைதொடர்பு சாதனங்கள் மூலமாகப் பெறப்பட்ட அறிவு போன்றவற்றைப் பின்பற்றியே சமயத்தைப் பேணுகிறார்கள். உண்மையில், இந்த நாட்டில் இந்துக்களுக்கு முறையான இந்துச் சமயக் கல்வி கட்டாயமாக்கப்படவில்லை. அவர்கள் இந்துக் குடும்பத்தில் பிறந்து தங்கள் குடும்பப் பாரம்பரியத்தைத் தொடர்வதோடு அவர்களது குடும்பம் மற்றும், உறவினர்களின் பரம்பரை நடைமுறைகளைத் தொடர்ந்து பின்பற்றி வருகின்றனர். என்றாலும், தகுதி பெற்ற சமயச் சடங்குகளைச் செய்வோர் அல்லது குருக்கள், குறிப்பாகத் தமிழ் நாட்டிலிருந்து

மலாக்காவிற்கு வந்தவர்கள், இன்றைய நடைமுறைகள் அல்லது போதனைகளைத் திணிக்க முயன்றாலும், இங்குள்ள கோயில் தலைவர்கள் அல்லது நிர்வாகத்தினர் இன்னும் தங்கள் முந்தைய தலைமுறையினரால் மலாக்காவிற்குக் கொண்டு வரப்பட்ட பழைய நடைமுறைகளை விட்டுக் கொடுப்பதில்லை.

இந்த வழக்கம் பழைய நடைமுறைகள் இங்கே கோயில்களில் தொடர்ந்து இருப்பதற்குக் காரணமாக இருக்கின்றது. மேலும், தமிழ் நாட்டிலிருந்து வரும் குருக்கள், அங்கும் கிராமங்களில் பழைய முறைகள் தொடர்வதை உணர்ந்துள்ளதால், இங்கும் அவற்றை ஏற்றுக்கொள்கிறார்கள். இதற்கான காரணம் இந்துக் கோயில்களில் சடங்கு அல்லது சமய விழாக்களில் எத்தகைய நடைமுறைகள் செய்யப்பட வேண்டும் அல்லது செய்யக் கூடாது என்பதை தீர்மானிக்க எந்த இந்துச் சமய நிர்வாக மையத்திற்கும் அதிகாரம் இல்லை. இந்தியாவிலும் இந்த நிலைதான். - இந்த நிலை உள்ளூர் பக்தர்கள் சுதந்திரமாக அவர்களுக்குத் தெரிந்த பாரம்பரிய நடைமுறைகளைத் தொடர அனுமதிக்கிறது.

## இந்துப் பண்டிகைகள் தினத்தன்று பூஜைகள்

இந்து நாட்காட்டியின்படி சிறப்புப் பண்டிகை நாட்களில் கோயிலில் கலந்துகொள்வது பெரும்பாலும் சிறந்தது எனக் கருதப்படுகிறது. ஏனெனில், பூஜை முடிந்ததும் சில கூடுதலான நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். அதோடு, அன்னதானமும் வழங்கப்படும். பண்டிகைக் காலங்களில் மலாக்காவில் 131 கோயில்களில், தினசரி பூஜைகள் நடைபெறாதக் கோயில்கள் உட்பட, சிறப்பு நிகழ்ச்சிகளோடு கொண்டாடப்படுகின்றன. சாதாரண நாட்களின்போது வீட்டிலேயே வழிபடுவோரில் பெரும்பாலோர் குடும்பத்தோடு சிவராத்திரி, தைப்பொங்கல், தைப்பூசம், விநாயகர் சதுர்த்தி, துர்கா பூஜை, தீபாவளி, கிருஷ்ண ஜெயந்தி போன்ற பண்டிகை நாட்களின்போது கோயிலுக்குச் செல்வது வழக்கம். ஒவ்வொரு மாதத்திலும் புனித நாட்களாகக் கருதப்படும் சில தினங்கள் உள்ளன. ஒரு சிலர் அவர்களின் விருப்பத்திற்கேற்ப அவர்கள் தேர்ந்தெடுக்கும் அத்தகைய பண்டிகை நாட்களின்போது கோயிலுக்குச் செல்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். பெரும்பாலான கோயில்களில் சந்திரனின் (கிரகம்) நிலையைப் பொறுத்து பௌர்ணமி அல்லது அமாவாசை அன்று சிறப்பு பூஜைகளுடன் வழிபாடு நடைபெறுகின்றது. எந்தப் பண்டிகைகள் கோயில்களில் கொண்டாடப்பட வேண்டும் என்பதை அந்தந்தக் கோயில்களின் நிர்வாகம் தீர்மானிக்கிறது. வேறு கூடுதல் நிகழ்ச்சிகளைத் தவிர்த்து கோயில்களில் குடியிருக்கும் சம்பந்தப்பட்ட தெய்வங்களுக்கு ஏற்ப பொருத்தமான பண்டிகைகளைத் தேர்ந்தெடுத்து வழிபடுவதில் நிர்வாகம் ஆர்வம் கொண்டிருக்கும். இத்தகைய பண்டிகைகளை நடத்துவதற்கான நிகழ்ச்சிக் கோவையை கோயிலின் நிர்வாகமே ஏற்பாடு செய்கின்றது.

இத்தகைய பண்டிகைக் காலத்தின்போது சில கோயில்களில் ஏற்பாடு செய்யப்படும் நடனம் மற்றும், இசை நிகழ்ச்சிகள், சமயம் சம்பந்தமான உரைகள், கோயிலில் வழங்கப்படும் சிறப்பு அன்னதானம் ஆகியவை, பெரும்பாலும் பக்க ஈர்ப்பாக அமைவதோடு கோயிலுக்கு விசுவாசமான பக்தர்களால் அதற்கான செலவுகளும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

**அட்டவணை 24: மலாக்கா மாநில இந்துக்கோயில்களில் பண்டிகை மற்றும், பூஜைகளின் போது வருகைத் தருவோர்**

| மாவட்டம் | 1-20 | 21-30 | 31-50 | 51+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 8 | 3 | 17 | 8 | 36 |
| ஜாசின் | 8 | 12 | 17 | 3 | 40 |
| அலோர் காஜா | 19 | 11 | 11 | 4 | 45 |
| மொத்தம் | 35 (28.9%) | 26 (21.9%) | 45 (37.1%) | 15 (12.3%) | 121 |

பண்டிகைக் காலங்களில் வழக்கமாக மாலை வேளைகளில் மணி 7.30-க்குப் பிறகு நடைபெறும் பூஜை சமயத்தில் மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களுக்கு வரக்கூடிய பக்தர்களின் எண்ணிக்கையை அட்டவணை 24 காட்டுகிறது. குறைந்தது 60 கோயில்களில் 31-க்கும் அதிகமான பக்தர்கள் வருகைத்

தருவதாக ஒப்புக்கொள்கின்றனர். இருப்பினும், 35 கோயில்களில் 20-க்கும் குறைவானவர்களே வருகை தருகின்றனர். மேலும், மலாக்காவில் உள்ள 15 கோயில்களில் பண்டிகைக் காலங்களில் எந்தப் பூஜைகளும் நடைபெறுவதில்லை.

## கோயில்களில் சிறப்புப் பூஜைகள் அல்லது உபயங்கள்

பண்டிகைகளைக் கொண்டாடும் கோயில்கள், பக்தர்கள் உபயங்கள் செய்வதற்கும் அனுமதிக்கின்றன. அதாவது, ஒரு தெய்வம் சம்பந்தமான புனிதத் தினங்களையொட்டி சிறப்புப் பூஜைகள் செய்வதற்கு விருப்பமுள்ளவர்கள் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர். சில சமயங்களில் யாராவது ஒருவர் ஓர் உபயத்திற்காக முழுச் செலவையும் ஏற்றுக் கொள்கிறார். வேறு சமயங்களில் பலர் ஒரு குழுவாக இணைந்து அந்த உபய தினத்தன்று நடைபெறும் சிறப்புப் பூஜைக்கான செலவை ஏற்றுக் கொள்கின்றனர். உபயம் செய்பவர்கள் கோயில் நிர்வாகம் நிர்ணயிக்கும் தொகையைச் செலுத்த வேண்டும். சில கோயில்கள் ஒரு குறிப்பிட்ட தொகையை நிர்ணயிப்பதோடு வருகைதரும் அனைவருக்கும் உணவு மற்றும், பானங்களை ஏற்பாடு செய்வதோடு கோயில் வளாகத்தில் தெய்வங்களின் ஊர்வலத்தோடு சிறப்புப் பூஜைகளை நடத்துகின்றன. இருப்பினும், சில கோயில்களில் சமய விழாக்களுக்கு மட்டும் ஏற்படும் செலவை ஏற்றுக்கொள்வதோடு மற்ற ஏற்பாடுகளை, அதாவது, அன்னதானம் போன்ற ஏற்பாடுகளை, அன்றைய உபயத்தைச் செய்பவரிடம் ஒப்படைக்கப்படுகிறது. உபயம் செய்பவர்களில் சிலர் சமய உரை மற்றும் பண்பாட்டு நிகழ்ச்சிகள் போன்ற கூடுதலான நிகழ்ச்சிகளையும் சமய விழாக்களுக்குப் பிறகு அங்கு வந்திருக்கும் பக்தர்களுக்காக ஏற்பாடு செய்கின்றனர்.

இந்த ஆய்வின்போது கூறப்பட்ட விசயங்களின்படி மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களில் அந்தந்தக் கோயில்களின் நடைமுறையின்படி, உபயம் செய்வதற்காக ஓர் உபயத்திற்கு RM150 முதல் RM4,500 வரை தொகை வசூலிக்கப்படுகிறது. சில சமயங்களில் சம்பந்தப்பட்ட கோயில்களின் அனுமதியின் பேரில் பலர் சேர்ந்து சம்பந்தப்பட்ட நாளின் உபயத்தின் செலவை ஏற்றுக் கொள்கின்றனர். சாதாரண இந்துக்களால் ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில் உபயச் செலவிற்காக அதிகத்தொகையை நிர்ணயிக்கும் கோயில்களும் உள்ளன. இந்தக் கோயில்கள் தங்களுடைய பிரத்தியேகத் தன்மையைக் காக்கும் பொருட்டு சில வசதிபடைத்த இந்துக்களையே/ பக்தர்களையே குறியாகக் கொண்டு அவர்களிடம் மட்டும் அந்தச் செலவை ஏற்றுக்கொள்ளச் செய்கின்றனர்.

**அட்டவணை 25 : இந்துக் கோயில்களில் உபய நிகழ்ச்சிகளுக்கு வருகைத் தருவோர்**

| மாவட்டம் | 1-40 | 41-60 | 61-80 | 81+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 6 | 10 | 7 | 13 | 36 |
| ஜாசின் | 12 | 10 | 6 | 13 | 41 |
| அலோர் காஜா | 25 | 12 | 5 | 8 | 50 |
| மொத்தம் | 43 (33.8%) | 32 (25.2%) | 18 (14.2%) | 34 (26.8%) | 127 |

ஓர் உபயம் நடைபெறும்போது உபயக்காரர் அவருக்குத் தெரிந்தவர்கள் மற்றும், நண்பர்கள் அனைவரையும் உபய நிகழ்ச்சியில் கலந்துகொள்ள அழைக்கிறார். அதோடு, அன்றையத் தினம் பெரும்பாலும் கோயில் நிர்வாகத்தினர் மற்றும், அவர்களுடைய குடும்பத்தினரும் உடன் கலந்துகொள்கின்றனர். இதனால், உபய நாளன்று நடைபெறும் பூஜையில் கலந்துகொள்ளும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகரிக்கிறது. உபயக்காரரே அன்றைய அன்னதான முழுச் செலவையும் ஏற்றுக்கொள்கிறார். சில நேரங்களில் உபய நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வோரின் எண்ணிக்கை, உபயக்காரரின் செல்வாக்கைப் பொறுத்து 300 பக்தர்களையும் தாண்டுகிறது.

இருந்தாலும், மலாக்காவில் உள்ள பெரும்பாலான கோயில்களில் திருவிழாக் காலங்களில் மட்டுமே உபயங்கள் நடைபெறுகின்றன. அதோடு, கிடைக்கப்பெற்ற புள்ளி விவரங்களின்படி 35 கோயில்களுக்கும் குறைவான கோயில்களில் மட்டுமே ஆண்டிற்கு 20-க்கும் மேற்பட்ட உபயங்கள் நடைபெறுகின்றன. எனினும், மலாக்காவிலுள்ள 15 கோயில்களில் எத்தகையப் பண்டிகைகளுக்கான பூஜைகளும் நடப்பதில்லை.

## திருவிழா

கோயிலின் வருடாந்திரத் திருவிழாவில் மிக அதிகமானோர் கலந்துகொள்கின்றனர். திருவிழா நடைபெறும் நாள் முன்கூட்டியே அறிவிக்கப்படுவதால், முன்பு கோயில் இருந்த இடத்திற்கருகில் வசித்தவர்கள் தற்போது மலாக்கா மாநிலத்திற்கு வெளியே அல்லது வெளிப்பகுதிகளில் வேலை செய்பவர்கள் மற்றும், குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் இந்த ஆண்டுத் திருவிழாச் சமயத்தின்போது தங்கள் சொந்த ஊர்களுக்குத் திரும்புவதற்கு முயற்சியை மேற்கொள்கின்றனர். அவர்கள் முதலில் வாழ்ந்த இடத்தில் இருந்த கோயிலில் நடைபெறும் திருவிழாவில் ஒன்றுகூடுதல் என்பது நீண்டகாலம் அவர்களால் எதிர்பார்க்கப்பட்டத் தருணமாக அமைவதோடு ஒரு மகிழ்ச்சியான சூழ்நிலையை எப்போதும் இந்தத் திருவிழா ஏற்படுத்தித் தருகிறது. பெரும்பாலான இந்துக்கள் திருவிழாவை முக்கியமானதாகக் கருதுகிறார்கள். இத்தருணத்தில் அவர்களுள் சிலர் தங்களது வேண்டுதல்களை நிறைவேற்றக் காவடி எடுத்தல், பால்குடம் எடுத்தல் மற்றும், தீமிதித்தல் போன்றவற்றைச் செய்வதோடு குழந்தைகளுக்கு முடி இறக்குவது, மற்றும், இது போன்ற காணிக்கைகளைத் தெய்வத்திற்குச் செலுத்துகின்றனர். கோயில் ஆண்டுத் திருவிழாவின்போது அன்றைய நாள் முழுவதும் பலவகையான சுவாரஸ்யமான நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்படுகின்றன. அதோடு, தேர் ஊர்வலமும் கோயிலின் பகுதிக்குள் இருக்கும் இந்துக்கள் வாழும் கிராமங்கள் மற்றும், குடியிருப்புப்பகுதிகள் வழியாகச் செல்வது, இந்துக்களுக்கு மட்டும் அல்லாது பிற இன, மதத்தைச் சேர்ந்தவர்களுக்கும், சுற்றுலாப்பயணிகளுக்கும், ஓர் ஈர்ப்பாக அமைகிறது.

## மலாக்காவில் மாசிமகத் திருவிழா

மலாக்காவில், செங் பகுதியில் ஜாலான் குருபோங்கில் உள்ள நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்திற்குச் சொந்தமான சன்னாசிமலை ஆண்டவர் ஆலயத்தில் (MT1) தமிழ் மாதமான மாசியில் நடைபெறும் மாசிமகத் திருவிழாவிற்குச் சன்னாசி மலை ஆண்டவர் மேல் உள்ள நம்பிக்கையின் காரணமாக மிக அதிக எண்ணிக்கையில், அதாவது, ஒரு லட்சத்திற்கும் அதிகமான பக்தர்களை, ஒரு காலத்தில் ஈர்த்ததும் உண்டு. இந்தத் திருவிழா மலாக்கா மாநிலத்தைத் தவிர நாட்டின் மற்ற பகுதிகளிலிருந்தும், சிங்கப்பூர் மற்றும், தமிழ்நாட்டிலிருந்தும் பக்தர்களை ஈர்க்கிறது. திருவிழாவிற்கு முந்தைய நாள் கோயிலுக்குச் சொந்தமான வெள்ளி ரதம் ஊர்வலமாக மலாக்கா நகரத்திலிருந்து இந்தக் கோயிலுக்கு வருகின்றது. திருவிழா முடிந்தபின் அன்று மாலை அங்கிருந்து மறுபடியும் மலாக்கா நகரத்திற்குத் திரும்புகிறது.

இந்த ஊர்வலத்தின்போது வழிநெடுகிலும் சீனச் சமூகம் மற்றும், மலாக்கா செட்டி மற்றும், பாபா போன்ற மலாக்கா பெரனாக்கான் சமூகம் உட்பட, பக்தர்கள் தங்களது காணிக்கைகளையும் தட்சணை பொருட்களையும் செலுத்தி முருகப்பெருமானை வணங்குகின்றனர். திருவிழாச் சமயத்தில், கோயிலுக்குச் செல்லும் வழியில் நுழைவாயிலுக்கு முன்பதாக இருபுறமும் பல விற்பனைக் கடைகள் இருப்பதையும் காணலாம். இந்தத் திருவிழாவின்போது பல தன்னார்வ அமைப்புகள் குடிநீர் விநியோகம் (நீர்ப் பந்தல்) மற்றும், பிற பாதுகாப்பு உதவிகளை வழங்குவதன் மூலம் கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கு உதவி புரிகின்றனர். குழந்தைகள், இளைஞர்கள் மற்றும், பெரியவர்களை ஈர்க்கும் நடவடிக்கைகள் இந்த விழாவில் சில நாட்களுக்கு ஏற்பாடு செய்யப்படுகின்றன.

## மலாக்கா செட்டிச் சமூகத்தினரின் 'டத்தோ சாச்சார்' எனப்படும் மாரியம்மன் திருவிழா

மலாக்கா செட்டிச் சமூகத்தைப் பொறுத்தவரை, இந்து நாட்காட்டியின்படி சித்திரை மாதத்தில் `டத்தோ சாச்சார்' எனப்படும் மாரியம்மன் திருவிழா வெகுவிமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இச்சமயத்தில் உள்ளூர் மற்றும், வெளியூரிலிருந்து திரும்ப வரும் மலாக்கா செட்டி சமூகத்தைச் சேர்ந்தவர்கள், உள்ளூர் தமிழ் மக்கள், அதோடு, குறிப்பாகச் சீனர்கள், மலாக்கா பெரானாக்கான் பாபா சமூகம் போன்றோர்கள்

கிட்டத்தட்ட 10,000 பக்தர்களை ஒவ்வோர் ஆண்டும் இத்திருவிழா ஈர்க்கிறது. இந்த டத்தோ சாச்சார் திருவிழா மலாக்காவில் நன்கு அறியப்பட்டதாக இருப்பதால் இதில் பல வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளும் கலந்துகொள்கின்றனர்.

மலாக்கா செட்டிச் சமூகத்தைப் பொறுத்தவரை, ஸ்ரீ முத்து மாரியம்மன் கோயிலில் (MT3) நடைபெறும் இந்தத் திருவிழாவில் நடைபெறும் வண்ணமயமான இரத ஊர்வலம் அர்த்தம் மிகுந்ததாகக் கருதப்படுகிறது. ஏனெனில், இந்தச் சமூகத்தின் பாரம்பரியத்தைப் பற்றிய ஆயிரம் கதைகளை இந்த விழா கூறுவதோடு, இந்துச் சமயத்தின் மீது வலுவான பிடிப்பை இந்தச் சமூகம் இன்னும் கொண்டிருப்பதையும் தெளிவாகக் காட்டுகிறது. இவர்கள் கிரியோல் மலாய் மொழியைத் தங்களின் தாய் மொழியாகப் பயன்படுத்தி வருகின்றனர். இந்தச் சமூகத்தைப் பொறுத்தவரை, தமிழ் என்பது அவர்களின் முன்னோர்களின் மொழி மட்டுமே; ஆனால், இந்துச் சமயத்தைத் தொடர்ந்து பின்பற்றுகின்றனர்.

இதை நாம் சற்று ஆழமாக ஆராய்ந்தால், மலாக்கா செட்டி மற்றும், நாட்டுக்கோட்டை செட்டியார்கள் ஆகிய இரு பிரிவினரால் பிரத்தியேகமாக உருவாக்கப்பட்ட தர்மகர்த்தா அல்லது அறங்காவலர்க்குழு மூலமாகத் தங்களது கோயில்களை நிர்வகிக்கும் அதே வேளையில் திருவிழாவைப் பல தசாப்தங்களுக்கு முன்னர் இருந்து இன்று வரை பெரிய அளவில் கொண்டாடி வருகின்றனர். அதோடு, மலாக்காவில் வசிக்கும் இந்து அல்லாத குடும்பங்கள், குறிப்பாக பாபா சமூகத்தினர் மற்றும், சீனர்கள் இந்த விழாக்களில் தீவிரமாகப் பங்கெடுக்கவும் தொடர்ந்து வழிவகுத்து வந்துள்ளது.

## மலாக்காவில் தைப்பூச விழாக் கொண்டாட்டங்கள்

மலாக்கா பத்து பெரண்டாம் பகுதியில் அமைந்துள்ள ஸ்ரீ சுப்பிரமணியர் தேவஸ்தானம், (MT22) கோயிலில் ஆண்டுதோறும் கொண்டாடப்படும் தைப்பூசத்தையொட்டி நடைபெறும் திருவிழா கிட்டத்தட்ட 10,000 பக்தர்களை, நாட்டின் சுதந்திரத்திற்குப் பிறகு செயல்படத் தொடங்கிய இந்தக் கோயில், ஈர்த்துவருகிறது. இது ஒரு திறந்த கோயிலாகும் - எந்த இந்துவும் இக்கோயிலில் உறுப்பினர் ஆகலாம். இது 1965-ஆம் ஆண்டு முதல் பல பக்தர்களை அதன் திருவிழாவிற்கு ஈர்த்து வந்துள்ளது. பத்துமலை அல்லது பினாங்கில் நடைபெறும் தைப்பூச விழாவில் பெரும்பாலோர் கலந்துகொள்ள விரும்பினாலும், இன்னும் பலர் மலாக்காவில் நடைபெறும் தைப்பூச விழாவிலேயே கலந்துகொள்ள விரும்புகின்றனர். இவ்விழாவின் நிறைவாக அனைவரையும் கவரும் வகையில் தேர் ஊர்வலமும் நடைபெறுகிறது.

மலாக்காவில் உள்ள கிட்டத்தட்ட அனைத்து ஸ்ரீ சுப்பிரமணியர் கோயில்கள் அந்தந்தக் கோயில்களின் நிலைமைக்கும் வசதிக்கும் ஏற்ப தைப்பூசத்தைக் கொண்டாடுகின்றன.

## அசைவ உணவைப் பரிமாறும் கோயில்களில் திருவிழா

தற்போது அதிகமான பக்தர்களைக் கவரும் கோயிலாக ஜாசினில் உள்ள இந்தியர் கிராமத்தில் உள்ள தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம் (J36) விளங்குகிறது. ஆண்டுக்குக் கிட்டத்தட்ட 20,000 பக்தர்களை ஈர்க்கும் இக்கோயிலில் அசைவ உணவு பரிமாறப்படுகிறது. 2019-ஆம் ஆண்டு திருவிழாவில் மட்டும் 220 ஆடுகள் பலி கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இந்துச் சமயத்தில் நவீன சிந்தனையின்படி கோயில்களில் அசைவ உணவு பரிமாறுவதைத் தடைசெய்தாலும், இந்தப் பழைய நடைமுறை சில கோயில்களில் இன்னும் தொடர்கின்றன. இதற்குக் காரணம், குறிப்பிட்ட சில காவல் தெய்வங்கள் / தெய்வங்களின் கோயில்கள், தீய அமானுஷ்ய சக்திகளிடமிருந்து அங்குச் சென்று வழிபடுபவர்களுக்குப் பாதுகாப்பை வழங்குவதாக பக்தர்களால் நம்பப்படுவதுதான்.

தமிழ்நாட்டிலும் இந்த நடைமுறை இன்னும் உள்ளது; குறிப்பாகக் கிராமப்புறங்களில், எல்லா இடங்களிலும் அமானுஷ்ய சக்திகள் இருப்பதை நம்புகின்ற மூதாதையர் நடைமுறைகளின் தொடர்ச்சியாக, மற்றும், இவற்றைச் சாந்தப்படுத்தவும் திருப்திப்படுத்தவும் கடாக்களை (ஆடு) அல்லது சேவல்களை உயிர்பலி கொடுக்க வேண்டும் என்று நம்புகின்றனர். மலாய்க் கிராமங்களின் அருகில் வாழ்ந்த மக்கள், தாங்கள் முன்பு

வசித்த காலத்தில் இருந்தே இக்கோயிலில் இந்த நடைமுறையை 'டத்தோ' பெயரில் பின்பற்றி வந்துள்ளனர். தற்போது 'டத்தோ' பெயரை மாற்றி 'அய்யா' என்ற பெயரில் தொடர்ந்து திருவிழாக்களின்போது உயிர்ப் பலி கொடுத்து அசைவ உணவைப் படைத்து வழிபட்டு வருகின்றார்கள்.

ஆரம்ப நாட்களில், செங்கில் உள்ள சன்னியாசிமலை ஆண்டவர் மீது அவர்களின் கவனம் செல்லும் முன்னர் MT1 கோயிலை நிர்வகித்த நாட்டுகோட்டை செட்டியார் சமூகமும் முன்பு 19-ஆம் நூற்றாண்டில் பூலாவ் பெசார் தீவுக்குத் தங்களது பரிவாரங்களுடன் சென்று 'பெரியமலை ஆண்டவர்' அல்லது 'அய்யா'வை தொடர்ந்து மூன்று நாட்கள் வணங்கி வந்துள்ளனர். அந்தத் தீவில் வாழ்ந்த முஸ்லீம்-தமிழ் சமூகத்துடனான ஒத்துழைப்பு அந்த நேரத்தில் இந்தச் சமூகத்தினரிடம் நெருக்கமாக இருந்தது குறிப்பிடத்தக்கது. தொடர்ச்சியாக, இன்றும் இதில் ஆர்வமுள்ள பக்தர்களுக்காக ஒவ்வொரு ஆண்டும் புலாவ் பெசாருக்குச் சென்று வழிபட ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

## கோயிலில் திருவிழாவை நடத்துவதற்கான ஏற்பாடுகள்

ஆண்டுத் திருவிழா நடைபெறும் தேதிக்குச் சில மாதங்களுக்கு முன்பதாகவே திருவிழா ஏற்பாடுகளைச் செய்வதற்கு ஆலய நிர்வாகத்தினரும் மற்றும், ஆர்வமுள்ள எல்லா பக்தர்களும் சேர்ந்து கூட்டத்தை நடத்தத் தொடங்குவர். திருவிழா நடத்துவதற்கான தேதியை இந்துச் சமய நாட்காட்டியின்படி தீர்மானிக்கப்பட வேண்டும். இந்தத் திகதியும் அந்தக் கோயிலில் உறையும் தெய்வங்களுக்கும் மிகவும் தொடர்புடையதாக இருக்க வேண்டும். இந்தத் தேதி பற்றிய விவரங்கள் தகுதிவாய்ந்த குருக்களுடன் விவாதிக்கப்படும்.

இருப்பினும், நன்கு கவனித்துப் பார்த்தால் மலாக்காவில் உள்ள கோயில்களில் கிட்டதட்ட ஒவ்வொரு மாதமும் ஏதாவது சில கோயில்களில் திருவிழா நடைபெறுகிறது. குருக்களின் ஆலோசனையைப் பெற்றபின் இவ்வாறான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. மேலும், இந்தச் சமய விழாவின்போது சமயத் தலைவர் என்ற முறையில் கலந்துகொண்டு தலைமை தாங்க வேண்டிய பொறுப்பு குருக்களுக்கு உள்ளது. அவருடைய சௌகரியத்தையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். மேலும், பல கோயில்கள் ஒரே நேரத்தில் திருவிழாவை ஏற்பாடு செய்தால் பக்தர்களின் வருகையில் சிக்கல் ஏற்படலாம். எனவே, திருவிழா தேதியை நிர்ணயிப்பதற்கு முன்னர் குறிப்பாகச் சிறிய கோயில்களில் பல நடைமுறை பிரச்சினைகளையும் கணக்கில் எடுத்தபின் முடிவு செய்யப்படுகின்றன.

## கோயிலின் திருவிழா ஏற்பாட்டுக் குழுவினர்

இந்து/தமிழ்ச் சமூகத்தினரிடையே திருவிழா பற்றிய ஆர்வம் உண்மையில் இன்றையக் காலத்தில் மேலோங்கி இருப்பதைக் காணலாம். இது போன்ற விழாக்களில் பங்கேற்க அவர்கள் வேலையிலிருந்து விடுப்பு எடுக்கவும் தயாராக இருக்கிறார்கள். மலேசியாவில் பத்துமலை மற்றும், பினாங்கு நகரில் நடைபெறும் தைப்பூச விழாவின்போது ஒவ்வோர் ஆண்டும் ஒரு மில்லியனுக்கும் அதிகமான பக்தர்கள் கலந்துகொள்வது இதற்குச் சான்றாகும். மலேசியாவில் பல மாநில அரசுகள் அந்த நாளைப் பொது விடுமுறையாகவும் அறிவித்துள்ளன.

உள்ளூர் மட்டத்தில், ஏராளமான மக்களைக் கவர்வதற்குச் சிறப்பு நிகழ்ச்சிகளுடன் திருவிழாவை விமரிசையாக நடத்த ஒவ்வொரு கோயிலும் முயற்சிக்கின்றது. திருவிழாவையொட்டி கோயில் கட்டிடங்கள் சுத்தம் செய்யப்பட்டு பழுதுபார்க்கப்படுகிறது. திருவிழா பத்திரிகை முன்கூட்டியே அச்சடிக்கப்பட்டு விநியோகிக்கப்படுகின்றன. இதனால், அனைத்து உள்ளூர் இந்துக்களுக்கும் திருவிழா நடைபெறும் திகதி மற்றும், நடைபெறும் நிகழ்ச்சிகள் குறித்து முன்கூட்டியே அறிந்து கொள்ள ஏதுவாக இருக்கின்றது. உள்ளூர் மக்களிடமும் மற்றும், நன்கொடையாளர்களிடமிருந்து திருவிழாவின் செலவை ஈடுகட்ட நன்கொடைகளும் வசூலிக்கப்படுகின்றன. இந்தக் கட்டத்தில் கோயில் நிர்வாகம் சமய நடவடிக்கைகள், நிகழ்ச்சிகள் மற்றும், கோயில் பூஜைகளுக்குச் சாதாரண இந்துக்களைச் சார்ந்திருப்பதைவிட ஒரு குறிப்பிட்ட நிகழ்வின் செலவுகளை ஒரு சில உபயக்காரர்களை ஏற்றுக் கொள்ள வைப்பதற்கான வாய்ப்புகள் அதிகம். ஏனெனில், சம்பந்தப்பட்ட நிகழ்வுகளுக்கு அவர்களின் பெயர்கள் பயன்படுத்துவதன் மூலம் அவர்கள் மனமுவந்து ஏற்படும் செலவுகளை ஏற்றுக்கொள்கின்றனர் - மேலும், நிகழ்ச்சி மற்றும், அந்த நடவடிக்கையின்போது அச்சிடப்படும் அறிக்கைகளிலும் இவர்களுக்கு மரியாதை செய்யும் பொருட்டு இவர்களது பெயர்கள் இருப்பது உறுதி செய்யப்படுகிறது.

## திருவிழாச் சமயத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள்

சில இடங்களில் திருவிழா நடைபெறுவதற்கு முன்னால் ஏறத்தாழ 10 நாட்களுக்குத் தொடர்ந்து சிறப்புப் பூஜைகள் திருவிழாவின் அங்கமாக நடத்தப்படுகின்றன. திருவிழாவின்போது இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் தாங்கள் தேர்ந்தெடுத்தக் கோயிலில் தங்களது வேண்டுதல்களை நிறைவேற்றுவதற்குத் தாங்கள் வேண்டிக்கொண்டதற்கு ஏற்பக் காவடி எடுத்தல், அல்லது பால்குடம் எடுத்தல் அல்லது தீ மிதித்தல் போன்றவற்றை செயல்படுத்துகின்றனர். புதிதாகப் பிறந்தக் குழந்தைகளுக்கு முடி இறக்கும் சடங்கும் அச்சமயத்தில் நடத்தப்படுகின்றது. பக்தர்களின் எண்ணிக்கை மிகப் பெரியதாக இருந்தால், தன்னார்வ சங்கங்களோ பிற அமைப்புகளோ அல்லது கோயில் நிர்வாகத்தினரால் ஏற்பாடு செய்யப்பட்ட மற்ற குழுக்களோ ஏற்பாடு செய்யும் பல்வேறு நடவடிக்கைகள் கோயிலில் திருவிழாவின் சூழலை மேலும், விமரிசையாக்குகிறது.

இந்தத் திருவிழாவின் செலவுகளை ஈடுசெய்ய நன்கொடைகளைக் கோருவதற்கு ஓர் உபகுழு அமைக்கப்படுகின்றது. திருவிழா நாளில் ஆகும் செலவின் ஒரு பகுதியை ஈடுகட்ட, உதாரணத்திற்கு, அன்னதானச் செலவையோ அல்லது சிறப்பு பூஜைகளுக்கான உபயச் செலவையோ ஏற்றுக் கொள்ள, சில பக்தர்கள் தயாராக உள்ளனர். கோயில் மற்றும், அதன் சுற்றுப்புறங்களைப் பொறுத்து, திருவிழாவின் செலவும் ரி.ம.2 இலட்சத்திற்கு மேலும், தொடும். சிறிய கோயிலில் திருவிழாவிற்குக் குறைந்தது ரி.ம. பத்தாயிரம் தேவைப்படுகிறது. பெரும்பாலும் இந்தத் திருவிழாக்களின் போது நன்கொடையாளர்கள் அல்லது இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் அன்னதானச் செலவுகளை ஏற்றுக்கொள்கிறார்கள். உயிர்ப்பலி கொடுக்கும் வழக்கத்தைக் கடைபிடிக்கும் கோயில்களில், அங்குள்ள தெய்வங்களுக்கு வேண்டிக் கொண்டதற்கு ஏற்ப பக்தர்களால் ஆடுகள் தானம் செய்யப்படுகின்றன. இதனால், இது போன்ற பங்களிப்புகள் மூலம் சம்பந்தப்பட்ட கோயிலின் திருவிழாச் செலவுகளைக் குறைக்க உதவுகின்றன. நன்கொடையாளர்கள் மற்றும், பக்தர்களின் அனுமானம் கோயிலைப் பற்றி சிறப்பாக இருந்தால் இத்தகைய உதவிகள் தாராளமாகக் கிடைக்கின்றன.

## பொருட்கள் மற்றும், உணவு போன்றவற்றிற்கு ஆதரவு

கடவுள் தொடர்பான விஷயங்களுக்கு நன்கொடைகளை வழங்குவதில் இந்துக்கள் மிகவும் தாராளமாக இருப்பதால், ஒவ்வோர் ஆண்டும் இது போன்ற விழாவை நடத்த முடிகின்றது. ஒரு சிலர் தற்போது வெளியே வேலை செய்தாலும் அல்லது வேறு இடத்தில் வசித்து வந்தாலும், மலாக்காவில் தாம் பிறந்து வளர்ந்த இடத்தில் உள்ள கோயிலில் திருவிழா நடந்தால் ஒவ்வோர் ஆண்டும் அதன் முழுச் செலவையும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கின்றனர். அப்படியிருந்தும், பல கோயில்கள் ஆண்டுத் திருவிழாவிற்காக நிதி திரட்டுவதில் சிரமத்தை எதிர்நோக்குகின்றன. அங்கிருந்து வெளியே குடியேறியவர்கள் திருவிழாச் சமயத்தில் திரும்பி வந்து செலவுகளை ஈடுசெய்வதற்கு அவர்களின் ஆதரவைத் தருவார்கள் என உட்புறத்தில் உள்ள சிறிய கோயில்கள் பெரிதும் நம்பியுள்ளன. தாங்கள் மலாக்காவில் பிறந்து வளர்ந்த இடத்தில் இருக்கும் கோயிலில் இருக்கின்ற தெய்வங்கள் சிறப்பும் சக்தியும் வாய்ந்தவை என்று அவர்கள் நம்புவதால் அக்கோயிலில் நடக்கும் திருவிழாவிற்கு உதவி நிதி கொடுக்கத் தயாராக இருக்கிறார்கள். எனினும், இந்தக் கோயில்கள் இருக்கும் இடங்களில் ஒன்றாக வாழ்ந்த அனுபவம் உள்ளவர்கள் நாளடைவில் குறையும் சமயத்தில், இந்த இயல்பு, அடுத்த தலைமுறையில் மங்கக்கூடும்.

## கோயில்களில் தேர்

இந்த ஆய்வில் வழி 65 கோயில்கள் சொந்தத் தேர்களைக் கொண்டுள்ளன என்பதை அறிகிறோம். இந்தத் தேர்கள் கோயில் திருவிழாச் சமயங்களில் ஊர்வலத்திற்குப் பயன்படுத்தப்படுகின்றன. சாலை மற்றும், குடியிருப்புப் பகுதிகள் வழியாகத் தேர் ஊர்வலம் நடைபெறுவதால் பெரும்பாலான கோயில்கள் போலீஸ் அனுமதியைப் பெறுகின்றன. சில கோயில்கள் திருவிழாச் சமயத்தில் தேர் ஊர்வலத்திற்குத் தேரை மற்ற கோயில்களிலிருந்து இரவலாகப் பெற்று தேர் ஊர்வலத்தை நடத்துகின்றன. தேர் ஊர்வலங்களை நடத்தாத கோயில்களும் இருக்கின்றன

## பாரம்பரிய நாதஸ்வர இசை

பாரம்பரிய இசைக்கலைஞர்களைப் பொறுத்தவரை - நாதஸ்வரம் மற்றும், மேளக் கலைஞர்கள் - கோயிலுடன் நெருங்கியத் தொடர்புடையவர்களாக இருக்கிறார்கள். மலாக்காவில் 8 கோயில்கள் மட்டுமே இந்த இசைக்கலைஞர்களை ஊதியத்திற்கு வேலைக்கு அமர்த்தும் நிலைமையில் உள்ளன. தேவை ஏற்படும்போது இவர்களின் சேவை மற்றக் கோயில்களிலும் பயன்படுத்திக் கொள்ளப்படுகிறது. சில சமயங்களில் திருவிழாக்களுக்கு மலாக்காவிற்கு வெளியிலிருந்து இத்தகைய இசைக்கலைஞர்கள் மற்றும், குருக்கள் போன்றோர் அழைத்து வரப்படுகின்றனர். இவை அனைத்தும் மலாக்காவில் உள்ள கோயில்களின் நிதி நிலைமையைப் பொறுத்ததாகும். மேலும், கோயிலுக்கு அதிக அளவில் நிதியைத் திரட்டும் திறன் கொண்ட கோயில்களால் மட்டுமே பெரிய அளவில் திருவிழாவைத் திட்டமிட்டு ஏற்பாடு செய்ய முடியும் என்பதும் தெளிவாகிறது. மற்றவை மிதமான அளவில் மட்டுமே திருவிழாவை நடத்த முடிகிறது. மலாக்காவில் ஒரு கோயிலில் உறுமி மேளக் குழு உள்ளது.

## திருவிழாவில் கலந்துகொள்பவர்கள் மற்றும், கோயிலின் நிலைமை

கோயில் திருவிழாவிற்கு வருகைதரும் பக்தர்களின் எண்ணிக்கையை அட்டவணை 26 தெளிவாகக் காட்டுகின்றது. 77 அதாவது, 57.1 சதவிகிதக் கோயில்களில் 500-க்கும் குறைவான பக்தர்கள் திருவிழாவில் கலந்துகொள்கின்றனர். மற்றும், 33 அதாவது, 24.4 சதவிகிதக் கோயில்களில் 501 முதல் 1000 பேர்கள் வரை கலந்துகொள்கின்றனர். இதிலிருந்து 81.5% கோயில்களில் ஆயிரத்திற்கும் குறைவான பக்தர்களே அங்கு நடைபெறும் திருவிழாக்களில் கலந்துகொள்கிறார்கள் என்பது தெளிவாகிறது. 5 அல்லது 3.7 சதவிகிதக் கோயில்களில் மட்டுமே 5,000-க்கும் மேற்பட்ட பக்தர்களை அவற்றின் ஆண்டுத் திருவிழாக்கள் ஈர்க்கின்றன. இந்த அட்டவணையில் உள்ள தகவல்கள் மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களின் உண்மையான நிலவரத்தையும், குறிப்பாக நிதி நிலைமையையும் காட்டுவதோடு இந்தத் திருவிழாக்களின் மீது இந்துக்கள் காட்டும் ஈடுபாட்டையும் விவரிக்கிறது.

**அட்டவணை 26 : மலாக்கா கோயில்களில் திருவிழாவிற்குப் பக்தர்களின் வருகை**

| மாவட்டம் | 1-500 | 501-1,000 | 1,001-5,000 | 5,001+ | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 19 | 11 | 4 | 2 | 36 |
| ஜாசின் | 27 | 9 | 8 | 1 | 45 |
| அலோர் காஜா | 31 | 13 | 8 | 2 | 54 |
| மொத்தம் | 77 (57.1%) | 33 (24.4%) | 20 (14.8%) | 5 (3.7%) | 135 |

பெரும்பாலான இந்துக் கோயில்களில் திருவிழா சம்பந்தமான கணக்கு விபரங்களை முழுமையாகப் பார்ப்பதற்குக் கணக்குகள் இல்லை. ஏனெனில், பெரும்பாலான செலவுகளை நேரடியாகப் பக்தர்களே ஏற்றுக்கொள்வதாகக் கூறுகின்றனர். அத்தகைய நன்கொடைகளின் மதிப்பும் அதிகாரப்பூர்வமாகப் பதிவு செய்யப்படுவதில்லை. கோயில் நிர்வாகம் செய்த செலவுகளின் மதிப்பீடுகள் மட்டுமே இந்த ஆய்வில் குறிப்பிடப்பட்டுள்ளன.

இருப்பினும், பெரும்பாலான கோயில்கள் குறிப்பிட்டக் காலத்தில் மட்டுமே 'உயிருடன்' இருப்பதாக இந்தத் திட்டமிட்டு நடத்தப்படும் திருவிழாக்கள் காட்டுவதோடு இதுதான் இத்தகைய கோயில்களின் முக்கியக் குறிக்கோள் போலவும் தெரிகிறது. ஆண்டு முழுவதும் நடைபெறும் நடவடிக்கைகள் குறித்து கேள்வி கேட்கப்படும் என்ற அச்சத்தில் உறுப்பினர் கட்டணத்தை வசூலிக்காத கோயில்கள் உள்ளன. திருவிழாக் காலங்களில் மட்டுமே இவை பக்தர்களிடமிருந்து நன்கொடைகளைச் சேகரிக்கின்றன. ஆகவே, சம்பந்தப்பட்ட கோயிலில் உறையும் தெய்வங்களின் பக்தர்களை ஒன்றிணைக்க இந்த ஆண்டுத் திருவிழா மிகவும் முக்கியமாகக் கருதப்படுகிறது என்பதைத் தெளிவாக அறியமுடிகிறது. மற்றும், கோயில் நிர்வாகக் குழு தொடர்ந்து இயங்கி வருகின்றது எனும் தோற்றத்தையும் திருவிழா அளிக்கிறது.

## கும்பாபிஷேகம்

பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை, வழக்கமாக கும்பாபிஷேகம், மீண்டும் கோயிலைப் புனிதப்படுத்த, நடத்தப்பட வேண்டும். இந்து நாட்காட்டியை அடிப்படையாகக் கொண்ட கணக்கீட்டின்படி 5 முதல் 9 நாட்கள்வரை இந்தச் சமய நிகழ்வுகளை நடத்த சில ஆண்டுகளுக்கு முன்பிருந்தே திட்டமிடப்படுகின்றது. ஒரு கோயிலில் கும்பாபிஷேக விழா கொண்டாடப்படுவதற்கு முன்பதாக முழுக் கோயிலையும் சரிப்படுத்த அனைத்து பழுதுபார்ப்புகள், கட்டிடத்திற்கான கூடுதல் வேலைப்பாடுகள், பிற துணை வசதிகளை மேம்படுத்துதல், மற்றும், புதிய சாயம் பூசுதல் போன்றப் பணிகள் நடைபெறுகின்றன.

கும்பாபிஷேகம் உண்மையில் ஒரு மறைமுகமான நோக்கத்தைக் கொண்டுள்ளது. இதனால், கோயிலின் வழிபாட்டாளர்கள் கோயிலின் கட்டமைப்பின் அடிப்படையில், மற்றும், கோயிலில் உள்ள வசதிகளின் அடிப்படையில், அவர்களின் நிதி நிலைமைக்கு ஏற்பச் சீர்திருத்தங்களைச் செய்யத் திட்டமிட முடியும். இதனால், கோயில் எப்போதும் சுத்தமாகவும், நேர்த்தியாகவும், புனிதமாகவும் இருக்கும் வழிபாட்டுத் தலமாகத் தொடர்ந்து பாதுகாக்கப்படுகிறது. இது ஒரு கோயிலை நிர்வகிக்கும் நிர்வாகக்குழு சிந்தித்து வளர்ச்சியைத் திட்டமிட்டு 12 ஆண்டுகளில் ஒரு முறை நிறைவேற்றக் காரணமாக அமைகின்றது.

இருப்பினும், மலாக்கா மாநிலத்தில் உள்ள அனைத்து கோயில்களிலும் பல்வேறு தடங்கல்கள் காரணமாக கும்பாபிஷேகம் முறையாக நடைபெறுவதில்லை.

**அட்டவணை 27: மலாக்கா இந்துக் கோயில்களில் கும்பாபிஷேக விழா**

| மாவட்டம் | 2000-க்கு முன்னால் | 2001-2010 | 2011-2015 | 2016-2019 | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 1 | 8 | 8 | 4 | 21 |
| ஜாசின் | 2 | 10 | 7 | 9 | 28 |
| அலோர் காஜா | 5 | 16 | 8 | 7 | 36 |
| மொத்தம் | 8 | 34 | 23 | 20 | 85 |

## கும்பாபிஷேகம் நடத்துவதற்கான தடங்கல்கள்

கும்பாபிஷேகம் நடத்துவதற்குத் திட்டமிடும்போது கோயிலின் நிதி நிலையே முக்கிய விஷயமாகக் கருதப்படுகிறது. ஏனெனில், ஆண்டுத் திருவிழாவிற்கு ஆகும் செலவைவிடக் கும்பாபிஷேகத்திற்கு செலவு மிக அதிகமாக இருக்கும். மேலும், கோயிலில் ஏற்படும் மாற்றங்கள் பக்தர்களுக்குத் தெளிவாகத் தெரிய வேண்டும். ஒரு புதிய கோயில் கட்டப்படும்போது, இந்த விழா உண்மையில் கோயிலின் துவக்க விழாவாகும்; ஏனென்றால், இந்த விழாவின் மூலம் கோயிலுக்கு அனைத்து சத்திகளும் கிடைக்கின்றன என்று கருதப்படுகிறது. கும்பாபிஷேகத்திற்கு முன்னேற்பாடுகளாக ஆலய கட்டடச் சுவர்களை அலங்கரிக்கவும், கலை நயம் பொருந்திய தெய்வச் சிற்பங்களைச் செதுக்கவும் அல்லது சரி செய்யவும், கோபுரங்களைக் கட்டுவதற்கும் தமிழ்நாட்டிலிருந்து சிற்பிகள் அல்லது சபதிகளை வரவழைத்துக் கோயில் திருப்பணிகளைச் செய்யும் கோயில் நிர்வாகத்தினர்களும் உண்டு. இந்த நிகழ்வு 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடத்தப்பட வேண்டும்.

இருப்பினும், கோயில் நிர்வாகம் சில சமயங்களில் கும்பாபிஷேகத் தேதியைச் சில காரணங்களுக்காக ஒத்திவைப்பதும் உண்டு. அட்டவணை 27-ஐ நோக்கும்போது மலாக்காவில் 85 கோயில்கள் மட்டுமே இதுவரை ஒரு முறையாவது அவற்றின் கும்பாபிஷேகங்களை நடத்தியிருப்பதைக் காணலாம். நிதி நிலைமை காரணமாகவும், அல்லது / மற்றும், அந்தக் கோயில் வேறு ஒருவருக்கு உரிமையான நிலத்தில் இருப்பதாலும், அல்லது குலதெய்வ வழிபாடு செய்யப்படும் சிறிய கோயிலாக இருப்பதாலும் மற்றக் கோயில்கள் கும்பாபிஷேகத்தை நடத்துவதில்லை.

கோயிலைச் சொந்த இடத்திற்குப் பின்னர் மாற்ற வேண்டிக் காத்திருப்பதாலும் மேலும், நிதி சிக்கல் காரணமாகவும், கும்பாபிஷேகம் நடத்திய 85 கோயில்களில், கிட்டத்தட்ட 40 கோயில்களில் 12 வருடங்களுக்கு ஒருமுறை நடத்த வேண்டிய கும்பாபிஷேகத்தை நடத்த இயலாத நிலையில் இருக்கின்றன. இதற்குக் காரணம் மற்றவர்களின் நிலத்தில் கோயில்களைப் புதுப்பிப்பதிலும் விரிவாக்குவதிலும் பெரும் செலவினங்களின் தாக்கம் குறித்து கோயில்களின் நிர்வாகங்கள் கவலைப்படத் தொடங்கியுள்ளதே. மேலும், கோயில்களை அங்கேயே நிரந்தமாக இருக்க அனுமதிக்காவிட்டால், அனைத்து செலவுகளும் வீணாகிவிடும் என்ற அச்சம் வேறு.

## கும்பாபிஷேகத்திற்கான செலவுகள்

இந்த ஆய்வின்போது மிகவும் குறைந்தச் செலவில் அதாவது, RM30,000-க்குள் நடத்தப்பட்ட கும்பாபிஷேகங்களும் உண்டு. அதே வேளையில், மலாக்காவில் கிட்டத்தட்ட RM600,000 வரையிலான செலவில் நடைபெற்ற கும்பாபிஷேகமும் உண்டு. இந்தச் செலவுகள் கோயிலைப் பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறை கோயிலுக்குப் புதிய தோற்றத்தை அளிக்கப் புதுபிக்கும்போது வடிவமைக்கப்பட்ட பல்வேறு புனரமைப்பு வேலைகளைப் பொறுத்ததாகும். இந்தக் கும்பாபிஷேக நிகழ்வு தகுதிவாய்ந்த பல குருக்களால் வழி நடத்தப்படுகிறது.

சில சமயங்களில் அதிகமான சமய நிகழ்ச்சிகளுடன், கோயில் நிர்வாகத்தினரின் நிதி நிலைமையைப் பொறுத்து, தமிழ்நாட்டிலிருந்தோ மலாக்கா மாநிலத்திற்கு வெளியில் இருந்தோ குருக்களும், கலைஞர்களும் கொண்டுவரப்படுகிறார்கள். இந்தக் கும்பாபிஷேக நிகழ்ச்சியில் வழக்கமான ஆண்டுத் திருவிழாவைவிட அதிகமான இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் வெகு ஆர்வத்தோடும் குதூகலத்தோடும் கலந்துகொள்கிறார்கள். சம்பந்தப்பட்ட ஆண்டில் திருவிழா மற்றும், கும்பாபிஷேகம் இரண்டும் இணைக்கப்பட்டு கும்பாபிஷேகமாகவே கொண்டாடப்படுகிறது.

கும்பாபிஷேகம் நடத்துவதற்கான திட்டம் மிகவும் கவனமாகத் தீட்டப்படுவதோடு கும்பாபிஷேகத் தேதிக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னரே ஏற்படுத்தப்பட்ட கும்பாபிஷேகத் திருப்பணிக்குழுவின் தலைவரால் அனைத்து ஆதரவாளர் மற்றும், நிர்வாகத்தினரும் முடக்கிவிடப்படுகின்றனர். அனைத்து சீர்திருத்தங்களும், கூடுதல் வேலைகளும் யோசிக்கப்பட்டு ஏற்படப்போகும் செலவுகள் அனத்தும் கணக்கிடப்படுகின்றன. பின்னர் நன்கொடையாளர்கள், குறிப்பிட்ட செலவுகளை ஏற்றுக் கொள்ள விருப்பமுடையோர் மற்றும், உதவியாளர்கள் போன்றோரைத் தேடும் முயற்சிகள் நிர்ணயிக்கப்பட்ட அட்டவணைப்படி தொடங்கப்படுகின்றன. திருவிழாவைவிடக் கும்பாபிஷேக நிகழ்விற்கு வருகைத் தருபவர்களின் எண்ணிக்கை அதிகமாகவே இருக்கும். இதற்குக் காரணம் வெளியிலிருந்து ஏராளமான பக்தர்கள் இந்நிகழ்வின் சடங்குகளில் கலந்துகொள்கிறார்கள்

## குருக்களின் பங்கு

இந்துக்கள் ஒரு செயலை அல்லது வேலையைத் தொடங்குவதற்கு முன்னர், திருமண நிகழ்ச்சிகள், பரிசம், குடும்ப நிலையில் சிறப்புப் பூஜைகள், ஒரு தொழிலை ஆரம்பித்தல் உட்பட பஞ்சாங்கத்தை வழிகாட்டியாகக் கொண்டு அல்லது இந்து நாள்காட்டியைப் பார்த்து நல்ல நாள் மற்றும், நல்ல நேரம் போன்றவற்றைக் குறித்துத் தர, தகுதிபெற்ற குருக்கள் உதவுகிறார். இவர்கள் ஒரு செயலைத் தொடங்க, அல்லது, ஒரு வைபவத்தை நடத்த, நல்ல நேரத்தைக் கணக்கிட்டுக் கூற பயிற்சி பெற்றவர்கள் ஆவர். மேலும், ஒருவரின் பிறந்த திகதி, நேரம், பெற்றோரின் விவரங்கள், மற்றும், கிரகங்களின் சுற்று நிலை உள்ளிட்ட பல அளவுகோல்களின்படியும் ஜோதிடத்தின் வழி ஒரு நபரின் ஜாதகத்தைக் கணித்துக் கூற உண்மையிலேயே தகுதியுள்ளவர்கள் ஆவர். பயிற்சி பெற்ற குருக்கள், ஒருவரது வாழ்க்கையில் கஷ்டக்காலம் ஏதேனும் வருவதாக இருந்தாலும், அதைச் சமாளிப்பதற்குப் பரிகாரப் பூஜைகள் செய்வதற்கும் மற்றும், எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்துத் தகுந்த ஆலோசனைகளை வழங்குவர்.

ஒரு பக்தர் தனது சொந்த வீட்டிலோ கோயிலிலோ பரிகார பூஜை நடத்த ஒப்புக்கொண்டால், அந்தப் பூஜைக்குக் குருக்கள் தலைமை தாங்குவார். இந்தப் பூஜைக்கு அதன் வகையைப் பொறுத்து தட்சணையாகச் சிறிய தொகை கொடுக்க வேண்டிவரும். இது போன்ற பூஜைகள் செய்வதற்குக் குருக்கள் தற்போது அதிகத் தொகையைத் தட்சணையாகப் பரிந்துரைப்பதாகப் பெரும்பாலான பக்தர்களிடையே முணுமுணுப்பும் உள்ளது. தகுதிபெறாத, ஆனால், அனுபவம் உடைய குருக்களும், வாழ்க்கையில் பிரச்சினையை எதிர்நோக்கும் சில பக்தர்கள் இவர்களை நாடும்போது அவர்களுக்குப் பரிகார பூஜைகள்

செய்து தருவதோடு ஆலோசனைகளையும் கூறுகின்றனர். இன்றைய நிலையில் எவ்வித கேள்விகளையும் எழுப்பாமல் குருக்களின் ஆலோசனைகளையும் கருத்துகளையும் பின்பற்ற விரும்பும் பக்தர்களிடமிருந்து தற்போது சில வேளைகளில் குருக்களில் சிலர் இந்த நிலைமையைச் சாதகமாகப் பயன்படுத்தி இலாபம் தேட முற்படுகிறார்கள் எனும் கருத்து எழுந்துள்ளது.

## அருள்வாக்கின் வழி குறி சொல்லுதல்

கோயிலில் உள்ள தெய்வம் பூசாரியின் தேகத்தில் இறங்கி ஒரு நபரின் தலைவிதியை முன்னறிவிப்பதோடு, தங்களது வாழ்க்கையில் ஒரு பிரச்னையை எதிர்கொள்ளும் பக்தர்கள் செய்ய வேண்டிய பரிகாரப் பூஜைகளைப் பரிந்துரைக்கும் ஒரு பாரம்பரியம் கடந்த காலங்களில் தமிழ்நாட்டில் இந்துக் கோயில்களின் நடைமுறையின் வழி வந்துள்ளது. பழைய தமிழ் / இந்துச் சமூகங்களிடையே, இந்த முறை தனக்கு அல்லது ஒருவரின் குடும்பத்திற்குக் குறிப்பாகக் கிராமப்புறங்களில் குறி சொல்லும் முறை ஒரு பொதுவான நடைமுறையாக மாறியுள்ளது. இருப்பினும், இன்றைய இந்துச்சமயத்தில் இந்த முறை அங்கீகரிக்கபடவில்லை; மேலும் முறையான/முழுமையான சமயப் பயிற்சி பெற்ற குருக்கள் இந்தச் செயலில் ஈடுபடுவதும் இல்லை. இருப்பினும், குலதெய்வ வழிபாடுகளைப் பின்பற்றும் கோயில்கள் இதை இன்னும் பின்பற்றுகின்றன. தமிழ்நாட்டிலும் ‘குலதெய்வக்‘ கோயில்களில் குறிப்பாகப் பூசாரிமூலம் இந்த நடைமுறை இன்னும் உள்ளது,

இந்த ஆய்வின்போது, மலாக்காவில் இன்னும் 21 கோயில்களில் அங்குள்ள பூசாரிகள் அல்லது சமயத் தலைவர்கள் தினசரியோ, குறிப்பிட்ட நாட்களிலோ, குறிப்பிட்ட நேரங்களிலோ இந்தக் குறிசொல்லும் நடைமுறையை வழக்கத்தில் கொண்டுள்ளனர். அவரவர்கள் இந்தச் சேவையை வழங்குவதற்காகத் தங்கள் கோயிலை ஒரு மையமாகப் பயன்படுத்துகின்றனர். மேலும் அவர்களின் இச்சேவைகளைப் பெறும் பக்தர்களிடமிருந்து கட்டணத்தைத் தட்சணையாகப் பெறுகின்றனர். சம்பந்தப்பட்ட கோயில்களில் இருக்கும் தெய்வம் பூசாரியின் உடலில் இறங்கி அவர்மூலம் இந்த அருள்வாக்கை வழங்கும், அதாவது குறி சொல்லும். இத்தகைய கோயில்கள் மத்திய மலாக்கா மாவட்டத்தில் 5-உம் ஜாசினில் 8-உம், அலோர் கஜாவில் 8-உம் உள்ளன. பூசாரியின் உடலின் மேல் இறங்கும் தெய்வம், மற்றும் இறங்கிய நிலையில் பேசும் அனைத்து வார்த்தைகளும் தெய்வம் நேரிடையாகப் பூசாரி மூலம் அவர்களிடம் பேசுகின்றது எனவும், மேலும் அவற்றைக் கட்டாயம் கடைபிடிக்க வேண்டும் எனவும் பக்தர்கள் நம்புகின்றனர். பூசாரியின் மீது `டத்தோ’ அல்லது ‘அய்யா’ வந்து இறங்கும்போது, அவர்கள் மலாய் மொழியைப் பேசுகிறார்கள், ஆனால் தமிழ்த் தெய்வங்கள் வந்து இறங்கும்போது தமிழில் பேசுகிறார்கள். இந்த அருள்வாக்குச் சேவையை வழங்கும் சில கோயில்களுக்கு இந்தியா, சிங்கப்பூர், அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து மற்றும் ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளிலிருந்தும், மலாக்காவிற்கு வெளியே உள்ள மலேசிய மாநிலங்களிலிருந்தும் பத்தர்கள் வருகை தருகின்றனர். இப்போது, இந்தச் சேவையை வழங்கும் தரப்பினர் உண்மையில் தங்களைக் காண வரும் பக்தர்கள் தங்களின் அன்றாட வாழ்வில் எதிர்நோக்கும் பிரச்னைகளுக்கு ஆறுதல் பெற சம்பந்தப்பட்டவர்களுக்கு ஆலோசனை அல்லது ‘கவுன்சிலிங்’ வழங்குவதாகக் கருதுகின்றனர். இவர்களின் இச்சேவைகளின் முக்கியத்துவத்தை உணர்த்த இச்சேவைகளின் மீது மிகவும் திருப்திக் கொண்டு, திரும்பத் திரும்ப அவர்களை நாடிவரும் பத்தர்களைச் சான்றாகக் காண்பிக்கின்றனர்.

இந்தச் சேவையை வழங்குவதில் மிகவும் பிரபலமான சில கோயில்கள் மலாக்காவில் உள்ளன. இதனால் மலேசியாவிற்கு உள்ளேயும் வெளியேயும் உள்ள பிரமுகர்கள், அரசியல்வாதிகள் மற்றும் திரைப்பட நட்சத்திரங்களும் இந்தச் சேவையைப் பெற மலாக்காவிற்கு வருகின்றனர். இந்துக்கள் அல்லாத பிறரும் இங்கு வழங்கப்படும் ‘ஆலோசனை’ சேவைகளைப் பெறுவதற்கு வருகைதருவதால் இக்கோயில்களின் வருமானம் தொடர்ந்து கிடைப்பது உறுதி செய்யப்படுகிறது. அதனால் இந்தக் கோயில்கள் மற்றத் தரப்பினரின் உதவியின்றி தன்னிறைவு பெற்றதாகவே விளங்குகின்றன.

## கோயிலில் பாரம்பரியத் திருமண நிகழ்ச்சிகள்

கோயில் ஆதிகாலம் தொட்டே தமிழ் சமூகத்தினரிடையே வழக்கமாக இந்துப் பாரம்பரியத் திருமண நிழ்வுகளை நடத்துவதற்கு மிகவும் சிறந்த இடமாகக் கருதப்படுகிறது. மலாக்கா மாநிலத்தில் பெரும்பாலான இந்துக் கோயில்களின் கட்டிடம் ஒப்பீட்டளவில் சிறியது மற்றும், இங்கு முறையான திருமண விழாவை நடத்த போதுமான வசதிகள் இல்லாததால், பலர் தங்கள் சொந்த வீட்டு வளாகத்திலேயே திருமணங்களைத் தொடக்கக் காலத்தில் நடத்தினர். பின்னர் மணமகனும், மணமகளும் மற்றும், குடும்பத்தினரும் கோயிலுக்குச் சென்று இஷ்டத் தெய்வத்திடமிருந்து ஆசீர்வாதத்தை வேண்டுவர். சில திருமணங்கள் கோயிலிலேயே நடைபெற்றும் வந்துள்ளன.

தற்போது அவரவர்களின் வசதிக்கேற்ப பல திருமணங்கள் பொது மண்டபங்களில் அல்லது விடுதிகளில் நடத்தப்படுகின்றன. ஆனாலும், திருமண விழாவுக்குப் பிறகு, மணமகனும், மணமகளும் வழக்கமாகக் கோயிலுக்குச் சென்று பாரம்பரிய முறைப்படி ஆசீர்வாதங்களைப் பெறுகின்றனர்.

இந்த ஆய்வின்போது, மொத்தம் 90 கோயில்கள் தங்கள் கோயில்களில் பாரம்பரியத் திருமணங்கள் நடத்தப்பட்டதாகக் கூறினாலும் வசதிகள் குறைவின் காரணமாக ஒரு சில கோயில்கள் அதைத் தொடர்ந்து நடத்துவதில்லை என்பதையும் ஒப்புக்கொண்டன. திருமண நிகழ்வுகள் தொடர்ந்து தங்கள் கோயில்களில் நடைபெறுவதாக மொத்தம் 37 கோயில்கள் ஒப்புக்கொண்டுள்ளன. அதோடு, மணமக்களுக்குத் திருமணப் பதிவும் சில கோயில் நிர்வாகங்கள் செய்து தருவதோடு, பதிவுத் திருமண சான்றிதழ் இருந்தால்தான் திருமண நிகழ்வு கோயிலில் நடைபெறலாம் எனும் நிபந்தனைகளும் இருக்கின்றன. சில சமயங்களில் திருமணப் பதிவதிகாரியும் இந்த நிகழ்வில் கலந்துகொள்ள அழைக்கப்படுகிறார். மாநிலத்தில் 5 கோயில்களில் மட்டுமே தகுதி பெற்ற திருமண பதிவதிகாரிகள் இருக்கிறார்கள்: திருமணத்திற்கான அனைத்து வசதிகளையும் இந்தக் கோயில்கள் வழங்குகின்றன. இருப்பினும், இந்த ஆய்வு நடைபெற்ற சமயம் வரை, உண்மையில் ஒரு கோயிலில் கூட கல்யாண மண்டபம் இல்லை; அதோடு, மலாக்கா மாநிலத்தில் இதுவரை பல்வேறு வசதிகளைக் கொண்ட முழுமையான ஓர் இந்துத் திருமண மண்டபமும் இல்லை. இப்போதெல்லாம் திருமண நிகழ்ச்சிகளை அனுமதிக்கும் கோயில் நிர்வாகம் பெரும்பாலும் திருமணச் சடங்கு நடைபெறும்பொழுது, தேவையான கூடாரங்கள் போன்ற கூடுதல் வசதிகளையும் வாடகைக்கு எடுப்பதே வழக்கம் - திருவிழா அல்லது கும்பாபிஷேகம் நடைபெறும்போது ஏற்பாடு செய்வது போல.

## கோயிலில் அசைவ உணவு பரிமாறல்

பொதுவாக, இந்துக் கோயில்களில் சைவ உணவு மட்டுமே அனுமதிக்கப்படுகிறது. இருப்பினும், வரலாற்று ரீதியாகத் தமிழர் சமூகத்தின் மத்தியில், இந்துச்சமயம் பரவுவதற்கு முன்பு, தமிழர்கள் இயற்கையை அல்லது பிரபஞ்சத்தை வழிபடும் முறையைக் கொண்டிருந்தனர். மேலும், இவர்கள் வேடர்களாகவும், மீனவர்களாகவும் மற்றும், விவசாயிகளாகவும் வாழ்ந்தவர்கள். மேலும், அமானுஷ்ய சக்திகளை நம்பினர். அதோடு, இவற்றைச் சாந்தப்படுத்தினால் உலக மக்கள் பாதுகாப்பாக வாழ முடியும் என்றும் நம்பினர். இவர்கள் தாங்கள் வசிக்கும் இடங்களையும் வாழ்வாதாரத்தைக் கொடுக்கும் இடங்களையும் எந்தவொரு ஆபத்திலிருந்தும் பாதுகாப்பாக வைத்திருக்கும் முயற்சியாக அச்சமயத்தில் கோழிகளையும் ஆடுகளையும் பலியிட்டு இந்தச் சக்திகளைச் சாந்தப்படுத்தும் நடைமுறையைக் கொண்டிருந்தனர்.

காலப்போக்கில் தமிழர் சமூகம் இந்துச் சமயத்தை ஏற்றுக்கொண்டாலும் பழைய நடைமுறைகள் ஒரு சிலரால், குறிப்பாக உட்புறப்பகுதிகளில் வாழ்பவர்களால், இன்னும் பின்பற்றப்படுகின்றன. இந்துச் சமயத்தின் விதிகள் அது பரவிய இடங்களில் ஏற்கனவே உள்ள பல நடைமுறைகளையும் சகிப்புத் தன்மையுடன் ஏற்றுக்கொள்கிறது எனும் பொதுவான காரணத்தால் இந்த நடைமுறையை ஆதரித்து, இது இந்துச் சமயத்திற்கு எதிரானதல்ல என்று கூறும் தற்போதைய இந்துச் சமயத் தலைவர்களும் உள்ளனர். வரலாற்று ரீதியாக, இந்துச் சமயம் மிகவும் ஜனநாயகமானது. இதன் காரணத்தால் ஒரு பக்தர் கடவுளைச் சர்வவல்லவர் என்று நம்புகிறபோது, ஓர் இந்துவாக அவர் வாழத் தயாராக இருக்கும்போது, ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஏற்கனவே அவர் பின்பற்றிய நடைமுறைகளை அது ஏற்றுக்கொள்கிறது. உலகெங்கிலும் உள்ள இந்துச் சமூகங்களின் வாழ்க்கை முறைகளை ஆராய்ந்தால் இந்தத் தாராளவாத அம்சம் இந்துச் சமய நடைமுறைகளின் அடிப்படையில் பல வேறுபாடுகளை ஏற்படுத்தி உள்ளதை அறியலாம்.

மலாக்காவில் பணிபுரிய ஆங்கிலேயர்களால் கொண்டுவரப்பட்ட பெரும்பாலான தமிழர்கள் / இந்துக்கள், தமிழகத்தின் உட்புறப்பகுதிகளில் உள்ள கிராமங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். காவல் தெய்வங்களை வழிபட்டுவந்தவர்கள். இவர்கள் காவல் தெய்வங்களின் ஆசிர்வாதங்களைப் பெறவும் பாதுகாப்பு வேண்டியும் பொதுவாக ஆடு அல்லது கோழிகளை உயிர் பலியிட்டு வழிபட்டனர். எனவே, இந்த நடைமுறை இன்னும் குறைந்தது 32 கோயில்களில் உள்ளது என்பதை அறியும்போது ஆச்சரியமில்லை. அதாவது, மத்திய மலாக்கா மாவட்டத்தில் 10-உம், ஜாசின் மாவட்டத்தில் 8-உம் மற்றும், அலோர் காஜா மாவட்டத்தில் 14 கோயில்களும் உள்ளன. இவற்றுள் சில பூசாரிகள் அல்லது கோயிலின் சமயத் தலைவர் உடல் மீது தெய்வம் இறங்கி அருள்வாக்கு அல்லது ஆலோசனை கூறும் கோயில்களும் உள்ளன.

## அசைவ உணவு பரிமாறும் கோயில்களில் வருகைத் தருவோர்

இந்த ஆய்வு நடைபெற்ற சமயத்தில் ஆடுகள் மற்றும், கோழிகளை உயிர்ப்பலி கொடுத்து அதன் இறைச்சியைப் பரிமாறும் கோயில்களில் வருகை தருபவர்களின் எண்ணிக்கை, குறிப்பாக இளைஞர்கள் மத்தியில், சைவ உணவைப் பரிமாறும் கோயில்களைவிட, அதிகமாக இருந்ததைக் காணமுடிந்தது. பாரம்பரிய இந்துக் கோயில்களில் சமயக் கல்வி நடவடிக்கைகள் அல்லது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள அதிக ஆர்வம் காட்டாத இளைஞர்கள், அசைவ உணவைப் பரிமாறும் கோயில்களில், குறிப்பாகப் பக்தர்களுக்கும் மற்றும், வருகையாளர்களுக்கும் பரிமாறும் சமயங்களிலும் மற்றும், இதர நடவடிக்கைகளிலும் ஈடுபடுவதில் அதிக ஆர்வம் காட்டிவருகிறார்கள்.

## அசைவ உணவைப் படைக்கும் மற்றும், உயிர்ப்பலி கொடுக்கும் நடைமுறையை ஆதரிக்காத இந்து சமயம்

இந்துச்சமயத்தின் இன்றைய தன்மை, சமயம் சம்பந்தமான விழாக்களிலோ கோயில்களிலோ அசைவம் பரிமாறப்படுவதை அனுமதிப்பதில்லை. உதாரணமாக, திருமணங்களின்போது அல்லது தீபாவளி போன்ற கொண்டாட்டங்களின்போது அசைவம் பரிமாறக் கூடாது என்ற முயற்சிகளும் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இருப்பினும், சமுதாயத்தில் பெரும்பாலான இந்துக்கள் அவர்கள் வீட்டில் அசைவம் சாப்பிடுவதைப் பழக்கமாகக் கொண்டுள்ளதாலும், உண்மையில் பெரும்பாலோர் சைவ உணவைவிட அசைவ உணவை அதிகம் விரும்புகிறார்கள் என்பதாலும், இந்த விதியைச் செயல்படுத்துவது எளிதல்ல என்பதும் உண்மை. மேலும், இந்துச் சமயத்தில் தம்மைப் பின்பற்றுபவர்கள் உண்மையான பக்தியுடன் அசைவ உணவைப் படைத்தாலும் கடவுள் ஏற்றுக்கொள்வார் என்று வாதிடும் இந்துக்களும் உள்ளனர்.

இந்துச் சமய புராணக்கதைகளில் காணப்படும் கதைகளில் ஒன்றில், வழக்கமாக அசைவ உணவை உண்ணும் ஒரு பக்தர், தான் எவ்வாறு தான் வணங்கும் தெய்வத்திற்கு உண்மையான பக்தியோடு அசைவ உணவைப் படைத்து மோட்சம் பெற்றார் (கண்ணப்ப நாயனார்) எனும் கதையை மேற்கோள் காட்டி இந்தப் பழக்கத்தைத் தற்காப்பவர்கள் இருக்கின்றனர். பழைய சமய நூல்களில் இது போன்ற வாழ்க்கை முறைகளின் பன்முகத்தன்மையைக் காண்பிக்கும் கதைகள் உள்ளன. ஒவ்வொருவரும் இறைவன் மீது கொண்ட அதீத பத்தியினால் இறைவன் அடிகளில் சரணடைந்து எவ்வாறு முக்தி பெற்றனர் என்பதை விளக்குகின்றன. இத்தகைய விஷயங்களால் இன்றுவரை இந்துச் சமய நடைமுறைகளை ஒருமுகப்படுத்தும் முயற்சிகளும், பொதுவான விதிமுறைகளைத் தயாரிப்பதும் கடினமாக உள்ளன என்று சொன்னால் மிகையாகாது.

இந்துச் சமயப் போதனைகளில் முன்னுரிமை அளிக்கப்படும் 'அகிம்சை' என்ற கருத்து அதனைப் பின்பற்றுபவர்கள் இறைவனுக்கு உயிர்ப்பலி கொடுப்பதையும் அதன் மாமிசத்தை உணவாக உட்கொள்வதையும் தடுக்க ஊக்குவிக்கிறது. 'அகிம்சை' என்ற கொள்கையை உண்மையாகக் கடைப்பிடிக்கும் இந்துக்கள் அசைவ உணவைச் சாப்பிடும் இந்துக்களை விடப் புனிதமானவர்கள் என்ற கருத்தும் சில இந்துக்களிடையே உள்ளது. இந்துச் சமயம் பொதுவாகவே சைவ உணவையே அங்கீகரித்து வருகிறது. பிராமணர்கள் சைவ உணவை மட்டுமே உண்பதால், அவர்கள் புனிதமான இந்துக்கள் எனும் எண்ணமும் உண்டு.

## மலேசியாவில் இந்துச் சமய முறைகளை ஒருங்கிணைக்கும் அமைப்புகள்

மலேசியாவில் இந்துச் சமயக் கோயில்களைக் கட்டுப்படுத்தவும் அங்கு நடைபெறும் நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கவும் இன்று வரை எந்த ஒரு முறையான அமைப்பும் இல்லை. மலேசியாவில் இந்துச் சமய நடைமுறைகளில் ஓர் ஒருங்கிணைப்பினைக் கொண்டுவருவதற்கு மலேசிய இந்து சங்கம் மற்றும், மலேசிய இந்துதர்ம மாமன்றம் ஆகியவை உருவாகியுள்ளன. ஆனால், அவை வழங்கும் அனைத்து ஆலோசனைகளும் விதிமுறைகளும் அனைத்துத் தரப்பினராலும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை, மேலும், அவர்களை இணங்க வைப்பதற்குத் தங்களுடைய செல்வாக்கைப் பயன்படுத்த முடியாத நிலையில் இருப்பதோடு இந்த அமைப்புகளுக்கு அதைச் சட்டப்பூர்வமாகச் செயல்படுத்த அதிகாரமும் இல்லை. மலாக்காவில் இருக்கும் பல கோயில்கள்கூட இந்துச் சங்கத்தில் உறுப்பினர்களாக இருக்க விரும்பவில்லை. அதே நேரத்தில் உறுப்பினர்களாக இருக்கக்கூடிய பல கோயில்கள்கூட இவ்வமைப்பு தயார் செய்து விநியோகிக்கும் வழிகாட்டுதல்களைப் பின்பற்றுவதில்லை.

இருப்பினும், மலேசிய இந்து சங்கம், மலேசிய இந்துதர்ம மாமன்றம் போன்றவை, இந்து சமயத்தை முறையாகக் கடைபிடிக்க விரும்புவோருக்கு வேண்டிய குறிப்புகள் மற்றும், வழிகாட்டுதல்களையும் தொடர்ந்து தயார் செய்து வழங்குகின்றன. ஆயினும், இந்துக்களிடையே இருக்கும் தாராளமான ஜனநாயக இயல்பால் அவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப பல்வேறு நடைமுறைகளைப் பின்பற்றுவதைக் காணலாம்.

இந்தச் சூழ்நிலையில், அசைவ உணவைப் பரிமாறும் கோயில்கள், குறிப்பாக நவீன காலத்திற்கு ஏற்ப மாற்றத்தை ஏற்றுக்கொண்ட இந்துச் சமய போதனைகளின்பால் குறைவான அறிவைப் பெற்றுள்ள இந்து இளைஞர்களிடையே ஓர் ஈர்ப்பாக அமைந்துள்ளன. பெரும்பாலும், இத்தகைய போக்கின் விளைவாக இளைஞர்கள் மத்தியில் இந்துச் சமய அறிவு வளர வாய்ப்பில்லாமல் போவதுடன் காலப்போக்கில் அவர்களின் நடவடிக்கைகள் சமுதாயத்தில் எதிர்மறையான தாக்கத்தை ஏற்படுத்தும் அபாயம் உள்ளது என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

இருப்பினும், இந்துச் சமயத்தில் இருக்கக்கூடிய ஆகம முறைகளைக் கடைப்பிடிக்கும் இந்துக் கோயில்கள் இன்று மலாக்காவில் அதிகம் இயங்குகின்றன. மேலும், மலாக்காவில் உள்ள முக்கிய இந்துக் கோயில்களாக இவை பங்காற்றுகின்றன. இருப்பினும், இந்தக் கோயில்களில் நடைபெறும் செயல்பாடுகள் மற்றும், திட்டங்கள் அதிக இளைஞர்களைத் தீவிரமாக ஈர்க்க முடியவில்லை. இந்தக் கோயில்களால் இன்னும் இந்துச் சமயத்தைச் சேர்ந்த எல்லா வயதினரையும் கவரக்கூடிய நடவடிக்கைகளை ஒழுங்கமைக்கவும் முடியவில்லை.

## நடப்பு நிர்வாகத்தின் அடிப்படையில் முடிவுரை

உண்மையில், இந்துச் சமயம் விரும்பும் இந்துக்களின் ஆளுமைகளை வடிவமைக்கக்கூடிய ஒரு சமயக் கல்வி மையமாகக் கோயிலை உருவாக்கும் வகையில் மேம்படுத்தும் திறன் மலாக்காவில் உள்ள பெரும்பாலான கோயில் நிர்வாகக் குழுக்களுக்கு இல்லை.

பல தலைமுறைகளாக நடைபெறும் கோயில் நடவடிக்கைகள் எந்தவிதப் புதிய மாற்றங்களின்றி நடைபெறுவது, இந்துச் சமயக் கல்வியைப் பெறாத பக்தர்களின் கைகளில் நிர்வாகம் இருப்பதாலும், கோயில் ஒரு சமய மேம்பாட்டு மையம் எனும் எண்ணம் இல்லாமல், சாதாரண வழிபாட்டுத் தலமாக மட்டுமே கோயில்களைக் கருதி, சடங்குகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுத்து, வழிபாட்டாளர்களை ஒரு வட்டத்திற்குள்ளேயே வைத்து செயல்படுவதாலும் இந்த நிலை அப்படியே நீடிக்கின்றது என்று சொல்லலாம்.

மேலும், இந்தக் கோயில்களில் பெரும்பாலானவை தொழிலாளர் வீடமைப்புப்பகுதிகளில் அமைந்து வந்துள்ளன. இந்தச் சூழலில் தங்கள் கோயில்களின் நிலையை உயர் மட்டத்திற்கு உயர்த்துவதற்கான பொருளாதார வலிமை அங்குள்ளவர்களுக்கு இல்லை. அருகில் உள்ள பகுதியில் வசிக்கும் பக்தர்களிடையே ஒத்துழைப்பை ஈர்க்கும் லாவகமும் இல்லை. மாறாக ஒவ்வொரு குழுவினரும் அவர்களுக்கென்று சொந்தமான கோயிலை உடைமையாக்க எண்ணி, தொடர்ந்து செயல்படுகின்றனர். இந்தக் குணம் பல தசாப்தங்களாக இருந்து ஆழமாகப் படிந்துவிட்டதால் ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பு கொடுத்து, ஒருங்கிணைந்து வேலை செய்வதற்கு இது இன்னும் ஒரு தடையாகவே உள்ளது, இதனால், பல கோயில்கள் ஒன்றுக்கொன்று அருகருகில் அமைந்து போட்டிபோடும் நிலையிலுள்ளன.

ஓரிடத்திற்கு அருகில் இந்துக் கோயில்கள் இருப்பினும், தற்போது அங்குப் புதிய கோயில்களை உருவாக்க விண்ணப்பங்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. மற்றச் சிறந்த கோயிலுக்கு ஈடாக முடிந்தவரை சிறந்த வசதிகளை வழங்குவதன் மூலம் இந்துக்களுக்குச் சேவை செய்ய விரும்பும் மனப்பான்மையை விட, சிறிய கோயிலின் தலைவராகத் தொடர்ந்து வீற்றிருப்பதையே விரும்புவதற்கான மனப்பான்மையே மிக அதிகமாக இருக்கின்றது. சமய நடவடிக்கைகளில் வெற்றிபெற, அருகில் உள்ள கோயில்களுடன் ஒன்று சேர விரும்பும் தன்மை குறைவாக இருப்பதை இந்த ஆய்வின்போது தெளிவாகக் கண்டறிய முடிந்தது.

## மூன்றாம் பரிமாணம்
# நிதிவளம்

நிதி விஷயங்கள் உணர்ச்சியைத் தொடுவதாகக் கருதப்பட்டதால் இந்த ஆய்வின்போது, பெரும்பாலான பதிலளித்தவர்கள் கோயிலின் அல்லது கோயிலை நிர்வகிக்கும் சங்கத்தின் நிதிநிலை அறிக்கைகளைக் காட்டவோ கொடுக்கவோ விரும்பவில்லை. நிதி விஷயங்கள் அதன் நிர்வாகத்திடம் மட்டுமே 'ரகசியமாக' இருக்க வேண்டும் என பல நிர்வாகங்கள் கருதுகின்றன. மேலும், சங்கங்களின் பதிவாளரிடம் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கைகளும், கோயில் நிர்வாகத்தினர் மற்றும், சங்கப் பதிவாளருக்கும் இடையில் மட்டுமே ரகசியமாக இருக்க வேண்டும் எனக் கருதப்படுகின்றன.

பதிவு பெற்ற கோயில் சங்கங்கள் மட்டுமே அங்கீகரிக்கப்பட்ட விதிகளின்படி வருடாந்திர பொதுக் கூட்டங்களை நடத்துகின்றன; மற்றும், வருடாந்திர அறிக்கைகளை தங்கள் உறுப்பினர்களுக்கு எழுத்துப்பூர்வமாக வழங்குகின்றன - இருப்பினும், குடும்ப உறுப்பினர்கள் மற்றும், நண்பர்களை மட்டுமே உறுப்பினர்களாக கொண்ட சில பதிவு பெற்ற கோயில்களில் இந்த முறை பின்பற்றப்படுவதில்லை. எனவே, இந்த ஆய்வுக்கு இத்தகைய கோயில்களின் நிதி அறிக்கைகளைப் பெற இயலவில்லை.

எப்படியிருப்பினும், ஏறக்குறைய அனைத்து பதிலளித்தவர்களும் வழங்கிய உண்மையான அல்லது மதிப்பீட்டு நிதி அறிக்கைகள், கோயில் நிர்வாகத்தினர் மட்டுமே செய்த செலவுகளைக் காட்டுகின்றன. அதே நேரத்தில் பெரும்பாலான செலவுகள் ஆலய பக்தர்களால் நேரடியாகச் செய்யப்படுகின்றன; அவற்றைக் கணக்கிட முடியாது - எனவே, கோயில் நிர்வாகத்தின்வழி கிடைக்கும் நிதிநிலை அறிக்கைகள் முழுமையானவை என்று சொல்லமுடியாது. பக்தர்கள் நேரடியாக செய்யும் செலவுகளைக் காட்டும் அறிக்கைகள் மிகக் குறைவு. எல்லா கோயில்களிலும் இது உண்மைதான் என்றாலும், கோயில் நிர்வாகங்களிடையே, இப்படி பக்தர்கள் மூலம் நேரிடையாகக் கிடைக்கும் நிதித் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள இவர்கள் தயக்கம் காட்டுவதோடு, விரும்புவதும் இல்லை. இந்த விஷயம் இந்த ஆய்வின்போது கண்ட, ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய ஓர் உண்மையாகும்.

## உத்தேச வரவு செலவு

இந்த ஆய்வின் வெற்றிக்காக, ஒவ்வொரு கோயிலின் பிரதிநிதியாகப் பதிலளித்தவர்களிடமிருந்து வருடாந்திர செலவின் உத்தேச மதிப்பீடுகள் மட்டுமே கோரப்பட்டன, அவர்களில் பெரும்பாலோர் வருமானம் மற்றும், செலவின உத்தேச மதிப்பீடுகளை வழங்கத் தயாராக இருந்தனர். எந்தவொரு உத்தேச மதிப்பீடுகளையும் கொடுக்க விரும்பாத சில கோயில் நிர்வாகங்களும் இருந்தன. ஏனென்றால், 'மூன்றாம் தரப்பினரிடம்' இந்த விவரங்கள் வெளிப்படையாகச் சொல்லக்கூடியவை அல்ல என்று அவர்கள் கூறினர்.

பெரும்பாலான கோயில்கள், பக்தர்கள், சிறப்பு நன்கொடையாளர்கள் மற்றும், அரசியல்வாதிகளிடமிருந்து திருவிழா நடத்துவதற்கும், கோயிலின் கட்டிடங்கள் மற்றும், உள்கட்டமைப்புகளைச் சரிசெய்வதற்கும் நன்கொடைகளை நம்பியுள்ளன. சில சமயங்களில் அதிர்ஷ்டக் குலுக்கல், பிரார்த்தனை பொருட்களின் விற்பனை, காலண்டர் விற்பனை, கலாச்சார நிகழ்ச்சிகள் மற்றும், இது போன்று பலவகை நடவடிக்கைகளின் மூலமும் நிதி திரட்டும் திட்டங்களை மேற்கொள்கின்றனர்.

## பூஜைகள் மற்றும், உபயம் மூலம் வரவு

நித்தியப் பூஜைகளுக்கான கட்டணம் ரிங்2 இருந்து ரிங்5 வரை வழக்கமாக வசூலிக்கப்படுகிறது. இந்தக் கட்டணத்தைக் குருக்கள் அல்லது பூசாரி எடுத்துக்கொள்கிறார். பண்டிகை மற்றும், திருவிழா காலத்தின்போது சிறப்புப் பூஜைகளுக்கு ரசீது கொடுக்கப்பட்டு, பெறப்படும் கட்டணங்கள் கோயில் நிர்வாகத்தைச் சேரும். அதே போன்று ரிங். 150 முதல் ரிங். 4,500 வரை சிறப்பு உபயங்களின்போது வசூலிக்கப்படும் கட்டணங்களும் கோயில் நிர்வாகத்தினரைச் சேர்கிறது. இதில் ஒரு பகுதி குறிப்பிட்ட நிகழ்வுகளின் செலவுகளுக்குப்போக மீதம் கோயில் நிர்வாகத்தினர் வைத்துக் கொள்கின்றனர்.

உபயம் அல்லது சிறப்புப் பூஜை இந்துச் சமய நடைமுறைகளின்படி பல்வேறு வழிகளில் செய்யப்படுகிறது. மேலும், குருக்கள் மற்றும், கோயில் நிர்வாகக் குழு கோயிலில் மேற்கொள்ளக்கூடிய உபய வகைகளைத் தீர்மானிக்கின்றனர். சில நேரங்களில் கோயிலில் உள்ள குருக்கள் பக்தர்களுக்கு ஏற்படக்கூடிய சில

பாதிப்புகளைத் தவிர்ப்பதற்காகச் சிறப்புப் பரிகார பூஜை செய்ய அறிவுறுத்தப்படுவார்கள், மேலும், இதற்காக ஒரு சிறப்புக் கட்டணம் குருக்களால் தீர்மானிக்கப்படுகின்றது. இந்த வகைக் கட்டணம் எப்போதும் குருக்களுக்கு உரியதாகிறது. சில சமயங்களில் இது போன்ற பரிகாரப் பூஜைகள் சம்பந்தப்பட்ட பக்தர்களின் வீடுகளிலும் நடைபெறுகின்றன.

இதேபோல், திருமணம், புதுமனை புகுதல் போன்றவற்றைச் செய்ய அல்லது தொடங்குவதற்குப் பொருத்தமான தேதிகள் மற்றும், நேரங்களைப் பார்ப்பதற்கான கட்டணம் குருக்களுக்கு உரியதாகின்றது. பக்தர்களின் வீட்டில் நடைபெறும் நிகழ்வுகள் குருக்களின் தனிப்பட்ட பொறுப்பு; ஆகையால், அவர்களுக்கு இருக்கும் சொந்த நேரத்தைப் பயன்படுத்தும் வரை கோயில் நிர்வாகக்குழு இவ்விசயங்களில் சம்பந்தப்படுவதில்லை.

இருப்பினும், சில கோயில்களில் முழுநேர வேலைக்குக் குருக்கள் அல்லது நாதஸ்சுவர இசைக் கலைஞர்களை அமர்த்தும்போது சேவைகளுக்கான கட்டணத்தை நிர்ணயம் செய்யும்போது சில விதிகள் உள்ளன - குறிப்பாகத் தமிழ் நாட்டிலிருந்து வருபவர்கள், குடிநுழைவுத் துறை விதித்த விதிகளின்படி இவை தீர்மானிக்கப்படுகிறன. இத்தகையோர் விதிகளைக் கடைப்பிடிப்பதைக் கோயில் நிர்வாகம் உறுதிசெய்யும் கடமை கொண்டுள்ளது. அனுமதி கொடுத்தால், இந்த விசயத்தில் கோயிலுக்குக் கொடுக்க வேண்டிய விகிதத்தைக் கோயில் நிர்வாகக் குழு தீர்மானிக்கிறது.

## அருள்வாக்குச் சேவைகள் வழங்கும் கோயில்கள்

உபயம் மற்றும், அருள்வாக்குச் சேவைக்காக அதிகக் கட்டணம் வசூலிக்கும் கோயில்கள் உண்மையில் அதிக வருமானத்தை ஈட்டுகின்றன - மேலும், இந்தப் பணம் கோயில் கணக்கில் சேர்க்கப்படுகின்றதா அல்லது அங்குள்ள கோயில் தலைவரின் தனிப்பட்டக் கணக்கில் சேர்க்கப்படுகின்றதா என்பது உறுதியாகத் தெரியவில்லை. ஏனெனில், இந்த வகை கோயில்களில் பெரும்பாலானவை இந்த ஆய்வுக்குக் கோயில் கணக்குகளை வழங்க மறுத்தன. அவற்றில் சில செலவுகளின் தோராயமான மதிப்பீட்டை மட்டுமே முன்வைத்தன. இந்த வகை கோயில்களின் தலைவர்கள் தங்களது நிர்வாகக் குழுவில் ஒரு முக்கிய பங்கை வகிக்கின்றார்கள்; மற்றும் நிதி விஷயங்கள் மிக ரகசியமாகக் கருதப்படுகின்றன.

## திருவிழாக் காலங்களில் நிதி வரவு

அதிக பக்தர்களின் பங்கேற்புடன் நடைபெறும் கோயில் திருவிழாக்களின் போது அங்கு கொடுக்கக்கூடிய சேவைகளுக்காக விதிக்கப்படும் கட்டணங்களுக்கு ரசீது கொடுக்கப்படுகிறது. ஒரு திருவிழாவின்போது அதிகமான பக்தர்களை ஈர்க்கும் பெரும் கோயில்களில் கோயில் நிர்வாகக் குழு அங்குக் கொடுக்கக்கூடிய ஒவ்வொரு சேவைக்கும் பொறுப்பான கட்டணங்களின் பட்டியலைத் தெளிவாகக் கொடுக்கின்றன. குருக்களால் நடத்தப்படும் பூஜைகள் மற்றும், அர்ச்சனை போன்றவற்றிற்கும் கட்டணம் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. இந்தக் கோயில்கள் கட்டணம் பெறும்போது ரசீதுகளை வழங்குவதோடு முழுமையான வரவு கணக்குகளை அதன் பொதுக் கூட்டங்களில் வழங்குகின்றன.

எடுத்துக்காட்டாக, மலாக்கா பத்து பிரண்டாம் ஸ்ரீசுப்பிரமணியர் தேவஸ்தானம் (MT22) கோயிலில் நடத்தப்படும் ஒவ்வொரு வகையான பூஜைக்கும் மற்றும் பிற சேவைகளுக்கும் கட்டணங்களின் பட்டியலை எழுத்து வடிவில் அறிக்கை வாயிலாக ஆதரவாளர்களுக்கும்/ பக்தர்களுக்கும் பின்வருமாறு வழங்குகின்றது:

| கட்டணம் | ரிங். | கட்டணம் | ரிங். |
|---|---|---|---|
| தினசரி பூஜை (பழங்கள்) | 2.00 | தினசரி பூஜை (தேங்காய்) | 3.00 |
| நெய் விளக்கு | 2.00 | நெய் விளக்கு & அர்ச்சனை | 3.00 |
| எள் விளக்கு & அர்ச்சனை | 5.00 | சிதறல் தேங்காய் | 2.00 |
| கார் அர்ச்சனை | 30.00 | மோட்டார் சைக்கிள் அர்ச்சனை | 15.00 |
| பேருந்து/ லாரி அர்ச்சனை | 50.00 | உபயம் (வெள்ளிக்கிழமை) | 150.00 |
| உபயம் (பௌர்ணமி) | 150.00 | 108 சங்காபிஷேகம் | 501.00 |
| 1008 சங்காபிஷேகம் | 1,000.00 | திருவிழா சமயத்தில் பூஜை | 5.00 |
| முடி இறக்குதல் (திருவிழா) | 10.00 | | |

இந்தக் கோயிலில் உள்ள பல்நோக்கு மண்டபத்தில் திருமண வைபவங்களை முறையாகச் செய்ய போதுமான வசதிகளைச் செய்து தருவதோடு பின்வரும் கட்டணங்களையும் கோயில் வசூலிக்கிறது.

| கட்டணம் | ரிங். |
|---|---|
| கோயிலுக்கான அடிப்படைக் கட்டணம் | 500.00 |
| மேளம் / நாதஸ்வரம் | 450.00 |
| திருமணப் பதிவு | 180.00 |
| குருக்கள் | 400.00 |
| சுத்தம் செய்தல் | 200.00 |

முறையான நிர்வாகத்தைக் கொண்டிருக்கும் கோயில்களில் விதிகள், கட்டண விகிதங்கள் மற்றும், பக்தர்கள் அனைவரின் பார்வைக்காக எழுதிவைக்கப்பட்ட வேண்டுகோள்கள் போன்றவை உள்ளன. வெவ்வேறு இடங்களிலிருந்தும் பக்தர்களைக் கவரும் கோயில்கள், அதிக உறுப்பினர்களுடன் பல்வேறு நிகழ்ச்சிகளை நடத்துவதில் அதிக ஆர்வம் காட்டும் கோயில்களில், தெளிவான வழிகாட்டிகள் இருக்கின்றன.

## வரையறுக்கப்பட்ட சூழலில் கோயில் பக்தர்கள் மற்றும் நிர்வாகக் குழு

இந்த நிலையை குறிப்பிட்ட இடம், குறைவான உறுப்பினர்கள் மற்றும் குறைந்தப் பக்தர்களைக் கொண்ட கோயில்களில் காண முடியாது. ஏனென்றால், கோயிலை வழிநடத்துபவர்களும் அந்தக் கோயிலுக்கு வருகைத் தருபவர்களும் ஒருவருக்கொருவர் நன்கு அறிமுகமனவர்களாகவும், நெருக்கமானவர்களாகவும் இருப்பதால் கோயில் விஷயங்களை எழுத்துப் பூர்வமாகச் செய்ய வேண்டிய அவசியம் எழுவதில்லை.

நிதி நம்பகத்தன்மை சம்பந்தமான கேள்வி பெரும்பாலும் எழும்போதும், மற்றும், நிதி தொடர்பான எந்தவொரு கேள்வியும் தலைவரிடம் எழுப்பும்போது அவர் நம்பத்தகாதவர் எனக் கருத வாய்ப்பு இருக்கிறது என இந்தச் சமூகத்தில் பலரால் கருதப்படுகிறது. ஆகவே, உள்ளூர் சமூகத்தில் இணக்கமான உறவைப் பேணுவதற்குத் தலைவரால் முன்வைக்கப்படும் கணக்கு சரியானது என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறது. சில நேரங்களில், இத்தகைய போக்கு, படித்த, ஆர்வமுள்ள பக்தர்கள், இளைஞர்கள், புதியவர்கள் கோயில் விவகாரங்களில் ஈடுபடுவதையும் கோயில் விசயங்களைப் பற்றி கேட்பதையும் ஆதரிக்காத நிலையை ஏற்படுத்தி, கோயில் நிர்வாகத்தைப் பழைய நிலையிலேயே நிறுத்தி வைத்திருப்பதைப் பார்க்கிறோம்.

## வங்கிக் கணக்கு

எனவே, 82 கோயில்களில் மட்டுமே அதாவது, மத்திய மலாக்கா மாவட்டத்தில் 28 கோயில்களில், ஜாசின் மாவட்டத்தில் 29 கோயில்களில் மற்றும், அலோர் காஜா மாவட்டத்தில் 25 கோயில்களில் மட்டுமே இரண்டு அல்லது மூன்று கோயில் நிர்வாகப் பொறுப்பாளர்களால் வங்கிக் கணக்குகள் இயங்குகின்றன

என்பதைக் கண்டு ஆச்சரியப்படுவதற்கில்லை. பிற கோயில்களின் கணக்குகள் சில நேரங்களில் தனிப்பட்ட வங்கி கணக்குகள் மூலமாகவும், சில சமயங்களில் எந்தவித வங்கி கணக்குகள் இல்லாமல் தலைவரால் மட்டுமே கையாளப்படுகின்றன. வங்கிக் கணக்கு எதுவும் இல்லாமல், சில கோயில்கள் வேறு எந்தவித நிகழ்ச்சிகளும் நடத்தாது வருடாந்திரத் திருவிழா மட்டுமே நடத்துவதற்கு நிதி திரட்டுகின்றன. நீண்ட காலமாக இந்தப் பழக்கம் இருந்து வருவதால், இந்த நடைமுறையில் நன்கு பழகிய பக்தர்கள் இதை மாற்ற வேண்டிய அவசியமில்லாத ஒரு பழக்கமாக ஏற்றுக்கொள்கிறார்கள்.

## குடும்பக் கோயில்

மேலும், 47 கோயில்கள் குடும்பக் கோயில்களுக்கு ஒத்ததாக இருக்கின்றன. ஏனெனில், இக்கோயில்களின் நிர்வாகம் நெருங்கிய நண்பர்கள் உட்பட, குடும்ப வட்டத்திற்குள் கட்டுப்படுத்தப்படுகிறது. கோயில் அமைந்துள்ள இடம் தலைவருக்குச் சொந்தமாகவோ, தலைவரே அருள்வாக்கு கூறுதல்வழி முக்கியப் பங்கு வகிப்பவராகவோ இருப்பதால், ஒரு சிறிய வட்டத்திற்குள் இத்தகைய கோயில்கள் செயல்படுகின்றன. இந்தக் கோயில்களில் சில சங்கங்களின் பதிவாளரிடம் பதிவு செய்யப்பட்டிருந்தாலும், அனுப்பிவைக்கும் நிதிநிலை அறிக்கைகள் வழக்கமாக அங்குள்ள மிகவும் செல்வாக்குமிக்க கோயிலின் தலைவரால் தீர்மானிக்கப்படுகின்றன. நிதிகளைத் தொடும் எந்தவொரு கேள்வியும் இந்த வகை கோயில்களில் உணர்ச்சிமிக்கதாகும்.

## உத்தேச வரவு செலவு

அட்டவணை 28, ஆலயத்தில் வளர்ச்சி அல்லது சிறப்புத் திட்டங்கள் அம்சங்களைத் தவிர்த்து ஆண்டுதோறும் நடைபெறும் வழக்கமான கோயில் செலவுகளை மட்டுமே காண்பிக்கின்றது. சில நிர்வாகங்கள் கோயில் வருமானம் மற்றும், செலவுத் தகவல்களை வழங்க விரும்பவில்லை. அதிகமான கோயில்கள் தாங்கள் பெறும் வருமானம் மற்றும், நன்கொடைகள் பற்றிய விஷயங்களைக் கூற விரும்பவில்லை. இந்த உத்தேச வரவு செலவு மதிப்பீடு மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் நிதி நிலை குறித்து சுருக்கமான கண்ணோட்டத்தை அளிக்கிறது.

'திருவிழா' காலங்களில் மட்டுமே உயிர்பெறும் கோயில்கள், குறைவான பக்தர்கள் வசிக்கும் இடங்களில் இருக்கும் கோயில்கள், திருவிழாச் சமயங்களில் மட்டுமே பக்தர்களைக் கவரும் கோயில்கள் ஆண்டுக்கு ரிங் 10,000-க்கும் குறைவாகச் செலவு செய்வது தெளிவாகின்றது. மொத்தம் 127 கோயில்களில் 54 கோயில்கள், அதாவது, 46.5%, இந்த வகையைச் சேர்ந்தவை. மற்றும், 39.0 % அல்லது 52 கோயில்கள் ரிங்10,001 முதல் ரிங்50,000 வரை செலவிடுகின்றன, அதே நேரத்தில் ரிங்50,001 முதல் ரிங்100,000 வரை செலவழிக்கும் கோயில்கள் மொத்தம் 12 அல்லது 9.4% ஆகும். மலாக்காவில் உள்ள 9 கோயில்கள் அல்லது 7.1% மட்டுமே ஆண்டுக்கு ரிங்100,001-க்கும் மேல் செலவிடுகின்றன.

## கோயிலின் நிதி நிலைமை

இந்தப் புள்ளிவிவரங்களில் பெரும்பாலானவை மதிப்பீடுகளின் அடிப்படையில் மட்டுமே அமைந்திருந்தாலும், இது மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களின் நிதி நிலைமை பற்றிய தெளிவான பார்வையைக் கொடுக்கிறது. பெரும்பாலான கோயில்கள் பெரிய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யமுடியாத நிலையிலும், நிதித் திரட்டும் திறனற்றும் இருப்பதோடு தகுதிவாய்ந்த சமய சடங்குகள் நடத்த குருக்களை பணியமர்த்துவது மற்றும், அதன் பக்தர்களிடையே கோயில்களின் மதிப்பை உயர்த்தவும் அவை ஆற்றும் பங்கை மேம்படுத்தவும் கூடிய நிலையில் இல்லை என்பது தெளிவு.

இதற்கிடையில், கோயிலில் நிறைய பணம் இருந்தால், மற்றவர்களால் தலைமையைக் கைப்பற்றுவதற்கான போட்டி இருக்கும் - ஏனெனில், எல்லா இடங்களிலும் தற்போதுள்ள கோயில் தலைமைத்துவத்தை விரும்பாதவர்கள் இருக்கவே செய்கின்றனர். எனவே, தற்போதுள்ள தலைமைக்குச் சவால் விடும் 'விரும்பத் தகாத நலன்களை' கொண்டுவரக்கூடிய மாற்றங்களைச் செய்யாமல், வழக்கமான நடவடிக்கைகளுக்கு மட்டுமே போதுமான நிதி திரட்டுவதே சிறந்த கொள்கை என நடப்பு நிர்வாகங்களால் கருதப்படுவதும் தெரிகிறது.

**அட்டவணை 28: மலாக்கா கோயில்களின் ஆண்டு உத்தேச வரவு செலவு**

| மாவட்டம் | - RM5,000 | 5001-10,000 | 10,001-20,000 | 20,001-50,000 | 50,001-100,000 | 100,000 + | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 6 | 8 | 4 | 5 | 7 | 4 | 34 |
| ஜாசின் | 8 | 9 | 11 | 9 | 3 | 1 | 41 |
| அலோர் காஜா | 13 | 15 | 16 | 2 | 2 | 4 | 52 |
| மொத்தம் | 27 | 32 | 31 | 16 | 12 | 9 | 127 |
| சதவிகிதம் | 21.3 % | 25.2 % | 26.4 % | 12.6 % | 9.4 % | 7.1 % | |

**குறிப்பு : 127 கோயில் நிர்வாகத்திடமிருந்து மட்டுமே இந்த மதிப்பீடுகள் பெறப்பட்டுள்ளன. மற்றவர்கள் இந்தத் தகவலை வழங்க மறுத்துவிட்டனர். கோயில் நிர்வாகத்தின் மூலம் அல்லாமல், பக்தர்களால் நேரடியாகக் கோயிலில் பெரும்பாலான செலவுகள் செய்யப்படுகின்றன என்று பெரும்பாலான நிர்வாகங்கள் தெரிவித்தனர். அதோடு, சில கோயில்களில் பக்தர்களை எதிர்பார்க்காமல் செலவுகள் அனைத்தும் தலைவரால் செய்யப்படுகின்றன என்பதையும் ஒப்புக்கொண்டனர்.**

## கோயிலுக்காக நிதி வசூலிக்கும் திறன்

கோயில்களுக்கிடையே நிதி வசூலிக்கும் திறன் சமமாக இல்லை. பெரிய கோயில்கள், மற்றும், அதிக செல்வாக்குமிக்க நிர்வாகக் குழுக்களால் பராமரிக்கப்படுகின்ற கோயில்கள் அவற்றின் திட்டங்களுக்குப் போதுமான நிதி திரட்ட முடிகிறது. மற்றவர்கள் வருடாந்திர திருவிழாக்களை மட்டும் நடத்துவதோடு தங்களது நடவடிக்கைகளை கட்டுப்படுத்திக் கொள்கின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் நடைபெறும் திருவிழாவுக்கு உதவத் தயாராக இருக்கும் பக்தர்களிடம் இருந்து போதுமான நிதியைக் தேடுவது எளிது என்று அவர்கள் நினைக்கின்றனர். அவர்கள் இன்னும் அதிகமாகச் செய்ய விரும்பினால், நன்கொடைகளைப் பெற அதே பக்தர்களை அணுக அவர்கள் தயங்குகிறார்கள். பெரும்பாலான கோயில்களில் பதிவுச் செய்யப்பட்ட உறுப்பினர்கள் இல்லாததற்குக் காரணம் அவர்கள் ஒவ்வொரு மாதமும் அல்லது ஒவ்வோர் ஆண்டும் உறுப்பினர் கட்டணத்தை வசூலிக்க விரும்புவதில்லை; ஏனெனில், இது போன்ற உறுப்பினர்கள் திருவிழாவின் போது நன்கொடை வழங்க விரும்பமாட்டார்கள் என எண்ணுகிறார்கள். உட்புற இடங்களில், குறிப்பாகப் பல குடும்பங்கள் கோயில்களுக்கு அருகில் இல்லாத நிலையில் உள்ள கோயில்களில், இது தெளிவாகத் தெரிகிறது. மற்றொரு காரணம் என்னவென்றால், மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் குடும்பங்களின் எண்ணிக்கையைக் கோயில்களின் அதிக எண்ணிக்கையோடு ஒப்பிடும்போது, மலாக்காவில் உள்ள அனைத்து 146 கோயில்களிலும் உள்ள அனைத்து நடவடிக்கைகளுக்கான செலவுகளையும் ஈடுகட்ட வாய்ப்பில்லை.

சில நேரங்களில் பதிவுசெய்யப்பட்ட உறுப்பினர்கள் இல்லாததால் கோயில் விவகாரங்களில் உதவி பெறுவது கடினமாகிறது. ஆனால், பெரும்பாலான பக்தர்களுக்கு, திருவிழாவின்போது நன்கொடைகள் வழங்குவதால் அவர்களுக்குக் கோயிலில் வேறு எந்தச் சலுகைகளும் வழங்கப்படாவிட்டாலும் கூட சம்பந்தபட்ட கோயிலின் அங்கமாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றனர். எந்தவிதக் கூடுதல் ஈடுபாடு இல்லாமல் திருவிழாவின் போது மட்டுமே கலந்துகொள்ளும் இந்த நிலை இவர்களுக்கு மிகவும் வசதியாக உள்ளது. இந்த நிலைமை உண்மையில் கோயிலில் கூடுதல் நிகழ்வுகளை நடத்துவதற்கான வாய்ப்பைக் குறைப்பதோடு கலந்துகொள்ள வரும் பக்தர்களின் வருகையையும் குறைக்கிறது. கோயிலின் பொதுவான பலத்தையும் குறைக்கிறது.

## அரசு மற்றும், அரசியல்வாதிகள் பங்களிப்பு

நடவடிக்கைகளுக்கும், கோயில்களை நிர்மாணிப்பதற்கும் அல்லது பழுதுபார்ப்பதற்கும் நன்கொடைகளை அரசியல்வாதிகள் வழங்கத் தொடங்கியதிலிருந்து, பல கோயில் நிர்வாகங்கள் மாநில சட்டமன்ற உறுப்பினர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள், அமைச்சர்கள் அல்லது மலாக்கா முதலமைச்சர், நாட்டுப் பிரதமர் போன்றோரின் பங்களிப்புகளைச் சார்ந்து உள்ளனர்.

இந்த வளர்ச்சி கோயிலின் தலைமைத்துவத்தில் அரசியல் செல்வாக்கைக் காட்டத் தொடங்கியது, ஏனெனில், ஆளும் அரசியல் கட்சிக்கு ஆதரவாக இருந்தால் நிதி உதவி பெறுவது எளிதாக இருக்கும் எனும் கருத்து வேரூன்றியுள்ளது. தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் பிரதிநிதிகள், மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் மற்றும், மத்திய அமைச்சர் ஆகியோரின் பங்களிப்புகளின் மூலம் கோயில்களைச் சரி செய்ய நிதியுதவியும் மற்றும், மாற்று நில ஒப்புதல்களை மலாக்காவில் உள்ள பல கோயில்கள் பெற்றுள்ளன. ஆளும் கட்சியை ஆதரிக்கும் தலைவரும் நிர்வாகக் குழுவும் பெரும்பாலும் அவர்கள் எதிர்பார்க்கும் ஆதரவைப் பெறுகின்றனர்.

மலாக்காவில் உள்ள மொத்தம் 99 கோயில்கள் இதுவரை அரசியல்வாதிகளிடமிருந்து ஒதுக்கீடுகளைப் பெற்றுள்ளதாகத் தெரிவித்தன. பொதுத் தேர்தலின்போது, இந்து வாக்காளர்களின் ஆதரவைக் கோரும் வேட்பாளர்கள் கோயில் விஷயங்களுக்கு உதவுவதாக உறுதியளிப்பர், அவர்கள் வென்றபோது - குறிப்பாக, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி ஆளும் கட்சியில் இருந்தால், கோயில் நிர்வாகத்தினர் முறையாகக் கோயிலுக்கு வேண்டிய உதவியைப்பெற விண்ணப்பம் செய்கின்றனர்.

பாரிசான் நேஷனல் ஆட்சியின்போது, இதில் ஓர் அங்கமாக இருக்கும் மலேசிய இந்தியர் காங்கிரஸ் கட்சி (ம.இ.கா), மலாக்காவில் உள்ள பல கோயில்களுக்கு உதவியது. மலாக்காவைச் சேர்ந்த டத்தோஸ்ரீ டாக்டர் ச. சுப்பிரமணியம் மத்திய அரசின் அமைச்சரானபோது, மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்கள் அதிக நிதி உதவியைப் பெற்றன. இதன்வழி சில கோயில்களின் திட்டங்களைப் பொறுத்து ரிங் 50,000-க்கும் மேல் நன்கொடைகளைப் பெற்றுள்ளன.

## பாக்காத்தான் ஹராப்பான் ஆட்சியின்போது அரசின் பங்களிப்பு

இந்த ஆய்வின் போது நன்கொடைகள் பற்றி பதிலளித்தவர்களில் பலர் பாக்காத்தான் ஹராப்பான் அரசாங்கப் பிரதிநிதிகள் சார்பாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள்மீது தங்களது அதிருப்தியைத் தெரிவித்தனர். காரணம் தங்கள் கோயில்களுக்கு உதவி கோரி அவர்களிடம் விண்ணபித்தபோது மிகவும் தாராளமாக உதவவில்லை என்பதாலும் பல்லாயிரக்கணக்கான ரிங்கிட் தேவைப்படும் திட்டங்களுக்குக் கூட இரண்டு முதல் ஐந்து ஆயிரம் ரிங்கிட் மட்டுமே கொடுத்துள்ளனர் என்பதையும் வருத்தத்துடன் தெரிவித்தனர். எனினும், இந்தப் புதிய ஆட்சி நாட்டின்/மாநில நிதி நிலையை கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர நடவடிக்கைகளை எடுத்ததால் இந்த நிலைமை ஏற்பட்டதாக அதன் தலைவர்கள் கூறினர்.

## கோயில் வாயிலாக நிதித் திரட்டும் நிகழ்வு

40-க்கும் குறைவான கோயில்கள், பிரார்த்தனை பொருட்களை விற்பனை செய்தல், நன்கொடைகளை சேகரிக்கக் கோயிலில் சிறப்பு வழிபாடுகள் நடத்துதல், பங்கேற்பு கட்டணம் வசூலிப்பதன் மூலம் விளையாட்டு போட்டிகளை நடத்துதல், பக்தர்கள் மத்தியில் அதிர்ஷ்டக் குலுக்கு, கோயிலில் கடைகள் அல்லது பிற வசதிகள் மூலம் வாடகை வசூல் போன்ற கூடுதல் திட்டங்கள்/ நிகழ்வுகள் மூலம் கோயிலுக்கு நிதி திரட்டுகின்றனர். பெரும்பாலான கோயில்களில் உண்டியல் மூலம் வசூலிக்கப்படும் நிதி மிகவும் சிறியதாக இருப்பதால், பெரும்பாலானவர்கள் இந்த உண்டியல் நிதி வசூலிப்பதை ஆண்டு முழுவதும் செய்வதில்லை என முடிவு செய்துள்ளனர். திருவிழா நடைபெறும் போது மட்டுமே சிலர் இந்த உண்டியல் முறையைப் பயன்படுத்துகின்றனர். ஏறக்குறைய எல்லா கோயில்களும் திருவிழா நடைபெறும் நேரத்தில் மட்டுமே உள்ளூர் பக்தர்களிடமிருந்து நன்கொடைகளைப் பெறுகின்றனர். கோயிலின் திருவிழாவிற்கு முன்னதாக இந்த நன்கொடைகளை சேகரிக்கக் கோயில் நிர்வாகக் குழு உறுப்பினர்கள் முயற்சி செய்கிறார்கள். சில கோயில்கள் மாதம், ஆண்டு அல்லது ஆயுள்கால உறுப்பினர் கட்டணத்தை வசூலிக்கின்றன - ஆனால், உறுப்பினர்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதால் வசூலிக்கப்படும் தொகை மிகவும் குறைவாக உள்ளது.

## தனிப்பட்ட நன்கொடையாளர்கள்

மலாக்கா மாநிலத்தில் சில கோயில்கள் இந்துத் தொழில் முனைவர்களிடமிருந்து நிதி உதவி பெறுகின்றன. எடுத்துக்காட்டாக, அலோர் காஜாவில் உள்ள லெசோங் பத்து என்ற இடத்தில் உள்ள AG32 கோயிலின் புதிய கட்டிடத்தை நிர்மாணிக்க ஆரம்பத்தில் அந்தத் தோட்டத்தில் இருந்து வெளியேறி தற்போது வெற்றிகரமாக இருக்கும் ஒரு தொழில்முனைவர் நிதி உதவியளித்துள்ளார். மலாக்காவில் உள்ள இந்து ஆலயங்களுக்கு உதவி செய்யும் எண்ணம் கொண்ட நன்கொடையாளர்கள் மலாக்காவில் கிட்டத்தட்ட 30 கோயில்களின் பராமரிப்பில் தொடர்ந்து கணிசமான அளவில் ஈடுபட்டு வருகின்றனர்.

## இந்துக்கள் அல்லாத பக்தர்களின் பங்கேற்பு

இப்போது இந்துக்கள் அல்லாதவர்களும், குறிப்பாகச் சீனர்களும் இந்துக் கோயில்களுக்கு நிதி பங்களிப்பு செய்கிறார்கள், ஏனென்றால், அவர்கள் சம்பந்தப்பட்ட கோயில்களில் உள்ள தெய்வங்களின் சக்தி மீது நம்பிக்கை கொண்டுள்ளனர். MT3, மற்றும், MT34 கோயில்கள் இது போன்ற ஆதரவைப் பெற்றுள்ளதோடு அதன் ஆதரவாளர்களின் இருப்பிடத்தையும் தாண்டி இந்த தாக்கம் உள்ளது என்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. ஜாசின் மாவட்டத்தில் J20 மற்றும், J34 கோயில்கள் இந்துத் தெய்வங்களுக்கும் தாவோயிச சமயத்தின் தெய்வங்களுக்கும் இடையிலான ஒருங்கிணைந்த கோயில்களாக விளங்குகின்றன. அதன் உறுப்பினர்கள் மற்றும், நிர்வாகக் குழு உறுப்பினர்கள் இந்த இரு தரப்பினரையும் உள்ளடக்கியதாக இருக்கின்றனர். உண்மையில் இது போன்ற இரு கலாச்சாரத்தையும் ஏற்கும் நிலை, பதினைந்தாம் நூற்றாண்டில் மலாக்கா சுல்தான்களின் காலத்திலிருந்தே இந்துச் சமூகமான மலாக்கா செட்டி சமூகம் மற்றும், சீன சமூகமான மலாக்கா பாபா சமூகம் ஆகிய இரண்டு சமூகங்களுக்கிடையில் ஏற்கனவே இருந்ததாகும். மலாக்காவின் வரலாற்றில் இந்தத் தன்மை வேரூன்றியுள்ளது எனலாம்.

## முடிவுரை

முடிவுரையாக, மலாக்காவில் உள்ள கோயில்களின் நிதி நிலையைக் காணும் போது பெரும்பாலான கோயில்கள் மேலும், சிறந்தக் கோயில்களாகச் செயல் பட முடியாத நிலையில் இருப்பதோடு இந்து சமயத்தில் உள்ள போதனைகள் மற்றும், வழிகாட்டுதல்களின்படி கல்வி மற்றும், சமூகநலன் மையமாகக் கூடுதல் திட்டங்களை நடத்த அனுமதிக்காத அளவிலேயே இருக்கின்றன. இந்தப் பலவீனத்தாலேயே, அருள்வாக்கு கூறும் ஓரிரு கோயில்களைத் தவிர, எந்தவொரு கோயிலிலும் ஒரு கோயில் நிர்வாகியை முழு நேரமாக பணிக்கு அமர்த்த முடியவில்லை. நிரந்தரமாக இந்துச் சமய வகுப்பை நடத்தி சான்றிதழ்களை தக்காருக்குக் கொடுக்க முடியவில்லை. அதோடு, மலாக்காவில் உள்ள எந்த இந்து ஆலயமும் ஏழைகளுக்கும் பக்தரகளுக்கும் ஒவ்வொரு நாளும் உணவு வழங்கத் தயார் நிலையிலும் இல்லை. அனைத்து கோயில்களும் தானாக முன்வந்த அக்கறையுள்ளவர்களால், தன்னார்வ அடிப்படையில் நடத்தப்படுகின்றன. அதனால், அடிப்படையாக இருக்கும் வழக்கமான விவகாரங்களைத் தவிர மற்ற வசதிகளையோ நடவடிக்கைகளையோ நடத்துவது பற்றி அவர்கள் சிந்திக்க முடியாத நிலையில் இருக்கின்றனர்.

இதன் காரணமாக கோயிலை வேறு இடத்திற்கு மாற்ற விரும்பும் நிர்வாகக் குழுவும், நிலத்தை வாங்குவதற்கும் அதற்கு உரிய பிரீமியம் கட்டணத்தைச் செலுத்துவதற்கும், கோயிலைச் சொந்தமாகக் கட்டுவதற்கும் நிதி பிரச்சினையைத் தொடர்ந்து எதிர் கொள்கின்றன. மற்றத் தரப்புகளின், குறிப்பாக அரசாங்கத்தின், உதவியின்றி, அவர்கள் தங்கள் இலக்குகளை அடைய முடியாது என்பதையே இது காட்டுகிறது.

தற்போது நடைபெற்று வரும் நடவடிக்கைகளில் கோயில் நிர்வாகக் குழுக்கள் திருப்தி அடையும் வரை, கோயிலை ஒரு பரந்த இந்துக் கலாச்சார மையமாக மாற்றுவதற்கான திட்டங்கள் எதுவும் இருக்க வாய்ப்பில்லை. மேலும், அவை ஏற்கனவே அனைத்துலக அளவில், குறிப்பாக மற்ற மேலை நாடுகளில் குடியேறியுள்ள இந்துக்கள் உருவாக்கியுள்ள இந்துக் கோயில்களில் நடைமுறையில் உள்ள புதிய கருத்துகளை ஏற்றுக் கொள்ளும் திறந்த மனப்பான்மை இல்லாமல் இருக்கின்றன. இது போன்ற நிலைமை இருக்கும் வரை, எந்தவொரு நிதி வலுப்படுத்தும் நடவடிக்கைகளுமின்றி இங்குள்ள இந்துக் கோயில்கள் இந்த நிலையிலேயே தொடரும் வாய்ப்பு அதிகம்.

இந்தக் கோயில்கள் பழைய முறையிலேயே நிர்வகிக்கப்படும் வரை, எல்லா வசதிகளும் கொண்ட, பக்தர்களுக்குப் பயன் தரும் பல நிகழ்வுகளின் வழி சேவைகளைச் செய்யும் ஓர் இணையில்லாத அற்புதமான இந்துக் கோயிலை, இன்றைய நிலையில், மலாக்கா மாநிலம் காண வாய்ப்பில்லை என்பது தெளிவு.

நான்காம் பரிமாணம்

# கோயிலில் கூடுதல் நடவடிக்கைகள்

பூஜைகள், அர்ச்சனைகள், உபயங்கள், திருவிழாக்கள், கும்பாபிஷேகங்கள் போன்ற சமய சம்பந்தமான சம்பிரதாயச் சடங்குகளைத் தாண்டி, இந்துச் சமயத்தினரின் மேம்பாட்டிற்காக மலாக்கா மாநில இந்துக் கோயில்களில் இந்துச் சமயக் கல்வி, பொதுக் கல்வி, மொழி, பண்பாடு, சமூக நலம் போன்றவற்றை மையமாக வைத்து நடத்தப்படும் தொடர் நடவடிக்கைகள் கோயில்களின் பங்கை நிறைவுறச்செய்வதோடு இந்து ஆர்வலர்கள் கோயில்களைத் தொடர்ந்து பயன்படுத்தத் தூண்டும்.

## வட்டார இந்துக்களின் வாழ்க்கை மையமாகக் கோயில்

இந்துக் கோயில்கள், வட்டார இந்துக்களின் வாழ்க்கையில் ஒரு மையமாக இருந்தால், வழிபடும் ஸ்தலங்களாக மட்டுமல்லாமல், தங்களை வளப்படுத்திக்கொள்ளவும், தூய்மைப் படுத்திக்கொள்ளவும், மகிழ்ச்சிப் படுத்திக்கொள்ளவும், அக அழகை ரசிக்கவும், சக பக்தர்களுடன் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ளவும் பயன்படும். கோயில்கள், சிற்பக் கலை, ஓவியக் கலை, இசைக் கலை, நாட்டியக் கலை போன்ற கலைகளில் சிறந்த கலைஞர்களின் காப்பகமாகவும், ஏழை எளியோரின் இன்னல்களைப் போக்கும் இருப்பிடமாகவும் திகழ முடியும். அதனைப் பின்பற்றும் பக்தர்களுக்கு இது ஒரு முழுமையான கல்வி மையமாக இருக்க வேண்டும்; கோயில்களின் வழி பக்தர்கள் மோட்சத்தை அடைய இயலும் என்பதே சித்தாந்தம்.

ஆளும் மன்னர்களின் அனுமதியுடனும் ஆதரவுடனும் இந்துக் கோயில்கள் அதனைப் பின்பற்றுபவர்களுக்குக் கல்வி, சமூக நலன் மற்றும், அவற்றின் வளர்ச்சியின் மையமாக எப்படி இருந்தன என்பதை இந்துச் சமயத்தின் வளர்ச்சியின் வரலாறு காட்டுகிறது. அரசுகள் மாறி, இந்துக்கள் அல்லாத மன்னர்களால் ஆளப்பட்ட போதும், சில சமயங்களில் புதிய அரசுகள் இந்துக் கோயில்களின் கட்டமைப்பை அழிக்க நடவடிக்கை எடுத்திருந்தாலும், குறிப்பாகப் பிற சமயங்களின் விரிவாக்கம் மற்றும், பரவலைக் காலனித்துவவாதிகளால் விரும்பப்பட்ட போதும், இந்த வகை கோயில்கள் தொடர்ந்து நிலைத்திருந்ததோடு தங்களைப் பின்பற்றுபவர்களுக்குத் தேவையான சேவைகளை வழங்கி வந்துள்ளன. இது போன்ற சவால்களை இந்துக்கள் உண்மையில் இன்று வரை தொடர்ச்சியாக எதிர்கொண்டு வந்துள்ளனர் - வருகின்றனர். இந்த வரலாறு இந்துக்களுக்குப் பல்வேறு தடைகளை மீறித் தங்கள் சமய அமைப்புகளைத் தொடர்ந்து பராமரிப்பதற்கான உத்திகளை வகுக்க வழிகாட்டியாக இருக்க வேண்டும்.

## மலாக்கா / மலேசியாவிற்குப் புலம்பெயர்ந்த இந்துச் சமூகத்தினர்

பத்தொன்பதாம் மற்றும், இருபதாம் நூற்றாண்டுகளில் மலாக்காவிற்கு வருகை தந்த இந்துச் சமூகம் மலாயாவிற்குத் தங்களின் வாழ்வாதாரத்தைத் தேடி இங்கு குடிபெயர்ந்தபோது, ரப்பர் தோட்டங்களில் அல்லது அரசுத் துறைகளில் தொழிலாளர் குடியிருப்புப் பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். மேலும், இந்த நாட்டில் வாழ்ந்து வந்த பெரும்பாலான மக்கள் இந்துச் சமயத்தைப் பின்பற்றுபர்கள் அல்லர். இந்தச் சூழ்நிலையில், இவர்கள் தங்கள் பூர்வீக நிலத்திலிருந்து வழிபாடு செய்யும் முறைகளையும் கொண்டு வந்தனர். மேலும், தமிழ்நாடு அல்லது தென்னிந்தியாவின் பிற பகுதிகளில் உள்ள கோயில்களைப் போன்று இங்கும் அமைத்தனர்.

தமிழ்நாட்டில் கூட, ஒரு சில பெரிய கோயில்கள் மட்டுமே வலுவான நிர்வாகத்தைக் கொண்டுள்ளதோடு உண்மையான இந்து வேதங்கள் வரையறுத்துள்ள பல்வேறு திட்டங்களையும் சேவைகளையும் வழங்கி வருகின்றன. வழிபாடு செய்வதற்கும், முடிந்தவரை திருவிழா மற்றும், கும்பாபிஷேகம் ஆகியவற்றை நடத்தும் கோயில்களாகத் தமிழ்நாட்டின் கிராமப்புறங்களில் உள்ள கோயில்கள் உள்ளன. சில நேரங்களில் வெவ்வேறு தெய்வங்களை வழிபடும் பல கோயில்களும் ஒரே கிராமத்தில் உள்ளன.

தோட்ட மேம்பாட்டாளர்களுக்காக நிலத்தைப் பண்படுத்தவும், மற்றும், சாலைகள் அல்லது ரயில்வே தண்டவாளங்களைக் கட்டுவதற்கு முன்பு காடுகள், மலைகள், மேடுகள், நெல் வயல்கள், ஆறுகள் மற்றும், பலவற்றை ஒழுங்குப்படுத்துவதற்குக் கடுமையாக உழைக்க வேண்டிய நிலையில் இருந்த தொழிலாளர்களால் காக்கும் தெய்வங்களுக்கான அதிகமான கோயில்களைக் கட்டும் நடைமுறை மலாக்காவிற்குக் கொண்டுவரப்பட்டது.

## மலாக்காவில் உள்ள கோயில்களின் வகை மற்றும் அதன் நடவடிக்கைகள்

இந்தக் கோயில்களில் பெரும்பாலானவை குலதெய்வ வழிபாட்டு வகைக்குள் வருவதில் ஆச்சரியமில்லை. சிவன், விநாயகர், சுப்பிரமணியர் மற்றும் கிருஷ்ணா போன்ற முதன்மை தெய்வங்களின் பெயரில் உள்ள கோயில்கள் பெரும்பாலானவை நகர்ப்புறங்களிலும், மற்றும், வணிகர்கள், உயர் அதிகாரிகள் மற்றும், இந்தப் பகுதிகளில் வசிக்கும் மருத்துவர், வக்கீல் போன்றத் தொழில்முறை குழுக்கள் சம்பந்தப்பட்டவர்கள் அதிகமாக வசிக்கும் பெரிய நகரங்களிலும் அதிகமாக நிறுவப்பட்டுள்ளதைக் காணலாம். இந்த இரண்டு இடங்களிலும் ஶ்ரீமகா மாரியம்மன் என்ற பெயரில் பல கோயில்களும் காணப்படுகின்றன.

எல்லா குலதெய்வமும் மறைமுகமாக வாழ்க்கையின் சில அம்சங்களுக்காக அர்ப்பணிக்கப்பட்ட முக்கிய தெய்வங்களின் அவதாரங்கள் என்பதால், பக்தர்கள் இந்த அவதாரங்களைச் சொந்த நலன், தம் குடும்பம் மற்றும், அவரது சமூகத்தின் நலனுக்காகவும், பாதுகாப்பிற்காகவும் வணங்குகிறார்கள். மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்கள் இதை உண்மையில் பிரதிபலிக்கின்றன.

ஆரம்பம் முதலே, மலாக்காவில் உள்ள கோயில்கள் பூஜைகள் செய்வதற்கும், சமயச் சடங்குகளுடன், இந்து நாட்காட்டியில் உள்ள பல்வேறு பண்டிகை நிகழ்வுகளைக் கொண்டாடுவதற்கும், கும்பாபிஷேகம் மற்றும், திருவிழாவைத் தவறாமல் நடத்துவதற்கும், சமூகத்தில் பாரம்பரிய நடைமுறைகளின்படி திருமண நிகழ்வுகளை நடத்துவதற்கும், கோயிலின் பூஜை நிகழ்வில் கலந்துகொள்ளும் பக்தர்களுக்குச் சமய உரைகள் அல்லது சமயம் சார்ந்த இதர நிகழ்ச்சிகளை நடத்துவதற்கும் மட்டுமே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன. பக்தர்களின் எண்ணிக்கை பெரிதாக இல்லாவிட்டாலோ, கோயிலின் நிர்வாகம் அந்தப் பகுதியில் உள்ள அனைத்து பக்தர்களின் ஆர்வத்தையும் ஈர்க்க முடியாவிட்டாலோ இது போன்ற நடவடிக்கைகளைக் கூட பல கோயில்களில் முறையாக நடத்தப்படுவதில்லை.

## நவீன மலேசியாவில் இந்துக் கோயில்கள் கல்வி மையமாக இயங்கவேண்டும் எனும் புதிய சிந்தனை

இருப்பினும், நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, ஒரு சில இந்துக்கள் இந்த நாட்டில் / மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் தோற்றத்தை மாற்றுவதன் முக்கியத்துவத்தை ஓரளவு உணரத் தொடங்கியுள்ளனர். இதனால், கல்வி, கலாச்சாரம், சமய விழிப்புணர்வு, சமய வளர்ச்சி மற்றும், சமூக நலன் போன்ற கூடுதல் திட்டங்கள் மற்றும், நடவடிக்கைகள் தங்கள் சக்திக்கேற்ற முறையில் அவ்வப்போது ஏற்பாடு செய்யப்படுகின்றன. இதனால், குறிப்பாக இந்நாட்டில் வாழும் இந்துச் சமூகம் நேர்மறையான நன்னெறிகளைக் கடைப்பிடிக்கும் ஒரு சமூகமாக மாற வழி பிறக்கும். இந்த நாட்டில் அதிகமான இந்து இளைஞர்கள் தேவையற்ற செயல்களில் ஈடுபடுவது இந்துச் சமூகத்தின் தலைவர்களிடையே கவலையளிப்பதாக உள்ள இச்சமயத்தில் இத்தகைய பங்கைக் கோயில்கள் ஆற்றுவது முக்கியமாகிறது.

எனவே, மலேசிய இந்து சங்கம், மலேசிய இந்துதர்ம மாமன்றம் மற்றும், பிற இந்துச் சமயத்தைச் சார்ந்த அமைப்புகளும் வழக்கமான வழிபாடு தொடர்பானவற்றுடன் கோயில்களுக்குக் கூடுதல் நடவடிக்கைகளை ஏற்பாடு செய்யப் பரிந்துரைப்பதோடு, அதற்கு உதவவும் தயாராக உள்ளன. சமய வகுப்புகள், உரைகள், கருத்தரங்குகள், கலந்துரையாடல்கள், விவாத மன்றங்கள், சமய முகாம்கள் போன்றவை பரிந்துரைக்கப்படுவதோடு அவற்றை நடைமுறைப்படுத்தவும் ஊக்குவிக்கப்படுகின்றன. துரதிர்ஷ்டவசமாக, அனைத்துக் கோயில்களும் பல்வேறு காரணங்களால் இந்தப் பரிந்துரைகளை ஏற்க அவ்வளவு ஆர்வம் காட்டுவதில்லை. எனவே, தற்போது மலாக்கா மாநிலத்தில் கூடுதல் நிகழ்வுகளை ஏற்பாடு செய்யும் இந்துக் கோயில்கள் இன்னும் குறைவாகவே உள்ளன.

# மலாக்கா கோயில்களில் கூடுதல் நிகழ்வுகள்

## சமயக்கல்வி

இந்த ஆய்வில், மலாக்கா மாநிலத்தில் இயங்கிவரும் கோயில்களில், இந்துச் சமயக் கல்வியைப் புகட்டும் நடவடிக்கை அதிகம் இல்லை என்பதைக் காண முடிந்தது. 29 கோயில்களில் மட்டுமே தேவாரம், பஜன், திருமுறை போன்ற வகுப்புகள் சிறுவர்களுக்காகத் தொடர்ந்து நடத்தப்படுகின்றன. ஏழு கோயில்களில் நாட்டிய வகுப்புகளும், ஐந்து கோயில்களில் சிலம்பம் அல்லது யோகா வகுப்புகளும், நான்கு கோயில்களில் பள்ளி மாணவர்களுக்கான வழிகாட்டி வகுப்புகளும் இந்த ஆய்வு நடந்த சமயத்தில் நடைபெற்றன.

சமயச் சொற்பொழிவுகள் 28 கோயில்களில் நடைபெற்ற பொழுதும், தொடர்ச்சியாக ஆறு கோயில்களில் மட்டுமே நடத்தப்பட்டன. 24 கோயில்கள் சமய/மொழி/பண்பாட்டுப் போட்டிகளில் கலந்துள்ளன. நாடு-பொது அறிவுப் போட்டிகள் நான்கு கோயில்களில் நடைபெற்ற வேளையில், பத்து கோயில்களில், பள்ளி மாணவர்கள் தங்கள் கல்வித் தேர்வில் வெற்றிபெற கூட்டுப் பிரார்த்தனைகள் நடைபெற்றுள்ளன. இது போன்ற பெரும்பாலான நடவடிக்கைகள் சில சமயங்களில் மட்டுமே ஏற்பாடு செய்யப்படுகின்றன. சைல்டு அமைப்பு மூலம் இரண்டு கோயில்களில் பாலர் வகுப்புகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. சம்பந்தப்பட்ட கோயில்கள் இட வசதிகளை மட்டும் வழங்கியுள்ளன.

முழுமையாகப் பார்த்தால், குறுகிய கால சமயக் கல்வி நிகழ்வுகளையே இந்தக் கோயில்கள் ஏற்பாடு செய்கின்றன என்பது தெளிவாகிறது. மேலும், இது போன்ற நிகழ்வுகளில் பங்கேற்பவர்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவாக இருப்பதில் ஆச்சரியமில்லை. இத்தகைய கல்வி சார்ந்த நிகழ்வுகளில் இந்துச் சமய பக்தர்களையும், இளைஞர்களையும், பிள்ளைகளையும் தொடர்ந்து ஈடுபட ஆர்வத்தையும் ஊக்கத்தையும் ஊட்டும் முயற்சிகள் மிகக் குறைவாகவே உள்ளன.

## சமூக நலன்

சமூக நலனைப் பொறுத்தமட்டில், 12 கோயில்கள் அடையாளம் கண்ட வறிய குடும்பங்களுக்குத் தொடர்ந்து உதவி புரிவதாகத் தெரிவித்தன. திருவிழாக் காலங்களில் உணவுப் பொட்டலங்களை 35 கோயில்கள் வறியக் குடும்பங்களுக்குக் கொடுத்த வேளையில், திருவிழா சமயங்களில் எஞ்சியுள்ள உணவை, முதியோர், அநாதை இல்லங்களுக்கு 25 கோயில்கள் கொடுத்துள்ளன. 27 கோயில்கள் முதியோர்/அநாதை இல்லங்களில் வாழும் அன்பர்களைக் கோயில் திருவிழாவிற்கு அழைத்து அன்னமிட்டுள்ளனர். 17 கோயில்கள் தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கான சீருடை, காலணி போன்றவற்றையும், பண உதவியையும் செய்த வேளை, ஒரு கோயில் இடைநிலைப்பள்ளி மாணவர்களுக்கு உதவி செய்துள்ளது. ஐந்து கோயில்கள், அவ்வட்டாரங்களிலிருந்து பல்கலைக்கழகம் சென்ற மாணவர்களுக்குப் பொருளுதவி செய்துள்ளன.

ஒரு கோயில், மறைந்த அதன் உறுப்பினர் குடும்பத்திற்கு உதவி புரிந்த வேளை, உறுப்பினரின் மருத்துவச் செலவிற்கு ஒரு கோயில் உதவி செய்துள்ளது. நான்கு கோயில்கள், வெளி மாநிலங்களிலிருந்து மலாக்கா மாநிலச் சுற்றுப் பயணம் வந்த பள்ளி மாணவர்களுக்கு, காலை-மதிய உணவு அளித்து உதவியுள்ளன. மூன்று கோயில்கள் மற்ற அமைப்புகளின் நடவடிக்கைகளுக்குப் பொருளுதவி செய்துள்ளன.

இந்துக் கோயில்களால் சமுதாயத்தில் பலவீனமானவர்களையும் துன்பப்படுபவர்களையும் பாதுகாக்க எந்த நீண்டகாலத் திட்டங்களையும் வகுத்து, இவ்வாய்விற்கு அடிப்படையாக விளங்கும் கோயில்களால் தற்போதுள்ள நிலையில் ஒரு முழுமையான பங்கினை ஆற்ற முடியாது என்பது தெளிவாகிறது. கோயிலில் நிகழும் பெரும்பாலான துணை நிகழ்வுகள் சில கால கட்டங்களில் மட்டுமே நிகழ்கின்றன. மற்றும், அனைத்து குடும்பங்களையும் அல்லது உள்ளூர் சமூகத்தையும் ஈடுபடுத்தாமல், வரையறுக்கப்பட்ட ஒரு சில தரப்பினரை மட்டும் இலக்காகக் கொண்டவையாகவே காணப்படுகின்றன. இதற்கான மூலக் காரணம் மலாக்காவில் கோயில்கள் தோன்றிய வரலாற்றிலேயே அடங்கியுள்ளது. வேறு எந்தத் தூர நோக்குப்பார்வையும் இல்லாமல் பக்தர்களுக்கு வழிபாட்டுத் தலமாக மட்டுமே இவை தொடங்கப் பட்டன என்பதையும் அந்த அடிப்படை தேவைக்கான வசதிகளை மட்டுமே அவை முக்கியமாகக் கருதின என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். அந்த வட்டத்திலிருந்து இந்தக் கோயில்கள் இன்றுவரை வெளிவரவில்லை என்பது தெளிவு.

## விளையாட்டு / கோத்தோங் ரோயோங்

ஒரு கோயில் மட்டும் இளைஞர்களுக்கான திறந்த கால்பந்து போட்டியை ஆண்டுதோறும் நடத்திவருகிறது. ஒன்பது கோயில்களில், சுய உதவி திட்டத்தில் கோயில்-அதன் சுற்றுப்புறப் பகுதிகளைச் சுத்தம் செய்யும் பணியில் உறுப்பினர்கள் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர்.

இந்து இளைஞர்களின் நலனுக்காக அவர்களுக்குத் தேவையான சிறப்புத் திட்டங்கள்மூலம் வழிகாட்டுதல் தேவைப்படுகின்றது என்பதை இன்னும் இந்த இந்துக் கோயில்கள் கருத்தில் கொள்ளவில்லை. இந்தப் பொறுப்பைச் செயல்படுத்திட இளைஞர் சங்கங்கள் உட்பட அரசு சாரா அமைப்புகள் ஏற்கனவே உள்ளன என்ற அனுமானம் உள்ளது. இருப்பினும், உள்ளூர் இளைஞர் அமைப்புகளுடன் சேர்ந்து இளைஞர்களின் தனிப்பட்ட பண்புநலன்களை மேம்படுத்துவதில் கோயிலின் ஈடுபாடு இன்னும் இல்லை என்பதையும் அறியலாம்.

## கோயில் நிர்வாக உறுப்பினர்களிடையே சமயக்கல்வி

கோயில் செயற்குழுவினரின் சமய-நிர்வாகக் கல்வி மேம்பாட்டுக்காக 14 கோயில்கள் சில உறுப்பினர்களைச் சமய சொற்பொழிவுகளுக்கும், சமயக் கல்வி பயிற்சிக்கும், மலேசிய அளவில் அனுப்பியுள்ளன. ஒரு கோயிலின் பிரதிநிதி அனைத்துலக ரீதியில் பயிற்சிக்குச் சென்றுள்ளார். ஒரு கோயில், குருக்களுக்கான பயிற்சியை ஏற்பாடு செய்துள்ளது.

மலேசிய இந்துதர்ம மாமன்றம் 2020-ஆம் ஆண்டு செப்டம்பரில் மலாக்கா மாநிலத்தில் எதிர்கால இந்துச் சமய ஆசிரியர்களுக்கான பாடத்திட்டப் பயிற்சி வகுப்பு ஒன்றை உள்ளூர் விடுதியில் 3 நாட்கள், தங்குமிடம் மற்றும், உணவு உட்பட வசதிகளை இலவசமாக ஏற்பாடு செய்தபோது, எல்லா கோயில்களுக்கும் தெரிவிக்கப்பட்ட போதும், நான்கு கோயில்கள் மட்டுமே பங்கேற்பாளர்களை அனுப்பத் தயாராக இருந்தன. பெரும்பாலோர் சுயமாகவே நிபுணத்துவ அடிப்படையிலான இந்துச் சமய அறிவைப் பரப்புவதற்கு எவ்வித முயற்சியும் மேற்கொள்ளாமல், பள்ளி ஆசிரியர்கள் மற்றும், மலேசிய இந்து சங்கம் மற்றும், மலேசிய இந்துதர்ம மாமன்ற உறுப்பினர்கள் போன்றோரின் பங்களிப்பைத் தொடர்ந்து எதிர்பார்க்கின்றனர்.

வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தபோதும் மிகச் சிறிய எண்ணிக்கையிலேயே ஈடுபாடு காட்டியது, கோயில் நிர்வாகங்கள் அவற்றின் நிர்வாக உறுப்பினர்கள் இந்துச் சமய விவகாரங்களில் தேர்ச்சிபெற்று சேவையாற்றவேண்டும் எனும் எண்ணமின்றி, தேவைப்பட்டால் மற்ற அமைப்புகள் சமய போதனைகளைச் செய்யட்டும் எனும் பழைய எதிர்பார்ப்பை உறுதிப்படுத்துவதாகவே அமைந்துள்ளது. சமய விவகாரங்களில் அறிவு மற்றும், திறன்களை தங்கள் கோயில் நிர்வாகத்தினர் மத்தியில் மேம்படுத்துவதற்கான விழிப்புணர்வு இன்னும் குறிப்பிடத்தக்கதாக இல்லை என்பதும் தெளிவு.

## இந்து சங்கம் மற்றும் இந்துதர்ம மாமன்றம் உறுப்பினர்களின் ஈடுபாடு

இந்து சங்கம் மற்றும் இந்துதர்ம மாமன்றம் போன்ற அமைப்புகளின் வழி சொற்பொழிவு, சமய வகுப்புகள் போன்றவை கோயில்களில் நடைபெற்று வருகின்றன. எனினும், வகுப்புகள் தொடர்ச்சியாக நடைபெறுவதில் மாணவர்களின் வருகைக் குறைவால் சிக்கல்கள் தொடர்கின்றன. பெரும்பாலான வகுப்புகளில் பத்திற்கும் குறைவான மாணவர்களே இருக்கின்றனர்.

இதன் காரணத்தால் இந்தச் சமய ஆசிரியர்கள், தமிழ்ப் பள்ளிக் கூடங்களிலும், சில இடைநிலைப் பள்ளிகளிலும் அனுமதி பெற்று வகுப்புகளை அங்கேயே நடத்துவது உசிதம் என எண்ணி செயல்படுகின்றனர். ஆனால், இந்த வியூகம் ஒரு பள்ளியின் அனைத்து மாணவர்களையும் கலந்துகொள்வதைத் தீர்மானிக்க இயலாது; காரணம், சம்பந்தப்பட்ட பள்ளி இதைக் கட்டாயமாக்க முடியாது. மேலும், இந்த நடவடிக்கை அனைத்து பள்ளிகளையும் உள்ளடக்கியதும் அல்ல - ஏனெனில், இது பள்ளியின் தலைமை ஆசிரியர், கல்வி இலாகாவின் அனுமதியைப் பொறுத்துள்ளது. உள்ளூர் இந்துக் குழந்தைகளுக்குச் சமயக் கல்வியை உறுதி செய்ய வேண்டிய பொறுப்பு அவ்வட்டாரத்தின் சமூக அமைப்பான கோயிலுக்குதான் முக்கியமானதாக உள்ளது எனும் விழிப்புணர்வு கோயில் நிர்வாகம் மற்றும், உள்ளூர் இந்துக்கள் மத்தியில் இன்னும் உருவாகவில்லை என்பதும் தெளிவு.

## தகுதியுடைய பயிற்சிப் பெற்ற பேச்சாளர்கள் அல்லது ஒருங்கிணைப்பாளர்கள் குறைவு

வகுப்புகளை நடத்தும் சமய ஆசிரியர்களும், சமய உரைகளை ஆற்றக்கூடிய சமயப் பேச்சாளர்களும் இந்த மாநிலத்தில் மிகக் குறைவு என்பதையும் இந்த ஆய்வின் பொழுது பல கோயில் நிர்வாகிகள் சுட்டிக்காட்டினர். இத்தகைய ஆசிரியர்களுக்கும் பேச்சாளர்களுக்கும் போக்குவரத்து செலவைப் பேச்சாளர்களே, அவர்கள் சார்ந்த அமைப்புகளே ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையும் உள்ளது. குறிப்பாக இந்துச் சங்க உறுப்பினர்கள் இத்தகைய சேவையை தன்னார்வ ரீதியில் கொடுப்பதால், இவற்றோடு சேர்த்து போட்டிகளையும் அவர்களே செய்ய வேண்டும் என கோயில்கள் எதிர்பார்த்து செயல்படுவதையும் காண முடிகிறது. கோயில் உறுப்பினர்களை, இத்தகைய நடவடிக்கைகளைச் செய்ய முறையான பயிற்சியைக் கொடுத்துத் தயார் செய்யவோ, வாய்ப்புகளைக் கொடுத்து முடுக்கிவிடவோ முயற்சிகளைக் காணோம். இத்தகைய போக்கு நீண்ட நாட்களாக தொடர்வதால், அதை மாற்றவேண்டும் எனும் எண்ணமும் எழவில்லை. இதனால், கோயிலை ஒரு நல்ல சமய கல்விக்கூடமாக மாற்றி, வட்டார இந்துக்களுக்கு மேலும், உன்னத சேவை வழங்கும் எண்ணம் மிகக் குறைவாக உள்ளது. தனிப்பட்டவர்கள் சில கோயில்களில் அவர்களால் இயன்ற சேவையைத் தன்னார்வ அடிப்படையில் அவர்களால் இயன்ற அளவில் செய்கிறார்கள் என்பது உண்மை. ஆனால், அத்தகையோர் இல்லாதபோது இத்தகைய சேவைகள் தொடர்வதில்லை.

## முழுமைப் பெறாத விழிப்புணர்வு

பொதுவாக, வெகு சில கோயில்களில் மட்டுமே சமயச் சடங்குகளுக்கப்பால் பக்தர்களுக்கும் அவர்களின் குடும்பத்திற்கும் பயன்படும் நிகழ்ச்சிகள் சிறிய அளவிலாகிலும் ஏற்பாடு செய்யப்படுகின்றன. பெரும்பாலான கோயில்கள், அவற்றை, ஆதரவு குறைவு எனும் காரணத்தைச் சொல்லியும், பணப் பற்றாக்குறையைச் சொல்லியும், தவிர்ப்பதையே காண முடிகிறது.

ஆதரவு குறைவு என்பது, வட்டாரத்தில் வாழும் இந்துக் குடும்பங்கள், அந்தக் கோயிலைத் தங்கள் சொந்தக் கோயில் என எண்ணும் நிலை ஏற்பட்டு, குடும்ப உறுப்பினர்கள் கோயிலுக்குத் தொடர்ந்து வருகை தருகிறார்களா என்பதைப் பொறுத்துள்ளது. குறிப்பிட்ட சாராருக்காகக் கோயில் செயல்படுமானால் வட்டாரத்திலுள்ள மற்ற இந்துக் குடும்பங்களின் ஆதரவை இழந்து, ஒற்றுமைச் சூழல் ஏற்படாமல், நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டாலும், ஆதரவு குன்றியே கிடைக்கும். ஒரு கோயிலை உண்மையிலேயே நேசிக்கும் மற்றும், தங்கள் நேரத்தையும் சக்தியையும் கோயிலுக்காகச் செலவழிக்கத் தயாராக இருக்கும் பக்தர்களின் எண்ணிக்கை, இன்றையக் காலத்தில் சற்று குறைவாகவே உள்ளது. பெரும்பாலான கோயில்களில், கோயில் நடவடிக்கைகளில் தொடர்ந்து கலந்துகொள்ளும் பொருட்டு, விருப்பத்தைத் தூண்டும் அனைத்து உறுப்பினர்களையும் மற்றும், அவர்களது குடும்பத்தினரையும் உள்ளடக்கிய நிகழ்வுகள் இன்னும் பெரும்பாலும் காணப்படவில்லை. இதைச் சரிசெய்ய முடியாவிட்டால், கோயிலில் நிகழ்ச்சிகளுக்கான ஆதரவும் அங்கு வருகை தரும் பக்தர்களின் எண்ணிக்கையும் ஒரு கேள்விக்குறியாகவே தொடரும்.

காலப்போக்கில், மாநிலத்திலுள்ள ஏறக்குறைய எல்லா இந்துப் பக்தர்களும் கோயில்களின் இப்போதுள்ள இத்தகைய செயல்பாடுகளை ஏற்றுக்கொண்டு, அவைதாம் நடைபெறும் என மன நிறைவு கொண்டுள்ளதைக் காணலாம். போதிய இந்துச் சமய அறிவு இல்லாத நிலையில், செழிப்பான நடவடிக்கைகளைக் கண்டிராததால், தங்களின் முந்தைய சந்ததியினர் செய்தவற்றை அப்படியே தொடர்ந்து செய்து வருவதை, ஒப்பீடு இன்றி, ஏற்றுக்கொள்ளப்படும் நிலை ஏற்பட்டுள்ளது. எனவே, கோயில்களை வழிபாட்டு மையங்களாக மட்டுமே மாநில இந்துக்கள் பார்க்கின்றனர் என்பதையும் இந்த ஆய்வு தெளிவாகக் காட்டுகிறது. அதனால், மற்ற நடவடிக்கைகள், போதிய நிதி இருந்தால், போதிய வழிகாட்டுபவர் தன்னார்வ ரீதியில் கிடைத்தால், நடத்தலாம் - ஆனால், நடத்தவேண்டும் எனும் கட்டாயம் எதுவும் கிடையாது எனும் எண்ணம் ஆழமாகப் பதிந்துள்ளது.

## திருவிழா மீதான மனப்பான்மை கல்வி நிகழ்வுகள் மீது திருப்பமுடியாமை

கூர்ந்து கவனித்தால், இத்தகைய தன்மை, திருவிழாச் சமயங்களில் சற்று மாறுபடுகிறது. திருவிழாச் சமயங்களில், வேறுபாடுகளை மறந்து விழாவைச் சிறப்பாக்க பலரும் முனைப்புடன் ஈடுபடுவதைக் காணலாம். திருவிழா என்றால் குதூகலம் என இந்துக்கள் மத்தியில் எண்ணம் ஆழமாக உள்ளது. எனவே, மற்ற

நடவடிக்கைகளுக்கும், கோயிலின் தலைமைத்துவம், வட்டார இந்துக்கள் மத்தியில் ஒற்றுமையை ஏற்படுத்துவதிலும், கோயில் மீதான ஈர்ப்பை ஏற்படுத்துவதிலும் முக்கியப் பங்கை வகிக்கலாம். வட்டார இந்துக்கள் ஒன்றுபட்டால், நன்மை பயக்கும் கோயில் நடவடிக்கைகளுக்கான பொருளுதவியைக் கொடுத்து, உறுப்பினர்கள் முழுமையாகப் பங்கெடுப்பதையும் காண முடியும். கோயில் நிர்வாகங்கள், கோயில்மீது சுற்றுவட்டார இந்துக்கள் பற்று வைத்து, கோயிலைத் தங்கள் சொந்தக் கோயிலாக நினைத்து, தாமாகவே தன்னார்வ ரீதியில் துணை நிற்கவும், நிதியுதவி கொடுக்கவும் உரிய சூழலை உருவாக்குவது அவசியம். இந்த விழிப்புணர்வை உருவாக்க, ஒவ்வொரு நிர்வாகமும் கோயிலில் நிலவும் எந்தவொரு மோதலையும் தவிர்க்கவும், மோதல்களைச் சமாளிக்கவும் திறன் பெற்றிருக்கவேண்டும்.

மேலும், வட்டார இந்துச் சமுதாயத்தை ஒற்றுமைப்படுத்தக் கோயில் நிர்வாகத்தினர் சமுதாயத்துடன் கீழிறங்கி கலந்துறவாடி கோயில் நடவடிக்கைகளின்வழி சமுதாயம் பொதுவாகப் பெறக்கூடிய நன்மைகளை நல்ல செயல்திட்டங்களின்வழி நிரூபிப்பதன் மூலம் செயல்படலாம். இந்தப் பணி எல்லா நேரத்திலும் தொடர்ச்சியாக நடைபெற, திட்டமிடல் தேவை. இருப்பினும், இப்போதுள்ள நிலையில் மலாக்காவில் உள்ள கோயில்களை நிர்வகிக்கும் பெரும்பாலான நிர்வாகத்தினர்களுக்கு இந்த வலிமையும் தூர நோக்குச் சிந்தனையும், பார்வையும் இல்லை என்பதை இந்த ஆய்வு காட்டுகிறது.

## அருகருகே உள்ள கோயில்களின் ஒத்துழைப்பு

சில இடங்களில், ஒரு கோயிலின் பக்கத்தில் மற்றக் கோயில்கள் இருக்கின்றன. இதனால் அந்தந்த வட்டார இந்துக்களின் ஆதரவு பகிரப்படுகிறது. இத்தகைய நிலையில், வட்டாரத்தில் இயங்கும் கோயில்கள் மத்தியில் ஒத்துழைப்பு ஏற்பட்டு, ஒருங்கிணைந்த நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து, எல்லா கோயில்களிலும் சில நிகழ்ச்சிகள் நடைபெறுமாறு செய்து, வட்டார இந்துக்கள் மத்தியில், அனைவரும் இந்துக்கள் எனும் ரீதியில் வேற்றுமை எழாத நிலையை உருவாக்கலாம். இத்தகைய அரவணைப்பு சிந்தனை இன்னும் உருவாகவில்லை என்பதும் இந்த ஆய்வில் தெளிவாகிறது.

## முடிவுரை

இந்த ஆய்வின் முடிவுகள், நகரத்திலும் சரி, கிராம/தோட்டப்புறங்களிலும் சரி, இங்கு இயங்கும் கோயில்களால், இந்துக்களில் எல்லா வயதினருக்கும், பெண்களுக்கும், மூத்த குடிமக்களுக்கும், மற்றும், குழந்தைகளுக்கும், அவர்களைக் கவரும் வகையில் சமயக் கல்வி கற்பதற்கான கூடுதல் திட்டங்களை ஏற்பாடு செய்ய முடியவில்லை என்பதையே காட்டுகிறது. கோயிலில் அடிப்படை வசதிகள் இல்லாதது, நிதிப்பற்றாக்குறை, உறுப்பினர்களிடையே திறமையானவர்கள் குறைவு, மலேசிய இந்து சங்கம், மலேசிய இந்துதர்ம மாமன்றம் மற்றும், இதே போன்ற அமைப்புகளில் மாநில அளவில் தன்னார்வத்துடன் செயல்படும் ஆற்றல் உடையோர் குறைவு, உள்ளூர் பக்தர்கள் மத்தியில் சமய விவகாரங்களில் திறமையான தன்னார்வலர்களின் பற்றாக்குறை, மற்றும், அருகிலுள்ள கோயில்களுக்கு இடையில் திட்டமிடுவதிலும் ஒத்துழைப்பதிலும் தீவிரம் இல்லாதது - மற்றும், இந்துச் சமய விவகாரங்களைப் பற்றிய பொதுவான அறியாமை - இவை அனைத்தும் இன்று நிலவும் சூழ்நிலைக்குப் பெரும் காரணிகளாக விளங்குகின்றன.

தேவையான கூடுதல் நிகழ்வுகள் சம்பந்தமான திட்டங்களைத் திட்டமிடுவதிலும், ஒழுங்கமைப்பதிலும், கோயிலை எப்போதும் சுறுசுறுப்பாக இயங்கும் நிலையில் வைத்திருக்கக்கூடிய, அனைத்துத் தரப்பினரையும் கவரும்படியான - குழந்தைகள், இளைஞர்கள், முதியோர், மகளிர், மற்றும், இந்துச் சமயம், மொழி, கலாச்சாரம், குடியியல், தொழில், நிதி மற்றும், பலவற்றை உள்ளடக்கிய நிகழ்வுத் திட்டங்களைத் தீட்டிச் செயல்படும், மற்றக் கோயில்களுக்கு எடுத்துக்காட்டாக எந்தவொரு கோயிலும் இல்லாதது ஒரு சவாலாகவே படுகிறது. அத்தகைய நோக்கம் பற்றிய எண்ணங்களும் இந்த ஆய்வின்போது காணப்படவில்லை.

ஆயர் குரோவில் உள்ள ஸ்ரீகிருஷ்ண பலராம் இந்திய பண்பாட்டு, கலை மையம் (MT 27) அதன் ஆறு பரிமாணங்களைக் கவனமாக அடையாளம் கண்டு அவற்றின் மூலம் பக்தர்களுக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் சேவை செய்வதற்கான ஒரு தூரநோக்கு பார்வையைக் கொண்டுள்ளது. வழிபடலும், சடங்குகளும், சிறிய அங்கங்களாகவே பார்க்கப்படுகின்றன. இது வட அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளில் குடிபெயர்ந்துள்ள இந்துக்களின் சமய நடவடிக்கைகளை முன் மாதிரியாகக் கொண்ட எண்ணங்களைப் பிரதிபலிக்கிறது. இருப்பினும், மலாக்காவில் அதன் திட்டமிடல் மற்றும், நடைமுறை இன்னும் ஆரம்பக் கட்டத்திலேயே உள்ளது. மற்ற கோயில் நிர்வாகங்கள் இந்த முன்மாதிரியை இதுவரை கவனிக்கவில்லை என்பதும் தெளிவாகத் தெரிகிறது.

ஐந்தாவது பரிமாணம்

# கோயிலைப் பற்றிய கருத்து, கோயில் மேம்பாட்டுத் திட்டங்கள் மற்றும் எதிர்நோக்கும் பிரச்சினைகள்

மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்கள் பல்வேறு பிரச்சினைகளை எதிர்கொள்கின்றன. இந்த அத்தியாயத்தில் இந்த ஆய்வு செய்யப்பட்ட நேரத்தில் வழங்கப்பட்ட பிரச்சினைகள்/சிக்கல்கள் மட்டுமே முன்வைக்கப்படுகின்றன.

## பிரச்சினைகள்

### நிதிச் சிக்கல்கள்

மொத்தம் 106 கோயில்களில், அதாவது, மத்திய மலாக்காவில் 29-உம், ஜாசின் மாவட்டத்தில் 33-உம், மற்றும், அலோர் காஜா மாவட்டத்தில் 44-உம், அவர்களுக்கு மிகப்பெரிய பிரச்சினையாக நிதி நிலைமை உள்ளதாக குறிப்பிட்டுள்ளனர். பல கோயில்கள் தங்கள் உறுப்பினர்களிடமிருந்து வருடாந்திர கட்டணங்களை வசூலிப்பதில்லை. அப்படி வசூலித்தாலும் கூட, மிகக் குறைந்த கட்டணமாகவே இருக்கின்றது. திருவிழா நன்கொடைகளும் அவரவர்களின் இயலும் நிலைக்கேற்ப வழங்கப்படுகின்றது. கிடைக்கக்கூடிய நிதிக்கு ஏற்ப மட்டுமே பெரும்பாலும் திருவிழா நிகழ்வுகள் நடத்தப்படுகின்றன. அறங்காப்பகம் அல்லது `டிரஸ்ட்' -இன் கீழ் உள்ள கோயில்களைத் தவிர, மற்றக் கோயில்களுக்கு, அவற்றின் நடவடிக்கைகளுக்கு நிதி திரட்ட / உருவாக்கச் சொத்துக்கள் இல்லை. திருவிழா, கும்பாபிஷேகம் அல்லது கட்டிடத்தின் சிறிய பழுதுபார்ப்புகளுக்கு மட்டுமே பணத்தைச் சேமிப்பதாக உள்ளது. மற்ற விஷயங்களுக்கு, இந்தக் கோயில்கள் அரசாங்கத்திடமிருந்து மான்யத்தையும் மற்றும், சிறப்பு நன்கொடையாளர்களிடமிருந்தும் நிதியுதவியையும் எதிர்பார்க்கின்றன. அவ்வாறு செய்ய முடியாத ஆலய நிர்வாகக் குழுக்கள், எந்தவொரு புதுப்பித்தலும் இல்லாமல் கோயிலில் வழக்கமான நடவடிக்கைகளை மட்டுமே தொடர அதிக ஆர்வத்துடன் உள்ளன. இது ஒரு பொதுவான நடைமுறையாக ஏற்றுக்கொள்ளப்படுவதால் உள்ளூர் இந்துக்களும் இதை ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. கோயில்களின் நிர்வாகம் பொதுவாகவே தன்னார்வ ரீதியில் நடைபெறுவதும் இதற்கு ஒரு காரணம்.

### இந்துப் பக்தர்கள் மற்றும் கோயில்கள் - விகிதம்

2010-ஆம் ஆண்டின் மக்கள் தொகை கணக்கெடுப்பின்படி, மலாக்கா மாநிலத்தின் மொத்த மக்கள் தொகையான 821,110 பேர்களில் 5.7% - அதாவது, 46,803 பேர் இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் ஆவர். இந்த எண்ணிக்கை 2020-ஆம் ஆண்டு 50,000-ஆக உயர்ந்துள்ளது என மதிப்பிட்டாலும், மலாக்கா மாநிலத்தில் ஒவ்வொரு 342 இந்துக்களுக்கு ஒரு கோயில் உள்ளது என்றாகிறது. ஒரு குடும்பத்தில், சராசரியாக 5 உறுப்பினர்கள் இருந்தால், 68-69 குடும்பங்களுக்கு ஒரு கோயில் உள்ளது.

இந்தக் குடும்பங்களில் பெரும்பாலானவை உயர் பொருளாதார நிலையில் உள்ளவை அல்ல. அத்துடன் போதுமான இந்துச் சமய அறிவு பெற்றிராததால் இந்தக் கோயில்களை நன்கு பராமரிக்கும் திறன் நிச்சயமாக இவர்களுக்குக் கிடையாது. மலாக்கா மாநிலத்தில் கோயில்களின் எண்ணிக்கை இந்துக்களின் எண்ணிக்கையுடன் ஒப்பிடுகையில் மிக அதிகமாக இருப்பதால், இந்த மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் அனைத்துத் தேவைகளையும் பூர்த்திச் செய்யக்கூடிய ஆற்றல் மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துகளிடம் நிச்சயமாக இல்லை - முயன்றாலும் இயலாது. அனைத்து 146 கோயில்களும் எல்லா நேரங்களிலும் நன்கு பராமரிக்கப்பட விரும்பினால் மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களின் எண்ணிக்கை உண்மையில் ஒரு தடையாக இருப்பதோடு, இந்த மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் அனைத்து தேவைகளையும் பூர்த்தி செய்ய மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக்களால் நிச்சயமாக முடியாது. மேலும், ஒவ்வொரு கோயிலுக்கும் பக்தர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு என்பதால் கோயில்களின் நடவடிக்கைகளில் ஏற்படும் செலவுகளை மலாக்காவில் வாழும் இந்துக்களால் ஏற்க இயலாத நிலை தொடர்ந்து நீடிக்கும்.

## அரசாங்கத்தின் பங்களிப்பு

குறிப்பாக, பாக்காத்தான் ஹராப்பன் கூட்டணி நாட்டின்/மாநிலத்தின் தலைமையை ஏற்றுக்கொண்ட பிறகு இந்துக் கோயில்களுக்கு அரசாங்கத்தின் பங்களிப்பு குறைந்து வருவதாக 11 கோயில்கள் நம்பின; 9 கோயில்கள் கோயில் பராமரிப்பு செலவுகளை ஈடுகட்ட சிரமத்தை எதிர்நோக்குவதாகக் கூறின; 7 கோயில்கள் மின்சாரம் மற்றும், நீர் கட்டணங்களைச் செலுத்துவதில் சிரமத்தை எதிர்நோக்கின; மேலும், 7 கோயில்களில் குருக்களுக்கு ஊதியம் வழங்குவதில் சிரமம் உள்ளதாக ஒப்புக்கொண்டன. இந்த விஷயங்கள் குறித்து ஆய்வின் போது, பதிலளித்தவர்களால் தொட்டுப் பேசப்பட்டன. பதிலளித்தவர்களில் பலர் அவர்களின் கோயிலில் உள்ள பிரச்சினைகள் அல்லது மேம்பாட்டுத் திட்டங்களைப் பட்டியலிட முடியவில்லை. இதற்குக் காரணம் கோயிலில் வழக்கமான நிகழ்வுகளை மட்டுமே செய்து வருபவர்களுக்கு இவற்றைப் பற்றி எண்ணங்கள் வராத நிலையைக் காண முடிந்தது. எல்லாவற்றிற்கும் அரசின் மான்யத்தை எதிர்பார்க்கும் தன்மையையும் காண முடிந்தது.

## நிலம்

73 கோயில்கள் அதன் நில உரிமையாளர்களிடமிருந்து கோயிலுக்கான நிலம் பெறுவதற்கான சிரமம் ஒரு பெரிய தடையாக இருப்பதை குறிக்கின்றன. பெரும்பாலான நில உரிமையாளர்கள் நீண்ட காலமாக அமைந்துள்ள கோயில்களின் நிலத்தை விட்டுக் கொடுக்க மறுக்கின்றனர். மேலும், சிலர் சம்பந்தப்பட்ட கோயில் நிர்வாகங்களுக்கு எந்த இழப்பீடுமின்றி கோயிலை வேறு இடங்களுக்கு மாற்றுமாறு கேட்டுக் கொண்டுள்ளனர்.

## தோட்ட உரிமையாளர்களின் உத்தி

பல தோட்ட முதலாளிகள் தங்கள் தோட்டங்களில் கோயில்களைப் பயன்படுத்தும் இந்துக்கள் மீதான தங்கள் பொறுப்பைத் தவிர்ப்பதற்காகத் தங்கள் தோட்டங்களில் அல்லது நிறுவனங்களில் இந்துத் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கான உத்திகளைப் பயன்படுத்தி வந்துள்ளது தெளிவாகத் தெரிகிறது. இந்த வியூகத்தில் யாரும் இல்லாத அல்லது குறைந்த பட்ச இந்துக்களே அவர்களுடைய ஊழியர்களாக இருக்கும் நிலை உருவாகும்போது, சம்பந்தப்பட்ட முதலாளிமார்கள் தங்களது நிலத்தில் உள்ள இந்துக் கோயில் இனி தேவையற்றதாகக் கருதி அப்புறப்படுத்தவும் இயலும் எனும் யுக்தி உள்ளது. கிட்டத்தட்ட இந்துக்கள் யாரும் வேலை செய்யாததால், தோட்டத்தில் உள்ள சில கோயில்கள் இப்போது இந்தப் பிரச்சினையை எதிர்நோக்கி இருக்கின்றன. மேலும், சில முதலாளிகள் தங்கள் அனுமதியின்றி தங்கள் தோட்டத்தில் அமைந்துள்ள கோயிலுக்குள் வெளியார் யாரையும் நுழைய அனுமதிப்பதில்லை.

ஏனெனில், 1970 மற்றும், 1980-ஆம் ஆண்டுகளில் இந்தத் தோட்ட ஆங்கிலேய உரிமையாளர்கள் உள்ளூர் உரிமையாளர்களுக்குத் தங்கள் தோட்டங்களை விற்பதற்கு முன்னர் இவர்களுடன் இந்துச் சமூகத் தலைவர்களும் இந்துக்களும் பல சந்ததியினராகத் தோட்டங்களில் வாழும் தொழிலாளர்களின் வீட்டுவசதிகளுக்கான நிலம், அவர்களின் குழந்தைகளுக்கான பள்ளிகள், மற்றும், வழிபட ஆலயம் போன்றவற்றிற்கு நிலத்தைப்பெற பேச்சுவார்த்தை நடத்தி முறையான நடவடிக்கை எடுக்கப்பட்டிருந்தால் இத்தகைய நிலைமையைத் தவிர்த்திருக்கலாம். அரசாங்கத்தின் ஆதரவோடு, ஆரம்பத்தில் இருந்தே இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருந்தால், நிச்சயமாக ஆரம்ப பள்ளிகள் மற்றும், கோயில்களுடன் கூடிய, இன்று இருப்பது போன்ற பிரச்சினைகளை எதிர்கொள்ளாமல், முழுமையான இந்துச் சமூகக் குடியிருப்புப் பகுதிகளை இந்த இந்துச் சமூகத்தினர் பெற்றிருப்பர்.

அத்தகைய தொலைநோக்குடைய சமூகத் தலைவர்கள் இல்லாததால், இந்துத் தொழிலாளர்கள் பள்ளிகளையும் கோயில்களையும் தோட்டங்களில் தங்கள் அசல் இடங்களில் விட்டுவிட்டு, செம்பனைக்கு மாறிய தோட்டங்களின் புதிய முதலாளிகளிடமிருந்து ஒரு சிறியத் தொகையை இழப்பீடாகப் பெற்றுக்கொண்டு தோட்டங்களை விட்டு வெளியேறினர். தமிழ்த் தொடக்கப் பள்ளிகள் கல்வி அமைச்சின் கீழ் இருப்பதால், அவை பெரும்பாலும் அரசாங்கத்தால் பாதுகாக்கப்பட்டு இடமாற்றம் செய்யப்படுகின்றன - ஆனால், இந்தத் தோட்டங்களில் உள்ள இந்துக் கோயில்கள் தோட்டங்களில் முன்பு வேலை செய்து, இப்போது வெளியேறியுள்ள அதன் தீவிர பக்தர்களின் பொறுப்பாகியுள்ளது. ஒரு சிலரே அல்லது குறிப்பிட்ட குடும்பங்களே முயற்சி எடுத்து அவற்றைப் பராமரித்து வருகின்றனர். திருவிழாக்கள் அல்லது அவர்களைக்

கவரும் நிகழ்வுகளில் கலந்துகொள்வதைத் தவிர மற்றப் பகுதிகளைச் சேர்ந்த இந்துக்கள் இந்த உள்ளூர் கோயில்களைப் பற்றிப் பொருட்படுத்தாத ஒரு சூழ்நிலை உருவாகியுள்ளதை மறுப்பதற்கில்லை.

## நிலம் மற்றும் பிரீமியத்திற்கான கட்டணம்

சில கோயில்கள் நில உரிமையாளர்களுக்கு நிலத்திற்கான தொகைக்கும் மற்றும் நில அலுவலகத்திற்கு செலுத்தவேண்டிய நில பிரீமியங்களுக்கும் பணம் செலுத்துவதில் சிரமத்தை எதிர்நோக்குகின்றன. மேலும், அவர்கள் போதுமான நிதியைத் தேடும் அதே வேளையில் பிரீமிய விகிதத்தைக் குறைக்க அரசிடம் மேல் முறையீடு செய்துவருகின்றனர். கையகப்படுத்தப்பட்ட நிலத்தில் கோயில் கட்டிடம் கட்டுவதற்கான செலவும் சிக்கலானது. எடுத்துக்காட்டாக, 2000-ஆம் ஆண்டுகளின் முற்பகுதியில் தனது கோயிலைக் கட்டுவதற்கு ஏற்கனவே பெரிய நிலபரப்பைக் கொண்ட கோயில் J27 - இது 2011-ஆம் ஆண்டில் ஒரு நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்தது. எனினும், இந்த ஆய்வு செய்த சமயத்தில் நிதி திரட்ட சிரமத்தை எதிர்நோக்கிய நிலையில் இந்தக் கோயிலை விரிவாக்கி முறையாகக் கட்டுவதில் சிரமத்தை எதிர்நோக்கி இருக்கின்றது.

## பக்தர்களின் ஆதரவு

தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், தங்கியிருக்கும் இடத்திற்கும் கோயிலுக்கும் இடையிலான தூரம், கோயிலில் வழிபாட்டின் முக்கியத்துவம் குறித்த விழிப்புணர்வு இல்லாமை உள்ளிட்ட பல்வேறு காரணங்களால் கோயிலுக்கு இந்துக்களின் போதிய ஆதரவு இல்லாதது குறித்து மொத்தம் 36 கோயில்கள் வருத்தத்தைத் தெரிவித்தன.

இது கோயில் நிர்வாகத்தின் அணுகுமுறையுடனும் தொடர்புடையது, கோயில் இருப்பிடத்தைச் சுற்றியுள்ள அனைத்து மற்ற பக்தர்களையும் ஈர்ப்பதற்கான பல்வேறு நடவடிக்கைகள் இங்கு ஏற்பாடு செய்வது இல்லை; மற்றும், ஓர் இடத்தில் இருக்கும் ஆர்வமுள்ள அனைத்துச் சாராரையும் திறந்த எண்ணத்துடன் உள்ளடக்காத கோயிலை நிர்வகிக்கும் குழுவின் அமைப்பு முறை, போன்றவற்றையும் காரணங்களாகக் கூறலாம்.

## அரசு நிறுவனங்கள்

பல்வேறு காரணங்களுக்காகக் கோயில் கட்டுமானத்திற்கான விண்ணப்பங்களை அங்கீகரிக்க உள்ளூர் ஆட்சி மன்றம் தாமதப்படுத்தியதில் மொத்தம் ஏழு கோயில்கள் அதிருப்தி அடைந்துள்ளன. மேலும், 4 கோயில்கள் உள்ளூர் ஆட்சி மன்ற ஊழியர்கள் தங்களது கடமைகளை ஒழுங்காகச் செய்யாததால் கோயிலைச் சுற்றியுள்ள பகுதி சுத்தமாக இல்லை என்று புகார் கூறினர். மேலும், 6 கோயில்கள், அதன் பக்தர்களின் சங்கங்களைச் சங்கப் பதிவாளர் பதிவு செய்வதில் குறிப்பிட்ட விதிமுறைகளை நிறைவேற்ற முடியாததால் சிக்கலை எதிர்நோக்குவதாகக் கூறின.

## முதலாளி மனப்பான்மை

தோட்டத்தில் உள்ள கோயில் வளாகத்திற்குள் நுழையக் கடுமையான நிபந்தனைகளை விதிக்கும் முதலாளிமார்களால் எழும் பிரச்சினைகள் பற்றி 6 கோயில்கள் அதிருப்தியை எழுப்பின. சில கோயில்கள் முதலாளிமார் அல்லது தோட்ட உரிமையாளரால் நியமிக்கப்பட்ட ஓரிருவரால் நிர்வகிக்கப்படுகின்றன. மேலும், இவ்வாறு நியமிக்கப்பட்டவர் உடன் இல்லாமல் பிற பக்தர்கள் கோயிலுக்குள் நுழைய முடியாது. பக்தர்கள் யாரும் இது போன்ற கோயிலுக்கு வராததால் அல்லது குறைவதால் இக்கோயில்களை மூட வேண்டிய சூழ்நிலை உருவாகிவருகிறது.

## உள்ளூராட்சி மன்றத்திற்கு எதிரான நீதிமன்ற நடவடிக்கை

ஒரு கோயிலின் நிர்வாகம் பல மேல்முறையீடுகள் செய்தும் அதன் இடத்தில் கோயிலைப் புதுபிப்பதற்கும் வசதிகளை அதிகரிப்பதற்கும் அனுமதி தர மறுப்பதால் உள்ளூராட்சி மன்றத்திற்கு எதிராக நீதிமன்ற நடவடிக்கை எடுத்துள்ளது. மன்றத்தால் விதிக்கப்பட்டுள்ள நிபந்தனைகள் இந்தக் கோயிலின் செயல்பாடுகளைத் தடுப்பதாக அதன் நிர்வாகக் குழுவினர் எண்ணுகின்றனர்.

மாவட்ட மன்றம் போடும் நிபந்தனைகளை நிறைவேற்ற முடியாததால் சொந்த நிலத்தில் பல்நோக்கு மண்டபம் ஒன்றை அமைக்க அனுமதிக்கப்படாத ஒரு கோயிலும் உள்ளூராட்சி மன்றம் மீது வருத்தம் தெரிவித்தது.

## வீட்டின் வளாகத்தில் அமைந்திருக்கும் மற்றும் அசைவ உணவைப் பரிமாறும் கோயில்களின் போட்டி

5 கோயில்களின் நிர்வாகிகள், வீட்டு வளாகத்தில் உள்ள கோயில்கள், மற்றும், கோழிகளையும் ஆடுகளையும் பலி கொடுக்க அனுமதிக்கும் கோயில்கள், இவற்றால் எழும் பிரச்சினைகளை, தங்கள் கோயில் நடவடிக்கைகளுக்கு இடையூறாகக் கருதினர். சமயப் போதனைகளின் அடிப்படையில் குறிப்பிட்ட சில நடைமுறைகளுக்கு ஏற்ப ஒரு கோயில் இயங்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பிற்கு மாறாக இந்தக் கோயில்கள் தங்கள் விருப்பத்திற்கு ஏற்ப திசை மாறிச் செல்கின்றன என இவர்கள் மத்தியில் கருத்து தெரிவிக்கப்பட்டது.

## இளைஞர்களிடையே ஆர்வம்

இந்து இளைஞர்களிடையே கோயில் நடவடிக்கைகள் மீது குறைந்த ஆர்வம் இருப்பது ஒரு பிர்ச்னையாக உள்ளது என 7 கோயில்கள் கூறியுள்ளன. இவர்கள் அசைவ உணவைப் பரிமாறும் கோயில்களையே அதிகம் நாடுவதாகத் தோன்றுகிறது - மேலும், இந்த வகையான கோயில்களில் இளைஞர்களின் ஈடுபாடு அதிகம் உள்ளதோடு பெரும்பாலான இடங்களில் இவர்களே இது போன்றக் கோயில்களையும் தொடங்கி, பராமரிக்கின்றனர். மேலும், இவர்கள் இது போன்ற கோயில்களுக்கு வருகை தருவதோடு மாநிலத்திலுள்ள இத்தகைய கோயில் திருவிழாக்கள் ஒன்றோடு ஒன்று மோதிக்கொள்ளாமல் ஏற்பாடு செய்து அவற்றில் குதூகலத்துடன் கலந்துகொள்வதையும் பார்க்கமுடிகிறது.

## நிர்வாகச் சிக்கல்கள்

இதற்கிடையில், சில கோயில் நிர்வாகங்கள், முந்தைய நிர்வாகக்குழு கோயில் கணக்கைச் சரியாக நிர்வகித்து தங்களிடம் ஒப்படைக்கவில்லை எனும் அதிருப்தியைத் தெரிவித்துள்ளன. ஏனெனில், மேலும், அவர்கள் கோயிலின் சங்கப் பதிவு, சங்கப் பதிவதிகாரியால் ரத்து செய்யப்படும் சூழ்நிலை உட்பட பல தடைகளை எதிர்கொண்டுள்ளனர். பல கோயில் நிர்வாகக்குழுக்கள் அதன் பக்தர்களின் சங்கங்கள் பதிவு ரத்து செய்யப்பட்டுள்ளதாகவும், மீண்டும் பதிவு செய்வதற்கான முயற்சிகள் செய்யும்போது பல்வேறு சிரமங்களை எதிர்கொண்டதாகவும் தெரிவித்தன.

முழுமையான நிர்வாகக்குழுக்களைப் பதிவு செய்த கோயில்களில்கூட, அனைத்தும் தலைவரால் நிர்ணயிக்கப்பட்டு தீர்மானிக்கப்படுகின்றன எனும் புகாரும் உண்டு. இது கோயில் நடவடிக்கைகளுக்கு ஆதரவைக் குறைப்பதோடு நிர்வாகக்குழு உறுப்பினர்களிடையே மோதல்களையும் கொண்டு வருகின்றது. மலாக்காவில் உள்ள கோயில்களில் அதன் நிர்வாகத்தில் உள்ள குறைபாடுகள் உண்மையில் மிகவும் சிக்கலான பிரச்சினையாகும்.

## நிர்வாகக் குழு உறுப்பினர்களிடையே ஒத்துழைப்பு

ஆய்வின் போது பதிலளித்தவர்களில் சிலர் கோயில் நிர்வாகக்குழு உறுப்பினர்களிடையே ஒத்துழைப்பு இல்லாதது குறித்துப் பிரச்சினையை எழுப்பினர். இது கோயிலின் சுமூகமான போக்கைச் சிக்கலாக்குகிறது. ஒரு கோயில் அதன் வளாகத்தில் மதுபானம் அருந்தும் பிரச்சினை உள்ளதாகத் தெரிவித்துள்ளது. சில கோயில்கள் அருகில் உள்ள கோயில்களுக்கு இடையிலான ஒத்துழைப்பு இல்லாத பிரச்சினையை எழுப்பியிருந்தது. ஏனெனில், இவர்கள் ஒன்றாக அமர்ந்து சமயம் சார்ந்த நடவடிக்கைகள் மற்றும், கோயில் நிர்வாகம் தொடர்பான விஷயங்களைப் பற்றி விவாதிக்க விரும்புவதில்லை.

யார் அதிகச் செல்வாக்கு உடையவர்கள், அல்லது யார் பெரியவர், போன்ற கேள்விகள் இன்னும் பல கோயில்களில் சர்ச்சையை ஏற்படுத்துகிறது. இதனால், ஒருங்கிணைந்து கோயில் நிகழ்ச்சிகளை நடத்துவதற்கு அவர்கள் ஒற்றுமையாகச் செயல்படுவது இயலாததாகிறது.

## கோயில்களில் பயிற்சிப் பெற்ற பணியாளர்கள்

குறைந்தது 4 கோயில்கள், மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களில் உண்மையிலேயே பயிற்சிப் பெற்ற தகுதி வாய்ந்த குருக்கள் மற்றும், நாதஸ்வர இசைக்கலைஞர்களின் பற்றாக்குறை குறித்த பிரச்சினையை எழுப்பியிருந்தன. மற்றக் கோயில்கள் தங்கள் கோயில்களில் திறன் மிக்க பணியாளர்களை வேலைக்கு அமர்த்தும் நிதிநிலையில் இல்லாத காரணத்தால் இந்த விசயத்தை முன்வைக்கவில்லை; மேலும், பல கோயில் நிர்வாகங்கள் இந்தத் திறன் மிக்க பணியாளர்களின் முக்கியத்துவத்தை கூட உணரவில்லை. இந்தப் பற்றாக்குறையின் காரணமாக, குறிப்பாக மலாக்கா மாநிலத்தில் உட்புறங்களில், இந்துச் சமய விவகாரங்களில் விழிப்புணர்வு மற்றும் கல்வி நிலை குறைந்த மட்டத்தில் அப்படியே தொடர்கிறது.

## முடிவுரை

பொதுவாக, இந்தச் சிக்கல்களை உட்புறப் பிரச்சினைகள் மற்றும், வெளிப்புற பிரச்சினைகள் என வகைப்படுத்தலாம். உட்புறப் பிரச்சினைகள் உண்மையில் நிர்வாகக் குழுவால் தங்கள் சொந்த முயற்சிகள் மற்றும், பொருத்தமான உத்திகள் மூலம் சமாளிக்க முடியும். ஆலய நிர்வாகக் குழுக்களிடையே மாற்றத்தைக் கொண்டுவருவதற்கான முயற்சி இருக்கும்போது, நிதி மற்றும், ஆற்றலைத் திரட்டுவதற்கான பயனுள்ள உத்திகள் ஒரு தீர்வாக மேற்கொள்ளப்படலாம். எனவே, கோயில் நிர்வாகத்திற்குள் ஏற்படப்போகும் மாற்றத்தில்தான் பதில் இருக்கிறது.

கோயில் நிர்வாக உறுப்பினர்களிடையே இந்துச் சமயக் கல்வியைப் பெறுவதில் விருப்பமின்மையும் ஒரு தடையாக இருக்கின்றது. ஏனெனில், கோயில்களின் தலைமைத்துவத்தின் தரமும் தாங்கள் பெற்ற இந்தச் சமய அறிவின் அளவைப் பொறுத்ததே ஆகும். குறிப்பாக 2020-ஆம் ஆண்டு செப்டம்பரில் மலாக்காவில் மலேசிய இந்துதர்ம மாமன்றம் வெற்றிகரமாக நடத்திய பயிற்சியில் கோயில் நிர்வாகம் காட்டிய ஆர்வத்தைக் காணும்போது, ஏற்பாடு செய்யப்படும் பயிற்சியில் கலந்துகொள்வதில்கூட இவர்களின் ஆர்வம் மிகக் குறைவாகவே உள்ளது என்பது தெளிவாகிறது. சில சமயங்களில் மலேசிய இந்து சங்கம் மற்றும், இந்துதர்ம மாமன்றத் தலைவர்களுக்கிடையிலான போட்டி மனப்பான்மையும் தவறான புரிதலும் இந்த விஷயத்தில் மேலும், சிக்கலை அதிகரித்துள்ளது.

இதற்கிடையில், வெளிப்புறப் பிரச்சினைகளுக்குத் தீர்வுக் காண உதவி தேவைப்படுகிறது. இந்துக் கோயில்களின் தேவைகளை நிறைவு செய்ய நில உரிமையாளர்கள் மற்றும், அரசாங்கத் துறைகள் உள்ளிட்ட பிற தரப்பினரின் உதவிகளும் தேவைப்படுகின்றன. இந்தப் பிரச்சினைகளைத் தீர்க்க, கோயில் நிர்வாகம் வலுவான நிலையில் இருக்க வேண்டும். எத்தகைய பிரச்சினையையும் தீர்க்க, மலாக்கா மாநிலத்தில் இந்துச் சமூகத்தின் நலனுக்காக மாற்றத்தை ஏற்றுக்கொளளும் பக்குவத்துடனும் விருப்பத்துடனும் கோயில் நிர்வாகங்கள் விளங்க வேண்டும். சமுதாய, அரசியல் தலைவர்களின் ஆதரவும் இத்தகைய ஒருங்கிணைப்பு முயற்சிகளுக்குத் தேவை.

## எதிர்வரும் 5 ஆண்டுகளில் மேம்பாட்டுத்திட்டங்கள்

### கோயில்களுக்கான நிலம்

மொத்தம் 78 இந்துக் கோயில்கள் தங்களது கோயில்களுக்கு நிலத்தைக் கையகப்படுத்த விரும்புகின்றன, மேலும், 7 கோயில்கள் கூடுதல் நிலம் பெற முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றன. இந்தக் கோயில்களில் சில ஏற்கனவே நிலத்தைக் கையகப்படுத்தும் பணியில் இறங்கியுள்ளன, ஆனால், பெரும்பாலானவை இன்னும் அதைப் பற்றிச் யோசித்துக் கொண்டிருக்கும் நிலையில் உள்ளன. சில நில உரிமையாளர்கள் தங்கள் நிலத்தில் கோயில்கள் இருப்பதை வாய்மொழி வழியாக மட்டுமே அனுமதித்துள்ளனர், மற்ற நில உரிமையாளர்கள் குறிப்பிட்ட நேரத்தில் அங்கு வழிபட மட்டுமே கோயிலைப் பயன்படுத்த அனுமதிப்பதைத் தவிர கோயிலுக்கு எந்தவொரு அங்கீகார அந்தஸ்தையும் கொடுக்க விரும்பவில்லை.

இந்தக் கோயில்கள் இருக்கும் தோட்டங்களுக்கு வெளியே உள்ள வீடமைப்புப் பகுதிகளில் பெரும்பாலான இந்துக் குடும்பங்கள் இப்போது வசிக்கின்றன. தோட்டத்தில் வசித்த காலங்களில் வழிபட்டு வந்த சம்பந்தப்பட்ட கோயிலின் மீதுள்ள விசுவாசத்தின் காரணமாக ஒவ்வொருவரும் அந்தக் கோயில் அதே இடத்தில் அல்லது இலகுவாகச் சென்றுவர சாலைக்கு அருகில் அமைத்துப் பராமரிக்க விரும்புகின்றனர். நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சி வெற்றியடையும் தறுவாயிலுள்ள இரண்டு கோயில்கள், அவற்றின் கட்டடங்களை எழுப்பத் தயாராகவுள்ளன.

ஒவ்வொரு தரப்பும் தங்களுக்கெனச் சொந்தக் கோயிலை வைத்திருக்க விரும்பும் தன்மை, இந்தச் சமூகத்தையும், கோயில் நிலைமையையும் கட்டுப்படுத்துகிறது. எனவே, வீட்டிற்கு அருகில் கோயில் இருந்தும் அதைத் தங்களது கோயிலாக ஏற்றுக்கொள்ளும் தன்மை இல்லை. இந்தத் தன்மையைச் சரிசெய்ய முடியாவிட்டால், இந்துக்கள் கோயில்களைத் தங்கள் குடும்பக் கோயில்களாக அமைப்பது, அல்லது இடமாற்றம் செய்வது, மேலும், திருவிழா அல்லது பண்டிகைகளின்போது மட்டுமே மற்றப் பக்தர்களுக்கு அழைப்பு விடுப்பது போன்ற அம்சங்களைக் கொண்ட சிறிய கோயில்களின் எண்ணிக்கையையே இந்த மாநிலத்தில் அதிகரித்து வரும் என்பதே இன்றைய நிலைமை.

### கோயில் பதிவு

கோயில் பதிவு சம்பந்தமான முயற்சிகளில் தோல்வியுற்ற 6 கோயில்களைத் தவிர, 9 கோயில்கள் மட்டுமே, கோயில் சங்கங்களைச் சங்கப் பதிவாளரிடம் பதிவுச் செய்வதற்கான முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றன. இவற்றுள் பெரும்பாலானவை சொந்த நிலத்தில் இல்லாதவையாகும். பல கோயில் நிர்வாகங்கள் இச்சமயத்தில் நில உரிமையாளர் கோயில் அங்கு இருப்பதை ஒப்புக் கொண்டு அந்த இடத்திலேயே இருக்க அனுமதிக்கும் வரை எந்தப் பிரச்சினையும் எழாது என மிகவும் திருப்தியுடன் இருக்கின்றனர். அதோடு, கோயிலைச் சங்கங்களின் பதிவாளரிடம் பதிவு செய்வது தேவையற்றது எனவும் சிலர் கருதுகின்றனர்

### கோயிலின் வசதி மற்றும் கோயிலைப் பழுதுபார்த்தல்

மொத்தம் 18 கோயில்கள் கோயில் கட்டிடத்தைச் சரிசெய்யத் திட்டமிட்டுள்ளன. மேலும், 2 கோயில்கள் கோபுரங்களை அமைக்க விரும்புகின்றன. 20 கோயில்கள் கோயிலில் கூடுதல் நடவடிக்கைகளுக்கு இடமளிக்கும் வகையில் பல்நோக்கு மண்டபம் அமைக்க விரும்புகின்றன. இரண்டு கோயில்கள் வயோதிகர்களுக்கும் மாணவர்களுக்கும் தங்குமிடங்களை உருவாக்க விரும்புகின்றன. அதே நேரத்தில் குழந்தைகள், இளைஞர்கள் மற்றும், பெரியவர்களுக்கு முறையான வகுப்புகளை நடத்த முழுமையான வசதிகளுடன் கூடிய வகுப்பறைகளை உருவாக்க ஒரு கோயில் விரும்புகிறது. மற்றுமொரு கோயில் அதன் நிர்வாகத்தை மையப்படுத்த அலுவலகம் ஒன்றை அமைக்கத் திட்டமிட்டுள்ளது. மேலும், மூன்று கோயில்கள் அவற்றின் வசதிகளைப் பெருக்குவதற்கு மேசை நாற்காலிகள் வாங்க விரும்புகின்றன.

## புதிய கோயில்களின் கட்டுமானம்

மொத்தம் 20 கோயில்களின் நிர்வாகங்கள் புதிய இடங்களில் அல்லது இப்போது இருக்கும் இடங்களில் புதியக் கோயில்களைக் கட்டுவதற்குத் திட்டமிட்டுள்ளன. அதோடு, மேலும், 12 கோயில்கள் அடுத்த ஐந்து ஆண்டுகளில் தங்கள் கோயில்களை இடமாற்றம் செய்வதற்கான உத்திகளைப் பற்றி யோசித்து வருகின்றன.

## கோயில்களின் ஒருங்கிணைப்பு

இரண்டு கோயில்கள் மட்டுமே எதிர்காலத்திற்கான திட்டமாக ஒரே இடத்தில் ஒன்றிணைந்து செயல்பட விரும்புகின்றன - அவற்றில் ஒன்று அதன் அசல் இடத்திலிருந்து கட்டாயமாக மாற வேண்டிய சூழ்நிலையில் அரசாங்க நிலத்தில் அமைந்துள்ள மற்றொரு கோயில் அமைந்துள்ள நிலத்தில் இது மாறியுள்ளது. எனினும், மலாக்கா மாநிலத்தில் உண்மையில், அருகருகிலேயே வேறு பல கோயில்கள் அமைந்து செயல்படுகின்றன - மேலும் சில, பிற உரிமையாளர்களின் நிலத்தில் அமைந்துள்ளன - ஆயினும், இந்தக் கோயில்களை ஒன்றிணைத்து அந்த இடங்களில் இந்துக்களின் நலனுக்காக ஒருங்கிணைந்து ஒற்றுமையாகச் செயல்படும் நோக்கம் எதுவும் இப்போதுள்ள நிர்வாகங்கள் மத்தியில் இன்னும் தென்படவில்லை.

## கும்பாபிஷேகம்

எதிர்வரும் 5 ஆண்டுகளில் கோயிலின் மேம்பாட்டுத் திட்டமாகக் கும்பாபிஷேகத்தை நடத்த 11 கோயில்கள் திட்டத்தைக் கொண்டுள்ளதோடு ஏற்கனவே அதற்கான ஆரம்ப ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கியுள்ளன.

## வருடாந்திரத் திருவிழா

பல கோயில்கள் வருடாந்திரத் திருவிழாவை நடத்துவதற்கான திட்டத்தில் முழுக் கவனம் செலுத்துகின்றன; மற்றும், அதை நோக்கியே அனைத்து செயல்களும் நடைபெறுகின்றன. திருவிழாவிற்காக ஆயிரத்துக்கும் குறைவான பக்தர்களைக் கவரும் கோயில்கள், ஏற்கனவே அங்கு வசித்து பிறகு அங்கிருந்து வெளியேறி தற்போது வெளியே வேலை செய்து வாழும் குடும்ப வாரிசுகளின் விசுவாசத்தையும் நினைவுகளையும் பெரிதும் நம்பியிருக்கின்றன. சிறிய கோயில்களில் குறைந்த எண்ணிக்கையிலான விசுவாசமான பக்தர்கள் உள்ளனர். இந்த வகை கோயிலின் நிர்வாகம் இந்த விசுவாசமிக்க பக்தர்களின் ஆதரவையும் ஈடுபாட்டையும் சார்ந்துள்ளது. தங்கள் பெற்றோர் ஒரு காலத்தில் வாழ்ந்த இடங்களுக்கு இங்கு வாழ்ந்தறியாத இன்றைய இளைஞர்கள் வருவதில் ஆர்வம் குன்றினால் காலப்போக்கில் இந்த நிலைமை மாறுவதை தவிர்க்கவியலாது.

## இந்துச் சமயப் பயிற்சிகள்

இந்துக்களுக்காக இந்துச் சமயப் பயிற்சிகளை மலாக்காவில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற விருப்பத்தினை ஒரு கோயில் மட்டுமே வலியுறுத்தியது.

## முழுமையான இந்துக் கோயில் வளாகம்

ஒரு கோயிலின் நிர்வாகம் ஓர் இந்துக் கோயில் வளாகத்தை ஐந்து ஏக்கர் நிலத்தில் கணிசமான செலவில், ஆஸ்ரமம் உட்பட பல்வேறு வசதிகளுடன் அமைக்க, நிதி திரட்டும் விருப்பத்தை வெளிப்படுத்தியுள்ளது. இந்த எண்ணம் கோயிலின் முக்கிய மேலாளரின் இதயத்தில் இன்னும் திட்டமிடல் நிலையிலேயே உள்ளது. எனினும், இத்தகைய திட்டம் வைத்திருந்த கோயில் தலைவர் அண்மையில் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

## முடிவு

மலாக்காவில் உள்ள பெரும்பாலான கோயில் மேலாண்மை மேம்பாட்டுத் திட்டங்கள் கோயிலின் கட்டிடம் மற்றும், சுற்றியுள்ள பிற வசதிகளைப் பெருக்குவதில் கவனம் செலுத்துவதில் உள்ளன. அதே நேரத்தில் ஆன்மீக அம்சம் இன்னும் அவர்களின் கவனத்தை ஈர்க்கவில்லை. இதில் ஆச்சரியமில்லை,

ஏனென்றால், இந்துக் கோயில்களில் முறையான ஆன்மீக மேம்பாடு சம்பந்தமான அம்சம் இந்தக் கோயில்களில் முன்பிருந்தே முக்கிய நோக்கமாகக் கருதப்பட்டது கிடையாது. இதனால்தான் இந்துச் சமயப் பக்தர்கள், சமயம் சார்ந்த முழுமையான நிகழ்வுகளை விரும்புவதால் சுவாமிஜிகளை முன்னோடியாகக் கொண்டு நடத்தப்படும் புதிய சமயப் பிரிவுகளாக, பல செயல்பாட்டு மையங்கள் தொடர்ந்து வளர்ந்து வருகின்றன. மலாக்காவில், சாய் பாபா மையம், ஸ்ரீடி சாய் பாபா மையம், தெய்வீக வாழ்க்கைச் சங்கம், ஸ்ரீஇராமகிருஷ்ண ஆசிரமம், சிவா குடும்பம் மற்றும், ஸ்ரீகாமட்சி பிருந்தாவனம், வள்ளலார் மையம், மற்றும், இது போன்ற மையங்கள் செயல்படுவதையும் உதாரணமாகக் கூறலாம். இது போன்ற மையங்கள் கணிசமான பக்தர்களை ஈர்ப்பதையும் பார்க்கலாம். இருப்பினும், இத்தகைய பக்தர்கள் கோயில்களில் நடைபெறும் சிறப்பு வைபவங்களிலும் கலந்து சிறப்பிக்கவே செய்கின்றனர்.

## அவரவர்களின் செயல்திறனைப் பற்றி கோயில் மேலாண்மையின் கருத்து

இந்த ஆய்வில், கோயிலின் நிர்வாகத்தின் கீழ் இயங்கும் கோயில் நடவடிக்கைகளைப் பற்றிய தங்களின் சுய கருத்துகளைப் பற்றியும் ஆராயப்பட்டன, மூன்று விருப்பங்கள் (தேர்வுகள்) கொடுக்கப்பட்டன - சிறந்தது, மிதமானது மற்றும், பலவீனமானது.

## கோயில் நிர்வாகத்தினரின் சுய கருத்து

மொத்தம் இருக்கக்கூடிய 134 ஆலய நிர்வாகங்களில் 49 அல்லது 36.6% தங்களது நடவடிக்கைகள் சிறந்ததாக மதிப்பிட்டுள்ளன. மேலும், 48 நிர்வாகங்கள் அல்லது 35.8% அவற்றின் செயல்திறன் மிதமானது என்று கருதின. மற்ற 37 நிர்வாகங்கள் அல்லது 27.6% அவற்றின் செயல்திறன் பலவீனமானது என்று உணருவதாக ஒப்புக்கொண்டுள்ளன. இந்தக் கருத்து மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களின் நிர்வாகத்தில் நிலவும் சிந்தனையையும் விழிப்புணர்வையும் பிரதிபலிக்கிறது, ஏனெனில், பெரும்பாலான அல்லது 72.4% நிர்வாகங்கள் தங்கள் கோயில்களைச் சிறப்பாகவே நிர்வகிப்பதாகக் கருதுகின்றனர். கூடுதல் நிகழ்வுகள்பற்றிய தங்கள் அறிக்கையைச் சிறிய கோயில்களால் மட்டுமே கொடுக்கமுடியவில்லை. மேலும், அக்கோயில்களின் நிர்வாகம் முறையான நிலையில் இல்லை என்பதையும் அவற்றின் நிர்வாகம் பலவீனமாக இருப்பதையும் ஒப்புக்கொள்கின்றன.

**அட்டவணை 29: தங்கள் செயல்திறனைப் பற்றி கோயில் மேலாண்மையின் சுய கருத்து**

| மாவட்டம் | சிறந்தது | மிதமானது | பலவீனமானது | மொத்தம் |
|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | 15 | 10 | 10 | 35 |
| ஜாசின் | 21 | 15 | 9 | 45 |
| அலோர் காஜா | 13 | 23 | 18 | 54 |
| மொத்தம் | 49 | 48 | 37 | 134 |
| சதவிகிதம் | 36.6% | 35.8% | 27.6% | |

நிர்வாக முறை மற்றும், திட்டமிடல் ஆகியவற்றின் அடிப்படையில் கோயில் நடவடிக்கைகளில் சில மாற்றங்களைக் கொண்டு வரவும் அல்லது நிர்வாகத் திறன்களை மேம்படுத்துவதற்கான சாத்தியக்கூறுகள் உருவாக இந்தக் கருத்துப் பதிவு மிக முக்கியமானது. ஏனெனில், இந்த ஆய்வில் பெரும்பாலான கோயில் நிர்வாகத்தினர் தங்களது செயல்திறன் மிதமானதாகவும், மிகச்சிறந்ததாகவும் கருதுகின்றனர். அதோடு, பெரும்பாலோர் தங்களது செயல்திறனில் திருப்திக்கொண்டுள்ளனர் என்பதாகப் பொருள் கொள்ளலாம். இவர்கள் மத்தியில் மாற்றம் கொண்டு வருவது சுலபமாக இருக்காது.

## கோயில் பற்றிய பக்தர்களின் கருத்து

இந்த ஆய்வின் போது 63 கோயில்களில் அவர்களது நிர்வாகக் குழுவில் இல்லாத சில பக்தர்களிடம் இருந்து கோயில் பற்றிய கருத்துக் கணிப்பைப் பெற முடிந்தது. மற்றக் கோயில்களில் இந்தக் கருத்துக் கணிப்பைப் பெற சம்பந்தப்பட்ட கோயிலின் பக்தர்களைச் சந்திக்க இயலவில்லை.

## பலரின் திருப்தி

அவர்கள் வழிபடும் கோயில் மிகவும் சக்தியுடையது மற்றும், மிகுந்த சிறப்பானது என அனைத்து பக்தர்களும் ஒப்புக்கொள்கிறார்கள்; மேலும், சிலர் அதை, தங்கள், தங்களது குடும்ப உறுப்பினர்கள், மற்றும், பிற பக்தர்களின் அனுபவத்துடன் தொடர்புப்படுத்தியுள்ளனர். தற்போதைய கோயில் நிர்வாகத்தில் திருப்தி என 49 கோயில்களின் பக்தர்கள் தெரிவித்தனர், அதே நேரத்தில் 14 கோயில்களைச் சேர்ந்த பக்தர்கள் தங்கள் கோயில்களின் நடவடிக்கைகளின் மீது அதிருப்தி தெரிவித்தனர்.

## எதிர்பார்க்கப்படும் மாற்றங்கள்

கோயில் நிர்வாகத்தை மேம்படுத்துவதற்கான முன்மொழியப்படும் திட்டங்களைப் பொறுத்தவரை, 20 கோயில்களைச் சேர்ந்த பக்தர்கள் நிர்வாகக் குழுவில் மாற்றத்தை விரும்புகிறார்கள், 7 கோயில்களைச் சார்ந்தோர் இளைஞர்களுக்குப் பங்கேற்க வாய்ப்பு வழங்கப்படவேண்டும் என்று கூறியுள்ளனர். 21 கோயில்களில் உள்ள பக்தர்கள் கட்டிட சம்பந்தமான வளர்ச்சிகள் துரிதப்படுத்தப்பட வேண்டும் என்று விரும்புகிறார்கள்; அதே சமயத்தில் 33 கோயில்களில் உள்ள பக்தர்கள் கோயில்களில் அதிகச் செயல்பாடுகளை விரும்புகிறார்கள்.

ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கோயிலில் உள்ள பக்தர்கள், அதன் நிர்வாகம், இந்து அல்லாத வருகையாளர்களையும் கருத்தில் கொள்வதோடு, கோயிலின் வரலாறு மற்றும், அதன் சிறப்பு அம்சங்கள் பற்றிய குறிப்புகளை ஆலய அறிவிப்புப் பலகைகளிலும், வருகையாளர்கள் எடுத்துக்கொள்ள ஏதுவாக, துண்டுப் பிரசுரங்களைத் தயார் செய்து வைக்க வேண்டும் எனும் கருத்தினையும் வெளிப்படுத்தினர்.

மொத்தத்தில், கோயில்களின் நிர்வாகத்தை உண்மையில் விமர்சிக்கும் பக்தர்கள் மிகக் குறைவு. ஏனென்றால், அவர்கள் தங்களுக்குப் பிடித்த கோயில்களின் நடைமுறைகளை நீண்ட காலமாக ஏற்றுக்கொண்டு வந்துள்ளனர். மேலும், கருத்து தெரிவிக்கத் தேர்ந்தெடுக்கப்பட்ட சம்பத்தப்பட்ட பக்தர்கள் பெரும்பாலும் அடிக்கடி கோயிலுக்கு வருபவர்கள் ஆவர்.

எப்போதும் கோயிலுக்குச் செல்லாத பக்தர்களின் கருத்துக்களைக் கேட்டால், மறுமொழி மிகவும் வித்தியாசமாக இருக்கலாம், ஆனால், இந்த ஆய்வின் நோக்கத்திற்காக, இந்த ஆய்வை நிறைவு செய்ய பெரும்பாலும் கோயிலுக்குச் செல்லும் பக்தர்கள் மத்தியிலேயே இந்த ஆய்வு நடைபெற்றது.

## முடிவுரை

பதிலளித்தவர்களில் பெரும்பாலோர் மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் செயல்பாடுகளில் மிகவும் திருப்தி அடைந்துள்ளதைச் சேகரிக்கப்பட்ட கருத்துக்கணிப்புகள் காட்டுகின்றன. அவர்கள் அனைவரும் கோயில் நிர்வாகத்துடன் மிகவும் நெருக்கமானவர்கள் என்பதால் இந்த முடிவில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை.

ஆயினும், மலாக்காவில் உள்ள பெரும்பாலான இந்துக்கள் இன்னும் மலாக்காவில் உள்ள எந்தக் கோயிலிலும் உறுப்பினர்களாக இல்லை என்பதையும், அனைத்து பக்தர்களின் கருத்துக் கணிப்புகளையும் கணக்கில் எடுத்துக் கொண்டால், பல பக்தர்கள் ஏன் கோயில்களில் மட்டுமே வழிபாட்டுச் செயல்களில் ஈடுபடுகிறார்கள்; கோயில்களில் திருவிழாக்களில் கலந்து கொள்கிறார்கள் ஆனால், கோயிலில் உறுப்பினராகவோ அல்லது அதன் நிர்வாகக் குழுவில் இடம் பெறவோ விரும்பவில்லை என்பதை நாம் புரிந்து கொள்ள முடியும். இம்முறை இந்த ஆய்வு அந்த அளவிற்கு வரையெல்லையை விரிவாக்கவில்லை.

ஆறாம் பரிமாணம்

# முடிவுகளும் பரிந்துரைகளும்

இந்த ஆய்வு மலாக்கா மாநில இந்துக் கோயில்களைப் பற்றிய சில முடிவுகளைக் கணிக்க வகைசெய்துள்ளது. இந்தப் பாகத்தில், முடிவுகளைச் சில குறிப்பிட்டத் தலைப்புகளின் கீழ் கொடுத்து, அவற்றுடன் சில பரிந்துரைகளையும், வாசகர்களின் வசதிக்காகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## 1.0. மலாக்கா இந்துக் கோயில்கள் வரலாற்று ரீதியாக இந்துச் சமயத்தினர் இம்மாநிலத்தில் குடியேறியதைப் பூலோக ரீதியில் பிரதிபலிக்கின்றன

இந்த ஆய்வு, இம்மாநிலத்தில் இந்துக்கள் தொடக்கத்தில் அவர்கள் பணிகளுக்காக அமர்த்தப்பட்ட இடங்களிலும், தங்கியிருந்த இடங்களிலும் கோயில்களை நிறுவி வழிபட்டார்கள் என்பதைப் புலப்படுத்துகிறது. மலாக்கா செட்டி கோயில்கள்தான் மிகப் பழமை வாய்ந்தவை என்பதும், அவற்றிற்குப் பிறகு பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில், ஆங்கிலேயர்களால் பணியாளர்களாகக் கொண்டுவரப்பட்ட தமிழ் இந்துக்கள் கட்டிய கோயில்கள் காணப்படுகின்றன. ரப்பர் தோட்டங்களும், அரசுத் துறைகளின் பணியாளர்கள் வாழ்ந்தப் பகுதிகளிலும் கோயில்கள் நிறுவப்பட்டன என்பது தெளிவு. நாட்டுக்கோட்டை செட்டியார்களும், ஸ்ரீலங்கா யாழ்ப்பாணத் தமிழர்களும், அவர்களின் பொருளாதாரப் பலம் கொண்டு பெரிய கோயில்களை மலாக்கா நகரில் நிறுவி பராமரித்து வந்ததும் புரிகிறது. பொருளாதார வலுவில்லாத மற்ற நகர்-புறநகர் வாசிகள் சிறு கோயில்களை மட்டுமே கட்டி வழிபட முடிந்தது.

இது, இந்த மாநிலத்தில் சிறிய வருமானத்தில் ஒப்பந்த ஊழியர்களாகக் குடியேறிய தமிழ்-இந்துக்களின் பொருளாதார வலுவற்ற நிலைமையைப் புலப்படுத்துவதோடு, தமிழ் நாட்டில் இருப்பதுபோல் அரண்மனை வடிவில் கோயில் கட்ட இயலாமையில் வாழ்ந்தார்கள் என்பதையும் பறை சாற்றுகிறது. உண்மையில் இந்தக் கோயில்கள் பக்தர்களின் வாழ்க்கை தரத்தை ஒவ்வொரு பகுதியிலும் படம் பிடித்துக் காட்டுகின்றன.

நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, தாங்கள் நீண்டகாலமாக வாழ்ந்து வந்த இடங்களிலிருந்து மற்ற இடங்களுக்கு, வேலை தேடிச் செல்லவேண்டிய கட்டாயம் ஏற்பட்டதால், ஏற்கனவே அவர்கள் வாழ்ந்த இடங்களில் கட்டப்பட்ட இந்துக் கோயில்களைப் பயன்படுத்தும் பக்தர்களின் எண்ணிக்கை குறையத் தொடங்கியது. ஆண்டுதோறும் கோயில் திருவிழா சமயங்களில் மட்டும் கோயிலை நாடி வருபவர்கள் இருந்தனர்; இருக்கின்றனர். சிலர் கோயிலைத் தாங்கள் புதிதாகக் குடியேறியுள்ள பகுதிகளுக்கு முறையாக மாற்றிக் கட்டினர் - ஆனால், பல கோயில்கள் பழைய இடங்களிலேயே இருக்கின்றன. அவற்றை வேறு இடங்களுக்கு மாற்றவேண்டும் எனும் எண்ணம்கூட இல்லாமல், வரலாற்றைக் காரணமாகக் கொண்டு, அவை இருக்கும் இடங்களிலேயே - அவற்றைக் குறைவானவர்கள் தொடர்ந்து பயன்படுத்தும் நிலைமை இருந்தாலும், - இருக்கவேண்டும் எனும் சிந்தனை பலரிடம் இருப்பதைக் காண முடிகிறது. பாரம்பரியத்தின்பால் அதீத பற்றுள்ள காரணமே முதன்மையாக வெளிப்படுகிறது.

## பரிந்துரைகள்

1.1. தமிழ்-இந்துக்கள் மத்தியில், தோட்டங்களில் வாழ்ந்து, பணிபுரிவோர் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்துள்ளது. இவர்களில் பலர் புதிய வீட்டு குடியிருப்புப் பகுதிகளில் வாழ்கின்றனர். பக்தர்கள், கோயில்களை முறையாக அன்றாடம் பயன்படுத்த, அவை இத்தகைய வீடமைப்புத் திட்டங்கள் அருகே இருப்பதே மேல். முன்பு ஒவ்வொரு தோட்டத்தில் வசித்தவர்களுக்கும் தனி கோயில் இருந்து அதன் சக்தியின் மீது அதிக நம்பிக்கை வைத்திருந்தபோதும், அத்தகைய தனித்துவத்தைக் காட்டுவதை விடுத்து, ஒருங்கிணைந்த கோயில்களையும், அருகிலுள்ள தாய்க் கோயிலின் குடையின்கீழ் தங்களின் சிறிய கோயில், அதன் வரலாற்றுக் குறிப்புகளுடன், பொது வளாகத்தில் அமைந்து செயல்பட வகை செய்ய பக்தர்கள் தங்களைத் தயார்ப் படுத்திக் கொள்வது நல்லது. வட்டாரத் தாய்க் கோயில்கள் அதிகமான தமிழ்-இந்துக்கள் வாழும் குடியிருப்புப் பகுதிகளில் இயங்குவதே சிறப்பு.

1.2. கோயில் நிர்வாகங்களுக்கிடையில் கருத்து வேறுபாடுகள் இதற்கு முட்டுக்கட்டையாக இருக்கலாம். காரணம், யாரும் விட்டுக்கொடுக்காமல், தங்கள் மனதில் குடிபுகுந்துள்ள பாரம்பரிய சின்னங்களைத் தற்காப்பார்கள். எனினும், சமுதாய ஒற்றுமை கருதியும், பாரம்பரியத்தை இழக்காமலும், மலாக்கா இந்துக்களுக்கு, கால மாற்றத்திற்கேற்பவும், நாட்டு நடப்பிற்கு ஏற்பவும், மாற்றங்களை ஏற்றுக்கொள்ளும் தலைமைத்துவம் இந்தச் சமுதாயத்திற்குத் தேவை. எண்ணிக்கையைவிட தரமே மேல்.

1.3. இந்தக் குறிக்கோளை அடைய, நம் சமூகத்திலுள்ள அனைத்துத் தரப்புத் தலைவர்களும் இணைந்து, சகல வசதிகளுடன்கூடிய கோயில்களை உருவாக்குவதின் அவசியத்தை நம் இந்துப் பக்தர்கள் மத்தியில் பரப்பவும், புரிந்துணர்வு ஏற்படவும் விழிப்புணர்வைக் கொண்டுவருதல் அவசியம். ஒவ்வொரு பகுதியிலும் தாய்க்கோயில் எல்லா வசதிகளுடன், பலதரப்பட்ட நிகழ்ச்சிகளை நடத்தி, பக்தர்களுக்கும் அவர்களின் குடும்பதிற்கும் நன்மை பயப்பது சிறப்பாகும். அத்தகைய தாய்க் கோயிலை ஒரு வட்டாரத்தில் வாழும் அனைவரும் இணைந்து தெரிவு செய்து ஒரு பத்து கிலோமீட்டர் பரப்பளவிற்குள் வசிப்பவர்களுக்காகச் செயல்பட வைக்கலாம்.

1.4. ஒவ்வொரு தாய்க் கோயிலின் வளாகத்தில், அவ்வட்டாரத்திலுள்ள, சொந்த நிலமில்லாத நிலையிலுள்ள சிறிய கோயில்களை இடம் மாற்றிக் கொண்டுவந்து, அவற்றின் வரலாற்று விளக்கங்களுடன் நிறுவி தொடர்ந்து செயல்பட வகை செய்யலாம்.

1.5. ஒரு தாய்க் கோயிலின் நிர்வாகச் செயற்குழுவில், அக்கோயிலின் தலைமையில், அவ்வட்டாரத்திலுள்ள எல்லா மற்ற கோயில்களின் பிரதிநிதிகளும் இடம்பெற்றிருப்பது அவசியம்.

1.6. இத்தகைய தாய்க் கோயில்களுக்குக் குறைந்தது இரண்டு ஏக்கர் நிலபரப்பு இருந்தால் பல வசதிகளையும் படிப்படியாக ஏற்படுத்திக்கொள்ள வசதியாக இருக்கும்.

1.7. மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்களுக்கான சம்மேளனம் ஒன்று, எல்லா தாய்க் கோயில்களையும் உள்ளடக்கி அமைக்கப்பட வேண்டும். விவரமறிந்த இந்துச் சமயப் பெரியார்கள், இந்துச் சமூகத் தலைவர்கள் இணைந்து மலாக்கா மாநில கோயில்களின் நலன்கருதி கோயில்-சமய ஒருங்கிணைப்பு அமைப்பாக இது செயல்படுதல் நல்லது. இந்த முயற்சியை இந்துச் சமூகத்தினரே செய்வது சிறப்பு; அதோடு, குறிப்பாக மலாக்கா மாநில அரசின் ஒத்துழைப்பையும் ஆதரவையும் பெற வேண்டும்.

## 2.0. மலாக்கா மாநில இந்துக் கோயில்களின் நில உரிமம்

நில உரிமம் பல கோயில் நிர்வாகங்களுக்குப் பெரிய சிக்கலாகவே இருக்கின்றது. காலம்-காலமாக, தலைமுறை-தலைமுறையாகத் தோட்டங்களில் வாழ்ந்து, அவற்றைத் தங்கள் கிராமமாகவே எண்ணி, ஒரு காலத்தில் அத்தோட்டத்தை விட்டு வெளியேற வேண்டும் எனும் நிலை வரும் என்பதை எண்ணிப் பார்க்காத நிலையில் வாழ்ந்த பலர், அங்குள்ள கோயில், தோட்ட நிலத்தில் கட்டப்பட்டு, அங்குப் பணிபுரிந்தக் காலக்கட்டத்தில் முதலாளிமார்கள் கோயில்களைப் பயன்படுத்திக்கொள்ள அனுமதி கொடுத்திருந்தாலும், மிகவும் விசுவாசமாக இருந்த தொழிலாளிகளுக்குச் சொந்த வீடு, பள்ளி, கோயில் போன்றவற்றைக் கட்டிக்கொள்ள நிலம் ஒதுக்காமலேயே இருந்துவிட்டனர். சமயம் வந்தபோது மற்றவர்களிடம் தோட்டத்தையும் விற்றுவிட்டனர்.

அரசாங்கமும் இதில் தலையிடவில்லை. தோட்ட உரிமம் கை மாறிய பொழுது, அங்குப் பணிபுரிந்தவர்களின் நலன் பெருமளவில் பாதுகாக்கப்படவில்லை. புதிய உரிமையாளர், பிரம்மச்சாரிகளாக வந்த மற்ற வெளிநாட்டு வேலையாட்களை நியமிக்க விரும்பினர். தோட்ட விற்பனையின்போது, அங்கு இயங்கிய கோயில்களைப் பற்றி முடிவு செய்யப்படாத நிலையில், அத்தகைய கோயில்களின் செயற்குழுக்களுக்கும், புதியத் தோட்ட உரிமையாளர்களுக்கும் கருத்து வேறுபாடு ஏற்படவும், இந்துச் சமயத்தினரை தோட்ட வேலைகளுக்கு அமர்த்துவதில் ஆர்வமின்றி செயல்பட்டதால் தற்பொழுது மிகக் குறைந்த எண்ணிக்கையில் மட்டுமே பணிபுரிந்து வருகின்றனர். தோட்டத்தில் இந்துக்கள் குறைவாகப் பணிபுரிவதால் இந்துக் கோயில் தேவை இல்லை என்றும், கோயில்களுக்கான நிலத்தை ஒதுக்கிக் கொடுக்க மறுக்கும் நிலையும் உருவாகியுள்ளது.

ஒரு காலத்தில் மிகவும் செல்வாக்குடன் இருந்த தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் (என்.யு.பி.டபிள்யூ) அதன் உறுப்பினர்களிடையே விழிப்புணர்வை எழுப்பத் தவறியது. மேலும், வேலை

இழந்தத் தொழிலாளர்களுக்கு வீட்டு நிலம் பெற நடவடிக்கை எடுக்கத் தவறியது, ரப்பர் தோட்டங்களை விட்டு வெளியேற வேண்டிய கட்டாயச் சூழ்நிலை வந்தபோது உரிய ஆலோசனைகளைக் கொடுக்கத் தவறியது. உண்மையில், நாட்டில் இந்துக்களிடையே இருந்த அரசியல் தலைவர்கள் இதைக் கவனிக்கத் தவறியதால் தங்கள் பணியிடங்களான தோட்டங்களில் ரப்பர் மரங்கள் எண்ணெய்ப் பனையாக மாறியபோது பெரும்பாலான தொழிலாளர்கள் சில ஆயிரம் ரிங்கிட் மட்டுமே இழப்பீடாகப்பெற்று தோட்டத்தை விட்டு வெளியேறக் காரணமாக இருந்தனர். அமைதியாக, அதிக விளம்பரம் இன்றி நிகழ்ந்த இந்த மாற்றங்களின் விளைவாக இந்தச் சமுதாயத்தில் பல சமூகச் சீர்கேடுகள் எழுந்தன.

அரசியல் தலையீடு ஏற்படும்பொழுது மட்டுமே சில தோட்டங்கள் கோயிலுக்கான நிலத்தை ஒதுக்கிக் கொடுத்துள்ளன. மேலும், சில வேளைகளில், தோட்ட நிலம் வேறு மேம்பாட்டிற்காக வாங்கப்படும்பொழுது, கோயில் செயற்குழுக்கள் புதிய மேம்பாட்டாளர் நிர்ணயிக்கும் விலையைக் கொடுத்து நிலத்தை வாங்க முடிந்துள்ளது. ஆனால், விலை மிக உயர்வாகவே நிர்ணயிக்கப்படுகிறது. இதனால், உட்புறங்களிலுள்ள பல தோட்டக் கோயில் நிர்வாகக் குழுக்கள், அத்தோட்டங்கள் மேம்பாட்டுத் திட்டங்களுக்காக விற்கப்பட்டால், அமைக்கப்படும் சாலையோரங்களில் கோயிலைக் கட்டிக்கொள்ள நிலம் வாங்கலாம் என எண்ணிவருகின்றனர்.

உட்புறத்திலுள்ள தோட்டக் கோயில்களின் நிலத்தை வாங்க முற்பட்டால், பொதுச் சாலையிலிருந்து கோயில்வரை செல்லும் சாலையின் பரப்பளவையும் கணக்கிட்டு நில விலை நிர்ணயிக்கப்படும் - இத்தகைய விலை கோயில் நிர்வாகங்களுக்கு இயலாத ஒன்றாகவே இருக்கும். மாநில அரசின் தலையீடு இருந்தால் மட்டுமே தோட்ட நிர்வாகங்கள் பொதுச் சாலையோரத்தில் கோயிலுக்கான நிலத்தைக் கொடுக்க இசைந்துள்ளனர்.

மேலும், சில கோயில் நிர்வாகங்கள் அரசு மற்றும், பிற அரசு இருப்பு நிலங்களில் உருவாக்கப்பட்டக் கோயில் நிலங்களைத் தங்கள் கோயில்களுக்குக் கொடுக்கக் கோரி விண்ணப்பித்துள்ளனர். சில இடங்களில் கோயில்கள் இருக்கும் இடங்கள் பொருத்தமற்றதாக அரசாங்கத்தால் கருதப்படுகிறது; மேலும், இந்தப் பிரச்சினை காலவரையின்றி, மேம்பாட்டுத் திட்டங்கள் வராதவரை தொடர்கிறது.

மலாக்கா மாநிலத்தில், சொந்த நிலத்தில் - தற்போது கையகப்படுத்தும் நிலையிலுள்ள கோயில்கள் - இருப்பவை 56 கோயில்கள் அல்லது 38.4 விழுக்காடே. மற்ற 90 கோயில்கள் அல்லது 61.6 விழுக்காடு கோயில்கள் மற்ற அரசு, தனியார் நிலங்களிலேயே இருக்கின்றன என்பதை உணரலாம்.

## பரிந்துரைகள்

2.1. மலாக்கா மாநில அரசு, அதன் துறைகளின்வழி, மாநிலத்திலுள்ள எல்லா இந்துக் கோயில்களைப் பற்றிய விவரங்களை, அரசு மற்றும், தனியார் நிலங்களிலுள்ள கோயில்கள் உட்பட, பதிவுப்பெற்ற, பதிவுப் பெறாத அனைத்தையும் உள்ளடக்கி, சேகரித்து வைத்திருப்பது நலம். இந்த விவரங்களைப் பொதுமக்களுக்கு வழங்கியும், அதன் அடிப்படையில் மாநில இந்துக்களுக்கும், கோயில் நிர்வாகங்களுக்கும் மாநில அரசு தேவையான அறிவுரைகளை வழங்குதல் நல்லது.

2.2. மாநிலத்தில் இந்து மக்கள் குடியிருக்கும் பகுதிகளைக் கணித்து, திட்டமிடுபவர்கள் குறைந்தது இரண்டு ஏக்கர் அளவுள்ள நிலபரப்பைக் கொண்ட தாய்க் கோயிலை நிறுவவும், அருகிலுள்ள நில உரிமையில்லா சிறிய கோயில்களை இந்தத் தாய்க் கோயில் வளாகத்தில் இடம்பெயர்த்துக் கொண்டுவர ஏதுவாகவும் வகை செய்தல் நல்லது. அப்படி இடம்பெயரும் கோயில்களைப் பற்றிய முழு விவரங்களும் குறிக்கப்பட்டு வைத்திருப்பது அவசியம். தாய்க் கோயிலில் எல்லா வசதிகளையும், பொது மண்டபம் உட்பட, ஏற்படுத்தி பல நடவடிக்கைகளையும் செய்ய இயலும். ஏற்கனவே இருக்கும் கோயிலையும் தாய்க் கோயிலாகத் தெரிவு செய்யலாம் - நிலப்பரப்பு எல்லா வசதிகளையும் ஏற்படுத்திக்கொள்ள ஏதுவாக இருத்தல் அவசியம்.

2.3. தோட்டங்களில் முன்புபோல் கிராமச் சூழலில் வாழும் நிலைமை இனி இல்லை. இத்தகைய வட்டாரங்களில் வாழும் இந்துக்கள் ஒற்றுமையாக, இணைந்து, வேற்றுமைகளைக் களைந்து, இத்தகைய தாய்க் கோயில் வளாகங்களுக்கு ஆதரவு தரவேண்டும். பல நடவடிக்கைகளை இத்தகைய கோயில்களில் ஏற்பாடு செய்து பயன்பெற இயலும்.

2.4. மாநில அரசு, கோயில்களுக்கான நில பட்டாக்களை வழங்கும்பொழுது, அதற்கான பிரிமியம் வரியை நிர்ணயிப்பதில் சலுகைக் காட்டவேண்டும். இதற்கான விளக்கத்தை எல்லா கோயில் நிர்வாகங்களுக்கும் கொடுத்து, அரசின் சட்டப்படி நடந்துகொள்ளும் கோயில்களுக்கே

சலுகைகள் வழங்கப்படும் என்பதைத் தெளிவுப்படுத்தலாம். முறையாகப் பதிவுப்பெற்ற மாநில அளவில் சட்டத்திட்டங்களை பின்பற்றும் கோயில்களுக்கே சலுகைகள் வழங்குவதும் சிறப்பு.

2.5. தாய்க் கோயில் நிர்வாகக் குழுவில், அதன் வட்டாரத்தில், அதன் வழிகாட்டலிலுள்ள மற்றக் கோயில்களின் பிரதிநிதிகள் பரிந்துரை 1.5-இன் படி இடம் பெற்றிருப்பது அவசியம்.

## 3.0. சங்கப் பதிவகத்தில் கோயில் பதிவு

பல கோயில் நிர்வாகங்களுக்கு, கோயிலைப் பதிவு செய்யக் கொடுக்கப்பட்டுள்ள கோட்பாடுகளும், நிபந்தனைகளும் இன்னும் புரியவில்லை. குறிப்பாகக் கோயில் நிர்வாகச் சங்கத்தைப் பதிவு செய்ய பல நிபந்தனைகள் உள. பல நிர்வாகங்கள், பக்தர்கள் சங்கம் ஏற்படுத்திக்கொண்டால் போதும் என நினைக்கிறார்கள். இத்தகைய பக்தர்கள் சங்கம் கோயிலை நிர்வகிக்கக் கூடாது என்பதை இவர்கள் புரிந்துகொள்ளவில்லை. பதிவதிகாரியும் இது குறித்து அதிகம் நடவடிக்கை எடுக்காததால் இது அப்படியே தொடர்கிறது. ஆண்டறிக்கைகளும், கணக்கறிக்கைகளும் பதிவதிகாரிக்குச் சமர்ப்பிக்கப்படுவதால், கோயில் நிர்வாகச் செலவுகள் செய்யப்படுவது தெளிவாகவே இருக்கும். எனினும், தொடர்ந்து மூன்று ஆண்டுகளுக்கு அறிக்கை சமர்ப்பிக்காதவர்கள்மீது மட்டுமே நடவடிக்கை எடுக்கப்படுகிறது. இப்படிப் பதிவு ரத்தான சங்கங்கள், தங்கள் சங்கத்தை மீண்டும் பதிவுச் செய்வதில் சிரமம் எதிர்நோக்குகிறார்கள். இத்தகைய மறுப்பு, இந்தச் செயற்குழுக்கள் சட்டரீதியாகச் செயல்படுவதை மறுக்கும் செயலாகவே இருக்கிறது.

அனைத்து தேவையான நிபந்தனைகளை நிறைவு செய்தப்பிறகு, பதிவதிகாரியின் ஆலோசனையைப் பெற்று மீண்டும் பதிவுச் செய்வதில் எந்தவிதக் கடினமும் இல்லை என்பதைச் சங்கங்களின் பதிவதிகாரி விளக்கியுள்ளார். அடிப்படை நிபந்தனையை நிறைவு செய்ய, நில உரிமையாளரிடமிருந்து கோயில் தனது நிலத்தில் இருப்பதற்கு ஒப்புக் கொள்ளும் புதிய ஒப்புதல் கடிதத்தைப் பெற வேண்டும். ஆனால், தற்போது பெரும்பாலான நில உரிமையாளர்கள் அத்தகைய ஆதரவுக் கடிதத்தைக் கொடுக்க மறுக்கிறார்கள்.

இதற்கிடையில், இந்த ஆய்வில் உள்ள 146 கோயில்களில், 13 கோயில்கள் மட்டுமே கோயில் நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன, மேலும், 63 கோயில்கள் பக்தர்கள் சங்கமாகவும் ஒன்று பண்பாட்டு, கலை இயக்கமாகவும், பதிவு செய்யப்பட்டுள்ளன. மேலும், 11 கோயில்கள் அறங்காப்பகம் அல்லது `டிரஸ்டி' கீழ் உள்ளன. அதாவது, 146 கோயில்களில் 89 கோயில்கள், அல்லது 61% மட்டுமே ஏதோ ஒருவகையான பதிவைப் பெற்றுள்ளன. மீதமுள்ள 57 கோயில்கள், அல்லது 39%, எந்தப் பதிவும் பெறவில்லை. பதிவுப்பெறாத இந்தக் கோயில்களில் பெரும்பாலானவை தனியார் அல்லது அரசுக்குச் சொந்தமான நிலத்தில் அமைந்துள்ளன. ஒருங்கிணைந்த முயற்சி ஒன்றை மேற்கொள்ளப்படாவிட்டால், கோயில் பதிவுப் பிரச்சினை தொடரவே செய்யும்.

### பரிந்துரைகள்

3.1. கோயில் பதிவின் முக்கியத்துவத்தைக் கோயில் நிர்வாகங்களுக்குத் தெளிவுபடுத்துவது மிக முக்கியம். நிர்வாகத்திலுள்ள அனைவரும் முறையாகப் புரிந்துகொள்ளும் வண்ணம், குடும்ப உணர்வில் விழிப்புணர்வை ஊட்டுதல் அவசியம்.

3.2. பதிவதிகாரியும், தற்பொழுது நடப்பிலுள்ள கோயில் நிர்வாக வகைகள் போதுமானவையா என்பதைச் சீர்தூக்கிப் பார்த்தல் நலம். மலாக்கா மாநிலம் மட்டுமல்ல, மலேசிய நாட்டிற்கும் இது அவசியம். சொந்த நிலத்தில் அமைந்துள்ள கோயில்களின் பதிவுகளில் பிரச்சினை இல்லை. எனினும், பக்தர் சங்கங்களாக இயங்கும் சில கோயில்கள் சொந்த நிலத்தில் இயங்கியபோதும், அவை தொடர்ந்து பக்தர் சங்கங்களாகவே இருப்பது தெளிவு. அவற்றை வகை மாற்றம் செய்யத் தெளிவான கோட்பாடுகளைக் காணோம்.

**(சங்கங்களின் பதிவதிகாரி 'துணைப்பிரிவுகள்' புதுப்பிக்கப்பட்டுள்ளது என்பதை விளக்கினார். ஆனால், பக்தர்கள் சங்கத்திலிருந்து நிர்வாகச் சங்கமாகப் பெயரை மாற்ற வேண்டிய ஒரு கட்டாயம் இல்லை. ஏனெனில், இந்தச் சங்கங்கள் நீண்ட காலத்திற்கு முன்பே தோற்றுவிக்கப்பட்டிருப்பதால் சங்கத்தின் தரப்பில் சிரமங்கள் ஏற்படும். மேலும், பெயருக்கு ஒத்ததாக வங்கிக் கணக்கில் பெயர், சங்கத்தின் சொத்துக்கள், சங்கத்தின் நுழைவாயில் போன்றவை உள்ளன. கடந்த 2019-ஆம் ஆண்டு செப்டம்பர்**

**திங்கள் 23-ஆம் நாளன்று நடந்த பொதுக் கலந்துரையாடல் நிகழ்வில் (ஒழுங்குப்படுத்தும் திட்டத்தின் 2-வது தொடர்) இந்த முடிவு எடுக்கப்பட்டது. இந்த நிகழ்ச்சியில் மலாக்கா மாநிலத்தின் வீட்டுவசதி, உள்ளாட்சி, சுற்றுச்சூழல் மற்றும், பசுமை தொழில் நுட்பத்திற்கான முன்னாள் ஆட்சிக்குழு உறுப்பினர் மாண்புமிகு டத்தோ தே கோக் கீவ் கலந்து கொண்டார்'.)**

நிர்வாகக் கழகத்தில் பெயர் மாற்றம் ஏற்படும்போது கட்டாயம் சில நிர்வாக விஷயங்கள் செய்யப்பட வேண்டும் என்றாலும், அது கோயில் பிரிவின் அடிப்படை விதிகளின்படி பொருத்தமாக இருக்கும் என்று இந்த ஆய்வுக் குழு கருதுகிறது. மலாக்காவில் நடைபெற்ற ஒரு கலந்துரையாடல் வழி எடுக்கப்பட்ட இது போன்ற ஒப்புதல்களை நன்கு ஆராயாமல் அனுமதிக்கப்பட்டால், எதிர்காலத்தில் பல சிக்கல்கள் ஏற்படக்கூடும்; ஏனெனில், மலாக்காவில் உள்ள கோயில் பக்தர்கள் சங்கத்தில் பல்வேறு பிரிவுகள் வருங்காலங்களில் இருக்கக்கூடிய வாய்ப்புகள் அதிகம். மேலும், சம்பந்தப்பட்ட பிரிவு மற்றும், அதன் பொருளைத் தேசிய மட்டத்தில் சங்கங்களின் பதிவதிகாரியால் வரையறுக்கப்படுகிறது; இதை மாநில அளவில் மாற்ற இயலாது; மேலும், எந்தக் குழப்பமும் பின்னர் ஏற்படாத வகையில் தேசிய மட்டத்தில் மட்டுமே இது சம்பந்தமாக முடிவு செய்யப்பட வேண்டும்.

3.3. தனியார் மற்றும், அரசாங்க நிலங்களில் வீற்றிருக்கும் கோயில்கள், அவற்றின் நில உரிமையாளர்களின் எழுத்துப்பூர்வமான அனுமதி கடிதம் இருந்தால், அவற்றைப் பக்தர்கள் சங்கங்களாகப் பதிந்துகொள்ள அனுமதி கொடுக்கப்பட்டு, இந்தச் சங்கங்கள் கோயில்களை முழுமையாக நிர்வகிப்பதும், நடைமுறையில் உள்ளது. நில உரிமையாளர் பெரும்பாலும் இந்துக்களாக இருப்பதில்லை. பக்தர்கள் சங்கம் அவ்வட்டார நடவடிக்கைகளில் கலந்துகொள்ளலாமே தவிர நிர்வாகம் செய்ய இயலாது. எனினும், அவர்களின் ஆண்டறிக்கைகள் கோயில் நிர்வாகத்தைத் தெளிவாகக் காட்டிய போதிலும் பதிவகம் ஏற்றுக்கொள்வது இந்த வகை சங்கத்திற்கு ஏற்புடையது அல்ல. எனவே, பதிவதிகாரி, இத்தகைய கோயில்களுக்கு வேறுவிதமான பதிவை அறிமுகம் செய்தல் நல்லது. தனியார் நிலங்களில், எழுத்து அனுமதியுடன் கோயில் வீற்றிருந்தால், அந்தக் கோயில் இந்து உறுப்பினர்களின் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படும் செயற்குழுவினர் கோயிலை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்கவும், நில உரிமையாளர் அந்தக் கோயிலின் புரவலராகவும் இருக்க வகை செய்தல் நல்லது. நிலம் விற்கப்பட்டால், புதிய உரிமையாளர் முந்தைய உரிமையாளரின் புரவலர் பொறுப்பை ஏற்கவும், மேம்பாட்டிற்காக நிலம் பயன்படுத்தப்பட்டால், கோயில் நலன் காக்கவும் வழி இருக்கும். இதன்வழி, இத்தகைய பக்தர்கள் சங்கம் மற்றவர் நிலத்திலுள்ள கோயில்களை நிர்வகிக்கும் பொறுப்பைக் கொண்ட அமைப்பாகவே இருக்கும்.

மறுபுறம், சங்கங்களின் பதிவாளர், கோயிலைத் தொடர்ந்து பயன்படுத்தலாமா இல்லையா என்பதையும் கோயில் செயற்குழுவினரை அனுமதிப்பதும் நில உரிமையாளர்களின் உரிமை என்று கருதுகிறார். இந்தக் கருத்து உண்மையில் நியாயமானது. மேலும், ஒரு சங்கம் நில உரிமையாளரால் கோயிலைத் தொடர்ந்து பயன்படுத்த அனுமதிக்கப்படாவிட்டால், அத்தகைய சங்கம் ஒரு தற்காலிகச் சங்கமாக வகைப்படுத்தப்பட வேண்டும். அதனால், கீழே உள்ள 3.4-இல் பரிந்துரைக்கப்பட்டது போல் அவர்கள் கோயிலுக்காகச் சொந்த மாற்று நிலத்தைக் கண்டுபிடித்து ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் (எ.கா. 5 ஆண்டுகளில்) கோயிலை வேறு நிலத்திற்கு மாற்ற வேண்டும் எனும் நிபந்தனை விதிக்கலாம்.

3.4. எழுத்துமூலம் அனுமதி இல்லாத, தனியார், அரசாங்க நிலங்களில் நிறைய கோயில்கள் இருக்கின்றன. இந்தக் கோயில்களின் நிர்வாகத்தைச் செயற்குழுவினர் செய்தே வருகின்றனர். பதிவதிகாரி இத்தகைய கோயில்களை அப்படியே விட்டுவிடுவதால், மேலும் பலர், நில உரிமையாளர் அனுமதியின்றி கோயில்களை நிறுவ எத்தனிக்கின்றனர். சங்கப் பதிவதிகாரி இத்தகைய கோயில்களை நிர்வகிக்கும் செயற்குழுக்களையும் தற்காலிக கோயில் நிர்வாகங்களாகப் பதிவு செய்தல் அவசியம். இத்தகைய தற்காலிகச் சங்கங்களுக்கு ஆக அதிகம் ஐந்து ஆண்டுகால அவகாசம் கொடுத்து, அந்தக் காலக் கட்டத்திற்குள் கோயிலுக்கான சொந்த நிலத்தைத் தேடிக்கொண்டு முறையான பதிவைப் பெறவோ நில உரிமையாளரின் எழுத்துப்பூர்வ அனுமதியைப் பெற்று பக்தர்கள் சங்கப் பதிவைப் பெறவோ வாய்ப்பு கொடுக்கவேண்டும். கோயில் வகை மாறினால், அதற்கேற்ற பதிவுமாற்றம் ஏற்படும். ஆயினும், கொடுக்கப்பட்ட காலக் கெடுவின் இறுதிவரை ஒன்றும் செய்ய இயலாத செயற்குழுக்கள், பதிவு ரத்தாகி, தொடர்ந்து செயல்பட முடியாத நிலை வரும்.

**(ஐந்தாண்டுக் காலத்திற்குக் கோயில்களுக்கான தற்காலிகச் சங்கங்களைப் பதிவு செய்வது எனும் கருத்திற்கு விளக்கமளித்த சங்கங்களின் பதிவதிகாரி, இதை ஒருங்கிணைக்க அனைத்து மாநிலங்களும்**

**சம்பந்தப்பட்டதாக உள்ளதால், தலைமையக மட்டத்தில் மேலும், அதிகமான ஆய்வுத் தேவைப்படுகிறது என்று கூறுகிறார். நில விவகாரங்களைப் பொறுத்தவரை, மலேசியச் சங்கங்களின் பதிவாளர் துறையின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டது எனச் சங்கங்களின் பதிவதிகாரி தெளிவுபடுத்துகிறார். சட்டப்பூர்வமான நிலத்தில் கோயில் கட்டுமானத்தின் நிலையைச் சரிபார்க்க மாநில அளவில் உள்ளூர் ஆட்சி மன்ற (கே.டி) மற்றும், மாவட்ட மற்றும், நில அலுவலகத்திற்கு (பி.டி.ஜி) அதிகாரம் உள்ளது எனவும் தெளிவுபடுத்தியுள்ளார்.)**

3.5. அதேபோல், கோயிலை முன்கூறிய மூன்று விதப் பதிவுகளை முறையாக செய்யவிரும்பாத கோயில் நிர்வாகங்கள் சட்டப்படி இயங்காதவையாகக் கருதப்படவேண்டும். அவற்றின் நடவடிக்கைகளை முடிவிற்குக் கொண்டுவரும் முயற்சியில் இறங்குவதே, மாநிலத்தில் கோயில் நிர்வாகத்தில் ஓர் ஒழுங்கையும் முறைமையையும் ஏற்படுத்துவதற்கான வழி.

3.6. பதிவதிகாரி, பக்தர் சங்கங்களை முறையாகப் பிரித்துப் பார்க்கவேண்டும். குறிப்பிட்ட தெய்வ பக்தர்கள் சங்கத்திற்கும், குறிப்பிட்ட கோயிலின் பக்தர்களுக்கும் வேறுபாடு உண்டு. எடுத்துக்காட்டாக, ஸ்ரீஅய்யனார் பக்தர்கள் சங்கம், பத்தாங் மலாக்கா என்பதற்கும், பத்தாங் மலாக்கா ஸ்ரீஅய்யனார் கோயில் பக்தர்கள் சங்கம் என்பதற்கும் வேறுபாடு உண்டு. இரண்டாமவது கோயிலை நிர்வகிக்கும் பக்தர்கள் சங்கம் என்பது தெளிவு. அத்தகைய பதிவை அனுமதிக்க, சங்கங்களின் பதிவதிகாரி, பத்தாங் மலாக்கா தோட்டத்தின் ஸ்ரீஅய்யனார் கோயில் பக்தர்கள் சங்கம், என்ற பெயரில் பதிவு செய்ய அனுமதிக்க வேண்டும், காரணம் இது பத்தாங் மலாக்கா ஸ்ரீஅய்யனார் பக்தர்களின் சங்கத்திலிருந்து வேறுபடுகிறது. ஏனெனில், இவை இரண்டும் செயல்பாட்டில், அடிப்படையில் வேறுபடுகின்றன.

முன்குறிக்கப்பட்ட மாற்றங்கள் கோயில் பதிவுகளில் ஓர் ஒழுங்கையும், முறையையும், மலாக்கா மாநிலத்தில் மட்டுமல்ல, மலேசிய நாட்டிலும் கொண்டுவரும் என்பதால், இதை முறையாகப் பதிவதிகாரியுடன், மாநில அரசும், உள்ளூர் ஆட்சி மன்றங்களும், ஒருங்கிணைந்து மாநில, மாவட்ட அளவில் செயல்படுத்தவேண்டும். இந்த அமைப்புகளின் நடவடிக்கைகளை மிகவும் துல்லிதமாகப் பிரித்து இந்துக் கோயில்களுக்கு இன்னல்களை ஏற்படுத்துவதைத் தவிர்க்கவேண்டும். மேலும், மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துக் கோயில்களின் விவகாரங்களில் ஒழுங்கைக் கொண்டுவர இந்த அனைத்து அரசு நிறுவனங்களுக்கும் இடையிலான ஒருங்கிணைப்பும், ஒத்துழைப்பும் மிக அவசியம்.

## 4.0. தேர்ச்சிப்பெற்ற கோயில் குருக்கள்

எந்தச் சமயத்திலும், வழிபாட்டு மையங்களில் தலைமை சமய அறிஞரின் பங்கு அபரிதமானது. பக்தர்களுக்கு வழிகாட்டுவதற்கும், ஆலோசனைகளைக் கூறுவதற்கும், சமயம் சம்பந்தமான வழிகாட்டலைக் கொடுப்பதற்கும், அன்றாட வாழ்க்கை நெறிகளைப் புகட்டுவதற்கும் இவரின் பணி பெரியது. இந்தப் பணியைச் சிறப்பாகவும், பயன்பெறும் வகையிலும் செய்யவேண்டுமாயின், சமயக் குருக்கள் இந்துச் சமயச் சித்தாந்தங்களிலும் வாழ்க்கை நெறி முறைகளிலும் தேர்ச்சி பெற்றவராகவும், அனுபவமிக்கவராகவும் இருத்தல் மிக அவசியம்.

மலாக்கா மாநில இந்துக் கோயில்களில், ஐயர், அர்ச்சகர், குருக்கள், பூசாரி ஆகியோர் சமய வழிகாட்டிகளாக இருக்கின்றனர். கோயில் நிர்வாகத்தினர் சமய நடவடிக்கைகளை இத்தகைய சமய வழிகாட்டிகளின் ஆலோசனைகளின்வழி ஏற்பாடு செய்கின்றனர். இந்த ஆய்வு மலாக்கா மாநில கோயில்களில் உண்மையாகவே முறையான பயிற்சி பெற்ற குருக்கள் 15 பேர் மட்டுமே இருப்பதையும், மேலும், 57 பேர் தேர்ச்சி பெற்ற குருக்களிடம் பயிற்சி பெற்று வருபவர்கள் என்பதையும், மற்ற 61 பேர் எத்தகைய முறையான பயிற்சியும் பெறாமல், அனுபவத்தைக் கொண்டு கோயில்களில் பணியாற்றுகிறார்கள் என்பதையும் காட்டுகிறது. சில கோயில்களில் அவற்றை நிறுவியவர்களே, பயிற்சி பெறாத நிலையிலும், குருக்கள் பொறுப்பை வகிக்கிறார்கள். இது கோயில்களை நாடிவரும் பக்தர்களுக்கு முழுமையான சேவையை ஆற்ற இயலாத நிலைமையைக் காட்டுகிறது. இந்த நிலைமை இந்துச் சமயப் போதனைகளுக்கு அப்பால் மற்ற முறைகளையும் சடங்குகளையும் கோயில்களில் நடைபெற வகை செய்கிறது என்றும் சொல்லலாம். இத்தகைய நடைமுறைகள் இந்துச் சமயப் போதனை குறைந்த நிலையில் வாழும் பல இந்துக்களை ஈர்த்துள்ளதையும் பார்க்க முடிகிறது. மலாக்கா மாநில இந்துக் கோயில்களில் போதிய முறையான பயிற்சி பெற்ற குருக்கள் இல்லாதிருப்பது ஒரு பெரிய குறையே. இந்த ஆய்வு, முழுநேர குருக்களாக 49 பேர் மட்டுமே மலாக்கா கோயில்களில் பணிபுரிகின்றனர் என்பதையும், மேலும், 88 பேர் பகுதி நேரப் பணியாளர்களாக மாநிலத்தில் இருக்கும் 146 கோயில்களில் இருக்கின்றனர் என்பதையும் காட்டுகிறது.

பெரும்பாலான கோயில் நிர்வாகங்கள் குருக்களுக்கான ஊதியத்தைக் கொடுப்பதில் சிரமம் கொண்டுள்ளார்கள் என்று சொன்னாலும், பொதுவாகத் தேர்ச்சிப் பெற்ற குருக்களின் சேவை ஆண்டுத் திருவிழா, அல்லது கும்பாபிஷேகம் சமயங்களில் இருந்தால் போதும் எனும் எண்ணம் வேரூன்றியுள்ளது. சில கோயில்களில், குருக்களிடம் சமயச் சடங்குகள் சம்பந்தமான முடிவெடுக்கும் உரிமையைக் கோயில் செயற்குழுவினர் கொடுக்க விரும்பாததும் ஒரு காரணம். இத்தகைய தன்மைகளினால் கோயில்களை நாடி வரும் பக்தர்களுக்கு முறையான சமய வழிகாட்டலைக் கொடுப்பதில் தொய்வு உண்டாகிறது.

மேலும், சில கோயில் நிர்வாகங்கள், குடிநுழைவுத் துறை தேர்ச்சிப் பெற்ற குருக்களைத் தமிழ் நாட்டிலிருந்து வரவழைக்க அனுமதி தராததைக் காரணம் காட்டியுள்ளார்கள். உள்நாட்டில் பயிற்சிபெறும் குருக்களைவிட தமிழ் நாட்டில் பயிற்சி பெற்று வருபவர்கள் மேல் என எண்ணுகிறார்கள்.

எப்படி இருப்பினும், முறையான தேர்ச்சிப் பெற்ற குருக்கள் இல்லாத நிலையில், கோயில்களின் சமய ரீதியிலான தலைமைத்துவம் கேள்விக்குறியாகி, கோயில்களை நாடும் பக்தர்களின் எண்ணிக்கையும் குறைக்க வாய்ப்புள்ளது. இதனால், தங்கள் வீடுகளிலேயே சமய வழிபாட்டை வைத்துக்கொள்ளும் பழக்கமும் பெருகியுள்ளது. நல்ல அறிவுரைகளைக் கூறக்கூடிய, பூஜை முடிந்தவுடன் கவர்ச்சிகரமாகப் பல சமயத் தலைப்புகளிலும் சொற்பொழிவுகளை ஆற்றக்கூடிய குருக்கள் இருக்கும் கோயில்களில் பக்தர்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். பல தரமான கோயில் தொடர் நடவடிக்கைகளை எல்லா வயதினருக்கும் ஏற்றாற்போல் அமைத்துக்கொடுப்பதில் தேர்ச்சி பெற்ற குருக்கள், கோயில் நிர்வாகத்திற்குப் பெரும் துணையாக இருந்து, வழி காட்ட இயலும்.

## பரிந்துரைகள்

4.1. கோயில் நிர்வாகங்கள் பயிற்சிப்பெற்ற குருக்களை நியமித்து கோயில் சமய நடவடிக்கைகளை மெருகூட்டுவதற்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். கோயில் பெயர் உயர்வதுடன் அதிக பக்தர்களைக் கோயிலுக்கு வரவழைக்க இது பயன்படும். பூஜை சடங்குகளுக்கு அப்பால், பல நல்ல சமய நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்ய, தேர்ச்சி பெற்ற குருக்களால் உதவமுடியும். இன்றுள்ள பல கோயில்களில் இத்தகைய நடவடிக்கைகளுக்குப் போதுமான வசதிகள் இல்லை. எனவேதான், ஒரு வட்டாரத்திலுள்ள சிறு கோயில்கள் தாய்க் கோயிலின் கீழ் இயங்கி இத்தகைய நடவடிக்கைகளை, இணைந்து செயல்படுத்துதல் நல்லது.

4.2. கோயில்களில் தேர்ச்சிப்பெற்ற குருக்கள் இருக்கவேண்டுமாயின், முன்குறிப்பிடப்பட்டுள்ள 1.0 பிரிவின் பரிந்துரைப்படி தாய்க் கோயிலின் கீழ் வட்டாரத்திலுள்ள மற்றக் கோயில்களின் ஒருங்கிணைப்பு அவசியம். மலாக்கா மாநிலத்திலுள்ள சிறிய எண்ணிகையிலான இந்துக்கள் அப்போதுதான் தங்கள் வட்டாரத்திலுள்ள தாய்க்கோயிலில் முறையான வசதிகளை ஏற்படுத்திக்கொள்ள முடியும்.

4.3. குருக்கள் மத்தியிலும் வெவ்வேறு வகை பயிற்சிகள் கொடுக்கப்படுவதால், மலேசிய நாட்டிற்குப் பொருத்தமான இந்துச் சமயப் பயிற்சியை மேற்கொண்ட குருக்களைத் தெரிவு செய்தல், இந்நாட்டில் இந்துச் சமய நல்லிணக்கத்திற்கும் சுபிட்சத்திற்கும் நல்லது. மலேசிய இந்து சங்கம் இது சம்பந்தமாக அரசிற்கு ஆலோசனை கூறிவருகிறது. கால வளர்ச்சிக்கு ஏற்ப, தமிழில் அர்ச்சனை செய்யக்கூடிய குருக்களுக்கு முன்னுரிமை கொடுப்பதும் நல்லது.

4.4. மலாக்கா மாநில இந்துக் கோயில்களின் சம்மேளனம் அல்லது மற்ற ஒருங்கிணைப்பு அமைப்பு நிறுவப்பட்டால், இந்தக் குருக்கள் சம்பந்தமான விசயங்களில் அதன் பங்கை ஆற்றவேண்டும்.

4.5. எல்லா மாநிலங்களிலும் இந்துக் கோயில்களின் சம்மேளனங்கள் ஏற்படுத்தப்பட்டால், மலேசிய ரீதியில், முறையான குருக்களுக்கான பயிற்சியைத் தரமான இளைஞர்களுக்குக் கொடுக்க பயிற்சித் தலங்களை உருவாக்கலாம். இதை மற்ற ஒருங்கிணைப்பு அமைப்புகளும் முன்னின்று செய்யலாம் - ஆனால், பெரும்பாலான கோயில் நிர்வாகங்கள் இத்தகைய முயற்சிக்கு ஆதரவு கொடுப்பதை உறுதி செய்யவேண்டும்.

## 5.0. தொடர்ச்சியாகக் கோயிலின் பயன்பாடு

முழுமையான கோயில் என்பது பக்தர்களின் பயன்பாட்டிற்காக நாள்தோறும் - காலை தொடங்கி இரவு பத்து மணி வரை திறந்திருக்க வேண்டும். கோயிலில் பல தரப்பினருக்குமான நடவடிக்கைகள் தொடர்ந்து நடைபெறுதல் அவசியம். மலாக்காவில் பத்து கோயில்களுக்கும் குறைவானவையே தொடர்ந்து திறந்திருக்கின்றன. இந்தக் கோயில்களில் மட்டுமே பக்தர்கள் கோயில் குருக்களையோ நிர்வாகத்தினரையோ பூஜை நேரத்திற்கு அப்பாலும் சந்திக்க முடிகிறது. பெரும்பாலான கோயில்கள் காலை பதினொன்று மணி வரை மட்டுமே திறந்திருக்கின்றன, பின்னர் மாலை ஆறரை மணி முதல் இரவு பத்து மணி வரை திறந்திருக்கின்றன. இந்தச் சமயங்களிலேயே பக்தர்கள் குருக்களையும், நிர்வாகத்தினரையும் சந்திக்க முடியும்.

பெரும்பாலான மலாக்கா மாநிலக் கோயில்கள் பூஜை நேரங்களில் மட்டுமே செயல்படுகின்றன. பக்தர்கள் வருகிறார்கள். திருவிழாக் காலங்களில் கோயில்கள் களை கட்டுகின்றன. வார இறுதிகளில் வகுப்புகளை நடத்தும் கோயில்களில் குறிப்பிட்ட நேரங்களுக்கு மட்டும் கோயில் திறந்திருக்கின்றன. வசதிகள் குறைவாக இருப்பதும், பணப் பற்றாக்குறையும் இத்தகைய நிலையை உருவாக்கியுள்ளது. குறிப்பாக, இவ்வட்டாரங்களிலுள்ள பெரும்பாலான இந்துச் சமயப் பக்தர்களின் வாழ்க்கை தரத்தை ஒப்பிடும்பொழுது இதைப் புரிந்துகொள்ளலாம். பொருளாதார ரீதியில் உயர் நிலையிலுள்ள பக்தர்கள் நிறைந்த கோயில்களிலும், கல்வித் துறையில் உயர்ந்துள்ள நிர்வாகத்தின்கீழ் இயங்கும் கோயில்களிலும் வசதிகளை அதிகமாக்கும் திட்டங்களைப் பார்க்கிறோம். பெரும்பாலான மற்றக் கோயில் நிர்வாகங்கள், பாரம்பரியமாக நடத்தப்படும் நடவடிக்கைகளே போதும் எனும் மனத் திருப்தியில் இருப்பதைக் காண முடிகிறது. சக்திவாய்ந்த தெய்வங்கள் இத்தகைய கோயில்களில் குடி கொண்டிருப்பதாகக் கூறி, இத்தகைய கோயில்கள் அப்படியே தொடர்ந்து இருக்கவேண்டும் என உணர்வுப்பூர்வமான வாதம் புரிபவர்கள் இருக்கின்றார்கள்.

### பரிந்துரைகள்

5.1. தாய்க் கோயில்களில் முழுநேர நிர்வாகி இருப்பது முக்கியம் - சம்பளம் கொடுத்தோ அல்லது, பதவி ஓய்வு பெற்ற தன்னார்வலரோ இந்தப் பதவியில் இருக்கலாம். இவருக்குத் துணையாக நிர்வாகக் குழுவிலிருந்து மற்றவர்கள் சேர்ந்து கொள்ளலாம். கோயில் திறந்திருக்கும் நேரங்களில் இவர்கள் கோயிலில் ஒருவராவது, கோயில் சேவையை நாடி வருபவர்களைக் காணவும், கோயிலின் நடவடிக்கைகளைக் கண்காணிக்கவும் இருப்பது அவசியம்.

5.2. கோயில் நிர்வாகியின் பொறுப்பு தாய்க் கோயில் செயற்குழுவிற்குத் துணை நின்று தினசரி நடவடிக்கைகளை ஒருங்கிணைத்து, அவை திட்டமிட்டபடி நடைபெறுகின்றனவா என்பதைக் கண்காணிப்பதாகும். கோயிலுக்கு வருகைதரும் பக்தர்களைச் சந்திப்பதும், கோயில் குருக்களுடனும், கோயில் தலைவருடனும் இணைந்து தேவைக்கேற்ப செயல்படுவதும், அத்துடன், தாய்க் கோயிலுக்குக் கீழ் இயங்கும் மற்றக் கோயில்களின் நடவடிக்கைகளையும் கண்காணிப்பதும், துணை புரிதலும் நிர்வாகியின் பணிகளுள் அடங்கும்.

5.3. தாய்க் கோயில் வளாகத்தில் நிர்வாக அலுவலகம் இருத்தல் அவசியம். அதில், கோயில் பற்றிய எல்லா நிர்வாகக் கோப்புகளும் விவரங்களும் முறையாக இருத்தல் சிறப்பு.

5.4. கோயில் வளாகத்தைக் கண்காணிக்க ஒரு காவலாளி பணிக்கு அமர்த்தப்படுவது அவசியம். இரவு நேரங்களில் இவர் பணி புரிதல் அவசியம். முக்கிய இடங்களில் கண்காணிப்பு காமெராக்கள் பொருத்தப்படுவதும் நல்லது.

5.5. கோயில் நிர்வாகி, குருக்கள் மற்றும், கோயில் செயற்குழு அனைவரும் இணைந்து, கோயிலின் நடவடிக்கைகள், எல்லா வயதினருக்கும், தரப்பினர்களுக்கும், இரு பாலாருக்கும், சமயக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு, போதுமானவையாகவும், கவர்ச்சிகரமாகவும் இருப்பதை உறுதி செய்தல் வேண்டும்.

## 6.0. கோயில்களில் முழுமையான வசதிகள்

மலாக்கா மாநில இந்துக் கோயில்களில் தற்பொழுது இருக்கும் வசதிகளைக் கவனித்தால், பெரும்பாலும் பூஜை நேரங்களில் வழிபடும் மையங்களாகவே ஏற்படுத்தப்பட்டு நடைமுறையில் இருப்பது தெளிவு. பல கோயில்களில் கழிப்பறைகள் இல்லை, குருக்கள் தங்கும் வீடு இல்லை, நடவடிக்கைகளுக்கான மண்டபங்கள் இல்லை. பெரும்பாலான கோயில்களில் வழிபடும் இடத்தையே பயன்படுத்தி நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

இருக்கும் வசதிகளுக்கேற்ப கோயில் செயற்குழுவினர் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்வது தெரிகிறது. சுற்றுவட்டார இந்துப் பக்தர்களுக்குப் போதுமான பல தரப்பட்ட நிகழ்ச்சிகளை நடத்த வசதிகளை ஏற்படுத்தும் எண்ணம் குறைவாகவே உள்ளது. திருவிழாச் சமயங்களில் தற்காலிகப் பந்தல்களைப் போட்டு தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்கின்றனர். இது இந்தச் சமுதாயத்தின் பழைய நிலைமையைப் பிரதிபலிக்கிறது. கால மாற்றத்திற்கு ஏற்பவும், இன்றைய சமுதாயத் தேவைகளுக்கேற்பவும் கோயில்கள் மாறவில்லை என்பதும் உண்மை.

மலாக்கா மாநிலத்தில் வாழும் ஏறத்தாழ ஐம்பதாயிரம் இந்துக்களுக்கு 146 கோயில்கள் இருப்பதால், எல்லா கோயில்களும் சகல வசதிகளையும் கொண்டிருக்கத் தேவையில்லை. மாநிலத்தில் 15-20 தாய்க் கோயில்களை வட்டாரந்தோறும் சரியாகத் தெரிவு செய்து, அவற்றில் சகல வசதிகளையும் ஏற்படுத்தினால் அந்தந்த வட்டார இந்துப் பக்தர்களுக்குத் தாங்கள் வாழும் வட்டாரத்திலேயே முழுமையான வசதிகளைக் கொண்ட கோயில் நல்ல பலனைத் தரும். இப்படிச் செய்தால் 2,500-3,000 இந்து பக்தர்களுக்கு ஒரு தாய்க் கோயில், போதுமானதாக இருக்கும், அதாவது, ஏறத்தாழ 500-600 இந்துக் குடும்பங்களுக்கு ஒரு தாய்க் கோயில்.

நீதிமன்ற அனுமதியுடன் 'ட்ரஸ்ட்' வழி நடத்தப்படும் கோயில்களும், அருள்வாக்கு வழங்கும் கோயில்களும், மாமிச உணவை அனுமதிக்கும் கோயில்களும் தொடர்ந்து அப்படியே இருக்க விரும்பலாம் - அவர்களுடைய தனித் தன்மைகளைத் தக்கவைத்துக் கொள்ள எண்ணலாம். மாநில ரீதியான ஒருங்கிணைப்புக்கு ஆதரவு கொடுப்பதில் மௌனம் சாதிக்கலாம்.

எனினும், மற்றக் கோயில்கள் இதை செய்ய முடியும். அரசின் ஆதரவையும், அரசாங்கத்துறைகளின் ஆதரவையும் பெற்று, ஒற்றுமையாக நடவடிக்கை எடுத்தால், தாய்க் கோயில்களே இந்த மாநில இந்துக்களை உண்மையில் பிரதிநிதிக்கின்றன என்பதைக் காட்டமுடியும்.

## பரிந்துரைகள்

6.1. மற்றவர்களின் நடவடிக்கைகளுக்குக் காத்திராமல், கோயில் நிர்வாகங்களின் தலைவர்களே முன்வந்து அவரவர் வட்டாரங்களில் கேந்திரமான 15 - 20 தாய்க் கோயில்களை அடையாளம் காணலாம். அவை ஏற்கனவே இருக்கும் கோயில்களாகவோ, இந்துக்கள் அதிகம் வாழும் பகுதியில் இடம்பெயர்த்து புதிய இடத்தில் அமைக்க வேண்டிய கோயிலாகவோ இருக்கலாம். இந்துக்கள் அதிகம் வாழும் இடங்களில் அவை இருப்பது அவசியம். ஒவ்வொரு தாய்க் கோயிலின் கீழ், அவ்வட்டாரத்திலுள்ள மற்றக் கோயில்கள் இயங்க அவற்றை அடையாளம் காணலாம்.

6.2. ஒவ்வொரு கோயில் வட்டாரத்திலும் இருக்கும் மற்றச் சிறிய கோயில்கள் வழிபாட்டிற்கு மட்டும் பயன்படுபவையாகக் கொள்ளலாம். தாய்க் கோயில் நிர்வாகக் குழுவில் ஈடுபட்டு, சில வழிபாட்டு நிகழ்ச்சிகளை இத்தகைய கோயில்களிலும் நடத்தலாம்.

6.3. ஏதாவதொரு காரணத்திற்காக, வட்டாரத்தில் இயங்கும் கோயில்கள் இடம்பெயரும் கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டால், தாய்க் கோயிலின் வளாகத்தில் அதன் அரவணைப்பில், அத்தகைய கோயிலை இடம்பெயர்ப்பதுடன், அத்தகைய கோயிலின் வரலாற்றை முறையாகப் பதிவு செய்தல் வேண்டும்.

6.4. ஒவ்வொரு தாய்க் கோயிலின் கீழ் இயங்கும் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள், உபயங்களைத் தாய்க் கோயிலின் செயற்குழு முடிவு செய்து, அந்த வட்டார இந்துக்களுக்குப்

பயன்படும் வகையில் இருப்பதைப் பார்த்துக் கொள்ளவேண்டும். அரசு மான்யங்களும் ஒவ்வொரு வட்டார தாய்க் கோயில்களின் வழியே விண்ணப்பிக்கப்பட்டு பெறுதல் சிறப்பு.

6.5. தாய்க் கோயிலில் சகல வசதிகளையும் ஏற்படுத்திக்கொள்ள திட்டம் தீட்டி முயற்சியில் இறங்கவேண்டும். இடப்பற்றாக்குறை இருப்பின் சில வசதிகளை, அவ்வட்டாரத்திலுள்ள மற்றக் கோயில்களில் வைத்துக்கொள்ளலாம். ஒவ்வொரு மாவட்டத்திலுள்ள தாய்க் கோயில்களில் ஒன்றை தேர்ந்தெடுத்து, அந்த மாவட்ட முதன்மை தாய்க் கோயிலில் எல்லா வசதிகளையும் கொண்ட கல்யாண மண்டபம் ஒன்றை நிறுவுதல் சிறப்பு. இத்தகைய மண்டபம் அந்த மாவட்ட இந்துக்கள் சார்பில் பல நிகழ்ச்சிகளை நடத்தப் பயன்படும். மற்றத் தாய்க் கோயில்களில் சிறிய மண்டபங்கள் இருந்தால் போதுமானது.

6.6. ஒவ்வொரு தாய்க் கோயிலிலும் இருக்க வேண்டிய வசதிகள்:

6.6.1. கோயிலின் முதன்மை தெய்வத்திற்கான கட்டடம் அரண்மனை வடிவில் இருப்பதுடன் ஆகம முறைப்படி கட்டப்பட்டிருப்பது உத்தமம்.

6.6.2. மற்றத் தெய்வங்களுக்கான பீடங்கள்.

6.6.3. கோயில் அலுவலகம், குருக்கள், கோயில் நிர்வாகி, நாதஸ்வர-இசைக் கலைஞர்கள் தங்கும் இடம், பொருள்களை வைக்கும் இடம்.

6.6.4. சமையல் அறை, சமைப்பதற்கான வசதிகள், சாப்பாடு பரிமாறும் இடம், போதுமான கழிப்பறைகள்.

6.6.5. குளிர்சாதன வசதிகளுடன், நவீன தளவாடங்களுடன் கூடிய வகுப்பறைகள், நூலகம் / வாசகசாலை, பலநோக்கு மண்டபம், நாற்காலி - மேஜைகள்.

6.6.6. மாவட்டம் தோறும், முதன்மை தாய்க் கோயிலில் முழுமையான கல்யாண மண்டபம், மணமக்களுக்கான அறைகள், ஒப்பனை செய்யும் வசதிகள், நாற்காலி-மேஜைகள், பயிற்சிகளில் கலந்துகொள்ளும் இருபது ஆண்கள், இருபது பெண்கள் தங்கும் விடுதிகள்.

6.6.7. ரதம் வைக்க இடம்.

6.6.8. சமயச் சடங்குகளுக்கான வசதிகள் - எடுத்துக் காட்டு: தீமிதிக்கான இடம், கிணறு, தண்ணீர் எடுக்கும் இடம், காலணி வைக்கும் இடம்.

6.6.9. கார் நிறுத்தும் இடம் / போதுமான தண்ணீர் - மின்சார வசதிகள்.

6.6.10. கோயிலில் பயன்படும் பொருள்களை விற்கும் இடம்.

6.6.11. இடம்பெயர்ந்து வரும் மற்றக் கோயில்களைத் தாய்க் கோயிலில் நிறுவ இட ஒதுக்கீடு, மற்றும், கோயில் செயற்குழுவினர் முடிவுசெய்யும் மற்ற விசயங்கள்.

## 7.0. கோயில்களில் உயிர்ப் பலி

இந்த ஆய்வில், மலாக்கா மாநில இந்துக் கோயில்களில் 32 கோயில்களில் இன்னமும் மாமிசம் பரிமாறும் பழக்கம் இருப்பதைக் கண்டோம். கடா, அல்லது சேவல் பலிகொடுப்பதை இந்தக் கோயில்கள் வழக்கமாகக் கொண்டிருக்கின்றன. அண்மைக் காலங்களில் இத்தகைய கோயில்கள் இந்து இளைஞர்களை வெகுவாகக் கவர்ந்துவருகின்றன. உட்புறங்களில் அமைந்துள்ள இத்தகைய புதிய கோயில்கள் அனைத்தும் உயிர் பலி கொடுக்கும் கோயில்களாகவே திகழ்கின்றன. இது தற்கால இந்துச் சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றும் இந்துப் பக்தர்களுக்கும், சமய அறிஞர்களுக்கும் சவாலாகவே இருக்கின்றது.

மாநிலத்தில் இந்துச் சமய நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் அமைப்பு இல்லாததால், எத்தகைய கோட்பாடுகளையும் முறையாக அமுல்படுத்தும் அதிகாரம் இல்லாத நிலை நிலவுகிறது. உயிர்ப்பலி கொடுப்பது தமிழர்கள் மத்தியில் பழைய வழக்கமாக இருந்து வந்திருந்தாலும், தற்பொழுது இந்துத் தர்மங்களைப் பற்றிய கல்வியை மாநில இந்துக்கள் மத்தியில் பரப்பும் வாய்ப்பு இல்லாத நிலையாலும், உலகஅளவில் இந்துச் சமயத்தின் தற்போதைய பரிணாம வளர்ச்சியைப் புரிந்துகொள்ளும் விழிப்புணர்வு இல்லாத காரணத்தாலும் இந்த நிலை நீடிக்கிறது. கதையில் வரும் கதாபாத்திரங்களின் வாழ்க்கைக்கு உதவும் ஒன்றாக, தொலைக்காட்சி மற்றும், வெள்ளித்திரையில் வேண்டுதல் அடிப்படையில் உயிர்ப் பலியிடும் நடவடிக்கைகளைக் காண்பிப்பது இந்த நடைமுறையை மேலும், ஊக்குவிக்கிறது. எனவே, இந்த நடைமுறையைத் தடுக்க, சமய உரைகள் மட்டுமே போதாது, உண்மையில் இதற்கு உள்ளூர் இந்துக்களிடையே இந்துச் சமயச் சாராம்சங்களை விவரிக்கும் கல்வி அடிப்படையிலான நடவடிக்கைகள் அதிகம் தேவைப்படுகின்றன. இந்த விஷயத்தில், மதிப்புமிக்க ஒரு ஒருங்கிணைப்பு அமைப்பு இல்லாதது, இந்த மாநிலத்தில் இந்துச் சமய ஒழுக்கம் சம்பந்தமான நெறிமுறைகளை, இந்தச் சமயத்தைப் பின்பற்றுபவர்களிடையே, வலுப்படுத்துவதில் பலவீனமாக உள்ளது.

## பரிந்துரைகள்

7.1. இந்துச் சமய அறிவு புகட்டப்படுவதன் வழியே இத்தகைய பழக்கங்களை நிறுத்தமுடியும். தாய்க் கோயில்கள் பல வயதினர்களுக்கும் முறையான இந்துச் சமய வகுப்புகளையும் செயல் முறைகளையும் போதித்து வழிகாட்ட முற்பட வேண்டும். ஒவ்வொரு இந்துக் குடும்பமும் இத்தகைய சமயக் கல்வி பெற்றால், நாளடைவில், இந்த மாநிலத்தில் தற்போதைய இந்துச் சமயத்திற்கு ஒவ்வாத பழக்கங்களை இவர்கள் ஒதுக்கிக் கொள்ளும் பக்குவம் பெறுவார்கள். இது மெதுவாகத்தான் நடைபெறும். ஆனால், நிலைத்து நிற்கும் வண்ணம் சமயக் கல்வியைப் புகட்டுபவர்கள் தொடர்ந்து, சமயக் கல்வியைக் கவர்ச்சியாகக் கொடுப்பதில் அயராது செயலாற்ற வேண்டும்.

7.2. இத்தகைய கோயில்களுக்கு எவ்வித மான்யங்களும் கொடுப்பதை நிறுத்துவதுடன், மாநில ரீதியில் இந்துக் கோயில் ஒருங்கிணைப்புக் குழு இருந்தால், இத்தகைய கோயில்களை நிறுவவோ, புதுப்பிக்கவோ, பதிவுச் செய்யவோ மாநிலத்தில் அனுமதி கொடுப்பதைத் தவிர்க்கலாம். குறைந்தது, மாநில அரசு, இந்துச் சமயம் சம்பந்தமாக அறிவுரை பெற ஒரு சிறப்புக் குழுவை ஏற்படுத்தி, மாநிலத்தில் இந்துச் சமயத்தின் பெயரில் நடைபெறும் திட்டங்களும், செயல்பாடுகளும் இந்துச் சமயக் கோட்பாடுகளுக்கு முரண் இல்லாமல் இருப்பதைப் பார்த்துக் கொள்ளவேண்டும். இதை எளிதாக்க, குறிப்பாக இந்துச் சமயம் தொடர்பான விஷயங்களில், இஸ்லாம் அல்லாத வழிபாட்டுக் குழுவிற்கு ஆலோசனை வழங்க இந்து விவகாரங்களில் நல்லறிவு பெற்ற இரண்டு பேர் இந்தக் குழுவில் அமர வேண்டும். இந்துக் கோயில்களின் ஒருங்கிணைப்பு மன்றம் மலாக்கா மாநிலத்தில் இருந்தால், இந்த மன்றம் இவர்களின் பெயர்களைப் பரிந்துரைக்க முடியும்.

## 8.0. திருவிழா - கும்பாபிஷேகம்

திருவிழா அல்லது கும்பாபிஷேகம் நடைபெறும் சமயங்களில் பெரும்பாலான கோயில்களில் நடவடிக்கைகள் பெருகும். அவரவர் தகுதிக்கு ஏற்ப செலவு செய்து ஆண்டுதோறும் திருவிழாவையும், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் கும்பாபிஷேகத்தையும் நடத்த அதிக செலவு செய்கிறார்கள். இவற்றை முடிந்தவரை கோலாகலமாகவும் ஒற்றுமையுடனும் கொண்டாட முற்படுவதைப் பாராட்டலாம். காரணம், வட்டார இந்து மக்கள் மத்தியில் எழும் வேறுபாடுகளைக் களைந்து தாங்கள் வணங்கும் தெய்வத்திற்காக ஒன்றுபடுவதைக் காண்கிறோம். இத்தருணத்தில், வசிப்பிடம் மாறிச் சென்ற குடும்பங்களும் வருகை தந்து நட்பை புதுப்பித்துக்கொள்ளும் வாய்ப்பை பலர் பயன்படுத்திக்கொள்கின்றனர். தங்களின் முன்னோர்கள் வாழ்ந்த கிராமத்திற்குத் திரும்பும் உணர்வு பலருக்கு இன்பமாக இன்றும் இருப்பதைக் காணலாம். இப்படி வருபவர்கள், பல இடங்களுக்குச் சிதறிப் போய் வாழும் பழைய நண்பர்களைக் காண்பதிலும் பழைய நினைவுகளைப் புதுபிப்பதிலும் மகிழ்ச்சி கொள்வதையும் காணலாம். இத்தகையோருக்குக் ‘கிராமத்திற்குத் திரும்பும்’ வாய்ப்பு இத்தகைய கோயில் விழாக் காலங்களில்தான் ஏற்படுகிறது. காரணம், தீபாவளி போன்ற வைபங்களுக்கு, தங்கள் பெற்றோர் வாழும் தற்போதைய இருப்பிடங்களுக்கே இவர்கள் செல்வார்கள்.

இத்தகைய விழாக்களுக்கு நிறைய செலவாகிறது. ஆனால், திருவிழாவிற்காக நன்கொடை கொடுத்து ஆதரவு கொடுப்போர் இருக்கிறார்கள். தோட்டத்தைவிட்டு மற்ற இடங்களில் வேலை செய்து வாழும் அன்பர்கள், திருவிழாவிற்குத் தங்கள் பழைய 'கிராமத்தில்' வீற்றிருக்கும் கோயில் திருவிழாவிற்கு நன்கொடை கொடுத்து, வருகை தந்து, மகிழ்வே செய்கிறார்கள்.

எனினும், இடம்பெயர்ந்து சென்ற முதல் தலைமுறையினருக்கு இருக்கும் இத்தகைய உணர்வு, மற்ற இடங்களில் பிறந்து வளரும் அவர்களுடைய பிள்ளைகளுக்கு இருக்குமா என்பது ஐயமே. மலாக்கா செட்டி சமூகத்தின் கோயில் திருவிழாவிற்குப் புலம்பெயர்ந்து சென்றவர்களின் வருகை காலப் போக்கில் குறைந்துள்ளதைப் போல் தோட்டங்களில் அமைந்துள்ள கோயில்களுக்கான ஆதரவும் குறையலாம். தற்பொழுது, பெரும்பாலான தோட்டக் கோயில்கள், கும்பாபிஷேகம் நடத்துவதைத் தவிர்ப்பதையும் காண்கிறோம். பெரிய பொருட் செலவு ஒரு புறம், சொந்த நிலத்திற்கு இத்தகைய கோயில்களை இடம் மாற்றம் செய்யவேண்டும் எனும் எண்ணம் மறுபுறம்.

## பரிந்துரைகள்

8.1. மாநிலத்திலுள்ள ஒவ்வொரு கோயில் செயற்குழுவினரும், தங்கள் கோயிலின் எதிர்காலம் குறித்து நன்கு சிந்திக்கவேண்டும். குறிப்பாகச் சுற்றி வாழும் இந்துக் குடும்பங்களின் எண்ணிக்கை, தங்கள் கோயிலின் உறுப்பினர் எண்ணிக்கை, அவற்றில் கோயிலுக்குத் தொடர்ந்து வருபவர்களின் எண்ணிக்கை, தூரத்தில் இருந்து உண்மையாக ஆதரவுக் கொடுப்பவர்களின் எண்ணிக்கை ஆகியவற்றை கணக்கில் கொள்ளுதல் அவசியம். குறைந்தது ஐநூறு குடும்பங்கள் அல்லது இரண்டாயிரத்து ஐநூறு இந்துப் பக்தர்கள் கோயிலுக்கு ஆதரவு கொடுத்து நடவடிக்கைகளின் ஈடுபட்டால், தங்கள் கோயிலுக்குப் போதுமான ஆதரவும் பக்தர்களின் பங்களிப்பும் இருப்பதாகக் கொள்ளலாம். இத்தகைய சிந்தனை, தங்கள் கோயிலின் வளர்ச்சிக்கான வாய்ப்பைக் கோடிட்டுக் காட்டும். அத்தகைய வளர்ச்சிக்கான வாய்ப்பு இல்லாத கோயில்கள், அருகிலுள்ள தாய்க் கோயில்களின் குடையின்கீழ், தங்கள் கோயிலின் வரலாற்றையும் தன்மையையும் நிலைநிறுத்திச் செயல்படுவதே சிறப்பாகும்.

8.2. இந்த உபாயத்தின் வழி திருவிழாக்களின் எண்ணிக்கையைக் குறைக்கலாம். செலவையும் குறைக்கலாம். தாய்க் கோயில் திருவிழாவிற்கும் அதிகமானோர் கலந்து சிறப்பிக்க இயலும். இதன் மூலம் திருவிழா சமயங்களில் தாய்க்கோயிலில் இணைந்த மற்றக் கோயில்கள் சிறப்பு பூஜைகளை செய்வதன் மூலம் மேலும், அதிகமானோர் கலந்துகொள்ள முடியும். சிறு-சிறு கோயில்கள்பால் காட்டிய விசுவாசம் மாறி, படிப்படியாகத் தாய்க் கோயிலின்பால் வட்டாரத்தில் வாழும் அனைவரின் பற்றையும் பங்களிப்பையும் பெற்றுத் தர வழி செய்யும். வேறுபாடுகளைக் குறைத்து, ஒற்றுமையைக் கூட்டும் வாய்ப்பு ஏற்படும்.

8.3. கும்பாபிஷேகம் சொந்த நிலத்தில் எழுப்பப்பட்டு, முறையான பதிவுப் பெற்றக் கோயில்களே நடத்துதல் சிறப்பு. தாய்க் கோயில்களில் கும்பாபிஷேகம் செய்தால், அதன் கீழுள்ள மற்றக் கோயில்களுக்குத் தனித்தனியாகச் செய்யத் தேவையில்லை. அனைத்து ஒருங்கிணைந்த கோயில்களுக்கும் தாய்க் கோயிலின் கும்பாபிஷேகத்தின்போது அடிப்படையான பழுது பார்ப்பு வேலைகளை இணைத்து செய்தால் பணமும் மனித சக்தியும் மிச்சமாகும்.

8.4. கோயில் நிர்வாகத் தலைவர்கள் மத்தியில் சமய/சமுதாய நிலைமை அறிந்து, புரிந்துணர்வும், ஒற்றுமை எண்ணமும் மேலோங்கினால்தான், ஒவ்வொரு வட்டாரத்திலும் சகல வசதிகளுடன்கூடிய தாய்க் கோயில்கள் உருவாகி, அவ்வட்டார இந்துக்களுக்கு நல்ல சமய-மொழி- பண்பாட்டு- சமூக மையமாகச் செயல்பட்டு, மாநிலத்திலுள்ள மற்றச் சமயத்தினருக்கு ஈடாக இந்துப் பக்தர்களை உயர்த்தவும், இந்துக்கள் பெருமை கொண்டு தங்கள் வட்டாரத் தாய்க் கோயிலின்பால் பற்றும் ஈடுபாடும் கொண்டு பெருமைபட முடியும்.

## 9.0. கோயிலைச் சமூக-பண்பாட்டு மையமாக மாற்றக்கூடிய செயல் நடவடிக்கைகள்

கோயில்கள் இந்துப் பக்தர்களுக்கான வழிபாட்டு மையங்களாக இருப்பினும், மாநிலத்தில் சிறுபான்மையாக இருக்கும் இந்துக்களுக்குத் தற்பொழுதுள்ள கோயில்கள் அதன் பக்தர்கள், அவர்கள் குடும்ப உறுப்பினர்களுக்குச் சமய அறிவைப் புகட்டுவதிலும், தேசிய நீரோட்டத்தில் தமிழ்/இந்துப் பண்பாட்டு மையமாகச் செயல்படுவதிலும் பங்காற்றுவதில் வெகுவாகப் பின்தங்கியுள்ளதை நம் ஆய்வு தெளிவுப்படுத்துகிறது. இத்தகைய கல்வியைப் புகட்டுவதில் பெரியதொரு வெற்றிடம் உருவாகியுள்ளது. அதை நிரப்பும் வகையில் கோயில்கள் செயல்படவில்லை. இதனால், மலாக்கா மாநில இந்துக்கள் மத்தியில் இந்துச் சமய அறிவும், தமிழ்ப் பண்பாட்டுத் தெளிவும் தாழ்ந்த நிலையில் உள்ளது. மாணவர்கள் மத்தியில் ஏற்பட்டுள்ள அடைவுநிலை இடைவெளியைக் களையும் நடவடிக்கைகளையோ, இளைஞர், பெண்கள், முதியோர் போன்ற பிரிவினர் பயன்பெறும் நிகழ்ச்சிகளையோ செய்வதில் ஆர்வத்தைக் காணோம். ஒவ்வொரு பிரிவினர் மத்தியிலும் பிரச்சினைகள் மலிந்துள்ள நிலையில் - கல்வி, வேலை வாய்ப்பு, வணிகம், தீயப் பழக்க-வழக்கங்களைக் களைதல், இளையோர் விளையாட்டு-பொழுதுபோக்கு போன்ற துறைகளில் - முறையான, திட்டமிட்டச் செயல் திட்டங்களைக் கோயில்கள் தனித்தோ, இணைந்தோ செயல்படுத்தலாம்.

சமீபத்தில், குறிப்பாக இளம் இந்துக்களுக்கு இந்துச் சமயத்தில் அடிப்படை விதிகளைப் புரிந்துகொள்ள மலேசிய இந்துதர்ம மாமன்றம் பாடப்புத்தகங்களையும் ஆசிரியர் வழிகாட்டிகளையும் சமய அறிஞர்களின் உதவியோடு தரமாக கவர்ச்சியான முறையில் வழங்கியுள்ளது. இந்த அமைப்பு தாம் வெளியிட்ட புத்தகங்களைப் பயன்படுத்துவதற்கான முறையைத் தெளிவுபடுத்த கடந்த 2020 செப்டம்பர் மாதத்தில் மலாக்காவில் ஆசிரியர்களுக்கு மூன்று நாள் பயிற்சியை நடத்தியது. மித்ராவின் உதவியின் மூலம் முழுமையாக நிதியளிக்கப்பட்ட இந்தப் பயிற்சியில் 120-க்கும் மேற்பட்ட பங்கேற்பாளர்கள் பங்கேற்றனர். கலந்துகொண்டவர்களில் பெரும்பாலோர் இந்தப் பயிற்சியில் கலந்துகொள்ள மலாக்கா மாநிலக் கல்வித் துறையிலிருந்து சிறப்பு அனுமதி பெற்ற பள்ளி ஆசிரியர்கள் ஆவர். மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில்களின் நிர்வாகத்திற்குப் பங்கு கொள்ள அழைப்பு விடுத்திருந்தும் நான்கு இந்துக் கோயில்கள் மட்டுமே பங்கேற்பாளர்களைக் கலந்துகொள்ள அனுப்பி வைத்தன. இது மலாக்காவில் உள்ள கோயில்களின் நிர்வாகத்தினரிடையே இது போன்ற பயிற்சிகளுக்கு ஏற்கனவே இருக்கும் ஆர்வத்தின் அளவைப் பிரதிபலிக்கின்றது.

இந்த ஆய்வில் மிகச் சிறிய எண்ணிக்கை கோயில்களே தேவாரம், திருமுறை, பஜன், பள்ளி மாணவர்களுக்கான துணை வகுப்புகள், நாட்டியம், இசை, சிலம்பம், யோகா போன்றவற்றிற்கு ஏற்பாடு செய்துள்ளன. எனினும், பக்தர்களின் குடும்பங்களின் போதிய ஆதரவைப் பெற அவை தோல்விகண்டு வருகின்றன. வெகு சில கோயில்களே ஆதரவற்றோருக்கு உதவி செய்ய முன்வந்துள்ளன. அதுவும் குறிப்பிட்ட சில தருணங்களில் மட்டுமே.

போட்டிகளும் பெரும்பாலும் மலேசிய இந்துச் சங்க, மலேசிய இந்துதர்ம மாமன்ற, அல்லது சில வெளி அமைப்புகளின் ஏற்பாட்டில் நடைபெறுகின்றன. கோயில்கள் சில போட்டியாளர்களை அனுப்பவதுடன் சரி. திருவிழாச் சமயங்களில் மிஞ்சிய உணவை முதியோர்-அநாதை மையங்களுக்குச் சில கோயில்கள் அனுப்பி உதவுகின்றன. சீக்கியக் கோயில்போல், நாள்தோறும் தேவைப்பட்டோருக்கு உணவு வழங்கும் திட்டம் எந்தக் கோயிலிலும் இல்லை. இந்துச் சமயத்தில் தேவையுள்ள மற்றவர்களுக்கு அன்னமிடுதலை ஒரு முக்கிய அம்சமாகவே காணலாம்.

இத்தகைய நிலைமைக்கு, பொருளாதார ரீதியில் இந்தக் கோயில்கள் வலுவின்றி இருப்பதே காரணம் என்று சொல்லலாம். கல்வி, சமூகப் பிரச்சினைகளைக் களைய திட்டமிடல் இன்மையே காரணம் என்று சொல்லலாம். இவை முக்கியமல்ல எனும் எண்ணம் பலர் மத்தியில் இருப்பதைக் காண முடிகிறது. கோயில்களை, சமூக வளர்ச்சி மையங்களாக மாற்றவேண்டும் எனும் சிந்தனை பெரும்பாலான கோயில் செயற்குழுவினர் மத்தியில் இல்லை. கல்வி, சமூக நலன், பண்பாட்டு மையமாகக் கோயில்களை உருவாக்கி, இந்துச் சமயத்தினரை, சமய அறிவிலும், பண்பாட்டுக் கூறுகளிலும் விவரமறிந்தவர்களாக ஆக்கி, முன் நிற்க செய்யும் முயற்சி இல்லை. மலேசியாவில் இந்துக்களை, விவரமறிந்த நாட்டு குடிமக்களாக்கவும், ருக்குன் நெகாரா கோட்பாடுகளைப் புரிந்தவர்களாகவும், மலேசிய, தமிழ், ஆங்கில மொழிகளில் தேர்ந்தவர்களாகவும் ஆக்குவதில் கோயில்கள் பெரும் பங்காற்ற முடியும்.

கோயில் நிர்வாகங்கள் இந்துச் சமயப் பண்டிகைகளின் செய்முறைகளை ஒருங்கிணைத்து எல்லா இந்துப் பக்தர்களுக்கும் போற்றுவித்து - அப்பண்டிகைகள் கோயிலில் நடத்தினாலும், பக்தர்கள் வீட்டில் நடத்தினாலும் விரயமின்றி, முறையாக நடத்த வழிசெய்யலாம். எடுத்துக்காட்டாக, பெண் கருத்தரித்திருக்கும்

சமயத்திலும், வளைக்காப்பின்போதும், பெண் வயதிற்கு வரும் பொழுதும், பரிசம், திருமணம், இறப்பு ஆகிய தருணங்களில் செய்யவேண்டிய சடங்குகளை முறைபடுத்தி பக்தர்களுக்கு, செலவுகளைக் குறைத்து சிக்கனமாக அவற்றைச் செய்யத் துணை புரியலாம்.

கோயில்களைப் பழைய சிந்தனைகளில் நடத்தி, குறிப்பிட்ட சாரார் / குடும்ப உரிமையாகப் பாவித்து, குறுகிய வட்டத்திற்குள் செயல்படுத்தி, புதிய சிந்தனைகளுக்கு இடம் கொடுக்காமல் இருந்தால், கோயிலைப் பலருக்கும் உரியதாகவும், பலருக்கும் பலன் கொடுக்கும் முறைகளை அறிமுகம் செய்யும் போக்கும் மலராது. இந்துப் பக்தர்களை நல்வழிப்படுத்தி மற்றவர்களின் முன் பீடு நடை போடவைக்கும் வண்ணம் கோயில்களை நிர்வகிக்க இத்தகைய தன்மை துணை நிற்காது.

நம் ஆய்வில் 37 கோயில்களில் இந்துச் சம்பிரதாயத் திருமணங்களை நடத்த அனுமதி இருந்தும் ஐந்து கோயில்களில் மட்டுமே பயிற்சிப்பெற்று, அங்கீகாரம் பெற்றத் திருமணப் பதிவதிகாரி இருக்கின்றார். ஒரே ஒரு கோயிலில் மட்டும் மணமக்களுக்கான முறையான வசதிகள் இருக்கின்றன. ஒரு முழுமையான வசதிகளைக் கொண்ட கல்யாண மண்டபம்கூட எந்தக் கோயிலிலும் இதுவரை இல்லை.

திருமணம் செய்து கொள்ளப் போகும் மணமக்களுக்கு, அல்லது அண்மையில் திருமணம் செய்து கொண்டவர்களுக்கு முறையான பயிற்சி கொடுப்பதில் இதுவரை கோயில்கள் கவனம் கொள்ளவில்லை. பெரும்பாலான கோயில்கள், சொந்தமாகவே கோயிலுக்கு வரும் பக்தர்களுக்குத் தேவையான சேவைகளை வழங்க முற்படவே விரும்பகின்றன. அவர்களுக்கு வழிகாட்டும் முறையில் செயல்பட விரும்பாதது, அவர்களின் முயற்சிக்குப் போதுமான ஆதரவு கிடைக்காது என அவர்கள் மத்தியில் ஊறியுள்ள எண்ணத்தையும், போதிய நிதியின்மையையுமே காட்டுகிறது. கோயிலுக்கான உறுப்பினர் சேர்க்கையில் ஆர்வம் இல்லை, இளைஞர்களை கோயில் நிர்வாகத்தில் ஈடுபடுத்திக் கோயிலுக்கு உயிரூட்டுவதில் ஒருவிதத் தயக்கம் தெரிகிறது. வழக்கமாக நடைபெறும் சடங்குகளையும் நடவடிக்கைளையும் செய்தால் போதும் எனும் ஒரு திருப்தியுடன் இத்தகைய கோயில்கள் இருக்கின்றன. எனவே, விழிப்புணர்வைத் தூண்டவோ, பொது அறிவைப் புகட்டவோ, கல்வியை வழங்கவோ, திறன்களை வளர்க்கவோ இவை தயங்கி, பின் தங்கியுள்ளன. இளைஞர்களுக்கு வழிகாட்டிக் கருத்தரங்குகளை நடத்தி வேலை வாய்ப்புகளை உருவாக்கவும், பொருளாதாரச் சிந்தனைகளை முடுக்கிவிடவும், விளையாட்டுத்துறைகளில் அவர்களை ஈடுபட வைக்கவும் இந்தக் கோயில்கள் இதுவரை தயாராக இல்லை.

இந்த நிலை அனேகமாக மலேசியா முழுவதும் தென்படக் கூடிய சாத்தியம் உள்ளது. இதனால்தான், அரசால் அமைக்கப்பட்ட, ‘செடிக்’ அமைப்பு, தனது இந்தியர்களின் சமூக-பொருளாதார உருமாற்றுத் திட்டத்தில், பிரதம அமைச்சரின் அலுவகத்தில் இருந்தே 2018-ஆம் ஆண்டு பதினைந்து இலட்சம் ரிங்கிட் நிதியை, சிலாங்கூர், கோலாலம்பூர், பேரா, பினாங்கு, கெடா ஆகிய மாநிலங்களிலுள்ள ஆறு இந்துக் கோயில்களுக்கு, தலா இரண்டரை இலட்சம் ரிங்கிட் வீதம் கொடுத்து, அவர்களின் கோயில் உறுப்பினர்கள் மத்தியில் சமூக-பொருளாதார உருமாற்றத்தைக் கருத்தில் கொண்டு செயல்திட்டங்களைத் தீட்டி செயல்படுத்த வழங்கியது. பள்ளி மாணவர்கள், இளைஞர்கள், வேலையற்றோர் போன்றவர்களுக்கு இந்தத் திட்டங்கள் துணை நிற்கவேண்டும் என்பதற்கான முன்னோடித் திட்டம்.

எனினும், அந்த ஆறு கோயில்களில் செய்யப்பட்ட திட்டங்களின்வழி எத்தகைய பலன்கள் கிடைத்தன என்பதை அறிய இயலவில்லை. குறிப்பாக அரசில் மாற்றம் ஏற்பட்டதால், இது குறித்த முழு விரங்களைத் திரட்ட முடியவில்லை. எனினும், செடிக் அமைப்பிற்குப் பதிலாக மக்கள் கூட்டணி அரசு ஏற்படுத்திய மித்ரா அமைப்பின் வழியும் இத்தகைய கோயிலை மையமாக வைத்து சமூக-பொருளாதார-பண்பாட்டு-கல்வி உருமாற்றத்தைச் செய்ய உதவித் தொகைகள் வழங்கப்பட்டுள்ளன. இருப்பினும், இந்த ஆய்வின்போது, நிதியுதவி செய்யப்பட்ட சம்பந்தப்பட்ட நிகழ்வுகளின் அறிக்கைகள் அல்லது மதிப்பீடுகள் எதுவும் பெறப்படவில்லை.

எனினும், இத்தகைய அமைப்புகள் நிதி கொடுத்துதான் இத்தகைய பணிகளைக் கோயில்கள் செய்யவேண்டும் என நினைத்தால், மலேசிய இந்துச் சமயத்தினர் மத்தியில் மாற்றம் ஏற்படுவது சிரமமே. எல்லா வட்டாரங்களிலுமுள்ள கோயில்களுக்கும் நிதி கொடுத்து உதவ அரசால் முடியாது. ஒவ்வொரு கோயில் செயற்குழுவும், அந்தந்த வட்டார இந்துக்களுக்காக திட்டங்களை வரைந்து செயல்படுத்துவதே சிறந்த வழி. இது நிகழ, ஒவ்வொரு வட்டாரத்திலுமுள்ள இந்துக் குடும்பங்கள் அவர்களுக்கான தாய்க் கோயிலின் நடவடிக்கைகளில் முழுமையாக ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும். இதற்கு மாநிலத்தில் வாழும் ஒவ்வோர் இந்துக் குடும்பத் தலைவரின் மத்தியிலும் சிந்தனை மாற்றம் ஏற்படுத்தல் அவசியம். கோயில்களில் காலம் காலமாக நடைபெறும் சடங்குகளுக்கப்பால், துல்லியமாகத் திட்டமிட்டு செயல்படுத்தும் நிகழ்ச்சிகள் மட்டுமே, கோயிலை சமுதாய மறுமலர்ச்சிக்கு இட்டுச் செல்லவும், கோயிலை சமுதாய உருமாற்றத்தை ஏற்படுத்தும் மையமாகவும் ஆக்கவல்லது.

## பரிந்துரைகள்

9.1. தாய்க் கோயிலின் செயற்குழுவின் கீழ் சில துணைச் செயற்குழுக்களை உருவாக்கி இத்தகைய நடவடிக்கைகளுக்கு உந்துதல் கொடுக்கலாம். அத்தகைய குழுக்களில் அவ்வட்டாரத்திலுள்ள எல்லா கோயில் பிரதிநிதிகளும் அங்கம் பெற்று செயல்படுதல் நல்லது. எடுத்துக்காட்டாக:

9.1.1. **இந்துச் சமயச் சடங்குகள் - சமயக் கல்வி செயற்குழு** - கோயிலிலும், பக்தர்கள் மத்தியிலும் செய்யப்படும் சடங்குகளை - பூஜை, உபயம், பண்டிகைகள், ரத ஊர்வலம், காவடி-பால்குடம் எடுக்கும் சம்பிரதாயம், தீமிதி முறைகள், திருவிழா-கும்பாபிஷேகம் சடங்குகள், சம்பிரதாயத் திருமணச் சடங்குகள், வட்டார இந்துக்களின் இறப்புச் சடங்குகள், போன்ற பலவற்றிற்கும் சமயக்கோட்பாட்டிற்கேற்ப சிக்கனமான வழிமுறைகளை இந்தக் குழு, தகுதியானவர்களின் போதிய ஆலோசனைகளைப் பெற்று, வழங்குவதோடு, இந்துச் சமயக் கல்வியைப் பல வயதினருக்கும், இருபாலாருக்கும் ஏற்ப வழங்கும் திட்டத்தைத் தீட்டி செயல்படுத்தவும் முடியும். ஒரு நூலகத்தைத் தோற்றுவித்து, சமய நூல்களோடு, பொது அறிவு நூல்கள், நாட்டுத் தன்மைகளைப் பற்றிய நூல்களையும், இதழ்களையும், தமிழ், மலாய், ஆங்கில மொழிகளில் சேர்த்து கோயிலில் தொடர்ந்து வருபவர்களுக்குப் பயன்படும் விதமாகச் செய்வது இந்தக் குழுவின் தலையாயக் கடமையாகும். கோயிலில் பாலர் பள்ளியை நடத்துவதன் வழி பெற்றோர்களின் அபிமானத்தைப் பெறலாம்.

9.1.2. **இந்துச் சமூக-பண்பாட்டு வளர்ச்சிக் குழு** - வட்டாரத்திலுள்ள இந்துக்களுக்குப் போதுமான அடிப்படை வசதிகள் இருப்பதை உறுதிசெய்யும் குழு. திருமணம், இறப்பு, இடுகாடு, மின்சுடலை, ஆகியவற்றில், சடங்குகளை முறையாகச் செய்யக்கூடியவர்கள் இருப்பதையும் உறுதி செய்து செயல்பட வேண்டும். தக்கவர்களைக் கொண்டு பக்தர்களுக்கு இத்துறைகளில் பயிற்சிக் கொடுப்பதுடன், நாட்டியம், இசை, வாய்ப்பாட்டு, போன்ற பாரம்பரியக் கலைகளைச் சொல்லி கொடுக்க முறையான வகுப்புகளை உருவாக்க வேண்டும். தாய்க் கோயில்களின் கல்யாண மண்டபம், உயிர்-நீத்தார் ஊர்தி, போன்றவற்றுடன், இத்தகைய தருணங்களில் சேவையாற்ற போதிய தன்னார்வத் தொண்டர்களையும் இக்குழு உருவாக்குதல் அவசியம்.

9.1.3. **வட்டார இந்துக் குடும்ப மேம்பாட்டுக் குழு** - இந்துக் குடும்பங்களிலுள்ள சமூகப் பிரச்சினைகளைக் களையும் குழு. இந்துக் குடும்பங்களின் வறிய நிலைகளைக் கண்டறிந்து, அவற்றைக் களையும் நடவடிக்கைகளை எடுத்தல். வீடு இல்லாதார்களுக்குத் தற்காலிக தங்கும் வசதிகள், உணவு, உடைகள், பிள்ளைகளின் படிப்பு, ஆகியவற்றோடு, இத்தகையோர் சுய காலில் நிற்கத் தக்க நடவடிக்கைகளைத் திட்டம்போட்டு நிறைவேற்றும் குழு.

9.1.4. **வட்டார இந்துச் சமுதாயப் பொருளாதார மேம்பாட்டுக் குழு** - இந்தக் குழு வட்டார இந்து மாணவர்களின் - இளைஞர்களின் கல்வித் தரத்தைக் கண்காணித்து, அவர்களுக்கேற்ற பயிற்சி வகுப்புகளையும், தொழில்களில் ஈடுபட முறையான வழிகாட்டல்களையும் வழங்கும் குழு. வட்டார இந்துக்கள், கிடைக்கும் பொருளாதார வாய்ப்புகளை நன்கு பயன்படுத்திக்கொள்ளும் சமூகமாக உருவாவதை இந்தக் குழு உறுதி செய்யும். சொற்பொழிவுகள், கருத்துப் பரிமாற்றங்கள், தொழில் துறை சுற்றுப்பயணங்கள் ஆகியவற்றை இந்தக் குழு செய்து, வட்டார இந்துக்கள் நாட்டின் வளர்ச்சியோடு ஒட்டிப் போகிறவர்களாக உருவாவதை உறுதிசெய்யும். பக்தர்களுக்கு மேலும், சமய அறிவை மேம்படுத்துவதற்கு ஒரு கூட்டு முயற்சியாக மற்றத் தன்னார்வ அமைப்புகள் மற்றும், அரசாங்க நிறுவனங்கள் மற்றும், தொழில்முறை அமைப்புகளுடன் இணைந்து சொற்பொழிவுகள் / கலந்துரையாடல்கள் / பயிற்சிகள் மற்றும், தக்க மையங்களுக்கு சுற்றுலாக்கள் போன்றவற்றை ஏற்பாடு செய்யலாம்.

9.1.5. **வட்டார இளைஞர், விளையாட்டு-பொழுதுபோக்கு நடவடிக்கைக் குழு** - வட்டார இந்துக்களுக்காக, கோயில் வளாகத்திலும், வெளியிலும் தமிழ்ப் பாரம்பரிய விளையாட்டுகளில் ஈடுபட போதிய வசதிகளை இக்குழு ஏற்பாடு செய்யும். சிலம்பம், சடுகுடு, சதுரங்கம், பல்லாங்குழி, யோகா போன்றவற்றிற்கும், இளைஞர்கள் விரும்பும் மற்ற விளையாட்டுகளிலும் வட்டார இந்துக்களை ஈடுபடுத்தி அவர்களின் ஓய்வு நேரத்தை முறையாகப் பயன்படுத்தி, தவறான வழிகளில் இளைஞர்கள் செல்லா வண்ணம் பார்த்துக் கொள்ளும் குழு இது. மற்றத் தாய்க்கோயில், வட்டாரங்களுடன் போட்டிகளை நடத்தி ஆர்வத்தைப் பெருக்கும் பொறுப்பு இந்தக் குழுவிற்கு உண்டு.

9.2. ஒவ்வொரு வட்டாரத்திலும் இருக்கும் கோயில்கள் ஒத்துழைத்து அந்தந்த வட்டாரத்தில் தாய்க் கோயிலைத் தெரிவு செய்தால், வட்டார இந்துக்களின் பல்துறை வளர்ச்சிகளை - தனி மனித ஆளுமை, அறிவுத்திறன், பண்பாடு, சமூகம், தேசியம், வேலை வாய்ப்பு, - போன்ற பல துறைகளிலும் மேம்பட பல நிகழ்ச்சிகளை, ஏற்ற கோயில் வளாகங்களில் நடத்த முடியும். இதற்கான நிதியை அரசு மான்யத்தை எதிர்பாராமல், வட்டார குழுக்களே தேடிக்கொள்வது முக்கியம்.

9.3. வட்டாரத்தில் வாழும் ஒவ்வோர் இந்துக் குடும்பத்தையும் அணுகி, அவர்களை, குறைந்தது வட்டாரத் தாய்க் கோயிலின் உறுப்பினர்களாகச் சேர்ப்பது நல்லது. அனைத்துத் தரப்பினர்களையும் ஈடுபடச் செய்ய உறுப்பினர் சேர்க்கையைப் பெரியவர்கள், இளைஞர்கள், பள்ளி மாணவர்கள், ஆகியோரை ஆண்-பெண் எனப் பிரிக்கப்படலாம். கோயிலின் நடவடிக்கைகள் இந்துச் சமயத்தைச் சேர்ந்த அனைவருக்கும் பயன்படும் வண்ணம் இருப்பதை உறுதி செய்து அனைவருக்கும் தெரிவித்தல் நன்று. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் பக்தர்களின் ஆதரவைப் பல வழிகளிலும் உபாயங்களிலும் திரட்டலாம். வட்டாரத்தில் இயங்கும் அரசு சாரா அமைப்புகள், தனியார் நிறுவனங்கள், நன்கொடையாளர்கள், கல்விக் கூடங்கள் போன்றவற்றின் ஒத்துழைப்பைப் பெற்று, திட்டங்களைத் துல்லியமாகத் தயாரித்து, அமல்படுத்தினால், சிறப்பாக இருக்கும்.

9.4. இந்துப் பக்தர்களின் மத்தியில் தன்னார்வத் தொண்டர்களின் எண்ணிக்கையைப் பெருக்க வேண்டும். தன்னலம் கருதாது, சமுதயாத்திற்காக நேரத்தையும் சக்தியையும் பயன்படுத்தும் தன்னார்வலர்கள் கோயிலின் பல திட்டங்களையும் வெற்றிபெறச் செய்வார்கள். அவர்களை முறையாகக் கௌரவித்து, அவர்களின் சேவை தொடரும் வகையில் கோயில் செயற்குழுக்கள் செயல்படவேண்டும்.

9.5. ஒவ்வொரு தாய்க் கோயிலும், கோயிலின் நடவடிக்கைகளுக்கு அந்த ஆண்டு துணைப் புரிந்த நன்கொடையாளர்கள், தன்னார்வலர்கள், ஆசிரியர்கள், போன்ற அனைவரையும் அழைத்து, அவர்களுடைய சேவையைப் பாராட்டி கௌரவிக்கவேண்டும். அவர்கள் தொடர்ந்து சேவைபுரியவும், மற்றவர்களை ஈர்க்கவும் இது பயன்படும்.

9.6. இந்துச் சமயக் கல்வியை முறையாகப் போதிக்க, மலாக்கா மாநில கோயில்கள், முறையான பாடத் திட்டத்தைத் தக்காரிடம் - உள்நாட்டிலோ அல்லது தமிழ் நாட்டிலோ - பெற்று, சிறுவர்கள், இளைஞர்கள் ஆகியோருக்கு, பல படிகளில் - பன்னிரண்டு படிகள் வரை - நடத்தி, தேர்வு நடத்தி, சான்றிதழ் வழங்கலாம். ஆரம்பக் கட்டத்தில் பாடத்திட்டத்தை எளிதாக்குவதன் மூலம் சான்றிதழ் பெறுவதற்கான ஆர்வத்தை ஊக்குவிக்க வேண்டும். ஆரம்பத்தில் மலேசிய இந்துதர்ம மாமன்றம் தயாரித்து வழங்கியுள்ள பாடப்புத்தகங்கள் மற்றும், கையேடுகளைப் பயன்படுத்தலாம்.

9.7. பொதுவான இந்துச் சமய வகுப்புகளைப் பெரியவர்களுக்காகத் தனியாக நடத்தலாம். இதில், இந்துச் சமயத்தின் பல கூறுகளை விவரிப்பதோடு, ஒவ்வொன்றிற்கும் நிறைவாகக் கலந்துகொண்டதற்கான சான்றிதழ்களைக் கொடுத்து ஊக்குவிக்கலாம். இந்த முறையில் கோயில் நிர்வாக உறுப்பினர்கள், உறுப்பினர்கள் மற்றும், ஒவ்வொரு பகுதியிலும் உள்ள பக்தர்கள் மத்தியில் இந்துச் சமயத்தைப் பற்றிய புரிதல் நிலையை அதிகரிக்க முடியும்.

9.8. சமய வகுப்புகளுக்கான ஆசிரியர்களை, உள்ளூரில் உள்ளவர்களுக்காகப் பயிற்சியைக் கொடுத்து உருவாக்குவது மலாக்கா கோயில்களின் பொறுப்பு. இந்து சங்கம், இந்துதர்ம மாமன்றம் போன்றவற்றையே நம்பி கோயில்கள் செயல்படுவது சரியாகாது. மலாக்கா மாநில கோயில்களின் ஒருங்கிணைப்பு சம்மேளனம் இதைச் செய்வது சிறப்பு. மலாக்கா மாநிலத்தில் உள்ள கோயில் ஒருங்கிணைப்புக் குழுவும் இந்தப் பயிற்சியைத் திட்டமிட்டுச் செயல்படுத்தலாம் மற்றும், அதற்கான அங்கீகாரத்தையும் வழங்க முடியும்.

9.9. கல்யாண வயதை எட்டிய அனைத்து இளையோருக்கும் திருமணம் குறித்த முறையான பயிற்சியைச் சான்றிதழுடன் தாய்க் கோயில்களில் நடத்துவது உத்தமம். ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள பிரதான தாய்க் கோயில் இதைச் செய்யலாம் அல்லது மாநில அளவில் உள்ள பிரதான தாய்க் கோயிலும் இணைந்து சுழல் முறையில் இதை ஏற்பாடு செய்யலாம்.

9.10. மாவட்டந்தோறும் முதன்மைத் தாய்க் கோயிலில் கல்யாண மண்டபம் சகல வசதிகளுடன் கட்டப்பட்டால், மலாக்கா மாநிலத்தில் மூன்று கல்யாண மண்டபங்கள் உருவாகும். இதை ஒவ்வொரு மாவட்ட இந்து மக்களும் ஒரு முதன்மைத் திட்டமாகக் கொண்டு செய்தால், ஒவ்வொரு மாவட்டத்திலும், இந்துத் திருமணங்கள், கலை/இலக்கிய நிகழ்ச்சிகள், கண்காட்சிகள் போன்றவை நடைபெற ஏதுவாக இருக்கும். மற்றத் தாய்க் கோயில்களில் சிறிய பலநோக்கு மண்டபங்களை உருவாக்கினால் போதுமானது. இத்தகைய மண்டபங்களைப் படிப்படியாக ஏற்படுத்திக் கொள்ளத் திட்டம் தீட்டுதல் அவசியம்.

9.11. இளைஞர்களுக்காக மற்றச் சமயங்களில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுவதுபோல் இந்து இளைஞர்களுக்காகவும் நடத்தப்படவேண்டும். பயனுள்ள நடவடிக்கைகளைக் கொண்ட முகாம்களை ஒவ்வொரு வட்டார தாய்க் கோயிலும், மாவட்ட ரீதியில் முதன்மை தாய்க் கோயில்களிலும் நடத்தலாம். இரவு தங்கும் வசதிகளை முதன்மைத் தாய்க் கோயில்கள் கொண்டிருக்க வேண்டும். ஒவ்வொரு தாய்க் கோயில் இளைஞர் குழுக்களுக்கிடையில் விளையாட்டு-சமய-கலை-இலக்கிய போட்டிகளை நடத்துவதன் வழி இளையோரின் ஆர்வத்தை ஈர்க்கமுடியும். இவற்றைத் தாய்க் கோயில்களில் விழாவாகவே நடத்தி எல்லா வட்டாரங்களிலும் வாழும் இந்து மக்கள் கலந்துகொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்தலாம்.

9.12. இந்துக் கோயில்களில் நாம் செய்யக் கூடிய நிகழ்ச்சிகள், சுருக்கமாக:

9.12.1. இந்துச் சமயம் - சான்றிதழ்களுடன் கூடிய சிறுவர்களுக்கான - இளைஞர்களுக்கான சமய வகுப்புகள். பெரியவர்களுக்கான சமய அறிவு போதிக்கும் சமயக் கூறுகளின் அடிப்படையில் பங்கேற்பு சான்றிதழ்களுடன் கூடிய வகுப்புகள்.

9.12.2. பொதுக் கல்வி - தமிழ், மலாய், ஆங்கில மொழி/இலக்கியம், மற்றப் பள்ளிப் பாடங்கள், நாட்டின் நிலைகுறித்தக் கருத்தரங்குகள், திருமணப் பயிற்சிகள், குதூகலக் குடும்ப உரைகள்/போட்டிகள். ஒவ்வொரு வாரமும் வெவ்வேறு நிகழ்ச்சி நிரல் அட்டவணைகளுடன், தொலைக்காட்சி மற்றும், பல்வகை ஊடக வசதிகளுடன் கூடிய ஒரு நூலகம் மற்றும், வாசிப்பு அறையை நிறுவி பராமரித்தல்.

9.12.3. நூலகம் - எல்லா வயதினருக்கும் ஏற்ற இந்துச் சமய நூல்கள், தத்துவ நூல்கள், நாவல்-சிறுகதை-கவிதை நூல்கள், பொது அறிவு வளர்ச்சி நூல்கள், பள்ளி பாட நூல்கள், இதழ்கள், நாளிதழ்கள் போன்றவையை உள்ளடக்கியது.

9.12.4. கலை - நடனம், இசை, வாய்ப்பாட்டு போன்றவை.

9.12.5. விளையாட்டு - சிலம்பம், சடுகுடு, சதுரங்கம், பல்லாங்குழி, யோகா, கால்பந்து, வலைப்பந்து, கூடைப்பந்து போன்றவை. இயற்கைப் பேரிடர் சமயத்தில் உதவி செய்யும் திட்டம்.

9.12.6. வட்டார சமூக மேம்பாடு - ஏழைக் குடும்பங்களுக்குத் தேவையான உணவு, உடை, பணம், பள்ளி மாணவர்களுக்கான சீருடை, காலணி போன்றவை; வசதியற்றோருக்குத் தற்காலிகத் தங்கும் வசதி செய்தல், தேவையானோருக்கு உணவு வழங்குதல்.

9.12.7. இளைஞர் - இளையோருக்கான முகாம்கள், சமய/ கலை/இலக்கிய/விளையாட்டுப் போட்டி விழாக்கள்.

9.12.8. சிறுவர் - நற்பண்புகளை ஊட்டும் கதை சொல்லும் அங்கம், கார்டூன் படங்கள், நாடகங்கள், பாடல்கள், பிறந்த நாள் கொண்டாட்டங்கள்.

9.12.9. தாய்க் கோயிலின் வட்டாரக் குடும்பங்களின் பிள்ளைகளுக்காகப் பாலர் பள்ளியை நிறுவி நடத்துதல்.

9.12.10. கோயில் செயலவையினர் எண்ணத்தில் உதிக்கும் மற்றத் திட்டங்கள்.

இங்கு மாதிரிக்காகவே சில திட்டங்கள் கூறப்பட்டுள்ளன. நிலைமைக்கு ஏற்றவாறு இவற்றையும், இவற்றிற்கு மேலும், எண்ணி, திட்டமிட்டுக் கோயில் நிர்வாகங்கள் செயல்படலாம்.

## 10.0. கோயில் நடவடிக்கைகளில் அதிகமான இந்துக்களை ஈடுபடுத்தும் முயற்சி

மலாக்கா மாநில அளவில் வாழும் பல இந்துக்கள் கோயில் நடவடிக்கைகளில் ஈடுபடாமல் இருக்கின்றனர். இதற்கான பற்பல காரணங்களை ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளது. முன்பு இந்துத் தொழிலாளர்கள் தோட்டங்களிலும், அரசு துறைகளிலும் தனித்தனி முத்திரைகளுடன் வாழ்ந்து அந்தந்த இடங்களிலுள்ள கோயில்களுக்கு விசுவாசம் காட்டியும், மற்றவர்களுடன் அதிகம் ஒத்துழைக்காமலும் இருந்தார்கள் என்பது தெளிவு. இன்று நாட்டில் இந்த நிலைமை மாறியுள்ளது. இந்தச் சமயத்தில் பிரிவினையை ஏற்படுத்தும் அனைத்துத் தடைகளும் அகன்றிருக்க வேண்டும் என்றாலும், புதிய இடங்களுக்கு மாற்றப்பட்ட பழைய கோயில்களிலும் கூட அது குறிப்பிட்டவர்களுக்குத்தான் எனும் எண்ணம் மேலோங்கியிருப்பதைக் காணலாம்.

இத்தகைய போக்கு மாறவேண்டும். ஒவ்வொரு கோயிலும் அந்த வட்டாரத்தில் வாழும் அனைத்து இந்துக்களுக்கும் உரியது எனும் எண்ணம் வளர்தல் சிறப்பு. அத்தகைய நிலை இருந்தால், வட்டாரத்தில் வாழும் எல்லா இந்துக் குடும்பங்களும் கோயிலுக்கு வருவதை ஊக்குவிக்க முடியும். வரலாற்றுப் பின்னணியைக் காட்டியோ, ஜாதிப் பிரிவினையைக் காட்டியோ, பதவிகளைக் காட்டியோ, தமிழ் நாட்டில் பூர்வீகக் கிராமங்களைக் காட்டியோ, பொருளாதார ஏற்றத் தாழ்வுகளைக் காட்டியோ வேறுபாடுகளைக் காட்டுவதை, இந்து மலேசியர்கள் எனும் ஒருமித்த எண்ணத்தில், தவிர்ப்பது சாலச் சிறந்தது. இந்தக் காலக்கட்டத்தில் ஏற்பட்டுள்ள, இனி ஏற்படவுள்ள நாட்டு நிலையைக் கணித்து, இந்த நிலைமைகளை எதிர்நோக்கும் வகையில் ஒவ்வொரு வட்டார இந்துக்களும் இணைந்து உருமாற்றத்திற்கான திட்டங்களைத் தீட்டி, செயல்படுத்துதல் நல்லது. இது நடைபெற வேண்டுமானால் ஒவ்வோர் இந்துவும் சமய நடவடிக்கைகளிலும், வட்டாரக் கோயிலிலும் ஈடுபாடு காட்டவேண்டும்.

எடுத்துக்காட்டிற்கு, தமிழ் மொழி/இலக்கிய பாடங்களைப் போதிப்பதில் ஒரு நிலையில்லாத் தன்மை நம் இடைநிலைப்பள்ளிகளில் இருப்பதைக் காண்கிறோம். இப்பாடங்களுக்கான வகுப்புகளை நம் வட்டாரத் தாய்க் கோயில்களில் நடத்தினால் இந்தப் பிரச்சினையை நம்மளவில் தீர்க்கலாம். தேசியப் பள்ளிகளில் தமிழ் மொழி போதனையும் முறையாக இல்லாததைக் காணும் நாம், நம் கோயில்களில் தமிழ் வகுப்பை நடத்துவதின்வழி அத்தகைய பள்ளிகளைத் தெரிவு செய்யும் மாணவர்களுக்கு மொழி போதனையைச் சரி செய்யலாம்.

இன்றைய நிலையில், அரசியல் தலைவர்கள் தங்களால் இயன்ற மான்யத்தைக் கோயில்களுக்குப் பெற்றுத் தருகிறார்கள்; ஆனால், இது அரசின் நிதி நிலையையும் தலைவர்களின் ஈடுபாட்டையும் வைத்தே கிடைக்கின்றன. நம் கோயில்களின் நிர்வாகங்கள் திடமாக, சொந்தக் காலில் நிற்கும் பலம் கொண்டு இருந்தால், அரசியல் கட்சிவழி மான்யங்களை எதிர்பார்க்காமல் கோயில்களே நடத்தலாம். எந்த அரசியல் கூட்டணி ஆட்சிக்கு வந்தாலும், கோயில்கள் சிறப்பாக இயங்குவதிலும், அவற்றின் திட்டங்கள் ஈடேறுவதிலும், கோயில்கள் நடப்பு அரசின் உதவியைப் பெற்றுத் தொடர முடியும்.

பதினெட்டு வயதிற்கு மேல் உள்ள எல்லா இந்துக்களையும் தாய்க் கோயில் உறுப்பினர்களாகச் சேர்த்து, அவர்களுக்கு இந்துச் சமய அறிவைப் பலவழிகளிலும் புகட்டி வந்தால், தவறான வழிகாட்டல்களிலிருந்தும், மற்றச் சமயத்தினரின் போதனைகளிலிருந்தும் அவர்களைக் காக்கலாம்.

சிறுவர்களை ஈர்க்கும் நடவடிக்கைகளுக்கும் போதிய முக்கியத்துவம் கொடுத்தல் நல்லது. வட்டாரத்திலுள்ள எல்லா இந்துச் சிறுவர்களுக்கும் இந்துச் சமயம் போதிக்கும் நன்னெறிகளைக் கவர்ச்சிகரமாக வழங்கவேண்டும். தற்பொழுது தொழிற்நுட்ப வளர்ச்சி பல வசதிகளைக் கொடுத்திருப்பதால் வண்ண-வண்ண தயாரிப்புகளின் வழி வழங்குவது சாத்தியமாகிறது. சிறுவர்கள் மத்தியில், அவர்கள் இந்துச் சமயத்தைச் சார்ந்தவர்கள் என்பதில் பெருமைப்படும் இயல்பை உருவாக்க வேண்டும். குறிப்பாக மற்ற சமய அன்பர்களுடன் உறவாடும் பொழுது இவர்களிடம் எத்தகைய தாழ்வு மனப்பான்மையும் இருத்தல் ஆகாது.

கோயிலுக்கு எல்லா பக்தர்களையும் கவர்ந்திழுக்கக் காலங்காலமாய் நடைமுறையில் உள்ள சில பழக்கங்களைச் சீர் தூக்கிப் பார்த்து, அவை இன்றைய வாழ்க்கை முறைக்கு ஒன்றி வருகின்றனவா என்பதைப் பார்த்து, தக்க மாற்றங்களைச் செய்வது நல்லது. எடுத்துக் காட்டாக, மாலை/இரவு பூஜைக்காகக் குறிக்கப்பட்டுள்ள நேரம் இன்றைய காலக் கட்டத்தில் பல குடும்பங்களின் இரவு உணவு நேரத்தில் அமைந்துள்ளது. புதிய வாழ்க்கை முறையில் உணவு வல்லுனர்களும் மருத்துவர்களும் இரவு எட்டு மணிக்குள் உணவருந்தவேண்டும் என நிர்ணயித்துள்ளார்கள். மேலும் வயதானவர்கள், உடல்நலம் குறைந்தவர்கள், பிள்ளைகள் போன்றோர் பசி தாங்க மாட்டார்கள். ஆனால், இந்துச் சமயத்தின் பாரம்பரிய எண்ணப்படி, பூஜை நிகழ்வு முடிந்த பின்னரே பக்தர்கள் உணவருந்த வேண்டும். இன்று நடைமுறையில் பல இந்துக்கள், கோயிலுக்குக் கிளம்புமுன் சாப்பிட்டுவிட்டு வருவதும் இயல்பாகி வருகிறது. ஆனால் மிகப் பலர் பழைய சித்தாந்தத்தையே பின்பற்றிவருகின்றனர்.

கோயில் நிர்வாகம் இதை நன்கு சிந்தித்து, பக்தர்கள் முறையாக, பூஜை-உபயம் நடைபெறுமுன்பே உணவருந்துவதற்கு வசதிகளை ஏற்படுத்திக் கொடுப்பது நல்லது.

மேலும் பெரும்பாலான கோயில்களில், பக்தர்கள் தரையில் பாய் போட்டு சப்பணம் போட்டு அமர்ந்தே பூஜைகளில் ஈடுபடுகிறார்கள். இன்றைய வாழ்க்கை முறையில் வீடுகளில் சப்பணம் போட்டு உட்கார்ந்து

உணவருந்தவோ, உரையாடுவதோ வழக்கத்தில் இல்லை. நாற்காலியில் அமர்வதே இயல்பாகிவிட்டது. அதனால் பல பக்தர்களுக்குக் கோயிலில் உள்ள நடைமுறை சிரமமாக இருப்பது தெளிவு. வெளிநாட்டுக் கோயில்களில் மெல்லிய மெத்தையுடன் கூடிய பாய்களை சப்பணம் போட்டு உட்கார விரும்புபவர்களுக்கும், வயதானவர்கள், உடல் ஊனமுற்றோர், மற்றும் சப்பணம் போட்டு உட்கார இயலாதவர்கள் ஆகியோர் உட்கார பின்புறத்தில் நாற்காலிகளையும் அமைத்துக் கொடுக்கின்றார்கள். பக்தர்களின் சௌகரியதிற்கும் அவர்களின் அமைதியான மன நிலைமைக்கும் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள்.

ஒவ்வொரு தாய்க் கோயிலிலும் இந்த நடைமுறைகள் மறுபரிசீலனை செய்யப்பட்டு புதிய, நவீன முறைகளை அமல்படுத்தி அதிக பக்தர்களை ஈர்க்க வேண்டும். கோயில் நூலகமும், பல்லூடக அறையும் மாலை ஆறு மணி முதலே திறந்து, சிறார்கள், இளைஞர்கள், பெரியவர்கள் இத்தகைய வசதிகளைப் பயன்படுத்தவும், பூஜைக்கு முன்பே அவர்கள் சிற்றுண்டி சாப்பிடும் வசதியையும் ஏற்படுத்திக் கொடுத்தால், அவர்கள் பூஜை/உபய நிகழ்ச்சிகளில் முழு மனதுடனும், ஆர்வத்துடனும் கலந்து கொள்வார்கள். இதை ஒவ்வொரு கோயில் நிர்வாகமும் சிந்தித்து, இன்றைய கால மாற்றத்திற்கேற்ப நடைமுறைகளைத் திருத்தி அமைத்தால் கோயில்கள் அதிக பக்தர்களைக் கோயில் நடவடிக்கைகளுக்கு ஈர்க்க முடியும்.

## பரிந்துரைகள்

10.1. ஒவ்வொரு தாய்க் கோயிலிலும், வகுப்புகளை நடத்தக் கூடிய அறைகள் இருக்க வேண்டும். நவீன தொழில்நுட்பக் கருவிகள் - கணினி, தொலைக்காட்சிப் பெட்டி, ஒலிபெருக்கி, போன்றவை முழுமையாக இருப்பது சிறப்பு.

10.2. எல்லா வயதினருக்கும் ஏற்ற சமய நூல்களும், மற்றப் பொது அறிவு, மொழி-வளத்தைப் பெருக்கும் நூல்களும், இதழ்களும் தாய்க் கோயில் நூலகத்தில் இருக்கவேண்டும். வட்டார இந்துக்கள் கோயிலுக்கு வருவதை ஊக்குவிக்க இத்தகைய வசதி இருத்தல் நல்லது. இதன் அடிப்படையில் மேலும், சில ஆக்ககரமான தொடர் நடவடிக்கைகளைச் செய்து அனைத்து தரப்பினரையும் கவரலாம். இதற்குத் தாய்க் கோயில்களின் எண்ணிக்கை சிறிதாக இருந்தால்தான் போதிய நிதியைத் தேட முடியும்.

10.3. பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட எல்லா இந்துக்களையும் தாய்க் கோயிலின் உறுப்பினராகப் பதியவேண்டும். அனைத்து உறுப்பினர்களும் பயனடையும் வகையில் போதுமான நடவடிக்கைகள் இருப்பதை ஒவ்வொரு தாய்க் கோயில் நிர்வாகமும் உறுதி செய்யவேண்டும். மாதிரித் திட்டங்களை 9.0. - பிரிவு பரிந்துரைகளில் காணலாம்.

10.4 எல்லா கோயில் நிர்வாகங்களும், அவர்களின் கோயில்களில் இன்று அமலிலிருக்கும் நடைமுறைகளை மறுபரிசீலனை செய்து, பக்தர்களின் சௌகரியத்திற்கும், ஆர்வத்திற்கும் இடையூறாக இருக்கும் நடைமுறைகளை, சமய அறிஞர்களுடன் கலந்து ஆலோசித்து, மாறுபட்ட இன்றைய கால, வாழ்க்கை முறைக்கேற்ப மாற்றியமைத்து, இந்துச் சமயம் எல்லா காலத்திற்கும் ஏற்ப, மாற்றங்களை ஏற்றுக்கொண்டு என்றும் இளமையாக இயங்கும் சமயம் என்பதை நிலை நாட்டுதல் அவசியம்.

## 11.0. கோயில் செயற்குழுக்கள்

முறையான செயற்குழு இல்லையென்றால் கோயிலை நன்முறையில் நிர்வகிக்க இயலாது. செயற்குழுவில் பலதரப்பட்ட திறன்கள், தகுதிகள் கொண்டவர்கள் இருந்தால்தான் அவர்கள் இணைந்து நல்ல தலைமைத்துவத்தைக் கொடுக்க முடியும். மலாக்கா மாநிலக் கோயில்களில் ஒரு சிலரின் தனித் தலைமைத்துவத்திலும், ஒரே குழுவின் தலைமைத்துவத்தில் பல ஆண்டுகளாகப் பல கோயில்கள் மாற்றம் இல்லாமல் நிர்வகிக்கப்படுவதையும் இந்த ஆய்வு காட்டுகிறது. இத்தகைய கோயில்களில் திருவிழாக்கள் நடைபெறும்பொழுது எல்லா இந்துக்களும் அழைக்கப்படுவதும் தொடர்கிறது.

தற்பொழுது சில கோயில்கள் இடம் பெயர்ந்து புதிய நிலங்களில் நிறுவப்பட்ட நிலையில் நல்ல கல்விப்பெற்ற சிலர் இத்தகைய கோயில்களை நிர்வகிப்பதைக் காண்கிறோம் - இருப்பினும், பழைய கோயில் நடைமுறைகளைப் பின்பற்றியே அவையும் செயல்படுகின்றன. பல கோயில் நிர்வாகங்களில் குறிப்பிட்ட

சிலரின் ஆதிக்கம் தெளிவாகத் தெரிகிறது, மற்றவர்கள் இவர்களின் சொல்படி நடப்பதில் ஆச்சரியம் இல்லை. அவர்களின் பங்களிப்பும் குறைவாக இருப்பதையும் காணலாம். சில குறிப்பிட்ட பாரம்பரிய நடவடிக்கைகளுக்கு மட்டும் கோயில் செயல்படுவதால், இந்தப் பாங்கு போதும் எனும் எண்ணம் நிலவுவதில் வியப்பில்லை. எனினும், கோயில் உறுப்பினர்கள் அதிகமாகி, நடவடிக்கைகளைப் பெருக்க எத்தனித்தால், இந்த அணுகுமுறை போதுமானதாக இருக்காது என்பது திண்ணம்.

உட்புறங்களிலுள்ள சிறிய கோயில்கள் சொந்தக் காரணங்களுக்காக இந்த அணுகுமுறையில் தொடர்ந்து செயல்பட்டாலும், முக்கியமாக, தாய்க் கோயில்கள் இப்படிச் செயல்பட முடியாது. அவற்றின் செயற்குழுக்கள் மறுசீரமைப்பு செய்யப்பட்டு, பல தகுதிகளையும், திறன்களையும் கொண்டவர்களை உள்ளடக்கிய வகையில், அனைவரையும் அரவணைத்து, அமைவது அவசியம்.

இந்துச் சமயத்தைப் பின்பற்றும் சிறுபான்மை சமூகம் எனும் முறையில், கோயில் நடவடிக்கைகளையும், இந்து மக்களின் நடத்தைகளையும் வைத்தே மற்றவர்கள் இந்தச் சமயத்தையும், சமூகத்தையும் எடை போடுவதைத் தவிர்க்கமுடியாது. இந்துச் சமயப் பண்புகளையும் நன்னெறிகளையும் கடைபிடிக்கும் இந்துக்களை, நாட்டிலுள்ள மற்றச் சமயத்தினரைப் பாதிக்காவண்ணம் உருவாக்குவதில் நம் கோயில்களின் பங்கு பெரியது. இதைக் குறைத்து மதிப்பிடலாகாது.

நம் இந்துச் சமயக் குடும்பங்களில் பிறக்கும் குழந்தைகளுக்கு முறையான இந்துச் சமயக் கல்வி கொடுக்கப்படுவதில்லை என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். பள்ளிகளில் முறையான சமய போதனை இல்லை; நம் இளைஞர்களுக்கும் சமய அறிவு கிடைக்கும் வாய்ப்பில்லை. பிறப்பால் இந்துக்கள் என்பதும், வீட்டில் பெற்றோர்கள் செய்யும் சடங்குகள், வாழ்வியல் முறைகளையும், திரைப்படங்களில் காண்பனவற்றையும், கோயில்களின் நடைபெறும் சடங்குகளையும் வைத்தே இவர்கள் தங்களை இந்துக்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள். இந்தப் பெரிய வெற்றிடத்தை நிரப்பும் பணி கோயில்களுக்கு மட்டுமே இருக்கின்றது. எனவே, ஒவ்வொரு தாய்க் கோயில் நிர்வாகமும் இந்தப் பணியைச் செய்ய நல்ல வியூகங்களை வகுத்து செயல்படவேண்டும். அந்தந்த வட்டார இந்துக்களுக்கு முறையான, சமய அறிவைக் கொடுப்பதை முதன்மையான தொண்டாக இந்தக் கோயில்கள் கருதவேண்டும்.

## பரிந்துரைகள்

11.1. கோயில் வட்டாரத்தில் வாழும் இந்துக்களில், அனைத்து வயதினர், இரு பாலார், பல தொழில்களில் உள்ளோர், எல்லா பொருளாதார நிலையிலும் உள்ளவர்கள், பலதரப்பட்ட கல்வி கற்றோர் என பல தரப்புகளையும் பிரதிபலிக்கும் செயற்குழுவை ஒவ்வொரு தாய்க் கோயிலும் கொண்டிருத்தல் நல்லது. கோயில் பணிகள் தன்னார்வ ரீதியிலானதாக இருந்தாலும், கோயில் பணிகளில் ஈடுபாடு கொண்டவர்களும், கோயில் நடவடிக்கைகளையும், வசதிகளையும் மேம்படுத்துவதில் ஆர்வம் கொண்டவர்களும், அனைவரையும் அணைத்து, தொழில், பொருளாதார நிலை, ஜாதி, வயது, ஆண்-பெண், அரசியல் சார்பு, போன்றவற்றில் வேற்றுமை பாராட்டாமல் ஒத்துழைப்பைப் பெறும் வல்லமைப் பெற்றவர்களும் செயற்குழுவில் இருந்தால் மட்டுமே ஒற்றுமையை ஏற்படுத்த முடியும். அரசியலில் ஈடுபட்டாலும், கோயில் விவகாரங்களில் அரசியல் வேறுபாடுகள் தலைதூக்காமல் பார்த்துக்கொள்வது நல்லது.

11.2. ஆற்றல்மிகுந்த செயற்குழுவால் மட்டுமே இத்தகையவற்றை செய்யமுடியும். பலவீனமான செயற்குழு இருப்பின், செயல்பாடுகளிலும் தொய்வு ஏற்படுவது திண்ணம். அரசாங்க அளவில் அங்கீகாரம் இல்லாத இந்துச் சமயத்தின் மாண்பை, கோயில் நடவடிக்கைளின் மூலமே நிலைநாட்ட இயலும். கோயிலின் சிறப்பை மற்றவர்கள் கொண்டாடப் போவதில்லை. எனவே, சமயப் பற்றும், சாதிக்கவேண்டும் எனும் உணர்வும் உள்ள செயற்குழுக்களின் வழியே இது சாத்தியமாகும்.

11.3. செயற்குழுவினரின் சேவையைப் பாராட்டி கௌரவிக்கும் பணி மாநில அளவிலும் தாய்க் கோயில்கள் அளவிலும் உள்ளிருந்தே வரவேண்டும். செயற்குழுவினரின் சேவைகள் சிறப்பாகத் தொடர இத்தகைய ஊக்குவிப்புகள் மிக அவசியம்.

11.4. தாய்க் கோயில்களின் நிர்வாகக் குழுவில், அவ்வட்டாரத்திலுள்ள மற்றக் கோயில்களின் பிரதிநிதிகள் இடம் பெறுவதுடன், எல்லா சிறியக் கோயில்களின் பிரதிநிதிகளையும் கொண்டு பிரிவு 9.1 -இல் குறிப்பிடப்பட்டுள்ள துணைக் குழுக்களை அமைத்து, வட்டாரத்திலுள்ள எல்லா இந்துக்களுக்கும் நல்ல பலன்களைப் பெறும் வண்ணம் செயல்படுவது சிறந்தது.

## 12.0. மலாக்கா மாநில இந்துச் சமய விவகாரங்களை ஒருங்கிணைக்கும் சம்மேளனம்

இந்துச் சமய விகாரங்களை ஒருங்கிணைக்கும் அரசாங்க அமைப்போ, அல்லது அரசு அங்கீகாரம் பெற்ற மற்ற அமைப்போ இல்லாததால் இந்துச் சமய நடவடிக்கைகளில் அதீத சுதந்திரம் தென்படுகிறது. இதனால், யார் வேண்டுமானாலும், எங்கு வேண்டுமானாலும் கோயில்களை எழுப்புவதையும், போதிய வழிகாட்டல் இன்றி பலவிதத் திருவிழாக்களைக் கோயில்களில் நடத்தி இந்துச் சமயத்தைப் பற்றி தவறான எண்ணத்தைத் தங்களையும் அறியாமல் ஏற்படுத்துவதையும், பூஜைகளை விருப்பப்படி மாற்றியமைத்துத் தனித்துவத்தை வளர்ப்பதையும், கோயில்களில் உயிர்ப்பலி கொடுத்துப் பக்தர்களுக்கு மாமிச உணவைக் கோயில் வளாகத்தில் பரிமாறுவதையும், எதிர்காலம் குறித்து 'சாமியாடல்' வழி அறிவுரை அல்லது வழிகாட்டல் எனும் பெயரில் அருள்வாக்கு கொடுப்பதையும், அவரவரின் சக்திக்கேற்பத் தனிப்பட்ட முறைகளில் அரசியல்வாதிகளின் ஆதரவுடன் மான்யங்களைப் பெறுவதிலும், மேலும், பல இந்துச் சமயத்திற்குப் புறம்பான நடவடிக்கைகளில் ஈடுபடுவதையும் இந்தச் சுதந்திரம் ஊக்குவித்துள்ளது என்பது தெளிவு.

இந்த நிலைமை இந்துச் சமயத்தைப் பின்பற்றுபவர்கள் மத்தியில் குழப்பத்தை ஏற்படுத்தியுள்ளதோடு, சிலர் இத்தகைய பழக்கங்களின்பால் நம்பிக்கை கொண்டு செயல்படவும் தொடங்கியுள்ளனர். சொந்த முயற்சியின் வழியும், குறிப்பாக நூல்களைப் படிப்பதின் வழியும், இந்துச் சமயத்தைப் பற்றிய தெளிவுப் பெற்றவர்கள் வேறுபாடுகளைப் புரிந்து, தற்கால இந்துச் சமயப் பரிணாம வளர்ச்சிக்கேற்ற வகையில் செயல்படும் கோயில்களை நாடுகின்றனர். வேறு சிலர் இத்தகைய குழப்பங்களைத் தவிர்க்க, கோயில் செல்வதைத் தவிர்த்து, தங்கள் இல்லங்களிலேயே பிரார்த்தனைகளை வைத்துக்கொள்கின்றனர்.

தமிழ் நாட்டிலும் இந்தியாவிலும் மக்களாட்சி முறையில் அதீத சுதந்திரம் கொடுக்கப்பட்டுள்ளதால் இந்துச் சமயத்தின் பற்பல வேறுபாடுகள் தங்குத் தடையின்றி வேரூன்றி வந்துள்ளதைக் காணலாம். ஆனால், மலேசிய நாட்டில் இருக்கும் சிறுபான்மை இந்துக்களுக்கு அத்தகைய சுதந்திரம் நன்மை பயக்காது. இந்த நாட்டிலுள்ள பல இன-சமய மக்கள் மத்தியில் சிறுபான்மை இந்துக்கள் மத்தியில் ஒற்றுமையை வளர்க்க வேறுபட்ட சமய வழக்கங்கள் துணை நிற்காது.

குறிப்பாக, தொடக்கக் காலத்தில், தோட்டங்களிலும், அரசு தொழிலாளர்கள் வாழ்ந்த பகுதிகளிலும், பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் தங்கள் இருப்பிடங்களைத் தங்கள் கிராமங்களாகப் பாவித்து கோயில்களைத் தங்கள் சக்திக்கேற்பவும், தங்கள் தமிழ் நாட்டு அனுபவத்தைக் கொண்டும், நிறுவிய காலம் கடந்துவிட்டது. தங்கள் இருப்பிடங்களிலிருந்து வேறு இடங்களுக்கு மாறிச் செல்லவேண்டியக் கட்டாயம் தோட்டங்கள் விற்கப்பட்டதாலும், நிலம் வெவ்வேறு பயனுக்காகப் பயன்படுத்தப்பட்டதாலும் ஏற்பட்ட நிலைமைகளைக் கண்கூடாகப் பார்க்கிறோம். இதனால், நகர், புறநகர்ப் பகுதிகளிலும், வீடமைப்புத் திட்டங்களிலும் இந்துக்கள் மற்றச் சமயத்தினர் மத்தியில் வாழத் தொடங்கியுள்ளனர். முன்பு தோட்டங்களில் தொழிலாளர் தலைவர் எடுக்கும் முடிவிற்குக் கட்டுப்பட்டு கோயில்கள் எழுப்பப்பட்டிருந்தாலும், தற்பொழுது அத்தகைய நிலை இல்லை.

எனினும், தோட்டங்களிலிருந்தும், பழைய இடங்களிலிருந்தும் கோயில்களை இடம்பெயர்த்து மற்ற இடங்களில் நிறுவும் சமயத்திலும், பழைய பாணியையே பின்பற்ற விழைவோர் அதிகம். இத்தகைய போக்கு, சிறுசிறு வட்டார வழியாகப் பிரிந்து கிடந்த இந்துக்களைப் புதிய இடத்தில்/சூழலில் ஒற்றுமைப்படுத்துவதற்கு இடையூறாக இருக்கிறது. இந்த ஆய்வின் பொழுது, மற்றவர்களின் நிலத்தில் கோயில்களை வைத்து நிர்வகிப்போர், தங்கள் கோயில்களை ஏற்கனவே அனுமதி பெற்றுச் செயல்பட்டுவரும் கோயில்கள் உள்ள இடங்களுக்கு மாற்றிக் கொண்டு செல்ல விரும்புவதைப் பார்த்தோம். கோயில்களை இணைத்துச் செயல்படவேண்டும் எனும் எண்ணம் இன்னும் ஏற்படாமல், தங்கள்-தங்கள் உரிமைகளைத் தற்காக்கவே விரும்புவதையும் காண்கிறோம்.

கடந்த 2010-ஆம் ஆண்டு நடத்தப்பட்ட மக்கள் கணக்கெடுப்பில், மலாக்கா மாநிலத்தில் இந்துக்களின் எண்ணிக்கை 46.803-ஆக இருந்தது. தற்பொழுது இந்த எண்ணிக்கை சற்றுக் கூடி, ஏறத்தாழ 50,000 இந்துக்கள் மாநிலத்தில் இருப்பதாகக் கணிக்கலாம். இந்த எண்ணிக்கையிலுள்ள இந்துக்களுக்கு மாநிலத்தில் இருக்கும் கோயில்கள் அதிகம். கோயில்களை நிறுவுவதையும், அவற்றின் நிர்வாகத்தையும் கண்காணிக்க முறையான அமைப்பு இல்லாத காரணத்தால் இந்த நிலைமை நீடிக்கிறது.

மலேசிய இந்துச் சங்கமும், மலேசிய இந்துதர்ம மாமன்றமும் கோயில்களை ஒருங்கிணைக்கவும், ஆலோசனைகளைக் கூறவும் முன்வந்து பல நடவடிக்கைகளைச் செய்துள்ளன. எனினும், இந்த அமைப்புகளுக்குச் சட்ட ரீதியாக விதிகளை அமல்படுத்தும் அதிகாரம் இல்லாததால், மிகப் பெரிய

எண்ணிக்கையில் கோயில்கள் இவற்றின் வழிகாட்டலைப் பின்பற்றத் தயாராக இல்லை. தற்பொழுது இந்த அமைப்புகள் போட்டிகளையும், பயிற்சிகளையும் நடத்துவதுடன், அவ்வப்பொழுது, அரசுக்கும், தங்களுடன் பயணிக்கும் கோயில்களுக்கும் ஆலோசனை கூறுவதுடன் திருப்தி கொள்கின்றன. இவற்றால் கோயில்களையும், அவற்றின் நடவடிக்கைகளையும் ஒருங்கிணைக்க இயலவில்லை என்பது தெளிவு.

இஸ்லாமிய-இந்து அறவாரியம் 1905-ஆம் ஆண்டு மலாக்கா, சிங்கப்பூர், பினாங்கு ஆகிய மாநிலங்களில் ஆங்கிலேய ஏகாதிபத்திய அரசால் ஏற்படுத்தப்பட்டது. நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, இந்த அறவாரியம் இந்துகளுக்குத் தனியாகவும், இஸ்லாமியர்களுக்குத் தனியாகவும் பிரிக்கப்பட்டு சிங்கப்பூரில் முதலிலும், பினாங்கில் பின்னரும் செயல்பட்டுவருகின்றன. மலாக்காவில் இந்த அமைப்பு இஸ்லாமியச் சமய அமைப்பாக மாற்றப்பட்டு செயல்படுகிறது. பினாங்கிலும் சிங்கையிலும் இந்துச் சமய அறவாரியம் இந்துச் சமய-பண்பாட்டு விவகாரங்களை ஒருங்கிணைப்பதால், கோயில்களையும் கண்காணிக்கும் பணியை இவை செய்கின்றன.

சிங்கப்பூரில் இரண்டு அமைப்புகளை அரசு உருவாக்கியுள்ளது. 1968-ஆம் ஆண்டு நாடாளுமன்ற சட்டத்தின் வழி சிங்கப்பூர் இந்து அறவாரியத்தையும் (Hindu Endowment Board), 1985-ஆம் ஆண்டு இந்து ஆலோசனை வாரியத்தையும் (Hindu Advisory Board) அமைத்துள்ளனர். இரண்டு வாரியங்களுக்கும் தலைவரை நியமிக்கும் பொறுப்பு சமுதாய மேம்பாட்டு அமைச்சிடம் உள்ளது. இந்து அறவாரியத்தின் விதிகளின்படி சிங்கையில் எல்லா இந்துச் சமய-பண்பாட்டு விவகாரங்களிலும் இந்த அமைப்பு முடிவு செய்து, அமல்படுத்தக்கூடிய அதிகாரம் உள்ளது. இதன் ஊழியர்கள் அரசாங்கத்தின் கீழ் பணிபுரிகின்றனர். இந்து ஆலோசனை வாரியம் தேவைப்படும் பொழுது ஆலோசனைகளைக் கொடுக்கும், சிங்கையின் எல்லா இந்துக்களையும் பிரதிநிதிக்கும் அமைப்பு. சிங்கப்பூர் நாட்டில் இந்துக்களின் எண்ணிக்கை, நாட்டு மக்கள் தொகையில் ஐந்து விழுக்காட்டிற்குக் குறைவாக மட்டுமே இருந்தபோதும், இந்த நாட்டில் இந்துக் கோயில்களிலும், பொது அமைப்புகளின் வழியும் இந்துச் சமய நடவடிக்கைகளை ஒழுங்குப்படுத்துவதிலும் பெரும் வெற்றியை இந்த அமைப்புகளின்வழி ஈட்டியுள்ளது.

பினாங்கில் இந்து அறவாரியம் நாட்டின் சுதந்திரத்திற்குப் பிறகு உயிரூட்டப்பட்டுள்ளது. தற்பொழுது, பினாங்கு மாநிலத்திலுள்ள கோயில்கள், மற்றும், இந்துச் சமய-பண்பாட்டு நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் பணியில் இந்த அமைப்பு ஈடுபட்டு வருகிறது. இந்த அமைப்புக்குப் பினாங்கு மாநில அரசு முழு ஆதரவு கொடுத்து, அதற்கான அலுவலகம் மற்றும், அலுவலாளர்களையும் வழங்கியுள்ளது.

எனினும், சில தரப்புகள், இத்தகைய அறவாரியங்கள் அல்லது ஒருங்கிணைக்கும் அமைப்புகள் தேவை இல்லை, இந்துச் சமயத்தையும், கோயில்களையும் கட்டுப்படுத்த வேண்டியதில்லை எனும் கருத்தை முன்வைக்கின்றனர். அண்மையில் ஒவ்வொரு மாநிலத்திலும் இந்து அறவாரியம் அமைப்பது நல்லது எனும் கருத்தை முன்வைத்தபொழுது, இத்தகைய எதிர்ப்புக் கருத்துகள் மேலோங்கியிருந்ததைப் பார்த்தோம். பெரும்பாலான கோயில்கள், தங்களின் சுதந்திரத்தை விட்டு கொடுக்க விரும்பவில்லை என்பது தெளிவு.

வலுவான நிதி நிலையைக் கொண்டுள்ள கோயில்கள் தங்கள் கோயில் நடவடிக்கைகளில் மற்றவர்களின் குறுக்கீடு இருப்பதை விரும்புவதில்லை. தங்கள் கோயில் நடவடிக்கைகள் சற்று மாறுபட்டதாக இருந்தாலும், அத்தகைய வேறுபாட்டை தற்காக்க எண்ணுபவர்களும் இத்தகைய ஒருங்கிணைப்பு அமைப்புகளை விரும்புவதில்லை. தமிழ் நாட்டில் இத்தகைய வேறுபாடுகளால் பிரச்சினை இல்லை. காரணம் அங்குள்ள இந்துக்களின் எண்ணிக்கையும், அங்குப் பின்பற்றப் படும் கலாச்சாரமும். மலேசியாவில் ஏறத்தாழ ஆறு விழுக்காட்டு மக்கள் தொகையில் இருக்கும் இந்துக்கள் இந்தக் கோயில் விசயத்தில் கட்டுக்கோப்புடனும், ஒற்றுமையுடனும் நடந்து கோயில் நடவடிக்கைகளைத் தற்பொழுது ஏற்றுக்கொள்ளப்படும் இந்துப் பரிணாம வளர்ச்சிக்கேற்ப அமைத்துக் கொள்வது நல்லது. இதன்வழி மற்றச் சமய-இன வழிவந்தவர்களின் நன்மதிப்பைப் பெற்று நாட்டு மக்கள் மத்தியில் ஒற்றுமை உணர்வை ஏற்படுத்த உதவ முடியும்.

அளவிற்கு மீறிய சுதந்திரத்தில் திளைத்து இருக்கும்பொழுது சட்டப்படி நடவடிக்கைகள் எழுமானால், பல்வேறு நடைமுறைகளைக் கையாண்டு, தனித்து நிற்கும் தன்மை, சிறிய எண்ணிக்கையிலுள்ள இந்துக்களுக்கே இடைஞ்சலாக இருக்கலாம். பலரும் ஏற்றுக் கொள்ளும் இந்துச் சமய நடவடிக்கைகளை முன்வைத்து, மாநில அளவில் ஒருங்கிணைப்பு செய்யவும், இந்துச் சமய-பண்பாட்டு நிகழ்ச்சிகளைக் கண்காணித்து ஆலோசனைக் கூறவும் ஒரு மாநில ஒருங்கிணைப்புக் குழு இருத்தல் நலம். மற்ற மாநிலங்களிலும் இது அமைவது நல்லது.

இத்தகைய ஒருங்கிணைப்பு அமைப்பு மாநில அரசின் ஆதரவையும் அங்கீகாரத்தையும் பெற்றிருப்பது சிறப்பு. குறைந்தது மாநில அரசின் முழு ஆதரவு இருப்பது நல்லது. மாநில அரசின் ஏற்பாட்டில் பினாங்கில் இருப்பதுபோல் இந்து அறவாரியம் வழி - உரிய அலுவலாளர்களைக் கொண்டும், மான்யங்களைக் கொண்டும்

அமைக்கப்பட்டோ, குறைந்தது மாநில அளவில் இந்துச் சமய-பண்பாட்டு-கோயில்களின் ஒருங்கிணைப்பு வாரியம் அமைத்தோ, அதன் ஆலோசனைகளை மாநில அரசு எல்லா இந்துச் சமய-பண்பாட்டு-கோயில் விவகாரங்களில் பெற்றுக் கொள்ளலாம்.

## பரிந்துரைகள்

12.1. மலாக்கா மாநில இந்துக் கோயில்களை ஒருங்கிணைத்து, ஆலோசனைகளைக் கூற ஒரு அமைப்பு இருப்பது அவசியம். மாநில அரசின் அங்கீகாரத்துடன் ஒரு சட்டம் மூலம் இதை அமைக்கலாம் - அதன் பணி எல்லா இந்துச் சமய-பண்பாட்டு விவகாரங்களையும் ஒருங்கிணைத்தலாக இருந்து, கோயில், இடுகாடு, மின்சுடலை, இறப்பு-ஈமச் சடங்குகள், இந்துச் சமய விழாக்கள், பாரம்பரியத் திருமணங்கள் போன்றவற்றை உள்ளடக்கும்.

12.2. இத்தகைய ஒருங்கிணைப்பு அமைப்பிற்கு அலுவலகமும், அலுவலாளர்களும் இருக்கவேண்டும். கோயில்கள், இந்துக்கள், இந்துச் சமய அமைப்புகள், போன்றவற்றின் விவரங்களைச் சேகரித்து வைத்திருப்பதுடன், தேவைப்படும் பொழுது முறையான ஆலோசனைகளை இந்துச் சமயத்தின் பெயரில் நடத்தப்படும் நடவடிக்கைகளுக்குக் கூற ஆலோசனை மன்றங்களை ஏற்படுத்துதல் அவசியம். மாநில அரசிற்கும், பதிவதிகாரிக்கும் இந்துச் சமயம் சம்பந்தமான அமைப்புகள், நடவடிக்கைகள் பற்றி முறையான ஆலோசனைகளை இந்த அமைப்பு கொடுக்கும்.

12.3. மாநில அரசு சட்ட ரீதியாக அறவாரியத்தை ஏதோ காரணத்தினால் அமைக்க இயலாவிட்டால், மாநில அரசு, மலாக்கா மாநில இந்துக் கோயில்-சமய-பண்பாட்டு ஒருங்கிணைப்பு சம்மேளனத்தை அங்கீகரித்து சகல வகைகளிலும் ஆதரவு வழங்கி, ஆண்டுதோறும் போதுமான மான்யம் வழங்கி மாநிலத்தில் இந்துக் கோயில்-சமய-பண்பாட்டு நடவடிக்கைகள் சிறப்பாக நடைபெற துணை நிற்கவேண்டும்.

12.4. அமைக்கப்படும் ஒருங்கிணைப்புக் குழு மாநிலத்திலுள்ள எல்லா இந்துக் குடும்பங்களையும், இந்துச் சமயத்தைப் பின்பற்றுவோரையும் பதிவுச் செய்யும் முயற்சியில் இறங்க வேண்டும். தாய்க் கோயில்களின் வழி நடவடிக்கைகளைத் திட்டமிடும்பொழுது, இத்தகைய உறுப்பினர்களிடமிருந்து கட்டணம் வசூலித்து, உறுப்பியத்திற்கு ஏற்றவாறு, தாய்க் கோயில்களுக்கு உதவித் தொகைகளை வழங்கவேண்டும். இதை அமல்படுத்தக் காலம் தேவைப்படும். ஆனால், இது வெற்றிபெற்றால் இந்துச் சமுதாய வளர்ச்சிக்கும், சொந்தக் காலில் நிற்கக்கூடிய பக்குவத்தையும், கோயில் நிர்வாகங்களில் கட்டுக் கோப்பையும் வரும் காலங்களில் உறுதிசெய்யும் என்பது திண்ணம்.

12.5. மாநில அரசு, மத்திய அரசு, மாநில-மத்திய அரசியல்வாதிகள், மலாக்கா இந்துக் கோயில்களுக்கும், நடவடிக்கைகளுக்கும் கொடுக்கும் மான்யங்கள் இந்த ஒருங்கிணைப்புக் குழுவின் ஆலோசனை பேரிலேயே கொடுக்கப்பட வேண்டும். முறையாகவும், எதற்கு முதன்மை கொடுக்கவேண்டும் என்பதையும், வெளிப்படையான கொள்கையை அமல் படுத்தும் வழியாக இது செயல்படுதல் நல்லது. அதுபோலவே, கோயில்கள், அல்லது இந்துச் சமய நடவடிக்கைளுக்காக உதவி கோருவோரின் விண்ணப்பங்கள் இந்தக் குழுவின் வழியே அனுப்பி உதவி பெறுவதும், பதிவுப் பெறுவதும் சிறப்பு.

12.6. தொடக்கத்தில் பலருக்கும் இத்தகைய செயல்முறைகள் ஏற்புடையதாக இருக்காது. குறிப்பாக சொந்த நலன்களை இத்தகைய அணுகுமுறை பாதிக்கும் என எண்ணுபவர்களுக்கு இதை ஏற்றுக்கொள்வதில் சிக்கல்/தயக்கம் இருக்கும். ஆயினும், மாநிலத்தில் கோயில், இந்து சமய விவகாரங்களில் ஒருவித ஒருங்கிணைப்புடன் கூடிய ஒழுங்கு இதன்வழிதான் ஏற்படும் என்பது திண்ணம்.

12.7. இந்த அமைப்பு, மற்ற மாநில, நாடுகளிலுள்ள இந்துக் கோயில்-சமய அமைப்புகளுடன் தொடர்புக் கொண்டு நூலகத்திற்கான நூல்கள், இதழ்கள் ஆகியவற்றைப்பெற்று எல்லா தாய்க் கோயில்களுக்கும் விநியோகிக்கலாம். அதுபோலவே, நல்ல சமய அறிஞர்களை வரவழைத்து மலாக்கா கோயில்களில் பேச வைக்கலாம். சமயச் சுற்றுலா ஏற்பாடு செய்யலாம்.

12.8. இந்துக் குடிமக்களின் நலனை மாநில அரசு சிந்தித்து இத்தகைய நடவடிக்கைகளுக்கு ஆதரவு வழங்கினால் மாநில இந்துக் குடும்பங்கள், குறிப்பாக இளைஞர்கள் மத்தியில் நிலவும் பலவகை சமுதாயச் சீர்கேடு பிரச்சினைகளைக் கட்டம் கட்டமாகக் களைய நிச்சயமாகத் துணை புரியும். இந்துக்களைப் பிரதிநிதிக்கும் அரசியல் கட்சிகள் பலவித கருத்துகளைச் சொல்வதற்கு வாய்ப்புண்டு. எனினும், அரசியல் கலவாத சுதந்திரமான ஒருங்கிணைக்கும் அமைப்பு இல்லாதவரை இந்தச் சிறிய

இந்துச் சமுதாயம் பலவித அமைப்புகளின், கோயில்களின் வழி தொடர்ந்து பிரிந்து பல குழுக்களாக இருந்து வேற்றுமைகளைத் தொடர்ந்து பாராட்டவே செய்யும்.

12.9. முன்பு தோட்டங்களில் கோயில்கள் நிறுவப்பட்டதால், தோட்ட நிர்வாகம் கோயில்களின் நடவடிக்கைகளை ஓரளவு கண்காணிக்கவே செய்தது. இன்று அத்தகைய 'கிராம'ச் சூழ்நிலை இல்லை. அக்கம் பக்கம் வாழ்பவர்கள் அனைவரும் இந்துக்கள் எனும் சூழல் மிகக் குறைந்துவிட்டது. ஆகவே, தற்பொழுது இருக்கும் அமைப்புகளைப் பயன்படுத்தி இந்துக் கோயில்-சமய நடவடிக்கைகளைக் கண்காணிப்பது சிரமம். எடுத்துக்காட்டாக வீடமைப்புக் குடியிருப்போர் சங்கம் இந்துச் சமய விவகாரங்களில் குறுக்கிட இயலாது. ஆகையால், குடியிருப்புப் பகுதியிலுள்ளவர்கள் இந்துச் சமயப் பெயரைச் சொல்லி எதையும் செய்யக் கூடிய நிலைமை இருக்கிறது. இத்தகைய போக்கைக் கட்டுப்படுத்தி ஒருமுகப்படுத்தும் கடமை மாநில அரசிற்கு உண்டு.

12.10. இஸ்லாமியச் சமயம் நாட்டின் அதிகாரப்பூர்வமான சமயமாக இருந்தபோதும் மற்றச் சமயங்களைப் பின்பற்றுபவர்களுக்கு ஏற்ற சுதந்திரம் சட்டப்படி கொடுக்கப்பட்டுள்ளது. எனவே, இந்துச் சமய நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கும் அமைப்பை ஏற்படுத்தி அதன்வழி இந்துச் சமய அடிப்படையில் நடைபெறும் எல்லாவற்றையும் ஒழுங்குப்படுத்தி முறையாகச் செயல்பட வைப்பது மாநில அரசின் பொறுப்பு இல்லை என்று சொல்ல முடியாது. அத்தகைய, அரசால் அங்கீகரிக்கப்பட்ட அமைப்பு, பல சமயங்களைப் பின்பற்றும் ஒற்றுமைமிக்க மலாக்கா மக்களை உருவாக்கும் ஓர் ஆக்ககரமான நடவடிக்கையாகவே அமையும்.

## 13.0. இடுகாடு, மின்சுடலை மற்றும், கருமக்கிரியை செய்யும் இடம்

இந்த அம்சம் இந்துக் கோயில்களுடன் நேரடியாகத் தொடர்புபடுத்தப்படவில்லை என்றாலும், குடும்ப உறுப்பினரிடையே இறப்பு போன்ற அமங்களச் சம்பவங்கள் நிகழ்ந்தால் சம்பந்தப்பட்ட குடும்பங்களைச் சேர்ந்த பக்தர்கள் மீது சில சமூகக் கட்டுப்பாடுகள் உள்ளன. ஆனால், வீட்டில் ஒரு மரணம் நிகழும்பொழுது செய்ய வேண்டிய நீத்தார் கடன் போன்ற சடங்குகள் உள்ளன. தற்போது மலாக்கா மாநிலத்தில் இறப்பு போன்ற அமங்கள நிகழ்வுகளை எதிர்கொள்ளும் இந்துக்களுக்குப் பல வசதிகள் உள்ளன.

இப்போது பெரும்பாலான இந்துக்கள் சடலங்களைத் தகனம் செய்வதையே விரும்புகின்றனர். என்றாலும், ஒரு சிலர் சடலங்களைக் குறிப்பாகச் சிறு குழந்தைகளாக இருக்கும்போது இடுகாடுகளில் புதைக்கவே இன்னும் விரும்புகின்றனர். மத்திய மலாக்கா மாவட்டத்தில் ஜெலுத்தோங்கில் ஓர் இந்து இடுகாடு உள்ளது, இது முன்பு புக்கிட் செரிண்டிட்டில் இருந்த இடுகாட்டுக்குப் பதிலாகக் கொடுக்கப்பட்டதாகும். மற்றும், இரண்டு இடுகாடுகள் லாடாங் புக்கிட் காஜாங்கில், தோட்ட நிலத்திலும், ஆயர் மொலேக்கில், அரசு நிலத்திலும் உள்ளன. ஜாசின் மாவட்டத்தில் 15 இடுகாடுகள் உள்ளன, அவற்றில் 7 அரசு நிலங்களில் - மெர்லிமாவ், கம்போங் ஜாசின் ஹிலீர், பெம்பான், அசகான், ஞாலாஸ், செலாண்டார் மற்றும், பத்தாங் மலாக்கா, - உள்ளன. அவற்றில் ஒன்று ஃபெல்டா புக்கிட் சிங்கே நிலத்திலும், மீதமுள்ள 7-உம் தோட்ட நிலங்களில், அதாவது, செர்க்காம் தோட்டம், டேவன் தோட்டம், மெர்லிமாவ் தோட்டம், கெமெண்டோர் தோட்டம், ஜாசின் லாலாங் தோட்டம், டைமண்ட் ஜூப்ளித் தோட்டம், மற்றும், ரிம் தோட்டத்தில் அமைந்துள்ளன.

அலோர் காஜா மாவட்டத்தில், 12 இந்து இடுகாடுகள் உள்ளன, அவற்றில் 8 அரசு நிலங்களில் அதாவது, திபோங், கெமுனிங் கெரு, புலாவ் செபாங் (ஃபமோசா), காடேக், ரெம்பியா, டுரியான் துங்கால், லெண்டு மற்றும், மஸ்ஜித் தானாவில் இவை அமைந்துள்ளன. தோட்ட நிலத்தில் 2 இடுகாடுகள் அதாவது, திபோங் தோட்டம் மற்றும், காடேக் தோட்டத்தில் அமைந்துள்ளன. ஒன்று ஃபெல்டா ஹூத்தான் பெர்ச்சாவிலும், மற்றொன்று பெங்காளன் பாளாக் எனும் இடத்தில் தனியார் நிறுவனத்திற்குச் சொந்தமான நிலத்தில் அமைந்துள்ளது.

மலாக்காவில் தகனம் செய்வதற்கான முக்கிய இடம் ஹங் துவா ஜெயா நகராட்சி மன்றத்தின் மேற்பார்வையில் உள்ள பத்து பிரண்டாம் ஜெலுத்தோங்கில் அமைந்துள்ளது. இதேபோல், மாவட்டங்களில் உள்ள அனைத்து அரசு நிலத்தில் அமைந்துள்ள இடுகாடுகளும் அந்தந்த மாவட்ட அலுவலகங்களின் மேற்பார்வையில் உள்ளன. சில கோயில்களாலும், சில மரண சகாய நிதிச் சங்கங்களினாலும் நிர்வகிக்கப்படுகின்றன. ஆனால், பெரும்பாலானவை உள்ளூர் இந்துச் சமூகத்தினரால் பராமரிக்கப்படுகின்றன. மலாக்கா ஜெலுத்தோங் மின்சுடலை நிர்வாக அமைப்பினால் இந்தத் தகனம் செய்யும் இடம் 2010-ஆம் ஆண்டு முதல் நிர்வகிக்கப்பட்டு வந்தது. ஆட்சி மாற்றத்தின் காரணமாக மலாக்காவை ஆட்சி செய்த

பாக்காத்தான் ஹரப்பான் மாநில அரசின் இந்தியர்களைப் பிரதிநிதிக்கும் சட்டமன்ற உறுப்பினரின் வேண்டுகோளுக்கிணங்க இந்த அமைப்பு மின்சுடலையின் நிர்வாகத்தை ஹங் துவா ஜெயா நகராட்சி மன்றத்திடம் ஒப்படைத்தது. பின்னர் 2019-ஆம் ஆண்டு நடுப்பகுதியிலிருந்து இதனை நிர்வகிக்க மலாக்கா மாநில இந்தியர் அறப்பணி அமைப்பிடம் ஒப்படைக்கப்பட்டது.

கவலைக்குரிய விஷயம் என்னவென்றால், தனியார் துறை நிலம் மற்றும், தோட்டங்களில் உள்ள இடுகாடுகளுக்கு மாற்று இடம் வழங்காமல் தோட்ட முதலாளிகளே அந்நிலங்களை எடுத்துக்கொள்ளக் கூடிய நிலை உள்ளது. பெரும்பாலான தோட்டங்கள் இப்போது இந்துத் தொழிலாளர்களைப் பயன்படுத்துவதில்லை. அதோடு, சிலர் வெளியிலிருந்து யாரையும் தங்கள் பகுதிகளுக்குள் நுழைய அனுமதிப்பதுமில்லை. எனவே, இந்த இடுகாடுகளின் நிலைமை கேள்விக்குறியாகவே உள்ளது.

இறந்தவரின் சடலத்தைத் தகனம் செய்த மூன்றாம் நாளில் விடியற்காலை நேரத்தில் இறந்தவரின் உடனடி குடும்பத்தினரால் இறந்தவருக்குக் கருமக்கிரியைச் சடங்குகளை ஆறு அல்லது கடற்கரையில் நிகழ்த்துவதற்காக ஓர் அதிகாரப்பூர்வமான நிரந்தர இடம் இல்லாதது (ஆத்மா சாந்தி மையம்) மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துச் சமூகத்தைக் கவலையடையச் செய்யும் மற்றொரு விஷயம் ஆகும். இந்தச் சடங்கிற்கு நெருக்கமான குடும்ப ஆண்களைத் தவிர வேறு யாரும் அழைக்கப்படுவதில்லை. இந்தச் சடங்குகளை இதன் தொடர்பாகச் சிறப்புப் பயிற்சி பெற்ற அர்ச்சகர்களால் வழிநடத்தப்படுகிறது. இந்தச் சடங்கில், இறந்தவரின் வாரிசு அவரின் அஸ்தியைத் தண்ணீரில் கரைத்தப் பிறகு பல முறை மூழ்கி எழ வேண்டும். இறந்தவரின் வாழ்க்கையில் அவரது ஆன்மாவை மீட்டெடுப்பதற்கும் புனிதப்படுத்துவதற்கும் அடையாளமாக அஸ்தியை கரைத்து விட வேண்டும். இதனால், இறந்தவரின் ஆத்மா இந்துச் சமய நம்பிக்கையின்படி மறுபிறவி நோக்கியப் பயணத்தைத் தொடர முடியும்.

1950-ஆம் ஆண்டுகளிலிருந்து 1970-ஆம் ஆண்டுகள் வரை, மலாக்காவில் உள்ள இந்துக்களால் கிளேபாங் கடலோரப் பகுதிகள் இந்த நோக்கத்திற்காகப் பயன்படுத்தப்பட்டு வந்தன. அந்தக் காலக்கட்டத்தில், இங்கு சுற்றி வாழ்ந்த பிற சமூகங்கள், இந்துச் சமயத்தாரின் கட்டாயச் சடங்கு என்பதை ஏற்றுக்கொண்டு, உரிய ஒத்துழைப்பை வழங்கி வந்தன. 1980-ஆம் ஆண்டுகளுக்குப் பிறகு பெரும்பாலான மலாக்கா நகரின் அருகிலுள்ள கடற்கரையோர மற்றும், ஆற்றங்கரைப் பகுதிகளில் பல மேம்பாட்டுத் திட்டங்கள் உருவாகத் தொடங்கியபோது இந்துக்களுக்கு இந்தச் சடங்கைச் செய்ய இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் பெரும் சிக்கலை உருவாக்கியது. மண்ணைக் கொட்டி கடற்பகுதிகள் மீட்கப்பட்டதைத் தொடர்ந்து, நகருக்கு அருகிலுள்ள கடற்கரை, வதியும் அசுத்தமும் நிறைந்து சடங்கிற்கு ஏற்ற இடமாக இல்லாததால் மற்ற இடங்களில் சடங்கைச் செய்ய முனையும்பொழுது அங்கு வாழும் பிற சமயத்தினர் பெரும்பாலும் இத்தகைய சடங்குகள் அவர்களிடத்தில் நடப்பதை விரும்பாமல், எதிர்ப்புத் தெரிவித்து வந்துள்ளனர். சில நேரங்களில் சடங்கைச் செய்பவர்கள் அச்சுறுத்தல்களுக்கு ஆளாவதோடு உள்ளூர் மக்களால் விரட்டியும் விடப்படுகிறார்கள். ஒரு நிரந்தர இடத்தைப் பெற பல முறை விண்ணப்பிக்கப்பட்ட போதிலும், மலாக்கா மாநிலத்தில் இந்தச் சடங்கின் மூலம் தூய்மைக்கேடு ஏற்படும் எனும் ஒரு சாராரின் அனுமானத்தால், குறிப்பாகக் கடலோரப் பகுதிகளைப் பிரதிநிதிக்கும் மாநிலச் சட்டசபை உறுப்பினர்கள் ஆட்சேபனைகளை எழுப்பி வந்ததால் இந்தச் சடங்குகளை நடத்துவதற்கு ஒரு பொருத்தமான இடத்தை மாநில அரசால் தீர்மானிக்க முடியவில்லை. இதன் விளைவாக, இந்துச் சமூகம் இந்த மாநிலத்தில் குடிமக்களாக நீண்ட காலமாக வாழ்ந்திருந்தாலும், மிக முக்கியமான இந்தச் சடங்கிற்கு ஓர் இடம் கூட இன்று வரை அதிகாரப்பூர்வமாக வழங்கப்படவில்லை என்பது உண்மை.

பொருத்தமான மற்றும், வசதியான இடத்தைப் பெறுவதற்கான முயற்சி 1950-ஆம் ஆண்டுகளிலிருந்தே மறைந்த டத்தோ சி.எம்.சேத் தலைமையிலான குழுவால் தொடங்கப்பட்டது. அதைத் தொடர்ந்து, மறைந்த டத்தோ எஸ்.கே.ஆர்.எம். துரைராஜ் மற்றும், தேர்ந்தெடுக்கப்பட்ட இந்து / இந்திய பிரதிநிதிகளான மறைந்த டத்தோ என்.அருணாசலம், டத்தோ வீரா ஆர். இராகவன் மற்றும், டத்தோ வீரா ஆர். பெருமாள் ஆகியோரும் இம்முயற்சிகளைத் தொடர்ந்தனர். டத்தோ வீரா ஆர். பெருமாள் மலாக்கா மாநில அரசின் ஆட்சிக்குழுவில் இருந்தபோது, சுங்கை ஊடாங் பகுதியில் உள்ள பெங்களான் பாலாக் கடற்கரையில் அமைந்துள்ள இடம் இந்தச் சடங்கிற்குப் பொருத்தமாக அமையும் எனக் கருதினார். காரணம், அங்கு ஏற்கெனவே ஓர் இந்தியர் இடுகாடு, சீன இடுகாட்டிற்கு அருகில் இருப்பதோடு அந்த இடம் ஆழமாக இல்லாமலும், சகதியற்ற, மணல் பரப்பிலான, தெளிவான கடல் நீருடன், பாதுகாப்பாக இருப்பது தெரிய வந்தது. நெகிரி செம்பிலானில் அங்குள்ள இந்துக்களுக்கு வழங்கப்பட்ட 'கருமக்கிரியை' இடத்தைக் காணவும், புரிந்து கொள்ளவும் அவர் மலாக்கா மாநிலத்தின் அன்றைய மாண்புமிகு முதலமைச்சர் டத்தோ வீரா (இப்போது துன் - மலாக்கா ஆளுநர்) முகமட் அலி ருஸ்தாமை போர்ட்டிக்சன் கடற்கரைக்கு அருகில் அமைந்திருந்த

இந்துக்கள் கருமக்கிரியை செய்யும் இடத்திற்கு அழைத்துச் சென்றார். இருப்பினும், இந்த விவகாரம் மாநில ஆட்சிக்குழுக் கூட்டத்தில் தாக்கல் செய்யப்பட்டபோது, பெங்களான் பாலாக் பகுதியைப் பிரதிநிதிக்கும் சட்டமன்ற உறுப்பினர் இதற்கு ஒத்துக்கொள்ளாதக் காரணத்தால் மாநில ஆட்சிக்குழு உறுப்பினர்களும் எதிர்த்த காரணத்தால் முடிவு செய்யப்படாமல் ஒத்திவைக்கப்பட்டது. இதற்குப் பிறகு டத்தோ மகாதேவன் ஆட்சிக்குழு உறுப்பினராகப் பொறுப்பேற்றபோது, இது தொடர்பாக எந்த ஒரு மேம்பாடும் காணவில்லை.

2018-ஆம் ஆண்டில் மாநில அரசு பாக்காத்தான் ஹாராப்பனுக்கு மாறிய போது மாநில ஆட்சிக்குழு உறுப்பினராக இருந்த மாண்புமிகு ஜி.சாமிநாதன் அவர்கள், இந்த விசயம் சம்பந்தமாக ஒரு தீர்வினைக் காண முயற்சி எடுத்து வல்லுனர்கள் கொண்ட குழுவை அமைத்து கடற்கரையின் பல இடங்களை ஆய்வு செய்தார், மீண்டும் பெங்காளான் பாலாக்கில் இருந்த இடமே மிகவும் பொருத்தமானது என குழுவினர் தெரிவு செய்தனர். சீன இடுகாடு மற்றும், சில பழைய இந்துக் கல்லறைகளின் விளிம்பில் கடற்கரை சாய்வாகவும், மணலாகவும், சேறும் சகதியும் இல்லாமல் இருப்பதால், கருமக்கிரியை சடங்குகள் செய்வதற்குப் பாதுகாப்பானது என கருதினர். இதன் அடிப்படையில் மாண்புமிகு திரு. சாமிநாதன் ஒரு தீர்மானத்தை மலாக்கா மாநில ஆட்சிக் குழுக் கூட்டத்தில் கொண்டுவந்தார். 2019-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 25-ஆம் நாள் நடைபெற்ற 28/2019-ஆம் எண் மாநில ஆட்சிக் குழுக் கூட்டத்தில் இத்தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது மலாக்காவில் உள்ள இந்திய சமூகத்தின் அஸ்தியைக் கரைப்பதற்கும் கருமக்கிரியைகள் செய்வதற்கு அந்த இடத்தைக் கொடுப்பதற்கு ஒப்புதல் அளித்தது. அலோர் காஜா மாவட்டம் மற்றும், நில அலுவலகத்தின் தொடர் நடவடிக்கைகளுக்காக அனுப்பப்பட்ட இந்த முடிவின் வழி, சீன இடுகாட்டுக்கு அருகில், கோனெட் தீவுக்கு அருகில், தெலோக் காங் கடற்கரையில் இந்த நிலம் கோலா சுங்கை பாரு பகுதியில் உள்ள மின்சார மின் நிலையமான திலோக் காங்கிலிருந்து சுமார் 500 மீட்டர் தொலைவில் அமைந்துள்ளதை இந்தக் கருமக்கிரியை நடைபெறும் மையமாக அமைத்துக்கொள்ள வகை செய்தது என்று சொல்லலாம்.

எனினும், மேற்கண்ட ஒப்புதல் அளிக்கப்பட்ட போதிலும், மலாக்காவின் மலாக்கா மாநில இந்திய அறப்பணி அமைப்பு நிலத்தைக் கையகப்படுத்த தொடர்ந்து முயற்சிகளை மேற்கொள்வதற்கு முன், மாநில அரசில் மாற்றம் ஏற்பட்டது. இந்த மாற்றம் இந்த அறப்பணி அமைப்புக் குழுவிற்கு இந்த நோக்கத்தைத் தொடரக் கடினமாக்கியுள்ளது. புதிய மாநில அரசு பழைய பாக்காத்தான் ஹாராப்பன் அரசின் முடிவை ஆட்சேபிக்கும் போக்கைக் கடைப்பிடிப்பதாலும், அரசியல் காரணங்களால் ம.இ.கா.வின் மலாக்கா மாநிலத் தலைமைத்துவமும் வேறு இடங்களைப் பார்க்கலாம் எனும் போக்கைக் கடைப்பிடிப்பதாலும் இந்த ஆய்வறிக்கையை எழுதும் நேரத்தில் தெளிவில்லாத நிலை ஏற்பட்டுள்ளது. இருப்பினும், இந்த மையத்தை நிறுவ ஏற்படுத்தப்பட்ட சுதந்திரமான அமைப்பு தனது இலக்குகளை அடைய பல வியூகங்களுடன் தொடர்ந்து செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. மாற்று இடமாக இருந்தாலும், கருமக்கிரியையை முறையாகவும் பாதுகாப்பாகவும் செய்ய வசதிகளைக் கொண்ட மையத்தை அமைக்கக் கூடிய இடமாக இருந்தால் ஏற்றுக்கொள்ள இந்தக் குழு தயாராகவே உள்ளது. நெடுங்காலமாக இருக்கும் இப்பிரச்சினைக்கு மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துச் சமூகம் மாநில அரசின் ஒத்துழைப்பையும், இந்தியர்களைப் பிரதிநிதிக்கும் எல்லா அரசியல் கட்சிகளின் ஆதரவையும் பெரிதும் எதிர்பார்க்கிறது. இந்தத் திட்டம் செயல்பட்டு, முறையான மையம் அமைந்தால், மலாக்கா மாநிலத்தில் இந்துச் சமூகத்திற்குக் கருமக்கிரியைகளை நிகழ்த்துவதற்கு ஒரு நிரந்தர இடம் வேண்டும் எனும் கனவு நனவாகும்.

## பரிந்துரைகள்

13.1. மலாக்காவில் இந்துக்கள் இருக்கும் ஒவ்வொரு பகுதியிலும் அவர்களுக்குப் பொருத்தமான இடுகாட்டு நிலங்களை அரசு வழங்க வேண்டும். தேவைப்பட்டால், தோட்டப் பகுதியில் உள்ள இடுகாடு, சாலைக்கு அருகில் இருந்தால், அரசாங்கத்தால் கையகப்படுத்தப்பட்டு, மாவட்ட அலுவலகத்தின் கீழ், குறிப்பாக இந்து இடுகாட்டு நிலமாக மாற்றப்பட வேண்டும்.

13.2. மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துச் சமூகம் ஒன்றுபட்டு, அந்தந்தப் பகுதிகளில் இடுகாடுகளின் விவகாரங்களை நிர்வகிக்க மரண சகாயநிதிச் சங்கம் அல்லது அது போன்ற அமைப்புகளை நிறுவி பொறுப்புகளை ஏற்கவேண்டும்.

13.3. தேவைப்பட்டால், தோட்டங்களில் உள்ள இடுகாடுகள் அரசாங்கத்தால் வழங்கப்பட்ட இடுகாடுகளுக்கு மாற்றப்பட வேண்டும்.

13.4. ருக்குன் நெகாரா கோட்பாட்டிற்கேற்ப மலாக்கா மாநில அரசு, மலாக்கா மாநில இந்துக்களின் நலனில் அக்கறை காட்டவேண்டும். மேலும், 2019-ஆம் ஆண்டு செப்டம்பரில் பக்காத்தான் ஹாரப்பன் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட கடற்கரையின் ஓரத்தில் அமைந்துள்ள இடத்தை, அல்லது அது போன்ற தன்மைகளைக் கொண்ட இடத்தைக் கருமக்கிரியைகள் செய்யும் இடமாக (ஆத்மா சாந்தி மையம்) உருவாக்க அதிகாரப் பூர்வ அனுமதியைத் தர வேண்டும். இந்தப் பிரச்சினை மீண்டும் விவாதிக்கப்படும்பொழுது, கருமக்கிரியை அசுத்தத்தை ஏற்படுத்தும் அல்லது சுற்றுப்புறத் தூய்மையைக் கெடுக்கும் எனும் வாதத்தை ஒதுக்கி, அரசியல் வேறுபாடுகளைக் காட்டாமல், மலாக்கா மாநில இந்துச் சமய மக்களுக்காக ஒருமித்த ஆதரவைக் காட்டி, ருக்குன் நெகரா சித்தாந்தங்களுக்கேற்ப, ஒப்புதல் அளிக்கவேண்டும். மாநிலத்தில் வாழும் இந்துக்களுக்கு அவர்களும் மாநிலப் பிரஜைகள் என்பதற்கு இது ஓர் அங்கீகாரமாக இருக்கும்.

13.5. பிரிவு 11 (3) இல் பின்வருமாறு மலேசிய அரசியலமைப்பில் காட்டப்பட்டுள்ள விதிகளை மலாக்கா மாநில ஆட்சிக்குழு மதிக்க வேண்டும்:

ஒரு சமயத்தைப் பின்பற்றுவோருக்குப் பின்வரும் உரிமைகள் உண்டு -

அ) தனது சொந்தச் சமய விவகாரங்களை நிர்வகித்தல்;

ஆ) சமய அல்லது தொண்டு நோக்கங்களுக்காக நிறுவனங்களை நிறுவுதல் மற்றும், பராமரித்தல்; மற்றும்,

இ) சொத்துக்களைச் சொந்தமாக வாங்கவும், வைத்திருக்கவும், சட்டப்படி அவற்றை வைத்து நிர்வகிக்கவும் முடியும்.

## சாரம்

இந்த ஆய்வு 75 பரிந்துரைகளை வழங்குகிறது. சில பரிந்துரைகள் மற்றவற்றுடன் தொடர்புக் கொண்டவையாக இருக்கும். காரணம், குறிப்பிட்டப் பிரிவுகளைத் தாண்டி இவற்றின் தாக்கம் இருப்பதே. 13 பிரிவுகளில், கோயில் வரலாறு/பாரம்பரியம் குறித்து ஏழு பரிந்துரைகளும், கோயில் நிலப் பிரச்சினை குறித்து ஐந்து பரிந்துரைகளும், கோயில் பதிவு குறித்து ஆறு பரிந்துரைகளும், தேர்ச்சிபெற்ற குருக்கள் சம்பந்தமாக ஐந்து பரிந்துரைகளும், கோயில்களைத் தொடர்ந்து பயன் படுத்துவது சம்பந்தமாக ஐந்து பரிந்துரைகளும், சகல வசதிகளுடன் கூடிய கோயில்கள் பற்றிய ஆறு பரிந்துரைகளும், உயிர்ப் பலி கொடுக்கும் கோயில்களைப்பற்றி இரண்டு பரிந்துரைகளும், திருவிழா, கும்பாபிஷேகம் சம்பந்தமாக நான்கு பரிந்துரைகளும், கோயில்களின் நடவடிக்கைகள் குறித்து பன்னிரண்டு பரிந்துரைகளும், கோயில் நடவடிக்கைகளில் இந்துப் பக்தர்களின் தொடர்ந்த ஈடுபாடு குறித்து மூன்று பரிந்துரைகளும், கோயில் செயற்குழுக்கள் சம்பந்தமாக நான்கு பரிந்துரைகளும், மாநிலத்தில் இந்துக் கோயில்-சமய ஒருங்கிணைப்பு சம்மேளனம் குறித்து பத்து பரிந்துரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும், இடுகாடுகள், தகனம் செய்யும் இடங்கள் மற்றும், கருமக்கிரியை செய்யும் இடங்கள் பற்றிய 5 பரிந்துரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

சில பரிந்துரைகள் அரசு, அரசு சார்ந்த துறைகளுக்கும் கொடுக்கப்பட்ட வேளையில், பெரும்பாலான பரிந்துரைகள் மாநில/நாட்டின் இந்துச் சமய மக்களுக்கும், குறிப்பாக மலாக்கா மாநில கோயில்களை நிர்வகிக்கும் தலைவர்களுக்கும் ஆனவை. சிலவற்றை உடனே நிறைவேற்றலாம், பலவற்றை நன்கு சிந்தித்து, திட்டம் தீட்டி, கால அட்டவணைப்படி, தேவையான நிதியைச் சேர்த்து, செய்ய வேண்டி இருக்கும். காலம் எடுக்கும்.

எனினும், இந்துச் சமயத்தின் பெயரையும், இந்துச் சமயத்தினர் பற்றிய மற்றவர்களின் பார்வையையும் மேன்மையாக மாற்ற விரும்பினால், நிறைய அர்ப்பணமும், செலவும், உழைப்பும், ஒற்றுமை உணர்வும், வேட்கையும் ஒவ்வொரு நிலையிலுமுள்ள இந்துக்கள் மத்தியிலும், தலைமைத்துவம் கொடுப்போர் மத்தியிலும் அவசியம் தேவை. இவற்றிற்கு, குறிப்பாக மாநில அரசின், அரசு துறைகளின் ஒத்துழைப்பும் ஆதரவும் மிக அவசியம். இந்த நடவடிக்கைகள் அனைத்தும் ருக்குன் நெகாராவில் உள்ள கோட்பாடுகளை உண்மையாக ஆதரிக்கும் ஓர் இந்துச் சமூகத்தை உருவாக்க நிச்சயமாக உதவும்.

அதுவே இந்த ஆய்வுக் குழுவின் நம்பிக்கை ஆகும்.

## ஆய்வின் முடிவு

இந்த ஆய்வு, மலாக்கா மாநிலத்தில் அமைந்துள்ள கோயில்களின் வரலாறு, நிர்வாக முறை, ஆலய சமய நடவடிக்கைகள், செயற்குழுக்கள், நிதி நிலைமை, சமயக் குருக்கள், உறுப்பியம், நிலவுடைமை, கோயில் பதிவு, சமுதாய மேம்பாட்டு நடவடிக்கைகள், வரும் ஐந்தாண்டு எதிர்காலத் திட்டங்கள் ஆகியவற்றை உற்று நோக்கியுள்ளது.

ஆய்விற்குட்பட்ட 146 கோயில்களில், சில கோயில்களில் மட்டுமே தேவையான வசதிகள் இருக்கின்றன. மற்றவை வழிப்பாட்டு ஸ்தலங்களாக மட்டும் செயல் படுகின்றன. இவை, அந்த ஸ்தலங்களில் சக்திவாய்ந்த தெய்வங்கள் குடிகொண்டிருப்பதாக நம்பிக்கை வைத்திருப்போரைக் கவர்கின்றன. ஆனால், இந்துச் சமயத்தில் அவை அனைத்தும் 'கோயில்கள்' என்று கருதப்படுகின்றன, மேலும், 'சன்னதி' அல்லது 'சிறிய புனித இடம்' என்ற பாகுபாடு இல்லை.

நீண்ட வரலாற்றைக் கொண்டுள்ள பல கோயில்கள், அடிப்படையில் வழிபாட்டு ஸ்தலங்களாக மட்டுமே இருக்கின்றன. எனினும், இந்தக் கோயில்களுக்கு வரலாற்றுப் பின்னணியை வைத்து, அவற்றிற்கு முதன்மை கொடுத்து, இந்துக்கள் அதிகம் சுற்றுவட்டாரத்தில் தற்பொழுது வாசிக்காவிட்டாலும், அவை இருக்கும் இடங்களிலேயே அவற்றிற்கான நிலத்தைப் பிரித்துக் கொடுக்கவேண்டும் எனும் கோரிக்கை வைக்கப்படுகிறது.

ஒவ்வொரு சாராரும், தங்கள் கோயில்களுக்குதான் முக்கியத்துவம் கொடுத்து அவற்றைக் காக்கவேண்டும் எனும் உணர்ச்சி வயப்படும் நிலை தெளிவாகத் தெரிகிறது. தற்பொழுது மலாக்கா மாநிலத்தில் இந்துக்கள் வசிக்கும் பகுதிகள் சற்று மாறுபட்டுள்ளதால், இத்தகைய பழைய கோயில்களின்பாலுள்ள ஈர்ப்பு புதிய நிலைமையைக் கருத்தில் கொள்வதாக இல்லை. பல இடங்களில் அவரவர் கோயில், அவரவர் ஆதிக்கத்தின்கீழ் தொடர்ந்து அவரவர் சாராருக்காக இருக்கவேண்டும் எனும் எண்ணம் மேலோங்கியுள்ளது.

பெரியார் ஈ.வே.ரா. தொடக்கிவைத்த பகுத்தறிவு இயக்கம் சில குடும்பங்களைக் கோயிலுக்கு வராமல் தடுத்துள்ளது தெளிவு. இவர்களும் நாட்டுக் கணக்கெடுப்பில் இந்துக்களாகவே காட்டப்படுகின்றனர். இவர்கள் கோயில்களில் வழிபடுவதில்லை; மாறாக தமிழ் மறைகளைத் தங்கள் வாழ்க்கை வழிகாட்டியாக இவர்கள் கொள்கிறார்கள். இந்த இயக்கம் முன்புபோல் பலமாகச் செயல்படாவிட்டாலும், மலேசிய திராவிடர் கழகம் வழி ஆங்காங்கே கிளைகளைக் கொண்டும், சமூக வலைதளங்களின் வழியும் தங்கள் கருத்துகளைச் சொல்லியே வருகின்றது. எனினும், இதன் தாக்கம் 1980-ஆம் ஆண்டுகளுக்குப் பிறகு இந்துச் சமுதாயத்தின் மத்தியில் குறைவாகவே இருக்கிறது.

இந்துக்கள் மத்தியில் இத்தகைய சுதந்திரமான போக்கு நிறைய வேறுபாடுகளை உருவாக்கியுள்ளது. சமயக் குருக்களும், சுவாமிஜிகளும் இந்துச் சமயத்தின் சில கூறுகளை முதன்மைப் படுத்தி, தனித்தனி வழிகளைத் தங்கள் போதனைகளாகத் தர முற்பட்டுவந்துள்ளனர். இந்தச் சூழ்நிலையில் குறிப்பிட்ட ஒரு நடைமுறையில் திருப்தியடையாத எந்தவொரு இந்துவும் அதை மாற்ற எதுவும் செய்யாமல் கோயில்களிலிருந்து விலகி இருக்கவே விரும்புகின்றனர். இந்துச் சமயத்தின் போதனைகளையும் அதன் விதிமுறைகளையும் புரிந்துகொள்ள விரும்பாத இந்துக்களின் இந்தச் செயலற்ற தன்மை நீண்ட காலமாகவே உள்ளது. இதனால், ஒவ்வொரு குழுவினரும் அவரவர்களின் விருப்பத்திற்கு ஏற்ப சமய நடைமுறைகளின் பன்முகத்தன்மையை தமிழ்நாட்டிலும், இந்த நாட்டிலும் நீண்ட காலமாக தொடர்கின்றனர்.

இவர்கள் கொண்டுவந்துள்ள வழிகாட்டல்கள் நிறைய பக்தர்களை ஈர்த்து வருகின்றன. எடுத்துக்காட்டாக, சாய் பாபா, ஷிர்டி சாய் பாபா, நால்வர், வள்ளலார், ராமகிருஷ்ணர், சத்குரு, போன்ற பலர் தோன்றி தனித்தனி வழிகளை, இந்துச் சமயத்தின் கோட்பாடுகளை மீறாமல், பக்தர்களுக்குக் காட்டிவருகின்றனர். இத்தகைய வேறுபாடுகளில் பக்தர்கள் கவரப்பட்டு பின்பற்றுவதையும், அவை இந்துச் சமயப் பரிணாம வளர்ச்சியின் ஓர் அங்கமாகவே கருதப்படுவதையும் பார்க்கிறோம்.

இத்தகைய வேறுபாடுகள் அடிப்படை இந்துச் சமயத்தின் கோட்பாடுகளை ஒட்டி இருப்பதாகவே இந்துச் சமயப் பெரியார்கள் கருதுகிறார்கள். இத்தகைய பெரியார்களின் போதனைகளில் இந்துச் சமய மனித நேயம் அதிகம் போற்றப்படுவதால், பல இந்து அல்லாதவர்களையும் அவை ஈர்த்துவருகின்றன. எனினும், இத்தகைய சுவாமிஜிகளின் பக்தர்கள் கோயில் வழிபாட்டை விட்டுவிடுவதில்லை. வேறுபட்ட சமய

நடைமுறைகளில் ஈர்க்கப்பட்டிருந்தாலும், குறிப்பாக முக்கிய பூஜைகளிலும், உபயங்களிலும், விழாக்களிலும் இவர்கள் கலந்துகொள்கிறார்கள். இத்தகைய வேறுபாடுகளைக் கொண்ட போதனைகள் வலுப்பட, இவற்றிற்குத் தனி மையங்கள் ஆங்காங்கே அமைக்கப்படுவதும், அதன்வழி அவர்களின் நடைமுறைகள் பற்றியக் கல்வி வழங்கப்படுவதும் உண்டு. இந்த ஆய்வில் இத்தகைய மையங்கள் உள்ளடக்கப்படவில்லை. எனினும், மலாக்காவில் இயங்கும் அத்தகைய மையங்கள் பற்றிய குறிப்புகள் இணைப்பாகக் கொடுக்கப் பட்டுள்ளன.

இருப்பினும், பண்டைய தமிழ் நாட்டுக் கிராமக் கோயில்களில் இடம்பெற்ற சில நடைமுறைகள் மலாக்கா கோயில்களிலும் தொடர்ந்து நடைபெற்று வருவது இன்றைய இந்துச் சமயப் பரிணாம வளர்ச்சிக்கு ஒவ்வாததாக இந்துச் சமயப் பெரியார்கள் கருதுகிறார்கள். பழைய இதிகாசங்களில் இடம்பெற்றுள்ள சில பழக்கங்களையொட்டி, கோயில்களில் இன்றும் உயிர்ப் பலி கொடுக்கின்றார்கள். இறைச் சக்தி பூசாரியின் வழி இறங்கி ‘அருள்வாக்கு’ கொடுப்பதும் இன்றும் நடைமுறையில் உள்ளது. மேலும், கோயில்களில் மது அருந்துவதும், மது அருந்திய பிறகே அருள்வாக்கு சொல்வதும் நடைபெற்றுவருகின்றன. இன்று கோயில் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் கொண்ட அமைப்பு எதுவும் இல்லாததால், இத்தகைய செயல்கள் இந்துக் கோயில்கள் பெயரில் நடைபெற்றுவருகின்றன. சிங்கப்பூரில் இத்தகைய செயல்முறைகளை ஒடுக்கும் சட்டத்தை அரசு ஆதரவுடன் அங்குள்ள இந்து அறவாரியம் அமல்படுத்தி வெற்றி கண்டுள்ளது.

முறையான இந்து சமயக் கல்வி மலாக்கா இந்துக் கோயில்களில் இல்லை. சிறுவர்களுக்கான வகுப்புகளும் முறையாக இல்லை. கோயில்கள் குருக்களின் வழிகாட்டலின்படி வழிபாட்டு மையங்களாக மட்டுமே செயல்படுகின்றன. இதில் கல்விபெறும் வாய்ப்பு குறைவு. குருக்களில் மிகப் பலர் முறையான அனுபவமும், பயிற்சியும் பெறாதவர்கள். அவர்கள்மீது பக்தர்களுக்கு நம்பிக்கை ஏற்படும் நிலை குறைவு. பயிற்சி பெற்ற குருக்களும், நடைமுறையிலுள்ள செய்முறைகளைப் பின்பற்றக் கற்றுக்கொண்டதும் வியப்பே. தற்கால இந்துச் சமயக் கோட்பாடுகளைத் துணிந்து அறிமுகப்படுத்தும் எண்ணத்தைவிட்டு, காலம் காலமாக இங்கு நடைமுறையிலுள்ள சம்பிரதாயங்களைப் பின்பற்றுவதைப் பல குருக்கள் ஏற்றுள்ளதைக் காண முடிகிறது. சமயக் கோட்பாடுகளைப் பற்றிய முறையான சமயக் கல்வி மலாக்கா இந்துக்கள் மத்தியில் போதிய அளவில் இல்லாத நிலையில், இத்தகைய நிலைமை நீடிப்பதில் வியப்பில்லை.

இன்றைய கோயில் தலைமைத்துவம் கோயில்களுக்காக நிலம் வாங்குவதிலும், கட்டடங்களைப் புதுபிப்பதிலும், திருவிழா/கும்பாபிஷேகத்தைச் சிறப்பாக நடத்துவதிலும், பூஜை, உபயங்களைக் கவர்ச்சிகரமாகச் செய்வதிலும் அதிகக் கவனம் செலுத்தினாலும், முறையான இந்துச் சமயக் கல்வியை எல்லா நிலை இந்துச் சமயத்தினருக்கும் வழங்கும் எண்ணமும் வேட்கையும் மிகக் குறைவாகவே அதன் மத்தியில் உள்ளதைக் காணலாம். பல கோயில் தலைமைத்துவங்களின் சொந்த நலன் கருதியே இத்தகைய நிலைப்பாடு இருப்பதையும் உணரலாம். உண்மையில், இந்துக்களிடையே இந்தக் கல்வியின் முக்கியத்துவம் மற்றும், விழிப்புணர்வு கூட இல்லாமல் இருப்பதற்கு அவர்களுடைய இன்று இருக்கும் நிலையில் எவ்வித அச்சுறுத்தலும் இல்லாத, வசதியாக வாழக்கூடிய தற்போதைய சூழ்நிலையே காரணம் எனலாம்.

இதன் காரணமாக, சில இந்துக்கள் தங்கள் இல்லங்களில் அமைந்துள்ள சாமியறையிலேயே தங்கள் வழிபாட்டை வைத்துக் கொள்கிறார்கள். சமயப் பெருநாட்களின் பொழுது மட்டும் கோயிலுக்குச் செல்வதை வழக்கமாகக் கொள்கின்றனர். சில வேளைகளில், மற்றவர்கள் அதிகம் இல்லாத சமயத்தில், மன அமைதி தேடி கோயிலுக்குச் செல்பவர்களும் உண்டு. பொதுவாக மலாக்கா மாநிலக் கோயில்கள் அவற்றின் பங்கை, பலவித நடவடிக்கைகளின்வழி எல்லா தரப்பினருக்கும் ஒரு முழுமையான இந்துச் சமய மையமாக, முறையாக அந்தந்த வட்டார இந்துக்களுக்கு ஆற்றவில்லை என்பது தெளிவு.

பூஜை செய்வதற்காக மட்டுமே கோயில்கள் என்றால், அதை வீட்டிலேயே அவரவர் வசதிக்கேற்ப செய்துகொள்ளலாம். அக்காலத்தில் குறுகிய சிறு தொழிலாளர்கள் வீடுகளில் வாழ்ந்து, சாமி மேடை அமைத்துக்கொள்ளும் வசதியில்லா நிலைமை பெரும்பாலும் போய்விட்டது. எனவே, கோயில்கள் பழைய பாணியிலில்லாமல், பக்தர்களின் புதிய எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்யவேண்டிய நிலைமை வந்துள்ளது; இல்லையேல், பக்தர்களின் ஆதரவு குன்றும் என்பது திண்ணம்.

மலாக்கா கோயில்களில் நூலகம் அல்லது வாசக சாலை இல்லாதது கல்வியறிவைப் பரப்புவதில் கோயில்கள் சிரத்தைக் காட்டாததைப் புலப்படுத்துகிறது. நூல் வாசிப்பின்வழி சமய அறிவைப் பரப்பும்

சேவையைக் கூட அவை செய்யத் தயாராக இல்லை. பதவி ஓய்வுபெற்ற ஆசிரியர்களையும் மற்றவர்களையும் தன்னார்வ ரீதியில் பயன்படுத்தி இத்தகைய வாசிப்பு மையங்களை நிறுவலாம். சில கோயில் செயற்குழுக்களில் இத்தகையோர் இருந்தாலும், அவர்களின் பங்கு மிகக் குறைவாக இருப்பதைக் காண்கிறோம்.

இத்தகைய நிலைமை, இந்துச் சமயத்தினர் மத்தியில் மற்றச் சமயத்தைப் பரப்ப எண்ணுவோருக்கு வசதியாகப் போய்விடுகிறது. பிறந்தது முதல் இந்துக்களாக இருக்கும் இவர்களை அவர்களின் கவர்ச்சிகரமான நிகழ்ச்சிகளுக்கு - இளையோருக்கான முகாம்கள், இந்துச் சமயத்தைத் தவறாகச் சித்தரிக்கும் சொற்பொழிவுகள் - இவற்றுடன் பரிசுப் பொருட்கள், தேவைப்படுவோருக்கு நிதியுதவி, தங்குவதற்கு வசதிகள் போன்றவற்றையும் செய்து, மெதுவாக அவர்களின் சமயத்திற்கு இவர்களை தனியாகவோ, குடும்பத்திலுள்ள அனைவரையும் சேர்த்தோ, ஈர்த்துவிடுகிறார்கள். மற்றச் சமயங்களின் மத மாற்ற நடவடிக்கைகளின் போது நிதி உதவிகளையும் கவனிப்பையும் பெறுகின்றபோது சில நேரங்களில் முழு குடும்பமும் மற்றச் சமயங்களைத் தழுவுகிறது. இதைக்கண்டு இந்துச் சமயத் தலைவர்கள் வருந்தி அறிக்கை விட்டாலும், இந்துக் கோயில்களும் சமயத் தலைவர்களும், முறையான சமயக் கல்வியை அனைத்து இந்துக்களுக்கும் தொடர்ந்து கொடுக்கத் தவறியதே இந்தப் பலவீனத்தை உருவாக்கியுள்ளது என்பதை மறுக்க முடியாது.

இந்துச் சமயத்தைச் சேர்ந்த அரசியல் தலைவர்களோ தங்களின் அரசியலுக்கு உறுதுணையாக இருப்பவர்கள் ஈடுபட்டுள்ள கோயில்களுக்குப் பொருளுதவியும் மான்யமும் கொடுக்கின்றனர். சில அரசியல் வட்டாரத் தலைவர்கள், குறிப்பாக ஆட்சியில் இருக்கும் கட்சியில் இருந்தால் கோயில் நிர்வாகங்களிலும் அமர்ந்து விடுகின்றனர். இத்தகைய நிலையில், மாற்று கட்சி ஆட்சிக்கு வரும்பொழுது சிக்கல் ஏற்படுவதையும் காண்கிறோம். அரசியல்வாதிகள், சமுதாயத்தின் ஆதரவு பெற்ற எல்லா கோயில்களுக்கும் எவ்வித வேறுபாடும் காட்டாமல் துணை புரிவதே சிறப்பு. அதை போலவே, கோயில் நிர்வாகங்கள் யார் ஆட்சியில் இருந்தாலும், அவர்களுடன் இணைந்து செயல்படும் பக்குவத்தைப் பெறவேண்டும்.

இருப்பினும், அரசியல் தலைவர்களால் கோயில்களின் செயல்பாடுகளில் பெரிய மாற்றங்களைக் கொண்டவர இயலாது. இந்துச் சமயத்தின் மாண்பைப் பற்றி சிந்திப்பதைவிட, அவர்கள் தங்கள் அரசியல் கட்சியின் வலுவைப் பற்றியும், தங்கள் வெற்றியைப் பற்றியுமே சிந்திப்பார்கள். குறிப்பாக, அவர்களுக்கு இந்துச் சமய அறிவும் ஞானமும் இல்லை என்பதோடு அவர்களுக்கு அருகில் பொருத்தமான இந்துச் சமய ஆலோசகர்களையும் வைத்துக்கொள்வதில்லை.

## ஆக்ககரமான நடவடிக்கையின் அவசியம்

இந்த ஆய்வின் முடிவுகள் மலாக்கா வாழ் இந்துக்களுக்கு ஓர் இக்கட்டான நிலையையே காட்டுகின்றன. ஆக்ககரமான நடவடிக்கைகளை மேற்கொண்டு இந்துச் சமயத்தின் தோற்றத்தையும், இந்துக்களின் தோற்றத்தையும் மாற்ற எண்ணுகிறார்களா, இல்லை, மெத்தனமாக இருக்கப் போகிறார்களா? மலாக்கா மாநிலக் கோயில் தலைவர்களும், சமுதாயத் தலைவர்களும், அரசு சாரா இந்து, தமிழ் அமைப்புகளின் தலைவர்களும், இந்துச் சமய நடைமுறைகளையும், குறிப்பாகக் கோயில்களின் சமுதாய மேம்பாட்டிற்கான பங்கையும் சிந்தித்து செயல்படுதல் காலத்தின் கட்டாயம்.

இந்தியக் கலாச்சாரத்தை, நம்பிக்கை, மொழி, இலக்கியம், கலை, உணவு மற்றும், வாழ்க்கையின் அனைத்து அம்சங்களிலிருந்தும், பிரிக்க முடியாதது - உண்மையில் ஓர் இந்துவின் வாழ்க்கையில் இவை அனைத்தும் பிரதிபலிப்பதை உணரலாம். அவரது நம்பிக்கைகளின் நடைமுறைகளில் எதிர்மறையான தாக்கங்கள் ஏதும் ஏற்பட்டால், அது அவரது நடத்தையிலும் தெரிவதைத் தவிர்க்கமுடியாது. இந்தச் சமூகத்தை ஆய்வு செய்யும் ஆய்வாளர்களுக்கு இது தெளிவாகத் தெரியும்.

இந்த நிலைமையை மாற்ற எந்தவொரு தலைமீட்டிற்கும், இதைச் செயல்படுத்த இரு அணுகுமுறைகளைக் கையாளலாம். இந்த ஆய்வில் குறிப்பிட்டுள்ளது போல, முதலாவதாக, மாநிலத்திலுள்ள இந்துக்களே, அரசின் நடவடிக்கைகளுக்குக் காத்திராமல் ஆக்ககரமான நடவடிக்கை எடுப்பது. இரண்டாவது அணுகுமுறை, அரசின்வழி கோயில்-இந்துச் சமய விவகாரங்களுக்கான அமைப்பை, எல்லா விதிகளையும் உள்ளடக்கி, ஏற்படுத்தி நடவடிக்கைகளைச் சட்டப்படி அமல்படுத்தி கோயில் நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்துவது. இரண்டாவது நடவடிக்கைக்கு மாநில அரசாங்கத்தின் அக்கறை தேவைப்படுகிறது, மேலும், அதை அடைவது மிகவும் கடினம், ஏனென்றால், இந்துச் சமயமும், மலாக்காவில் குறைந்த எண்ணிக்கையிலான இந்துக்களும்,

பெரும்பாலும் குறைந்த முக்கியத்துவம் வாய்ந்தவர்களாகக் கருதப்படுவதோடு அப்படியே விடப்படுகிறார்கள் என்பது தெளிவு. எனவே, நடைமுறையைப் பொறுத்தவரை, இந்தத் தலையீட்டிற்கான முதல் அணுகுமுறைவழி, நடவடிக்கைகளை மாநில இந்துச் சமூகமே ஏற்பாடு செய்தல் நல்லது.

## மலாக்கா இந்துச் சமுதாயமே நடவடிக்கை எடுப்பது

இந்துச் சமுதாயத்தின் மூலம் எடுக்கப்படும் நடவடிக்கையே சிறப்பாக இருக்கும். இந்துச் சமயத் தலைவர்கள், தங்களுக்கிடையில் இருக்கும் வேற்றுமைகளைக் களைந்து இந்துச் சமயத்தின் மாண்பை, மாநிலத்திலுள்ள கோயில்களிலும், சமய நடவடிக்கைகளிலும், நிலை நிறுத்த முற்படுவது மற்றவர்களின் தலையீடு இல்லாமல் நம் விவகாரங்களை நாமே சீர்படுத்திக்கொள்ளும் நல்ல அணுகுமுறையாகும். இத்தகைய அணுகுமுறை இந்து இளையோருக்கு நல்ல எடுத்துக்காட்டாக இருப்பதோடு ஒருங்கிணைக்கப்பட்ட இந்துச் சமய நடவடிக்கைகளின்வழி அவர்களுக்குச் சமய அறிவையும் ஆளுமையையும் கொடுப்பது திண்ணம். இவ்வகையில் மலாக்கா மாநில இந்துக் கோயில்கள் செயல்பட்டு இந்துக்களுக்கு நல்வழி காட்டிவந்தால், மாநிலத்திலுள்ள இந்துக்கள் உருமாறி, மற்றச் சமயத்தினருடன் தன்னம்பிக்கையுடன் ஒற்றுமை பாராட்டக் கூடியவர்களாக இருப்பார்கள்.

மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்-சமய-பண்பாடு விவகாரங்களுக்கான ஒருங்கிணைப்புச் சம்மேளனம் ஒன்றை, கோயில் தலைவர்கள், சமயத் தலைவர்கள், சமுதாயத் தலைவர்கள், சமய-மொழி சார்ந்த அரசு-சாரா அமைப்புத் தலைவர்கள், போன்றோர் இணைந்து, திறந்தக் கருத்துப் பரிமாற்றம் செய்து, செய்யவேண்டியவற்றை அறுதியிட்டு, செய்முறைகளை ஒருமுகப் படுத்தி, குறைந்த எண்ணிக்கையில் பக்தர்களைக் கொண்டுள்ள கோயில் இணைப்புகளைச் செய்யும் வழிமுறைகளைக் கண்டு, இந்துக்கள் அதிகம் வாழும் பகுதிகளில் தாய்க் கோயில்களைத் தெரிவு செய்யும் வழிமுறைகளை வகுத்து, இது போன்ற பலவற்றைப் பேசி, முடிவெடுத்து, முறையான குழுவை அமைத்துச் செயல்படுத்தலாம். துணைக் குழுக்களைத் துறைவாரியாக ஏற்படுத்தி, ஒவ்வொரு துறையையும் துல்லியமாக ஆராய்ந்து செயல்படுத்தலாம்.

இந்தச் சமேளனம், மலாக்கா கோயில்களை அதிகாரப்பூர்வமாக மாநில அரசு அளவிலும், மத்திய அரசு அளவிலும், நகராட்சி மன்ற அளவிலும், பதிவதிகாரி அளவிலும், மற்ற அமைப்புகள் அளவிலும் பிரதிநிதிக்கும்.

இப்படி அமைக்கப்படும் ஒருங்கிணைப்புச் சம்மேளனத்திற்கு மாநிலத்திலுள்ள எல்லா கோயில்களும் ஆதரவு கொடுக்காத நிலை உண்டாகலாம். காரணம் சில கோயில்களின் நடவடிக்கைகளின் வழி போதுமான நிதி பலத்துடன் தனித் தன்மையுடன் இருக்கின்றன. அந்தச் சுதந்திரம் பறிபோய்விடும் எனும் எண்ணம் மேலோங்கலாம். அதிக வருமானம் ஈட்டும் கோயில்கள் பெரும்பாலும், சட்ட ரீதியில் கட்டுப்பாடு வரும் வரை அவற்றின் சுதந்திரத்தை விட்டுக் கொடுக்க இணங்கமாட்டார்கள். இத்தகைய போக்கைக் கண்டு கோயில் ஒருங்கிணைப்பு சம்மேளனம் பின்வாங்காமல், மலாக்கா மாநிலக் கோயில்களின் நடவடிக்கைகளை ஒருமுகப் படுத்தி, நல்ல கல்வியைப் புகட்டினால், நாளடைவில், இன்றைய இந்துச் சமயத்திற்குப் புறம்பாக நடைபெறும் செயல்பாடுகளுக்குச் சிறிது, சிறிதாக ஆதரவு குறைந்து, மறைந்து போகும் எனும் நம்பிக்கை வேண்டும். இது மெதுவாகத்தான் நடைபெறும். அமைதி காத்து செயலில் இறங்கவேண்டும்.

இத்தகைய சம்மேளனம் மாநிலத்தின் பல பகுதிகளில் வாழும் இந்துக்களின் விவரங்களை முறையாகச் சேகரித்து அந்தந்த வட்டாரங்களிலும் முறையான நடவடிக்கைகள் அங்குள்ள தாய்க் கோயில்களின் வழி எல்லா இந்துக்களுக்கும் பயன் அளிக்குமாறு செயல்படுத்தப்படுவதை உறுதி செய்தல் வேண்டும். அரசு மான்யங்களையும், உதவிகளையும் இந்தச் சம்மேளனம் ஒருங்கிணைத்து அங்கீகரிக்கப்பட்ட எல்லா கோயில்களும் பயனடையுமாறு செய்ய முடியும்.

இத்தகைய அமைப்பின் வெற்றி, எல்லா தரப்பினரின் ஒத்துழைப்பிலும், வேற்றுமைகளை மறந்து இணைந்து செயல்படும் தன்மையிலுமே இருக்கிறது. மாநிலத்திலுள்ள செல்வாக்குமிக்க எல்லா நிலைத் தலைவர்களும், அரசியல் பாகுபாடு காட்டாமல், மற்ற ஏற்றத்தாழ்வு பாகுபாடுகளையும் களைந்து செயல்பட்டால் மட்டுமே இத்தகைய தன்னார்வ ரீதியிலான சம்மேளனம் வெற்றியடைய முடியும்.

இந்த அமைப்பு சீராக அமையுமானால் மலாக்கா வாழ் இந்துக்கள் சொந்தக் காலில் நிற்கும் நிலையை அடைவதுடன், கால மாற்றத்திற்கேற்ப கோயில் செயல்முறைகளைச் செம்மைப் படுத்தி, இந்துச் சமயத்தின்

மாண்பை இந்துக்களின் மத்தியில் நிலைநாட்டவும், இந்துச் சமயத்தின் தோற்றத்தை மற்றவர்களின் முன்னிலையில் உயர்த்தவும் முடியும்.

## அரசு வழி நடவடிக்கை

எவ்வாறாயினும், மொத்த மக்கள்தொகையில் 6% இந்துக்கள் உட்பட மலாக்கா மாநிலத்தில் வசிக்கும் அனைவருக்கும் மலாக்கா மாநில அரசுதான் பொறுப்பு என்பதை உணர்ந்தால், குறிப்பாக இவர்களிடையே குற்ற விகிதம் மற்றும், சமூகப் பாதிப்புகளைக் காட்டும் புள்ளிவிவரங்களைப் பார்க்கும்போது, இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்களுக்கு இந்துச் சமயக் கல்வியை வழங்குவதை உறுதிப்படுத்த ஓர் அமைப்பை உருவாக்க முடியும். அதே நேரத்தில் குறிப்பிட்ட விதிமுறைகள் மூலம் இவர்களின் வழிபாட்டுத் தலங்கள் அல்லது கோயில்களின் செயல்முறைகள் மற்றும், ஆலயக் கட்டுமானத்தையும் ஒருங்கிணைக்க அமலாக்க அதிகாரிகளை நியமிப்பதன் மூலம் இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணலாம்.

மலாக்கா வாழ் இந்துக்களால் சொந்த முயற்சியில் ஒருங்கிணைப்புப் பணிகளைச் செய்ய இயலாவிட்டால், மாநில அரசின் சட்டப்படியான நடவடிக்கைகளாலேயே மாநில இந்துக் கோயில்களின் நடவடிக்கைகளை ஒழுங்குப் படுத்த முடியும். இதற்கு மாநில அரசு மனம் வைக்கவேண்டும். மாநில அரசு அதன் நிர்வாகத்தின்கீழ் இந்துக் கோயில்களையும், இந்துச் சமய நடவடிக்கைகளையும் கண்காணிக்கும் பிரிவை அமைக்கமுடியும். கோயில்கள் நிறுவப்படும் முறைகளிலிருந்து, அவற்றை இடம் பெயர்ப்பது, இணைப்பது, அவற்றின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தி ஒருமுகப்படுத்துவது, கோயில்கள் புதுபிப்பது, போன்ற பலவற்றிற்கும் விதிமுறைகளை ஏற்படுத்தி, மாநிலத்தில் கோயில்கள், இந்துப் பண்பாட்டு-கல்வி-மேம்பாட்டு நிகழ்ச்சிகள் ஆகியவற்றை ஒருமுகப் படுத்தமுடியும்.

## ஒருங்கிணைப்பு இன்றி இன்றைய நிலை

இத்தகைய நடவடிக்கை எடுக்கப்படாவிட்டால், கோயில்களும், அவற்றின் செயல்பாடுகளும் பன்முகங்களைக் கொண்டு செயல்பட்டு, அவரவர் சொந்த நலன்களுக்காக பயன்படவே தொடர்ந்து இருக்கும். இந்து இளையோர் இந்துச் சமய அறிவை முழுமையாகப் பெறாமல், எது உண்மையான இந்துச் சமயம் என்பதைப் புரியாமல் வளர்ந்து இந்துச் சமயத்தினருக்கும், இந்துச் சமயத்திற்கும் பெருமை சேர்க்காத நிலையில், பல இன-சமயத்தைக் கொண்ட மற்ற மலேசியர்களின் மத்தியில் இந்துச் சமயத்திற்குத் தீயப் பெயரைக் கொண்டுவரும் நிலைமை மேலும், மோசமாகக் கூடும். தற்பொழுதைய குற்றச் செயல்கள் குறித்தப் புள்ளிவிவரங்களே இதற்குச் சான்று.

## பிரச்சினை எழும் சமயத்தில் மட்டுமே நடவடிக்கை

எவ்வாறாயினும், இந்துக் கோயில்கள் இடிக்கப்பட வேண்டும் அல்லது கட்டாயமாக அகற்றப்பட வேண்டும் என்ற கட்டாயத்தில் இந்து மக்களிடையே அதிருப்தியும் எதிர்ப்பும் எழும்போது மட்டுமே இந்துச் சமூகத்தின் பிரச்சினைகளை மாநில அரசு சிந்திக்கிறது என்பதை எங்கள் ஆய்வு காட்டுகிறது - மற்ற நேரங்களில் அவர்கள் அதைப் பற்றி அதிகம் அக்கறைக் காட்டுவதாகத் தெரியவில்லை. மலாக்காவில் கருமக்கிரியை செய்வதற்கான ஓர் இடத்தை தீர்மானிப்பதில் காட்டுகின்ற அக்கறையற்றத் தன்மையைக் காணும்போது மாநில அரசாங்கத்தின் தலைமைத்துவம் இன்னும் மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துச் சமூகத்தை முக்கியமற்றதாகக் கருதுகிறது என்பதையே காட்டுகிறது. இருப்பினும், இந்த அரசின் போக்கை மாற்றுவதற்கான முயற்சிகள் மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்துச் சமூகத் தலைவர்களால் மேற்கொள்ளப்பட வேண்டும்.

## கோயில் செயற்குழுக்கள், தலைவர்களின் பங்கு

மலாக்கா இந்துக் கோயில்-சமய-பண்பாட்டு விவகார ஒருங்கிணைப்பு சம்மேளனம், மலாக்கா இந்துக்களின் சொந்த முயற்சியில் அமைத்தாலும் சரி, அல்லது மாநில அரசு மலாக்கா இந்துக் கோயில்-பண்பாடு ஒருங்கிணைப்பு அமைப்பை அமைத்தாலும் சரி, எல்லா கோயில், இந்துச் சமயத் தலைவர்களும், மாநில இந்து மக்களின் நலனிலும், சுபிட்சத்திலும் மனம் வைத்து, ஒன்றாக அமர்ந்து இந்துச் சமயம்

அதன் பக்தர்களை இட்டுச் செல்லப் போகும் பாதையைத் தெளிவாகச் சிந்தித்து முடிவெடுக்கவேண்டும். அத்தகைய கோயில் நடவடிக்கைகள் எவ்வண்ணம் இந்துக்களை எதிர்கால சவால்களை எதிர்கொள்ளும் சக்திகொண்டவர்களாக உருவாக்கப்போகிறது என்பதையும் சிந்திக்கவேண்டும்.

## மலாக்கா இந்துக் கோயில்களை ஒழுங்குப் படுத்தும் அணுகுமுறை - ஒரு பரிந்துரை

இதை மனதில் கொண்டு, இந்தக் கோயில் ஆய்வுக்குழு, மலாக்கா இந்துக் கோயில்களிலும், இந்துச் சமயத்திலும் சம்பந்தப்பட்ட அனைவரும் கூடி சிந்திக்கவேண்டிய சிலவற்றை இங்குப் பரிந்துரை செய்கிறது. இதை, தேவைப்படும் மாற்றங்களுடன் செயல்படுத்தலாம்.

## மலாக்கா மாநில இந்துக் கோயில்களை ஒருங்கிணைக்கும் அமைப்பு அல்லது சம்மேளனம் அமைத்தல்

மலாக்கா மாநிலத்தில் வாழும் இந்துக்களின் முயற்சியில் மாநில இந்துக் கோயில்-சமய-பண்பாட்டு ஒருங்கிணைப்பு சம்மேளனம் அல்லது, மாநில அரசின் ஏற்பாட்டில் இந்துக் கோயில்-சமய ஒருங்கிணைப்பு அமைப்பு அமைய மாநிலத்திலுள்ள இந்துக் கோயில் தலைவர்கள், இந்துச் சமயத் தலைவர்கள் ஆகியோரின் முனைப்பிலோ அல்லது மாநில அரசின் நடவடிக்கையின் வழியோ அமையலாம். அரசியலுக்கு அப்பாலுள்ள நல்ல தலைவர்களையும் சமயப் பெரியார்களையும் இத்தகைய அமைப்பை வழிநடத்த தெரிவு செய்வது சாலச் சிறந்தது.

## சிறப்பு அலுவலகம்

இயலுமானால், இத்தகைய அமைப்பிற்கு ஓர் அலுவலகத்தை மாநில அரசு ஒதுக்கவேண்டும். சில அலுவலாளர்களை முழு நேர ஊழியர்களாக அரசு நியமிக்கவேண்டும். இந்த மன்றம் இந்துச் சமூகத்தினரால் தோற்றுவிக்கப்பட்டால், அதன் பணியாளர்களுடன் ஓர் அலுவலகத்தை இந்த அமைப்பு சொந்தமாகவே உருவாக்க வேண்டும்.

## ஒருங்கிணைப்பு அமைப்பிற்கான விதிமுறைகள்

இத்தகைய அமைப்பிற்கான நடைமுறை விதிகளைத் தயாரித்து, அனைவருக்கும் அறிவித்து செயல்கள் தொடக்கப்பட வேண்டும். அரசின் ஏற்பாட்டில் இத்தகைய அமைப்பு ஏற்படுத்தப்பட்டால், அமைப்பின் விதிகள் மாநிலச் சட்டசபையில் நிறைவேற்றப்பட்டு, அதன் பின்னரே அமல்படுத்தமுடியும்.

## அரசின் வருடாந்திர மான்யம்

மாநில அரசு இந்த அமைப்பிற்கு ஆண்டுதோறும் ஏறக்குறைய இரண்டு மில்லியன் ரிங்கிட் அளவில் ஒரு மான்யத்தை ஒதுக்கி ஆதரவு தரவேண்டும். அதாவது, இம்மாநிலத்தில் வாழும் ஒவ்வோர் இந்துக்கும் ரிங். 40.00 என்ற முறையில் ஒதுக்க வேண்டும். இந்த மான்யம் மாநிலக் கோயில்களின் ஆக்ககரமான கல்வி, சமுதாய மேம்பாட்டு நடவடிக்கைகளுக்காக இருக்கவேண்டும். மற்ற மேம்பாட்டுத் திட்டங்களுக்கு, சம்மேளனத்தின் வழியோ, ஒருங்கிணைப்பு அமைப்பின் வழியோ, முறையான திட்ட அறிக்கைகளுடன் கூடிய விண்ணப்பங்களைப் பரிசீலித்தோ உதவி வழங்கலாம். மாநில அரசிடமிருந்து அடிப்படை சட்டவிதிகள் இருக்கும்போது இது போன்ற ஒருங்கிணைப்பு அமைப்புகள் மாநிலத்தில் உள்ள அனைத்து இந்துக்களிடமிருந்தும் கட்டண வசூல் அல்லது பங்களிப்பு போன்றவற்றை ஒழுங்காகவும் முறையாகவும் செய்யமுடியும்.

இத்தகைய மான்யங்கள் முறையாகப் பயன்படுத்தப்படுவதை முறையான கணக்காய்வு செய்வதன்வழி உறுதி செய்யவேண்டும்.

## கோயில்களின் எண்ணிக்கை

அடிப்படையில், 50,000 பேருக்கும் குறைவான இந்துக்கள் வாழும் மலாக்கா மாநிலத்தில் கோயில் எண்ணிக்கையை பெரிதாக இருப்பதை விட இந்துக்களின் தொகைக்கேற்ப தரமான, சகல வசதிகளுடன் கூடிய குறைவான தாய்க்கோயில்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும்.

## முதன்மை தாய்க் கோயில்கள் - மூன்று

மத்திய மலாக்கா, ஜாசின், அலோர்காஜா ஆகிய மூன்று மாவட்டங்களிலும் தலா ஒரு முதன்மை தாய்க் கோயில், இரண்டு முதல் மூன்று ஏக்கர் நிலபரப்பில் இருப்பது அருமை. இவை அதிக இந்துக்கள் வாழும் பகுதிகளில் இருக்கவேண்டும். இந்தக் கோயில்கள் இந்து ஆகம முறைப்படி அரண்மனை வடிவில் கட்டப்பட்டிருப்பது உத்தமம். முதன்மைக் கோயில்கள் எல்லா வசதிகளையும் கொண்டு முன்மாதிரிக் கோயில்களாக விளங்குவது முக்கியம்.

இந்தக் கோயில்களில் எல்லா வசதிகளையும் கொண்ட கல்யாண மண்டபங்களை நிறுவுவது சிறப்பாக இருக்கும். இந்துக்களின் சம்பிரதாயத் திருமணங்களை நாட்டுச் சட்டத் திட்டங்களுக்கு உட்பட்டு, பதிவுச் செய்து, நடத்த வசதிகள் இருக்கவேண்டும். இத்தகைய மண்டபங்கள் ஆடம்பரமாக இருக்கவேண்டியதில்லை. மாவட்ட இந்துக்களின் பொருளாதாரத்தைப் பிரதிபலித்தால் போதுமானது.

இந்தக் கோயில்களில்தான், இந்துச் சமயப் பயிற்சிகளை நடத்தவும், முகாம்களை நடத்தவும் வசதியான, ஆண்-பெண் பங்கேற்பாளர்கள் தங்கும் விடுதிகள் இருக்கவேண்டும். வகுப்பறைகளும் இருத்தல் அவசியம்.

இறப்புச் சமயங்களில் பயன்பட பிரேத வண்டி வசதியும் இந்தக் கோயில் நிர்வாகத்தில் இருத்தல் நல்லது. பிரேதங்களைப் புதைக்கவும், எரிக்கவும், இந்துக்களுக்குக் குறைந்த செலவில் நடத்திக் கொடுக்கும் கடமை கோயிலுக்கு உள்ளது. மாவட்ட முதன்மை அல்லது பிரதம தாய்க்கோயில்களின் கீழ் அந்தந்த மாவட்டத்தில் சில தாய்க் கோயில்களும், தாய்க் கோயில்களின் கீழ் சிறிய கோயில்களும் இருப்பதால், ஒவ்வொரு முதன்மை தாய்க் கோயிலும் அதன் கீழுள்ள எல்லா தாய்க் கோயில்களுக்கும், சிறிய கோயில்களுக்கும் முறையான தலைமைத்துவம் கொடுத்தல் அவசியம்.

**அட்டவணை 30: முன்மொழியப்படும் கோயில் அமைப்பு**

| கோயில்களின் வகை | மத்திய மலாக்கா | ஜாசின் | அலோர்காஜா | மொத்தம் |
|---|---|---|---|---|
| முதன்மை தாய்க்கோயில் | 1 | 1 | 1 | 3 |
| தாய்க்கோயில் | 4 | 5 | 5 | 14 |
| இணைப்புக்கோயில்கள் | 36 | 40 | 50 | 126 |
| பாரம்பரியக் கோயில்கள் (அறங்காப்பகம்) | 3 | -- | - | 3 |
| மொத்தம் | 44 | 46 | 56 | 146 |

**குறிப்பு: நாட்டுக்கோட்டை செட்டியார்கள் மற்றும், மலாக்கா செட்டிச் சமூகத்திற்குச் சொந்தமான பாரம்பரியக் கோயில்களான MT1, MT2 மற்றும் MT3 கோயிலுடன் மேலும், 8 கோயில்கள் (MT4-MT11) இச்சமூகங்களுக்குப் பிரத்தியேகமானது மட்டுமல்லாது அவரவர்களின் அறங்காப்பகத்தின் (டிரஸ்டி) மூலம் இக்கோயில்கள் மற்றவர்களின் ஈடுபாடின்றி நிர்வகிக்கப்படுகின்றன.**

முதன்மை தாய்க்கோயிலில் குறைந்தது 4 முழு நேர தேர்ச்சி பெற்ற குருக்கள் இருத்தல் வேண்டும். நாதஸ்வர-மேள வித்வான்கள், காவலாளி, மற்றும் முழு நேர நிர்வாகி ஆகியோர் இருத்தல் நல்லது. தன்னார்வலர்களும் முழு நேரமாகவோ, பகுதி நேரமாகவோ பொறுப்பில் இருக்கலாம், கோயிலில் அலுவலகம் இருக்கவேண்டும்.

## நிர்வாகம் மற்றும், நிர்வாகக்குழுவை ஏற்படுத்துதல்

ஒவ்வொரு முதன்மை மற்றும், தாய்க்கோயில் அதன் வளாகத்திலேயே / கோயில் கட்டிடத்திலேயே கட்டாயம் ஓர் அலுவலக அறை இருப்பது சிறப்பு.

முதன்மை தாய்க்கோயில்களின் நிர்வாகம், மாநில அளவிலுள்ள இந்துக் கோயில்-சமய-பண்பாட்டு ஒருங்கிணைப்பு சம்மேளனத்தின் கீழோ மாநில அரசின் இந்து கோயில்-சமய ஒருங்கிணைப்பு அமைப்பின் கீழோ இயங்குவது சிறப்பு. முதன்மை தாய்க் கோயில்களின் செயற்குழுவில், அந்த மாவட்டத்திலுள்ள மற்றத் தாய்க் கோயில்களின் பிரதிநிதிகள் இடம்பெறுதல் அவசியம். இவர்களுடன், மாவட்டத்தில் வாழும் இந்துப் பெரியார்களையும் சேர்த்துக்கொள்ளலாம். சில துணைச் செயற்குழுக்களை உருவாக்குதல் அவசியம் - இந்துச் சமயக் கல்வி-சடங்குகள்; சமூக-பண்பாட்டு மேம்பாடு, வட்டார இந்து மக்கள் சமூக நலன், வட்டார இந்துக்களின் பொருளாதார வளர்ச்சி / பயிற்சி, விளையாட்டு / பொழுதுபோக்கு, போன்றக் குழுக்களில் வட்டாரத்தில் இயங்கும் அரசுசாரா அமைப்புகளையும், அரசு துறைகளின் ஆதரவையும், தனியார் துறையின் ஈடுபாட்டையும் பெறலாம். இத்தகைய ஒத்துழைப்போடு, செயல்களில் ஈடுபட்டால், கோயில்களில் ஏற்பாடு செய்யப்படும் நிகழ்ச்சிகளில் கலந்து வட்டார இந்துக்கள் பயன்பெறுவதோடு, மற்றச் சமுதாயச் சீர்கேடுகளைக் கொண்டுவரும் நடவடிக்கைகளில் ஈடுபடுவதைத் தவிர்ப்பார்கள். இதன்வழி, தனி இந்து மட்டுமல்லாது, முழு இந்துக் குடும்பமுமே பயன்பெறும் வழி பிறக்கும்.

## வழிபாட்டுப் பொருட்களை விற்பதற்கான கடைகள்

முதன்மைத் தாய்க் கோயில்களில், கோயில் வழிபாட்டிற்கான பொருள்களை இந்துப் பக்தர்கள் வாங்கிக்கொள்ளும் வகையில், சில அங்காடிக் கடைகளை ஏற்படுத்துதல் நல்லது. பொருள்களின் விலை அதிகமில்லாமல் நிர்வாகம் பார்த்துக்கொள்ளலாம். கோயிலுக்கு அவற்றை வாடகைக்கு விடும் வழி சிறிய வருமானமும் கிடைக்கும்.

## முதன்மைக் கோயிலைத் தேர்வு செய்தல்

ஏற்கனவே இருக்கும் கோயிலையோ, அல்லது போதிய நிலப்பரப்பில் புதிதாக இடம் பெயரும் கோயிலையோ முதன்மை தாய்க் கோயிலாக தெரிவு செய்யலாம்.

## தாய்க் கோயில்கள் - 15-18 கோயில்கள்

இந்துக்கள் அதிகம் வாழும் வட்டாரங்களில், ஏறக்குறைய இரண்டு ஏக்கர் சொந்த நிலப்பரப்பில் வீற்றிருக்கும் கோயில்களைத் தாய்க் கோயில்களாகத் தெரிவு செய்யலாம். அதிகமான இந்துக்கள் இக்கோயில்களுக்குச் சென்று வழிபட வசதியாக இருக்கவேண்டும். அந்த வட்டாரத்திலுள்ள மற்றக் கோயில்களை அரவணைத்து இத்தகைய தாய்க் கோயில்கள் செயல்படவேண்டும். இந்துச் சமயப் பண்டிகைகள், உபயங்களைத் தாய்க் கோயிலின் கீழ் இயங்கும் கோயில்களில் அங்கங்குள்ள வசதிகளுக்கேற்ப நடத்த இயலும். இதன்வழி நிகழ்ச்சிகளுக்கு அதிகமானோர் வருகை தந்து பயனடைய முடியும்.

தாய்க் கோயிலின் கீழ் இயங்கும் கோயில்கள் அனைத்தும் ஒரு குழுமமாக செயல் பட, தாய்க் கோயிலின் செயற்குழுவில் எல்லா கோயில்களின் பிரதிநிதிகளும் இடம்பெறுதல் அவசியம். சிறிய கோயில்கள், அவற்றிற்கான நிலம் பிரச்சினையாக இருந்தால், தாய்க் கோயில் வளாகத்தில் இடம்பெயர்த்து, அதன் வரலாற்றுக் குறிப்புடன், அமைத்துக்கொள்ளும் வசதி இருக்கும்.

மலாக்கா மாநிலத்தில் இத்தகைய 15-18 தாய்க் கோயில்களை உருவாக்கலாம். குறிப்பாகச் சொந்த நிலம் கொண்ட கோயில்கள், அவை அதிக இந்து மக்கள் வாழும் இடங்களில் இருந்தால், வட்டாரத்திற்கு ஒரு கோயிலைத் தாய்க் கோயிலாகத் தேர்ந்தெடுக்கலாம். இத்தகைய கோயில் செயற்குழு சுறுசுறுப்பாகப் பணியாற்றக் கூடியவர்களாக இருத்தல் அவசியம். மற்றவர்களை அரவணைத்து, ஒற்றுமையுடன் செயல்படக் கூடியவர்களாக இருத்தல் முக்கியம். புதியவர்களைத் தங்கள் குழுக்களில் சேர்த்துக் கொண்டும், தங்கள் குழுமத்தில் அமைந்துள்ள எல்லா கோயில்களிலும் நிகழ்ச்சிகளை நடத்தத் தயாராக இருப்பதும் அவசியம். குழுமத்திலுள்ள கோயில் இடம் மாறி வரவேண்டிய அவசியம் ஏற்பட்டால், அதை ஏற்று தங்கள் கோயில் வளாகத்தில் இடம் கொடுக்கும் பக்குவம் இருத்தல் அவசியம்.

## தாய்க்கோயில் மற்றும் அதன் கீழ் இணையும் கோயில்களுக்கிடையே ஒத்துழைப்பு

தாய்க் கோயிலும் அதன் அரவணைப்பிலுள்ள மற்றக் கோயில்களும் நெருங்கிய ஒத்துழைப்பைக் கொண்டிருந்தால், அந்த வட்டாரத்தில் வாழும் எல்லா இந்துக்களையும், இந்துக் குடும்பங்களையும் முறையாகப் பதிந்து அட்டவணைகளைத் தயாரித்து, தொடர்ந்து ஏற்படும் மாற்றங்களையும் அவ்வப்பொழுது புதிப்பித்துக் கொள்ளமுடியும். அவர்கள் அனைவரையும் அணுகி, உறுப்பினர்களாக்க முயற்சிகள் தொடர்ந்து நடக்கவேண்டும் - உறுதுணையாக, பலதரப் பட்ட, பல வயதினருக்கும் ஏற்ற நடவடிக்கைகளை இந்தத் தாய்க் கோயில் அரவணைப்பில் இயங்கும் கோயில் குழுமம் செய்து ஆர்வத்தைத் தூண்டவேண்டும்.

இந்தக் கோயில் குழுமத்தில் குறைந்தது மூன்று தேர்ச்சிப் பெற்ற குருக்கள் முழு நேர பணியாளர்களாக இருத்தல் நல்லது. இவர்களின் பங்கு குழுமத்திலுள்ள எல்லா கோயில்களுக்கும் தேவை. தாய்க் கோயிலின் இசைக் கலைஞர்கள் குழுமத்திலுள்ள எல்லா கோயில்களுக்கும் பயன்படுவார்கள். குழுமத்திலுள்ள கோயில்களின் நடவடிக்கைகள் செவ்வனே நடைபெற இத்தகைய ஏற்பாடு உதவும். தாய்க் கோயிலின் அலுவகத்தில் பணிபுரியும் முழு நேர நிர்வாகி, குழுமத்திலுள்ள கோயில்களின் நடவடிக்கைகளை ஒருங்கிணைத்து அட்டவணையைத் தயாரித்து விநியோகிப்பார். தன்னார்வ உதவியாளர்களும் இதற்குத் துணை நிற்க வேண்டும்.

## நூலகம் மற்றும், பிற வசதிகள்

ஒவ்வொரு தாய்க் கோயிலிலும் ஒரு நூலகம் இருக்கவேண்டும். எல்லா தரப்பினருக்கும் ஏற்ற நூல்கள், இதழ்கள், தமிழிலும், மலாய் மொழியிலும், ஆங்கிலத்திலும் இதில் இடம் பெறவேண்டும்.

போதிய நிதி வசதி இருந்தால் ஒவ்வொரு தாய்க் கோயிலிலும் சிறிய பலநோக்கு மண்டபங்களை நிறுவலாம். சிறிய அளவில் நடைபெறும் திருமணங்கள், மற்றக் கலை-சமய-பண்பாட்டு நிகழ்ச்சிகளையும், பயிற்சிகளையும் நடத்த இத்தகைய மண்டபங்கள் உதவும். ஓரிரு அங்காடிக் கடைகள், வழிபாட்டுக்குத் தேவையான பொருட்களை விற்க அமைந்திருப்பது பக்தர்களுக்கு உதவியாக இருக்கும். எல்லாவற்றையும் படாடோபமில்லாமல் சிக்கனமாகச் செய்யும் வகையில் திட்டமிடுதல் நல்லது.

## கோயில்களுக்கிடையே ஒத்துழைப்பு

வட்டார இந்துக்களின் தேவைக்கேற்ப, ஒவ்வொரு தாய்க் கோயில் துணைச் செயற்குழுக்கள் அமையவேண்டும். குழுமத்திலுள்ள ஒவ்வொரு கோயிலின் பிரதிநிதியும் இத்தகைய செயற்குழுக்களில் இருந்து சேவை செய்ய போதிய ஊக்கத்தைக் கொடுக்கவேண்டும். எல்லா கோயில் நிர்வாகங்களின் கருத்துகளையும் முறையாகக் கேட்டு, அனைத்து இந்துக்களுக்கும் பயனளித்து, சமயத்திற்கு நல்ல தோற்றத்தை உருவாக்கும் வகையில் முடிவுகள் எடுக்கப்பட்டு செயல்படுத்தினால் நாட்டிலும், மாநிலத்திலும், வட்டாரத்திலும் வாழும் பல சமய-இனத்தவர் மத்தியில் இந்துச் சமயத்திற்கும், அதை பின்பற்றுபவர்களுக்கும், நற்பெயர் கிடைப்பது உறுதி.

## அரசின் ஆதரவும் ஒத்துழைப்பும்

மாவட்டங்களில் மூன்று முதன்மை தாய்க் கோயில்களுக்கும், வட்டாரங்களில் 15-18 தாய்க் கோயில்களுக்கும் போதுமான பரப்பளவில் நில ஒதிக்கீடு செய்வதில் அரசின் ஆதரவும், ஒத்துழைப்பும் முக்கியம். இவை முறையாகச் செயல்படவும், வசதிகளை ஏற்படுத்திக் கொள்ளவும் மத்திய, மாநில அரசின் ஆதரவும், துறைகளின் முறையான அங்கீகாரமும், பதிவும் அவசியம்.

## மலாக்கா மாநிலத்தில் ஆக அதிகம் இருபது தாய்க் கோயில்கள் போதும்

மலாக்கா மாநிலத்திலுள்ள இந்து மக்கள் தொகைக்கு, 146 கோயில்கள் மிக அதிகம். இதனால், நிறைய உழைப்பும் பண விரயமும் ஏற்படுகிறது. பெரிய எண்ணிக்கையில் கோயில்கள் இருந்தும், அவற்றின் நிலையும் செயல்பாடுகளும் பெருமைப்படக் கூடிய நிலையில் இல்லை. இதனால், கோயில்களுக்குத் தொடர்ந்து

வருகை புரிந்து வழிபடுபவர்களின் எண்ணிக்கை மிகச் சிறிதாகி வருகிறது. 2,500-3,000 இந்துக்களுக்கு ஒரு கோயில் என கணக்கெடுத்தால், 15 - 18 தாய்க் கோயில்களே தேவைப்படும். ஒவ்வொரு தாய்க் கோயிலின் கீழும் ஐந்திலிருந்து ஏழு, அவ்வட்டாரத்தில் இயங்கும், சிறிய கோயில்கள் இணைந்து ஒரு குழுமமாக இயங்கும். இந்த எண்ணிக்கை, அந்தந்த வட்டார பரப்பளவு, இந்துக்களின் எண்ணிக்கை ஆகியவற்றின்படி, கோயில் தலைவர்கள் கூடி முடிவு செய்யலாம். முதன்மை தாய்க் கோயில்களுடன் சேர்த்து, ஆக அதிகம், இருபது தாய்க் கோயில்களே போதுமானது.

## மலாக்கா செட்டி கோயில்களும், நாட்டுக்கோட்டை செட்டியார் கோயிலும்

மலாக்கா செட்டிக் கோயில்கள் ஏற்கனவே அவர்களின் தாய்க் கோயிலின் கீழ் வைக்கப்பட்டு நிர்வகிக்கப்படுகின்றன. அதைப் போலவே நாட்டுக்கோட்டை செட்டியார் காப்பகம் அதன் நிர்வாகத்தின் கீழ் இயங்கும் இரண்டு கோயில்களை மட்டும் தொடர்ந்து நிர்வகிக்க எண்ணலாம். இங்கு பரிந்துரைக்கும் மாற்றங்களை இவர்கள் ஏற்றுக்கொள்ளாமல் போகலாம். இந்த இரண்டு சாராரும், அவர்களின் கோயில் நிர்வாகங்களில் மற்றவர்களை இணைத்துக்கொள்ள விரும்புவதில்லை என்பதால், தொடர்ந்து அப்படியே இருக்க விரும்புவார்கள் என அனுமானிக்கலாம்.

## உயிர்ப் பலி கொடுக்கும், அருள்வாக்கு வழங்கும் கோயில்கள்

இந்த ரகக் கோயில்கள் கொடுக்கப்படும் பரிந்துரைகளுக்கு இணங்கி ஒருங்கிணைப்பில் சேர்ந்து கொள்ளும் வாய்ப்பு உள்ளது. முறையான இந்துச் சமயக் கல்வியைப் பரப்புவதன்வழி, இத்தகைய நடைமுறைகளை படிப்படியாகக் குறைத்து ஒதுக்கலாம். எனினும், இவற்றின் மத்தியில், போதுமான நிதி பலத்தைக் கொண்ட கோயில்கள் மற்றக் கோயில்களுடன் இணைய மறுக்க வாய்ப்புள்ளது. முறையான இந்துச் சமயக் கல்வி மட்டுமே இத்தகைய கோயில்களின் ஈர்ப்பைக் குறைத்து ஒதுக்கமுடியும்.

இத்தகைய காரணங்களால் மாநில அளவிலான ஒருங்கிணைப்பில் இணையும் கோயில்களின் எண்ணிக்கை ஒவ்வொரு மாவட்டத்திலும் குறையலாம். இருப்பினும், சில காரணங்களுக்காகச் சில கோயில்கள் தயக்கம் காட்டினாலும் இந்துக் கோயில்களிடையே மாற்றத்தின் உணர்வை மங்கச் செய்யக்கூடாது, ஏனென்றால், முன்மொழியப்பட்ட மாற்றம் பயனுள்ளது என நிரூபிக்கப்பட்டால், காலப்போக்கில் மேலும், அதிகமான கோயில்கள் பின்பற்ற முன்வரும் என்பதில் சந்தேகம் இல்லை.

## நிதியும் நிர்வாகத்திறனும்

நிர்வாகக் கட்டமைப்பையும் நிதி வளங்களையும் கவனமாகச் சிந்தித்துத் திட்டமிடும் வரை, இந்த முயற்சி கடினமாகத் தோன்றும் - ஆனால், துடிப்புமிக்கத் தலைமை இந்த முக்கியமான சிக்கல்களைப் பற்றி சிந்திக்கலாம், மற்றும், கோயில் ஒருங்கிணைப்புத் திட்டங்களுக்கு மாநில அரசாங்கத்தின் ஆதரவையும் பெறுவதன் மூலம் ஒரு வலுவான அடித்தளத்தை அமைக்க முடியும். அதோடு, விழிப்புணர்வு நிகழ்வுகள் மூலம் இந்துக்களின் ஆதரவைப் பெற வேண்டும், மற்றும், மலாக்கா மாநிலத்தில் உள்ள இந்து கோயில்களின் நிர்வாகத் திறனை மாற்ற வேண்டும். இந்த செயல்முறை நடைமுறைக்கு வர காலம் எடுக்கும், ஆனால், அர்ப்பணிப்பு இருந்தால் - அது நிச்சயமாக பலனைத் தரும். கடினம் - ஆம்! சாத்தியமற்றது - இல்லை!!

## இணைந்து செயல்படாமல் தனித்தியங்க விரும்பும் கோயில்கள்

இணைய விரும்பாமல், தனித்தியங்க விரும்பும் கோயில்கள், அவை பதிவுப் பெற்றிருந்தால் தொடர்ந்து இயங்கலாம். ஆனால், இவற்றிற்கு அரசு மான்யங்கள் கொடுக்கப்படக் கூடாது. அரசால் அமல்படுத்தப்படும் விதிமுறைகளுக்கேற்ப இந்தக் கோயில்களும் செயல்படவேண்டும். விதிகளை மீறும் கோயில்கள்மீது சட்ட நடவடிக்கைகளை எடுக்கலாம். ஏனெனில், இவற்றை விருப்பம்போல் செயலாற்ற விட்டால், மேலும், அத்தகைய ரகக் கோயில்கள் நிறுவப்பட்டு உயிர்ப்பெற வாய்ப்புள்ளது. இதன்வழி, பதிவுப்பெறாத எந்தக் கோயிலும் மாநிலத்தில் இல்லாமல் இருப்பதைப் பார்த்துக் கொள்ள முடியும்.

## முன்மொழியப்படும் தாய்க் கோயில்கள்

பின்வரும் இடங்களில் கோயில்களைத் தாய்க்கோயில்களாக ஏற்படுத்திக் கொள்ள - அனைவரும் சம்மதித்தால் - முடிவு செய்யலாம்

**அட்டவணை 31 : இருக்கும் கோயில்களிருந்து முன்மொழியப்படும் தாய்க் கோயில்கள்**

| மாவட்டம் | KUIL INDUK | | KUIL TRADISI | |
|---|---|---|---|---|
| மத்திய மலாக்கா | MT 38<br>MT 22<br>MT 19<br>MT 39<br>MT 14 | GAJAH BERANG (BANDAR)<br>BATU BERENDAM<br>BUKIT BERUANG<br>PAYA RUMPUT<br>SUNGAI UDANG | MT 1<br>MT 2<br>MT 3 | CHENG (Nattu Kottai Chettiar)<br>SPVM (bandar-Chitty-bersejarah)<br>Gajah Berang-(Chitty) |
| ஜாசின் | J 9<br>J 7<br>J 1<br>J 2<br>J 22 | BANDAR JASIN<br>RIM (JALAN JASIN ASAHAN)<br>BATANG MELAKA<br>SELANDAR<br>SERKAM | | |
| அலோர்காஜா | AG 3<br>AG 23<br>AG 24<br>AG 39<br>AG 13<br>AG 17 | BANDAR ALOR GAJAH<br>PULAU SEBANG<br>KUALA SUNGAI BARU<br>REMBIA-LENDU<br>(MASJID TANAH)*<br>(TEBONG)* | | |

குறிப்பு : **1.** **பரிந்துரைக்கப்பட்ட தாய்க்கோயில்களிலிருந்து மாவட்ட ரீதியாக முதன்மைத் தாய்க்கோயில் ஒன்றை தேர்வு செய்யலாம். கோயில்களிடையே இருக்கும் தூரத்தையும் மற்றும், அங்குள்ள இந்து மக்களின் எண்ணிக்கையையும் கருத்தில் கொள்ள வேண்டும்.**

**2.** **(அடைப்புக்குறிகள்)*: தோட்ட நிலத்தில் உள்ள கோயில்**

பரிந்துரைகள் மட்டுமே இங்கு சமர்ப்பிக்கப்படுகின்றன, மத்திய மலாக்கா மாவட்டத்தில் 5 கோயில்கள், ஜாசின் மாவட்டத்தில் 5 கோயில்கள், அலோர் காஜா மாவட்டத்தில் 6 கோயில்கள். அறக்காப்பகத்தின் மேற்பார்வையில் 3 பாரம்பரிய கோயில்களுடன், மேலே பட்டியலிடப்பட்டுள்ள 19 கோயில்களும் முக்கியப் பங்கு வகிக்க முடியும். முடிந்தவரை அதன் சொந்த நிலத்தில் உள்ள கோயில்கள் முன்மொழியப்பட்டுள்ளன. இருப்பினும், இந்தத் தேர்வு ஒரு பரிந்துரை மட்டுமே, ஆகும். கோயில்களின் தேவைகள் மற்றும், அவற்றின் தயார்நிலைக்கு ஏற்பத் தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு கோயில் தலைவர்கள் மற்றும், அங்குள்ள சமூகத்தைப் பொறுத்தது ஆகும். இவை நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் இது சம்பந்தமாக விழிப்புணர்வு நிகழ்வுகள் கோயில் நிர்வாகம் மற்றும், அங்குள்ள பக்தர்களிடையே முறையாக நடத்தப்பட வேண்டும்.

## அடிப்படைத் தேவைகள்

மாநில இந்து கோயில்-சமய-பண்பாட்டு ஒருங்கிணைப்பு சம்மேளனம் அல்லது மாநில அரசின் இந்து கோயில்-சமய ஒருங்கிணைப்பு அமைப்பு - எது தோற்றுவிக்கப்பட்டாலும், தேவையான நிதியை, சொந்த முயற்சியில் பெறவேண்டும். அலுவலகம் அமைத்து, அலுவலாளர்களைப் பணிக்கு அமர்த்தி, நிர்வாகத்தில் ஈடுபட, குறிப்பாக அரசாங்கம் துணை புரியாவிட்டால், முறையான திட்டமிடல் தேவை. இந்த அமைப்பு முறைப்படி பதிவுப் பெற்றிருக்கவேண்டும். மாநில அரசின் மான்யத்திற்கு முறையாக விண்ணப்பிக்கவேண்டும். மாநில அரசே அமைப்பை உருவாக்காத பட்சத்தில், மாநில இந்துக்களால் அமைக்கப்படும் சம்மேளனத்திற்கு மாநில அரசு, முறையான நடவடிக்கைகளைச் செய்ய, போதிய நிதி அளித்து உதவ முன்வரவேண்டும்.

சம்மேளனத்தின் சட்டத்திட்டங்கள், மாநிலத்திலுள்ள இந்து சமயப் பெரியார்களையும், செல்வாக்குமிகுந்த சமுதாயத் தலைவர்களையும் இணைத்து வலுவாகச் செயல்படக் கூடிய விதத்தில் வரையப்பட்டிருக்க வேண்டும்.

## மாநில அரசின் இந்துக் கோயில்-சமய ஒருங்கிணைப்பு அமைப்பு

மாநில அரசு இத்தகைய அமைப்பை உருவாக்கினால், அதற்கான அலுவலகமும், அலுவலாளர்களும் மாநில அரசின் கீழ் இருக்கவேண்டும். அது கோயில்கள் அமைக்கப்படுவதையும் பதிவுப் பெறுவதையும் ஒருங்கிணைப்பதுடன், அவற்றின் நடவடிக்கைகளைக் கண்காணிக்கும் பொறுப்பையும், இந்து மயானங்கள், மின்சுடலைகள், ஈமச் சடங்குகளைச் செய்யும் இடம் (ஆத்மா சாந்தி மையம்), இந்து சமய-பண்பாட்டு நிகழ்ச்சிகள் போன்றவற்றையும் கண்காணிக்கும் பொறுப்பை வகிக்கும். மாநிலத்தின் இந்து கோயில்-சமய-பண்பாடு சம்பந்தமாக மாநில அரசிற்கு ஆலோசனை கூறும் அமைப்பாகவும் இருக்கும்.

அரசு அலுவலாளர்களுக்கு வழிகாட்ட, ஓர் இந்துக் கோயில்-சமய-பண்பாடு ஆலோசனை மன்றத்தை மலாக்கா மாநிலத்தில் அமைக்க வேண்டும். இந்த மன்றத்தில் இந்துச் சமயப் பெரியார்கள், சமூகத் தலைவர்கள் இடம்பெறும் வகையில் விதிகள் இருத்தல் அவசியம். காரணம். அரசின் அலுவலாளர்களுக்கு இந்துச் சமய விவகாரங்களில் சமுதாயத்தில் அனுபவமிக்க, ஆற்றல் மிக்க பெரியவர்கள் வழிகாட்டுதல் முறையாக இருக்கும்.

## இந்துக்களுக்கான கருமக்கிரியை செய்யும் இடம் (ஆத்மா சாந்தி மையம்)

கருமக்கிரியைக்கான இடம் முறையாக தெரிவுசெய்யப்பட்டு அரசு அறிக்கையில் முறையாகப் பிரசுரிக்கப்பட வேண்டும். ஏனெனில், பல ஆண்டுகள் முயற்சி செய்தும் இதுவரை இந்த வசதி மலாக்காவாழ் இந்துக்களுக்கு இல்லை. இத்தகைய மையம் இருந்தால் கருமக்கிரியை சடங்கை முறையாகவும், பாதுகாப்பாகவும் சகல வசதிகளுடன் பக்தர்கள் செய்ய இயலும்.

## உருமாற்றத்தை நோக்கி முதல் நடவடிக்கைகள்

இந்த ஆய்வில் கூறப்பட்டுள்ள பரிந்துரைகளைச் செயல்வடிவமாக்குமுன், மலாக்கா மாநிலத்திலுள்ள தமிழ்-இந்துக் கோயில் தலைவர்களும், சமூகத் தலைவர்களும், சமய ஆர்வலர்களும், மாநில அளவில் கோயில் நிர்வாகத்தினருக்கும், இந்துப் பக்தர்களுக்கும் விழிப்புணர்வை ஏற்படுத்துதல் நல்லது.

எடுத்துக்காட்டாக, ‘கோயில்: தலைமைத்துவம் - மனிதவாழ்வியல் - இறையியல்‘ என்ற கருப் பொருளில் பல பயிற்சிப் பட்டறைகளை வட்டாரவாரியாக நடத்தலாம். இந்தக் கருப் பொருளை மையமாக வைத்து கீழ்காணும் தலைப்புகளில் பயிலரங்கு/பட்டறைகளை ஏற்பாடு செய்யலாம்.

- கோயில் தலமைத்துவம் இறைச் சார்ந்தத் தன்னார்வத்துவம், நிதி திரட்டல், கோயில் கூட்டமைப்பு & அறவாரியம்.
- கோயில் பணிகளும் சமூகக் கடப்பாடுகளும்
- இறையியல் வழி மனித மேம்பாடு
- இறைநெறி கற்றல் கற்பித்தல்
- இறையியல் சிந்தனைகளும் இளையோர் & மகளிர் வாழ்வியல் நெறிகளும்.

இத்தகைய பயிற்சிகளை, வெளியாரை நம்பியிராமல், கோயில் நிர்வாகத்தினரோ, பொது அமைப்புகளோ, முறையாகத் திட்டமிட்டு நடத்தலாம். இதற்கு, மாநில அளவில் பொதுவாக ஒரு செயற்குழுவை நிறுவி கோயில் நிர்வாகங்களின் துணையுடன் சரியான பயிற்றுநர்களைக் கொண்டு பயிற்சிகளையும், பட்டறைகளையும் நடத்தலாம்.

கால மாற்றத்திற்கு ஏற்ப தற்போதைய சமுதாயத்தின் தேவைகளை நன்கு புரிந்து, கோயில்கள், சமய மற்றும் ஆகம இறைவழிபாடுகளை நடத்துவதுடன் நில்லாமல், இந்துச் சமயத்தின் இறைச்சிந்தனை வழி, மனிதவாழ்வியல் மேம்பாட்டு நிகழ்ச்சிகளில் பக்தர்களைப் பங்கேற்க வைக்கவேண்டியது காலத்தின் கட்டாயமாகிவிட்டது. இதில் தயக்கம் காட்டினால் இழப்பு இந்த இந்துச் சமுதாயதிற்குத்தான் என்பதை அனைவரும் மனதில் கொள்வது நல்லது. மற்றவர்கள் வந்து நமக்கு செய்வார்கள் எனக் காத்திராமல் நாமே செயலில் இறங்குதலே சிறப்பு.

## எதிர்பார்ப்பு

இந்த ஆய்வின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள பரிந்துரைகளை, கோயில்-சமய-சமூகத் தலைவர்கள் மத்தியில் ஆழமாக விவாதிக்கும்பொழுது, மேலும், அதிகப்படுத்தவோ, குறைக்கவோ முடியும்.

எனினும், ஆக்ககரமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, வரலாற்று மலாக்கா மாநிலத்தில் இந்துக் கோயில்கள்-சமய-பண்பாட்டு விவகாரங்கள் மேலும், மெருகேறி, இந்துச் சமயத்திற்கு நற்பெயரைக் கொண்டு வரவேண்டும். இதன்வழி, இந்துக் கோயில்களின் நிர்வாகம் சீர்படுவதுடன், குறிப்பாக, இந்துச் சமயத்தைப் பின்பற்றுபவர்களின் செயற்பாடுகள், பல சமய-இன மக்களைக் கொண்ட நாட்டுச் சூழலிற்கு ஏற்புடையதாக இருப்பதையும் உறுதி செய்யலாம்.

முழுமையை நோக்கிய பயணம் முடிவடையாது. அது எந்தச் சமுதாயத்திலும் எக்காலத்திலும் தொடரவே செய்யும். ஆனால், இதில் மிக சிரமமானது அனைவரையும் ஒன்று படுத்தி, செயலில் இறங்குவதுதான்..!

## இந்துச் சமயத்தின் சாரம்



இந்துச் சமயத்தைப் பற்றி தவறான கருத்துகளை அண்மைய காலங்களில் பலர் பரப்பி வருகிறார்கள். குறிப்பிட்ட ஒரே மையத்தின் அதிகார வழி இந்தச் சமயம் செயல்படாத நிலையால், இந்நிலை எழுந்துள்ளது. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இந்துச் சமயம் தோன்றி, ஒரே மூலத்தின் பல பிரிவுகளாகவும், நம்பிக்கைகளாகவும் பரந்து விரிந்துள்ளது. இவற்றில் நான்கு பெரிய பிரிவுகளாக வைஷ்ணவம், சைவம், சாக்தம், ஸ்மார்த்தம் ஆகியவற்றுடன் கணக்கிலில்லா பல சம்பிரதாயங்கள், குருபாரம்பரியமாக வெளிப்படுத்தப்படுகின்றன. ஒவ்வொன்றும் முழு சுதந்திரத்துடன் அதிகாரத்தில் தன்னிறைவு கொண்டுள்ளன.

எனவே, இந்துச் சமயம் ஒரு குறிப்பிட்ட மூலத்தில் உதித்தது என்றோ, ஒரு குறிப்பிட்ட சமயப் போதகர் வழி வந்தது என்றோ சொல்ல இயலாது. அதனால், இந்துச் சமயக் கோட்பாடுகளையும், பழக்க வழக்கங்களையும், சமய அமைப்புகளையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் கொண்டவரோ அமைப்போ இல்லை. அவை அடிப்படை இந்துச் சித்தாந்தங்களை மட்டும் வழிகாட்டியாகக் கொண்டுள்ளன.

### ஒரே பெயரில் பல நம்பிக்கைகள்

இந்தப் பெரும் மதத்தைப் பத்தாயிரம் சமயங்கள் சமாதானத்துடன், இந்து மதம்/சனாதன தர்மம் எனும் ஒரே குடையின் கீழ் ஒன்று கூடியதாக வரையறுத்தும் புரிந்தும் கொள்ளலாம். இத்தகைய பரந்த பாங்கை நோக்கத் தவறுவது ஒட்டுமொத்த மதத்தையே தவறான கண்ணோட்டத்தில் பார்க்க எடுத்து வைக்கும் முதல் அடி. பொதுவாகவே, பெரும்பாலான ஆன்மீக பாரம்பரியங்கள், எளிதாக, ஒருங்கிணைக்கப்பட்டு, ஐயமின்றி இருக்கின்றன.

தொன்மை மட்டுமின்றி, சிந்தனா அமைப்புகள், அழகுமிக்க கலை மற்றும், கட்டட அமைப்பு, மக்களின் நெகிழ்வு ஆகிய ஆழமான கூறுகள் எல்லாம் இருந்தும், இந்து மதம் பலருக்கு ஒரு புதிராகவே உள்ளது. திரிக்கப்பட்டக் கருத்துகள் வழிந்தோடுவதால், செழிப்புமிக்க கட்டமைப்பு, நேர்த்தி, ஆன்மீக பரிசுகளை அள்ளித்தரும் இம்மதம், தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்பட்டு உள்ளது. ஏதோ பாம்பாட்டி, மாட்டு வழிபாடு, ஆணி படுக்கை யோகிகளின் நையாண்டி சம்மேளனத்திற்கு சற்றே உயர்ந்த, கீழான இடத்தில் வைத்தும் பார்க்கப் படுகிறது.

நல்ல வேளையாக, சற்றுச் சுலபமான, இயற்கையான வழி ஒன்று இந்துச் சமயத்தின் பரப்பை அறிய நமக்கு உள்ளது. தெளிவான வழிகாட்டும் எண்ணிலடங்கா உயிர்வாழும் குருமார்கள், ஆசிரியர்கள், பண்டிதர்கள் மத்தியில் ஓர் ஆசான் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவரின் போதனைகளைப் பயின்று, அவரின் சம்பிரதாயத்தைத் தழுவி, அந்த நீதி நெறிகளையும் ஒழுக்கத்தையும் மாணவன் ஏற்றுக் கொள்வதே அது.

இவ்வாறே நடைமுறையில் மத நம்பிக்கை பேணப்படுகிறது. புனித ஆண்களும், பெண்களும் லட்சக் கணக்கில் குருமார்களாகவும், மதப் பாதுகாவலர்களாகவும், நம்பிக்கை மிக்கவர்களுக்கு தூண்டுகோலாகவும் இருக்கின்றனர்.

### நான்கு அடிப்படை கோட்பாடுகள்

சுலபமான ஓர் ஒட்டுமொத்தப் பார்வையில் (மிக எளிமையாக இருப்பினும்,) பெருவாரியான இந்துக்கள் நான்கு சார நம்பிக்கைகளை பகிர்ந்து கொள்கின்றனர்: கர்மம், மறுபிறவி, எங்கும் தங்கும் தெய்வீகம், மற்றும், தர்மம். இந்த நான்கு நம்பிக்கைக் கோட்பாட்டை பின்பற்றி வாழும் ஒருவரை நாம் ‘இந்து’ என்று அழைக்க முடியும்.

- **கர்மம்:** நேர்ப்பொருள் அடிப்படையில் கர்மம் ‘காரியம்’; அல்லது ‘செயல்’ என பொருள்படும். விளக்கமாகக் கூறின், அது காரண-காரிய பொதுக் கோட்பாடு; வினை-வினைப்பயன், எது, அனைத்து தோற்றத்தையும் ஆளுகின்றதோ, அது. மனதின் இயற்கை சட்டவிதியே கர்மம், எவ்வாறு புவியீர்ப்பு

சக்தி பௌதீகச் சட்டவிதியாக உள்ளதோ, அப்படி, கர்ம விதி அல்ல; ஏனென்றால், மனிதன் சுய முயற்சியால் தனது அடைவுநிலையை உருவாக்குகின்றான். நல்லதை விதைத்தால் நல்லது கிடைக்கும், தீயதை விளைத்தால் தீயது கிடைக்கும் என்று வேதங்கள் சொல்கின்றன. கர்மம் நமது இந்தப் பிறவியிலும், மற்றும், கடந்த கால பிறவிகளிலும் ஒட்டு மொத்த செயல்களும், அவற்றினால் உருவான பலன்களையும் குறிக்கும். இதன் அடிப்படையில் நம் எதிர்காலம் நிர்ணயிக்கப் படுகிறது. நமது அனுபவமும், அதை நாம் எதிர்கொள்ளும் விதமும், கர்மம் அழிவு வேலையைச் செய்கிறதா அல்லது உதவிக் கரம் நீட்டுகிறதா என்பதைக் காட்டுகிறது. கர்மத்தை வெற்றிக்கொள்ள அறிவார்ந்த செயல்களும், உணர்ச்சிவயப்படாத எதிர்ச் செயல்களும் தேவை. எல்லா வினைகளும் உடனே திரும்பி வருவதில்லை. சில சேமிக்கப்பட்டு, எதிர்பாராத வழிகளில் இந்தப் பிறவியிலோ, அடுத்தப் பிறவியிலோ, திரும்பிவரும். வேதங்கள் இவ்வாறு விளக்குகின்றன: 'ஒருவன் தான் செய்வது போலவே ஆகின்றான். நல்ல காரியத்தால் ஒருவன் நல்லவன் ஆகின்றான்; தீயதானால், தீயவனாகின்றான்'. (யஜுர் வேதம், பிரிஹதரன்யகா உபநிஷதம் 4.4.5)

- **மறுபிறவி:** புனர்ஜன்மம் எனப்படும் மறுபிறவி, இயற்கையான பிறப்பு, இறப்பு மற்றும், மறுபிறப்பு நடைமுறையாகும். இறப்பின்போது, நாம் இந்தப் பூத உடலை உதறிவிட்டு, சூக்கும உடல்களில் இருந்தவாறு, உள் உலகங்களில் மீண்டும் ஒரு பிறப்புக்குள் நுழையும் முன், தொடர்ந்து பரிணாமம் அடைகிறோம். பல காலமாக, மறுபிறவி கோட்பாடு இந்துகளுக்கிடையே மிகப்பெரும் ஆறுதல் கூறாக இருந்துள்ளது. சாவைப் பற்றிய பயத்தை நீக்கி, நாம் வாழும் உடல் அல்ல நாம்; ஆனால், அனாதியான ஆத்மா, அது பரிணாம வளர்ச்சியில், சம்சாரத்தில் பல உடல்களில் வாழ்ந்துள்ளது. இறப்பிற்குப் பின், பார்வைக்கு அகப்படாத உலகங்களில் நாம் தொடர்ந்து இருந்து, உலகத்தில் செய்த காரியங்களுக்குச் சுகத்தையோ, துக்கத்தையோ அனுபவித்து, மீண்டும் பூதவுடல் கொண்ட பிறவிக்காக காத்திருப்போம். கடந்த பிறவிகளில் நாம் செய்த காரியங்கள் அடுத்த பிறவியின் நிலைமை மற்றும், மனப்பாங்குகளாக உருவாகின்றது. கர்மம் தீர்க்கப்பட்டதும், கடவுள் அறியப் பட்டதும், மோட்சம் அடையப்பட்டதின் விளைவாக மறுபிறவி நீங்கும். வேதங்கள் இப்படி கூறுகின்றன: **'இறப்பிற்குப் பின் ஆத்மா அடுத்த உலகத்திற்குச் செல்கிறது, தான் செய்த காரியங்களின் நுட்ப பதிவுகளைத் தாங்கியவாறு. அதற்கான பலன்களை அனுபவித்தப் பிறகு, காரிய உலகமான இங்கு மீண்டும் வருகின்றது. ஆக, இச்சை உள்ளவருக்கு மறுபிறவி வாய்க்கத் தொடர்ந்து வழி உண்டு'. (யஜுர் வேதம், பிரிஹதரன்யகா உபநிஷதம்** 4.4.6)

- **எங்கும் தங்கும் தெய்வீகம்**: பல சமய நம்பிக்கைகளின் குடும்பமாதலால், இந்து மதம் பலதரப்பட்ட கோணங்களில் தெய்வீகத்தைப் பார்க்க முனைகிறது. இருப்பினும், எல்லா இந்துவும், அது ஒரு, எங்கும் தங்கியிருக்கும் உச்சப் பொருள் என நம்புகின்றனர். எது உபநிஷதங்களில் கூறப்பட்டு இருக்கின்றதோ, ஏகனான பரம்பொருள், அதையே வணங்குகின்றனர். தீர்க்க உண்மைப் பொருளாக நோக்கின், கடவுள் தோற்றமின்றி, மாற்றமின்றி, எல்லாவற்றையும் கடந்த நிலையில், காலமகன்று, உருவம் அகன்று, இடம் அகன்று, கடவுளாக உள்ளார். பரிசுத்த உணர்வாக இருப்பதால், கடவுள் ஆதிமூல தோற்றப் பொருள், தூய அன்பு, மற்றும், ஒளியாகி, அனைத்து தோற்றங்களிலும் வழிந்தோடி, சர்வ காலங்களிலும், சர்வ இடங்களிலும் ஆதியந்தமில்லாத பேரறிவாளனாக, சக்தியாக நிற்கின்றார். மூல ஆத்மாவாதலால், கடவுள் நம் தனிப்பட்ட தெய்வமாகி, மூன்று உலகங்களின் ஆதாரமாகி, நம்மை காக்கும், வளர்க்கும், வழிகாட்டும் அப்பன்-அம்மை ஆகி உள்ளார். நம் வாழ்க்கையில், கடவுளின் அருளை வேண்டும் அதே வேளை, நாம் அவர் நமது ஆத்மாவின் சாரம் என்பதையும், நமது உயிரின் உயிர் என்பதையும் அறிந்துள்ளோம். ஒவ்வொரு வழக்குச் சார்பும், ஏனைய கடவுளர்களையும், அல்லது மகாதேவர்கள், கடவுளால் படைக்கப்பட்டதாக எண்ணி, அவருக்குப் பணி செய்து, வணங்குவதாக நம்புகின்றனர். வேதங்கள் இதை இப்படிச் சொல்கின்றன: **'எண்ணிலடங்கா தோற்றங்களை உடைய கடவுளாகிய அவனது மகிமையாலே அனைத்தும் நிலைக்கின்றன. அணுவிலும் சிறிதாகி இருப்பினும், அனைத்துக்கும் படைப்பாளனாகி, தன்படைப்பில் என்றும் வாழ்கின்றான். அன்பாகிய இக்கடவுளைக் காண்பவர்களுக்கு நிலைத்த அமைதி உண்டு. அனைத்திற்கும் தலைவனாகிய அவன், அனைத்தின் மத்தியிலும் மறைந்திருக்கின்றான், கால உலகைக் கண்காணிக்கிறான்.** (கிருஷ்ண யஜுர் வேதம், ஸ்வேதஸ்வதர உபநிஷதம் 4.14.15)

- **தர்மம்:** கடவுள் பிரபஞ்சந்தைப் படைத்தப்பொழுது, அதற்கு நெறியையும், தோற்றத்தையும், ஆளுகின்ற சட்டங்களையும் வழங்கியுள்ளார். தர்மம் என்பது கடவுளின் தெய்வீகச் சட்டம், தோற்றத்தின் அனைத்து மட்டத்திலும் காணப்படும், நிலைபெறச் செய்யும் பிரபஞ்ச நியதி முதல் சமய மற்றும், நன்னெறி விதிகள் வரை நம்மை பிணைத்து சுமூகமாக இருக்க வைக்கின்றது. ஆத்மாவின் தொடர்பில்,

தர்மம் ஆன்மீக வளர்ச்சிக்கு மிகவும் தோதுவான நடத்தை, சீரான நன்னடத்தை, அது கடவுள் பற்று மற்றும், கோட்பாட்டுப் பயிற்சி, கடமை மற்றும், கட்டாயம், நாம் தர்மத்தைப் பின்பற்றுகையில், நாம் பிரபஞ்சத்தைப் பற்றியிருக்கின்ற, வழி காட்டுகின்ற உண்மையுடன் ஒத்து வாழ்கின்றோம். ஆக இயற்கையிலேயே கடவுளுடன் நெருக்கத்தில் உள்ளோம். தெய்வீகச் சட்டத்திற்கு எதிரானது அதர்மம். ஒரு விதைக்கு வழக்கமான வளர்ச்சி எப்படியோ, அது போலவே மனிதனுக்குத் தர்மம் - இறப்புத் தன்மை மற்றும், குறிக்கோளைப் படிப்படியாக நிறைவேற்றுதல். **திருக்குறள் (31-32) நினைவுறுத்துகின்றது: 'வானுலகின் கீர்த்தியையும், மண்ணுலகின் செல்வத்தையும் தர்மம் (அறம்) வழங்குகின்றது. அதைவிட பயனுள்ள வேறு எது உள்ளது? தர்மத்தைவிட பரிசளிக்கும் ஒன்றுமில்லை, அதை கண்டுகொள்ளாததை விட அழிவு வேறு இல்லை.'**

## இன்றைய இந்துச் சமயம்

இந்து சமயம் சுமார் எட்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றிய சமயம் என பொதுவாகக் கணிக்கப்படுகிறது. இன்று உள்ள சமயங்களில், மிகப் பழமை வாய்ந்த சமயம். இந்த சமயத்தில் உலக அறிவை உள்ளடக்கிய பல பிரிவுகளில் அறிவார்ந்த சாஸ்திரங்கள் படைக்கப்பட்டுள்ளன. தத்துவங்கள், கணிநூல், வானூல், கட்டடக் கலை, இசைக்கலை, நாட்டியக் கலை போன்ற பல துறைகளிலும் இந்து சமயம் சிறந்த வழிகாட்டலைக் கொண்டுள்ளது. இன்று இந்தியா என்று சொல்லப்படும் பூமியில் இந்த சமயம் தோன்றி வளர்ந்துள்ளது. இருப்பினும், இன்று இந்தியாவில் இந்து சமயத்தின் பல பிரிவுகளைக் காணலாம். புத்த சமயம், சீக்கிய சமயம், ஜைன / சமண சமயம், போன்றவற்றோடு, வேறிடங்களிலிருந்து வந்த கிறிஸ்துவ, இஸ்லாமிய சமயங்களும் அந்த நாட்டில் செயல்பாட்டில் உள்ளன.

இந்துக்கள் மற்ற சமயத்தினருடன் ஒத்து வாழ்வதில் பெயர்போனவர்கள். ஏனெனில், இந்து சமய அடிப்படை சித்தாந்தமே 'உண்மையை அடைய பல வழிகள் உள்ளன' என்பதுதான். இதனால்தான், பல சமயங்களைச் சார்ந்த மக்கள் அமைதியாகவும் சுபிட்சமாகவும் இந்திய நாட்டில் வாழ்கிறார்கள். தற்பொழுது ஏறத்தாழ 870 மில்லியன் இந்துக்கள் இந்தியாவில் வாழ்கின்றனர். இவர்களுடன் இன்னும் பல மில்லியன் இந்துக்கள் வேறு நாடுகளில், எல்லா கண்டங்களிலும் வாழ்கின்றனர். தென் கிழக்கு ஆசியாவில் இந்துக்களின் தாக்கம் நீண்ட காலமாக இருந்தபோதும், பத்தொன்பதாம், இருபதாம் நூற்றாண்டுகளில் ஆங்கிலேயர்களால் அதிக இந்துக்கள் மலேசியா-சிங்கப்பூர் நாடுகளுக்கு உடலுழைப்புத் தொழிலாளர்களாகக் கொண்டுவரப்பட்டு, அவர்களின் இன்றைய சந்ததியினர் இந்த நாடுகளில் குடிமக்களாக வாழ்கின்றனர்.

இந்துச் சமயத்தைச் சார்ந்தோர், தாங்கள் வசிக்கும் இடங்களில் கோயில்களைக் கட்டி வழிபடுவதை வழக்கமாகக் கொண்டவர்கள். அப்படி கோயில்களை நிறுவும்பொழுது, தங்கள் தாய் நாட்டில் அவர்களின் கிராமங்களில் இருந்தக் கோயில்களை ஒட்டியே அமைத்தார்கள். தென்னிந்திய-வட இந்தியக் கோயில்களின் வேறுபாடுகள் அப்படியே தொடர்ந்தன. எனினும், இந்த வேறுபாடுகள் சின்னங்களாலும் சம்பிரதாயங்களாலும் ஏற்பட்டனவே அன்றி அடிப்படை சித்தாந்தங்களால் அல்ல.

இன்று, பல சுவாமிஜிக்களும், சமய குருக்களும், பண்டிதர்களும் அவரவர்களின் சமய மையங்களையும், ஆசிரமங்களையும் நிறுவி ஆங்காங்கே இந்துச் சமயக் கல்வியையும் சமுதாயத்திற்குத் தேவைப்படும் பல சேவைகளையும் செய்துவருகின்றனர். சமயக் கூறுகளைக் கடைபிடிப்பதிலும், சமூக நலன் காக்கும் திட்டங்களைச் செயல்படுத்துவதிலும் இவர்கள் பல நாடுகளில், மேலை நாடுகளில் உட்பட, சாதனை படைத்துவருகின்றனர். இத்தகைய மையங்களின் செயல்கள், இந்துக்களாக இல்லாத பல மேலை நாட்டு மக்களையும் கவர்ந்து இணைத்துள்ளது என்பதும் உண்மை.



### சமய மறைநூல்கள்

பல சமயங்களுக்கு ஒரே புனித நூல் வழிகாட்டியாக இருக்கும் வேளை, இந்து சமயத்திற்குப் பல வழிகாட்டும் புனித நூல்கள் உள. இதுவே சமயங்களுக்கிடையில் மிக அதிகமான மறை நூல்களைக் கொண்ட சமயமாக இந்து சமயத்தைக்



காட்டுகிறது. உண்மையைக் கூறின், மனிதனுக்குத் தெரிந்த மிகப் பெரிய மறைநூற் பெட்டகம் இந்துச் சமயத்தினுடையது. உச்சப் புனிதமும் மதிப்பும் உடையது வேதங்களும் ஆகமங்களும்; இவை இரண்டும் சுருதியின் (செவிமடுக்கப்பட்ட) பெருத்த ஆழ நூற்கள், கடவுளால் ஞானம் பெற்ற முனிவர்களுக்குப் பல ஆயிர ஆண்டுகளுக்கு முன்னர் வெளிப்படுத்தப்பட்டன. வேதங்கள் பொதுமறை எனவும், ஆகமங்கள் வரையறைக்குட்பட்ட மறை எனவும் சொல்லப்படுகின்றது. ஆகமங்கள் நேரிடையாக வழிபாட்டு விதிகள், யோகங்கள், மந்திரம், தந்திரங்கள், கோயில் கட்டுமாணம் ஆகியவைப்பற்றி நுணுக்கமாகப் பேசுகின்றன. வேதங்களின் மைய பரவலாக அறியப்பட்ட பகுதி உபநிஷதம், இதிலிருந்தே பொதுவான சமயக் கோட்பாட்டு அடிப்படை கிடைக்கின்றது.

இரண்டாம் பட்ச மறைநூட்கள், ஸ்மிரிதி (நினைவில் கொள்ளப்பட்டது), சரிசம அளவில், அதிகப் பிரபலமுடன் உள்ளன. அதிக அளவில் கொண்டாடப்படுபவை இதிகாசங்களும் (காவிய நாடகங்கள் மற்றும், வரலாறு - குறிப்பாக இராமாயணம் மற்றும், மகாபாரதம்) புராணங்களும் ஆகும் (புனித வரலாறு மற்றும், பழங்கதைகள்). மிகப் பிரசித்திப்பெற்ற பகவத் கீதை மகாபாரதத்தின் ஒரு சிறிய பகுதி. வேத கலைகளும், அறிவியலும் (ஆயுர்வேதம், வானவியல், நாட்டியம், இசை, கட்டடவியல், அரசாட்சி, வாழ்க்கைக் கடமை, சட்டம்) வேதாங்கம் மற்றும், உபவேதம் என்ற நூல் தொகுப்பில் பிரதிபலிக்கின்றன. இவற்றுடன், காலம் காலமாகக் கடவுளை அறிந்த ஞானிகள் தத்தம் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ள நிறைய நுல்களை வெளிக்கொணர்ந்து, யோகத்தின் அதிசயங்களையும், உள்ளம் உருக்கும் பக்தி மற்றும், ஞான பதிகங்களையும் வழங்கியுள்ளனர். இந்து மறை படைப்பு இந்நாள்வரை தொடர்கின்றது. தற்கால ஞானிகள் காலத்தால் அழியாத உண்மைகளை மீண்டும் சொல்லி, ஆத்மாக்களை இறைவனிடம் கொண்டு செல்ல முற்படுவதால், இந்து மறை நூற்களை வாழ்நாள் வழிகாட்டியாகவும் ஆறுதலாகவும் தழுவியிருத்தல் ஒருவர் இந்து என்பதற்கு தெளிவான அறிகுறி. அனைத்துப் பிரிவு சார்புகளும் வேதங்களை ஏற்றுக்கொண்டிருக்கும் அதே வேளை, ஒவ்வொரு பரம்பரையும், மற்ற பின்பற்றுபவனரின் முக்கிய அதிகாரப்பூர்வ மறைநூட்களை வரையறுக்கவே செய்கின்றன.




தமிழ் இந்துக்கள், தங்கள் மத்தியில் உதித்த சமயப் பெரியார்களின் நூல்களை வழிகாட்டியாகக் கொண்டு வழிபடுவதைக் காணலாம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர், திருமூலர், சேக்கிழார், அருணகிரிநாதர், குமரகுருபரர், வள்ளலார் போன்ற ஞானிகளின் நூல்கள் தமிழ் இந்துகளுக்கு வழிகாட்டி மறைகளாகத் திகழ்கின்றன.

பொதுவாகக் கோயில்களில் எல்லா மந்திரங்களும் சம்ஸ்கிருத மொழியில் சொல்லப்பட்டாலும், இன்று தமிழிலேயே, அத்தகைய மந்திரங்களைச் சொல்லும் பழக்கம் அறிமுகம் கண்டுள்ளது. இதற்கு, தமிழிலேயே அதிக சமய அறிஞர்களின் வழி கிடைத்துள்ள நூல்கள் பெரிதும் துணை நிற்கின்றன என்று சொல்லலாம். இந்துச் சமயத்தின் அடிப்படை வேதங்களையும், ஆகமங்களையும் கொண்டு இருப்பதால், இத்தகைய பிராந்திய, மொழி வேறுபாடுகள் வெவ்வேறு வழிகளில் உண்மையையும் இறைவனையும் சென்றடையும் பாதை என்று கொள்ளலாம்.

சுருங்கச் சொன்னால், உண்மையான ஆன்மீக முன்னேற்றம் வேண்டுமானால், மறை நூற்களின் போதனைகளை வெறுமனே படித்துவிட்டு, பிரச்சாரம் செய்தால் மட்டும் போதாது. ஆனால், ஒவ்வொரு இந்துவும் தன்னுடைய சொந்த வாழ்க்கையில் பின்பற்றி, அனுபவிக்க வேண்டும்.







சில இந்து மதத்தைப் பற்றிய விளக்கங்கள், இந்துக்கள் ஒரே உச்ச பரம்பொருளை நம்பாமல், பல உச்சத் தெய்வங்களை வணங்குவதாக, தவறாகச் சொல்கின்றன. இந்தத் தவறான கருத்து பரவலாகக் காணப்படுகிறது. எடுத்துக்காட்டு - இந்துக்களின் மும்மூர்த்தி சித்தாந்தம்: பிரம்மன் - படைப்பவர், விஷ்ணு - காப்பவர், சிவன் - அழிப்பவர். ஓர் இந்துவிற்கு இந்த மூன்றும் ஒரே பரம்பொருளின் பண்பாகும். பல தெய்வத் தோற்றங்கள் காணப்படுவதால், ஒரு வேளை வெளி ஆள் ஒருவருக்கு இம்மதம் பல தெய்வங்களைக் கொண்டதாகத் தெரியலாம். இதுவே ஒரு மிகப் பெரிய குறையாக - பல தெய்வ உறுப்பியம் ஒரு நாகரீகமில்லாத பொய்யாகக் கருதப்பட்டு கருத்துரைக்கப்படுகிறது. ஆனால், எந்த இந்துவைக் கேட்டாலும், அவன் ஒரே பரம்பொருளை வணங்குவதாகவே கூறுவான். ஒரு கிறிஸ்துவன், முஸ்லிம், யூதன், மற்றும், அனைத்து பெரும் சமய நம்பிக்கைவாதி போலவே இதுவும் அமைந்துள்ளது. அவன் சைவன் ஆகில், சிவனைப் பரம்பொருளாகக் கொள்வதாகச் சொல்வான்; சாக்த இந்து, தேவியை இறுதிப் பொருளாகக் கொள்வான்; வைஷ்ணவ இந்து விஷ்ணுவை அல்லது அவரது பூலோக அவதாரங்களாகிய - குறிப்பாகக் கிருஷ்ணர் அல்லது இராமரை வணங்குகின்றான்.



ஆகவே, எல்லா இந்துக்களும் இதைத்தான், அல்லது அதைத்தான் நம்புகின்றனர் என்று சொல்லமுடியாது. சில இந்துக்கள், கடவுளை அருவமான உண்மை பரம்பொருளை மட்டுமே ஏற்கின்றனர்; மற்றவர் உருவமான தெய்வமாக, படைப்பாளனாக ஏற்கின்றனர். சிலர் கடவுளை ஆணாகவும், சிலர் பெண்ணாகவும், சிலர் பால் கூறுகள் சட சம்பந்தமாதலால், பாலற்றப் பொருளாகப் பார்க்கின்றனர். இந்தச் சுதந்திரம், கடவுளைக் கருதுவதற்காக உள்ள மிக செழிப்பான வளமிக்க புரிந்துணர்வு என இந்துக்கள் திடமாக நம்புகின்றனர். எல்லா உண்மையான ஆன்மீக பாதைகளையும் - அத்துவைதம், 'கடவுள் மட்டுமே உள்ளார்' என்ற முடிவுக் கொள்கையும் 'என்று நான் அவனின் அருளைப் பெறுவேன்' என்று கேட்கும் துவைதம் கொள்கையும் இந்துக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு இருக்கின்றது. ஒவ்வோர் ஆத்மாவும் தனக்கு உரித்தான வழியில் இதைச் செய்ய வழியுண்டு - பக்தி, தவம், தியானம், யோகம் அல்லது தன்னலமற்ற சேவை.





கடவுள் கற்பனைக்குக் கூட எட்டாதவாறு கடந்தும், சர்வ வியாபியாக அனைத்துள்ளும் ஊடுருவியுள்ளார். தூரமான உயரத்திலிருந்து ஆட்சி செய்யாமல், மிக ஒட்டியிருந்து, அனைத்துள்ளும் அதன் சாரமாக அமர்ந்துள்ளார். படைப்பின் எந்த மூலையிலும் கடவுள் தங்காத இடமில்லை. எட்டாத நட்சத்திரங்களைவிட எட்டாத தொலைவிலும், நம்முடைய மூச்சைவிட நெருக்கமாக இருக்கும் தன்மையாளன்.

கடவுள் எங்குமிருக்கிறார் எனும் நம்பிக்கையில் திளைத்துள்ள இந்துக்கள் தங்களுக்குப் பிடித்தமான சின்னங்களில் இறைவனை வழிபடுகின்றனர். இத்தகைய சின்னங்கள், அவர்கள் வாழும் சூழலைப் பொறுத்துள்ளது. உதாரணத்திற்கு, மலேசியாவில் பெரும்பாலான இந்துக்கள் சைவ மார்க்கத்தைச் சேர்ந்தவர்கள். நகர்ப்புறங்களில் வணிகர்களும், தொழில் ரீதியில் பணிபுரிபவர்களும் சிவன், கணேசர், முருகன், சுப்ரமணியர், மாரியம்மன் போன்ற இறை வடிவங்களைத் தேர்வு செய்துள்ளதையும், கிராம-தோட்டப்புறங்களில், காவல் தெய்வச் சின்னங்களான மாரியம்மன், காளியம்மன், துர்கையம்மன், முனீஸ்வரர், முனியாண்டி, கருப்புசாமி போன்றவற்றை தெரிவு செய்துள்ளதையும் காணலாம். இங்குள்ள சில வைஷ்ணவர்கள் கிருஷ்ணர், ராமர், ஹனுமான், கஜபதி, தேவி, போன்ற சின்னங்களைத் தெரிவு செய்துள்ளனர். இந்து மறைகளில் காணப்படும் சித்தரிப்புகளின்பேரில், யானை, பாம்பு, பசு, எலி போன்ற சின்னங்களைப் பயன்படுத்தி வழிபடும் பக்தர்களும் இருக்கிறார்கள்.

குறிப்பிட்டத் துறைகளில் சிறக்க சில சின்னங்களைத் தெரிவு செய்யும் பக்தர்களும் இருக்கிறார்கள். எடுத்துக்காட்டாக சரஸ்வதியையும் கணேசரையும் கல்விக்கும், இலட்சுமியை செல்வத்திற்கும், நாட்டியக் கலைக்கு நடராஜரையும், ஒரே பரம்பொருளின் பிம்பமாக வணங்குகின்றனர்.

எனவே, இந்துக்களின் கடவுள் சித்தாந்தத்தை நன்கு அறிந்து கொண்ட பிறகு அவர்களின் இறை சின்னங்களைப் பற்றி கருத்துரைப்பது நல்லது.

**ஆத்மாவின் தன்மை**

ஆத்மாவைப் பற்றி இந்து சமயம் என்ன சொல்கிறது? 'நான் யார்?' 'நான் எங்கிருந்து வந்தேன்?' மற்றும், 'நான் எங்கே போகிறேன்?' எனும் கேள்விகளுக்குப் பதிலளிக்க - தன்னை அறிவதற்குத் தவிர்க்க முடியாத உந்து சக்தியாக, அனைத்து பெரும் மதம் மற்றும், தத்துவப் பள்ளிகளின் மையமாக இருந்துள்ளது ஆத்மா. ஆத்மாவைப் பற்றிய இந்துப் போதனைகள் தத்துவார்த்தமாக ஆழமாக இருப்பது மட்டுமின்றி, ஆழமான செயல்முறைக்கும் ஒத்துப் பயனளிக்கிறது. நாம் உடல், மனம், உணர்ச்சிகள், மற்றும், அறிவு எதனை நாம் என்று நினைக்கிறோமோ, எவை நிலையில்லாமல், குறையுடையதாக, கட்டுப்பட்டு இருக்கின்றனவோ, அவற்றைவிட அதிகமான ஒன்று, நம் உண்மையான சொரூபம், நமது இறப்பறியாத ஆத்மா, அனாதி. பரிபூரணம், வரையறையற்ற உள் சாரம்; பிரகாசிக்கும் ஒளியால் ஆன தூயப் பொருள், மனிதக் கண்களால் காணப்படாதது, ஐம்பொறிகளால், பௌதீக உலகில் வாழ தேவையான கருவிகளால் அறியப்படாதது. அதுவே ஆத்மா.

- நமது அறிவு, மனத்திடம், அன்பு உட்பட நமது எல்லா உயர் காரியங்களுக்கும் ஆத்மாவே மூலம். அது ஆணுமல்ல, பெண்ணுமல்ல, ஆத்மாவின் சாரம், எது படைக்கப்படவில்லையோ, அது சர்வத்திலும் சதா உள்ளூர ஊடுருவியிருக்கும் அன்பு, மற்றும், கடந்த மெய்ப்பொருள். இது கடவுளுடன் முழுதும் ஒத்து, அனாதியாக கடவுளுடன் ஒன்றாக இருக்கின்றது. வேதங்களில் விளக்கப்பட்டுள்ளது: **'ஆத்மா பிறந்த ஓர் உடலில் வளருகிறது, வாழ உணவும், கனவுகளையும், ஆசைகளையும் சுமந்து, பிறகு மற்ற உடல்களில் பிறப்பெடுக்கின்றது, முன்னாளில் செய்தக் காரியங்களுக்கேற்ப. ஆத்மாவின் தகுதி அதன் எதிர்கால உடலை, உயர்வு அல்லது தாழ்வு, கனம் அல்லது இலேசு என நிர்ணயிக்கிறது.'**

எல்லாத் தோற்றங்களிலும் தெய்வீகம் இருப்பதாக வேதங்கள் போதிக்கின்றன. நமது உண்மையான ஆன்மீக சாரம் கடவுள் போலவே, அனாதி, பேரானந்தம் பொருந்திய, நல்ல ஞானமான, அழகு நிரம்பியத் தன்மையானது. கடவுளையும் ஆத்மாவையும் இணைப்பது யோகம். நாம் உலகத்தில் பெரும்பகுதி நேரத்தை அழகு, கல்வி மற்றும், ஆனந்தத்திற்காகச் செலவிடுகின்றோம். நம் ஆசைக்குக் காரணமான இந்தப் பொருள் யாவும் நம் ஆத்மாவின் தன்மையாக நமக்கு உள்ளே ஏற்கனவே இருப்பது தெரியாமல், நமது நோக்கை உள்ளூராக, வழிபாடு மற்றும், தியானத்தின் மூலம் திருப்பும் பட்சத்தில், நமது உண்மை ஆன்மீகம், தன்னுடன்

இனங்காணும் வேளை, உலகத்தின் மகா செல்வத்தையும் எதிர்கொள்ளும் அளப்பிட முடியாத உள் பொக்கிஷங்களை நாம் கண்டு பிடிக்க இயலும்.

இந்துச் சமயம் பக்தனைச் சுயமாகவே உள்ளூர உண்மைப் பொருளை அனுபவிக்க வழிகாட்டி, இறுதியில் உணர்வின் உச்சியை அடையும்பொழுது, மனிதனும் கடவுளும் ஒன்றே ஆகின்றது. தெய்வீக ஆத்மாக்களாக நாம் யாவரும் மறுபிறவி மூலம் பரிணாமித்து, கடவுளுடன் ஐக்கியமாக உள்ளோம். நாம் இறப்பு-பிறப்பு இல்லாத ஆத்மாக்களாக உலக அனுபவங்களை நுகர்ந்து, பூலோக வாழ்க்கை எனும் பள்ளியில், வாழ்ந்தும் வளர்ந்தும் வருகின்றோம். பல பிறப்புகளில் வாழ்ந்தும் விட்டோம். இதை அறிவது பின்பற்றுபவர்களுக்கு ஒரு கவலையற்ற தன்மையைக் கொடுக்கின்றது. சாவைப் பற்றிய பயத்தையும் நடுக்கத்தையும் நீக்குகின்றது. ஒரு நாத்திகவாதி நம்புவது போல தனது இறப்பு இருப்பின் இறுதி என்று ஓர் இந்து நினைப்பதில்லை. ஓர் இந்துவிற்கு இறப்பு மிகவும் உயர்வான அனுபவமாகும். இவ்வுலகிலிருந்து அடுத்த உலகிற்கு ஆழமான ஒரு புடை பெயர்வு, ஏக காலத்தில் ஒரு முடிவும், புதிய தொடக்கமும் ஏற்படும்.

மனதை நெகிழவைக்கும் நமது சுயத் தன்மையை மறைநூட்கள் பறைசாற்றினாலும், பெரும்பாலான ஆத்மாக்கள் இதனை அறியாமல் இருக்கின்றன. இந்த அறியாமை அல்லது 'மறைத்தல்' இந்து சமயத்தில் கடவுளின் வேண்டுமென்றே அறிவைக் குறுக்கி வைக்கும் செயலாகப் பார்க்கப்படுகின்றது. இதனால், நமக்கு ஆத்ம வளர்ச்சி ஏற்படும். இந்தக் குறுகலான பார்வையும், ஆணவமும் சேர்ந்தே, உலகத்தையும், அதில் நமது இடத்தையும், நடைமுறை மனித கோணத்தில் பார்க்க வைக்கின்றது. இந்துப் பார்வையில் வாழ்க்கையின் இறுதி நோக்கம் மோட்சம், மறுபிறப்பிலிருந்து விடுதலை. பூலோகக் கர்மங்கள் தீர்ந்தும், தர்மம் சிறப்பாக மேற்கொள்ளப்பட்டும், கடவுள் முழுமையாக அறியப்பட்டுவிட்டால் மோட்சம் கிட்டும். எல்லா அத்மாக்களும் ஒன்றுவிடாமல், மிக உயர்ந்த ஆன்மீக நிலைகளை அடையவே இந்த நிலை உள்ளது. ஆனால், இந்தப் பிறவியிலேயேதான் என்ற கட்டாயம் இல்லாமல், இந்துக்கள் இதனைப் புரிந்து, இதுதான் கடைசி வாழ்க்கை என்ற மயக்கமின்றி இருப்பர். ஆழமான அனுபூதிகளை நோக்கியும், அடைந்தும், வாழ்க்கையின் மற்ற மூன்று இலக்குகளை, தர்மம், செல்வம், இன்பம் ஆகியவற்றை நிறை செய்யத் தேவை இருப்பதை அறிவர்.

சில இந்துப் பாரம்பரியங்களில், மோட்சத்திற்குப் பிறகு ஆத்மாவின் முடிவு, சுவர்க்கத்தில் கடவுளுடன் அனாதியாகவும், பேரானந்தத்தைத் நுகருவதாகவும் கருதப்படுகிறது. கடவுளின் அருளால் கிடைக்கப்படும் ஒருவித விமோசனம் - பெரும்பாலான ஆபிரகாமிய மதங்கள் நம்புவது போலவே. ஏனைய இந்து பாரம்பரியங்களில், ஆத்மாவின் முடிவு, கடவுளுடன் பரிபூரண இணைப்பு, ஒன்றே உள்ள நிலை, என கொள்ளப்படுகிறது.

**உலகின் தன்மை**

- இந்துப் பார்வையில், நமது எதிர்காலம் உருவகப்படுத்தப்பட்டும், ஆசைகள் நிறைவேற்றப்பட்டும், ஆத்மா அடையப்படும் இடமாக உலகம் இருக்கின்றது. மாயை எனப்படும் இந்த உலகம் இல்லையேல், அனுபவத்தின் மூலமாக ஆத்மா வளர்ச்சி அடைய முடியாது. உலகில் இருந்து நாம் அறியாமையிலிருந்து ஞானத்திற்கும், இருளிலிருந்து ஒளிக்கும், சாவு உணர்விலிருந்து இறப்பிறப்பற்ற தன்மைக்கு வளர்கின்றோம். உலகம் யாவும் ஓர் ஆசிரமம், நாம் அனைவரும் அதில் ஆன்மீக வளர்ச்சி அடைகிறோம். கடவுளின் படைப்பாகிய இவ்வுலகத்திடம் நாம் அன்பு செலுத்தவேண்டும். உலகை நிந்தித்து, பயந்து, வெறுத்து இருப்பவர்கள் அனைத்தின் உள்ளார்ந்த நன்மையைப் புரிந்து கொள்ளவில்லை. உலகம் மகிமை பொருந்திய இடம், பயப்பட வேண்டியதில்லை. வேதங்கள் கூறுவது: **'கடவுளின் மகிமையினால் இப்பிரபஞ்சத்தையும், பூமியில் வாழ்வன, நகர்வன அனைத்தையும் பார். நிரந்திரமற்றதை விட்டு, அனாதியில் மகிழ்ச்சியைக் காண்!'.**

மூன்று உலகங்கள் உள்ளதாக இந்து மறை நூற்கள் கூறுகின்றன: பூலோகம், சூக்கும லோகம் மற்றும், காரண லோகம். பூலோகம் ஜடப் பொருள்களால் ஆன தளமாகும். இங்கே ஐந்து புலன்களைக் கொண்டே விஷயங்கள் அறியப்படுகின்றன. அதிக மாற்றங்களுக்கு ஆளாகி, ஆக நிரந்தரமற்ற, பெரிதும் அடங்கலுக்கு உட்பட்ட இடமாக பூலோகம் இருக்கின்றது. சூக்கும லோகம், எண்ண-உணர்ச்சி தளமாகும். நாம் இங்கே எண்ணங்களாலும், உணர்ச்சிகளாலும் ஈடுபடுகின்றோம். தூக்கத்திலும், இருப்பின் பிறகும் முழுமையாக இடம் கொள்கிறோம். சூக்கும லோகம் பூலோகத்தின் உள்ளே இருக்கின்றது. சூக்கும லோகத்தின் மிக ஆழத்தில், தோற்றத்தின் மூலமாக, காரண லோகம் துடித்துக்கொண்டிருக்கிறது. அதுவே மேன்மை உணர்வு உலகமாகி, தெய்வங்களும் பெரிதும் முதிர்ந்த ஆத்மாக்களும் வாழும் இடமாகிறது. இவ்விடத்தை யோகம் மற்றும், கோயில் வழிபாட்டு மூலம் அடையலாம்.

உலகத்தையும், அதில் இருக்கும் அனைத்தையும் கடவுள் படைத்தார் என இந்துக்கள் நம்புகின்றனர். பார்வைக்கு உட்பட்ட ஜட, பார்க்க முடியாத ஆன்மீக பிரபஞ்சம் ஆகியவற்றின் ஒவ்வோர் அணுவையும், ஒவ்வொரு வினாடியும், கடவுளே படைத்தும் காத்தும் வருகிறார். அனைத்தும் அவருள்ளே இருக்கின்றன. அவரே அனைத்துள்ளும் இருக்கின்றார். அவரே காலத்தையும், புவியீர்ப்பையும், பரந்து விரிந்த ஆகாயத்தையும், அளப்பரிய நட்சத்திரங்களையும் படைத்தார். படைப்பு என்பது பிறிதொரு பொருளை உருவாக்குவது அல்லாமல், தன்னிடமிருந்து வெளிப்படுத்துதல் ஆகும். அவர் படைக்கின்றார், தொடர்ந்தாற்போல் தனது படைப்புத் தோற்றங்களைக் காத்து, மீண்டும் அவற்றைத் தன்னிடமே இழுத்துக் கொள்கின்றார். படைத்தல், காத்தல், அழித்தல் யாவும் ஒரு முடிவில்லாத சுழற்சி என்கிறது இந்து சமயம். ஒவ்வொரு சுழற்சியின் படைப்பு மற்றும் காப்புப் பகுதி ஏறத்தாழ 309 திரில்லியன் ஆண்டுகள் நிலைத்து, ஈற்றில் மகா பிரளயம் ஏற்படும்; மகா பிரளயத்தின்போது, எல்லா தோற்றமும், காலம், இடம், தனி உணர்வு, அனைத்து உலகங்கள், அவற்றில் வாழ்வன - கடவுளுக்குள் உறிஞ்சப்படும். அனைத்தும் தன் மூலத்திடம் திரும்பும் காரியம், சில வேளைகளில் ஆற்று நீர் கடலுக்குத் திரும்புவது போல கொள்ளப்படுகிறது. அப்போது கடவுள் மட்டுமே நிலைத்திருப்பார் - அவர் மீண்டும் ஒரு படைப்பை வெளிப்படுத்தும் வரை!

### நடைமுறையில் இந்துச் சமயம்

இந்துச் சமயத்தை மூன்று தூண்கள் நிலைபெறச் செய்கின்றன: கோயில் வழிபாடு, மறைநூட்கள், குரு-சிஷ்ய வழக்கம். இவற்றை ஒட்டியே எல்லா ஆன்மீக பயிற்சிகளும் சுழல்கின்றன. வேண்டுதல், தியானம், வழிபாடு - கோயிலிலும், வீட்டிலும், மறை-நூற் கல்வி, மந்திர உச்சாடனம், புனித யாத்திரைகள், தவம், தன்னலமற்றச் சேவை, தாராளக் கொடை, நல்ல வாழ்க்கை, மற்றும், பல யோகங்கள். விழாக்களும், இறைவாழ்த்துப் பாடல்களும் ஊக்கமிக்க நடவடிக்கைகளாகும்.

இந்து வாழ்க்கையில் கோயில்கள் ஒரு மைய இடத்தை வகிக்கின்றன. சிறிய கிராமக் கோயிலோ அல்லது கூட கோபுர ஆலயங்களோ, அவை கடவுளின் புனித இல்லமாகக் கருதப்படுகின்றன. ஒரு கோயிலில், இந்துக்கள் கடவுளிடம் நெருங்கிச் சென்று, உலகத்திலிருந்து அடைக்கலம் தேடுகின்றனர். கடவுளின் அருள் எல்லா இடங்களிலும் ஊடுருவி நிற்பினும், இத்தகு புனித இடங்களில் மிகச் சுலபமாக உணரப்படுகின்றது. தூய்மையடைந்த இவ்வாறான சூழலில் மூன்று உலகங்களும் (பூலோகம், சூக்கும லோகம், காரண லோகம்) அதிகப் பூரணத்துடன் சந்திக்கின்றன. ஆகையால் பக்தர்கள் கடவுள், கடவுளர்கள் மற்றும், தேவதைகளுடன் சுமூகத்தை நிலை நிறுத்துகின்றனர். பாரம்பரியக் கோயில்கள் சிறப்பாகப் புனிதத் தன்மை ஊட்டப்பட்டு, ஆன்மீகச் சக்திக் கதிர்களைக் கொண்டு, தெய்வீக உலகங்களுடன் தொடர்பில் உள்ளன.

கோயில் சடங்குகள், இந்துப் பூசாரிகளால் செய்யப்படும்பொழுது, பூஜையாக, மணி அடித்தல், ஆரத்தி காட்டுதல், காணிக்கை செலுத்துதல், மந்திர உச்சரிப்பு மூலம் தேவதைகளையும், தெய்வங்களையும் அழைத்து, அத்தகு தெய்வங்கள் அங்கே வந்து பக்தர்களை ஆசீர்வதித்துத் துணை புரிகின்றன. பூஜையின் பொழுது, சுய வழிபாடானது ஒரு வேளை வாழ்வின் முக்கிய நிகழ்வுகளைக் கொண்டாட, மரியாதை செலுத்த, நன்றி கூற, பிராயச்சித்தம் செய்ய, குற்றத்தை ஒப்புக்கொள்ள, வேண்டுதல்களைப் பயபக்தியோடு முன் வைக்க, அல்லது மேனுணர்வு ஆழத்தினை உணர்வதற்காகவும் இருக்கலாம். கல் அல்லது உலோகத்திலான தெய்வ மூர்த்தங்கள் வெறும் அடையாளங்கள் அல்ல; அவை வெற்று சிலைகள் அல்ல; அம்மூர்த்தங்கள் மூலமாகத் தெய்வீக அன்பும், சக்தியும், ஆசீர்வாதமும், தேவலோகத்திலிருந்து பூலோகத்திற்குப் பெருக்கெடுத்து ஓடுகின்றன. பக்திமிக்க இந்துக்கள் இம்மூர்த்தங்களை அந்தந்தத் தெய்வத்தின் பூலோக உடலாகக் கொள்கின்றனர். அந்தத் தெய்வம் பூஜையின் பொழுது அங்கே வந்து, அம்மூர்த்தத்தில் அமர்கின்றது; பக்தர்களின் எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் தெரிந்து, அருள்பாளிக்கின்றது.



கோயிலில் குருக்கள் அல்லது பூசாரியின் பணி முக்கியமானது. ஒரு சில கோயில்களில் ஒருவருக்கு மேல் குருக்கள் இருப்பார்கள். அதிகத் துணை தெய்வப் பீடங்கள் இருக்கும் கோயில்களில் அதிகமான குருக்கள் இருப்பது வழக்கம். இந்துச் சமயத்தில் புனித மந்திரங்கள் ஆயிரக்கணக்கில் உள. அவற்றை நன்கு அறிந்துள்ள குருக்களை, குறிப்பாக அவர்கள் சிறுவயது முதல்

கோயில்களிலேயே வாழ்ந்து, முறையான பயிற்சி பெற்றவர்களானால், அவர்களைக் கடவுளின் மக்கள் என்று அழைப்பார்கள். கடவுளின் இந்த மக்கள் கண்டிப்பாக மதத்தின் மெய்ஞான அறிவும், மதத் தன்மைகளையும் முழுதுமாக உணர்ந்தும், சடங்கு வழிபாட்டில் தேவையான நூற்றுக்கணக்கான மந்திரங்களைப் பயின்றும் இருக்கவேண்டும். பொதுவாக இந்தப் பூசாரிகள் பக்தர்களின் பிரச்சினைகளில் தலையிடுவதில்லை. அவர்கள் கடவுளின் தொண்டனாக, கடவுளின் இல்லத்தைக் கவனித்துக் கொள்பவராகவே இருப்பார். உண்மையில், நடைமுறையில், கோயிலின் தரம் அங்குப் பணிபரியும் குருக்களின் தரத்தை ஒட்டியே இருக்கும், காரணம் அவரின் தேர்ச்சியும் அனுபவமும் அந்தக் கோயிலின் பக்தர்களுக்கான சேவையின் தரத்தை நிர்ணயிக்கும்.

பண்டைய காலங்களில் 'குருக்குலங்க'ளில் சேர்ந்து ஒன்பது வயதிலிருந்து, முப்பத்தாறு வயதுவரை பயிற்சிபெற்றவர்களே குருக்களாக இருப்பர். இத்தகைய குருக்குலங்கள் மலைப்பகுதிகளிலும், வனப்பகுதிகளிலும் மக்கள் அதிகம் வசிக்காத இடங்களில் அனுபவம் மிகுந்த இந்து ஆன்மீகவாதிகளால் ஏற்படுத்தப்பட்டிருக்கும். பயிற்சி பெற விழைவோர், குருவிற்கு முழு விசுவாசம் காட்டி, பணிவிடை செய்து குருவின் நம்பிக்கையைப் பெற்றப் பிறகே, இந்து சமயக் கூறுகளை குரு போதிப்பார். சிஷ்யர் குருவுடனேயே முழு கட்டொழுங்குடன் தங்கிப் பயிற்சியைப் பெறவேண்டும். இத்தகைய முறை மிக கடினமானது என தற்பொழுது எண்ணப்படுவதால், இத்தகைய முறை நடைமுறையில் இல்லை. இன்று பல சுவாமிஜிக்களின் ஆசிரமங்களிலும், இந்து ஆன்மீகத் தலைவர்களின் முயற்சியாலும் இந்துச் சமயப் பயிற்சி இந்திய நாட்டில் ஆங்காங்கே தரப்படுகின்றன. எனினும், பயிற்சியின் தரம், காலம், விதிகள் மாறுப்பட்ட நிலையில் இருப்பதால், அவற்றை ஒப்பிட இயலாது. இந்திய நாட்டுப் பள்ளிக்கூடங்களில் இந்துச் சமயம் போதிக்கப்படுவதில்லை. காரணம், இந்தியா ஒரு சமய-சார்பற்ற நாடு என்பதால், எந்தச் சமயத்திற்கும் முன்னுரிமை கொடுக்காமல் இந்தியாவின் கொள்கை உள்ளது. தனியார் நடத்தும் பயிற்சிகளை ஒருங்கிணைத்து, தரம் பிரிக்கும் அதிகாரம் இல்லாத நிலையில், இந்தச் சமயப் பயிற்சிகள் இருக்கின்றன. தற்பொழுது மலேசியாவில் பணிபுரியும் 'தேர்ச்சிப் பெற்ற' குருக்களும் இத்தகைய தனியார் மையங்களில் பலவித வேறுபட்ட பயிற்சிகளைப் பெற்றவர்கள்தான்.

இந்துச் சமய அறிவில் மேல் நிலை என்பதை அடைய பல கூறுகளையும் இந்து வேதங்களையும், ஆகமங்களையும் தீர பயின்று, அவற்றை உணரும் பக்குவத்தை அடைந்திருக்க வேண்டும். மற்றவர்கள் கீழ் நிலையில் மட்டுமே பயிற்சிப் பெற்றிருக்கலாம். அடிப்படை சடங்குகளைச் செய்யவும், மந்திரங்களை ஓதவும் இவர்களால் இயலும். உயரிய நிலையில் சித்தாந்தங்களை உணர்ந்து சேவையாற்ற இவர்களால் இயலாது என்பதையும் உணரவேண்டும். எனினும், கோயிலில் குருக்களின் பங்கு மிக முக்கியமானது என்பதை வலியுறுத்தியே ஆகவேண்டும். காரணம், கோயிலுக்கு வரும் பக்தர்களுக்கும், கோயில் வட்டாரத்தில் வாழும் இந்துக்களுக்கும் அங்கு பணிபுரியும் குருக்களின் தரமான ஆன்மீக வழிகாட்டல் மிக அவசியம்.

ஆன்மீகம், வாழ்க்கையின் நடு நாயகமாதலால், ஒரு கோயிலின் அருகே வசிப்பதை இந்துக்கள் முக்கியமாகக் கருதுவார்கள். இங்குதான், தெய்வத்தின் இல்லத்தில், ஒரு பக்தன் தெய்வீகத்துடன் தனது உறவை வளர்த்துக் கொள்கின்றான். குறைந்தது வாரத்திற்கு ஒரு முறையாகிலும் கோயிலுக்குச் செல்லும் பழக்கமும், சமய விழாக்களில் கலந்துகொண்டு வழிபடுவதும் இந்துக்களின் பழக்கம். அனைத்துலக அளவில், பாரம்பரிய இந்து ஆலயங்களுக்கும், ஸ்தலங்களுக்கும் வாய்ப்பு கிடைக்கும்பொழுது செல்வதும் இந்துக்களின் வாடிக்கை.

ஓர் இந்துவிற்கு வாழ்வினில் வலியுறுத்தப்படுவது யாதெனில், ஆன்மீக வளர்ச்சி, ஏனைய குடும்ப மற்றும், தொழில் ரீதி கடமைகளையும், குறிக்கோள்களையும் அடைந்தவாறே, வாழ்க்கை விலை உயர்ந்த ஒன்று என்பதை மனதில் வைத்து, முன்னேற்றதிற்குத் தேவையான பறந்து போகின்ற வாய்ப்புக்களைக் கொண்டு, உள்ளார்ந்த மாற்றங்களை உண்டாக்கி, தனது சமய நம்பிக்கை வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் பயன் படுகிறது என்பதை உணர்ந்து, எப்பொழுதும் இந்த உண்மையில் நன்றாக திளைத்தவாறே பயணிப்பதே சிறப்பாகும்.

தற்பொழுது ஆயிரக்கணக்கான சாதுக்களும், யோகிகளும், சுவாமிகளும் வைராகிகளும் சற்குருமார்களும் தங்கள் வாழ்க்கையை முழு நேரமாகச் சேவை, பக்தி, மற்றும், கடவுளை அறிவதற்காக அர்ப்பணித்துக் கொண்டு சமயத்தின் புனித உண்மைகளைப் பறை சாற்றிக் கொண்டுள்ளனர். நம்பிக்கையூட்டிகளாகவும், விளக்கமளிப்பவர்களாகவும், நெருங்கிய வழிகாட்டியாக, தாமே கடவுளை அறிந்த நிலையில், ஏனையவர்களைக் கடவுள் உணர்விற்கு கொண்டுவர விழைகின்றனர். ஒரே சமயத்தின் வெவ்வேறு வெளிப்பாடாகவே இவற்றை இந்து சமயம் கருதுகிறது. உண்மையில், இந்துச் சமயத்திற்கு இத்தகைய குருமார்களின் வழி, புத்தாக்கம் தொடர்ந்து கிடைத்து, இந்த சமயத்திற்கு எழுச்சியையும், புத்துணர்ச்சியையும் கொடுத்து வருகிறது என்றும் சொல்லலாம்.

### ஓர் இந்துவின் பண்புகள்

தர்மத்தைப் பின்பற்றி, கோட்பாடுமிக்க, ஆக்கும் திறன் வாய்ந்த வாழ்க்கை வாழ ஆழமான வழியை இந்து சமயம் காட்டுகிறது. பின்பற்றுபவர்களிடையே விதைக்கப்படும் நற்பண்புகள் - உண்மையாய் இருப்பது, விசுவாசம், மனநிறைவு, பேராசை - காமவெறி - கோபம் போன்ற தவிர்ப்புகள். தர்மத்தின் ஆதாரம் அகிம்சை, எல்லா உயிர்களுக்கும் தீங்கு செய்யாமை, நம் சுற்றுச் சூழலுடன் சுமூகமாக இருப்பது, மக்களிடையே அமைதியை நிலைக்க வைப்பது, நம்முள் கருணை வளர்வது போன்றவை ஊட்டப்படுகின்றன. இத்தகைய தர்ம - அகிம்சை உணர்வால், இந்துக்கள் பெரும்பாலும் சைவ உணவை விரும்பி உண்பதைப் பார்க்கலாம். தங்களைச் சுற்றியுள்ள சூழலையும் உயிரினங்களையும் கடவுளின் படைப்பாகக் கருதி பாதுகாக்கும் அன்பர்களாகவே இந்துக்கள் இருப்பர். ஆணவத்தை அடக்கி மென்மையாக்கி, தன்னலமற்ற சேவை செய்து, தானம், மனிதாபிமான காரியங்கள் பலவற்றின் மூலமாகத் தெய்வீகத்தை இந்துக்கள் அடைவர். முக்கியமாக அடுத்தவருக்கு, குறிப்பாக வறியோருக்கு, அன்னமிடுதலும் இதில் அடங்கும்.

இந்துக்கள் திலகம் இடுவதை ஒரு வழக்கமாகக் கொண்டுள்ளனர். பெண்கள் தங்கள் நெற்றியில் திலகம் இடுவதையும், ஆண்கள் விபூதி பூசுவதையும் பாரம்பரியமாகக் கொண்டுள்ளனர். இறந்த உடலைப் புதைப்பதைவிட இந்துக்கள் விரும்புவது சுட்டு எரிப்பது. இதனால், ஆத்மா அவ்வுடல் கட்டிலிருந்து மிக சீக்கிரத்தில் விடுபட்டு, தனது பரிணாம வளர்ச்சியைத் தொடர அனுமதிக்கப்படுகின்றது.

### புத்தாக்கச் சிந்தனை

இந்து சமயத்தில் மிகவும் புத்தெழுச்சியூட்டும் பாங்கு என்னவெனில், அதன் திறந்த சிந்தனை மற்றும், சுதந்திர போக்கை ஊக்குவிப்பதும் ஆகும். மறைநூட்களில் கூறப்பட்டவை குறித்தும் தெய்வீக அனுபவம் பெற்ற குருமார்களைப் பின் பற்றுபவர்கள், உண்மையைப்பற்றி கேள்விகளைக் கேட்கவும் ஆராயவும் ஊக்குவிக்கின்றனர். வழிபாட்டு, தியான மார்க்கங்களை ஆழ்ந்து, ஆய்ந்து, நேரிடையாகவே தெய்வீகத்தை அனுபவிக்க ஊக்குவிக்கப்படுகின்றனர். இந்தத் திறந்த மனப்பாங்கு, ஏனைய கலாச்சாரம், மதம், பார்வை கோணங்கள் ஆகியவற்றுடன் இந்துச் சமயம் கொண்டுள்ள சமரசத்தின் ஆணிவேராகும். வாசகமாகக் காட்டப்படும் 'ஏகம் சத் விப்ரா பகுத வடந்தி' அதன் பொருள்: உண்மை ஒன்றே, ஞானிகள் அதை வெவ்வேறு வகையில் விளக்குவர்'. ஓர் இந்து தன் பாதையைச் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்கவும், தெய்வீகத்தை அணுகும் முறையை நிர்ணயிக்கவும் தனது வாழ்நாளில் தேவைக்கேற்ப மாற்றங்களைச் செய்யவும் அனுமதிக்கப்பட்டுள்ளது. மத எதிர்ப்புக் கொள்கை என்றோ, கொள்கை மீறுதல் என்ற ஒன்றோ இந்து மதத்தில் இல்லை. இந்து மதத்தின் இயற்கையான உள்ளடக்கும் தன்மையோடு சேர்ந்து, வெறித்தனம், அடிப்படை வாதம் அல்லது குறுகிய மனப்பான்மை ஆகியவை இந்துச் சமயத்தில் இல்லை. அதேபோல, ஒருவரை இந்து சமயத்தில் சேர்ப்பதற்கு எத்தகைய சடங்கும் இல்லை. ஒருவர் ஓர் இந்துவாக வாழ முடிவெடுத்து, இந்துவாக அவரே வாழ வேண்டும். எனவே, இந்துச் சமயம் ஒரு பரந்த வெளி எனக் கூறப்படுவது சரியே.

இந்துச் சமயம் வருவதற்கு முன் சமுதாயத்தில் இருந்த வழிபாட்டு மையங்கள் தேவர்களையும் தேவியர்களையும் முன்வைத்து இருந்ததால், அவற்றை இந்துச் சமயம் அப்படியே ஏற்றுக்கொண்டுள்ளதையும் பார்க்கின்றோம். அந்தத் தேவர்களையும் தேவியர்களையும் இந்துச் சமயக் கடவுளாக, ஒரே இறைவனின் மாற்று உருவமாக ஏற்றுக்கொண்டதால் கிராமங்களில் வழக்கிலிருந்த வழிபாட்டு மையங்கள் தொடர்ந்து இந்து கோயில்களாகச் செயல்படத் தொடங்கின. இன்றுவரை அவை குலத்தெய்வங்களாகப் பல இந்துகளுக்கு இருந்து வருகின்றன. இவற்றில் சில உயிர்ப்பலி கொடுக்கும் மையங்களாக இருந்து, இன்றுவரை நீடிக்கின்றன. இத்தகைய இடங்களிலிருந்து குடிபெயர்ந்தவர்கள், அத்தகைய மரபைத் தங்களின் புதிய இடங்களிலும் கடைப்பிடிப்பதைக் காணலாம். இந்த ஆய்வில், மலாக்காவிலும் இத்தகைய கோயில்கள் இருப்பதைக் காண்கிறோம். அதேபோல் கோயில்களில் 'சாமியாடுதல்' மூலம் அருள்வாக்கு கொடுப்பது போன்ற வழக்குகளும் தமிழர்களின் பழைய வழக்கமாகவே தொடர்கிறது. இந்துச் சமயத்தின் சுதந்திரத்தை இவை காட்டுகின்றன என்றாலும் இவை இந்துச் சமயத்தின் அடிப்படை தத்துவங்களுக்கு அப்பாலேயே நிற்கின்றன என்று சொல்லலாம்.

ஒருவர் இந்துவாகப் பிறந்து, அல்லது இந்துச் சமயக் கோட்பாடுகளைத் தேர்ந்தெடுத்து இந்து தர்மத்தின் அடிப்படையில் வாழ்வதின் வழியே இந்துவாக முடியும். இதனால்,தான் இந்துக்கள் மற்ற சமயங்களை மதித்து பல சமயச் சமுதாயங்களில் சுமூகமாக வாழமுடிகிறது.

முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவராகவும் (1962-67), பிரபல தத்துவவாதியுமான டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், தனது **'இந்துவின் பார்வையில் வாழ்க்கை'** எனும் நூலின் சுருங்கச் சொல்வதாவது: **'இந்து அங்கீகரிப்பது ஒரே உச்சப் பொருள், ஆன்மா, பல்வேறு பெயர்கள் அதற்குக் கொடுக்கப்பட்டாலும். கடவுள் உலகத்தில் இருக்கின்றார். உலகமாக இல்லாவிட்டாலும், வெறும் இடைச் செயலாக உயிரை அல்லது உணர்வைப் படைப்பது என்றில்லாமல், சதா கணமும் தொழில் புரிகின்றார். இயற்கை மற்றும், இயற்கை கடந்த எனும் இருமை கிடையாது. தீங்கு, தவறுகள், அவலட்சணம், ஆகியன உச்சம் அல்ல. எந்த ஒரு கருத்தும் முழுத் தவறு ஆகாது. எந்த மனிதனும் தீர்க்கமாக தீயவனாகி கடுமையாகக் கண்டிக்கத் தக்கவனல்ல. நரகம் ஒன்று இல்லை, அப்படி இருந்தால் கடவுள் இல்லாத ஓரிடம் இருப்பதாகப் பொருளாகும். கடவுளின் அன்பை மீறியவை பாவமாகும். கர்மவினை சட்டம் சொல்வதாவது, தனிமனித வாழ்க்கை ஒரே தவணையல்லாமல், தொடர் நிகழ்ச்சி. ஒரே தொடர்ந்த நகர்வில் சொர்க்கமும், நரகமும் உயர்ந்த அல்லது தாழ்ந்த தளங்களாகும். ஒவ்வொரு வகையும் தனக்கென ஒரு தன்மையைப் பின்பற்ற வேண்டியது உண்டு. நாம் இருப்பதாகக் கூறப்படும் வாழ்க்கை நிலையில் நம் பொறுப்பை ஆற்றவேண்டும். இந்து மதம் உறுதியுடன் சொல்வதாவது, மத அனுபவங்களால் தெய்வ வெளியீடு நிச்சயம் வேறுபடும், அனைத்து நம்பிக்கை வகைகளும் ஏற்றுக்கொள்ளப்படும்; ஒரே குறியை நோக்கி ஒவ்வொருவனும் தன் பாதையில் வழிகாட்டப்படுகின்றான். இவையே இந்து மதத்தின் சில மைய கோட்பாடுகள், அவற்றால்தான் இன்றும் இந்து மதம் வாழ்ந்து கொண்டிருக்கின்றது.'**

### இந்துச் சமயத்தில் 'வர்ணம்'

இந்துச் சமயத்தில் 'வர்ணம்' அல்லது 'ஜாதி' சம்பந்தமாக அதிக தவறான கருத்துகள் வெளியாகி மக்களைக் குழப்பி வருகின்றன. இந்துச் சமய வரலாற்று ஆசிரியர்கள் மத்தியில்கூட இது குறித்த ஒத்த கருத்து இல்லை. பிராமணர்கள், சத்திரியர்கள், வைஷ்ணர்கள், சூத்திரர்கள் எனும் பிரிவுகள், செய்யும் வேலை அடிப்படையில் ஆரியர்கள் மத்தியில் ஏற்படுத்தப்பட்டதாகவே அனைவரும் கூறுகின்றனர். இந்திய மண்ணில் ஆட்சிபுரிந்த அரசர்களை இணைத்துக்கொண்டு ஆரியர்கள் தொழில் ரீதியான பிரிவினைகளை சமூக அமைப்பாக ஏற்படுத்தியதாக பல வரலாற்றாசிரியர்களும் ஒப்புக்கொள்கின்றனர். இந்துச் சமயம் ஆரியர்களின் வழியே இந்திய பூமிக்குப் பரவியதாகக் கருதப்படுகிறது. இந்தப் பிரிவில், படித்தவர்கள்/விவரம் அறிந்தோர், பதவியுடன் அதிகாரம் செலுத்துவோர், உயரிய இடத்தில் வைக்கப் பட்டுள்ளதைக் காணலாம்.

இந்த அமைப்பில் ஆரியவழி வந்த பிராமணர்கள் சமயத் தலைவர்களாக, அனைவருக்கும் வழிகாட்டும் நிலையில் இருந்ததால் மிக உயரிய நிலையில் வைக்கப்பட்டனர். சத்திரியர்கள் அரசாளும் நிலையிலும், போர் புரியும் நிலையிலும் காணப்பட்டனர். வைஷ்ணர்கள் வணிகர், முதலாளி, நில உரிமையாளர் போன்ற பணிகளைச் செய்பவர்களாகவும், சூத்திரர்கள் உடலுழைப்பை நம்பி மற்றவர்களுக்குக் கீழ் பணிபுரிபவர்களாகவும் பிரித்துப் பார்க்கப்பட்டனர். காலப் போக்கில் ஐந்தாவது பிரிவாக தலித் எனும் தாழ்த்தப்பட்டோர் பிரிவு இந்தியாவில் தோன்றி, மிகக் கீழ்நிலையில் 'அசுத்தமான' வேலைகளைச் செய்வோரையும், சொந்த வீடுகள் இன்றி அங்கும் இங்கும் குடிபெயர்ந்து வாழ்பவர்களையும் உள்ளடக்கியுள்ளது.

இந்தச் செய்யும் தொழிலை வைத்து ஏற்படுத்தப்பட்ட பிரிவுகளை வைத்து, அதிகாரத்தில் உள்ளவர்கள் மக்களைப் 'பிரித்து ஆள' தொடக்கத்திலிருந்தே வழி வகுத்துள்ளது தெளிவு. வெவ்வேறு தொழிலைப் புரிபவர்கள் வெவ்வேறு பகுதிகளில் வசித்து வந்ததால், அவர்களை இலகுவாக நிர்வகிக்க முடிந்தது. இப்படி தனித்தனி இடங்களில் வசித்ததால், நாளடைவில் ஒவ்வொரு சாரார் மத்தியிலும், வாழ்க்கை முறைகளும், நம்பிக்கைகளும் தனித்தன்மையைக் கண்டு ஒரு வேறுபாட்டைக் காட்டத் தொடங்கியது. குறிப்பாக அரசாள்பவர்கள், அவர்களின் கீழ் வசிக்கும் மக்களின் தொழிலையும் பொருளாதார நிலையையும், அவர்கள் வாழும் இடத்தையும் நிர்ணயிக்கக் கூடிய அதிகாரம் படைத்திருந்தனர். இதனால், இந்தத் தொழில் பிரிவு ஒருவித ஏற்றத்தாழ்வைக் கொண்டுவந்தது என்று சொல்லலாம். ஒவ்வொரு கிராமத்திலும் இத்தகைய அமைப்பை அமுல்படுத்தப்பட்டதால், எல்லா இடங்களிலும் இத்தகைய சமூக அமைப்பு வேரூன்றியது. ஒவ்வொரு பிரிவிற்கும், உப பிரிவிற்கும் பெயர் உருவானது.

பெரிய பிரிவுகளுக்குள் தோன்றிய உப பிரிவுகள் இடத்திற்கு இடம் மாறுபட வாய்ப்பு ஏற்பட்டது. பொதுவாக, ஒவ்வொரு பிரிவிலும் நூற்றுக் கணக்கான தொழில்கள் இருந்ததால் உப பிரிவுகளும், புதிய ஜாதிப் பெயர்களும் உருவாகத் தொடங்கின. ஆரியர்கள் கொண்டுவந்த சமூக அமைப்பின் தாக்கம் இந்திய துணை கண்டத்தின் கிராமங்களில் வேர் கொண்டது. சிற்றூர், கிராம வாழ்க்கையில் இது ஏற்றுக்கொள்ளப் பட்டது.

ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆட்சி செய்ய வந்தபோது, அவர்கள், இந்தச் சமூக அமைப்பைத் தங்களின் நிர்வாகத்திற்குப் பயன்படுத்தத் தொடங்கினர். இந்தியா குறித்த ஆங்கிலேய வரலாற்றாசிரியர்களின் கருத்துகள் அனைத்தும் இந்த 'வர்ணம்' அல்லது 'ஜாதி' குறித்த அவர்களுடைய எண்ணங்களைத் தெளிவாகக் காட்டுகின்றன. ஒரு பக்கம் இந்துப் பிரிவுகளைச் சாடி, அது மனித சம உரிமைக்கு அப்பாற் பட்டது என எழுதினாலும், மறுபக்கம், இந்தப் பிரிவுகளைப் பயன்படுத்தி, மக்களைப் பிரிக்கவும், தங்கள் தேவைகளுக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் செய்தனர். கிராமங்களில் இருந்த சமூக அமைப்பு மாறவில்லை. காரணம் காலம்-காலமாக அப்படியே வாழ்ந்து விட்டார்கள்.

பல இந்துக்களுக்கு, பல சந்ததியினருக்கு முன்பிருந்தே அவர்கள் இந்த ஜாதி அமைப்பில் வாழ்ந்து பழகிப் போயிருந்ததால், அதை ஏற்றுக்கொள்ளும் எண்ணம் வேரூன்றிவிட்டது. பிரித்தாளும் கொள்கை, இந்த ஜாதி சமூக அமைப்பின் மூலம் அந்தக் கால அரசர்களால் அறிமுகப்படுத்தப்பட்டு, பின்னர் காலனித்துவ காலத்திலும் தொடர்ந்து வலுப்படுத்தப்பட்டது. அதிகார வர்க்கத்திற்கு இந்த ஜாதி சமூக அமைப்பு துணை புரிந்தது.

மலாயாவிற்கு வேலை செய்வதற்காகக் கொண்டுவரப்பட்ட தொழிலாளர்கள், தென்னிந்தியக் கிராமங்களிலிருந்து திரட்டப்பட்டவர்கள். அவர்களின் எண்ணிக்கை பெரிதாக இருந்ததால், அவரவர் கிராமங்களில் அவர்களின் குடும்பங்கள் மத்தியில் புழக்கத்தில் இருந்த நம்பிக்கைகள், வாழ்க்கை முறைகள், ஜாதிப் பெயர்கள் அனைத்தையும் கூடவே கொண்டுவந்துள்ளனர். மலாக்கா செட்டி கிராமம் உட்பட, மலாக்கா தோட்டங்களில் நிறுவப்பட்ட பெரும்பாலான கோயில்கள், தமிழ் நாட்டில் அவரவர் கிராமங்களில் அமைந்திருந்த குலத் தெய்வக் கோயில்களின் பிரதிபலிப்பாகவே இருப்பதைக் காணலாம். கல்வி அறிவுடனும், வணிக, தொழில் துறைகளில் காலூன்றியவர்கள், குலத் தெய்வங்களை விட்டு, முறையான இந்துச் சமயக் கோயில்களை மலாக்காவிலும் நிறுவியுள்ளனர்.

வர்ணம் அல்லது ஜாதியின் தாக்கம் தமிழ் நாட்டுக் கிராமங்களிலிருந்து இந்த நாட்டிற்கு வந்தவர்கள் மத்தியில் அதிகமாகக் காணப்படுகிறது. பெரிய எண்ணிகையில் குடிபெயர்ந்து வந்து ஏறக்குறைய அக்கம்-பக்கத்தில் வாழ முடிந்துள்ளதால், ஜாதி அடிப்படையில் ஒற்றுமையைப் பேணி பாதுகாக்க முடிந்துள்ளது. இடைப்பட்ட காலங்களில் ஓரளவு ஜாதியின் தாக்கம் சற்று குறைந்து காணப்பட்டிருந்தாலும், சமீப காலமாக அது மீண்டும் தலை தூக்கும் நிலை வருவதுபோல் தெரிகிறது.

மலேசியாவில் ஜாதி அடிப்படையிலான பல அமைப்புகள் மலேசிய நாட்டின் சங்கங்களின் பதிவதிகாரியால் அங்கீகரிக்கப்பட்டு செயல்பட்டு வருகின்றன. இந்த அமைப்புகளின் வழி, குறிப்பிட்ட ஜாதியினர் ஒன்று கூடவும், கலந்துரையாடவும், தமிழ் நாட்டிலிருந்து அவரவர் ஜாதிப் பெரியார்களை அழைத்துப் பேச வைக்கவும், அங்குள்ள ஜாதி அமைப்புகளுடன் இணைந்து செயலாற்றவும் முடிகிறது. இந்த நாட்டில் தமிழர்கள்/இந்தியர்கள் மத்தியில் ஒற்றுமை ஏற்படாதிருப்பதற்கு இத்தகைய ஜாதி உணர்வும் முக்கியக் காரணம் என்றால் மிகையில்லை.

இந்தியாவிலிருந்து மேலை நாடுகளுக்குப் புலம்பெயர்ந்துள்ள இந்துக்கள் மத்தியில் இத்தகைய நிலை மிகக் குறைவு. அவர்கள், பெற்றக் கல்வியின் அடிப்படையில் வெளிநாடு சென்றவர்கள். தங்கள் பொருளாதார நிலையை வலுப்படுத்திக்கொண்டு, அங்குள்ள மற்ற இந்துக்களுடன் இணைந்து - ஜாதியை மறந்து - வாழ விழைகின்றனர். அவர்கள் கட்டும் இந்துக்கோயில்கள் இந்துச் சமயத்தின் உண்மை பிரதிபலிப்பாகவே காணப்படுகிறது.

இந்துச் சமயத்தில் 'தர்மம்' 'மறுபிறவி' எனும் கோட்பாடுகளை நன்கு உணர்ந்தவர்கள், ஆள்வோர் நிர்வாகம் செய்யவேண்டும் என்பதற்காக ஏற்படுத்தப்பட்ட செயற்கை பிரிவுகளினால் ஏற்பட்டுள்ள வர்ணம் அல்லது ஜாதி பிரிவினைகள், அடிப்படை இந்து சமயக் கோட்பாடுகளில் இல்லை என்பதை அறிவர். எனினும், நூற்றுக்கணக்கான ஆண்டுகள், இத்தகைய சுயநலமிக்க அரசுகளால் அமுல்படுத்தப்பட்ட சமூக அமைப்பில் வாழ்ந்து வந்ததால் பல இந்துக்கள் இந்த வட்டங்களிலிருந்து இன்றும் விடுபட இயலவில்லை. இதனால், தற்பொழுது இந்தியாவில் 3,000 ஜாதிப் பெயர்கள் இருப்பதாகவும், அவற்றின் உப பிரிவுகளாக 25,000 ஜாதிகள் இருப்பதாகவும் அந்த நாட்டின் புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

நவீன மயமும், கல்வி வளர்ச்சியும் செய்யும் தொழிலை மாற்றிக்கொள்ளும் தகுதியை ஒவ்வொருவருக்கும் கொடுத்துள்ளது. பாரம்பரியத் தொழிலைவிட்டு இளையோர் மற்ற வேலைகளில் ஈடுபட இயலும் காலம் இது. ஆள்வோர், செய்யும் தொழிலை வைத்து முன்புபோல் பிரித்தாள முடியாது என நினைக்கத் தோன்றினாலும், இந்தியாவில், ஜாதியை வைத்து அரசியல் கட்சிகள் ஆதரவு தேடுவதை பார்க்கிறோம். இந்திய அரசு 'தலித்' எனும் பிரிவை ஏற்படுத்தி, அத்தகைய தாழ்த்தப்பட்டோருக்கு சிறப்புச் சலுகைகளை அமுல்படுத்தி ஜாதி

அமைப்பிற்கு அனுமதி கொடுக்கும் பாணியில் நடந்துவருகிறது. பொருளாதார நிலையில் தாழ்ந்த நிலையில் உள்ளோருக்காக திட்டங்களை ஜாதி பெயரைச் சொல்லாமல் செய்திருக்க முடிந்தும், ஜாதியை இணைத்து இதை அரசே செய்வது ஜாதி அமைப்பை வலுப்படுத்தி, அதன்வழி 'பிரித்தாளும்' அரசியல் தந்திரத்தை நாம் காணலாம்.

'சமயச் சார்பின்மை' எனும் கோட்பாட்டிற்கிணங்க, இந்தியாவின் பள்ளிக்கூடங்களில் இந்துச் சமயம் போதிக்கப்படுவதில்லை - காரணம், அதிகாரப்பூர்வமாக எந்தச் சமயத்திற்கும் முக்கியத்துவம் கொடுத்து அரசு நடந்துகொள்ளக்கூடாது என்பதைக் கடைப்பிடிக்கின்றர்கள். இந்தோனேசியாவில் பாலி மாநிலத்தில், இந்துச் சமயம் பள்ளிக்கூடங்களில் போதிக்கப்படுகிறது! அதுவும் 'சமயச் சார்பற்ற' நாடுதான்! இப்படி முறையான இந்து சமயத்தைப் போதிக்க இந்திய அரசே முன் நிற்காத நிலையில், இந்துச் சமய வளர்ச்சி பலதரப் பட்டவர்களிடம், சுதந்திர நிலையில் விடப்பட்டு, 'தடி எடுத்தவரெல்லாம் தண்டல்' எனும் நிலை உருவாகி இந்துப் பக்தர்களைக் குழப்பத்தில் தள்ளியுள்ளது எனலாம்.

இந்த நிலையில், நம் நாட்டில் குடும்பங்களில் திருமணப் பேச்சு எழுந்தால், ஜாதி சம்பந்தமான எண்ணங்கள் தலைதூக்குவதை நாம் மறுப்பதிற்கில்லை. குறிப்பாகப் பெற்றோர்களும், சுற்றத்தார்களும் முடிவெடுக்கும் திருமணங்களில் இது முதன்மை பெறுவதைக் காணலாம். முன்பு குறிப்பிட்டதுபோல், ஜாதி சங்கங்கள் மாநிலங்களுக்கு அப்பால் பெண் அல்லது மாப்பிள்ளை தேடுவதைச் சுலபமாக்கியுள்ளன. குறிப்பாக, 'உயர்வாகக் கருதப்படும்' ஜாதியைச் சேர்ந்த ஒருவர் 'தாழ்வாகக் கருதப்படும்' ஜாதியைச் சேர்ந்த ஒருவருடன் இணைப்பதை ஒரு பெரிய குறையாக எண்ணுபவர்கள் இன்றும் அதிகம் இருக்கின்றனர். மற்ற விஷயங்களில் ஒத்துப் போனாலும் இரத்த உறவு விஷயத்தில் மிகக் கவனமாக ஜாதி கோட்பாட்டை சிலர் பின்பற்றுவதைக் காணலாம். நம் திரைப்படங்களில் 'ஜாதி' கரு அதிகமாகச் சித்தரிக்கப் படுவதைக் காணலாம். எனினும், மாற்றம் அதிகம் இருப்பதாகத் தெரியவில்லை.

இந்த நாட்டில் வாழும் பல இந்து குடும்பங்களுக்கு, தமிழ் நாட்டிலுள்ள உற்றார் உறவினர்களுடன் நெருங்கிய உறவு இன்றும் உள்ள வேளையில், திரைப்படங்களிலும், சின்னத்திரை நாடகங்களிலும் தமிழ் நாட்டிலுள்ள பழக்க வழக்கங்களையும், கோயில் சடங்குகளையும், குலத் தெய்வ வழிபாட்டையும் பார்த்து அவற்றின்பால் ஈர்ப்பு ஏற்பட்டு, அப்படியே இங்கும் செய்யவேண்டும் எனும் எண்ணம் மேலோங்கி வருவதையும் காண்கிறோம். இந்துச் சமயக் கல்வியை ஒவ்வோர் இந்துவும் பெற முடியாத நிலையில் இத்தகைய ஈர்ப்புகள் வழி தடுமாற்றம் காண்பது வியப்பில்லை.

இந்துச் சமயத்திற்குத் தாய் நாடான இந்தியாவில் இந்துச் சமயத்தை ஒருங்கிணைக்கும் பணி நடைபெறாத, அதீத சுதந்திர நிலையில், அந்த நிலையைப் பின்பற்றவே இங்குள்ள இந்துப் பக்தர்களும், கோயில் நிர்வாகிகளும் விரும்புகிறார்கள். இங்கு எத்தகைய மாற்றங்களையும் அவர்கள் எதிர்ப்பதற்கு இந்திய நாட்டின் நிலையே காரணம். இதனால்தான், 'அகிம்சை'யை வலியுறுத்தும் இந்து சமயத்தின் பெயரைச் சொல்லி, இன்றும் கோழியையும் கடாவையும் பலி கொடுக்கும் பழக்கம் தொடர்கிறது. 'கர்மம்' 'மறுபிறவி' 'ஆத்மா' போன்ற கோட்பாடுகள் இந்துச் சமயத்தில் இருந்தும், 'சாமியாடி' 'அருள்வாக்கு' கொடுக்கும் பழக்கமும் தொடர்கிறது. இந்து சங்கமும், மற்றவர்களும் அறிவுரை கூறியும் பயனில்லை!

**இந்துச் சமயத்தின் ஒன்பது அடிப்படை நம்பிக்கைகள்**

**1. வேதங்கள்**

ஆகமங்களின் புனிதம் அருளப்பட்ட, உலகிலேயே மிகத் தொன்மையான வேதங்கள், ஆகமங்களின், தெய்வீகத் தன்மை. இவற்றில் வரும் புனிதப் பாடல்கள் இறைவனால் அருளப்பட்டவை; தொடக்கமும் முடிவும் இல்லா சனாதன தர்மத்திற்கு இவை அடிப்படை.

**2. அனைத்திலுமுள்ள தெய்வீகத் தன்மை**

இந்துக்கள், ஒரே, அனைத்திலும் எங்கும் வீற்றிருக்கும், வரையறையற்ற வல்லமை படைத்தவரும், படைப்பாற்றல் மிக்கவரும், மெய்மையை உருவாக்குபவருமான, இறைவனை நம்புகின்றனர்.

**3. மூவுலகமும் படைப்பின் சுழற்சியும்**

இந்துக்கள் ஜடா உலகம், சூக்கும உலகம், காரண-காரிய உலகம் ஆகியவற்றையும், இந்தப் பிரபஞ்சம் படைத்தல்-காத்தல்-அழித்தல் எனும் தொடர் சுழற்சியில் இருப்பதையும் நம்புகின்றனர்.

**4. கர்ம - தர்ம விதிகள்**

இந்துக்கள் ஒருவரின் கர்ம வினையின் காரண-காரியங்களால் - அவரின் எண்ணங்களால், வார்த்தைகளால், செயல்களால் - அவரின் வாழ்க்கை அமைவதையும், தர்மத்தின் வழி நல்வாழ்வு பெறுவதையும் நம்புகின்றனர்.

**5. மறுபிறப்பும் விடுதலையும்**

இந்துக்கள் மறுபிறப்பில் நம்பிக்கை வைத்துள்ளனர். அவர்களின் ஆத்மா பல பூத உடல்களின் வழி பிறப்புகளையும், இறப்புகளையும் கடந்து, எல்லா கர்மங்களையும் கடந்து, மோட்சத்தை அடையும்பொழுது - தெய்வீக அறிவுடன் மறுபிறப்பிலிருந்து விடுதலை அடைவர். இந்த இலக்கை ஒவ்வொருவரும் அடைவர் என்பதும் இந்த நம்பிக்கையின் அடக்கம்.

**6. கோயில்களும் உள் உலகங்களும்**

இந்துக்கள், தெய்வீகம் நம் கண்ணுக்குத் தெரியாத உலகங்களில் இருப்பதையும், கோயில் வழிபாட்டாலும், சடங்குகளாலும், பக்தியினாலும், அத்தகைய தெய்வ சக்தியுடன் தொடர்பு கொள்ளமுடியும் என நம்புகின்றனர்.

**7. சற்குருவின் வழிகாட்டல்**

தெய்வீகத் தன்மை அடைந்த குரு அல்லது சற்குருவின் வழிகாட்டலில் பிரபஞ்சத்தின் உண்மைகளையும், நன்னெறி, கட்டொழுங்கு, புனிதமடைதல், சுய கேள்வி ஞானம், தியானம், யாத்திரை போன்றவற்றில் ஈடுபடல்.

**8. பரிவும் அகிம்சையும்**

இந்துக்கள் இந்த வாழ்க்கை புனிதமெனக் கருதி, அனைத்து உயிரினங்கள் மீதும் பரிவு காட்டி, அவற்றிற்குத் துன்பம் கொடுக்காமல் வாழ விரும்புகின்றனர்.

**9. மற்ற எல்லா சமயங்களையும் மதித்தல்**

இந்துக்கள், எந்தச் சமயமும் மற்ற சமயங்களைவிட தெளிவான வழியைக் காட்டுவதாக எண்ணுவதில்லை. ஆனால், எல்லா நல்ல சமயங்களும் அததன் வழிகளில் இறைவனின் கருணையையும், அன்பையும் நாடி செல்ல விழைவதால், அவை அனைத்தையும் புரிந்துணர்வுடனும், சகிப்புத் தன்மையுடன் இந்துக்கள் ஏற்றுக் கொள்வர்.

**முடிவுரை**

அடிப்படையில் இந்துச் சமயம் நீண்ட வரலாற்றைக் கொண்டுள்ளது. இதன் தத்துவங்கள் வேதங்கள், ஆகமங்கள் ஆகியவற்றைத் தளமாகக் கொண்டு பல ரிஷிக்களின், சமயப் பெரியார்களின் அனுபவங்களைக் கொண்ட பல புனித மறைகளையும் தொடர்ந்து பெற்று, இன்றுவரை வளமுடன், தொடர்ந்து வளர்ந்து வருகிறது. இன்று 900,000,000 இந்துகளுக்கு மேல் இந்த உலகில் வாழ்கின்றனர். உலகில், கிறிஸ்துவ, இஸ்லாமிய சமயத்திற்கு அடுத்து, மிக அதிக பக்தர்களைக் கொண்ட சமயமாக, மூன்றாவது இடத்தில், இந்துச் சமயம் இருக்கின்றது என்பது இந்துக்களுக்கு பெருமையே. இத்தனைக்கும், இந்துச் சமயத்தை மற்றவர்கள் மத்தியில் பரப்புவதற்கான இயக்கமோ, முயற்சியோ இல்லாத நிலையிலும் இந்தச் சமயம் தொடர்ந்து வளமுடன் வாழ்கிறது. இந்து சமயத்தில் பிறந்து வளர்வதின் வழியும், அல்லது இந்துச் சமயக் கோட்பாடுகளை ஏற்றுக்கொண்டு தன்னார்வ ரீதியில் வாழ்வதன் வழியுமே ஒருவர் இந்துவாக வாழ முடியும். ஒருவரை இந்துச் சமயத்திற்கு மாற்றும் சடங்கு, இந்த சமயத்தில் இல்லை என்பதையும் அனைவரும் உணரவேண்டும்.




*(தொகுப்பு: தொ.க. நாராயணசாமி)*

## இந்துச் சமயத்தில் அர்ச்சகரும் அவரின் பணிகளும்

பொதுவாக நம் கோயில்களில் இந்துச் சமயத் தலைவர்களாக அர்ச்சகர்கள், குருக்கள், பூஜகர்கள், பூசாரிகள், போன்ற பல பெயர்களில் பொறுப்பில் இருப்பதை நாம் அறிவோம். எனினும், இத்தகைய பொறுப்பான இடத்தில் இருப்பவர்களைப் பற்றி நாம் முழுமையாக நம் சமய ரீதியில் அறிந்துக்கொள்வது நல்லது.

“அர்ச்சகாஸ்ச்ச ஹரி ஸக்ஷத்” என்கிறது வேதம். உலக தர்மத்தைக் காப்பதில் மிக முக்கிய பங்காற்றி வருபவர்கள்தான் அர்ச்சகர்கள். தன் உடல், பொருள், ஆவி, இன்பம் எல்லாவற்றையுமே இறைவனுக்காகத் தியாகம் செய்து உலகம் தழைக்க இறைவனிடம் இடைவிடாது தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு இறைச்சேவை செய்பவர்கள்தான் அர்ச்சகர்கள்.

அதன்படி அன்றிலிருந்து இன்று வரை இடையறாது பகவானைத் தொடர்ந்து பூஜித்து வருபவர்கள்தான் இந்த அர்ச்சகர்கள். இவர்களின் பூலோக பிறப்பு - இந்தியாவின் வடக்கேயுள்ள “நமிசாரண்யம்“ என்கிற அற்புத புனித வனமாகும். இங்குதான் அர்ச்சகர்கள் முதல் முதலில் இறைவனால், இந்தப் புண்ணிய பூமியில் தோற்றுவிக்கப்பட்டதாக நம்பப்படுகிறது. பிறகுதான் மற்ற ஜீவராசிகளை இறைவன் படைக்கலானார் என்பது வேதவழி வரலாறு.

### ஆசாரியார் / சிவாச்சாரியார்

உமாபதி சிவம் முள்ளிச்செடிக்கு முக்தி கொடுத்தார் என்பதை நாம் அறிகின்றோம். ஆசாரியருடைய ஞான நிலை எவ்வளவோ அவ்வளவு ஆற்றல் அவருக்கு உண்டு. அவரால் தீட்சிக்கப்படும் ஆன்மாவிற்கு மல மாசு நீங்கித் தூய்மை உண்டாகும். தீட்சை பெற்ற ஆசாரியன் ஒழுக்கச் சீலராகவும் இருப்பத்தோடு பண்பும், ஆசாரமும் குரு பக்தியும் கொண்டவராக இருப்பார்கள். மனம், வாக்கு, காயம் எனும் மூன்றையும் தூய்மையாக வைத்திருப்பார்கள்.

நிர்வாண தீட்சை பெற்ற ஒருவர் குரு பட்டம் தரிப்பதற்காகச் செய்யப்படும் கிரியை ஆச்சாரிய அபிடேகம் ஆகும். குரு பட்டம் பெற்றோர் பிறருக்குத் தீட்சை கொடுக்கவும் பரார்த்தப் பூஜை செய்யவும் தகுதியைப் பெறுகின்றார்கள். இவர்கள் “சிவாச்சாரியார்” எனவும் அழைக்கப்படுவார்கள்.



சிவாச்சாரியார்கள் திருமணம் முடித்து இல்லறம் நடத்துபவராக இருத்தல் வேண்டும். உடல் நல குற்ற மற்றவராக இருத்தல், கல்வியறிவும் ஒழுக்க மேம்பாடும் மிக்கவராக இருத்தல், சைவ நாற்பாதங்களில் பயிற்சியுடையராகயிருத்தல், சீடர்களுக்குச் சிறந்த ஒழுக்கத்தையும் சைவப் பாரம்பரிய நெறிகளையும் போதிக்கக் கூடியவராயிருத்தல் போன்ற தகுதிகளை உடையவர்களாகத் திகழ்கிறார்கள்.

**பூஜகர்**

இறைவன் இட்ட பணியைப் ‘பூஜகர்’ என்பவர் சிறப்புடனும் பக்தியுடனும், ஆச்சாரத்துடனும் செய்கிறார்கள். இதை சிவாகமம், பூஜை செய்யும் போது பூஜகர் நான்கு விதமான ரூபங்களில் இருக்கின்றார் என்று வலியுறுத்துகின்றது.

**ஆவாஹநாதிகானே ஆச்சார்யோ குருபகவான்**

**அபிஷேகாத்ய அலங்காரே ஆச்சார்யோ பித்ருரூபவான்**

**நைவேத்திய தூபத்பாதா வர்ச்சனே மாத்ருரூபவான்**

**ஸ்தோத்திர பிரதக்ஷிணயகானே ஆசார்யோ பக்தரூபவான்**

பூஜகர் குருவாகவும், தகப்பனாராகவும், தாயாகவும், பக்தனாகவும் ரூபநிலை அடைந்து பூசை செய்கிறார். ஆகவே, பூஜகர் மிக உயர்ந்த நிலையைப் பெற்றிருக்கிறார். எந்நேரமும் பகவத் சிந்தையுடன் அனைத்து ஜீவராசிகளும் இறை திருவருளைப் பெறவேண்டும் என்ற சிந்தனையுடன் இருப்பவர்களே இந்த பூஜகர்கள் ஆவர்.

மனிதனாக இருந்தே பூஜை செய்து பிரார்த்தனைகளைச் சொல்லி தெய்வீக எண்ணங்களை வளர்த்து மெல்ல மெல்ல தெய்வமாகலாம். அது அவர்களின் யதார்த்த நிலை. ஆனால், கோயில் பூஜகர் தன்னை தெய்வமாக்கிக் கொண்டால்தான் தினமும் தெய்வத்தைத் தொடுவதற்கு அருகதை உடையவராக மாறுகின்றார்.



‘தேஹோ தேவாயம்’ என்று முதலில் தன்னுள்ளே கடவுளை ஆவாஹனம் செய்வதே தேஹ சுத்தி - பூத சுத்தி, இவையனைத்தையும் பாவனா முகமாகச் செய்து “யத் பாவம் தத் பவதி” என்று நாமும் சாமியாக வேண்டும். இதுவே பூஜைகளின் (ஆசாரியன்) லக்ஷணம். குரு தத்துவம் என்று சிவ ஆகம சந்தான குரவர் குரு ஞானசம்பந்தர் வலியுறுத்திக் கூறுகிறார்.

பூஜகர்கள் தம்மிடம் உள்ள குறைகளை நீக்கி மனதிலே பூஜை செய்கின்ற அன்பை வளர்த்து சிரத்தையாகப் பூஜிக்க வேண்டும். அது மட்டும் அல்லாமல், ஏனோ தானோ என்றோ பொருளுக்காகவும் ஆடம்பரத்திற்காகவும் பூஜை செய்தால் பூஜை செய்தவனுக்கும், நாட்டிற்கும், மக்களுக்கும் பயனில்லை என்று சிவாகம நிரூபணம் எடுத்துரைக்கின்றது.

நமது திருநாட்டில் பணியாற்றுகின்ற பூஜகர்கள் மிகவும் சமூகச் சமுதாய எண்ணங்களைக் கொண்டவர்கள். ஓர் ஆலயம் எப்படி நிறுவவேண்டும் என்னென்ன முகூர்த்தங்கள் வழிபாட்டிற்கு ஆகமங்கள் வலியுறுத்துகிறது போன்றவற்றைத் துல்லியமாகக் கவனித்துத் திருப்பணிகளைச் செய்கின்றனர். பக்தர்களின் எண்ணங்களைப் புரிந்து கொண்டு அவர்களுக்குச் சமய ஆலோசனைகள், இறைவனின் நிலைகள், நமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்புகள் போன்றவற்றையும் தெளிவுப்படுத்துவர்.

இவற்றைத் தவிர, திருமுறைகளின் சிறப்புகள், அவற்றின் நன்மைகள், இல்லத்தில் வழிபாடுகள் எளிய முறையில் எப்படி செய்ய வேண்டும், அவற்றின் மகத்துவம், வளரும் சந்ததிகளுக்கு அவர்களின் கல்வி கேள்விகளுக்கொப்ப ஏற்படும் சந்தேகங்களுக்கு ஆகம ரீதியாகவும் அறிவியல் ரீதியாகவும் உள்ள விளக்கங்களும், அவ்வப்போது சந்தேகம் தெளிதல் சொற்பொழிவுகள் மூலம் எடுத்து உரைக்கின்றார்கள். சுருக்கமாகக் கூறினால், “சமயம் வாழ்வைத் தொடவேண்டும்” என்ற கருத்தில் மிக உறுதியாகச் செயல்படுகின்றார்கள், இந்த அர்ச்சகர்கள் என்ற ஆசாரியர்கள்.

ஆலயம் நமது திருநாட்டில் புதிய பொலிவுடன் திகழ வேண்டும். ஆலயங்களைச் சின்னமாக வைத்துதான் இந்துக்கள் இந்த நாட்டில் எப்படியெல்லாம் வாழ்ந்திருக்கிறார்கள் என்பதை உணர்த்தவும் உணரவும் முடியும். ஒவ்வொரு பூஜகரும் ஆலயத் திருப்பணிக்காகத் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு பணமாகவோ, பொருளாகவோ பக்தர்களிடம் சென்று பெற்று திருக்கோயில்களுக்கு உதவியாக இருக்கின்றார்கள்.

அது மட்டுமல்லாமல் கலை, கலாச்சாரம், மொழி நிலைக்கவும், ஏழை எளிய மக்களுக்கு அவ்வப்போது அவர்களுக்குத் தேவைப்படுகின்ற உதவிகள், உணவு, உடை, கல்வி, வசதி, தொழிற்பயிற்சிகள், ஆலோசனைகள், மருத்துவச் சேவைகள், உற்சவக்காலங்களில் வேண்டியப் பொருளுதவி, நாள்தோறும் ஆலய பராமரிப்புக்கு வேண்டிய அடிப்படை செயல்பாடுகள், ஆலயப் பொறுப்பாளர்களுடன் சேர்ந்து ஆலோசனை, மற்றும், இதர உதவிகளும் செய்து, அந்த ஆலயமே தன்னுடைய ஜீவன் என்று நினைவில் எப்போதும் எண்ணிக்கொண்டே வாழ்பவர்கள் இவர்கள்.

**முடிவுரை**

இத்தகைய முக்கிய பங்கை வகிக்கும் கோயில்களின் உயிர் நாடியான சமயத் தலைவர்களுக்கு முறையான அங்கீகாரமும், இடமும், முக்கியத்துவமும் இருந்தால்தான் நம் கோயில்கள் முறைப்படி செயல்பட இயலும். ஒவ்வொரு கோயில் நிர்வாகமும், அதன் கோயிலில் எத்தகைய பயிற்சிபெற்ற சிவாச்சாரியார்கள் அல்லது பூஜகர்கள் பணிபுரியவேண்டும் என்பதில் கவனம் செலுத்தி, முறையாகச் செயல்படுதல் நலம். நடைமுறையில் எத்தகைய பெயர் சொல்லி அழைக்கப்பட்டாலும், அவர்களின் பங்கு மிக முக்கியமானது என்பதை நாம் அறிந்து செயல்பட வேண்டும். எல்லா கோயில் நிர்வாகங்களும் இந்தப் பொறுப்பில் நியமிக்கப் படுபவர் முறையாகக் கோயில் நலனுக்காகவும், பக்தர்களின் நலனுக்காகவும் செயல்படக் கூடியவராக இருப்பதையும், கோயில் நிர்வாகத்திற்கு சமயத் தெளிவுடன் வழிகாட்டக் கூடியவராக இருப்பதையும் உறுதிசெய்துக் கொண்டால் மிகவும் நல்லது. அத்துடன், கோயிலில் சமயத் தெளிவு நடவடிக்கைகளில், குறிப்பாகச் சமயக் கல்வியை அளிப்பதில் சமயத் தலைவரின் பங்களிப்பும் அளப்பரியதாக இருப்பதை அனைவரும் உறுதி செய்து கொள்ளுதல் நல்லது.

**ஶ்ரீ-ஸிவபூஜா-ஸ்தவச் செய்தி**

(12-ஆம் நூற்றாண்டு)

சமய, விரேஷ, நிர்வாண-தீட்சைகளைச் செய்துகொண்டவர் ரிவ என்ற அடைமொழியையும், ஆசாரிய-அபிஷேகம் செய்து கொண்டவர் ஆசாரியர் என்ற அடைமொழியையும் அடைவதால் இந்த நான்கு ஸம்ஸ்காரங்களையும் செய்துகொண்டவர்கள் சிவாச்சாரியார் என்று அழைக்கப்படுகிறார்கள்.

*Brahmasri Dr.S.Arunasundara Gurukkal வரிசை எண்: 080 06.08.2020*

*(கட்டுரை : சிவஶ்ரீசு.குமார் சிவாச்சாரியார்,*
*ஶ்ரீசுந்தரமூர்த்தி விநாயகர் ஆலயம், பாச்சாங் பாரு, மலாக்கா)*

## RUJUKAN

***Rujukan asas untuk kajian dan esei-esei dalam buku ini:***


1. George N. (1960), **Indians in Malaya, Singapore**

2. Kernial Singh Sandhu (1973), **Early Malaysia,** *Institute of South-East Asian Studies*

3. Kernial Singh Sandhu & Paul Wheatley (Eds) (1983) **MELAKA: The Transformation of a Malay Capital c.1400-1980**, Volume 1 & 2, *Institute of South-East Asian Studies*

4. Narayanasamy, K (1967) **Proses Asimilasi dan Pengebudayaan di kalangan Masyarakat *Chitty Melaka,*** (Tesis), *University Malaya*

5. Paramasivam, M (2010) **Ancient Tamils in Melaka: A Historical Perspective.** *World Classical Tamil Conference, Coimbatore*

6. Paramasivam, M; Wickramasinghe, C.N. and Thilagavathi Shanmuganathan (2013) **Topological Socio-Cultural Evolution a Predictor of Ethnic Conflicts in Multi-Ethnic Societies,** *PERTANIKA JOURNAL, ISSN:0128-7702, Universiti Putra Malaysia Press*

7. Usha, M (1960) **The Role of Indian Minorities in Burma and Malaya.** Bombay

8. Piere-Yves Trouillet (2017) **Hindu Temples and Development of Localities in Tamil Nadu (South India)** *CNRS, Centre for South Asian Studies HAL-01535659*

9. Piere-Yves Trouillet (2012) **OVERSEAS TEMPLES AND TAMIL MIGRATORY SPACE.** *South Asia Multidisciplinary Academic Jounal, Association por la recherche sur 1'Asie du sud, 2012,6. <halshs-00867729>*

10. Sue Ann Teo (2018) **Demolition and Relocation of Hindu Temples in Malaysia: Pragmatic Responses of Indian Hindu communities in Penang.** (Tesis PhD) *Victoria University of Wellington*

11. Manimaran Subramaniam (2013) **An Evolving Trend In Religious Practices Amongst Malaysian Hindus: A Case Study of Shrines Within The Residential Compound of Hindus, A New Phenomenon?** *Universiti Malaya, Project Funded by ERGS (ERO18-2013-A)*

12. Arasaratnam, S (1970) **Indians in Malaysia and Singapore,** *Oxford University Press, Kuala Lumpur*

13. Websites and Resources on Hinduism:

    13.1. **Hinduism Today** *(http://www.hinduismtoday.com)*

    13.2. **Wikipedia articles on Hinduism** *(http:/en.wikipedia.org/wiki/Hinduism)*

    13.3. **Oxford Centre of Hindu Studies** *(orchs.org.uk (http://www.ochs.uk/)*

    13.4. **Facts and Details – Varna and Different Hindu 'Castes'** *(http://factsanddetails.com/India)*

13.5. **Religious Resources – Summary of Hinduism** *(http://www.religionresourcesonline.org/religion-wiki/hinduism-beliefs/)*

13.6. **List of Hindu Deities** – *(https://en.wikipedia.org.wiki/List_of_Hindu_deities)*

14. Hindu American Foundation (2014) **HINDUISM 101: The Basics**

15. *Malaysia Hindu Sangam (2000) Buku Kecil* - **Garis Panduan Kuil Hindu Kebangsaan *pada pengamal agama Hindu di Malaysia***

16. Adapa Satyanarayana (2001) **"BIRDS OF PASSAGE": Migration of South Indian Labour Communities to South-East Asia; 19-20th Centuries, A.D.** *IIAS/HSG, CLARA Working Paper, No.11, Amsterdam*

17. Renuga Devi- Voisset (2013) **Being 'Indian' in the French West Indies and Malaysia: Two Extreme Geo-Political Identity Models within the Spectrum of the 'Old Indian' Diaspora.** *Institut Kajian Malaysia dan Antarabangsa (IKMAS), Universiti Kebangsaan Malaysia, Bangi, Selangor, Malaysia*

18. Portal Rasmi, Jabatan Statistik Malaysia

19. Wikipedia – Catatan tentang Negeri Melaka

20. News Reports:

20.1. New Straits Times – April 15, 2018 – **Temple Transformation Community Centre plays pivotal role in shaping and uplifting B40 Indians** – *Bernama*

20.2. The Star – February 26, 2020 - **Two Shrines Demolished after 14-year warning** – *Metro News*

20.3. The Star – 18 March, 2017 – **Board - We need Hindu Academy to train Malaysian priests** – *Metro online*

20.4. Free Malaysia Today – December 1, 2018 – **Don't rush to form national Hindu temple body, says Ramasamy** – *by Pradeep Nambiar (online)*

20.5. Hindu Council of Australia – June 1, 2018 – **Hindus fear takeover of their temples in Malaysia,** *online news*

20.6. India Today – August 18, 2016 – **Hindus in Malaysia grow worried as more and more temples get attacked in the country.** *(https://www.indiatoday.in/fyi/story/hindu -temples-in-malaysia-attacked-minorities-worried-335929-2016-08-18)*

21. Rajakrishnan Ramasamy (1984) **Caste Consciousness among Indian Tamils in Malaysia,** *Pelanduk Publications*

22. Singaravelu Sachthanantham (2006) **PENGAJIAN INDIA Bicara Pelbagai Perspektif** – *Penerbit Universiti Malaya*

23. Kalimuthu K (2008) **Malaysian Indians towards a new paradigm** – *a malaysiatamilsangam.com. project*

24. Janakey Raman Manickam (2009) **The Malaysian Indian Dilemma – the Struggles and agony of the Indian Community in Malaysia** – *Nationwide Human Development and Research Centre, Selangor*

25. Shrikant Prasoon (2009) **HINDUISM Clarified and Simplified** – Hindology Books, Pustak Mahal, New Delhi

26. Ravindra K Jain (2011) **Indian Transmigrants – Malaysia and Comparative Essays** – *Strategic Information and Research Development Centre (SIRD) Selangor*

27. Muzafar Desmond Tate (2008) **The Malaysian Indians – History, Problems and Future** – *Strategic Information and Research Development Centre, Selangor*

**அட்டவணை 3 : மத்திய மலாக்காவில் அமைந்திருக்கும் கோயில்கள்**

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| MT1 | ஸ்ரீ சன்னாசி மலை ஆண்டவர் ஆலயம் | Batu 5, Jalan Kerubung, Cheng, 75250 Melaka. (நாட்டுக்கோட்டை செட்டியார்களின் கோயில்). | 1868 |
| MT2 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Jalan Tukang Emas, Bandar Melaka. (மலாக்கா செட்டிகள் கோயில்- 1900 ஆம் ஆண்டு முதல் மலாக்கா நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தின் நிர்வாகத்தினரால் நிர்வகிக்கப்படுகிறது) Lot:TA XII 62 | 1781 |
| MT3 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | 119, Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TA1 59 (மலாக்கா செட்டிகளின் கோயில்) | 1822 |
| MT4 | ஸ்ரீ கைலாசநாதர் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 95 | 1887 |
| MT5 | ஸ்ரீ அங்கால பரமேஸ்வரி ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 94, 118 | 1888 |
| MT6 | ஸ்ரீ லெங்காதரியம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. (Tanah Syt.Tong Bee – நிலம் பெறும் தருவாயில்.) | 1888 |
| MT7 | ஸ்ரீ அய்யனார் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 81 | 1870 |
| MT8 | ஸ்ரீ காத்தாயீ அம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 100 | 1875 |
| MT9 | ஸ்ரீ காளியம்மன் ஆலயம் | Kampung Lapan, Bachang, Melaka. Lot: TA XXXI | 1804 |
| MT10 | ஸ்ரீ தர்மராஜா ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 88 | 1770 |
| MT11 | ஸ்ரீஅம்மன் ஆலயம் | Kampung Chitty, Gajah Berang, Melaka. Lot: TAV 88 | 1770 |
| MT12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM14, Tambak Paya, Ayer Molek, 75460 Melaka. Lot:1345 | 1977 |
| MT13 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Taman Paya Rumput Perdana, Paya Rumput, 76450 Melaka. | 1937 |
| MT14 | ஸ்ரீ வனத்தாண்டவர் ஆலயம் | Lot: 14555, Batu 12¼, Sungei Udang, 76300 Melaka. | 1960 |

| MT15 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 11, Ladang Bukit Kajang, Melaka. | 1906 |
|---|---|---|---|
| MT16 | அருள்மிகு ஸ்ரீ மகா சமயபுரம் மாரியம்மன் நாகேஸ்வரி அம்மன் ஆலயம் | (sebelah Sungai Melaka – di belakang Tzu Chi, Batu Berendam) d/a 19, Taman Merdeka Baru, Fasa 3, 75350 Melaka. | 1970 |
| MT17 | ஸ்ரீ சுந்தர மூர்த்தி விநாயகர் ஆலயம் | PBB 5, Jalan Bachang Baru, 75350 Melaka. Lot: 9324 (முன்பு மலாக்கா பெரிய மருத்துவமனை வளாகத்தில் அமைந்திருந்த கோயில்) | 1952 |
| MT18 | தேவி ஸ்ரீ ஓம் சக்தி மகா முனீஸ்வரர் & ஸ்ரீ வீர காளியம்மன் ஆலயம் | Lot 15152, Taman Merdeka Jaya, 75350 Melaka. (இரண்டு கோயில்களின் இணைப்பு) (Kuil kedua dari Bachang dahulu) | 2004 |
| MT19 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | PT 2456, Taman Bukit Melaka, Bukit Beruang, 75450 Melaka. (புக்கிட் பெருவாங் முச்சந்தியில் முன்பிருந்த ஆலயம்) | 1960 |
| MT20 | தேவி ஸ்ரீ நாக காளியம்மன் ஆலயம் | Kampung Tampoi, Batu 7½, Jalan Industri,Krubong, 75250 Melaka. | 1930 |
| MT21 | ஸ்ரீ மதுரை வீரன் (முனீஸ்வரர்) ஆலயம் | Kawasan Perindustrian Krubung, 75250 Melaka. | 2015 |
| MT22 | ஸ்ரீ சுப்ரமணியர் தேவஸ்தானம் | Lot 88-89, Solok Bangsal, Jalan Keretapi Lama, Batu Berendam, 75350 Melaka. | 1965 |
| MT23 | ஸ்ரீ வனபத்ர காளியம்மன் ஆலயம் | No.70, Jalan Sri Krubong, Jalan PK 26, Taman Perindustrian Krubong, 75250 Melaka. (Di belakang Gereja Lady of Guadalupe) | 1930 |
| MT24 | தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் | Lot 1551, Bertam Ulu, Jln.Tanjung Minyak, 75250 Melaka. (பழைய பெயர்: முனியாண்டி ஆலயம்) | 1900 |
| MT25 | ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி அம்மன் ஆலயம் | No.75, Lorong 4, Batu 7, Kampung Baru, Tanjung Minyak, 75250 Melaka. | 1981 |
| MT26 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bertam, Paya Rumput 76450 Melaka. | 1904 |
| MT27 | கிருஷ்ண பலராம் இந்தியப் பண்பாட்டு, கலை இயக்கம் | Lot 2679, Jln Sri Rama 3, Taman Muzaffar Shah, 75450 Melaka. | 2002 |
| MT28 | தேவி ஸ்ரீ துர்கையம்மன்/ பத்ர காளியம்மன் ஆலயம் | Batu 7¼, Paya Rumput, 76450 Melaka. | 1900 |
| MT29 | கரடிமலை ஸ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Jalan Dahlia 6, Taman Bunga Raya, Bukit Beruang, 75450 Melaka. | 1974 |

| MT30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Genting Cheng, Bahagian Cheng, Paya Rumput, 76450 Melaka. | 1930 |
|---|---|---|---|
| MT31 | அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மன் | 23A, Batu 12, Tanah Merah, Krubong, 75250 Melaka. | 1990 |
| MT32 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tanah Merah (Bertam, Bhg. Krubong) d/a 23A, Batu 12, Tanah Merah, Krubong, 75250 Melaka. (புதிய கோயிலுக்கான நிலத்தைப் பெறும் தருவாயில்) | 1930 |
| MT33 | ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி ஆலயம் | 792-C, Jalan Emas 6, Taman Kerjasama, Bukit Beruang, 75450 Melaka. | 1940 |
| MT34 | ஸ்ரீ உத்திர காளியம்மன் ஆலயம் | Bekas tanah kubur, Bukit Serindit. d/a C1-7, Rumah Pangsa, Taman Anika, Lorong Pandan, 75250 Melaka. | 1970 |
| MT35 | ஸ்ரீ மகா சாமூண்டேஸ்வரி அம்மன் ஆலயம் | 21-C Kampung Tujuh, Jalan Gajah Berang 75200 Melaka. (முன்பு மலாக்கா செட்டி சமூகத்தின் ஆலயம்) | 1870 |
| MT36 | ஸ்ரீ மாவீரன் ஆலயம் | 197-A, Jalan Puteri Hang Li Poh, 75100 Melaka. | 1952 |
| MT37 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | 91-C, Pengkalan Rama Pantai, 75100 Melaka. (முன்பு: மலாக்கா மாநகராட்சி மன்ற குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்தது) | 1930 |
| MT38 | ஸ்ரீ சுப்ரமணியர் திரௌபதை அம்மன் ஆலய பரிபாலன சபை | Jalan Gajah Berang, 75400 Melaka. (முன்பு மலாக்கா செட்டி சமூகத்தின் ஆலயம்) | 1865 |
| MT39 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (குதிரைக் கோயில்) | Lot 1213, Jalan Hujung Padang, Batu 6, Paya Rumput, 76540 Melaka. | 1890 |
| MT40 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | No. 7, Lorong 4, Jalan TTP 3, Taman Tambak Paya Permai, Ayer Molek, 75460 Melaka. | 1928 |
| MT41 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 8 ½ , Pengkalan Minyak, 75460 Melaka. (முன்பு: யூனியன் பிரிவு, டைமண்ட் ஜூப்ளித் தோட்டம்). | 1930 |
| MT42 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lim Kok Wah, Bukit Lintang, 75460 Melaka. (முன்பு லியோங் வாட் ஹின், பூங்கை, தியாங் டுவா) | 1930 |
| MT43 | ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம் | PT 1107, Tanjung Minyak, Cheng, 75250 Melaka. | 1924 |
| MT44 | ஸ்ரீ மகா முனீஸ்வரர் ஆலயம் | Kg. Solok Jeram, Paya Rumput, 76450 Melaka. | 2002 |

| MT 1 | ஸ்ரீ சன்னாசி மலை ஆண்டவர் ஆலயம் |
|---|---|
| | ***Batu 5, Jalan Kerubong, 75250 Cheng, Melaka.*** |

ஆங்கிலேய காலனித்துவ ஆட்சி சமயத்தில், அவர்களின் அழைப்பின்பேரில் நாட்டுக்கோட்டை செட்டியார் அல்லது நகரத்தார் (வணிகர்கள்) சமூகத்தினர் 1800-ஆம் ஆண்டு முதல் மலாக்காவில், கம்போங் கெலிங் பகுதியில் தங்கி தங்கள் நிதி வணிகத்தைச் செய்து வந்தார்கள். இவர்கள் தங்கள் சமய வழிபாட்டிற்காக, அருகில் துக்காங் மாஸ் சாலையில் மலாக்கா செட்டிகளுக்குச் சொந்தமான ஸ்ரீபொய்யாத விநாயகர் மூர்த்தி கோயிலைப் பயன்படுத்தி வந்தனர். அருகில் சொந்த கோயில் கட்ட அவர்கள் செய்த முயற்சி, மலாக்கா நகரில் ஏற்கனவே இந்துக் கோயில்கள் இருந்ததால் அப்போதைய காலனித்துவ அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்படவில்லை. எனவே, இவர்கள் நகரத்துக்கு வெளியே தங்களுக்குச் சொந்தமான ஒரு கோயிலைக் கட்டமுயன்றனர்.





1868 ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட இந்தக் கோயில் அமைந்த வளாகத்தில் ஓர் இந்துத் துறவியின் ஜீவசமாதி/புனிதக் கல்லறை அமைந்துள்ளது. முதன் முதலில் இந்தத் துறவி அருகில் இருந்த குன்று ஒன்றில் குடியேறி அங்கு முருகனுடையத் திருவடிகளைத் தினசரி வழிபட்டு வந்தார். அதோடு, சிவலிங்கத்தையும் தியானித்து வந்துள்ளார்.





அதனால், இந்த இடம் சன்னாசிமலை என்று அழைக்கப்பட்டது. இந்த மலை இருந்த இடம் நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தினர் குடும்பத்திற்குச் சொந்தமானதாக இருந்தது. மேலும், இத்துறவியின் இந்த வழிபாடு, பிணி தீர்க்கும் செயல்கள் செட்டியார்களுடைய கவனத்தை ஈர்த்தது. அதோடு, இந்தத் துறவியின் சக்தியை உணர்ந்து மலையின் அடிவாரத்தில் உள்ள இடத்தை அழித்து அங்கு ஒரு கோயிலை அமைக்க முடிவு செய்தனர். மேலும், இந்த வட்டாரத்தில் வாழ்ந்த இந்துக்களுக்கு வழிபாட்டுத் தலமாக அப்போது அது அமைந்தது.



அந்த இடத்தில் தாங்கள் நினைத்திருந்தபடி ஒரு முருகன் கோயிலைக் கட்டவேண்டும் என நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்திற்கு அந்தத் துறவி ஆலோசனை வழங்கினார். மேலும், இந்த இடத்தின் அனைத்து அருள் சக்தி மற்றும், சிறப்பையும் கோயிலிடம் இறக்கி விடுவதாகக் கூறினார். கோயிலைக் கட்ட நிலம் வாங்கப்பட்டது. அக்காலத்தில், இப்பகுதியைச் சுற்றியுள்ள பெரும்பாலான தோட்டங்கள் செட்டியார் சமூகத்திற்குச் சொந்தமானதாக இருந்ததால் அதிக இந்துத் தொழிலாளர்கள் இங்கு வேலை செய்து வந்தனர்.

இந்தத் துறவி 1868-1872 ஆண்டு வாக்கில் தனது மோட்சத்தை அடைவதற்கு முன்னால், அவரை வந்து காணும் இந்த வட்டார மக்களுக்குத் தன்னால் முடிந்த சிகிச்சை உட்பட சமயம் சார்ந்த பல சேவைகளை வழங்கி வந்துள்ளார். இந்தக் கோயில் அங்கு வாழ்ந்த துறவியின் பெயரைப் பயன்படுத்தினாலும், அது உண்மையில் ஒரு பரந்த வளாகத்தைக் கொண்ட முருகன் கோயில் ஆகும்.





ஆரம்பத்தில் பங்குனி உத்திர நாள் அன்று திருவிழா கொண்டாடப்பட்டு வந்தது. அப்போது பெரியமலை என்று அழைக்கப்பட்ட புலாவ் பெசாரில் அமைந்துள்ள வழிபாட்டுத் தலத்திற்கும் ஆண்டுதோறும் இந்தச் சமூகம் சென்று வழிபட்டது. ஆனால், 1900-ஆம் ஆண்டுகளில் மாசி மாதத்தில் மாசிமகத்தன்று திருவிழா வெகு விமரிசையாகப் பெரிய அளவில் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது நாடு முழுமையிலிருந்தும் ஏறக்குறைய ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட பக்தர்களை ஈர்க்கின்றது. இன்றுவரை, மலாக்காவில் உள்ள இந்துக் கோயில்களில், திருவிழாக் காலங்களில் இதுவே அதிமான மக்களை ஈர்க்கின்ற ஒரு கோயிலாக இருக்கின்றது.

இந்தக் கோயில் மலாக்காவில் உள்ள நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்தினர் அமைத்திருக்கும் ஓர் அறக்காப்பகம் மூலம் அவர்களின் சமூகத்தாலேயே நிர்வகிக்கப்படுகிறது.

| MT 2 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் |
| --- | --- |
| | *Jalan Tukang Emas, 75200 Bandar Melaka.* |

மலாக்காவை டச்சுக்காரர்கள் ஆண்டகாலத்தில் இந்தக் கோயில் இங்கு உருவாக்கப்பட்டது. பழமையான இந்த ஆலயம் இன்று வரை பேணி காக்கப்பட்டு வருகிறது. அனேகமாக, நம் நாட்டில் தொடர்ச்சியாக பயன்படுத்தப்படும் ஆகப் பழைய கோயிலாக இதைக் கருதலாம். தற்பொழுது காஜா பேராங் பகுதியில் வாழும் மலாக்கா செட்டிகள் சமூகத்தின் முக்கிய, தாய்க் கோயிலாக இது திகழ்ந்து வருகிறது.




1781-ஆம் ஆண்டில் டச்சுக்காரர்கள் கம்போங் கெலிங் என அழைக்கப்பட்ட இந்த இடத்தில் இந்து-முஸ்லிம்-சீனர்களுக்கு, அவரவர்களின் வழிபாட்டுத் தலங்களை அமைக்க நிலப்பட்டாக்களை வழங்கினர். இந்து வழிபாட்டிற்கான ஆலயம் 'காபிட்டான் கெலிங்' பொறுப்பிலிருந்த மலாக்கா செட்டிகள் சமூகத்தின் அன்றைய தலைவர் தெய்வநாயகம் செட்டி அவர்களின் பெயரால் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்தக் கோயிலின் சிறப்பு என்னவென்றால், பக்கத்தில் கம்போங் கெலிங் மசூதியும், செங் ஹூன் தெங் சீனக் கோயிலும் அமைந்திருப்பதுதான். இவை பக்கம் பக்கமாக ஒரே வரிசையில் ஜொங்கர் வாக் அருகில் அமைந்துள்ளன.

கர்ம வினைகளைத் தீர்க்கக் கூடியவரும் ஞானத்தைக் கொடுப்பவருமான விநாயகப் பெருமான் இந்தக்கோயிலின் முக்கிய வழிபாட்டுத் தெய்வமாக விளங்குகிறார். இந்தக் கோயிலை 1901-ஆம் ஆண்டு முதல் நிர்வகிக்க மலாக்காவில் வசிக்கும் மலாக்கா செட்டிகள் சமூகம் ஒரு சிறப்பு ஒப்பந்தத்தின் மூலம் இந்தக் கோயிலுக்கு அருகில் வசிக்கும் நாட்டுக்கோட்டை செட்டியார் சமூகத்திற்கு அனுமதி அளித்துள்ளனர். இதற்குக் காரணம் மலாக்கா செட்டிகள் சமூகம் கம்போங் கெலிங் எனும் இப்பகுதியிலிருந்து அருகில் இருக்கும் காஜா பேராங் பகுதிக்கு மாறிச் சென்றதும், அங்கு அதிகமான வழிபாட்டுத் தலங்கள் அவர்களுக்கு அமைந்திருப்பதும்; அவற்றைப் பராமரிக்கும் பொறுப்பு அதிகமாக இருந்ததுமே. இருப்பினும், இந்தக்



கோயிலின் உரிமம் மலாக்கா செட்டி சமூகத்திடம்தான் இன்று வரை உள்ளது. இந்தத் தாய்க் கோயிலின் பெயரில்தான், அதனுடைய சொத்து மற்றும், மலாக்கா செட்டிகள் சமூகத்தைக் கொண்ட நிர்வாகம் ஆகியவை இன்றும் செயல்படுகிறது.

பலமுறை திருத்தி அமைக்கப்பட்டுள்ள இந்தக் கோயில் தற்போது மலாக்கா வரலாற்றுப் பாரம்பரிய மைய வளாகத்தில் அமைந்துள்ளது. மலாக்கா நகரில் வாழும், மற்றும், பணிபுரியும் இந்துக்கள் இந்தக் கோயிலை இன்று பயன்படுத்தி வருகின்றனர். இந்தக் கோயிலின் திருவிழா விநாயகர் சதுர்த்தி அன்று கொண்டாடப்படுகின்றது. அண்மையில் இந்தக் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

இந்தக் கோயில் அதிகமான சுற்றுப் பயணிகளைக் கவரக்கூடிய இடமான 'ஜோங்கர் வாக்' அருகில் இருப்பதால் கோயிலுக்கு அன்றாடம் அதிகமான உள்நாட்டு மற்றும், வெளிநாட்டுச் சுற்றுப் பயணிகள் வருகை தருவதைக் காணலாம்.

| MT 3 | **ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம்** |
| --- | --- |
| | ***Kampung Chitty, 75200 Gajah Berang, Melaka.*** |

முத்து மாரியம்மன் தெய்வத்திற்காக மலாக்கா செட்டி கிராமத்தின் பொருத்தமான இடத்தில் இக்கோயில் அமைந்துள்ளது. மலாக்கா செட்டி சமூகத்தின் பெரும்பாலான குடும்பங்கள் கம்போங் கெலிங் பகுதியிலிருந்து காஜா பேராங் சுற்றியுள்ள விவசாயப் பகுதிகளுக்கு மாறி சென்றபோது அங்குள்ள பக்தர்களுக்குக் காவல் தெய்வமாக விளங்க இந்தத் தெய்வதிற்குக் கோயில் 1822-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. மலாக்கா செட்டி குடும்பங்கள் பெரும்பாலோர் இன்று வரை இங்குள்ள மலாக்கா செட்டி கிராமத்தில் வாழ்கின்றனர். இந்தக்கோயில் தற்போது மலாக்கா செட்டி சமூகத்தின் முக்கியக் கோயிலாக விளங்குகிறது.



மலாக்காவில் உள்ள பெரும்பாலான மக்கள் இந்தக் கோயிலை 'Datuk Cacar' என அழைக்கின்றனர். ஏனெனில், பெரியம்மை உள்ளிட்ட பல்வேறு நோய்களைக் கட்டுப்படுத்தும் சக்திகளுடன் இத்தெய்வம் விளங்குவதாக நம்புகின்றனர். பல இந்து அல்லாத குடும்பங்களும் தங்கள் குடும்ப உறுப்பினர்களின் உடல்நிலை சரியில்லாமல் இருக்கும்போது அவர்கள்



வேண்டிக்கொண்டு சிகிச்சை பெறுவதுடன் மேலும், வருடாந்திர விழாக்களில் காவடி அல்லது பால்குடம் எடுப்பதாகவும், வேண்டிக்கொண்டு நிறைவேற்றியும் வருகின்றனர்.

தமிழ் சித்திரை மாதத்தில், அதாவது, ஏப்ரல்/மே மாதத்தில், இக்கோயிலில் நடைபெறும் 'Datuk Cacar' திருவிழா மலாக்கா செட்டிகள் சமூகத்தினரின் முக்கியத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகின்றது. அன்றைய நாளில் மலாக்காவிற்கு வெளியே வசிக்கும் அவர்களது உறவினர்கள் இங்கு திரும்புகின்றனர். உறவினர்களைச் சந்திப்பதோடு அப்போது அவர்களின் கிராமத் தெய்வத்திற்குத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்றுவதோடு காணிக்கைகளையும் செலுத்துகின்றனர். சீன பக்தர்கள் தங்களின் வேண்டுதல்களை இக்கோயிலில் நிறைவேற்றுவது சிறப்பு அம்சமாகும்.

மலாக்கா செட்டி சமூகத்தின் கோயில்கள், சொத்துக்கள், மற்றும், அவர்களின் விவகாரங்களைக் கவனித்துக்கொள்ள, நீதிமன்ற வழி 1962-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட அறக்காப்பகம் (Trust) ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயத்தின் பெயரில் அமைந்து, அதன் நிர்வாகக்குழு இந்தச் சமூகத்தின் எல்லா கோயில்களையும், சொத்துகளையும், சமூக விவகாரங்களையும் கவனித்து வருகிறது. இந்தக் கோயிலும் அதன் கீழ் நிர்வகிக்கப்படுகிறது.











| MT 4 | ஸ்ரீ கைலாசநாதர் (சிவன்) கோயில் |
|---|---|
| | ***Kampung Chitty, 75200 Gajah Berang, Melaka.*** |



ஆக்கல் - காத்தல் - அழித்தல் என முத்தொழிலையும் ஆற்றும் மிகவும் சக்தி வாய்ந்த தெய்வமாகக் கருதப்படும் சிவனுக்கு இங்கு ஓர் ஆலயம் அமைத்துள்ளனர். முதல் கைலாசநாதர் கோயில் இந்தியாவின் காஞ்சியில் 655 - 705 -ஆம் ஆண்டுகளில் பல்லவர்களால் கட்டப்பட்டது. பின்னர், அதன் செல்வாக்கு தமிழகம் முழுவதும் பரவியது.

மலாக்கா செட்டி சமூகம் அந்தப் பாரம்பரியத்தைப் பின்பற்றி இந்தக் கிராமத்தின் நுழைவாயிலுக்கு அருகில் சிவனுக்கான ஒரு கோயிலை 1887-ஆம் ஆண்டில் கட்டியுள்ளனர்.

சமீபத்தில் இந்தக் கோயில் மலேசிய அரசாங்கம் மற்றும், மாநில அரசின் அருங்காட்சியகக் கழகத்தின் (PERZIM) ஒத்துழைப்போடு பழுது பார்த்தல் மற்றும், சீரமைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டனர். கடந்த 2020 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் கும்பாபிஷேகமும் சிறப்பாக நடந்து முடிந்தது.

இந்தக் கோயிலை மலாய் மொழியில் புதிய கோயில் அல்லது Kuil Baru என அழைப்பர். இந்தக் கிராமத்தில் ஸ்ரீமுத்துமாரியம்மன் கோயிலைக் கட்டியப் பிறகு இது புதிதாக மற்றுமொரு கோயில் கட்டப்பட்டதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம்.




கம்போங் செட்டி என அழைக்கப்படும் இப்பகுதியில் இரண்டாவது முக்கியக் கோயிலாகக் கருதப்படும் இந்தக் கோயிலில் மலாக்கா செட்டிகளின் சமயம் கலாச்சாரம் சார்ந்த பல நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. மத்திய மலாக்காவில் வாழும் இந்துக்களுக்குப் பழமையான ஒரே சிவன் ஆலயமாக இது விளங்குகிறது.

சிவனுக்காக ஏற்பாடு செய்யப்படும் சமய வழிபாடுகளில் பல சிவ பக்தர்கள் இங்கு கலந்து கொள்ள வருகை தருகின்றனர். ஒவ்வொரு திங்கட்கிழமையும் சிறப்புப் பூஜை இந்தக் கோயிலில் நடைபெறும். மலாக்கா செட்டிகளின் ஸ்ரீபொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலய அறக்காப்பகம் இந்தக் கோயிலை நிர்வகிக்கிறது.

| MT 5 | ஸ்ரீ அங்கால பரமேஸ்வரி கோயில் |
|---|---|
| | *Kampung Chitty Melaka, 75200 Gajah Berang, Melaka.* |

அங்காலம்மன் பயங்கரமாகவும், கொடூரமாகவும் காட்சி அளித்தாலும், அத்தெய்வத்தை வணங்குபவர்களுக்குப் பாதுகாப்பைக் கொடுப்பவர் என்று நம்பப்படுகின்றது. ஆரம்பத்தில் விலங்குகளை உயிர்ப்பலி கொடுத்து இத்தெய்வத்தை வணங்கினார்கள். சிலர் தங்கள் குடும்பத்தைப் பாதுகாக்கும் குலத்தெய்வமாகவும் இதை வழிபட்டனர்.

சிவன் கோயில் கட்டப்பட்ட ஒரு வருடம் கழித்து, 1888-ஆம் ஆண்டில் மலாக்கா செட்டிகள் சமூகத்தின் ஒரு பகுதியினரான நாயக்கர் வகுப்பினர் தங்களது நிலத்தில் இக்கோயிலைக் கட்டினர். பிள்ளை வகுப்பினரைச் சேர்ந்த ஒரு சிலரும் இந்தக் கோயிலில் வழிபடுகிறார்கள். அங்காலம்மன், காவல் தெய்வமாக இருப்பதால் இதற்குப் பொருத்தமாகக் கிராமத்தின் எல்லை முடிவில் இக்கோயில் கட்டப்பட்டுள்ளது.

சமய அறிஞர்களின் ஆலோசனைப்படி 1969-ஆம் ஆண்டு முதல் இந்தக் கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பது நிறுத்தப்பட்டது. கோயிலின் அருகில் ஒரு குளம் இருப்பதால் உள்ளூர் மக்கள் இந்தக் கோயிலைப் பெரிய குளக் கோயில் (Kuil Kolam Besar) என்றழைக்கின்றனர்.

இந்தக் கோயிலை நிர்வகிக்கும் ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி கோயிலின் அறக்காப்பக நிர்வாகக்குழு, தீர்மானித்தபடி வழக்கமான அடிப்படையில் பூஜைகளும் மேலும், ஒவ்வொரு செவ்வாய்க்கிழமையும் சிறப்பு பூஜைகளும் நடைபெற்று வருகின்றன. 2019-ஆம் ஆண்டில் நல்ல உள்ளம் கொண்ட பக்தர்களின் நன்கொடையால் இந்தக் கோயில் சீரமைக்கப்பட்டுள்ளது.







கம்போங் செட்டி குடியிருப்புப் பகுதியில் இது மூன்றாவது கோயிலாக உள்ளது. மலாக்கா செட்டி அறங்காப்பகப் பத்திரத்தில் கண்டுள்ள 10 கோயில்களில் இதுவும் ஒன்று.

| MT 6 | ஸ்ரீ லெங்காதரியம்மன் / கங்காதரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Kampung Tujuh, 75200 Gajah Berang, Melaka.*** |

இங்கு வாழ்ந்த முன்னோர்களின் கதையின்படி, இந்தப் பகுதியில் சகல ஞானமும் பெற்ற வசதி படைத்த வயதான மாது ஒருவர் பதினெட்டாம் நூற்றாண்டில் வசித்து வந்தார். அவர் துன்பத்தில் உள்ளவர்களுக்கு உதவும் குணம் படைத்தவர். அதோடு, நோயுற்றவர்களைக் குணப்படுத்தும் தன்மை அவரிடம் இருந்ததால் அவர் தெய்வீக சக்தி உடையவர் என்று அங்குள்ள மக்கள் நம்பினார்கள். இதனால், அவர் புனிதமானவராகக் கருதப்பட்டார்.






இந்த வயதான மாது மறைந்தபோது, அங்கு அவருக்குச் சமாதி கட்டப்பட்டு அதற்கு அவருடைய பெயர் வைக்கப்பட்டது. இதை ஸ்ரீ லெங்காதரியம்மன் மற்றும், பலர் இதை கங்காதரியம்மன் என்றும் அழைக்கின்றனர் - மேலும், 1888-ஆம் ஆண்டு முதல் அப்பகுதியைச் சேர்ந்தவர்கள் அவரை வணங்கத் தொடங்கினர். மலாய்மொழியில், இந்த வழிபாட்டு இடம் பாட்டி கோயில் (Kuil Nenek) என்றும் அழைக்கப்படுகிறது.

இந்தக் கோயிலில் யாராவது ஒரு நாணயத்தைக் கண்டெடுத்தால் அது அந்த நபருக்கு நல்ல அதிர்ஷடத்தைக் கொண்டு வருவதோடு இறைவனின் பேரருளைப் பெற்றவராகத் திகழ்வார் என இன்றுவரை நம்புகின்றனர். இந்தக் கோயிலில் ஆடிப்பூஜை விழா ஒவ்வோர் ஆண்டும் நடைபெறுகிறது. மலாக்கா செட்டிகளின் ஸ்ரீ பொய்யாத விநாயகமூர்த்தி அறக்காப்பகம் இந்தக் கோயிலை நிர்வகிக்கிறது.





| MT 7 | ஸ்ரீ அய்யனார் கோயில் |
| --- | --- |
| | *Kampung Tujuh, 75200 Gajah Berang, Melaka.* |

அய்யனார் தமிழ்நாட்டில் இருக்கின்ற 21 காவல் தெய்வங்களில் ஒன்று. கிராமப் புறங்களில் விவசாயிகளின் சொத்து மற்றும், பயிர்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாமல் இருக்க கிராமத்தின் எல்லையில் இத்தெய்வம் வைக்கப்படுகிறது,









மலாக்கா செட்டி சமூகத்தினர், குறிப்பாகப் பிள்ளை வகுப்பினர், விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்த சமயத்தில், தமிழ் நாட்டில் அவர்களின் மூதாதையர் செய்ததுபோல் அய்யனார் கோயிலை நிறுவி வழிபட்டனர். அவர்களின் விவசாயப் பகுதியின் எல்லையில், இந்தக் கோயில் அமைந்தது.

மலாய் மொழியில் இந்தக் கோயிலை யானைக் கோயில் (Kuil Gajah) என அழைக்கப் படுகிறது. இந்தக் கோயிலின் இருப்பிடம் மலாக்கா செட்டி கிராமத்திலிருந்து சிறிது தொலைவில் இருப்பதால், ஆண்டுதோறும் ஆடி பூஜை மட்டுமே இங்கு நடத்தப்படுகிறது. முதலில் இந்தக் கோயிலில் விலங்குகள் உயர்ப்பலி கொடுக்கப்பட்டன. ஆனால், 1960-ஆம் ஆண்டுகளுக்குப் பிறகு இந்த நடைமுறை நிறுத்தப்பட்டது.

மலாக்கா செட்டி சமூகத்தின் சார்பாக இயங்கும் ஸ்ரீ பொய்யாத விநாயக மூர்த்தி அறக்காப்பகத்தால் இந்தக் கோயிலும் நிர்வகிக்கப்படுகிறது.

| MT 8 | ஸ்ரீ காத்தாயி அம்மன் கோயில் |
| --- | --- |
| | ***Kampung Tujuh, 75200 Gajah Berang, Melaka.*** |

காத்தாயி அல்லது கார்த்தியாயினி எனும் இரு பெயர்களும் வள்ளி எனும் தெய்வத்தைக் குறிக்கும். வேளாண்மைப் பயிர்களை எத்தகைய அழிவிலிருந்தும் இத்தெய்வம் காக்கும் எனும் நம்பிக்கையில் பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டுக் கிராமப்புறங்களில் இந்தத் தெய்வம் வணங்கப்பட்டு வருகிறது.










மலாக்கா செட்டி சமூகத்தில் பல பிரிவுகள் உள்ளன. அவற்றுள் குறிப்பாக பத்தர் வகுப்பினர், மலாக்காவின் காஜா பேராங் பகுதியில் உள்ள தங்கள் விவசாய நிலங்களில் வழிபாடு செய்ய இந்தத் தெய்வத்தைத் தேர்ந்தெடுத்து, 1875-ஆம் ஆண்டு முதல் வழிபட்டு வருவதில் ஆச்சரியமில்லை. இன்று, விவசாயம் இந்தச் சமூகத்தினரால் கைவிடப்பட்டிருந்தாலும், கோயிலை இன்னும் இவர்கள் பராமரித்து வருகின்றனர். இந்தக் கோயில் மலாக்கா செட்டி சமூகம் வாழும் பகுதியில் இருந்து சிறிது தொலைவில் இருப்பதால் ஆண்டுதோறும் ஆடிபூஜை மட்டுமே இந்தக் கோயிலில் நடத்தப்படுகிறது.

மலாக்கா செட்டி சமூகத்தின் ஸ்ரீ பொய்யாத விநாயக மூர்த்தி கோயில் அறக்காப்பகம் பராமரிக்கும் கோயில்களில் இதுவும் ஒன்று.

| MT 9 | ஸ்ரீ காளியம்மன் கோயில் |
|---|---|
| | *Kampung Lapan, Bachang, Melaka.* |

காளியம்மன் ஒரு காவல் தெய்வமாகும். கொடூரமாகக் காட்சியளித்தாலும் அந்தத் தெய்வத்தை வழிபடுவர்கள் இயற்கையின் கொடூர சீற்றத்தில் இருந்து காப்பாற்றப்படுவதோடு, வாழும் பகுதியையும் எவ்வித சேதமும் இல்லாமல் பாதுகாக்கிறது இந்தத் தெய்வம் என நம்பப்படுகிறது. வழக்கமாக இந்தத் தெய்வத்தின் கோயில் குடியிருப்பின் எல்லை அல்லது விவசாயப் பகுதியிலோ தொழில் செய்யும் இடங்களிலோ அமைக்கப்படுகின்றது.

மலாக்கா செட்டி சமூகத்தைப் பொறுத்தவரை, அவர்கள் வாழ்ந்தப் பகுதியிலிருந்து வெகு தொலைவில் அவர்கள் விவசாய நடவடிக்கைகளில் அதிகம் ஈடுபட்டிருந்த காலத்தில், அவர்களுடைய விவசாய நிலங்களில் உள்ள பயிர்களைக் காப்பதற்கு, அந்தப் பகுதியில் இந்தத் தெய்வத்திற்குச் சிறப்பு ஆலயம் கட்டப்பட்டது. ஆரம்பத்தில் இந்தக் கோயிலில் விலங்குகள் உயிர்ப்பலி கொடுக்கப்பட்டது. காலப்போக்கில், 1960-ஆம்



ஆண்டுகளில், தமிழர் திருநாள் காலங்களில் தமிழ் நாட்டிலிருந்து வருகை தந்த சமய அறிஞர்களின் அறிவுரைப்படி இந்த நடைமுறை மலாக்கா செட்டி கோயில்களில் நிறுத்தப்பட்டது.

ஆலயம் அமைந்திருந்த நிலம் தற்போது மற்றவர்களுக்கு விற்கப்பட்டு விட்டது. எனினும், நில உரிமையாளர் மறுபடியும் அதன் அருகிலேயே (Kampung 8, Bachang, Melaka) அக்கோயிலைப் புதுப்பித்துக் கட்டியுள்ளார். கோயிலில் ஆடி பூஜை எனப்படும் ஆண்டு விழாவைத் தவிர ஒவ்வொரு ஞாயிறன்றும் சிறப்புப்பூஜை நடைபெற்று வருகிறது. மலாக்கா செட்டி சமூகத்தின் ஸ்ரீ பொய்யாத விநாயகமூர்த்தி கோயில் அறக்கட்டளை இந்தக் கோயிலையும் நிர்வகிக்கிறது.





| MT 10 | ஸ்ரீ தர்ம ராஜா கோயில் |
|---|---|
| | ***Kampung Tujuh, 75200 Gajah Berang, Melaka.*** |

எம தர்ம ராஜா இறப்பின் தெய்வமாக இருந்தாலும், ஆயுள் விருத்திக்காகவும் வளமோடு வாழவும் பக்தர்கள் இத்தெய்வத்தை வணங்குகிறார்கள். இந்தத் தெய்வம் நீதியின் அடையாளமாகத் திகழ்கிறது. வாழ்க்கையில் கஷ்டங்களோ நஷ்டங்களோ ஏற்பட்டால், இவரிடம் முறையிட்டால் அனைத்தும் தீர்ந்து நன்மை கிடைக்கும் என்பது நம்பிக்கை.



மலாக்கா செட்டி சமூகத்தினரிடையே ராஜா வகுப்பினரைச் சேர்ந்தவர்கள் இந்த வழிபாட்டுத் தலத்தை நிறுவி இருக்கலாம் என நம்பப்படுகிறது. இத்தெய்வத்தை எம கண்ட நேரத்தில் வழிபட்டால் நமது ஆயுள் கூடும் என்பது ஒரு நம்பிக்கை. மலாக்கா செட்டி சமூகம் விவசாயத் துறையில் ஈடுபட்ட சமயத்தில், 1770 - ஆம் ஆண்டே இந்தக் கோயில் செயல்படத் தொடங்கியது, என்பதால் இது மலாக்கா செட்டி சமூகத்தின் தாய்க் கோயிலாகக் கருதப்படும் ஸ்ரீபொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் கட்டப்படுவதற்கு முன்பே இருந்துள்ளது. இந்தச் சமூகம் அப்போதே காஜா பெராங் பகுதியில் காலூன்றிவிட்டது என்பதற்கு நல்ல அத்தாட்சி. மலாய் மொழியில் இந்த ஆலயத்தை 'Kuil Dharma' என அழைக்கிறார்கள்.

இந்தக் கோயில் மலாக்கா செட்டிகள் வாழும் பகுதியிலிருந்து சற்றுத் தொலைவில் இருப்பதால் இந்தக் கோயிலை நிர்வகிக்கும் ஸ்ரீ பொய்யாத விநாயகமூர்த்தி கோயில் அறக்கட்டளை இந்த ஆலயத்தில் ஒவ்வோர் ஆண்டும் ஆடி பூஜை மட்டுமே நடத்த முடிவு செய்து, அதன்படியே நடத்தியும் வருகின்றனர்.







| MT 11 | ஸ்ரீ அம்மன் கோயில் |
|---|---|
| | *Kampung Tujuh, 75200 Gajah Berang, Melaka.* |

இறைவனின் சர்வ வல்லமையும், சக்தியும், அதிகாரமும் கொண்ட சக்தியின் (தேவி) மறு உருவம்தான் அம்மன். பெரும்பாலும், மலாக்கா செட்டிகள் சமூகம் பதினெட்டாம் நூற்றாண்டில் தங்கள் பயிர்களுக்கும் குடும்பங்களுக்கும் பாதுகாப்பை வழங்குவதற்காக இந்தக் கோயிலைக் கட்டியிருக்கலாம். தர்மராஜா கோயிலுக்கு அருகிலுள்ள இந்தக் கோயில் கம்போங் மலாக்கா செட்டியின் குடியிருப்புப் பகுதியில் மற்ற கோயில்கள் கட்டப்படுவதற்கு முன்பே ஆரம்பிக்கப்பட்டுள்ளது.



தேவி அல்லது சக்தியை இங்கு பெரும்பாலும் அம்மா அல்லது தாய் என்றே குறிப்பிடுகின்றனர். மேலும், இந்தக் கோயில் மலாக்கா செட்டி சமூகத்தில், குறிப்பாகக் காஜா பேராங் பகுதி முழுவதும் விவசாய நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளவர்களின் வாழ்வில் முக்கியப் பங்கு வகித்திருக்கலாம். ஸ்ரீ தர்மராஜா கோயிலுக்கு அருகில் ஏறக்குறைய 1770-ஆம் ஆண்டு வாக்கில் இந்தக் கோயிலும் நிறுவப்பட்டுள்ளது. இந்தக் கோயிலின் இருப்பிடம் மலாக்கா செட்டி கிராமத்திலிருந்து சிறிது தொலைவில் இருப்பதால், இந்தக் கோயிலில், தற்போது வருடத்திற்கு ஒரு முறை ஆடிபூஜை மட்டுமே நடைபெற மலாக்கா செட்டிகளின் ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலய அறக்கட்டளை முடிவுசெய்துள்ளது.





| MT 12 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***KM14, Tambak Paya, Ayer Molek, 75460 Melaka.*** |




ரப்பர்த் தோட்டத் துண்டாடல் பிரச்சனையை எதிர்நோக்கிய சமயத்தில் இங்கு வாழ்ந்த இந்துச் சமயத்தைச் சேர்ந்த மக்களுக்குத் தாங்கள் வழிபட ஓரிடம் வேண்டும் எனும் வேட்கையில் இந்தக் கோயிலை 1977-ஆம் ஆண்டில் திரு.பொன்னுசாமியின் முயற்சியின் மூலம் கட்டப்பட்டது. அச்சமயத்தில் மறைந்த திரு.பெருமாள் (OM Sakti) மற்றும், மறைந்த திரு.பெரியசாமி ஆகிய இருவரும் தாங்கள் வசித்த நிலங்களின் ஒரு பகுதியை இக்கோயிலுக்குத் தானமாக வழங்கினார்கள். சிறிது காலத்திற்குப் பிறகு மறைந்த திரு.பெருமாள் அவர்கள் மேலும், கூடுதலாக நிலத்தை மண்டபம் கட்டுவதற்கு ஒதுக்கித் தந்தார். தற்போது இந்தக் கோயில் நிலம் டத்தோ விஸ்வநாதன் பெருமாள் பெயரில் உள்ளது.

1978-ஆம் ஆண்டு முதல் மாரியம்மன் திருவிழா ஆனி மாதத்தில் தொடர்ச்சியாக, உபய நாட்களையும் சேர்த்து, ஒன்பது நாட்கள் நடத்தப்படுகிறது. முன்பு இங்கு வசித்த மக்கள் வெளியே குடியேறி இருந்தாலும், திருவிழா சமயத்தில் இங்கு வருகை தந்து நண்பர்களையும் உறவினர்களையும் சந்திக்கக்கூடிய வாய்ப்பாக இதைப் பயன்படுத்திக் கொள்வதோடு மூதாதையரின் மரபுச் சின்னமாக இக்கோயிலைப் பாவித்து வழிபடுகின்றனர்.

இக்கோயிலின் கும்பாபிஷேகம் 2022-ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் நடைபெற்றது. இதுவரை நான்கு கும்பாபிஷேகங்களை இந்தக் கோயில் கண்டுள்ளது. கோயிலின் நிர்வாகக் குழு, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 1982-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது. பொது மக்களின் வசதிக்காக விரைவில் இங்கு ஒரு திறந்த மண்டபம் கட்டக் கோயில் நிர்வாகம் தீர்மானம் கொண்டுள்ளது.







| MT13 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Taman Paya Rumput Perdana, 76450 Paya Rumput, Melaka.* |



மறைந்த திரு குழந்தையப்பன் செட்டியார் அவர்களின் தோட்டமான PV தோட்டத்தில் 1937-ஆம் ஆண்டுகளில் தோட்ட நிர்வாகமும் அங்கு வேலை செய்த தொழிலாளர்களும் சேர்ந்து ஸ்ரீ மகா மாரியம்மன் கோயிலை உருவாக்கினர். பிறகு அங்கு வழிபாடு நடத்துபவர்கள் அந்தக் கோயிலின் பெயரை ஸ்ரீ மகா கருமாரியம்மன் என மாற்றினார்கள்.

1990-ஆம் ஆண்டுகளில் இந்தத் தோட்டத்தை டான்ஸ்ரீ கிஷு (குளோப் சில்க் ஸ்டோரின் முன்னாள் உரிமையாளர்) அவர்கள் வாங்கினார். அவர் அந்தத் தோட்டத்தைக் கோல்ப் விளையாடும் திடலாக மாற்ற விரும்பினார். அதனால், ஏறக்குறைய 18 ஆண்டுகள் அந்தக் கோயிலில் எந்தவித வழிபாடோ அல்லது கும்பாபிஷேகமோ நடைபெறாமல் தடங்கல் ஏற்பட்டுவந்தது. பிறகு வீடமைப்புத் திட்டம் ஒன்றை அந்தப் பகுதியில் தொடங்க ஒரு சீனர் அந்த நிலத்தை வாங்கினார். அவர் பத்தாயிரம் சதுர அடி பரப்பளவு கொண்ட இந்தக் கோயில் நிலத்தைக் கோயில் வசமே ஒப்படைத்தார்.



தற்போது கோயிலுக்கு ஒதுக்கப்பட்ட நிலமாக அந்த நிலம் மாநகராட்சி மன்றத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஆய்வு நடந்த சமயம் கோயில் நிர்வாகம் நிலப் பட்டாவிற்காகக் காத்திருந்தது. எனினும், கோயிலில் நடவடிக்கைகள் இன்று சிறப்பாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2011-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது. அருகில் உள்ள வீடமைப்புத் திட்டங்களில் குடியேறி இருக்கின்ற இந்துச் சமயத்தைச் சேர்ந்த மக்கள் இந்தக் கோயிலை இன்று பயன்படுத்தி வருகின்றனர்.

ஆண்டுதோறும் ஆகஸ்டு மாதத்தில் தொடர்ச்சியாக 12 நாட்களுக்கு கடந்த 12 வருடங்களாக முளைப்பாரி திருவிழா இங்கு நடத்தப்பட்டு வருகிறது. 2008-ஆம் ஆண்டில் கும்பாபிஷேகம் நடைபெற்றது.





அடுத்தக் கும்பாபிஷேகம் 2020-ஆம் ஆண்டு நடத்த நிர்வாகக் குழு தீர்மானித்துள்ளது. முன்பு இந்தத் தோட்டத்தில் வேலை செய்த தொழிலாளர்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் இந்தக் கோயில் திருவிழாவிற்கும் மற்றும், கும்பாபிஷேகத்திற்கும் வருகின்றனர்.

| MT 14 | **ஸ்ரீ வனத்தாண்டவர் கோயில்** |
|---|---|
| | ***Batu 12¼, Sungai Udang, 76300 Melaka.*** |





கேம் திரேண்டாக் இராணுவ முகாமில் பணிபுரிந்த இந்துச் சமயத்தைச் சேர்ந்த நேப்பாளி வீரர்களால் 1950-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் உருவாக்கப்பட்டது. பிறகு நாடு சுதந்திரம் அடைந்த பிறகு, டத்தோ டாக்டர் சன்னாசி அண்ணாமலை அவர்களின் தலைமையில், 1985-ஆம் ஆண்டில் திரேண்டாக் முகாமில் வாழ்ந்த மலேசிய இந்துச் சமயத்தைச் சேர்ந்த இராணுவத்தினரால் கோயில் ஆகம முறைப்படி கட்டப்பட்டது.



இன்று சொந்த நிலத்தில் உள்ள இந்தக் கோயிலின் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 1980-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.

1985-ஆம் ஆண்டு முதல் கோயிலின் ஆண்டுத் திருவிழா டிசம்பர் மாதத்தின் முதல் வாரத்தில் தொடர்ச்சியாக 10 நாட்கள் உபய நாட்களுடன் சேர்த்துக் கொண்டாடப்படுகிறது. கோயிலின் கும்பாபிஷேகம் 1986-ஆம் ஆண்டு நடைபெற்றது. இங்கு பணிபுரிந்த இராணுவத்தினரின் குடும்ப உறுப்பினர்களும், வாரிசுகளும் மற்றும், உறவினர்களும் திருவிழாவன்று வருகைதந்து கோயிலின் நிகழ்ச்சிகள் யாவும் வெற்றி அடைய ஒத்துழைப்பை வழங்குகின்றனர்.

கோயிலில் தினசரிப் பூஜைகளில் சுங்கை ஊடாங் வட்டாரத்தில் வாழக்கூடிய இந்துப் பெருமக்கள் கலந்து கொள்கின்றனர். இந்த ஆய்வின்போது வெள்ளம் அல்லது பிற இயற்கை பேரழிவுகள் போன்ற அவசரக் காலங்களில் 20 பேர்கள் தங்கக் கூடிய தங்குமிடம் போன்ற கூடுதல் வசதிகளுடன் கோயில் கட்டிடம் மறுசீரமைப்புச் செய்யப்பட்டு வந்தது. இப்பணிகள் யாவும் 2021-ஆம் ஆண்டு இறுதிக்குள் நிறைவடையும் என எதிர்பார்க்கப்படுகிறது. கோயிலின் திருப்பணிகள் முடிவுற்றதும் கும்பாபிஷேகம் 2022-ஆம் ஆண்டு நடத்துவதென கோயில் நிர்வாகம் முடிவு செய்துள்ளது.

| MT 15 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Batu 11, Ladang Bukit Kajang, Bemban, 77200 Melaka.*** |

இந்தத் தோட்டத்தில் வேலை செய்து வந்த இந்துத் தொழிலாளர்களின் வசிப்பிடத்திற்கு அருகில் இந்துச் சமயத் தொழிலாளர்கள் 1906-ஆம் ஆண்டுகளில் இக்கோயிலை உருவாக்கினர். கால ஓட்டத்தில் பலமுறை இக்கோயில் பழுதுப் பார்க்கப்பட்டும் புதுப்பிக்கப்பட்டும் உள்ளது. ஜாசின் - மலாக்கா பிரதான சாலை அருகில் அமைந்துள்ள இக்கோயில் புக்கிட் காஜாங் தோட்டத்திற்குச் சொந்தமான நிலத்தில் அமைந்துள்ளது.






மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக இந்தக் கோயிலின் நிர்வாகம் 2012-ஆம் ஆண்டில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. கோயில் நிலத்தைப் புக்கிட் காஜாங் தோட்ட நிர்வாகத்திடமிருந்து கையகப்படுத்த முயற்சி செய்து வருகின்றனர் கோயில் நிர்வாகத்தினர்.

ஒவ்வோர் ஆண்டும் ஜூன் மாதத்தில் உபய நாட்கள் உட்பட தொடர்ச்சியாகப் பத்து நாட்கள் மாரியம்மன் திருவிழா வெகுவிமரிசையாக நடத்தப்படுகிறது. இங்கு முன்பு வேலை செய்த, ஆனால், தற்போது தொலைவில் வசிக்கக்கூடியத் தொழிலாளர்களின் குடும்பங்கள் மற்றும், அவர்களது வாரிசுகள் உறவினர்கள் நண்பர்கள் போன்றோர் இந்தக் திருவிழாவின்போது ஒன்று கூடுகிறார்கள். திருவிழாவில் கலந்து கொள்ளும் அதே வேளையில் நண்பர்களையும் உறவினர்களையும் சந்தித்து அளவளாவ இது ஒரு வாய்ப்பாக அவர்களுக்கு அமைகின்றது.

ஆகக் கடைசியாக 2004-ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகத்தோடு இதுவரை இரண்டு முறை கும்பாபிஷேகங்கள் இந்தக் கோயிலில் நடைபெற்றுள்ளன. அடுத்தக் கும்பாபிஷேகம் நடத்துவதற்கு முன்னால் இந்த நிலத்தைக் கோவிலுக்காகக் கையகப்படுத்த வேண்டும் என்ற தீர்மானத்தில் உள்ளனர் இந்தக் கோயில் நிர்வாகத்தினர்.





| MT 16 | அருள்மிகு ஸ்ரீ சமயபுரம் மாரியம்மன் நாகேஸ்வரி கோயில் |
| --- | --- |
| | *Tepi Sungai Melaka, Belakang Yayasan Tsu Chi, 75350 Batu Berendam, Melaka.* |

தமிழ்நாட்டில் உள்ள திருச்சியில் இருக்கும் சமயபுரம் மாரியம்மன் கோயில் ஒரு புகழ் பெற்ற ஆலயமாகும். கோயிலில் உறையும் தேவியைத் தரிசித்து அருள் பெற உலகெங்கிலுமிருந்து பக்தர்கள் இந்தக் கோயிலுக்கு வருகை தருகின்றார்கள். சமயபுரம் என்பதன் பொருள் சரியான சமயம், அதாவது, இத்தெய்வம் தன் பக்தர்களுக்கு உரிய நேரத்தில் தேவையான உதவிகளைச் செய்யும் என்பது நம்பிக்கை.



மலாக்காவில் பத்து பெரண்டாம் எனுமிடத்தில் மலாக்கா ஆற்றங்கரையோரத்தில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. அங்குள்ளவர்களின் கூற்றுப்படி, சிறிது காலத்திற்கு முன்னால் இந்த மலாக்கா நதியின் கரையோரத்தில் மீனவர்கள் வழிபட்ட நாகம்மா சிலையும் மற்றும், வழிபாட்டுத் தடயங்களும் கண்டெடுக்கப்பட்டன. பிறகு இவற்றைக்கொண்டு 1970-ஆம் ஆண்டில் இங்கு ஓர் அம்மன் கோயிலை அங்குள்ளவர்கள் உருவாக்கினர். பிறகு இந்தக் கோயிலை அருள்மிகு ஸ்ரீ சமயபுரம் மாரியம்மன் நாகேஸ்வரி எனும் பெயருக்கு மாற்றி இன்றுவரை இதனை நிர்வகித்து வருகின்றனர். இந்துக் கோயிலில் உள்ள தெய்வத்தின் அருள் சக்தியை அவர்கள் நம்புகிறார்கள். அதோடு, ஒவ்வொரு மாலையும் சிறப்புப் பூஜைகள் நடைபெறுகின்றன. ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத்தில் வெகு விமரிசையாகத் திருவிழாவும் கொண்டாடப்பட்டு வருகிறது.



பத்து பெரண்டாம் பகுதியில் அமைந்திருக்கும் குடியிருப்புப் பகுதிகளில் வசிக்கும் இந்துக்களும், அருகில் இருக்கும் விடுதிகளில் தங்கியிருக்கும் தொழிலாளர்களும் மற்றும், மாணவர்களும் இந்த ஆலயத்திற்கு வருகைத் தந்து வழிபாடுகளில் கலந்து கொள்கிறார்கள். மலாக்காவில் இருக்கும் மற்ற ஆலயங்களை விட இந்த ஆலயம் புதிதாக இருப்பதால் இங்கும் பல வசதிகளை மேம்படுத்த கோயில் நிர்வாகம் முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது.

Tsu Chi அறவாரியத்தின் நிலத்தில் இந்த ஆலயம் அமைந்திருந்தாலும் இந்த அறவாரியம் இந்தக் கோயில் தொடர்ந்து செயல்பட அனுமதியை வழங்கி இருக்கின்றது. அதோடு, அந்தக் கோயிலில் ஒரு பகுதி மலாக்கா ஆற்றங்கரையில் உள்ள அரசாங்க நிலத்தில் இருக்கின்றது. நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சியும் நடக்கிறது. மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இந்தக் கோயில் நிர்வாகம் ஒரு பக்தர்கள் சங்கமாக 2012-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.

| MT 17 | ஸ்ரீ சுந்தர மூர்த்தி விநாயகர் கோயில் |
|---|---|
| | *PBB-5, Jalan Bachang Baru, 75350 Melaka.* |





இந்தக் கோயில் ஆரம்பத்தில், 1952-ஆம் ஆண்டில், மலாக்கா பொது மருத்துவமனையின் அருகில் உள்ள மருத்துவமனை ஊழியர்களின் குடியிருப்புப் பகுதியில் அமைந்திருந்தது. அந்தச் சமயத்தில் மலாக்கா பொது மருத்துவமனையில் பணிபுரிந்த ஊழியர்களால் இது கட்டப்பட்டது. மேலும், இந்த மருத்துவமனையில் பணிபுரிந்த ஊழியர்களும் மற்றும், மருத்துவமனை பணியாளர் குடியிருப்புகளில் உள்ள இந்துக்களும் இந்த ஆலயத்தை அப்போது பயன்படுத்தி வந்தனர்.

மலாக்கா பொது மருத்துவமனை மேம்பாட்டுத் திட்டங்களுக்கு ஆளான போது, அங்குள்ள பணியாளர்களின் குடியிருப்புப் பகுதிகள் இடிக்கப்பட்டன. இதனால், இந்தக் கோயில் 1996-ஆம் ஆண்டு பாச்சாங்கில் உள்ள தற்போதைய இடமான மலாக்கா ஆற்றங்கரை ஓரத்தில், அதாவது, இப்போது உள்ள இடத்திற்கு, மாற்றப்பட்டது. கோயிலுக்குப் பத்தாயிரம் சதுர அடி நிலம் 2001-ஆம் ஆண்டு அரசாங்கத்தால் வழங்கப்பட்டது. 2006-ஆம் ஆண்டு ஒரு புதிய கோயில் அமைக்கப்பட்டது. இந்தக் கோயில் இப்போது, 2019-ஆம் ஆண்டு ஜூலை மாதம், அதன் இரண்டாவது கும்பாபிஷேகத்தை வெகு விமரிசையாக நடத்தி முடித்துள்ளது.

இந்தக் கோயிலில் இன்று பல வசதிகள் உள்ளன. தகுதி வாய்ந்த குருக்கள் இந்த ஆலயத்தில் இருப்பதால் வாரம்தோறும் சமய உரைகள் இடம்பெறுகின்றன. இந்தக் கோயிலில் சிறப்பு நாட்களில் நடக்கும் பூஜையோடு தினமும் காலை-மாலை இரு வேளைகளிலும் இங்குச் சிறப்புப் பூஜைகள் நடத்தப்படுகின்றன. அதோடு, சிறப்பு நாட்களிலும் உபயம் போன்ற நாட்களிலும் அதிகமான பக்தர்கள் இந்த ஆலயத்தில் ஒன்று கூடுகின்றனர்.

பக்தர்களுக்கு பல நல்ல திட்டங்களை வகுத்து சுறுசுறுப்பாக இயங்கும் மலாக்காவில் உள்ள சில கோயில்களில் இதுவும் ஒன்று. கோயிலின் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாக 1972-ஆம் ஆண்டு முதலே பதிவாகியுள்ளது.





| MT 18 | தேவி ஸ்ரீ ஓம் சக்தி மகா முனீஸ்வரர் / ஸ்ரீ வீர காளியம்மன் கோயில் |
|---|---|
| | *Lot 15152, Taman Merdeka Jaya, 75350 Melaka.* |



இந்தக் கோயிலை நிர்வகிக்கும் குழுவின் கூற்றுப்படி இந்த இடத்தில் பேச்சியம்மாள் தேவி குடி கொண்டிருப்பதாக ஒரு பக்தர் கனவு கண்டதாகவும், அதன்படி அங்கு தேடிப் பார்த்த பொழுது பேச்சியம்மாள் தேவியும் மற்றும், நாகம்மா தேவியும் அங்கு இருந்ததற்கான அறிகுறிகள் தென்பட்டதாகவும் தெரிகிறது. இது நடந்த, 2004-ஆம் ஆண்டு முதல் அந்தப் பக்தர் அந்த இடத்தில் பேச்சியம்மன் கோயிலில் வழிபாடு செய்து வருகிறார்.

2012-ஆம் ஆண்டு முதல் அங்கு வாழும் பிற பக்தர்களும் அவரோடு இணைந்து ஒரு நிர்வாகக் குழுவை ஏற்படுத்தி ஸ்ரீ முனிஸ்வரரையும் இணைத்து அந்தக் கோயிலுக்கு தேவி ஸ்ரீ ஓம் சக்தி மகா முனீஸ்வரர் கோயில் எனப் பெயரிட்டனர். அதோடு, பெண்களையே பெரும்பாலோராகக் கொண்ட இந்த நிர்வாகம் இந்த ஆலயத்தை இன்று வரை நிர்வகித்து வருகின்றது.

இந்தக் கோயில் வலுவான கட்டிடத்தையும், மற்ற பிற வசதிகளையும் கொண்டிராவிட்டாலும் ஒவ்வொரு நாளும் தெய்வத்திற்குத் தீபம் ஏற்றி வைப்பதோடு சிறப்பு நாட்களில் வழிபாடும் நடைபெற்று வருகின்றது. டிசம்பர் மாதத்தில் வழக்கமாக ஆண்டுத் திருவிழா நடக்கும் பொழுது விலங்குகளை உயிர்ப் பலி கொடுப்பதும் உண்டு. இந்தக் கோயிலுக்கு விசுவாசமாக இருப்பவர்கள் இங்குள்ள தெய்வத்திடம் பெரும் சக்தி இருப்பதாகவும் மேலும், பலமுறை தெய்வத்தின் அருட்கடாட்சத்தைப் பெற்றுள்ளதாகவும் கூறுகிறார்கள்.

2019-ஆம் ஆண்டில் பாச்சாங்கில் ஒரு தனியார் நிலத்தில் 2007-ஆம் ஆண்டிலிருந்து இயங்கி வந்த ஸ்ரீவீரகாளியம்மன் கோயில் அங்கிருந்து அகற்றப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதால் இக்கோயில் நிர்வாகம் அதனை இந்தக் கோயிலின் அருகில் அமைத்துக்கொள்ள ஒப்பியது. ஆனால், இந்த ஆய்வு நடைபெற்ற சமயம் இரு கோயில்களையும் இணைத்து செயற்குழு அமையவில்லை.

ஸ்ரீ வீரகாளியம்மன் கோயில் இங்கு மாறி வருவதற்கு முன்னால் சிறியதாக செயல்பட்டு இருப்பினும், இப்போது புதிய இடத்தில் வசதிகளை மேம்படுத்தவும் பல நிகழ்ச்சிகளை நடத்தவும் ஸ்ரீ முனீஸ்வரர் கோயிலுடன் இணைந்து செயல்படவும் முனைந்துள்ளனர். ஜனவரி மாதத்தில் கொண்டாடப்படும் இக்கோயிலின் திருவிழாவில் சில சமயங்களில் விலங்குகளின் உயிர்ப் பலி கொடுப்பதும் உண்டு.

இருப்பினும், இந்தக்கோயில் மலாக்கா மாநில அரசுக்கு, குறிப்பாக நதி-நீர்ப்பாசன இலாகாவிற்கு சொந்தமான நிலத்தில் அமைந்துள்ளது. நிர்வாகம் நிலத்தைக் கையகப் படுத்தும் முயற்சியில் இறங்கியுள்ளதாகவும் தெரிகிறது. எனினும், ஆய்வு நடைபெற்றச் சமயம், இந்த இரண்டு கோயில் நிர்வாகங்களும் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுபெற்றிருக்கவில்லை.





| MT19 | ஸ்ரீ முத்து மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | *PT2546, Taman Bukit Melaka, Bukit Beruang, 75450 Melaka.* |

இந்தக் கோயில் தொடக்கத்தில் லெபோ ஆயர் குரோ-புக்கிட் பெருவாங் முச்சந்தியில், மலாக்கா நகராண்மைக் கட்டடத்தின் அருகில் 1960-ஆம் ஆண்டுகளில் அமைந்திருந்தது. அக்காலத்தில் காலஞ் சென்ற பூசாரி சொக்கலிங்கம் கோயிலை நடத்திவந்தார். பிறகு, சாலை விரிவாக்கம் காரணமாக, இந்தக் கோயிலை இடமாற்றம் செய்யவேண்டிய சூழ்நிலை உருவாகி, புக்கிட் பெருவாங் பகுதிக்கு மாறும் சூழ்நிலை உருவாகியது.






அரசாங்கம் லீஸ் எனப்படும் 35-ஆண்டு குத்தகை அடிப்படையில் 1.858.06 சதுர மீட்டர் பரப்பளவுள்ள நிலத்தை இந்தக் கோயிலுக்கு, புக்கிட் பெருவாங் குடியிருப்புப் பகுதியில் கொடுத்தது. இங்கு அதிக இந்துக் குடும்பங்கள் வாழ்வதால், அவர்களுக்கு வழிபடும் தலமாக இந்தக் கோயில் திகழ்கிறது.

1993-ஆம் ஆண்டு இந்தக் கோயில் கட்டடம் பூர்த்தியாகி, ஸ்ரீமுத்து மாரியம்மன் ஆலயம் எனும் பெயருடன் செயல்படத் தொடங்கியது. கோயிலில் யாகசாலையும், சிவாலயமும், துரைசாமி செட்டியார் மண்டபமும் இருக்கின்றன. இந்த மண்டபம் பல சமய, சமூக நிகழ்சிகளை நடத்தப் பயன்பட்டு வருகிறது.

1993-ஆம் ஆண்டிலிருந்து இந்தக் கோயில் நிர்வாகம் ஒரு பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகியுள்ளது. ஆய்வின் சமயத்தில் 150-க்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. புக்கிட் பெருவாங் வட்டார

பக்தர்களுடன், இவ்வட்டாரத்தில் தங்கிப் பயிலும் இந்து மாணவர்களுக்கும் இந்தக் கோயில் தொடர்ந்து பயன்படுகிறது.

1993-ஆம் ஆண்டிலிருந்து சித்திரா பௌர்ணமி இந்தக் கோயிலின் திருவிழாவாகும். உபயங்களுடன் பத்து நாட்களுக்கு விமரிசையாக நடைபெறும். 2013-ஆம் ஆண்டுடன் இரண்டு தடவை கும்பாபிஷேகம் கண்டுள்ளது இந்தக் கோயில். பல நிகழ்ச்சிகளுடன் முனைப்பாகச் செயல்படும் கோயில்களில் இதுவும் ஒன்று.



| MT20 | ஸ்ரீ நாக காளியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Kampung Tampoi, Batu 7 ½ , Jalan Industri Krubung, 75250 Melaka.* |

இந்தக் கோயில் முன்பு ராமன் செட்டியாருக்குச் சொந்தமான தோட்ட நிலத்தில் அமைந்துள்ளது. தோட்டத் தொழிலாளர்களாக இங்கு வேலை செய்த திரு.முனியாண்டி மற்றும், திரு.அழகப்பா மண்டோர் ஆகிய இருவரும் 1930-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் அமைய முக்கியப் பங்கு வகித்துள்ளனர். அன்றிலிருந்து இன்றுவரை இந்தக் கோயில் பலவித மாற்றங்களை அடைந்து வந்துள்ளது. நாடு சுதந்திரம் அடைந்த சமயத்தில் இந்தத் தோட்டத்தில் ஏறக்குறைய 300-க்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் வேலை செய்து வந்தனர். இந்தக் கோயிலில் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ நாகம்மா தேவி பெரும் சக்தி படைத்தவராக இங்கு வழிபட்டு வருபவர்கள் கருதுகிறார்கள்.

காலப்போக்கில் இந்தத் தோட்டம் ஒரு சீனருக்கு விற்கப்பட்டு லாம் ஜூ தோட்டம் எனப் பெயர் மாற்றம் கண்டது. பிறகு இந்தப் பகுதியைக் குருபோங் தொழிற்பேட்டையாக மாற்றும் திட்டத்தில் இந்தத் தோட்டத்தை அரசாங்கம் கையகப்படுத்தியது. இதனால், இங்குள்ளத் தொழிலாளர்கள் அருகிலுள்ள குடியிருப்புப் பகுதிகளில் குடியேறும் சூழ்நிலைக்கு ஆளானார்கள். தற்போது இந்தக் கோயில் உள்ள இடம் பொதுப்பணித் துறைக்குச் சொந்தமான சாலை பராமரிப்புப் பகுதியில் அமைந்துள்ளது.

கோயிலுக்கு மாற்று நிலம் கேட்டுப் பெறுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆய்வு நடைபெற்றச் சமயம் இது இன்னும் வெற்றி அடையவில்லை. இருப்பினும், விரைவிலேயே இதற்கு ஒரு தீர்வுக் கண்டு வேற்று இடத்திற்கு மாற்றலாகிச் செல்ல வேண்டும் என்ற குறிக்கோளுடன் கோயில் நிர்வாகம் உள்ளது.

ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதத்தில் இந்த ஆலயத்தில் காளியம்மன் திருவிழா நடைபெறும். முன்பு இங்கு வேலை செய்தவர்களின் வாரிசுகள், உறவினர்கள் போன்றோர் வெவ்வேறு இடங்களிலிருந்து வந்து இந்தத் திருவிழாவின்போது ஒன்று கூடுவர். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2011-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.



| MT21 | ஸ்ரீ மதுரை வீரன் (முனீஸ்வரர்) கோயில் |
|---|---|
| | *Kawasan Perindustrian Krubung, 75250 Melaka.* |

குருபோங் தொழில்பேட்டைப் பகுதிகளில் பணியாற்றும் இளைஞர்கள் குழு இந்தக் கோயிலை 2015-ஆம் ஆண்டில் தோற்றுவித்தனர். இதற்கு முன்னோடியாக இருந்தவர்கள் திரு. மகேந்திரன் மற்றும், திரு.வெங்கடேசன் ஆகியோர் ஆவர். முதலில் முனீஸ்வரர் பெயரில் கோயில் தொடங்கப்பட்டு, பிறகு மதுரை வீரன் பெயரில் செயல்படுகிறது.



கனரக வாகனங்களைக் கொண்ட ஒரு நிறுவனம் அதன் இயந்திரங்கள் மற்றும், உபரி பாகங்களைப் பாதுகாப்பாக வைத்திருக்க ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து அதில் சில இந்து இளைஞர்களைப் பாதுகாப்புக் காவலர்களாகளாக நியமித்தது. இந்த இடம் நீர்ப்பாசனம் மற்றும், வடிகால் இலாகாவற்கு ஒதுக்கப்பட்ட நிலமாகும். இவர்களும் மற்றும், அங்கு வேலை செய்து வந்த இந்துக்களும் அங்கு ஒரு மரத்தடியில் முனீஸ்வரர் குடி கொண்டிருக்கிறார் என்ற நம்பிக்கையிலும் அவர் அவர்களுக்கு பாதுகாப்பு வழங்குவார் என்ற எண்ணத்திலும் வழிபட ஆரம்பித்தனர். அண்மையில் மதுரை வீரன் கோயிலாக மாறியுள்ளது.

இந்தக் கோயிலில் 2015-ஆம் ஆண்டு முதல் ஒவ்வொரு வருடமும் நவம்பர் மாதத்தில் திருவிழா கொண்டாடப்பட்டு வருகிறது. ஆடு மற்றும், சேவல் போன்றவற்றை உயிர்ப் பலி கொடுக்கிறார்கள். இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.

| MT 22 | ஸ்ரீ சுப்ரமணியர் தேவஸ்தானம் |
|---|---|
| | ***Lot 88-89, Solok Bangsal. Jalan Keretapi Lama, 75350 Batu Berendam, Melaka.*** |



1965-ஆம் ஆண்டு நிலம் பெறப்பட்டு, புதிய கட்டிடம் கட்டப்பட்டு, 1966-ஆம் ஆண்டு ஜூலை 10-ஆம் திகதியில் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டிருந்தாலும், உண்மையில் இந்தக் கோயிலின் ஆரம்பம் 1920-ஆம் ஆண்டுகளில் தொடங்குகிறது. மலாக்காவிலிருந்து தம்பினுக்கு ரயில்வே சேவை (KTM) இருந்த போது அங்கு பணிபுரிந்த ரயில்வே தொழிலாளர்கள் தங்கள் வழிபாட்டிற்காக இங்கு ஏற்படுத்தப்பட்டிருந்த சிறிய கோயில்தான் இது. எனினும், ரயில் சேவை துண்டிக்கப்பட்டு, பணியாளர்கள் வெளியேறியதால் கோயில் கைவிடப்பட்ட நிலை ஏற்பட்டது.

அச்சமயத்தில் நீர்ப் பாசன மற்றும், வடிகால் இலாகாவில் பணிபுரிந்த இந்துத் தொழிலாளர்கள் இந்தச் சிறிய ஆற்றோரக் கோயிலை விரிவாக்கி வழிபட விரும்பிச் செயல்பட்டதன் விளைவால்தான் இந்தக் கோயில் இன்று மலாக்கா வாழ் மக்களுக்கான பொதுக் கோயிலாகத் திகழ்கிறது. மலாக்கா நகரில் மற்றும், அதன் சுற்று வட்டாரத்தில் வசிக்கக்கூடிய பெரும்பாலான இந்து அரசு ஊழியர்களும் மற்றும் இந்துச் சமயத்தைச் சார்ந்த வணிகர்களும் இந்த ஆலயத்தில் உறுப்பினராகச் சேர்ந்து ஆலய மேம்பாட்டிற்காகத் தங்கள் பங்கினை ஆற்றி வருகின்றனர்.

கோயில் நிர்வாகத்தின் முயற்சியால் மற்றும், பல நல்ல உள்ளம் கொண்ட கொடையாளர்களின் உதவியால் கோயில் நிலத்தைத் தவிர மேலும், அருகிலுள்ள நிலத்தையும் வாங்கியுள்ளனர். கோயில் தன்னுடைய நடவடிக்கைகளை நடத்துவதற்கு பெரியதொரு 1.734 ஏக்கர் பரப்பளவுள்ள வளாகத்தைப் பெற்றுள்ளது. திருமணம் போன்ற நிகழ்ச்சிகளை நடத்துதல் உட்பட பல்வேறு வசதிகளை இந்த ஆலயம் கொண்டுள்ளது. தற்போது பல்நோக்கு மண்டபம் ஒன்றும் கட்டப்பட்டு வருகிறது.

ஜனவரி அல்லது பிப்ரவரி மாதத்தில் வரக்கூடிய தைப்பூசத்தன்று இந்த ஆலயத்தின் திருவிழா நடைபெறுகிறது. ஏறக்குறைய பத்தாயிரம் பக்தர்களுக்கு மேல் திருவிழாவன்று ஒன்று கூடுகின்றார்கள். ஆற்றங்கரை ஓரத்தில் அமைந்திருக்கும் இந்த ஆலயம் மனதிற்கு இதமான அமைதியான சூழ்நிலையைக் கொண்டு உள்ளது. சிறந்த ஆற்றல்மிக்க நிர்வாகத்தை இக் கோயில் பெற்றிருப்பதால் மலாக்காவில் ஒரு முக்கிய முன்னோடி ஆலயமாக உருவாக இதற்கு எல்லா வாய்ப்புகளும் உள்ளன. இந்தக் கோயில் நிர்வாகம் 1972-ஆம் ஆண்டிலிருந்து மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாகப் பதிவாகியுள்ளது.





| MT23 | ஸ்ரீ வனபத்ர காளியம்மன் கோயில் |
|---|---|
| | *No.70, Jalan Sri Krubung, Jalan PK26, Taman Perindustrian Krubung, 75250 Melaka. (Belakang Gereja Lady of Guadalupe)* |




1930-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்ட இந்த ஆலயம் நாக காளியம்மன் (MT20) ஆலயத்தின் ஒரு பகுதியாகும். ராமன் செட்டியார் தோட்டத்தில் உருவான இவ்வாலயத்தின் நிலம் சீனத் தோட்ட முதலாளிக்கு உரிமையாகி, பிறகு இப்பகுதி குருபோங் தொழிற்பேட்டையாக மாறியுள்ளது. இந்தக் கோயிலை நிர்வகிப்பவர்களின் கூற்றுப்படி மலாக்கா நதிக்கரையில் அமைந்திருந்த இந்தக் கோயில் இருந்த இடத்திலிருந்துதான் தொடக்கக் காலங்களில் சன்னாசி மலை ஆண்டவர் கோயிலுக்குத் தங்கள் வேண்டுதல்களை நிறைவேற்ற மற்றும், காணிக்கைகளைச் செலுத்தக் காவடிகள் மற்றும், பால்குடம் ஏந்தி ஊர்வலமாகச் சென்றார்கள்.

குறிப்பாக ராமன் செட்டியார் வசம் தோட்டம் இருந்தக் காலக்கட்டத்தில் சன்னாசி மலை ஆண்டவர் கோயிலின் திருவிழா பங்குனி உத்திரம் தினத்தன்று கொண்டாடப்பட்டு வந்துள்ளது. பிறகுதான் அது மாசி மகத் தினத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. இந்தத் தோட்டம் Lam Joo எனும் சீனர் வசம் மாறியபோது இந்த வழக்கம் நிறுத்தப்பட்டது. இருப்பினும், ஒரு சிலர் தொடர்ந்து இங்கு பூஜைகளை நடத்தி வந்துள்ளனர்.

அதோடு, இந்தக் கோயிலின் பெயரும் ஸ்ரீ வனபத்திரக் காளியம்மன் என மாற்றம் கண்டது. அந்தத் தோட்டத்தில் பிரதான கோயிலாக இருந்த ஸ்ரீ நாக காளியம்மன் கோயில் நிர்வாகத்திடம் இருந்து









இதன் நிர்வாகம் பிரிந்தது. இங்கு வழிபடும் பக்தர்கள் இங்குள்ள தெய்வம் மிகவும் சக்தி வாய்ந்தது என நம்புகிறார்கள். இதற்குக் காரணம் இந்த இடத்தில் பழைய தெய்வ விக்ரகங்கள் கண்டுபிடிக்கப்பட்டது மட்டுமின்றி அவர்களின் சொந்த வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களும் இந்த நம்பிக்கையை மேலும் வலுப்படுத்துவதாகக் கூறுகிறார்கள். இங்கு ஆலயத் தலைவர் ஒவ்வொரு ஞாயிறு இரவு அன்றும் அருள்வாக்கு கூறுகின்றார்.

இன்று இந்தக் கோயில் அமைந்திருக்கும் இடம் நீர்ப் பாசன மற்றும், வடிகால் (JPS) இலாகாவிற்குச் சொந்தமாக உள்ளது. இந்த நிலத்தைக் கோயிலுக்கு உரிமையாக்கப் பல முயற்சிகளும் செய்து வருகின்றனர். இதுவரை எந்த ஒரு முடிவும் இல்லாமல் இருக்கின்றது. ஒவ்வோர் ஆண்டும் ஆடி மாதத்தில் அல்லது ஆகஸ்ட் மாதத்தில் திருவிழா கொண்டாடப்படுகின்றது. இத்திருவிழாவில் விலங்கு உயிர்ப்பலி கொடுக்கப் படுகின்றது. இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுப் பெறவில்லை.

| MT24 | **தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயில் (பழைய பெயர்: ஸ்ரீ முனியாண்டி கோயில்)** |
|---|---|
| | ***Lot 1551, Bertam Ulu, Jalan Tanjung Minyak, 75250 Melaka.*** |

ஏறக்குறைய 120 ஆண்டுகள் பழமை வாய்ந்த இத்திருக்கோயில், தஞ்சோங் மிஞ்ஞாக் ரப்பர்த் தோட்டத்தில் நிறுவப்பட்டது. இப்பகுதியில் மிகவும் பழமையான திருக்கோயில்களில் ஒன்றான இது, தோட்ட நிர்வாகத்தின் அனுமதியோடு பாட்டாளி மக்களால் சிறுவடிவில் அமைக்கப்பட்டது. ஆரம்பக்காலத்தில் மூலவர் முனியாண்டியாக இருந்தமையால், இத்திருக்கோயில் “ஸ்ரீ முனியாண்டி ஆலயம்” என திருநாமம் பெற்றிருந்தது. தோட்ட நிர்வாகத்தின் முடிவாலும், இப்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட தொழில் மய திட்டத்தினாலும் பலமுறை இக்கோயில் இடம்பெயர்ந்து, தற்போது நிரந்திரமாகத் “தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன்” எனத் திருநாமம் சூடிக்கொண்டு குடிகொண்டது ஐந்தாவது தளமாகும்.

முயற்சித் திருவினை ஆக்கும் என்பது முதுமொழி. அதற்கேற்ப, மேனாள் மலேசிய சுகாதார அமைச்சர், டத்தோஸ்ரீ டாக்டர் ச.சுப்ரமணியம், டத்தோஸ்ரீ மேஜர் சேகர் கோவிந்தசாமி மற்றும், திருக்கோயில் நிர்வாகத்தினர் திறன்மிகு அணுகுமுறையால் இப்பகுதி சீன வம்சாவளி பெருநிலக்கிழார் ஒருவர் அரை ஏக்கர் நிலமும் ரி.ம.10,000.00 நன்கொடையும் 2016-ஆம் ஆண்டில் வழங்கினார். அந்நிலத்தில் கட்டப்பட்ட திருக்கோயில், 2017-ஆம் ஆண்டில் மிகவும் கோலாகலமான முறையில் கும்பாபிஷேகம் கண்டது.

இத்திருத்தலத்தில் சித்ரா பௌர்ணமி திருவிழா 1980-ஆம் ஆண்டு முதல் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. மாதாந்திர பௌர்ணமி பூசை, இதர ஆகமப் பூசைகளும் இனிதே சிவஸ்ரீ ரமேஷ் குருக்கள் அவர்களால் நடத்தப்பட்டுவருகிறது.

பெரியவர்களின் வழிகாட்டலுடன் இளையோர் கைகோர்த்துள்ள இத்திருக்கோயிலின் நிர்வாகம், இரு முக்கிய இலக்கை நோக்கி பயணிக்கின்றது. ஒன்று, கோபுரம் நிர்மாணிப்பது. பிரிதொன்று, இங்கு வாழ் இந்துப் பெருமக்களின் சனாதன தர்மத்தின் அறிவை மேம்படுத்துவது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2003-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.



| MT 25 | ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அம்மன் ஆலயம் |
| --- | --- |
| | *No:75, Lorong 4, Batu 7, Kampung Baru, Tanjung Minyak, 75250 Melaka.* |

இந்துச் சமயப் பெண் கடவுள்களில் ஒருவரும், பார்வதி தேவியின் ஓர் அவதாரமுமானவர் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அம்மன். நல்லறம் செய்து நற்கதி எய்திட துணையாய் நிற்கும் அம்பாளின் திருக்கோயிலைத் தன் வீட்டிற்கு இடது புறத்தில் நிறுவியவர் திரு.கிருஷ்ணன் பொன்னுசாமி. 1981-ஆம் ஆண்டில் சிறிய கோயிலாகக் காட்சியளித்ததை, வாஸ்து பார்த்து தன் வீட்டின் வலப்புறத்திற்கு மாற்றினார். 1983-ஆம் ஆண்டில் 2200 சதுர அடியில் அமைக்கப்பட்ட இத்திருக்கோயில் திருவிழாவிற்கு, பல இனமக்கள் வந்து




அம்பாளின் ஆசிப்பெற்றுச் செல்கிறார்கள். "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" எனும் திருமூலரின் வாக்கை அவர்கள் மெய்ப்பிக்கிறார்கள்.

திருக்கோயில் நிறுவனரின் தவப்புதல்வன் திரு.ஜெய்சங்கர் அவர்களின் கூற்றுப்படி, இத்திருக்கோயிலில் மூலவராக அருள்பாளிக்கும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அம்மனின் கருங்கல் விக்கிரகம் ஜொகூர், தங்காக் நகரிலிருந்து தருவிக்கப்பட்டு இங்குப் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகும். இத்திருக்கோயிலுக்கு அருகில் வாழ்ந்த சீனக்குடும்பம், சிறிய சன்னதி அமைத்து குவா லி மா (Dewi Qua Li Mah) தேவியை வழிபட்டு வந்தனர். பின்பு, அக்குடும்பம் அத்தேவியின் சிலையைத் திரு.ஜெய்சங்கரிடம் ஒப்படைக்க, அத்தேவியும் தற்போது மூலவரின் அருகில் வைக்கப்பட்டு பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறாள்.



இத்திருக்கோயிலில் மூலவர், குவா லி மா தேவியைத் தவிர்த்து, விநாயகப் பெருமான், முருகன், நாகம்மா, மற்றும், மதுரை மீனாட்சி அம்மனும் பக்தகோடிகளுக்கு அருள்பாலிக்கின்றனர். திரு.கிருஷ்ணனின் குடும்பக் கோயிலில் அன்றாட பூசைகளைத் தவிர்த்து, இரண்டு விழாக்கள் மிகவும் விமரிசையாக நடைபெறும். ஒன்று, டிசம்பர் திங்களில் நடைபெறும் வருடாந்திர திருவிழா. மற்றொன்று, செப்டம்பர் மாதத்தில் நடைபெறும் 10 நாட்கள் கொண்டாட்ட நவராத்திரி விழா. இத்திருக்கோயிலுக்கு நிதி திரட்டும் விருந்து நிகழ்ச்சிக்குச் சீனமக்களின் வற்றாத ஆதரவு அதிகம்.

திரு.ஜெய்சங்கர், கோயிலை நிர்வகிப்பதோடு, தன்னை நாடிவரும் நலம் குன்றிய மக்களுக்குத் தான் மானசீகமாகப் பூஜிக்கும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அம்மனின் அருளோடு சிகிச்சை அளித்து வருகிறார். மனம் சார்ந்த கோளாறுகள், மற்றும், நரம்பியல் பிரச்சனைகள் கொண்டோர் இவரின் சேவையைப் பெறுகின்றனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.

| MT26 | தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *Ladang Bertam, Paya Rumput, 76450 Melaka.* |



ஆங்கிலேயர் நிர்வாகத்தில் இருந்த இந்தத் தோட்டத்தில் பணிபுரிந்த தமிழ்த் தொழிலாளர்களால், 1904-ஆம் ஆண்டில், மரப்பலகையினாலான சிறிய வடிவமுடைய கோயில் எழுப்பப்பட்டது. இக்கோயில் பாட்டாளி மக்களின் சமயம், கலை கலாச்சார மையமாகத் திகழ்ந்தது. தொழிலாளிகளின் எண்ணிக்கை பெருகவே, அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யக் கோயிலின் கட்டடமைப்பும் விசாலமானது.

1993-ஆம் ஆண்டில் நடைபெற்ற இக்கோயிலின் முதல் மஹா கும்பாபிஷேகம் சிறப்புற நடந்தேறியது. அதனைத் தொடர்ந்து, 1994-ஆம் ஆண்டு முதல் இன்றுவரை ஆடிப் பூரம் வருடாந்திர விழா மிக விமரிசையாக நடைபெறுகிறது. நாட்டின் பல பகுதிகளில் வசிக்கும் இத்தோட்டத்தின் மேனாள் பாட்டாளி மக்கள் சங்கமமாகும் விழாவாக இது திகழ்கிறது. 2003-ஆம் ஆண்டில் இரண்டாவது மஹா கும்பாபிஷேகம் கண்ட இத்திருக்கோயிலில், திருவிழாவின்போது ரத ஊர்வலம் 2004-ஆம் ஆண்டு முதல் இந்நாள் வரை தொடர்கிறது. அரசாங்கம் மற்றும், பொதுமக்கள் வழங்கிய நிதியால் இத்திருக்கோயிலின் பிரதான கட்டடம் புதுப்பொளிவு பெற்றுள்ளது. “அச்சாணி இல்லாத தேர் முச்சாணும் ஓடாது” என்பதற்கொப்ப, திரு.ம.ராமலிங்கம் ஐயாவின் ஆளுமையால் இத்திருக்கோயில் பல மேம்பாட்டை அடைந்தது என்றால் அது மிகையாகாது.

ஸ்ரீ மஹா மாரியம்மன் மூலவராகத் திகழும் இத்திருக்கோயிலில் விநாயகர், முருகன், முனீஸ்வரர், நாகம்மா மற்றும், காளியம்மா மூர்த்திகள் எழுந்தருளி பக்தர்களை உய்வித்து அருள்பாலித்து வருகிறார்கள்.செம்பனைத் தோட்டம், சோலோக் ஜெராம் கம்பம் சூழ, அழகிய சூழ்நிலையில் அமைந்துள்ள இத்திருக்கோயிலின் அழகே அழகு! இத்திருக்கோயிலின் முன்வீற்றிருக்கும் தலவிருட்சம் அரசமரம் மேலும் அழகைச் சேர்க்கிறது. இத்தோட்டம் தற்போது ஐ.ஓ.ஐ. கார்ப்பரேசன் பெர்ஹாட் நிறுவனத்தின் சொத்துடைமையாக உள்ளது. இத்திருக்கோயில் உள்ளடக்கிய தோட்ட நிலம் அந்நிறுவனத்தால் மேம்பாடு காணவுள்ளதால், கோயில் நிர்வாகம் கோயிலுக்கான நிலத்தைப் பெற முயற்சி எடுத்துவருகிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2016-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.



| MT 27 | கிருஷ்ண பலராம் இந்தியப் பண்பாட்டு, கலை இயக்கம் |
|---|---|
| | *Lot 2679, Jalan Sri Rama 3, Taman Muzaffar Shah, 75450 Melaka.* |

சனாதனத் தர்மத்தில் வைஷ்ணவ மார்க்கத்தின் தாய்வீடாக மலாக்காவில் திகழும் இத்திருமையம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகவோ, நிர்வாகச் சங்கமாகவோ அல்லாமல் 'கிருஷ்ண பலராம் இந்திய கலை கலாச்சார இயக்கம்' என்றே 2002-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது. சட்டத்தின் அடிப்படையில் இதுவொரு கோயில் அல்ல. ஆனால், ஆய்வாளரின் பார்வையில் இம்மையம் ஒரு நவீன, ஆக்ககரமான கோயில் கருத்துப்படிவமாகவும் பார்க்கப்படுகிறது. ஒரு நவீன பாணி கட்டடத்தின் உள்ளே இயங்கும் கோயில் அமைப்பானது சிறப்பானது. தனித்துவம் வாய்ந்தது. இத்தகைய கோயில் அமைப்பு முறை வெளிநாடுகளில் அதிகம் காணலாம். அதோடு, மட்டுமின்றி, இவ்வமைப்பின் செயலவையினர் சமய ஞானம் மிக்கவர்களாகவும் உள்ளனர். அமைப்பின் நடவடிக்கைகள் சமய, சமுதாய மேன்மையைக் கருதி செயல்படுத்தப்படுவதால், இந்நாட்டிலுள்ள இதர அரசுசாரா இயக்கங்களுக்கு ஒரு முன்னுதாரமாக விளங்குகிறது.



இக்கிருஷ்ண பக்தி மையம் ஆரம்பத்தில் கடந்த 24-12-1998-இல், எண் 336, லோரோங் செத்தியா 9, தாமான் ஆயர்குரோ ஹைட்ஸ்சில் இயங்கியது. ஸ்ரீ முகுந்த தாசா மற்றும், கிருஷ்ண பக்தர்கள் பலர் இம்மையத்தின் ஆகமச் செயல்பாடுகளைக் கவனித்துக் கொண்டனர். இம்மையத்தின் செயலர், சீரிய சிந்தனையாளர் திருமிகு.நாகேந்திர ராவ் அவர்களின் தலைமையில் மையத்திற்கு நிதி திரட்டும் திட்டம் முடுக்கி விடப்பட்டது. முயற்சி திருவினையாக்கும் என்பதற்கொப்ப, 2005-ஆம் ஆண்டில் அரசாங்க இருப்பு நிலம் வாங்கப்பட்டு, பூமிபூஜை 2007-ஆம் ஆண்டு வேதம ஆகமப்படி மங்களகரமாக நடத்தப்பட்டது. புதிய வ்ரஜ பூமி திட்டம் 2009-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு 2011-ஆம் ஆண்டு நிறைவெய்தியது. இரண்டு மாடிக் கட்டடங்களையுடைய இம்மையத்தின் உள் கட்டட அமைப்பு அமெரிக்காவிலுள்ள பல அருள்மிகு கிருஷ்ணர் கோயில்களின் வடிவமைப்பைப் பின்பற்றி அமைக்கப்பட்டதாகும். இதற்கு மூலக்கர்த்தாக்களாக விளங்கியவர்கள் திரு.கோபி அச்சுதன், திரு.ஊன் மற்றும், திரு.சுந்தரம். ஸ்ரீ கிருஷ்ணர் உடனாகிய பாமா ருக்குமணியின் அழகிய கண்கவர் சிலையும் அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தின் (ISCKON) ஸ்தாபகர் பக்தி வேதாந்த சுவாமி ஸ்ரீல பிரபுபாதாவின் சிலையும் மூலஸ்தானத்தில் அருள்பாலிக்கிறார்கள்.



பல கொடைநெஞ்சர்களின் ஆதரவால் இத்திவ்விய மையம் இன்று தலைநிமிர்ந்து நிற்கிறது. 2003-ஆம் ஆண்டு முதல் ஸ்ரீ ஜகன்நாத் ரத யாத்திரா ஆண்டின் முதலாம் நாளில் மிகவும் விமரிசையாக நடைபெற்று வருகிறது. இந்நிகழ்வு மலாக்கா சுற்றுலா காலண்டரில் இடம்பெற்றுள்ளது.

இத்திருமையத்தின் இலக்கு 6 பரிமாணங்களைக் கொண்டுள்ளன. அவை யாதெனில், தனித்துவமிக்க இறைக்கூடம், தரமிக்கப் பிரசாத மையம், வேதக்கல்வி பயன்பாடு நிலையம், அறிவியல், விளையாட்டு, வேதக்கலாச்சார மையம், நனி சமுதாய உருவாக்கம் மற்றும் விருந்தோம்பல் பண்பு ஆகும்.

திருமிகு.கோபி அச்சுதன் தலைமைத்துவத்தில் 6 பரிமாணங்களின் வழி இம்மையம் பல சமுதாயத் தேவைகளைப் பூர்த்தி செய்துள்ளது என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது. எதிர்காலத்தில் புதிய வ்ரஜ பூமி வளாகத்திற்கு அருகில் 8000 சதுர அடியில் ஒரு நேர்த்தியான, பல்வகை வசதிகள் கொண்ட தங்கும் விடுதியை நிர்ணயிப்பதுவே இவர்களின் இலட்சியம். பகவான் ஸ்ரீ கிருஷ்ணரின் கடாட்சத்தால் இவர்களின் இலக்கு சாத்தியமாகும்.



| MT28 | ஸ்ரீ துர்க்கையம்மன் / பத்ரகாளியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Batu 7¼, Paya Rumput, Melaka.* |

கத்ரி நிறுவனத்துக்குச் சொந்தமான தோட்டத்தில் இருபதாம் நூற்றாண்டில் முற்பகுதியில் உருவாக்கப்பட்ட இக்கோயில் 1980-ஆம் ஆண்டில் திரு முனியாண்டி சிங்கமுத்து என்பவரால் புனரமைக்கப்பட்டது. பிறகு இத்தோட்டம் கைமாறி ஜௌாவி தோட்டம் என அழைக்கப்பட்டது. பிறகு இந்தப் பகுதி மேம்பாடு கண்ட பிறகு கோயில் இருக்கும் நிலத்தைத் தனியாகப் பிரித்து மாவட்ட அலுவலகத்தில் ஒப்படைக்கப்பட்டது. கோயில் நிர்வாகத்தின் மனு நிறைவேறுமானால் இந்த நிலம் கோயில் நிர்வாகத்திடம் ஒப்படைக்கப்படும். அதே குடும்பம் இன்று வரை இந்தக்கோயிலை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு அனைத்தையும் முடிவு செய்கின்றது.

அருள்வாக்கு கூறுவதில் பிரசித்தி பெற்ற இந்தக் கோயில் துர்கா தேவி மற்றும், முனீஸ்வரர் பெயரில் விளங்குகிறது. சுற்று வட்டாரத்தில் இருந்தும் மற்றும், பிற இடங்களில் இருந்தும் இங்கு ஒவ்வொரு செவ்வாய் மற்றும், வெள்ளி இரவும் ஆலயத் தலைவரின் அருள்வாக்கைக் கேட்பதற்காக வருகை தருகின்றனர். உண்மையில் கோயில் தலைவரே கோயில் சம்பந்தமான எல்லாவிதமான விஷயங்களையும் கோயில் சமய காரியங்கள் உட்பட அனைத்தையும் பராமரித்து வருகிறார். திருவிழாவை மட்டுமே மற்றவர்கள் உதவியுடன் நடத்துகிறார்.



இக்கோயிலில் நடைபெறும் துர்க்கை அம்மன் அல்லது பத்ரகாளியம்மன் திருவிழா ஆண்டுதோறும் ஆடி மாதத்தில் அல்லது ஆகஸ்ட் மாதத்தில் நடத்தப்படுகிறது. திருவிழாவின்போது காவடி மற்றும், பால்குடம் எடுத்தல், தீ மிதித்தல் போன்ற நிகழ்ச்சிகள் நடைபெறும். உபயத்தோடு சேர்த்து தொடர்ச்சியாக மொத்தம் 11 நாட்கள் இந்த விழா நடைபெறுகிறது. கடைசி நாளான இடும்பன் பூஜை அன்று விலங்குகளின் உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது.



இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 1999-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது. எனினும் இந்தக் கோயில் வளாகத்தில் மதுரை வீரன் பீடத்தை மதுரை வீரன் கோயிலாகக் கருதி பதிவுப் பெறாத வேறொரு குழு வழிபட்டு வருவதால், இந்த ஆய்வின் சமயம், கோயிலின் நில உரிமம் குறித்து இழுபறி நிலை ஏற்பட்டுள்ளது.





| MT 29 | கரடிமலை ஸ்ரீ துர்க்கை அம்மன் கோயில் |
| --- | --- |
| | ***Jalan Dahlia 6, Taman Bunga Raya, Bukit Beruang, 75450 Melaka.*** |



தாமான் பூங்கா ராயா ஒட்டிய புக்கிட் புருவாங் மலையடிவாரத்தில் அமைந்திருக்கும் கரடிமலை ஸ்ரீ துர்க்கையம்மன் ஆலயம் ஹங்துவா ஜயா பட்டண எல்லைக்குள் வீற்றிருக்கும் ஒரே ஸ்ரீ துர்க்கை அம்மனின் கோயில். இப்பகுதியின் பெயரோ புக்கிட் புருவாங்! அதன் தமிழாக்கமே, கரடிமலை; இக்கோயிலின் திருநாமமாக அது அமைந்தது.

1973-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட தாமான் பூங்கா ராயா வீட்டுமனைத் திட்டம் பூர்த்தியடையாமல் நிலைகுத்தியது. இத்திட்டத்தின் உரிமையாளரான சீனர், லெபோ ஆயர் குரோ, புக்கிட் புருவாங் நாற்சந்தி அருகாமையில் அமைந்திருந்த ஸ்ரீ மஹா மாரியம்மன் திருக்கோயிலில் மனமுருக வேண்டினார். அப்போது, கோயிலின் அர்ச்சகர் திரு.சொக்கலிங்கம் பூஜையில் இருந்தவேளை. அன்னாருக்கு அருள்வந்து, அவரோடு மேம்பாட்டாளரும், சில இந்துப் பக்தர்களும் கால்நடையாகப் புக்கிட் புருவாங் மலை அடிவாரத்தை நோக்கி பயணித்தனர். மலை அடிவாரத்தில் துர்க்கையம்மன் வாசம் செய்வதாகக் கூறினார் அர்ச்சகர். உடன்வந்தோர் அங்கு திரிசூலத்தை நட்டனர். அதன் பிறகே, பூங்கா ராயா வீட்டுடைமைத்திட்டம் பூர்த்தியானது என்பது வரலாறு.

1974-ஆம் ஆண்டில் திரு. தங்கராஜு சின்னசாமி, தலைமையின் கீழ் அவ்விடவாழ் இந்துப்பெருமக்கள் திரிசூலம் பதிக்கப்பட்ட இடத்திற்கு அருகில், அரசாங்க இருப்பு நிலத்தில், சிறிய கோயிலை நிறுவினர். 1976-ஆம் ஆண்டு சிவஸ்ரீ ராமச்சந்திர குருக்கள் கருங்கல்லாலான ஸ்ரீ துர்க்கை அம்மனின் விக்கிரகத்தைப் பிரதிஸ்டை செய்தார். 1976 முதல் 2003-இல் இறைவனடி சேரும்வரை, இக்கோயிலின் தலைவராகத் திறம்பட திருப்பணி ஆற்றியவர் தெய்வத்திரு தங்கராஜு சின்னசாமி அவர்கள். அதன்பின், 2007 வரை அப்பதவியை அலங்கரித்தவர் திரு.சடாசரம் ஐயா. அதனையடுத்து, 2012 வரை ஐந்து ஆண்டுகள் தலைமைப்பீடத்தில் இருந்து தெய்வப்பணி ஆற்றியவர் டாக்டர் தெல்லி சந்திரன் ஆவார். 2013 முதல் இன்றுவரை இக்கோயிலின் தலைவராக இருந்து அரும்பணி ஆற்றுபவர் திரு பாலகுமார் கே.எஸ். பதி. 2008-ஆம் ஆண்டில் தற்போதைய திருக்கோயில் கட்டடம் பூர்த்தியான பின், அதே ஆண்டில் முதலாவது மஹா கும்பாபிஷேகம் நடந்தது.

இத்திருக்கோயிலில், மூலவரோடு, விநாயகர், முருகப்பெருமான், ஐயா, நாகம்மா மற்றும், திரிசூலம் பக்தர்களின் பிரார்த்தனைகள் நிறைவேற அருள்பாலிக்கின்றனர். இத்தலத்தின் திருவிழா 2008-ஆம் ஆண்டு முதல், ஆகஸ்ட் மாதத்தில் சிறப்புற நடந்தேறிவருகிறது. ஒவ்வொரு செவ்வாய் தோறும் நடைபெறும் ராகுகாலப் பூஜையும் நவராத்திரி விழாவும் இத்திருக்கோயிலின் சிறப்பு வைபவங்கள்.



பூஜை கிரியைகளோடு சுற்றுவட்டார வறிய சமூகத்திற்குச் சேவையையும் செய்துவரும் இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் 2015-ஆம் ஆண்டு முதல் பக்தர்கள் சங்கமாகப் பதிவு பெற்றுள்ளது.

| MT30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் |
| --- | --- |
| | *Ladang Genting Cheng, Bahagian Cheng, Paya Rumput, 76450 Melaka.* |



இப்பகுதியில் மிகவும் பழமையான திருக்கோயில்களில் ஒன்றான இத்தலம், தாமான் பாயா எமாஸ் வீட்டுமனைத் திட்டத்திற்குப் பின்புறம் அமைந்துள்ள கெந்திங் செங் தோட்டத்தில் இருக்கின்றது. பாட்டாளி மக்களின் பயன்பாட்டிற்காக 1930-ஆம் ஆண்டில் தோட்ட நிர்வாகத்தின் அனுமதியோடு இத்திருக்கோயில் கட்டப்பட்டது.

இத்தோட்டத்தின் மேனாள் கங்காணியும், இன்னாள் கண்டிராக்டருமான திரு.மணியம் மாரிமுத்து அவர்களின் கூற்றுப்படி, 1959-ஆம் ஆண்டில் சுமார் 76 குடும்பங்கள் இங்கு வசித்ததாகவும், அவர்களில் 50 குடும்பங்கள் இந்துக்கள் என்றும், அவர்களின் கலை, கலாச்சார, சமய நிகழ்சிகளுக்கு இந்தக் கோயில் பயன்படுத்தப்பட்டுள்ளதாகவும் தெரிகிறது. தொடக்கத்தில் சிறிய கோயிலாக இருந்ததைப் படிப்படியாக சற்று விரிவுப்படுத்திப் பயன்படுத்தி வந்துள்ளனர். அருகில் தொழிலாளர்களால் பயன்படுத்தப்பட்டு வந்த கிணறு வற்றிப் போனதால், தொழிலாளர் குடியிருப்புப் பகுதி இடம் மாறியபொழுது, கோயில் மட்டும் அதே இடத்தில் தங்கியது.

தற்போது உள்ள திருக்கோயில் 1989-ஆம் ஆண்டில் கட்டப்பட்டது. அதன் பரப்பளவு 18 x 35 சதுர அடிகளாகும். 1984-ஆம் ஆண்டு கத்ரி நிறுவனம் தங்கள் தோட்டத்தின் பாதிக்கும் மேற்பட்ட நிலத்தில் செம்பனை பயிரிட்டனர். மேலும், 150 ஏக்கர் நிலத்தில் வீட்டுமனைத் திட்டத்தைத் தொடங்க முடிவெடுத்தனர். இந்த மாற்றத்தினால் தோட்ட நிர்வாகம் கோயிலை வேறு இடத்திற்கு இடம் பெயர்க்கக் கோயில் நிர்வாகத்திற்கு உத்திரவிட்டது. அதன் தொடர்பாக, நஷ்டஈடு ரி.ம. 96,000.00 வழங்கவும் முன்வந்தது. திரு.மணியம் மாரிமுத்து தலைமையின் கீழுள்ளத் திருக்கோயில் நிர்வாகம் அதனை நிராகரித்தது. திருக்கோயில் நிர்மாணிக்கப் புதிய நிலமும், மொத்த செலவும் தோட்ட நிர்வாகம் தரவேண்டும் என்பது இவர்களின் வாதம். இருதரப்பும் தங்களின் முடிவில் உறுதியாக நிற்கவே, இப்பிரச்சனைக்குத் தீர்வில்லாத நிலையில் தோட்டம் கெந்திங் பிலான்டேசன் நிறுவனத்திற்குச் சொந்தமாகி, தற்பொழுது ஒரே இந்துக் குடும்பம் தோட்டத்தில் பணிபுரியும் நிலை உருவாகியுள்ளது. கோயில் நிர்வாகம் கோயில் நிலத்தைப் பெரும் முயற்சியில் தொடர்ந்து செயல்படுகிறது.



இத்திருக்கோயிலின் மூலவராக ஸ்ரீ மஹா மாரியம்மன் அருள்பாலிக்கிறார். அந்த வரிசையில், விநாயகப் பெருமான், முருகப் பெருமான் மற்றும், முனீஸ்வரரும் காட்சி தந்து பக்தர்களுக்கு கடாட்சம்

கொடுக்கின்றனர். இத்திருக்கோயிலின் வருடாந்திரத் திருவிழா செப்டம்பர் திங்களில் 1959-ஆம் ஆண்டு முதல் இன்று வரை மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அத்தோட்டத்தின் மேனாள் பாட்டாளி மக்கள் தற்போது தோட்டத்தின் சுற்றுவட்டார வீட்டுமனைத் திட்டங்களில் வாழ்ந்து இந்தக் கோயில் நிகழ்சிகளுக்கு உயிரூட்டி வருகின்றனர். கடந்த 15-09-2019-ஆம் நாள் இத்திருத்தலத்தில் கும்பாபிஷேகம் நடந்தேறியது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.

| MT31 | அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *23A, Batu 12, Tanah Merah, Krubung, 75250 Melaka.* |




முன்பு தானா மேரா தோட்டம் என்று அழைக்கப்பட்ட பால்மரத் தோட்டத்திற்கு அருகாமையில் தனியார் நிலத்தில் வாழ்கின்றது திருமதி தனலெட்சுமி ஜியார்ச் குடும்பம். இவர்களின் வீட்டிற்குப் பக்கத்திலேயே இத்திருக்கோயில் எழுந்தருளியுள்ளது. இவ்விடம் தாமான் ஓன் குருபோங் வீட்டுமனைத் திட்டத்திற்கு பின்புறம் அமைந்துள்ளது. இவரின் கணவரான அமரர் திரு.ராமையா கந்தசாமியின் முயற்சியால் 1990-ஆம் ஆண்டு இக்கோயில் கட்டப்பட்டது. இக்கோயிலின் பரப்பளவு 25 x 20 சதுர அடிகளாகும். இத்திருக்கோயிலை அம்மூதாட்டியும் அவரின் ஆறு பிள்ளைகளும் இன்று பராமரித்து வருகின்றனர்.

அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மன் இத்திருத்தலத்தின் மூலவர். தேவி நாகம்மாவும் இங்கே வைத்து பூஜிக்கப்படும் தெய்வமாகும். இத்திருக்கோயிலின் முதன்மை விழா சித்ரா பௌர்ணமியாகும். இவ்விழா 1990-ஆம் ஆண்டு முதல் மே மாதத்தில் கொண்டாடப்பட்டுவருகிறது. இவர்களின் குடும்பச் சொந்தங்களும் பொதுமக்களும் இவ்விழாவில் கலந்து அம்பாளின் அருள் பெறுகின்றனர்.

இவ்வாலயத்திலிருந்து 100 மீட்டர் தொலைவில் வீற்றிருப்பது தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் திருக்கோயில். இத்திருக்கோயிலின் வெண்கலத்தாலான உச்சவசிலை, அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மனின் திருக்கோயிலில்தான் பாதுகாப்புக் கருதி வைக்கப்பட்டுள்ளது. இவ்வுச்சவச் சிலையை அன்பளிப்புச் செய்தவர் டூரியான் துங்கல் ஸ்ரீ அஸ்த தச புஜ காளியம்மன் திருக்கோயிலின் ஸ்தாபகர் சிவஸ்ரீசண்முகநாதன் சுவாமிகள் ஆவார். இவ்வட்டாரத்தில் யாருக்கேனும் அம்மை கண்டிருந்தால் அவர்கள் நாடுவது இக்கோயில் இறைவியின் அருளைத்தான். இத்திருக்கோயிலில் வழங்கப்படும் பிரசாதமான மங்கள திருநீர் நோயுற்றிருக்கும் பக்தர்களுக்கு அருமருந்து.

கடந்த 30 ஆண்டுகளாகக் காலைக் கடன்களை முடித்தபின்பு அம்மையார் தனலெட்சுமியின் முதல் பணி, அருள்மிகு ஸ்ரீ சக்தி கருமாரியம்மனுக்குத் தேவாரத் திருவாசகம் ஓதி பூஜை செய்வதே. அம்பாளின் முக்கிய விழாக்களைத் தமது குடும்பக்கோயிலில் செய்வது இவருக்கு ஆத்மார்த்த இன்பம். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இன்னும் பதிவாகவில்லை.

| MT32 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *(Ladang Tanah Merah – Ladang Bertam, Bahagian Krubung)* *23A, Batu 12, Tanah Merah, Krubung, 75250 Melaka.* |




வளமைக்கும் செழுமைக்கும் அடையாளமாகவும், வலிமைக்கும் திறமைக்கும் குறியீடாகவும் போற்றப்படும் பெண் தெய்வங்களில் முக்கியமானவர் ஸ்ரீ மகா மாரியம்மன். இறைவிக்குத் திருக்கோயில் கட்டி தங்களின் ஆன்ம வழிபாட்டுத்தலமாகக் கொண்டனர் பெர்த்தாம் தோட்ட குருபோங் பிரிவு இந்து பாட்டாளி மக்கள். ஆரம்பத்தில் இக்கோயில் பலகைக்கட்டடமாக திகழ்ந்தது. இது 1930-ஆம் ஆண்டு கட்டப்பட்டதாகும். இத்திருக்கோயில், தானா மேரா கிராமத்தை ஒட்டி அமைந்துள்ளதால் இதனைத் தானா மேரா ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் என்றும் பொதுமக்கள் அழைப்பர்.

1935-ஆம் ஆண்டு பழைய திருக்கோயில் உடைக்கப்பட்டு, புதிய கல் கட்டடம் 23,000 சதுர அடி பரப்பளவில் நிர்மாணிக்கப்பட்டது. 2016-ஆம் ஆண்டு, ஒரு சமய விழாவின்போது, உற்சவ மூர்த்தியைத் திருக்கோயிலைச் சுற்றி வலம் வரும்போது, குறிப்பாக கோயிலின் மூலஸ்தானத்தின் பின்புறம் கடக்கும்போது உற்சவ மூர்த்தியின் கனம் அதிகமானது. மூன்று முறை வலம் வந்தபோது இச்சூழ்நிலை ஏற்பட்டது. அதன் காரணத்தை அறிய, செயலவையினர் அப்பகுதியைத் தோண்டி பார்த்தபோது ஆழத்தில் தேவி காளியம்மன் விக்கிரகத்தின் தலைப்பாகம் புதையுண்டிருந்தது. பின்பு, தேவியின் அங்கத்துக்கு விஷேசப் பூசை செய்யப்பட்டு, திருக்கோயிலின் முன்புறம் தனிபீடம் அமைக்கப்பட்டு, அங்கே பிரதிஸ்டை செய்யப்பட்டது. 2007-ஆம் ஆண்டு இத்திருக்கோயில் மீண்டுமோர் புனரமைப்பைச் சந்தித்தது. அச்சமயம், தோட்டத்தின் பழைய அலுவலகத்தின் முன்னால் இருந்த “டத்தோவின்” பீடத்தில் நடப்பட்டிருந்த சூலம் இத்திருக்கோயிலுக்கு மாற்றப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இத்திருக்கோயிலில் மூலவர் ஸ்ரீ மகா மாரியம்மனோடு விநாயகர், முருகப்பெருமான், முனீஸ்வரர் மற்றும், தேவி காளியம்மன் காட்சியளித்து பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். இத்திருக்கோயிலின் வருடாந்திர திருவிழா செப்டம்பர் திங்கள் விமரிசையாகக் கொண்டாடப்படும். இவ்விழா 1960-ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து நடைபெற்று வருகிறது கோயிலின் உத்சவ மூர்த்தி, பாதுகாப்பு கருதி அருகிலுள்ள அருள்மிகு ஸ்ரீசக்தி காளியம்மன் கோயிலில் வைத்துள்ளனர்.



இப்பகுதி மேம்பாட்டிற்கு நில உரிமையாளர்களான போ சகோதரர்களால் பயன்படுத்தப்படுவதால், கோயிலுக்குப் பத்தாயிரம் சதுர அடிகள் கொண்ட இடத்தை ஒதுக்கிக் கொடுத்து, கோயிலை இடம் மாற்ற 2017-ஆம் ஆண்டில் கோரிக்கை விடுத்ததால், தற்பொழுது புது இடத்தில் கோயில் நிறுவப்படவுள்ளது. திருக்கோயில் நிர்வாகம் தற்பொழுது புதிய இடத்தில்

கோயிலைக் கட்டும் பணியில் ஈடுபட்டுள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2017-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளது.

| MT33 | **அருள்மிகு ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ஆலயம்** |
|---|---|
| | ***792-C, Jalan Emas 6, Taman Kerjasama, Bukit Beruang, 75450 Melaka.*** |




அபரிமிதமான வளர்ச்சியை நோக்கி பயணிக்கும் புக்கிட் புருவாங் பகுதியில் அம்பாளுக்கு மூன்று திருக்கோயில்கள் உள்ளன. அவற்றில் ஒன்றே, அருள்மிகு ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ஆலயமாகும். இத்திருக்கோயிலே இவ்வட்டாரத்தின் மிகவும் பழமையான திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலே இவ்வட்டாரத்தில் அமைந்த, சனாதன தர்மத்தின் சாக்தம் பிரிவின் முதல் திருத்தலமாகும். இத்திருக்கோயிலின் ஸ்தாபகர் அமரர் திரு.சுப்பையா. இத்திருக்கோயில் 1940-ஆம் ஆண்டு தனியார் நிலத்தில் கட்டப்பட்டது. இத்திருக்கோயிலின் நிர்வாகத்தைத் திறம்படச் செய்து பக்தகோடிகளின் மனதில் இடம்பிடித்த அன்னவர், 1980-ஆம் ஆண்டில் சிவலோகம் அடைந்தார். இன்று, திரு.சுகுமார் சிம்மாசலம் தலைமையில் திருக்கோயில் நிர்வாகம் செயல்படுகிறது.

ஆரம்பக் காலத்தில், இத்திருக்கோயில் மரப்பலகையினாலும் கூரை தகரத்தாலும் அமைக்கப்பட்டிருந்தது. இதன் பரப்பளவு சிறியதே! 1990-ஆம் ஆண்டுகளில், இத்திருக்கோயில் சீரமைக்கப்பட்டு, பாதி கல் கட்டடமாக உருவாகியது. 1993-ஆம் ஆண்டு முதல் இத்திருக்கோயிலில் ஆடித்திருவிழா நடைபெற்று வருகிறது.

இத்திருக்கோயிலின் மூலவர் தேவி ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அருள்பாலிக்கிறாள். அம்பாளோடு, விநாயகர், முருகப்பெருமான், சங்கலி கருப்பன், முனியாண்டி, நாகம்மா, துர்க்கை அம்மன் மற்றும், டத்தோ கூனிங் போன்ற தெய்வங்கள் பக்தர்களுக்குக் காட்சியளித்து அருள்பாலிக்கின்றார்கள். கிரஹா மக்மோர் நாற்சந்தியில் முன்பு அமைந்திருந்த ஸ்ரீ முத்து மாரியம்மன் திருக்கோயில் புக்கிட் புருவாங்கிற்கு இடம் பெயர்ந்தபோது, அங்குள்ள முனியாண்டி சிலை ஸ்ரீ ராஜராஜேஸ்வரி திருக்கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டு பிரதிஸ்டை செய்யப்பட்டது.

2019-ஆம் ஆண்டில் இத்திருக்கோயில் அமைந்துள்ள நிலம் வேறொரு தனிநபருக்கு விற்கப்பட்டதால், அக்கோயிலை அந்நிலத்திலிருந்து இடம்பெயர்ப்பு செய்யவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. தற்போது, அத்திருக்கோயில் பழைய இடத்திலிருந்து சற்றுத் தள்ளி அரசாங்க இருப்பு நிலத்தில் தற்காலிகமாக நிறுவப்பட்டுள்ளது. இத்திருக்கோயில் நிர்வாகம் கோயிலை நிர்மாணிக்க புதிய நிலத்தைத் தேடும் படலத்தில் ஈடுபட்டுள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர் சங்கமாக 2019-ஆம் ஆண்டு பதிவுப் பெற்றுள்ளது.



| MT34 | மலாக்கா தெங்கா ஸ்ரீ உத்திர காளியம்மன் கோயில் |
|---|---|
| | ***Bukit Serindit/Bukit Piatu, Lebuh AMJ, Semabuk, 75050 Melaka.*** |



இடுகாடு மற்றும், பிரேதங்களை எரிக்கும் இடத்தை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்றிருந்த திரு.சுப்பையா அவர்களால் 1970-ஆம் ஆண்டில் இக்கோயில் உருவாக்கப்பட்டது. ஆரம்பத்தில் இந்த இடத்தில் மாடுகள் வளர்த்து வந்தார். அப்போது மாட்டுக் கொட்டகைக்குப் பக்கத்தில் ஆரம்பிக்கப்பட்ட சிறிய வழிபாட்டு இடம் காலப்போக்கில் இன்று இருப்பதுபோல் ஒரு கோயிலாக மாறிவிட்டது.

முதன் முதலில் இங்கு இடுகாடு அமைந்திருந்தது. பிறகு, 1977-ஆம் ஆண்டு முதல் மலாக்காவின் முதன்மை இந்துக்களின் பிரேதங்களை எரிக்கும் இடமாக மாறியது. முதன் முதலில் ஒரு சிறு கொட்டகையாக இருந்த இந்தக் கோயில் பிறகு, 1988-ஆம் ஆண்டில் லாட்டரிச் சீட்டில் கணிசமான தொகையை வென்ற ஒருவர் கொடுத்த நன்கொடையால் திருத்தி பெரிதாகக் கட்டப்பட்டது. தற்போது, இந்த இடம் பிரேதங்களைப் புதைக்கவோ எரிக்கவோ பயன்படுத்தப்படுவது கிடையாது.

இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்களும் சீனர்களும் அடிக்கடி பெருமளவில் இங்கு வருகை புரிகின்றனர். இதற்கான காரணம், இவர்கள் இங்கு உறையும் ஸ்ரீ காளியம்மன் தேவி மிகவும் சக்தி வாய்ந்ததாகக் கருதுகிறார்கள். ஏற்கனவே, இத்தெய்வத்தை வணங்கி நன்மை அடைந்தவர்கள் இந்தக் காளியம்மன் தேவியின் அருளைப் பெற மலாக்காவிற்கு வெளியில் இருந்தும் வருகிறார்கள். தங்களது நன்றி கடனைச் செலுத்தவும் மற்றும், வேறு வேண்டுதல்களைச் சமர்ப்பிக்கவும் சிறப்பு உபயங்களையும் பூஜைகளையும் ஸ்ரீகாளியம்மன் தேவிக்குச் செய்கின்றனர். கோயில் வளாகத்தில் வேலிகள் இல்லாததால் இங்கு எவரும் சுதந்திரமாக வந்து வழிபட முடியும்.







சமயச் சடங்குகளின் போது விலங்குகளின் உயிர்ப்பலி கொடுக்கப்படுகிறது. உத்தர காளியம்மன் பெயரில் நடக்கும் திருவிழா ஆடி அதாவது ஜூலை / ஆகஸ்டு மாதத்தில் 11 நாட்கள் நடைபெறுகிறது. இந்தக் கோயில் நிலத்தை (5223 சதுர மீட்டர்) நிர்வாகம் கையகப்படுத்த வேண்டி செய்யப்பட்ட மனு இன்னும் அரசின் பரிசீலனையில் உள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2012-ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.

| MT 35 | ஸ்ரீ சாமூண்டிஸ்வரி அம்மன் கோயில் |
|---|---|
| | *21-G Kampung Tujuh, Jalan Gajah Berang, 75200 Melaka.* |

இங்குள்ளவர்கள் கொடுத்தத் தகவல்களின்படி, 1870-ஆம் ஆண்டுகளில் மலாக்கா செட்டி சமூகத்தால் கட்டப்பட்ட கோயில்களில் இந்தக் கோயிலும் ஒன்றாகும். மேலும், இது ஒரு குறிப்பிட்ட குடும்பத்தால் தொடர்ந்து பராமரிக்கப்பட்டு வருவதால், இறுதியில் இது என். ஆர். சின்னதம்பியின் குடும்பத்தினரால் கையகப்படுத்தப்பட்டது. மலாக்கா செட்டி சமூகம் இந்தக் கோயிலைத் தங்கள் சமூகத்தின் கோயிலாகப் பட்டியலிடவில்லை. தற்பொழுது மறைந்த திரு.சின்னத்தம்பியின் குடும்ப வாரிசுகள், இந்தக் கோயிலின் ஒரு சில விசுவாசமிக்கப் பக்தர்களுடன் இணைந்து இதை நிர்வகிக்கிறார்கள்.

கோயிலின் நிலம், ஒரு பகுதி மேம்பாட்டாளர் நிலத்திலும், மற்றொரு பகுதி அரசாங்கத்தின் நிலத்திலும் உள்ளது. கோயிலின் பெயரில் அதைக் கையகப்படுத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. தற்போதுள்ள கட்டிடம் தொங் பி (Tong Bee) நிறுவனத்தால் மேம்பாட்டிற்காக அந்தப் பகுதியை வாங்கியபோது கட்டப்பட்டது.



இங்குக் குடிகொண்டிருக்கும் ஸ்ரீசாமூண்டிஸ்வரி தேவி மிகவும் சக்தி வாய்ந்தவர் என நம்புவதால், உள்ளூரில் உள்ள இந்துச் சமூகத்தைத் தவிர, பல சீனப் பக்தர்களும் இந்தக் கோயிலில் வழிபாடு செய்கிறார்கள். இந்தக் கோயில் 2012-ஆம் ஆண்டில் கும்பாபிஷேகத்தை நடத்தியது. 2024-ஆம் ஆண்டில் மீண்டும் நடத்தத் திட்டமிட்டுள்ளது. சாமூண்டிஸ்வரி தேவி சார்பாகப் பால்குடத் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் ஜூன் மாதம் நடைபெறுகிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2016-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளது.





| MT 36 | அருள்வாக்கு ஸ்ரீ மாவீரன் கோயில் |
| --- | --- |
| | *197-A, Jalan Puteri Hang Li Poh, 75100 Melaka.* |

இந்தக் குடும்பம் 1930-ஆம் ஆண்டு முதல் அதன் குடும்ப வழிபாடாக, ஸ்ரீ முனியாண்டியை தங்கள் வாடகைக்கு எடுத்த நிலத்துடன் கூடிய வீட்டின் முற்றத்தில் வைத்து வழிபடத் தொடங்கி, பிறகு அது கோயில் ஆனது.




1988-ஆம் ஆண்டில், இதன் பெயர் ஸ்ரீ மாவீரன் அருள்வாக்கு கோயில் அல்லது மதுரைவீரன் என மாற்றப்பட்டது. அதோடு, இது குடும்பத்தின் குலத்தெய்வமாகவும் மாறியது. அந்த நேரத்தில் பல பக்தர்கள் தாம் சந்தித்தப் பிரச்சினைகள் மற்றும், நோய்கள் குறித்த ஆலோசனைக்காகவும் தீர்வுக்காகவும் இந்தக் கோயிலுக்கு வர ஆரம்பித்தனர். கோயிலின் உரிமையாளர் மீது தெய்வம் வந்து இறங்கி தம்மைத் தேடி வருபவர்களுக்கு அறிவுரைகளையும் வழிகாட்டலையும் வழங்குகிறது. ஆய்வு நடந்த சமயம், ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் இந்த அருள்வாக்குச் சேவை நடைபெற்று வந்தது.

இந்தக் கோயிலில் உள்ள அருள்வாக்குச் சேவைகள் திருப்தி அளிப்பதாக இருப்பதால் பலரும் முன்வந்து தங்களுடைய நேரத்தையும், பணத்தையும், உழைப்பையும் இந்தக் கோயில் நடவடிக்கைகள் வெற்றிபெற, குறிப்பாகத் திருவிழாக் காலங்களில் தாராளமாக அர்ப்பணிக்கிறார்கள். அண்மையில் ஆலய ஸ்தாபகர் (24.6.2021) மறைந்துவிட்ட நிலையில், அன்னாரின் குடும்பத்தினர் இந்தக் கோயிலைப் பராமரித்து வருகின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் டிசம்பரில் தொடர்ச்சியாக 10 நாட்கள் வருடாந்திரத் திருவிழா நடைபெறும். 2005-ஆம் ஆண்டில், இந்தக் கோயிலில் கும்பாபிஷேகம் நடைபெற்றது, தொடர்ந்து அடுத்தக் கும்பாபிஷேகத்திற்குள் கோயிலுக்கு நில உரிமத்தைப் பெற்றுவிட முயற்சிகளை மேற்கொண்டு வருகின்றனர்.

நடைமுறையில் கால்நடைகளை உயிர்ப்பலி கொடுப்பதும், அசைவ உணவைப் படைப்பதும் இந்தக்கோயில் அனுமதிக்கிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2013-ஆண்டில் பதிவாகியுள்ளது.







| MT 37 | **ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்** |
|---|---|
| | ***91-C Pengkalan Rama Pantai, 75100 Melaka.*** |

ஆங்கிலேய காலனித்துவ காலத்தில் மலாக்கா நகராட்சி மன்றத் தொழிலாளர்களால் பெங்களான் ராமாவில் இருந்த தங்களது குடியிருப்புப் பகுதியில் 1930-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் தொடங்கப்பட்டது. இக்கோயில் இன்றுவரை தொடர்ந்து கிட்டத்தட்ட நான்கு தலைமுறைகள் வழிபடும் கோயிலாக உள்ளது.






1990-ஆம் ஆண்டுகளில் மேம்பாட்டுத் திட்டங்களுக்காக மலாக்கா நகராட்சி மன்றத்தின் குடியிறுப்பு வீடுகள் உடைக்கப்பட்ட போது இந்தக் கோயில் அருகிலுள்ள ஆற்றின் கரைக்கு இடம் பெயர அனுமதிக்கப்பட்டது. ஆற்றங்கரையின் ஓரத்தில் இருக்கும் இந்தக்கோயிலின் நிலத்தைக் கையகப்படுத்த நிர்வாகம் முயற்சி செய்து வருகிறது.

இப்பகுதியில் குடியிருக்கும் மலாக்கா நகர மன்றத்தின் அன்றைய ஊழியர்களின் வாரிசுகள் அல்லது உறவினர்கள் இக்கோயிலின் நடவடிக்கைகளில் மிகவும் ஆர்வத்தோடு ஈடுபட்டு வருகின்றனர். கோயில் ஆற்றங்கரையில் அமைந்திருப்பது சிறப்பு எனக் கருதப்படுகிறது. அதோடு, இங்கு உறையும் தேவி அமானுஷ்ய சக்தியைப் பெற்றிருக்கிறார் என இங்கு வழிபடுபவர்கள் நம்புகிறார்கள்.



இந்தக் கோயில் மலாக்கா நதியின் சுற்றுலாப் படகுத்துறைக்கு அருகில் அமைந்துள்ளதால் இது மேலும், அதிகமான சுற்றுப் பயணிகளை ஈர்க்கும் இடமாகவும் மாறும் என்பதில் ஐயமில்லை. கோயிலின் பெயரில் நிலம் கையகப்படுத்தும் போது புதிய கோயிலை அங்குக் கட்ட நிர்வாகக் குழு முடிவு செய்து இருக்கின்றது.

இக்கோயிலின் திருவிழா ஆடி மாதத்தில் (ஜூலை/ ஆகஸ்ட்) ஸ்ரீ மாரியம்மன் தேவியின் பெயரில் 11 நாட்கள் நடைபெறுகிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2011-முதல் பதிவாகியுள்ளது

| MT 38 | ஸ்ரீ சுப்ரமணியர் திரௌபதை அம்மன் பரிபாலன சபை |
|---|---|
| | *Jalan Gajah Berang, 75400 Melaka.* |



மலாக்கா செட்டிகளால் காஜா பேராங் பகுதியில் 1865-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டக் கோயில் இது. மலாயாவில், ஆங்கிலேயர்களால் பொதுச் சேவையில் அதிகம் முக்கியப் பொறுப்புகளில் பணிபுரிய அழைத்துவரப்பட்டு மலாக்காவில் பணிபுரிந்த யாழ்ப்பாணத் தமிழர்கள் தங்களின் நிர்வாகத்தின் கீழ் ஒரு கோயில் வேண்டும் என எண்ணியதால், இந்தக் கோயிலை மலாக்கா செட்டி சமூகத்திடமிருந்து 1930-ஆம் ஆண்டுகளில் எடுத்துக் கொண்டனர். பல மலாக்கா செட்டி சமூகத்தினர் அரசாங்கப் பணிகளில் இருந்ததாலும், மலாக்கா செட்டிகளுக்கு மேலும் பல கோயில்கள் அருகில் இருந்ததாலும் இது சாத்தியமானது.

இந்தக் கோயில் நேர்த்திக் கடனுக்காகத் தீமிதி சடங்கு நடைபெற்று வந்த பிரசித்திப்பெற்ற மலாக்கா செட்டிகளின் கோயில். இன்றும் தீமிதி விழா சிறப்பாக ஆடி மாதத்தில் நடைபெறுகிறது. யாழ்ப்பாணத் தமிழர்களின் தனித்துவ நிர்வாகத்தின்கீழ் இந்தக் கோயில் இருந்த சமயத்தில் இது நல்ல வளர்ச்சியைக் கண்டது. யாழ்ப்பாணர்கள் அரசாங்கப் பணிகளிலும், எண்ணிக்கையிலும் குறைந்த காரணத்தால், 1970-ஆம் ஆண்டுகளில் எல்லா மலாக்கா இந்துக்களையும் இணைத்து பொது நிர்வாகம் அமைந்துள்ளது. மறைந்த சிவஸ்ரீ ராமச்சந்திர குருக்கள் இந்தக் கோயிலில் பணிபுரிந்து, அதன் வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றியுள்ளார். 2005-ஆம் ஆண்டு இந்தக் கோயிலின் புதிய சமய-கலை அம்சங்களைக் கொண்ட கட்டடம் பூர்த்தியாகி கும்பாபிஷேகம் நடைபெற்றது. இந்தப் புதிய கட்டடம் 31,234 சதுர அடிகளைக் கொண்ட ஸ்ரீசுப்ரமணியர் திரௌபதை அம்மன் ஆலய பரிபாலன சபை பெயரில் பதிவுச் செய்யப்பட்ட நிலப்பரப்பில், மலாக்காவிலேயே நான்கு ராஜ கோபுரங்களுடன் கொண்ட ஒரே கோயிலாக, கம்பீரமாக நிற்கிறது. தற்பொழுது கோயிலின் உறுப்பினர்கள் ஐநூறை நெருங்குகின்றனர்.

மூலத் தெய்வங்களுக்கான பீடங்களுடன், நவக்கிரகங்களுக்கான சிறப்புப் பீடமும், தமிழ் நாட்டிலிருந்து இங்குக் குடியேறிய சமயம், மலாக்கா செட்டிகள் கொண்டுவந்து பயன்படுத்திய அவர்களின் குலத்தெய்வங்களுக்கான தனி பீடமும் உள்ளன. இவற்றுடன் ஏறக்குறைய நூறு பல்வேறு சிவ வடிவங்களுடன், 63 நாயன்மார்களின் வடிவங்களும் சிற்ப வேலைப்பாடுகளுடன் இருக்கின்றன.

இந்தக் கோயில் பக்தர்கள் இங்கு வழிபடும்பொழுதும் நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும் போதும் மனம் நிறைவாக இருப்பதாகவும், குடும்பம் மகிழ்ச்சியாக இருப்பதாகவும் கருதுகிறார்கள். திருமண வைபவங்களும் இங்கு நிறைய நடைபெறுகின்றன. கோயிலுக்கு வருபவர்களுக்கு கார் நிறுத்தும் இடமும், கோயிலுக்கான நுழைவாயிலும் சிறப்பாக அமைய 29,000 சதுர அடி கூடுதல் நிலத்தைப் பெரும் முயற்சி வெற்றியடைந்து தற்பொழுது சீராகியுள்ளது.



தொடக்கத்திலிருந்தே அருகில் வசிக்கும் சீனர்களும் இந்தக் கோயிலின் திருவிழாவிலும் மற்ற வைபவங்களிலும் கலந்துகொள்கிறார்கள். இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர் சங்கமாக 1973-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.





| MT39 | ஸ்ரீ மகா மாரியம்மன் (குதிரைக்) கோயில் |
|---|---|
| | *Lot 1213, Jalan Hujung Padang, Batu 6 ¾ , Paya Rumput, 76540 Melaka.* |

இந்தக் கோயில் 1890-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. கோயில் முகப்பில் இரண்டு குதிரை வடிவச் சிலைகள் இருப்பதால் வட்டார மக்கள் மத்தியில் 'குதிரைக் கோயில்' என்ற பெயர் பிரபலமாகியுள்ளது.



1890-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் பலகையாலும் தகரத்தாலும், செங் கிராமத்திற்கு அருகிலிருந்த ஜெலுத்தோங் தோட்டத்தில் அமைக்கப்பட்டு, ஆங்கிலேயர் நிர்வாகத்தில் இருந்தது. அந்தத் தோட்ட நிர்வாகி திரு. ரிச்சர்ட் தம் குதிரையில் கோயில் முன் சவாரி செய்தபோது கோயிலை அவமதிக்கும் முறையில் கடந்து சென்றபொழுது, குதிரையிலிருந்து விழுந்து, காயம் பட்டு, தொடர்ந்து அம்மை நோய்க்கு வாய்ப்பட்டார். திரு.பழனிசாமி மாண்டோரும் திரு நம்பியார் என்ற தோட்டக் கிராணியும் திரு ரிச்சர்டுக்கு ஆலோசனைக் கூறி, ஸ்ரீதேவி கருமாரிம்மனிடம் மன்னிப்புக் கோரும்படி சொன்னபிறகு, அதன்படி அவர் செய்த பிறகு குணமடைந்தார். தெய்வத்தின் சக்தியை உணர்ந்த அந்த மேலாளர், கோயிலின் நுழைவாயிலில் இரண்டு குதிரைச் சிலையை வைக்க ஏற்பாடு செய்தார். இதன் காரணமாகத்தான் இது குதிரைக் கோயிலானது.



நூறு ஆண்டுகளுக்குமேல் ஆனபோதும், இந்தக் கோயிலின் முதல் கும்பாபிஷேகம் 21.8.1957-ஆம் நாள்தான் நடந்தது. திரு.மருதை கோயிலின் தலைவராக இருந்து நடத்திய





அந்த வைபவத்திற்குப் பிறகு, ஆண்டுதோறும் அதே ஆகஸ்ட் 21-ஆம் நாள் ஆண்டுத் திருவிழாவை நடத்துகின்றனர்.

காலத்தின் மாற்றத்தாலும், மேம்பாட்டுத் திட்டங்களாலும், 2000-ஆம் ஆண்டுகளில், குருபோங்-சுங்கை ஊடாங் சாலையோரம் மேம்பாலத்திற்கு அருகில் அமைந்திருந்த இந்தக் கோயிலை வேறு இடத்திற்கு மாற்ற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கோயில் நிர்வாகம், வட்டார மக்கள், ஆட்சிக்குழு உறுப்பினர் மாண்புமிகு டத்தோ ராகவன், மாநில முதலமைச்சர் மாண்புமிகு டத்தோஸ்ரீ (இன்று துன்) முகமது அலி ருஸ்தாம் ஆகியோரின் ஒத்துழைப்புடன் 20,000 சதுர அடி பரப்பளவுள்ள நிலத்தை லாட் 1213, ஜலான் உஜோங் பாடாங், 6 3/4 மைல், பாயா ரும்புட் எனும் இடத்தில் உறுதிப்படுத்தி, கோயிலுக்குக் கொடுத்தார்கள். இந்த இடத்தில்தான் இந்தக் கோயில் இன்று வீற்றிருக்கிறது. இந்தப் புதிய கட்டடம் கட்டப்பட்டு கோயில் கும்பாபிஷேகம் 16.9.2007-ஆம் நாள் நடைபெற்றது.

இந்தக் கோயில் தற்பொழுது அருகில் அமைந்துள்ள குடியிருப்புப் பகுதிகளில் வாழும் இந்துக்களுக்குப் பயன்படுகிறது. 160 உறுப்பினர்களைக் கொண்ட இந்தக் கோயில் 2003-ஆம் ஆண்டு மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாகப் பதிவாகியுள்ளது.





| MT40 | ஆயர் மொலேக் ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***No.7, Lorong 4, Jalan TTP 3, Taman Tambak Paya Permai, 75460 Melaka.*** |




இந்தக் கோயில் 1928-ஆம் ஆண்டு கிம் ஆய்க் தோட்டத்தில் பணிபுரிந்த தொழிலாளர்களால் தோட்ட நிர்வாகத்தின் அனுமதியுடன் கட்டப்பட்டது. சிறிதாகக் கட்டப்பட்டக் கோயில், சில மாற்றங்களுக்கு உள்ளாகி, இன்றைய நிலையில் இருக்கிறது. ஆயர் மொலேக்-தியாங் டுவா சாலையோரம் இந்தக் கோயில் உள்ளது. அதன் முன்னால் புக்கிட் லிந்தாங் தமிழ்ப் பள்ளி வீற்றிருக்கிறது. கோயிலில் ஒரு பூசாரி பணிபுரியும் வேளை, கோயில் தலைவர் தோட்டத் தொழிலாளர் மத்தியில் தெரிவு செய்யப் படுகிறார்.



தற்பொழுது, சாலைகள் விரிவுபடுத்தும் பணிகளாலும், மேம்பாட்டுத் திட்டங்களாலும், தோட்டத்தை மாநில அரசாங்கம் கையகப் படுத்தியுள்ளது. தோட்ட நிர்வாகம், கோயிலுக்கு ஒரு நிலத்தைப் பழைய கோயிலுக்கு அருகில் பிரித்துக் கொடுத்துள்ளது. புதிய கோயிலைக் கோயில் நிர்வாகம் இங்கு மாற்றியுள்ளது. எனினும், கோயிலை மேலும், விரிவுபடுத்தும் பணியை, கோயில் நிலப் பட்டா கிடைக்கும்வரை ஒத்தி வைத்துள்ளனர். ஒரு சிறிய மண்டபத்தை நடவடிக்கைகளுக்காகக் கட்டவும் திட்டம் கொண்டுள்ளனர்.

தற்பொழுது எழுபத்தைந்துக்கும் மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்டு செயல்படும் இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2013-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது. இங்கு தை மாத திருவிழா பிப்ரவரி மாதம் ஆண்டுதோறும் நடைபெறுகிறது. இந்த வட்டாரத்தில் வாழ்ந்து தற்பொழுது வேறு இடங்களில் வசிப்பவர்களும் இத்திருவிழாக் காலங்களில் வருகைத் தந்து, கோயிலில் வழிபட்டு, நண்பர்களைச் சந்தித்துக் குதூகளிக்கின்றனர்.

| MT41 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | *(Ladang Diamond Jubilee, Bahagian Union)*<br>*Batu 9, Jalan Jasin, 75460 Melaka.* |



டைமண்ட் ஜூப்ளி தோட்ட யூனியன் டிவிஷனில் வேலை செய்து கொண்டு தோட்டக் குடியிருப்புப் பகுதியில் வாழ்ந்து வந்த இந்துச் சமயத்தைச் சார்ந்த தொழிலாளர்கள் 1930-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயிலை உருவாக்கினர்.

இந்தக் கோயில் 1950-ஆம் ஆண்டு பழைய இடத்திலிருந்து இன்று இருக்கும் இந்தப் புதிய இடத்திற்கு மாறியது. அந்தச் சமயத்தில் இந்தத் தோட்டம் கத்ரி நிறுவனத்திற்குச் சொந்தமாக இருந்தது. நாட்டின் சுதந்திரத்திற்குப் பிறகு சைம் டார்பி நிறுவனத்திற்குக் கைமாறியது.

ரப்பர் மரங்கள் அழிக்கப்பட்டு செம்பனை பயிர் பயிரிடப்பட்டபோது அங்குள்ள தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதிகள் இடிக்கப்பட்டன. கோயில் மட்டும் எஞ்சியது. பெரும்பாலான இந்துக் குடும்பங்கள் அருகிலுள்ள குடியிருப்புப் பகுதிகளுக்கு மாற்றலாகிச் சென்றாலும் இந்தக் கோயிலில் நடைபெறும் வழிபாடுகளில் கலந்து கொண்டு வருகின்றனர்.

சைம் டார்பி நிறுவனம் இந்தத் தோட்டத்தை Paduan Realty Sdn நிறுவனத்திற்கு மேம்பாட்டுத் திட்டங்களுக்காக அண்மையில் விற்றது. மேம்பாட்டுத் திட்டங்களை நிறைவேற்றும் சமயத்தில் கோயிலுக்குத் தேவையான நிலத்தை ஒதுக்கித் தருவதாக புதிய உரிமையாளர்கள் கோயில் நிர்வாகத்திடம் வாக்குறுதி கொடுத்துள்ளனர். கோயில் நிர்வாகம் இடம் கிடைக்கும் பொழுது அங்கே ஒரு புதிய கோயிலைக் கட்டுவதற்குத் திட்டம் கொண்டுள்ளனர்.

இந்த ஆய்வு நடத்தப்பட்ட சமயத்தில் பழைய கோயில் இன்னும் பயன்பாட்டில் இருந்து வருகிறது. மேலும், அங்கு ஸ்ரீ முனீஸ்வரர் சார்பில் அருள்வாக்கு கூறப்பட்டு வருகிறது. இந்தக் கோயிலில் ஸ்ரீமகா





மாரியம்மனுக்கு திருவிழா பதின்மூன்று நாட்கள் ஒவ்வொரு ஆண்டும் மே மாதத்தில் நடைபெற்று வருகிறது. இந்தத் திருவிழாவின்போது உயிர்ப்பலி (கோழிகள்) கொடுப்பதுடன் அங்குள்ள ஸ்ரீபச்சையம்மன் தெய்வத்தின் பெயரில் அசைவ உணவு படைக்கப்படுகிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2013-ஆம் ஆண்டில் பதிவாகியுள்ளது.



| MT 42 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Lim Kok Wah, Bukit Lintang, 75460 Melaka. (Dahulu: Ladang Leong Watt Hin, PUNGKAI, Tiang Dua)*** |

இந்தக் கோயில் 1930-ஆம் ஆண்டுகளில் இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்களால் புக்கிட் லிந்தாங் பகுதியில் அமைந்திருந்த லியோங் வாட் ஹின் தோட்டத்தில், தோட்ட நிர்வாகத்தின் அனுமதியுடன் நிறுவப்பட்டது. இந்த இடம் பூங்கை என்று அங்கு வாழ்ந்த தமிழர்களால் அழைக்கப்பட்டது. தற்பொழுது இந்தத் தோட்டத்தின் பெயர் லிம் கோக் வா என்று மாற்றப்பட்டுள்ளது.

தொடக்கத்தில் மறைந்த திரு.அருணாசலம் மாண்டோர் இந்தக் கோயிலைக் கவனித்து வந்தார். அவருடைய வாரிசுகள் இந்தக் கோயிலை இன்றும் பராமரித்து வருகின்றனர். எனினும், நீண்ட காலமாகக் கோயில் எத்தகைய சீரமைப்பும் இன்றி இருந்து வருகிறது. தற்பொழுது இந்துத் தொழிலாளர்கள் யாரும்




இத்தோட்டத்தில் பணிபுரியவில்லை. அந்நியத் தொழிலாளர்களே இங்குப் பணிபுரிகின்றனர். தமிழர்கள், வெளியாகி, அருகில் அமைந்துள்ள குடியிருப்புப் பகுதிகளில் வாழ்கின்றனர். இந்தக் கோயிலுக்கு உறுப்பினர்கள் என்று யாரும் இல்லாத நிலை ஏற்பட்டுள்ளது. கோயிலைப் பராமரிக்கும் குடும்பமும், அவர்களின் நண்பர்களும் ஆண்டுத் திருவிழா சமயமும், அவர்களின் தீர்மானப்படி மற்ற சில சிறப்புத் தினங்களிலும் தோட்ட நிர்வாகத்தின் அனுமதியுடன் கோயிலுக்குச் சென்று வேண்டியவற்றை ஏற்பாடு செய்து, வழிபடுகின்றனர்.

கோயில் திருவிழா ஆனி அல்லது ஆடி மதத்தில் நடத்தும்பொழுது, இந்த வட்டாரத்தில் வசித்து தற்பொழுது வேறு இடங்களுக்குச் சென்று வாழ்ந்து வருபவர்களும் தங்கள் குடும்பங்களுடன் வருகை தந்து சிறப்பிக்கிறார்கள். எனினும், இந்தக் கோயிலைச் சீரமைக்கத் தோட்ட நிர்வாகம் அனுமதிக்காத நிலையிலும், தோட்டத்தில் இந்துக்கள் பணிபுரியாத நிலையிலும், இதன் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதியாத நிலையிலும், அதன் எதிர்காலம் கேள்விக் குறியாகவே உள்ளது.

| MT 43 | ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம் (மேட்டுக் கோயில்) |
| --- | --- |
| | *PT1107, Tanjung Minyak, Cheng, 75250 Melaka.* |



இத்திருக்கோயிலின் முதல் திருநாமம் ஸ்ரீ யோக காயத்ரி ஆலயம். இத்திருக்கோயில் தற்போதைய ஆலயத் தலைவர் திரு.சுகுமாறன் ராஜேந்திரனின் தாத்தாவான அமரர் திரு.கிருஷ்ணன் அவர்களால் 1924-ஆம் ஆண்டு தஞ்ஜோங் மிஞ்ஞாக் தோட்டத்தில் கட்டப்பட்டது. ஆரம்பக் கட்டத்தில், இத்திருக்கோயில் மரப்பலகையால் ஆன கட்டடமாக வீற்றிருந்தது. கால ஓட்டத்தில், இத்திருக்கோயில் ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயமாகப் பெயர் மாற்றம் கண்டது. தற்போதைய ஆலயத் தலைவரின் தகப்பனார் அமரர் திரு.ராஜேந்திரன் புதிய கோபுரம் கொண்ட ஆலயக் கட்டடத்திற்கு 2004-ஆம் ஆண்டு வழிவகுத்தார்.

மேனாள் மலேசிய சுகாதார அமைச்சர், டத்தோஸ்ரீ டாக்டர் ச.சுப்ரமணியம், டத்தோ ஸ்ரீ மேஜர் சேகர் கோவிந்தசாமி மற்றும், திருக்கோயில் நிர்வாகத்தினர் திறன்மிகு அணுகு முறையால் இப்பகுதி சீன வம்சாவளி பெருநிலக்கிழார் ஒருவர் ஒன்றரை ஏக்கர் நிலமும் கணிசமான நன்கொடையும் 2016-ஆம் ஆண்டில் வழங்கினார். அந்நிலத்தில் கட்டப்பட்டதே இன்று, “ஸ்ரீ மகா மாரியம்மன் முனியாண்டி ஆலயம்“ என்ற புதிய திருநாமத்தோடு வீற்றிருக்கும் திருக்கோயில்.

இத்திருக்கோயில் சிறிய குன்று மீது அமைந்திருப்பதால் ‘மேட்டுக்கோயில்’ என்னும் அடைமொழியால் பக்தக்கோடிகளால் அழைக்கப்படுகிறது. இத்திருக்கோயிலுக்கு இன்னொரு காரணப்பெயரும் உண்டு. சுங்கை ஊடாங் ராணுவ முகாமிலிருந்து அதிகமான ராணுவ வீரர்கள் இத்திருக்கோயிலுக்கு அருள்வாக்குப் பெற வருவதால் இத்திருக்கோயிலுக்கு “ஆர்மி கோயில்” எனும் அடைமொழியும் உண்டு. அருள்வாக்கு நிகழ்வு ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை ஆலயத்தலைவர், திரு.சுகுமாரன் ராஜேந்திரனால் நடத்தப்பட்டு வருகிறது

இத்திருத்தலத்தில் மூலவரோடு, விநாயகர், முருகப்பெருமான், கருமாரியம்மன், மஹாலெட்சுமி, ஆஞ்சநேயர், நாகக்கன்னி, மற்றும், காளியம்மன் ஆகிய தெய்வங்கள் அருள்பாலிக்கின்றனர். கடந்த 1979-ஆம் ஆண்டு முதல் இன்றுவரை மே திங்கள் முதல் நாள் இவ்வாலயத்தின் திருவிழா இனிதே நடைபெற்று வருகிறது. ஏப்ரல் மாதக் கடைசி வாரயிறுதியில் நடைபெறும் உத்ர ஓமம் இத்திருத்தலத்தின் இன்னொரு சிறப்பான சமய நிகழ்வாகும். இக்கோயிலின் உறுமிமேளக் குழு, தனியார் மற்றும், அரசாங்க அதிகாரப்பூர்வ





நிகழ்வுகளில் தங்களின் இசை வல்லமையை பறைசாற்றி வருகின்றது. கடந்த மூன்று தலைமுறைகளாகத் திரு.சுகுமாரனின் பரம்பரை இத்திருக்கோயிலை வழிநடத்தி வருகிறது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2017-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளது.

| MT44 | ஸ்ரீ மகா முனீஸ்வரர் ஆலயம் |
|---|---|
| | *Kampung Solok Jeram, 76450 Paya Rumput, Melaka.* |

வீரமும் ஆவேசமும் நிறைந்த ஆண் தெய்வமாகக் கருதப்படுபவர் ஸ்ரீ மகா முனீஸ்வரர். இப்பெருமானுக்கு 2002-ஆம் ஆண்டில் திருக்கோயில் அமைத்துத் தன் பக்தி உணர்வை வெளிப்படுத்தினார் அமரர் திருமதி முத்தாயி. இவர் தன் சொந்த நிலத்தில் சிறிய அளவிலான கோயிலைக் கட்டி, அதில் முனீஸ்வரரின் அடையாளமாகத் திரிசூலத்தை நட்டு வழிபட்டு வந்தார். இரண்டு தலைமுறையாக வழிபட்டு வரும் இப்பெருமான், இக்குடும்பத்தின் குலத்தெய்வம் ஆகும். இத்திருக்கோயில் பெர்த்தாம் தோட்ட ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் அருகில் திருக்காட்சி அளித்துக்கொண்டிருக்கிறது. இன்று, 20 x 15 சதுர அடிபரப்பளவில் வீற்றிருக்கும் இத்திருக்கோயிலைத் திருமதி முத்தாயி அவர்களின் நெருங்கிய உறவினரான திரு.ராஜேந்திரன் ஆறுமுகம் நிர்வகித்து வருகிறார்.



திரு.ராஜேந்திரன் ஒருவகை தோல் நோயால் அவதிபட்டுக் கொண்டிருந்தார். நவீன மருந்தும் பாரம்பரிய மருந்தும் முறைப்படி பயன்படுத்தியும், அவரின் நோய் கட்டுக்கடங்காமல் வீரியம் அடைந்தது. ஒருநாள், திருமதி முத்தாயி, அவரை கோயிலுக்குள் அழைத்துச் சென்று, சிறப்பு பூஜை செய்து, முனீஸ்வரரை மனமுருகி நினைந்து பிரார்த்தனை செய்தார். அப்போது திரு.ராஜேந்திரன் கண்ணீர்விட்டு அழுது, தன் வேதனை பூர்ணமாக தீருமானால், பெருமானுக்கு அழகிய திருக்கோயிலைக் கட்டுவதாகக் கங்கணம் கட்டினார். அதன் பிறகு, ஓரிரு வாரத்திலேயே பூரணக் குணமடைந்தார் அவர்.

இவர் ரி.ம.10,000.00 செலவழித்து இன்று வீற்றிருக்கும் அழகிய திருக்கோயிலை நிறுவி, அதனைத் தொடர்ந்து நிர்வகித்தும் வருகிறார். இத்திருக்கோயிலில், முனீஸ்வரரின் சிலை ஆறு அடி உயரம் கொண்டதாகும். இத்திருச்சிலையை வடிவமைத்தவர் ஸ்தபதி திரு.பக்கிரி ஆவார். இத்தலத்தில் பெருமானோடு, நாகம்மாதேவியும் பிரதிஸ்டை செய்யப்பட்டுள்ளார். 2002-ஆம் ஆண்டு முதல் ஆண்டுத் திருவிழா நடைபெற்று வருகிறது. சீனப் புத்தாண்டு விடுமுறை சமயத்தில் நடைபெறும் இத்திருவிழாவிற்கு அதிகமானோர் வருகின்றனர். விலங்குகளின் உயிர்பலி கொடுப்பதும், மாமிச உணவு பரிமாறுதலும் இங்கு அனுமதிக்கப்படுகிறது



மனநிலை பாதிக்கப்பட்டவர்கள், இயற்கையாகவே பய உணர்வு உள்ளவர்கள் இத்திருக்கோயிலுக்கு வந்து அருள்வாக்கு பெறுகிறார்கள். திரு ராஜேந்திரனின் நண்பர், திரு.சசிதரன், முனீஸ்வரரின் கடாட்சத்தால் அருள்வாக்கு அளித்து வருகிறார். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவு பெறவில்லை.

**அட்டவணை 4 : ஜாசின் மாவட்டத்தில் அமைந்திருக்கும் கோயில்கள்**

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| J1 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயம் | Jalan Air Kangkung,<br>Pekan Selandar, 77500 Jasin, Melaka.<br>(Lot: 2136) | 1930 |
| J2 | ஸ்ரீ மகா மாரியம்மன் (மயில்) ஆலயம் | Batu 16, 77200 Jasin, Melaka.<br>(Lot:4692) | 1910 |
| J3 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan, 77100 Asahan, Melaka. | 1915 |
| J4 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | KM23, Jalan Jasin, Bemban, 77200 Melaka.<br>(Lot: 14712 ) | 1930 |
| J5 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 1192, Jalan Besar Batang Melaka.<br>77500 Selandar, Melaka | 1936 |
| J6 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஸ்ரீ முத்தப்பன் ஆலயம் | Ladang Jasin Lalang, 77200 Bemban,<br>Jasin, Melaka. | 1900 |
| J7 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Asahan, Bukit Katong, Rim, 77000 Jasin,<br>Melaka. | 1900 |
| J8 | ஸ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Ladang Diamond Jubilee, 77000 Jasin, Melaka. | 1890 |
| J9 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Taman Maju, 77000 Jasin, Melaka.<br>(Lot: 9422) | 1890 |
| J10 | ஸ்ரீ சிவன் ஆலயம் | Jalan Besar Jasin, 77000 Jasin, Melaka.<br>(Lot: 1722) | 1880 |
| J11 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Jasin Lalang, Bhg. Bukit Chermin<br>d/a J 9939, Bukit Tinggi, Jalan Merlimau,<br>Simpang Kerayong, 77000 Jasin, Melaka. | 1902 |
| J12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Jasin Lalang, Bahagian Batu Lang,<br>Merlimau, Melaka. | 1940 |
| J13 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, Bahagian Jasin, 77000 Jasin,<br>Melaka. | 1915 |
| J14 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tebong, Bahagian Batang Melaka<br>(Bemban) 77500 Batang Melaka, Melaka.<br>(dalam proses pindah ke Taman Sri Hilir) | 1930 |
| J15 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 18, Selatan Baru, Bahagian Merlimau,<br>Kempas Estate, Merlimau, 77300 Melaka. | 1950 |

| J16 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, Bahagian Kemendore. 77000 Jasin, Melaka. | 1936 |
|---|---|---|---|
| J17 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lau Leong Estate, Kemendore Div, 77000 Jasin, Melaka. | 1910 |
| J18 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | Ladang Diamond Jubilee, Jalan Asahan, 77000 Jasin, Melaka. | 1900 |
| J19 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nyalas (Gubah Div), Lot 813, Jalan Nyalas, Kampung Masjid Baru, 77100 Nyalas, Jasin, Melaka. | 1970 |
| J20 | ஸ்ரீ மகா காளியம்மன் முனீஸ்வரர் துவா பெக் கோங் ஆலயம் | Lot 58, Kampung Bukit Panjang, 77100 Asahan, Melaka. | 1997 |
| J21 | ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Pekan Merlimau, 77300 Merlimau, Melaka. | 1969 |
| J22 | ஸ்ரீ சுப்ரமணியர், ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Serkam, 77300 Merlimau, Melaka. | 1890 |
| J23 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Merlimau, Jalan Jasin, 77300 Merlimau, Melaka. | 1904 |
| J24 | தேவ ஸ்ரீ மதுரை வீரன் ஆலயம் | 14, Batu 17, Paya Buluh, 77300 Merlimau, Melaka. | 1970 |
| J25 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Taman Bistari, Jalan Jasin, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J26 | அருள்மிகு ஸ்ரீ துர்கையம்மன் ஆலயம் | Ladang Selatan Baru, Batu 18,Tepi Jalan Merlimau-Jasin, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J27 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Lot 6516, Batu 17 ½ , Jalan Jasin-Merlimau, Kampung Paya Buloh, 77300 Merlimau, Melaka. | 1990 |
| J28 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | Batu 18 ½ , Jalan Kesang, Kesang Pajak, 77000 Jasin, Melaka. (Lot 1293) | 1900 |
| J29 | ஸ்ரீ ஜெய் மலை முனியாண்டி ஆலயம் | JB 865, Taman Bemban Utama, 77200 Bemban, Melaka. | 1996 |
| J30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Yew Watt Hing Estate, Jalan Asam Kumbang, 77200 Bemban, Jasin, Melaka. | 1950 |
| J31 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan 'D' Division, 77100 Asahan, Melaka. | 1948 |
| J32 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Bukit Asahan, Ayer Tekah Div., 77100 Asahan, Jasin, Melaka. | 1970 |

| J33 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nyalas, Mantai Division, 77100 Nyalas, Melaka. | 1950 |
|---|---|---|---|
| J34 | ஸ்ரீ மதுரை வீரன், ஸ்ரீ ராஜ கருமாரியம்மன் தோ பெக் கோங் ஆலயம் | Batu 12, Bukit Tinggi A, Simpang Kerayong, Jalan Merlimau, 77000 Jasin, Melaka. (Lot:5575) | 1970 |
| J35 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kempas (Devon), Jalan Jasin-Merlimau, 77000 Jasin, Melaka. | 1890 |
| J36 | தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம் | Batu 16 ½ , J8451, Kampung India, 77000 Jasin, Melaka. | 1965 |
| J37 | ஸ்ரீ பிரித்தியங்கரா தேவி சக்தி பீடம் | JA 3371, Jalan Ria Satu, Taman Ria, Kesang Pajak 77000 Jasin, Melaka. | 1999 |
| J38 | கைகொடுக்கும் ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | J7520, Blok F, Rumah Awam, Simpang Kerayong 77000 Jasin, Melaka. | 1950 |
| J39 | ஸ்ரீ நாகேஸ்வரி அம்மன் ஆலயம் | J7177, Blok O, Taman Chenderawasih, 77000 Jasin, Melaka. | 1890 |
| J40 | ஓம் ஸ்ரீ முனியாண்டி முனீஸ்வரர் காளி கருமாரியம்மன் ஆலயம் | Jalan Bemban-Ayer Keroh, GAPAM, (d/a Lorong 17, JB 2084, Taman Sri Serkam, Merlimau, 77300 Melaka.) | 1992 |
| J41 | தேவி ஸ்ரீ மாரியம்மன், ஸ்ரீ முனியாண்டி ஆலயம் | Ladang Merlimau, Lanchang Division (d/a JB2983, Jalan MU6, Taman Merlimau Utara 77300 Merlimau, Melaka.) | 1945 |
| J42 | ஸ்ரீ முனியாண்டி ஆலயம் | 7952, Jalan Bukit Tinggi A, Simpang Kerayong, 77000 Jasin, Melaka. | 1930 |
| J43 | ஸ்ரீ மகா சிவசக்தி ஆலயம் | No.3490 Taman Batang Melaka Baru, Batang Melaka, 77500 Selandar, Melaka. | 1970 |
| J44 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 21, Pondok Kempas, 77500 Selandar, Melaka. | 1950 |
| J45 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lim Kok Wah Sdn. Bhd, Kg.Bukit Singgeh, 77500 Selandar, Melaka. | 1960 |
| J46 | ஸ்ரீ அய்யனார் ஆலயம் | Genting Berhad/SAMB, Taman Batang Melaka Baru, 77500 Batang Melaka, Melaka. | 1940 |

| J1 | ஸ்ரீ சித்தி விநாயகர் கோயில் |
|---|---|
| | *Jalan Air Kangkung, 77500 Selandar Melaka.* |

சிலாண்டார் பொது மராமத்து அல்லது பொதுப்பணித்துறை (PWD) குடியிருப்புப் பகுதியில் வசித்து வந்த தொழிலாளர்களால் 1930-ஆம் ஆண்டுகளில் இக்கோயில் தொடங்கப்பட்டது. பொதுப்பணித்துறை (PWD) குடியிருப்பு வீட்டு வரிசைக்கு முன்னால் புக்கிட் செங்கேவுக்குச் செல்லும் சாலையில் இந்தக் கோயில் தொடக்கத்தில் அமைந்திருந்தது. 1996-ஆம் ஆண்டில் ஆயேர் கங்கோங் சாலையில் ஒரு புதிய தளத்திற்கு இடம்பெயர வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது, நிலத்தின் சீன உரிமையாளர் அந்த இடத்தில் புதிய வீட்டுமனைத் திட்டத்தைத் தொடங்கத் திட்டமிட்டிருந்தார்.



அந்த நேரத்தில் தலைவராக இருந்த திரு. கே. அங்கப்பனின் முயற்சியால் அரை ஏக்கர் நிலம் கையகப்படுத்தப்பட்டது. பிறகு, இவ்வட்டாரத்தில் நீண்டகாலமாக வசித்து வந்த பொது மராமத்து இலாகாவைச் சேர்ந்த திரு.அலகு சேர்வை அவர்களின் புதல்வர் திரு.ஏ.நாராயணசாமியின் முயற்சியால் இந்த ஆலயத்திற்குப் புதிய கட்டிடம் அமைக்கப்பட்டது.

இந்தக் கோயிலின் முக்கிய வழிபாட்டுத் தெய்வமாக விளங்குபவர் ஸ்ரீ சித்தி விநாயகர் ஆவார். இருப்பினும், இங்கு அம்மன் மற்றும், முருகன் போன்ற தெய்வங்களுக்கும் வழிபாடு நடைபெறுகின்றது. அதோடு, நவக்கிரகம் மற்றும், அய்யனார் போன்ற வழிபாடுகளும் இங்கு உள்ளன. வருடாந்திர திருவிழா செப்டம்பர் மாதத்தில் 'விநாயக' சதுர்த்தி அன்று நடத்தப்படுகின்றது. திருவிழாவின்போது ரத ஊர்வலமும் உண்டு. கோயிலுக்கு வருகைத் தருவோரில் பெரும்பாலோர் அருகிலுள்ள வீட்டுமனைத் திட்டத்தில் குடியிருப்பவர்கள் ஆவர்.



ஆலயத்தில் இந்த வட்டாரத்திற்குப் பொருத்தமான பல நடவடிக்கைகள் அவ்வப்போது நடைபெற்று வருகின்றது. அவற்றில் குறிப்பிடத்தக்கது 2008 முதல்

நடைபெற்றுவரும் ”Child” அமைப்பின் மூலம் நடைபெறும் ‘மழலையர் பள்ளி வகுப்பு’ ஆகும். ஆலய வழிபாட்டு விசயங்களைக் கவனித்துக் கொள்ள ஓர் உள்ளூர் அர்ச்சகர் இங்கு பணிபுரிகின்றார்.

இந்தக் கோயிலின் நிர்வாகம் 1983-ஆம் ஆண்டில் சங்கங்களின் பதிவாளர் அலுவலகத்தில் நிர்வாகச் சங்கமாக முறையாகப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது.

| J2 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் (மயில் கோயில்) |
|---|---|
| | ***Batu 16, Jasin, 77000 Melaka.*** |



முதலில் ஆங்கிலேயர்களிடமிருந்த, பின்னர் சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமான, ஆயர் பானாஸ் முதன்மைப் பிரிவு ரப்பர் தோட்டத்தில் தங்கியிருந்த இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்களால் 1910-ஆம் ஆண்டுகளில் இக்கோயில் உருவாக்கப்பட்டது. காலத்திற்கு ஏற்ப பல மாற்றங்களை அடைந்த இக்கோயில் இருக்குமிடம் தற்போது மேம்பாட்டுத் திட்டங்களுக்குக் கையகப்படுத்தப்பட்டதால் கோயில் நிர்வாகத்தினரின் முயற்சியின் விளைவாக ஜாசின்-மலாக்கா பிரதான சாலையின் ஓரத்தில் இருந்த கோயிலோடு அதன் நிலமும் ஒதுக்கித் தரப்பட்டது.

2002-ஆம் ஆண்டில் நிர்வாகக் குழு சங்கப் பதிவு அதிகாரியிடம் பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டது. இந்தக் கோயிலில் மேலும், பல வசதிகளைப் பெருக்க அருகிலுள்ள நிலத்தைப் பெறுவதற்கு முயற்சி செய்து வருகின்றனர். இந்தக் கோயில் தற்போது அருகில் உள்ள வீடமைப்பு குடியிருப்பு பகுதிகளில் வாழும் இந்து சமயத்தைச் சேர்ந்த மக்களை ஈர்க்கிறது. இவர்களில் பலர் முன்பு இந்தத் தோட்டத்தில் வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் ஆவர்.

இந்தக் கோயிலின் மாரியம்மன் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் மே மாதத்தில் உபய நாட்களோடு நடத்தப்படுகின்றது. இந்தக் கோயிலில் 2015-ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகத்தோடு மொத்தம் 12 முறை கும்பாபிஷேகங்கள் நடந்தேறியுள்ளன. தற்போது பல கோயில்களில் நடைபெறுவது போல இங்கும் முன்பு வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் திருவிழாவின்போது இங்கு ஒன்று கூடுகிறார்கள். வழிபாடு செய்கின்ற அதே சமயத்தில் நண்பர்களையும் உறவினர்களையும் சந்தித்து மகிழ்கின்றனர்.





| J3 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | ***Ladang Bukit Asahan, 77100 Asahan, Melaka.*** |



கத்ரி குழுமத்திற்குச் சொந்தமான புக்கிட் அசகான் எனும் பெரிய ரப்பர் தோட்டப் பகுதியில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. இந்தத் தோட்டத்தில் ஏராளமான தமிழ்த் தொழிலாளர்கள் தங்கி வேலை பார்த்துள்ளனர். இந்தத் தொழிலாளர்கள் 1915-ஆம் ஆண்டில் அசகான் ஆற்றின் கரையோரத்தில் தங்கள் குடியிருப்புப் பகுதிக்கு அருகில் இக்கோயிலைக் கட்டினர். கோயிலின் கட்டுமானம் ஆரம்பத்திலிருந்தே ஆகம முறைப்படி மேற்கொள்ளப்பட்டிருந்தது. பின்னர், 1996-ஆம் ஆண்டில் புதுப்பிக்கப்பட்டது. தோட்டத்தின் ஆதரவோடு இந்தக் கோயிலின் நிர்வாகம் 1988-ஆம் ஆண்டில் சங்கப் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. தற்போது இந்தத் தோட்டம் சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமாக உள்ளது.

ரப்பர் தோட்டமாக இருந்த இந்தத் தோட்டம் தற்பொழுது செம்பனைப் பயிருக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் பெரும்பாலான தொழிலாளர்கள் தற்போது இங்கிருந்து வெளியேறி அருகில் உள்ள வீடமைப்புப் பகுதிகளில் சொந்தமாக வீடு வாங்கியோ அல்லது வாடகைக்கோ குடியிருக்கின்றனர். சுற்று வட்டாரத்தில் குடியிருக்கும் இந்து மக்களைக் கவர்வதற்குக் கோயிலின் நிர்வாகம் கோயிலைச் சாலையோரத்தில் உள்ள தங்களது சொந்த நிலத்திற்கு மாற்றுவதற்கான முயற்சிகளில் இறங்கியுள்ளனர்.



சித்திரை மாதத்தில் அல்லது ஏப்ரல் மே மாதங்களில் தொடர்ச்சியாக இரண்டு நாட்கள் இந்தக் கோயிலில் சித்ரா பௌர்ணமி திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இறுதியாக 2010-ஆம் ஆண்டு உட்பட, பலமுறை இந்தக் கோயிலில் கும்பாபிஷேகங்கள் நடந்துள்ளன.

அசகான் தோட்டத்தில் வாழ்ந்த குடும்பங்கள் மற்றும், அவர்களது வாரிசுகள் எங்கிருந்தாலும் இந்தக் கோயிலில் நடைபெறும் திருவிழாவன்று தங்களின் பூர்வீக இடமாகக் கருதி இங்கு வருகின்றனர்





## J4 தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***KM23, Jalan Jasin, Bemban, 77200 Melaka.***



ஆயர் பானாஸ் தோட்ட, பெம்பான் பிரிவில் தொடக்கத்தில் அமைந்த இந்தக் கோயில் 1930-ஆம் ஆண்டுகளில் இங்கு வாழ்ந்த தோட்ட மக்களால் உருவாக்கப்பட்டது. சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமான இந்தத் தோட்டம் துண்டாடலுக்குப் பலியானபோது சிறு சிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு (3-4 ஏக்கர் பரப்பளவு கொண்ட நிலங்கள்) வசதி உள்ளோருக்கு விற்கப்பட்டது. இந்தக் கோயிலும் நிலமும் தற்செயலாக ஓர் இந்தியர் வாங்கிய நிலத்தில் இருந்தது. அந்த நில உரிமையாளர் கோயிலுக்கு வந்து வழிபாடு செய்பவர்களைத் தடுக்க வில்லை.

காலப்போக்கில் இங்கு உள்ள எல்லா நிலங்களும் கோயில் இடமும் சேர்த்து மேம்பாட்டுக்காகத் தேசிய மின்சார வாரியம் வாங்கியது. பிறகு, இந்த இடம் வீடமைப்பு மேம்பாட்டாளரிடம் ஒப்படைக்கப்பட்டு இன்று ஜாசின் பிஸ்தாரி எனும் பட்டணம் உருவாகியுள்ளது.



தேசிய மின்சார வாரியம் நிலத்தை நில மேம்பாட்டாளரிடம் ஒப்படைக்கும் முன் கோயில் நிர்வாகத்தை அழைத்து கோயிலை வேறிடத்திற்கு மாற்றுமாறு கேட்டுக் கொண்டதோடு அதற்கான இழப்பீட்டுத் தொகையும் வழங்கியது. கோயில் நிர்வாகம் டத்தோ வி. சுப்பிரமணியம் அவர்களின் தலைமையில் முயற்சி செய்ய, மாநில அரசின் உதவியோடு இப்பொழுது உள்ள இடத்தில் ஜாசின் பெம்பான் சாலை ஓரத்தில் ஓர் ஏக்கர் பரப்பளவு கொண்ட நிலத்தை 2010-ஆம் ஆண்டில் பெற்றனர். புதியக் கோயிலையும் 2013-ஆம் ஆண்டில் கட்டி முடித்தனர். இந்த நிர்வாகம் 1996-ஆம் ஆண்டு பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது.

இந்தத் தோட்டத்தில் முன்பு வசித்த பெரும்பாலான குடும்பங்கள் மற்றும், அவர்களது வாரிசுகளும் உறவினர்களும் அருகில் இருக்கும் வீட்டு மனைத்திட்டங்களில் குடியேறியுள்ளனர். இவர்கள்தான் இன்று இந்தக் கோயிலை வழிபாட்டிற்காகப் பயன்படுத்துகின்றனர்.

மாரியம்மன் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் உபய நாட்களோடு சேர்த்து தொடர்ச்சியாகப் பத்து நாட்கள் ஆனி மாதத்தில், அதாவது, ஜூன் / ஜூலையில் 1990-ஆம் ஆண்டிலிருந்து நடத்தப்பட்டு வருகிறது. இந்தக் கோயிலில் கும்பாபிஷேகம் ஒரே ஒருமுறை புதிய கட்டிடத்தில் 2013-ஆம் ஆண்டு நடைபெற்றது. திருவிழா சமயத்தில் இங்கு முன்பு வேலை செய்தவர்களின் வாரிசுகள் இந்த இடத்தில் வழிபாடு செய்வதற்கும் நண்பர்களை மற்றும், உறவினர்களைச் சந்திக்கவும் ஒன்று கூடுகிறார்கள்.

| J5 | தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | ***Lot 1192, Jalan Besar, Batang Melaka, 77500 Selandar, Jasin, Melaka.*** |

பத்தாங் மலாக்கா பட்டணத்தில் எழுந்தருளியிருக்கும் இத்திருக்கோயில், மலாக்கா மாநிலத்திலுள்ள பழமையான கோயில்களில் ஒன்றாகும். ஆரம்பக் காலத்தில் பத்தாங் மலாக்கா தோட்டத்தில் கங்காணியாக பணிபுரிந்த அமரர் திரு.பெரியண்ணன் அவர்களின் முயற்சியால், தோட்ட நிர்வாகத்தின் ஒத்துழைப்போடு இத்திருக்கோயில் 1935-ஆம் ஆண்டு கட்டப்பட்டது. அத்தருணத்தில், இத்திருத்தலம் சிறிய அளவில், மரப்பலகையினால் ஆன கோயிலாகத் திகழ்ந்தாலும், தோட்ட மக்களின் பக்தியை வளர்க்கும் மையமாக மிளிர்ந்தது.



நாடு சுதந்திரம் அடையும் முன், 1956-ல், பத்தாங் மலாக்கா தோட்டத்தின் உரிமையாளரான ஐரோப்பியர் தனது சொத்துடைமையை விற்றார். அச்சொத்தின் ஒரு பகுதியைச் சீனச் செல்வந்தர் ஒருவர் வாங்கியபின், அதன் பெயர் தொர் லீ தோட்டம் எனப் பெயர் மாற்றம் கண்டது. 1957-ஆம் ஆண்டு இக்கோயில் திருவிழாவின்போது ஓர் அசம்பாவிதம் நடந்து, பக்தர்களின் மனதில் ஆழமான காயத்தை ஏற்படுத்தியது. இரு சாராருக்கும் இடையே ஏற்பட்ட கைகலப்பில், ஓர் உயிர் பரிதாபமாக மரித்தது. அதன் வினை, பல ஆண்டுகள் அக்கோயில் கேட்பாரற்று, தெய்வ வழிபாடு இன்றி இருந்த நிலை வேதனைக்குரியது.

அதன்பின், மேனாள் தலைமை ஆசிரியர், அமரர் திரு.முருகையா ஆசிரியரின் தம்பி, திரு.நாகமுத்து கோயிலில் தினமும் திருவிளக்கை ஏற்றி பராமரித்து வந்தார். தொடர்ந்து, அத்திருக்கோயிலின் வளர்ச்சியில், அமரர் திரு.கண்ணையா, திரு.பழனிமுத்து ஆசிரியர் போன்றோரின் அரும்பணி குறிப்பிடத்தக்கது. 1983-இல் திருக்கோயிலின் கட்டட அமைப்பு சீரமைக்கப்பட்டது. அதன் கட்டடக் கலைஞராகத் திகழ்ந்தவர்கள்









திரு.கிம் மற்றும், அமரர் திரு.ஆறுமுகம் ஆகியோர். பத்தாங் மலாக்கா மேனாள் சட்டமன்ற உறுப்பினர் டத்தோ லிம் சூ கியாங் அவர்களின் அரசாங்க மான்யமும் சீரமைப்புப்பணிக்குக் கைகொடுத்தது. இக்கோயிலுக்கு டத்தோவின் வற்றாத உதவி மக்களின் மனதில் என்றுமே நீங்காமல் நீடித்து நிற்கும்.

கோயில் நிர்வாகத்தின் விவேகத் திட்டத்தின் வழி, பழைய கோயில் கட்டடம் தகர்க்கப்பட்டு, புதிய கோயில் எழ, 9-10-2001-இல் பூமிபூசை நடந்தேறியது.15-12-2004-இல் ஆதி மஹா கும்பாபிஷேகம் அரங்கேறியது. தொடர்ந்த திருப்பணியில், 31-8-2009-இல் அரசமரத்துப் பிள்ளையார் பீடமும் நவக்கிரக சந்நிதியும் எழுந்தருளப்பட்டது. மஹா காளியம்மன் மற்றும், ஆஞ்சநேயர் திருக்கோயில்கள் எழுப்பப்பட்டு, 1-1-2013-இல் மஹா கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெற்றது. கோயில் நிர்வாகத்தின் முயற்சியால் 15-12-2017-இல் இக்கோயிலுக்குத் தனி நிலப்பட்டா ஜாசின் நில,கனிவள இலாகாவிடமிருந்து பெறப்பட்டது.

இத்திருக்கோயில் 1365 சதுரமீட்டர் பரப்பளவிலான சொந்த நிலத்தில் வீற்றிருக்கிறது. இக்கோயிலின் வளாகத்தில் அடிப்படை வசதிகள் பல உள்ளன. மண்டபம், குருக்கள் தங்குமிடம் போன்றவை அதில் அடங்கும். பௌர்ணமி மற்றும், அமாவாசை விஷேச பூஜைகள் இக்கோயிலின் சிறப்பு அம்சங்கள். அதிகமான பக்தர்கள் திரளாக இப்பூஜையில் கலந்து கொள்வர். மூலவரோடு, ஆஞ்சநேயர், முனீஸ்வரர் மற்றும், நவக்கிரகம் தெய்வங்கள் இக்கோயிலில் பக்தகோடிகளுக்கு அருள்பாலிக்கின்றார்கள். இத்திருக்கோயிலின் கார்த்திகை மாத வருடாந்திரத் திருவிழா, 1992-ஆம் ஆண்டு முதல் இன்று வரை மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. திரு.இளஞ்செழியன் குப்பன் தலைமையிலுள்ள நிர்வாகம் கடந்த 8-9-2019-ஆம் நாளில் இத்திருக்கோயிலின் மகா கும்பாபிஷேகத்தை நடத்தி முடித்துள்ளனர். பி.தி.லோட் 1310-இல் 1364 சதுரமீட்டரில் அமைந்துள்ள பத்தாங் மலாக்கா இந்தியர்கள் மயானம் இத்திருக்கோயிலின் நிர்வாகத்தின் மேற்பார்வையில் தான் உள்ளது.

பத்தாங் மலாக்கா வாழ் இந்துப்பெருமக்களுக்கு இக்கோயில் பல்வகையான சமுதாயத் திட்டங்களை மேற்கொண்டு வருகின்றது. இந்தக் கோயில் நிர்வாகம் கடந்த 2013-ஆம் ஆண்டு, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவுபெற்றுள்ளது.





| J6 | ஸ்ரீ மஹா மாரியம்மன் ஸ்ரீ முத்தப்பன் ஆலயம் |
|---|---|
| | ***Ladang Jasin Lalang. 77200 Bemban, Jasin, Melaka.*** |

மலாக்கா மாநிலத்தில், ஸ்ரீ மஹா மாரியம்மன் திருக்கோயிலும் ஸ்ரீ முத்தப்பன் ஆலயமும் ஒரே வளாகத்தில் இருப்பது இத்திருத்தலத்தின் சிறப்பு. இத்திருக்கோயில் 1900-ஆம் ஆண்டுகளின் ஆரம்பத்தில் 200-க்கும் மேற்பட்ட இத்தோட்டப் பாட்டாளி மக்களால் எழுப்பப்பட்டதாகும். தோட்ட நிர்வாகத்தின் ஒத்துழைப்போடு நிறுவப்பட்ட இக்கோயிலில், தோட்டத் தொழிலாளர்களான தமிழர்களும் மலையாளிகளும் இறை தரிசனம் பெற்றனர். இன்றோ, அத்தோட்டத்தில் இரண்டு இந்தியக் குடும்பமே வாழ்ந்து வருகின்றனர். வேலையிலிருந்து ஓய்வுப் பெற்ற பாட்டாளிகள் தோட்டத்தின் அருகில் அமைந்துள்ள வீட்டுமனைத் திட்டங்களில் குடி பெயர்ந்துள்ளனர். இருப்பினும், இவர்கள், தாங்கள் வாழ்ந்த தோட்ட வாழ்க்கையை மறக்காமல், கோயிலின் எல்லா சமய நிகழ்வுகளிலும் கலந்து கொள்கின்றனர்.



ஆரம்பம் முதல் இன்று வரை இத்திருக்கோயில் பல கட்ட மேம்பாடு கண்டு வந்துள்ளது. தற்போதைய திருக்கோயில் வடிவமைக்கப்பட்டபின், 1977-ஆம் ஆண்டு முதலாவது மஹாகும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. இத்திருக்கோயிலில் மூலவரோடு விநாயகப் பெருமான், முருகன், முனீஸ்வரர், நாகம்மா, மதுரைவீரன், மற்றும், நவகிரகம் தெய்வங்கள் காட்சியளிக்கின்றனர்.

ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயத் திருவிழா ஆண்டு தோறும் ஆகஸ்ட்டு மாதம் 15-ஆம் திகதியில் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவின் போது நடத்தப்படும் தீமிதி நிகழ்வு, மலாக்கா மாநிலத்தில் நடத்தப்படும் பழமையான தீமிதி வைபவங்களில் ஒன்றாகும். இத்திருவிழாவை முன்னிட்டு பல்வகையான பாரம்பரிய விளையாட்டுப் போட்டிகள் நடத்தப்படும். கால்பந்து போட்டிக்கான ஸ்ரீ மஹா மாரியம்மன் சுழற்கிண்ணம் ஆண்கள்-பெண்கள் என இருபாலருக்கும் நடத்தப்படும் போட்டிகளாகும். இப்போட்டி கடந்த 52 ஆண்டுகள் தொடர்ந்து நடத்தப்பட்ட போட்டியாதலால், மலேசியக் காற்பந்து விளையாட்டுப் போட்டி உலகில் இது ஒரு சாதனையாகும்.

இத்திருத்தலத்தில் நடைபெறும் ஸ்ரீ முத்தப்பன் ஆலயத் திருவிழா மிகவும் புகழ்பெற்றது. இவ்விழா ஆண்டுதோறும் டிசம்பர் 25-ஆம் திகதியில் நடைபெறும். இத்தோட்டத்திலிருந்து வெளியேறிய பாட்டாளிகள், குறிப்பாக மலையாளிகள், இவ்விழாவில் தவறாமல் கலந்து கொள்வர். பக்தர்களின் வேண்டுதலின்போது, “வெள்ளாட்டம்” என்கிற வழிபாடு, “தெய்யம்” எனும் கலாச்சார முறையில் நடைபெறும். இந்த நிகழ்வின்போது, முத்தப்பன் கடவுளாக வேடமணிந்து ஆடும் கலைஞரை இறைவனாகக் கருதி பக்தர்கள் தங்கள் பிரச்சினைகளைக் கூறித் தீர்வு காண்கின்றனர்.



2024-ஆம் ஆண்டில் 5-வது மஹா கும்பாபிஷேகத்தை நடத்துமுன், கோயிலுக்காக ஐந்து ஏக்கர் நிலத்தைத் தோட்ட உரிமையாளர் ஐ.ஓ.ஐ. நிறுவனத்திடமிருந்து பெற கோயில் நிர்வாகம் தீர்மானித்துள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2012-ஆம் ஆண்டில் பதிவாகியுள்ளது.

| J7 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Jalan Asahan, Bukit Katong, Rim, 77000 Jasin, Melaka.*** |

ரீம் அருள்மிகு ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் ஓரளவு வித்தியாசமான மற்றும், சுவாரசியமான வரலாறு கொண்டது. ரீம் தோட்டம், பார்லோ பௌஸ்டெட் எனும் ஓர் ஐரோப்பிய நிறுவனத்திற்குச் சொந்தமான ரப்பர் தோட்டம். இத்தோட்டம் 1910-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டபோது கிட்டத்தட்ட அனைத்து தோட்டத் தொழிலாளர்களும் இந்து மக்களாகவே இருந்தனர். அவர்கள் இக்கோயிலை மரப்பலகையாலும், தகரக்கூரையாலும் நிறுவினர்.



இக்கோயில் கருவறையில் வீற்றிருப்பவள் தேவி அருள்மிகு ஸ்ரீ மகா மாரியம்மன் ஆவார். தமிழ் நாட்டில் பழக்கத்தில் இருந்ததுபோல் கோயிலில் கல்வி வகுப்புகளை இங்கே நடத்தினார்கள். தோட்ட நிர்வாகம் கல்விக்குத் தேவையான வசதிகளைச் செயல்படுத்தி, தோட்டமக்களே, தங்கள் பிள்ளைகளின் கல்விக்காகக் கோயிலின் ஒரு பகுதியைப் பயன்படுத்த உதவியது. இரண்டு ஆசிரியர்கள் சேர்ந்து சுமார் இருபத்தைந்து மாணவர்களுக்குக் கல்வி புகட்டினர். இக்கோயில் வளாகத்தில் காலையில் தமிழ்ப்பள்ளியும் மாலையில் சீனப்பள்ளியும் சீராகச் செயல்பட்டு, மக்களிடையே சமூக நல்லுறவை ஏற்படுத்தியது.



1964-ஆம் ஆண்டில் தோட்ட உரிமையாளரால் இத்தோட்டம் விற்பனை செய்யப்பட்டு, தோட்டம் துண்டாடப்பட்டது. இங்கு வசித்த இந்தியத் தொழிலாளர்கள் தாங்கள் வசித்த வீடுகளையே தங்களுக்கு உடைமையாக்கிக்கொண்டனர். கோயில், மற்றும், அதைச் சூழ்ந்த பகுதிகளும் இந்தியர்களுக்கு உடைமையாகியது. இவர்களின் கடின உழைப்பினால் 1985-ஆம் ஆண்டில் புதியதொரு கோயில் கட்டப்பெற்று, கும்பாபிஷேகமும் மிக விமரிசையாக நடைப்பெற்றது. இந்துக் கோயிலின் வடிவமைப்புடன் கூடிய கோயில் கட்டிடம் உருபெற்றது .



கோயிலின் பிரதான கடவுள் ஸ்ரீ மகா மாரியம்மன். ஆனால், சிவன், நாகம்மாள், முருகன், விநாயகர் அனுமன், நவக்கிரகம், பைரவர் போன்ற பிற தெய்வங்களும் கோயில் வளாகத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. ஏறத்தாழ எல்லா இந்துச் சமய சிறப்புப் பண்டிகைகளும் இங்கு அனுசரிக்கப்படுகின்றன. ரீம் பகுதியில் பல இந்திய குடியிருப்புப் பூங்காக்கள் பெருகியுள்ளதால் திருநாட் காலங்களில் பக்தர்கள் வருகை மிகவும் ஊக்கமளிப்பதாக உள்ளது.

1997, 2009 மற்றும், 2020-ஆம் ஆண்டுகளில் கோயிலின் கும்பாபிஷேகம் மேற்கொள்ளப்பட்டன. இக்கோயிலின் சிறப்புத் திருவிழா சித்திரை புத்தாண்டு, பதினான்கு நாட்களுக்குச் சிறப்புப் பூஜைகளுடன் நடைபெறும். 2020-ஆம் ஆண்டு இறுதியில், 100,000 ரிங்கிட் செலவில் இவ்வாலயம் மேம்படுத்தப்பட உள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2012-ஆம் ஆண்டு பதிவுப் பெற்றுள்ளது.

| J8 | **ஸ்ரீ துர்க்கை அம்மன் கோயில்** |
|---|---|
| | ***Ladang Diamond Jubilee, Jalan Asahan, 77000 Jasin, Melaka.*** |

இந்தத் தோட்டம் ஆங்கிலேயர்களிடமிருந்து தற்பொழுது சாயம் டார்பி நிறுவனத்திற்குச் சொந்தமானது. ஆங்கிலேயர்களின் ரப்பர்த் தோட்டத்தில் பணிபுரிய அதிக தமிழர்களை வேலைக்கு அமர்த்தினர். அவர்கள் இந்தக் கோயிலை 1890-ஆம் ஆண்டு ஸ்ரீ துர்க்கா தேவியின் பெயரில் ஒரு சிறிய குடிலில் அமைத்தார்கள்.

1983-ஆம் ஆண்டில் இக்கோயில் அதே இடத்தில் மீண்டும் சீரமைக்கப்பட்டது. பின்னர், 2017-ஆம் ஆண்டில் 40,000 ரிங்கிட் அரசாங்க மான்யத்தில் கோயில் கும்பாபிஷேகம் கண்டது. முறையான இந்துக் கோயில் அமைப்பில் வடிவம் கண்டது. இதனுடன், கோயில் வளாகத்தில் சமையல் அறை, சாப்பாட்டு அறை, மற்றும் அர்ச்சகர் அறைகளும் சேர்க்கப்பட்டன. தீரா நோய் வாய்ப்பட்டவர்கள் பெரும்பாலும் செவ்வாய் மற்றும் வெள்ளிக்கிழமைகளில் கோயிலுக்கு வந்து அவர்களின் குறைகளைத் துர்க்கை அம்மனிடம் முறையிட்டு, பயன்பெற்றுள்ளதாகக் கூறப்படுகிறது.







ஒரு காலத்தில், இத்தோட்ட இந்தியர்களின் எண்ணிக்கை ஆயிரத்தைத் தாண்டியது. செம்பனை மர நடவுக்குப் பிறகு, பல இந்தியத் தொழிலாளர்களும் அவர்களது குடும்பத்தினரும் வெவ்வேறு இடங்களுக்கு மாற்றலாகிச் சென்று விட்டனர். சிலர் அருகிலுள்ள வீட்டுக் குடியிருப்புப் பகுதிகளில் குடிபெயர்ந்து விட்டனர். தற்போது இந்தத் தோட்டத்தில் பத்து குடும்பங்கள் மட்டுமே வாழ்கின்றனர்.

இப்போது பெரும்பாலான தோட்டத் தொழிலாளர்கள் அந்நியத் தொழிலாளர்கள் ஆவர். அவர்களில் நேப்பாள இந்துக்கள். கோயிலில் அங்கத்தினர்களாகி, தினசரி வழிபாடுகளில் கலந்து கொள்கின்றனர். ஒரு நேப்பாளியர் கூட கோயில் குருக்களுக்கு உதவியாக இருக்கிறார். தோட்டத் தொழிலாளர்கள் மட்டுமே கோயில் செயலவைக் குழுவில் உறுப்பினர்களாக இருக்க முடியும் என்பது தற்பொழுதைய தோட்ட நிர்வாகத்தின் விதி.

கோயிலின் வருடாந்திரத் திருவிழா, சித்திரைப் புத்தாண்டு அன்று மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. ஆயிரக் கணக்கான பக்தர்கள் - குறிப்பாக முன்னர் இத்தோட்டத்தில் வசித்தவர்கள் - இத்திருவிழாவில் கலந்து கொள்கின்றனர். இரவில் அலங்கரிக்கப்பட்டத் துர்க்கை அம்மன், அழகிய இரதத்தில் தோட்டக் குடியிருப்புப் பகுதியை வலம் வருகிறாள். கோயில் செயற்குழுவினரின் முயற்சியினால், திருவிழாவின்போது, தேவைப்படுவோருக்குத் தோட்ட நிர்வாகம், ஒரு சிறு தொகையில் தங்கும் இட வசதி செய்து தருகிறது. தோட்டத்திற்குச் சம்பந்தமில்லாதவர்கள் கோயிலுக்குச் செல்லத் தோட்ட அனுமதி தேவை. எனினும், இதுவரை அனுமதி மறுக்கப்படுவதில்லை.



இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, சங்கங்களின் பதிவகத்தில் பதிந்து கொள்ளவில்லை.

| J9 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *Jalan Taman Maju, 77000 Jasin, Melaka.* |

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், மலாயாவில் ரப்பர் தோட்டங்கள் அதிகம் திறக்கப்பட்ட சமயம், மலாக்கா ஜாசின் பகுதியில் ஆங்கிலேய நிறுவனம் ஜாசின் தோட்டப் பிரிவு 18-ஐத் திறந்தது. அங்குத் தொடக்கத்தில் பணிபுரிந்த தமிழ்த் தொழிலாளர்கள் தங்களின் வழிபாட்டிற்காக 1890-ஆம் ஆண்டு நிறுவியதுதான் இந்த ஸ்ரீமகா மாரியம்மன் கோயில். தொடக்கத்தில் பலகை, தகரம், போன்றவற்றைக் கொண்டு கட்டப்பட்ட இந்தக் கோயில் நாளடைவில் பல மாற்றங்களைக் கண்டுள்ளது. 1910-ஆம் ஆண்டுவாக்கில், ஜாசின் மாவட்ட அலுவலகங்கள் விரிவுபட்ட சமயம், அரசாங்கத்தால் கட்டப்பட்ட சாலை, இந்தத் தோட்டத்தைப் பிளந்து சென்றதால், கோயில் பகுதியும் தொழிலாளர் வீட்டுப் பகுதியும் பிரிந்து நின்றன.



1965-ஆம் ஆண்டுகளில் ஜாசின் பட்டிணம் துரித வளர்ச்சி பெறத் துவங்கியது. கோயில் அருகே உள்ள நிலம், பள்ளிகள் மற்றும், குடியிருப்புப் பகுதிகளுக்காக அரசாங்கத்தால் கையகப்படுத்தப்பட்டது. குடியிருப்புப் பகுதிகளில் குடியிருந்த இந்துக்களின் எண்ணிக்கை கணிசமாக அதிகரித்தது. கோயிலுக்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் பன்மடங்காயிற்று. எனவே, 1983-ஆம் ஆண்டில் கோயில் செயற்குழுவின் முயற்சியில் கோயில் புதுப்பிக்கப்பட்டது. இக்கோயிலுக்கு அருகில் ஒரு சிறிய பல்நோக்கு மண்டபமும் கட்டப்பட்டது.









ஸ்ரீ மகா மாரியம்மன் அன்றி, விநாயகர், முருகன், நவக்கிரகம் போன்ற தெய்வங்களும் இக்கோயில் வளாகத்தில் காணப்பெறுகின்றன. இந்துச் சமயப் பண்டிகைகள் அனைத்தும் இங்கு அனுசரிக்கப்படுகின்றன. வருடாந்திரத் திருவிழாவான நவராத்திரியை ஒட்டி ஒன்பது நாட்களுக்கு உபயம் மேற்கொள்ளப்படுகிறது.

ஆலயச் செயற்குழுவினர் சமூக மேம்பாட்டிலும் மிக அக்கறை கொண்டுள்ளனர். மாணவர்களுக்கான கல்விக் கருத்தரங்குகள், தன்முனைப்புப் பேச்சு, மாணவர்களின் தேர்வுக்கு முந்தைய கூட்டுப்பிரார்த்தனைகளும் வருடந்தோறும் நடத்தப்படுகின்றது.

2022ல் கும்பாபிஷேகம் நடைபெறவுள்ளது. கோயில் செயற்குழுவினர் புதிதாக ஒரு கோயிலை, ஜாசின் பட்டண வட்டார இந்து மக்களின் எண்ணிக்கைக்கேற்ப, கட்ட எண்ணம் கொண்டுள்ளனர். சிவனை மூலக்கடவுளாகக் கொண்டு, தங்கள் சொந்த நிலத்திலேயே கோயிலையும் பல நோக்கு மண்டபத்தையும் அமைக்க திட்டம் கொண்டுள்ளனர். எனினும், ஜாசின் நகராண்மைக் கழகம் இதுவரை ஒப்புதல் அளிக்காமல் இருக்கின்றது.

இந்தக் கோயிலின் நிர்வாகம், அருகிலுள்ள சிவன் கோயிலையும் நிர்வகிப்பதால், இரண்டு கோயில்களையும் உள்ளடக்கிய விதத்தில், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில், நிர்வாகச் சங்கமாக 2011-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளது

| J10 | **அருள்மிகு சிவன் திருக்கோயில்** |
|---|---|
| | ***Jalan Besar Jasin, 77000 Jasin, Melaka.*** |

1887-ஆம் ஆண்டில் ஜாசின் மாவட்டம் உருவாக்கப்பட்டபொழுது ஏற்படுத்தப்பட்ட பல்வேறு அரசு இலாகாக்களில் தமிழ் தொழிலாளர்களும் பணியாளர்களும் இருந்தனர். அவர்களில் குறிப்பாக, பொது மராமத்து





இலாகா ஊழியர்கள் இந்த சிறிய கோயிலை, அவர்களின் குடியிருப்புப் பகுதியில் நிறுவி, வழிபடலாயினர்.

மற்றவர்கள் அம்மன் கோயில்களை நிறுவிய சமயம், இவர்கள் சிவன் பெயரில் கோயிலைத் தொடங்கியதற்கு உண்மையான காரணம் தெரியாவிட்டாலும், ஆக்கும்-காக்கும்-அழிக்கும் தன்மை கொண்ட சிவனை முழு முதற் கடவுளாக அவர்கள் தேர்வு செய்து வழிபட்டனர்.

1960-ஆம் ஆண்டில், தமிழ்ப் பள்ளிக்கூடம், அரசாங்க அலுவலகங்கள், மற்றும், அரசு ஊழியர்கள் குடியிருப்பு வீடுகள் அமைக்க மலாக்கா அரசாங்கம் இந்த இந்தியத் தொழிலாளர் குடியிருப்புப் பகுதியை கையகப்படுத்தியது. இங்கு வசித்த இந்திய மக்கள் ஜாசின் 18-ஆம் கல் இந்திய புதுக் கிராமத்திற்குப் புலம் பெயர்ந்தனர் .

சிவன் ஆலயமும் 1965-ஆம் ஆண்டு லாட் 1577, ஜாலான் பெசார் ஜாசின் என்ற எண்கொண்ட தற்போதைய தளத்திற்கு மாற்றப்பட்டது. இந்த அரசாங்க நிலத்தைக் கோயில் அமைப்பதற்காகப் பெற்றுத் தருவதில் பெரும் பங்காற்றியவர்கள் அந்நாளைய பொது மராமத்து, மற்றும், நீதித்துறை ஊழியர்கள் ஆவர். ஓங்கிய அரச மர நிழலில், பலகையாலும் தகரத்தாலும் ஆன ஒரு சிறு கோயில் கட்டப்பட்டது. உள்ளே சுண்ணாம்பாலான சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

பல இடங்களிலிருந்தும் இறந்தவரின் ஈமச் சடங்கைச் செய்து முடிக்க சிவன் கோயில் நாடப்படுவதால் பக்தர்களின் எண்ணிக்கை வளர்ந்தது. இதனால், 1990-ஆம் ஆண்டிலும், 2003-ஆம் ஆண்டிலும் கோயில் சற்று விரிவாக்கப்பட்டது. பக்தர்களின் தேவை அதிகரித்ததினால் 2017-ஆம் ஆண்டில் தற்போதைய ஆலயக் கட்டடம் கட்டப்பட்டது. இதுவும் ஒரு முழுமையான தீர்வாக இல்லாததால் சிவன் ஆலயத்தை இடமாற்றம் செய்து, ஸ்ரீமகா மாரியம்மன் ஆலயத்துடன் இணைத்து, முறையான சிவன் ஆலயத்தைக் கட்ட கோயில் நிர்வாகம் திட்டமிட்டுள்ளது. பலநோக்கு அரங்கு, கல்விக் கூடம், கழிப்பறை, வாகன நிறுத்துமிடம், பணிமனை போன்ற வசதிகளுடன் அமையும் கோயில், வரும் காலங்களில் சமூக, சமய வளர்ச்சிக்கு அடித்தளமாக அமையும் என கோயில் நிர்வாகம் நம்புகிறது.



இந்தக் கோயில் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் தாமான் மாஜு ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயத்துடன் இணைத்து கோயில் நிர்வாகம், நிர்வாகச் சங்கமாக 2011-ஆம் ஆண்டு பதிந்துள்ளது. எனினும், இந்த ஆய்வின்பொழுது மற்றொரு பக்தர்கள் சங்கம் ஸ்ரீ சிவன் கோயில் பெயரில் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் 2012-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளதும் தெரிந்தது.

## J11 ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம்

***Ladang Jasin Lalang, Bahagian Bukit Chermin, J9939, Bukit Tinggi, Jalan Merlimau, Simpang Kerayong, 77000 Jasin, Melaka.***



இத்திருக்கோயிலின் திருநாமம் ஸ்ரீ மஹா மாரியம்மன் என விளங்கினாலும், இக்கோயிலின் வளாகத்தில் தனித்தனியே மூலவராகக் கோயில் கொண்டு அருள்பாலிப்பது அம்பாளும் ஸ்ரீ ராமர்பிரானும் ஆவர். இவர்களுடன், ஸ்ரீ முத்தப்பனும், முனியாண்டியும் இங்கே குடிகொண்டு பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். கடந்த 20 ஆண்டு காலமாக இத்திருக்கோயிலின் நிர்வாகத்தின் தலைவராக இறைத்தொண்டு புரிபவர் திரு.விஸ்நாதன் ராமகிருஷ்ணன் அவர்கள். அவர் கூற்றின்படி, இத்திருக்கோயில் 1902-ஆம் ஆண்டு தோட்டப் பாட்டாளி மக்களால் எழுப்பப்பட்டதாகும்.

ராமர் பக்தரான இத்திருக்கோயிலின் பொருளாளர், திரு.விஸ்வநாதன் நாராயணன் கூற்றுப்படி, ஆரம்பத்தில், ஒருநாள் நடுநிசியில், இத்தோட்டத்தின் ஆங்கிலேய நிர்வாகி தனது காரில் பயணித்துக் கொண்டிருந்தபோது, அவர் முன்னால் அம்பாள் காட்சியளித்து அவரை ஆச்சரியத்தில் திகழச் செய்த காரணத்தால், அந்நிர்வாகி அம்பாளின் சக்தியை உணர்ந்து, திருக்கோயிலின் புனரமைப்புப் பணிக்கு உதவினார். சிறிய அளவில் மரப்பலகையாலான கட்டடம் சற்று விரிவுபடுத்தப்பட்டது. பின்னர், 1985-ஆம் ஆண்டும் 1987-ஆம் ஆண்டும் கோயில் மேம்படுத்தப்பட்டு, இத்திருக்கோயிலின் முதலாவது மஹாகும்பாபிஷேகம் சிறப்புற நடைபெற்றது.

இத்திருக்கோயில் வளாகத்தில் தனிக்கோயிலில் குடிகொண்டுள்ளார் ஸ்ரீ ராமர்பிரான். இவ்வவதார புருஷனுக்கு இத்தகைய திருக்கோயில் கட்டி, வழிபடும் பாரம்பரியம் இம்மாநிலத்திலேயே ஆதியாக இருப்பது இக்கோயிலின் தனிச் சிறப்பாகும். மலாக்கா, ஆயர்குரோவில் அமைந்துள்ள கிருஷ்ண பலராம் இந்திய கலை கலாச்சார மையம் ஆண்டுதோறும் ஸ்ரீ ராமர்பிரான் திருக்கோயிலில் ராமநவமி நன்னாளை விஷேசப் பூஜையுடன் மிகச்சிறப்பாகக் கொண்டாடுவர்.

ஸ்ரீ மஹா மாரியம்மன் சன்னதியில் ஆகஸ்ட்டு திங்களில் ஆடிப்பூர திருவிழா மிகவும் நேர்த்தியாக நாற்பது ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. இத்தோட்டத்து மண்ணின் மைந்தர்கள் நாடு தழுவிய நிலையில் வாழ்ந்து வந்தாலும், தவறாமல் தங்கள் குடும்பத்தோடு வந்து அம்பாளின் தரிசனம் பெறும் நாளே இத்திருவிழா. 1990-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் இத்தோட்டத்தில் பணிபுரிந்த தொழிலாளர்கள் அனைவரும் ஜாசின் லாலாங் தோட்டத்திற்கு மாற்றப்பட்டனர். இருப்பினும், திருக்கோயில் நிர்வாகம் தொடர்ந்து திருக்கோயிலை நன்முறையில் பராமரித்து வருகின்றனர். கடந்த 2019-ஆம் ஆண்டு இத்தோட்டத்தின் உரிமையாளர் ஐ.ஓ.ஐ. கார்ப்பிரேசன் பெர்ஹாட் நிறுவனம் இத்தோட்டத்தை வேறொரு நிறுவனத்திற்கு விற்றுவிட்டது. நிலத்தை வாங்கிய பார்க்லந்து (Parkland) நிறுவனம், கோயில் நிர்வாகத்தின் வேண்டுகோளுக்கிணங்க, இந்தக் கோயிலுக்காக 23,681 சதுர அடி நிலபரப்பை, தற்பொழுதுள்ள கோயிலுக்குச் சற்றுத் தள்ளி உள்ள இடத்தில் இலவசமாக ஒதுக்கிக் கொடுத்துள்ளதுடன் மேலும், கோயிலைப் புதிதாகக் கட்டும் திருப்பணிக்காக மேலும் 310,000 ரிங்கிட் நன்கொடையும் கொடுத்துள்ளனர். கடந்த 21.3.2021-ஆம் நாளன்று இதற்கான புரிந்துணர்வு ஒப்பந்தத்தில் (MOU) நிறுவனமும் கோயில் நிர்வாகமும் கையெழுத்திட்டுள்ளனர். இரு ஆண்டுகளில் புதிய கோயில் கட்டி முடிக்கப்படும் என கோயில் நிர்வாகம் உறுதிப் பூண்டுள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம் 1983-ஆம் ஆண்டு முதல் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாகப் பதிவுப் பெற்றுள்ளது.



| J12 | ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | ***Ladang Jasin Lalang, Bahagian Batu Lang, 77300 Merlimau, Melaka.*** |

தமிழகத்திலிருந்து மலையகத்திற்கு ரப்பர் தோட்டத்தில் வேலை செய்யத் தருவிக்கப்பட்ட தமிழர்கள், தங்களின் சமய நம்பிக்கை, கலை கலாச்சாரத்தையும் உடன்கொண்டு வந்தனர். அதன்படி தோட்ட நிர்வாக அனுமதியுடன், அமையப்பெற்றதே ஜாசின் லாலாங், பத்துலாங் பிரிவில் வீற்றிருக்கும் ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம். அனேகமாக 1940-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் ஒரு சிறிய பலகைக் கட்டடமாக இருந்தது. 1980-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் தோட்ட நிர்வாகியாக இருந்த பிரிட்டிஸ்காரரின் தயவோடு இத்திருக்கோயில் புனரமைப்பு செய்யப்பட்டது. அதன்பின்பு, தற்போதைய கல் கட்டடம் எழுந்தது. இக்கோயில் அரை ஏக்கர் நிலத்தில் அமையப் பெற்றிருக்கிறது.



1980-ஆம் ஆண்டுகள் மத்தியில் ஜாசின் லாலாங் தோட்டக் குழுமம், ஜாசின் லாலாங் பத்து லாங் பிரிவு தோட்ட மக்களை ஜாசின் லாலாங் தோட்டத்திற்கு இடம் பெயரச் செய்தனர். செம்பனைத் தோட்டமாக இது மாறியதால் அதிகம் வேலையாட்கள் தேவை இல்லாத நிலை. இருப்பினும், இத்திருக்கோயில் நிர்வாகத்தினர் தொடர்ந்து தங்கள் மூதாதையர்களின் திருக்கோயிலை நன்முறையில் நடத்தி வந்தனர். கடந்த 11 ஆண்டுகளாக திரு.ராமசாமி அருணாசலம் குடும்பமும் அவரின் நெருங்கிய உறவினர்களும் இத்திருக்கோயிலைப் பாதுகாத்து வருகின்றனர். சமய விழாக்களையும் தங்குத்தடையின்றி செய்து வருகின்றனர்.

இத்திருத்தலத்தில் மூலவராக அம்பாள் கோலாட்சி புரிகிறார். அவருடனே, விநாயகப் பெருமான், முருகப் பெருமான் மற்றும், முனீஸ்வரர் திருக்காட்சியளித்து அருள்பாலிக்கின்றனர். இத்திருக்கோயிலின் வருடாந்திர திருவிழா ஜூலை திங்கள் 15-ஆம் திகதி நடைபெறும். இவ்விழா 1975-ஆம் ஆண்டு முதல் இந்நாள்வரை சிறப்புற நடைபெற்று வருகிறது. இத்தோட்டத்தில் வாழ்ந்த பாட்டாளி மக்களின் உறவுகள் சங்கமமாகும் நன்னாளாகவும் இது திகழ்கிறது.



இத்திருக்கோயில் அமைந்துள்ள நிலம் தற்போது ஐ.ஓ.ஐ. கார்ப்பிரேசன் பெர்ஹாட் நிறுவன சொத்துடைமையாக உள்ளது. அரை ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள திருக்கோயிலின் நில உரிமம் கோயில் நிர்வாகத்திற்குக் கிடைக்கும் என அவர்கள் பெரிதும் நம்பி, நடவடிக்கைகளை எடுத்து வருகின்றனர். எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| J13 | ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
| --- | --- |
| | ***Ladang Serkam, Bahagian Jasin, 77000 Jasin, Melaka.*** |

ஜாசின், செர்க்காம் தோட்டத்தில் மகாசக்தியாக அருள்காட்சி தருபவள் ஸ்ரீ மஹா மாரியம்மன். அரை ஏக்கர் நிலப்பரப்பில் 1915-ஆம் ஆண்டு தோட்டப் பாட்டாளி மக்களால் இத்திருக்கோயில் கட்டப்பட்டது. ஆரம்பக் கட்டத்தில், இத்திருக்கோயில் மரப்பலகையினாலும் கூரை தகரத்தாலும் கொண்ட கட்டடமாகத் திகழ்ந்தது. 1980-ஆம் ஆண்டு, தற்போதைய கல் கட்டடம் நிறுவப்பட்டது. கோயில் நிர்வாகம் தற்போது பல்வகைப் பயன்பாட்டிற்காக நடுத்தர மண்டபம் ஒன்றை கட்டும் பணியில் ஈடுபட்டுள்ளது.

இத்திருத்தலத்தின் மூலவராக அருட்காட்சி தருபவள் ஸ்ரீ மஹா மாரியம்மன். விநாயகப் பெருமான், முருகப் பெருமான், சங்கலிகருப்பன், நாகம்மா மற்றும், முனியாண்டி போன்றத் தெய்வங்களும் இங்கே பக்தர்களுக்காக அருள்பாலிக்கிறார்கள். அம்பாளை வழிபடுவதற்குரிய சிறந்த மாதமாக ஆடிமாதம் இருக்கிறது. இந்த மாதத்தில்தான் இத்திருத்தலத்தின் வருடாந்திரத் திருவிழா நடைபெறுகிறது. இவ்விழா 1980-ஆம் ஆண்டு முதல் எவ்வித இடையூறும் இன்றி நடைபெற்று வருகிறது. இத்திருவிழாவின் போது நடைபெறும்




தீமிதி வைபவம் பக்தர்களின் பங்களிப்பை அதிகம் கவர்ந்த ஒரு நிகழ்வாகும். ஜாசின் மாவட்டத்திலேயே இத்திருத்தலத்தில்தான் முதன்முறையாக தீமிதி வைபவம் நடந்தது என்பது சரித்திரப் பதிப்பாகும். திருக்கோயில் நிர்வாகம், அனாதைக் குழந்தைகள் இல்லத்திற்கு உணவுப் பொட்டலம், துணிமணிகள் மற்றும், பணமுடிப்பு நன்கொடையாக வழங்குவதை அவர்களின் சமுதாயத் திட்டமாகச் செயல் படுத்தி வருகின்றனர்.

இத்தோட்டத்தில் பணிபுரிந்து, தோட்டத்திலேயே வாழும் பாட்டாளிகளின் எண்ணிக்கையை விரல் விட்டு எண்ணிவிடலாம். அதிகமானோர், ஜாசின் பட்டணத்தைச் சுற்றி அமைந்துள்ள வீட்டுமனைத் திட்டங்களில் வசிக்கின்றனர். இருப்பினும், கோயிலில் நடைபெறும் திருவிழாவின் போது அதிக பக்தர்கள் கலந்து கொள்கின்றனர். இதரச் சமய நிகழ்வுகளில் அவர்களின் பங்களிப்பு கணிசமான அளவில் தான் உள்ளது. திரு. முனியாண்டி ஆறுமுகம் என்பவர் கடந்த 1980-ஆம் ஆண்டு முதல் இன்று வரை ஆலயத் தலைவர் பொறுப்பில் இறை சேவை புரிந்து வருகிறார்.

தோட்டத்தில் பணிபுரியாதவர்கள் கோயில் செயற்குழுவில் இருப்பது தோட்டச் சட்டத்தின்படி தவறான ஒன்றாக இருப்பதால், தீர்வுக் காணும் நோக்கில் தோட்ட நிர்வாகத்துடன் ஆலோசனை நடத்திவருகின்றனர். இந்தக் கோயில் நிர்வாகம் 2005-ஆம் ஆண்டு ஒரு பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவு செய்யப்பட்ட போதும், பதிவுச் சான்றிதழைத் தோட்ட நிர்வாகம் எடுத்து வைத்திருப்பதால், கோயில் அறிக்கைகளை நிர்வாகம் தொடர்ந்து பதிவகத்திற்கு அனுப்பாதக் காரணத்தால், அந்தப் பதிவு ரத்தாகியிருக்கும் சாத்தியம் அதிகம்.






| J14 | **ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்** |
|---|---|
| | ***Ladang Tebong, Bahagian Batang Melaka (Bemban), 77500 Batang Melaka, Melaka.*** |



திபோங் தோட்ட பத்தாங் மலாக்கா பிரிவு தற்பொழுது கெந்திங் குழுமத்தின் சொத்தாக உள்ளது. பழைய ஆங்கிலேய உரிமையாளரிடம் தோட்டம் இருந்த சமயம், 1930-ஆம் ஆண்டுகளில் இந்த ஸ்ரீமகா மாரியம்மன் ஆலயம், இங்குப் பணிபுரிந்த இந்து வேலையாட்களால் நிறுவப்பட்டது. தோட்ட உட்புறத்தில் அமைந்திருந்த இந்தக் கோயிலை, 1973-ஆம் ஆண்டு தோட்டத் தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதிக்கு அருகில், ரயில் பாதையின் பக்கத்தில் மாற்றி அமைத்தார்கள்.

இந்துச் சமயத் தொழிலாளர்கள் பெரும்பாலும் இந்தத் தோட்டத்திலிருந்து வெளியேறி வெளியில் அமைந்துள்ள குடியிருப்புப் பகுதிகளில் வாழ்கிறார்கள். எனவே, இந்தக் கோயில் அவர்கள் வாழும், தாமான் ஸ்ரீ ஹிலிர் அருகில் வழங்கப்பட்டுள்ள நிலத்திற்கு மாற்றப்படவுள்ளது. சுமார் இரண்டு ஏக்கர் பரப்பளவுள்ள நிலத்தை மலாக்கா மாநில அரசு இந்தக் கோயில் நிர்வாகத்திற்கு 2013-ஆம் ஆண்டு ஒதுக்கிக் கொடுத்துள்ளது. இந்தக் கோயிலின் நிர்வாகம் ஜாசின் அருள்மிகு தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் 2015-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.

ஆடி மாதத்தில் மாரியம்மன் திருவிழாவை ஏறத்தாழ ஆயிரம் பக்தர்கள் கூடி இந்தக் கோயிலில் கொண்டாடுகிறார்கள். இந்தத் தோட்டத்தில் முன்பு வசித்தவர்களின் குடும்பங்களும், வாரிசுகளும் எங்கிருந்தாலும் இந்தத் திருவிழாவின்போது வட்டாரத்திலேயே வாழ்பவர்களுடன் இணைந்து இந்தக் கொண்டாட்டத்தில் பங்கேற்கின்றனர்.

இந்தக் கோயில் கும்பாபிஷேகம், 2019-ஆண்டு நடைபெற்றதுடன், மூன்று தடவை நடைபெற்றுள்ளது. திருவிழாச் சமயங்களில் ரத ஊர்வலம் தாமான் ஸ்ரீ ஹிலிர், கம்போங் ஒன் லோக் போன்ற வீடமைப்புத் திட்டங்களைச் சுற்றி, பக்தர்களின் வீடுகள் வழி, வரும்.



தாமான் ஸ்ரீ ஹிலிர், கம்போங் ஒன் லோக் பகுதிகளில் வசிக்கும் இந்துக்கள் பலரும் இந்தக் கோயிலின் உறுப்பினர்களாகப் பதிந்துள்ளதால் அதன் எண்ணிக்கை 300-ஐத் தாண்டியுள்ளது.

| J15 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Kempas, Batu 18, Selatan Baru, Bahagian Merlimau, 77300 Merlimau.*** |




கெம்பாஸ் தோட்டத்தின் செலாத்தான் பாரு பிரிவில் வேலை செய்து வந்த இந்துத் தொழிலாளர்களின் வீடமைப்புப் பகுதிகளுக்கு அருகில் அவர்கள் வழிபாடு செய்ய இந்தக் கோயில் 1950 - ஆம் ஆண்டுகளில் உருவாக்கப்பட்டது.

2001-ஆம் ஆண்டில் இக்கோயில் புதுப்பித்துக் கட்டப்பட்டிருக்கிறது. தோட்டத்தின் உரிமையும் இன்று சைம் டார்பி நிறுவனத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. இங்குள்ளத் தோட்டத் தொழிலாளர்கள் வீடுகளில் யாரும் தங்குவதில்லை. முன்பு இங்கு வேலை செய்தோர் அருகில் உள்ள வீடமைப்புப் பகுதிகளுக்கு மாற்றலாகிச் சென்று விட்டனர். இருப்பினும், ஏற்கனவே இங்கு வேலை செய்தவர்களும் அவர்களது உறவினர்களும் தொடர்ந்து இந்த ஆலயத்திற்கு வந்து வழிபாடு செய்து வருகின்றனர்.



14 நாட்கள் தொடர்ந்து நடைபெறும் இந்தக் கோயிலின் ஆண்டுத் திருவிழா தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் பெயரில் நடைபெறுகிறது. இரண்டு முறை கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ள இந்தக் கோயிலின் அடுத்தக் கும்பாபிஷேகத்திற்குள் சொந்த நிலம் பெற்று புதிய கட்டிடத்தைக் கட்ட வேண்டும் என்ற தீர்மானத்தில் கோயில் நிர்வாகம் உள்ளது. எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| J16 | தேவி ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *Ladang Serkam, Bahagian Kemendore, 77000 Jasin, Melaka.* |



பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கம் தொடங்கி, தொடர்ந்து பல காலக்கட்டங்களில் மலேசியாவிற்குக் குடிபெயர்ந்தவர்கள், தோட்ட வேலைகளுக்காக ஆங்கிலேயர்களால் அழைத்துவரப் பெற்றவர்களில் பெரும்பாலோர் இந்தியர்கள், அதிலும் குறிப்பாக தமிழர்கள். அவ்வாறு தருவிக்கப்பட்டவர்களில் கத்ரி நிறுவனத்திற்குச் சொந்தமான செர்க்காம் தோட்டத்து கெமண்டோர் பிரிவு பாட்டாளி மக்களும் அடங்குவர். அவர்கள், அன்னை மாரியம்மனுக்கு 1936-ஆம் ஆண்டு திருக்கோயில் கட்டி தங்களின் ஆன்ம நெறியை வளப்படுத்தினர். ஆரம்ப நிலையில் மரப்பலகையிலான சிறிய திருக்கோயிலாகத் திகழ்ந்ததைப் பின்பு கல் கட்டடமாக அமைத்தார்கள். இத்திருக்கோயில் ஒரு சிறிய மேட்டுப் பகுதியில் அமையப் பெற்று, தோட்டப்பாட்டாளிகளின் குடியிருப்பையையும் விளையாட்டு மைதானத்தையும் நோக்கி அமைந்துள்ளது கண்கொள்ளாகாட்சி. திருக்கோயிலின் முகப்பிலும் பின்புறத்திலும் தலை நிமிர்ந்து நிற்கும் தல விருட்சம், அரச மரம் கோயிலின் அழகை மேலும் மெருகூட்டுகிறது.

2000-ஆம் ஆண்டு துவக்கத்தில் 30 குடும்பங்கள் வாழ்ந்த இத்தோட்டத்தில் இன்று பணிபுரிவதோ மிகவும் குறைந்த எண்ணிக்கையிலான பாட்டாளிகளே. ஜாசின் பட்டணத்திற்கு அருகில் வசிக்கும் இத்தோட்டத்தின் மேனாள் தொழிலாளர்களும் அவர்தம் குடும்பத்தினரும் இத்திருக்கோயிலை வாழவைத்துக் கொண்டிருக்கின்றனர். வெள்ளிக்கிழமை பூஜையிலும் பௌர்ணமி நாள் பூஜையிலும் அதிகமான பக்தர்கள் கலந்து சிறப்பிக்கின்றனர். இத்திருத்தலத்தின் மூலவர் அன்னை மாரியம்மன் வீற்றிருக்க, முருகப்பெருமான், முனீஸ்வரர், நாகம்மா, பேச்சையம்மாள் மற்றும், அரச மரத்துப் பிள்ளையார் போன்ற தெய்வங்களும் அருள்பாலிக்கின்றனர். 0.4 ஹெக்டர் பரப்பளவு நிலங்கொண்ட இத்திருக்கோயிலின் திருவிழா தை மாதத்தில் நடைபெறுகிறது. இத்திருவிழாவின் உச்சமாகத் தீமிதி வைபவம் நடத்தப்படுகிறது.

இத்திருக்கோயில், நடப்புத் தோட்டப் பாட்டாளிகளுக்கும் மேனாள் பாட்டாளி மக்களுக்கும் இணைப்புப் பாலமாகச் செயல்படுகிறது. இருசாராரும் திருக்கோயிலின் மேம்பாட்டிற்குத் தங்களால் இயன்ற உதவிகளை செய்கின்றனர். அனுபவம் நிறைந்த முதியோர்களும், விவேகம் கொண்ட இளைஞர்களும் ஒருமனதுடன் திருக்கோயில் நிர்வாகத்தை நடத்தி வருகிறார்கள். இத்தோட்டத்தின் உரிமையாளர், சைம் டார்பி நிறுவனத்தின் வற்றாத ஒத்துழைப்பிற்கு ஆலயத்தலைவர் திரு.ராஜேந்திரன் தங்கவேலு தன் மனமார்ந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்கிறார். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2012-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.



| J17 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Lau Leong, Bahagian Kemendore, 77000 Jasin, Melaka.*** |



லாவ் லியோங் தோட்ட ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் 1910-ஆம் ஆண்டு இத்தோட்டத் தொழிலாளர்களால் தோற்றுவிக்கப்பட்டது. ஆரம்பத்தில் இக்கோயில் தகரம் மற்றும், பலகையால் கட்டப்பட்டது. தொழிலாளர்கள் குடியிருப்புப் பகுதி மையத்தில் அம்மன் அருள் கொண்டாள்.

1960-ஆம் ஆண்டுகளில் இத்தோட்டத்தில் சுமார் நூறு குடும்பங்கள் வசித்து வந்தனர். தினமும் மாலையில் பூசகர் ஒருவரால் அம்மனுக்கு அர்ச்சனை செய்யப்படும். வெள்ளிக்கிழமைகளில் திருவிளக்குப் பூஜை, மஹா லட்சுமி பூஜை, விநாயகர் சதுர்த்தி மற்றும், அக்னி சட்டிப்பூசைகள் போன்றவை மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டன.

1973-ஆம் ஆண்டில் இக்கோயில் தற்போதைய தளத்திற்கு இடமாற்றம் கண்டது. இக்கோயிலின் பிரதான தெய்வம் தேவி ஸ்ரீ மகா மாரியம்மன். எனினும், இக்கோயில் வளாகத்தில் அரச மரத்துப் பிள்ளையார் மற்றும், காவல் தெய்வ சந்நிதானங்களும் காணப்படுகின்றன. கோயிலுக்கு அருகில் பல்நோக்குக் கூடம் ஒன்றும் உள்ளது. இங்குத் திருமணம் போன்ற சுபகாரியங்கள் அவ்வப்போது நடைபெறுவது உண்டு.

இப்போது இந்தத் தோட்டத்தில் ஒரு குடும்பம் மட்டுமே வாழ்கின்றது. தோட்ட நிர்வாகத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களாக இருப்பதால், இவர்கள் இத்தோட்டக் குடியிருப்பு வீட்டில் தங்க அனுமதிக்கப்பட்டுள்ளனர். இவர்களும் இந்தத் தோட்டத்துக்கு வெளியேதான் வேலை செய்கின்றனர். தோட்ட நிர்வாகம் தோட்டத்திற்கு அப்பால் வசிப்பவர்கள் மீது எவ்விதத் தடையும் ஏற்படுத்தாத போதிலும் தற்சமயம் இவர்களைத் தவிர்த்து, கோயில் செயற்குழுவினர்கள் மட்டுமே கோயிலுக்கு வந்து செல்கின்றனர்.

இப்போது தினசரி மாலை பூசையை ஆலயத் தலைவரான திரு.பழனியப்பன் கவனித்துக் கொள்கிறார். ஒவ்வோர் ஆண்டும் மாரியம்மன் திருவிழா மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. முன்னர் தோட்டத்தில் வசித்தப் பக்தர்கள் பெரும் திரளாக வந்து கலந்துகொள்கின்றனர். வழக்கம் போல் பால் குடம், காவடி, அக்கினி சட்டி ஏந்துதல் போன்ற நிகழ்வுகள் நடைபெறுகின்றன. திருவிழாவின் முக்கிய நிகழ்வாக அக்னி ஓமம் நடத்தப்படுகிறது. தொழில் துறையில் வெற்றிப்பெற மேற்கொள்ளும் யாகம் இது.

இதுவரை, தோட்ட நிர்வாகம் வெளியிலிருந்து இந்தக் கோயிலுக்கு வருகை தந்து வழிபடுபவர்களைத் தடைசெய்யவில்லை என்ற போதிலும், கோயிலுக்கான தனி நிலத்தை கையகப் படுத்தி கோயிலுக்குப் பலரும் வருகை தரும் வகையில் அமைக்க நிர்வாகம் உத்தேசித்துள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2012-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.







| J18 | ஸ்ரீ முனீஸ்வரர் கோயில் |
| --- | --- |
| | ***Ladang Diamong Jubilee, Jalan Asahan, 77000 Jasin, Melaka.*** |



இந்தக் கோயில் 1910-ஆம் ஆண்டில் டைமண்ட் ஜுப்ளி தோட்டத் தொழிலாளர்களால் கட்டப்பட்டது. இந்தக் கோயில் தற்போதைய எண்ணெய்ப் பனை பதப்படுத்தும் தொழிற்சாலையின் நுழைவாயிலுக்கு அருகில் அமைந்துள்ளது. இக்கோயில் தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதியிலிருந்து ஒரு கிலோ மீட்டருக்கு அப்பால் உள்ளது. சிறு குடிலாக இருந்த இக்கோயில் தற்போது பலகையாலும் தகரக் கூரையாலும் கட்டப்பட்டுள்ளது.

இந்தக் கோயிலின் பிரதான தெய்வம் ஸ்ரீ முனீஸ்வரர். அவருடன் மதுரை வீரனும் கோயில் வளாகத்தில் மிகக் கம்பீரத்துடன் காட்சியளிக்கின்றார். முதன் முதலில் காட்டை அழித்துத் தோட்டத்தைச் சீரமைத்தபோது, தொழிலாளர்களின் பாதுகாப்புத் தெய்வங்களாகவும் எல்லைக் காவலராகவும் இவர்கள் கருதப்பட்டனர்.

1988-ஆம் ஆண்டில் டத்தோ ஸ்ரீ சாமிவேலு அவர்கள் அளித்த அரசாங்க மான்யத்திலிருந்து இந்தக் கோயில் புதுப்பிக்கப்பட்டது. கோயிலை நிர்வகிப்பதற்கான செலவை ஈடுசெய்ய அவ்வப்போது திரு ராமன் மற்றும், திரு லெட்சுமனன் சகோதரர்களும் உதவி வழங்கினர். முன்னாள் மேலாளர் திரு.கோபி அவர்களும் கோயிலுக்கு நிதி உதவி வழங்கியுள்ளார் .

கோயிலின் முக்கியத் திருவிழா 108 சங்காபிஷேகம் ஆகும். ஒவ்வோர் ஆண்டும் ஆகஸ்ட் 31-ஆம் தேதி இத்திருவிழா நடத்தப்படுகிறது. திருவிழாவின்போது பக்தர்களின் வருகை மிகவும் ஊக்கமளிக்கின்றது. ஆடு, தெய்வங்களுக்காகப் பலியிடப்படுகிறது. காலையில் பூசை நடைபெறுகிறது. காவல் தெய்வங்களுக்கு உணவு படைத்த பின்னர், பக்தர்கள் அசைவ உணவை உண்கின்றனர். திருவிழா செலவுகளைச் சில நல்ல உள்ளங்கள் ஏற்றுக்கொள்கின்றனர்.

தற்பொழுது இந்தத் சைம் டார்பி செம்பனைத் தோட்டத்தில் பணிபுரிபவர்களில் அந்நியத் தொழிலாளர்களே அதிகம்; தமிழர்கள் வெளி குடியிருப்புப் பகுதிகளுக்குச் சென்றுவிட்டனர். தற்சமயம் கோயில் பராமரிப்பினை இந்தத் தோட்டத்தில் பிறந்து வளர்ந்த கடைசி தலைமுறையைச் சேர்ந்த திரு.மோகன் கருப்பையா மற்றும், திரு.இளங்கோவன் ஆகியோர் பார்த்துக் கொள்கின்றனர். திரு.மோகன் ஒவ்வொரு நாள் மாலையும் தெய்வங்களுக்கான அபிஷேக ஆராதனைகளைச் செய்கிறார். எனினும், இந்தக் கோயில் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.







| J19 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Nyalas, Bahagian Gubah, Lot 813, Jln.Nyalas, Kg. Masjid Baru, 77100 Nyalas, Melaka.*** |

இந்த ஆலயம், 1970-ஆம் ஆண்டுகளில் ஞாலாஸ் (கூபா பிரிவு) ரப்பர் தோட்டத் தொழிலாளர்களால் உருவாக்கப்பட்டது. தற்போது அந்நியத் தொழிலாளர்களைத் தவிர வேறு எவரும் இந்தத் தோட்டத்தில் வசிக்கவில்லை என்றாலும் ஞாலாஸ் பகுதியில் உள்ள கூபா, மஸ்ஜிட் பாரு, போண்டோ பாத்தாங், மற்றும், வீடமைப்புப் பகுதிகளில் வாழும் இந்துக்கள் பெரும்பாலும் இந்தக் கோயிலுக்கு வருகிறார்கள்.



ஆலயத்தை நிர்வகிக்க, தோட்ட உரிமையாளர் அதன் மேலாளர் மூலம் ஒரு குழுவை நேரடியாக நியமித்துள்ளார். தோட்ட நிர்வாகம் அனுமதி கொடுக்க மறுப்பதால், ஆலய நிர்வாகத்தை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிய இயலவில்லை. இருப்பினும், ஆலய நிர்வாகம், தோட்ட நிர்வாகத்துடன் இவ்வாலய நிலத்தைப் பெறுவதற்குப் பேச்சு வார்த்தை மூலம் தொடர்ந்து முயற்சி செய்து வருகின்றனர். இது தொடர்பாகத் தோட்டம் ஒரு நியாயமான முடிவைக் கொடுக்க மறுக்கிறது. கோயிலைப் புதுப்பிக்கவோ, சரி செய்யவோ அனுமதி வழங்குவதில்லை.



இருப்பினும், எந்தப் பக்தர்களும் இந்த ஆலயத்திற்கு வந்து ஸ்ரீ மகா மாரியம்மனை வழிபடுவதைத் தடுப்பது இல்லை. ஆலய நிர்வாகம் 2006-ஆம் ஆண்டு முதல், ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத்தில் வருடாந்திரத் திருவிழாவை நடத்திவருகிறது.

| J20 | ஸ்ரீ மகா காளியம்மன், முனீஸ்வரர், தோ பெக்கோங் கோயில் |
| --- | --- |
| | *Lot 58, Kampung Bukit Panjang, 77100 Asahan, Jasin, Melaka.* |



1997-ஆம் ஆண்டில் இந்தியர்கள் மற்றும், சீனர்களால் இக்கோயில் நிறுவப்பட்டது, இது கம்போங் புக்கிட் பாஞ்சாங் மற்றும், தாமான் ஸ்ரீ அசகான் வீடமைப்புப் பகுதிக்கு அருகில் அமைந்துள்ளது. ரப்பர் தோட்டம் செம்பனைத் தோட்டமாக மாறியதால் புக்கிட் அசகான் தோட்டத் தொழிலாளர்களில் ஒரு பகுதியினர் பணி நீக்கம் செய்யப்பட்டனர். இவர்களில் ஒரு சிலர் அருகில் உள்ள வீடமைப்புத் திட்டங்களில் குடியேறியுள்ளனர். சிலர் வீட்டுமனை நிலங்களை வாங்கி அங்குச் சொந்தமாக வீடு கட்டிக்கொண்டு வாழ்கின்றனர். இவர்கள்தான் இந்தக் கோயிலைப் பயன்படுத்துகின்றனர்.

1.25 ஏக்கர் பரப்பளவுள்ள இந்தக் கோயில் நிலம் திரு.ஜி.சௌந்திரராஜன் அவர்களுக்கு உரிமையானது. இவர் ஆலயத் தலைவராகவும் உள்ளார். இந்தக் கோயிலுக்குத் தனது நிலத்தைச் சமர்ப்பிக்கத் தயாராகவுள்ளார். ஸ்ரீ மஹா காளியம்மன் மற்றும், துவா பெக்கோங் ஆகிய இரண்டு முக்கியத் தெய்வங்களைக் கொண்ட இவ்வாலயத்தின் துணைத்தலைவர் ஒரு சீனர் (திரு.கௌ ஞொக் தௌ) ஆவார். மலாக்கா மாநிலத்தில் சீன-இந்திய சமய ஒற்றுமையைப் பறை சாற்றும் கோயில் இது.



தொழிலாளர் தினமான மே 1-ஆம் தேதி இவர்கள் ஆலயத்தின் ஆண்டுத் திருவிழாவைக் கொண்டாடுகின்றனர். இந்தியர்கள் மற்றும், சீனர்கள் இந்த விழாவில் ஒன்றாகவே கலந்துகொள்கின்றனர். இந்தக் கோயிலில் உயிர்ப் பலி கொடுக்கும் பழக்கமும், அசைவ உணவு பரிமாறுதலும் அனுமதிக்கப்படுகிறது,

கோயிலின் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவு செய்யப்படவில்லை. விரைவில் இதற்கான முயற்சிகளை எடுக்கவுள்ளனர். மேலும், கோயில் கட்டிடத்தை மேம்படுத்தவும் அவர்கள் முயற்சி செய்து வருகின்றனர்.

## J21 ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ சுப்ரமணியர் கோயில்

***Pekan Merlimau, 77300 Merlimau, Melaka.***




மெர்லிமாவ் பகுதியில் பொதுப்பணித்துறையில் வேலை செய்து வந்த இந்துக்களின் சார்பாக திரு. கி.வி. சாமி அவர்களால் இக்கோயில் 1969-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. இந்தக் கோயில் ஓர் ஒப்பந்தத்தின் பேரில், பணம் கொடுத்து MCL நிலத்தில் அமைக்கப்பட்டது. மெர்லிமாவ் சிறுநகரில் சாலை ஓரத்தில் புதுப்பிக்கப்பட்ட அந்தக் கோயில் மெர்லிமாவ் பட்டணத்தில் வாழக் கூடிய பெரும்பாலான இந்துக்கள் வழிபடும் கோயிலாக அமைந்து வந்துள்ளது.

பின்னர் தேசிய மின்சார வாரியம் தனது உயர் மின் அழுத்த மின்சாரக் கம்பிகள் செல்லும் பாதைக்காக இந்த இடத்தைக் கையகப்படுத்தியது. இந்தக் கோயிலை வேறு இடத்திற்கு மாற்றக் கேட்டுக்கொண்டனர். நிலம் MCL நிலத்தில் இருந்ததால் எந்தவித இழப்பீட்டுத் தொகையும் வாங்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. இருப்பினும், கோயிலைப் புதிய இடத்திற்கு மாற்றம் செய்யக் கோயில் நிர்வாகம் தனது முயற்சிகளைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறது.

இந்தக் கோயில் கட்டிடத்தில் மின்சாரத்தைப் பயன்படுத்த அனுமதி இல்லை. ஜெனரேட்டர் பயன்படுத்தி முக்கிய இரவு நிகழ்சிகள் நடைபெறுகின்றன. வைகாசி விசாக தினத்தன்று தொடர்ச்சியாக 18 நாட்களுக்கு இந்தக் கோயிலில் ஆண்டுத் திருவிழா கடந்த 50 ஆண்டுகளாக விமரிசையாக கொண்டாடப்படுவது சிறப்பு அம்சமாகும்.

கோயிலின் கும்பாபிஷேகம் இதுவரை மூன்று முறை நடைபெற்றுள்ளது. அடுத்தக் கும்பாபிஷேகத்தைப் புதிய இடத்தில் புதியக் கட்டிடத்தில் நடத்த நிர்வாகம் திட்டமிட்டுள்ளது. 1982-ஆம் ஆண்டு இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிந்த போதிலும், இடையில் முறையாக அறிக்கைகளை பதிவதிகாரியிடம் சமர்ப்பிக்கத் தவறியதால் அந்தப் பதிவு ரத்தாகியுள்ளது. புதுப்பிக்கும் முயற்சி எடுத்தும் இதுவரை பதிவகம் மறுத்து வருகிறது - கோயில் நிர்வாகம் புதிய நிலம் பெற்று கோயிலை இடம் மாற்றினால் இது சாத்தியமாகலாம்.



| J22 | ஸ்ரீ சுப்ரமணியர், ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் |
| --- | --- |
| | *Ladang Serkam, 77300 Merlimau, Melaka.* |



தமிழ்நாடு சேலம் மாவட்டத்தில் இருந்து இங்கு வந்து பணிபுரிந்த திரு. சின்னசாமி மண்டோர் அவர்களின் முயற்சியால் 1890-ஆம் ஆண்டில் தோட்டப்புறத்தில் முதல் முதலாக இத்தோட்டத்தில் ஸ்ரீ சுப்ரமணியர் கடவுளுக்குக் கோயில் அமைந்தது. இவரது குடும்ப வாரிசுகள் இப்போதும் இந்தப் பகுதியில் வசித்து வருகிறார்கள்; அதோடு, இந்தக் கோயிலில் தொடர்ந்து சமயம் சார்ந்த சேவைகளை ஆற்றி வருகின்றனர்.

இந்தக் கோயில் பல முறை புதுப்பிக்கப்பட்டுள்ளது. அரசின் உதவியால் சைம் டார்பி நிறுவனம் தற்பொழுது இந்தக் கோயில் நிர்வாகத்திற்கு 0.2842 ஹெக்டர் பரப்புள்ள கோயில் நிலத்தை வழங்கியுள்ளது. இந்தப் பகுதியைச் சுற்றியுள்ள வீடமைப்புத் திட்டத்தில் குடியேறியுள்ள இந்துக்கள் இந்தக் கோயிலை அதிகம் பயன்படுத்துகின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் தைப்பூசத்தன்று இந்தக் கோயிலில் திருவிழா நடைபெற்று வருகிறது. நான்கு முறை கும்பாபிஷேகம் கண்ட இந்த ஆலயம் ஆகக் கடைசியாக 2019-ஆம் ஆண்டில் கும்பாபிஷேகத்தை நடத்தியது.

கோயிலுக்கான நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சி வெற்றி அடைந்துள்ளதைத் தொடர்ந்து, திரு. ராஜேந்திரனின் தலைமையில் செயல்படும் குழு, கோயில் வளர்ச்சிக்கான திட்டங்களைத் தயாரிப்பதில் மும்முரம் காட்டி வருகிறது. அவற்றுள் ஏறத்தாழ எட்டு இலட்சம் ரிங்கிட் செலவில் ஒரு பலநோக்கு மண்டபத்தை நிறுவும் பணிகளைச் செய்து வருகின்றனர். இந்த மண்டபம், கோயில் உறுப்பினர்களுக்கும், பெரியவர்கள்-இளைஞர்கள்-சிறுவர்கள் மற்றும் சமூகத்திலுள்ள அனைவருக்கும் பயன்பட்டு, இக்கோயிலைச் சமுதாய மையமாக உருவாக்க உதவும் என எதிர்பார்க்கப்படுகிறது, கோயில் சொந்த நிலத்தில் இருப்பதைத் தொடர்ந்து 28.10.2021 முதல் இந்தக் கோயில் நிர்வாகத்தைச் செர்க்காம் ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம், மலாக்கா (2016) என நிர்வாகச் சங்கமாக மலேசிய சங்கப் பதிவகம் அங்கீகரித்துள்ளது.





| J23 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Merlimau, Jalan Jasin, 77300 Merlimau, Melaka.* |



மெர்லிமாவ் தோட்டத்தில் வாழ்ந்த இந்து மதத்தைச் சேர்ந்த ஊழியர்களால் 1904-ஆம் ஆண்டு இந்தக் கோயில் தொடங்கப்பட்டது. சிறிய கட்டிட அமைப்பிலிருந்த இந்தக் கோயில் காலத்திற்கேற்ப அவ்வப்போது புதுப்பிக்கப்பட்டு வந்துள்ளது. பழைய கோயில் அமைக்கப்பட்ட இடத்திற்கு அருகில் புதிய கோயிலை விரிவு படுத்திப் பயன்படுத்தி வருகின்றனர். இருப்பினும், இந்த ஆய்வின் போது சைம் டார்பி நிறுவனத்திற்குச் சொந்தமான தோட்டத்தில் உள்ள இந்தக் கோயில் நிலம் இன்னும் கோயில் நிர்வாகத்தின் வசம் இல்லை.

இந்தத் தோட்டத் தொழிலாளர்கள் அனைவரும் இப்போது அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களில் குடியேறி வசிக்கிறார்கள் என்றாலும், சாலையின் ஓரத்தில் அமைந்திருக்கும் இந்தக் கோயிலுக்கு வருகைத் தருவதை நிறுத்தவில்லை. திருவிழாவின்போது வெளியே சென்று குடியேறியுள்ள பல குடும்ப உறுப்பினர்கள் இங்கு ஒன்று கூடுகின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் புரட்டாசி (ஆகஸ்ட்/செப்டம்பர்) மாதத்தில் தீமிதி நிகழ்வுடன் மாரியம்மன் திருவிழா விமரிசையாக நடத்தப்படுகிறது. இக்கோயில் கடைசியாக, 2005-ஆம் ஆண்டு நடத்திய கும்பாபிஷேகத்தோடு இதுவரை இரண்டு முறை கும்பாபிஷேகங்களை நடத்தியிருக்கிறது. மேலும், கோயிலைச் சொந்த இடத்தில் புதியக் கட்டிடத்தில் மாற்றம் செய்த பிறகுதான் அடுத்த கும்பாபிஷேகத்தை நடத்துவது என கோயில் நிர்வாகத்தினர் தீர்மானம் கொண்டுள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் 2012-ஆம் ஆண்டிலிருந்து பக்தர்கள் சங்கமாகப் பதிவாகியுள்ளது.





| J24 | ஸ்ரீ மதுரை வீரன் கோயில் |
|---|---|
| | *14, Batu 17, Paya Buluh, 77300 Merlimau, Melaka.* |



திரு சுரேஷ் விவேகானந்தன் அவர்கள் தனது சொந்த நிலத்தில் இந்தக் கோயிலை 1970-ஆம் ஆண்டில் உருவாக்கினார். இவரின் கூற்றுப்படி இங்கு ஒரு மரத்தடியில் அவருடைய மூதாதையர் நாகம்மாவை வணங்கி வந்தனர். பிறகு இவர்களின் குலத்தெய்வமான மதுரை வீரனையும் அங்கு நிறுத்தி அதையும் சேர்த்து வழிபட்டு வந்திருக்கின்றனர்.

2012-ஆம் ஆண்டில் இக்கோயில் நிர்வாகத்தை சங்கப் பதிவு அதிகாரியிடம் பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்துள்ளனர். கோயிலின் தலைவர் மீது இத்தெய்வங்கள் வந்து இறங்கி சொல்லும் அருள்வாக்கைக் கேட்பதற்குப் பெரும்பாலானவர்கள் இங்கு வருகின்றனர். தங்கள் குறைகளைச் சொல்லி ஆறுதல் பெற்றுச் செல்கின்றனர். மாணவர்களிடையே ஏற்படும் பேயாட்டம் போன்ற ஹிஸ்திரியா நோய் கொண்டவர்களும் இந்த அருள்வாக்கு மூலம் குணம் பெறுவதாகச் சொல்கின்றனர். அருள்வாக்கு மூலம் திருப்தி அடையும் பக்தர்கள் கோயிலின் வசதிகளைப் பெருக்க, நன்கொடைகளைக் கொடுக்கிறார்கள்.



ஒவ்வோர் ஆண்டும் மே மாதத்தில் ஆறு நாட்களுக்கு மதுரை வீரனுக்குத் திருவிழா எடுக்கிறார்கள். குடும்பக் கோயில் போன்று இருந்தாலும், 2018-ஆம் ஆண்டில் நடத்தியது உட்பட இதுவரை இரண்டு முறை கும்பாபிஷேகங்களை நடத்தி இருக்கிறார்கள்.

மதுரை வீரன் பெயரில் நடைபெறும் திருவிழாக்களில் மற்றும், பூஜைகளில் உயிர்ப்பலி கொடுப்பதோடு அசைவ உணவை இறைவனுக்குப் படைக்கின்றனர்.





| J25 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Taman Bistari, Jalan Jasin, 77300 Merlimau, Melaka.*** |



1990-ஆம் ஆண்டுகளுக்கு முன்னர், இப்பகுதியில் ரப்பர்த் தோட்டங்கள் இருந்த காலத்தில் இங்கு வேலை செய்த இந்துக்களின் வழிபாட்டுத் தலமாக இக்கோயில் இருந்துள்ளது. இருப்பினும், உள்ளூராட்சி மன்றத்தின் அனுமதியில்லாததால் அங்கிருந்த விக்ரகங்களை மீட்க வேண்டியிருந்தது. சிறிய இடத்தில் வழிபாடு நடந்து வந்தது. இருப்பினும், தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கம் அருகில் உள்ள தோட்ட நிலத்தை வாங்கி மேம்பாட்டுத் திட்டத்தை நிறைவேற்றிய சமயத்தில், இந்தக்கோயிலுக்கு 10,000 சதுர அடிகள் சன்னதிக்கும், கூடுதல் வசதிகளுக்காக மேலும், 10,000 சதுர அடிகளும் ஒதுக்கித் தந்தது.

தற்போது பிஸ்தாரி குடியிருப்புப் பகுதியில் அதற்கு ஒதுக்கப்பட்ட இடத்தில் இந்தக் கோயிலை அமைத்துள்ளனர். மேலும், முதல் கும்பாபிஷேகம் 2018-ஆம் ஆண்டில் நடைபெற்றது. கோயிலின் மாரியம்மன் திருவிழா ஆடி (ஜூலை/ஆகஸ்ட்) மாதத்தில் உபயங்களுடன் சேர்த்து 20 நாட்களுக்கு நடைபெறுகிறது. மேலும், இது 20 ஆண்டுகளுக்கும் மேலாகத் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

நிர்வாகக்குழு தனது புதியக் கோயிலைக் கட்டும் சமயத்தில் அருகிலுள்ள மற்ற கோயில்களை ஒன்றிணைக்க முயன்றது. ஆனால், பலனளிக்கவில்லை. இருப்பினும், அருகிலேயே ஒரு பல்நோக்கு மண்டபத்தை நிறுவ இந்தக்குழு முயற்சியில் இறங்கியுள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2011-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.





| J26 | அருள்மிகு ஸ்ரீ துர்க்கையம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Selatan Baru, Batu 18, Tepi Jalan Besar, 77300 Merlimau, Melaka.* |



திரு நாகராஜன் மற்றும், திரு வசந்தனின் குடும்பத்தினரால் 1990-ஆம் ஆண்டுகளில் சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமான ரப்பர் தோட்டத்தில் இந்தச் சிறிய கோயில் தொடங்கப்பட்டது.

கோயிலுக்கு அருகில் எந்தக் குடியிருப்புப் பகுதியும் இல்லையென்றாலும் சுற்று வட்டாரத்தில் உள்ள இளைஞர்கள் இந்தக் கோயிலுக்கு வருகை தருகின்றனர்.

இந்தத் தோட்டத்தின் முக்கியக் கோயில் கெம்பாஸ் தோட்ட செலாத்தான் பாரு பிரிவில் உள்ள ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (J15) ஆகும். தொழிலாளர் குடியிருப்புப் பகுதியில் அமைந்த இக்கோயிலை முன்பு அங்கு குடியிருந்த தோட்டத் தொழிலாளர்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். இப்பொழுது அந்தத் தோட்டத்தில் எந்தத் தொழிலாளரும் வசிக்கவில்லை.



நிர்வாகத்தின் முடிவுப்படி திருவிழா உட்பட சில பூஜைகள் மட்டுமே இங்கு நடைபெறுகிறது. இருப்பினும், ஸ்ரீ துர்க்கை அம்மன் தேவி சார்பாகத் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி-பிப்ரவரி மாதங்களில் சீனப்புத்தாண்டு சமயத்தில் நடத்தப்படுகிறது. இங்கு தண்ணீர் மற்றும், மின்சார வசதி இல்லாததால் திருவிழாவை முன்னிட்டு நடைபெறும் 20 நாட்களுக்கு நடைபெறும் உபயங்களும் பகலிலேயே நடைபெறுகின்றன.

இந்தக் கோயிலில் திருவிழாக் காலத்தில், கோயிலில் உயிர்ப்பலி கொடுக்க இந்துக்கள் மற்றும், இந்து அல்லாதவர்களும் ஆடுகளை நன்கொடையாக வழங்குகிறார்கள். இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## J27 தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Paya Buluh, Jalan Jasin, 77300 Merlimau, Melaka.***



பாயா பூலோ கிராமத்தில் இந்துச் சமயத்தைச் சேர்ந்த பல குடும்பங்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் வழிபடுவதற்கு ஒரு கோயில் இல்லாததாலும் 1990-ஆம் ஆண்டு இந்தக் கிராமத்தில் ஒரு கோயிலைக் கட்டுவதற்கான முயற்சியை மேற்கொண்டனர். இதற்கு ஒரு நிர்வாகம் ஏற்படுத்தப்பட்டது. இதற்கு 344.5 சதுர மீட்டர் பரப்பளவு கொண்ட 2 வீட்டிற்கான மனை நிலம் (Lot: 6515 & 6516) இந்த நிர்வாகத்திடம் ஒப்படைக்கப்பட்டது. மலேசிய சங்கங்களின் பதிவதிகாரியிடம் இந்த ஆலய நிர்வாகக்குழு 2011-ஆம் ஆண்டில் நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஒரு சிறிய கோயிலைக் கட்டினர்.

இருப்பினும், இந்த ஆய்வு செய்யும் சமயத்தில் கோயிலை விரிவாக்கும் பணிகள் தொடங்கப் படவில்லை. இதற்குக் காரணம் கோயில் நிர்வாகம் அந்தப் பணிக்காக எதிர்நோக்கும் நிதிப் பிரச்சினை. இந்த நிதிப் பற்றாக்குறையைத் தீர்க்க தற்போது பொதுமக்களிடம் நன்கொடை வசூலித்து வருகின்றனர்.



மாலை நேரங்களில் தினமும் ஆகம முறைப்படி பூஜைகள் நடந்து வருகின்றன. இது வரை திருவிழா இங்குக் கொண்டாடப்பட்டது இல்லை. ஏறக்குறைய 3 லட்சம் வெள்ளி தேவைப்படும் இந்தக் கோயிலுக்கான கட்டிட நிர்மாணிப்புப் திருப்பணிகளை முடித்தப் பிறகே கும்பாபிஷேகம் மற்றும், ஆண்டுத் திருவிழாக்களை நடத்துவது என தீர்மானம் கொண்டுள்ளனர்.

அதிகத் தமிழ்க் குடும்பங்கள் ஒரு கிராமச் சூழலில் சொந்த வீடுகளில் வசிக்கும் இடமாதலால் இந்தக் கோயில் இந்தக் குடும்பங்களுக்கு நல்ல சேவையைக் கொடுக்க இயலும்.

| J28 | ஸ்ரீ மகா கருமரியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Batu 18 ½ , Jalan Kesang, Kesang Pajak, 77000 Jasin, Melaka.* |



செட்டியாருக்குச் சொந்தமான இந்தத் தோட்டத்தில் அங்கு வாழ்ந்த தமிழ்ச் சமூகத்தைச் சார்ந்த தொழிலாளர்களாலும் குஜராத் சமூகத்தைச் சேர்ந்த வணிகர்களாலும் 1900-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் அங்கு உருவாக்கப்பட்டது. ஆரம்பத்தில் இது பலகை மற்றும், தகரங்களைக் கொண்ட ஒரு சிறு தற்காலிகக் கொட்டகைதான். இந்தத் தோட்டம் பலரது கைகளுக்கு மாறி இறுதியில் துண்டாடலுக்கு இலக்கானது.

1966-ஆம் ஆண்டு கோயில் இருக்கும் பகுதி T.S.M. பெருமாள் நாடார் அவர்களுக்குச் சொந்தமானது. மறைந்த டத்தோ அருணாசலம் அவர்களின் முயற்சியால் 19.5.1990-ஆம் நாள் நிலம் கோயிலுக்குச் சொந்தமானது. 1990-ஆம், 2011-ஆம் ஆண்டுகளிலும் இரண்டு முறை இக்கோயில் ஆகம முறைப்படி புதுப்பிக்கப்பட்டது.

கோயில் நிர்வாகக் குழுவும் 1995-ஆம் ஆண்டு சங்கப் பதிவு அதிகாரி அலுவலகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவு பெற்றது. கிசாங் பாஜாக் (Kesang Pajak) வட்டாரத்தில் வாழக்கூடிய ஏறக்குறைய 300 இந்துக் குடும்பங்களுக்கு இந்தக் கோயில் சேவை செய்கிறது .

கருமாரியம்மன் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் ஏப்ரல் மாதத்தில் தொடர்ச்சியாக, உபயங்கள் உட்பட, 10 நாட்களுக்கு நடைபெறும். முன்பு இங்கு வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் இந்தத் திருவிழாவில் வந்து கலந்து கொள்கிறார்கள். 2011-ஆம் ஆண்டில் நடைபெற்ற கும்பாபிஷேகம் உட்பட இதுவரை மூன்று முறைகள் கும்பாபிஷேகங்கள் நடைபெற்றுள்ளன.

கோயில் நிர்வாகக் குழு ஆண்டு முழுவதும் அதன் உறுப்பினர்களுக்குப் பல பயனளிக்கும் திட்டங்களை ஏற்பாடு செய்வதில் தீவிரமாகச் செயல்பட்டு வருகிறது. கோயிலுக்கு வருகை தருகின்ற பக்தர்களுக்குப் பல வசதிகளைச் செய்து தர மேலும், கூடுதலான நிலத்தைப் பெறுவதற்குக் கோயில் நிர்வாகம் முயற்சி செய்து வருகின்றது.



| J29 | ஸ்ரீ ஜெய் மலை முனியாண்டி கோயில் |
| --- | --- |
| | *JB 865, Taman Bemban Utama, 77200 Bemban, Jasin, Melaka.* |

அரசாங்க நிலப் பகுதியில் அமைந்துள்ள இந்தச் சிறிய ஆலயம் 1996-ஆம் ஆண்டில் யாரோ ஒருவரால் தொடங்கப்பட்டுள்ளது. ஆனால், இக்கோயில் தற்போது பெம்பான் குடியிருப்புப் பகுதியில் வசிக்கும் திரு பால்ராஜ் குடும்பத்தினரால் பராமரிக்கப்பட்டு வருகிறது.





இந்தக் கோயிலின் தலைவரின் உடம்பின் மீது ஸ்ரீ முனியாண்டி தெய்வம் வந்து இறங்கி அருள்வாக்கு கூறுகிறார். இதைக் கேட்பதற்கு அருகிலுள்ள பல இந்துக்களும் மற்றும், இந்துக்கள் அல்லாதவர்களும் இந்தக் கோயிலுக்கு வருகிறார்கள். இந்த அருள்வாக்கில் நம்பிக்கை உடையவர்கள் மற்றும், திருப்தி அடைந்தவர்கள் பெரும்பாலும் திரும்பி வந்து இக்கோயில் நடவடிக்கைகளுக்கு ஆதரவு அளிக்கின்றனர்.

1966-ஆம் ஆண்டு முதல் இந்தக் கோயிலில் ஆண்டுத் திருவிழா நவம்பர் மாதத்தில் 5 நாட்களுக்குக் கொண்டாடப்படுகிறது. அதோடு, சித்திரைப் புத்தாண்டு (ஏப்ரல்/மே) மற்றும், ஆடி அமாவாசையிலும் (ஜூலை/ஆகஸ்ட்) சிறப்பு வழிபாடுகள் நடத்தப்படுகிறது. திருவிழாவின் போதும் மற்றச் சிறப்பு நாட்களிலும் பக்தர்கள் உயிர்ப்பலி கொடுப்பதற்கு ஆடுகளை வழங்குகிறார்கள். இந்தக் கோயிலுக்கு அதிகமான இளைஞர்கள் ஆதரவு கொடுக்கின்றனர்.

இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2017-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.

| J30 | ஸ்ரீ முத்து மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Ladang Yew Watt Hing, Jalan Asam Kumbang, 77200 Bemban, Jasin, Melaka.* |



இங்கு வேலை செய்து வந்த தோட்டத் தொழிலாளர்களால் 1950-களில் இக்கோயில் உருவாக்கப்பட்டது. 1996-ஆம் ஆண்டு முதல் திரு.சுகுமாரன் குடும்பத்தினர் இந்தக் கோயிலின் பராமரிப்புப் பணிகளை ஏற்றுக்கொண்டு முறையாக நடத்தி வருகின்றனர். கோயிலின் விவகாரங்களைக் கவனிப்பதற்கு இந்தத் தோட்ட நிர்வாகமும் இந்தக் குடும்பத்தினருக்கு இந்த வாய்ப்பை வழங்கியுள்ளது. தோட்ட நிலம் மேம்பாட்டுக்கு ஆளாகும் போது இந்தக் கோயிலுக்கு நிலம் வழங்குவதாக நில உரிமையாளர் வாய்மொழியாக உறுதியளித்துள்ளார்.

இங்கு வேலை செய்த பெரும்பாலான தொழிலாளர்கள் கோயிலுக்கு அருகில் தற்போது வசிக்கவில்லை. பெரும்பாலோர் அருகிலுள்ள, குறிப்பாகச் செர்க்காம் வீடமைப்புப் பகுதிகளில், வீடு வாங்கியோ வாடகைக்கோ குடி பெயர்ந்துள்ளனர்.

இருப்பினும், ஒரு காலத்தில் இந்தக் கோயிலில் வழிபட்டு வந்த தொழிலாளர்களும் அவர்களுடைய வாரிசுகளும் மற்றும், உறவினர்களும் இங்கு இருக்கக்கூடிய ஸ்ரீ மகா மாரியம்மன் மற்றும், நாகம்மா தேவி போன்ற தெய்வங்கள் மிகுந்த சக்தி வாய்ந்தவை எனும் நம்பிக்கையின் காரணமாக இங்கு அடிக்கடி வந்து வழிபாடு செய்கிறார்கள்.

ஒவ்வோர் ஆண்டும் ஆடி மாதத்தில் (ஜூலை /ஆகஸ்ட்) இந்தக் கோயிலில் மாரியம்மன் திருவிழா வெகு விமரிசையாக உபயத்தோடு சேர்த்துத் தொடர்ச்சியாக 11 நாட்கள் நடைபெறுகிறது. முன்பு தோட்டத்தில் வாழ்ந்த குடும்ப உறுப்பினர்கள் இங்குத் திருவிழாவின்போது ஒன்று கூடுகின்றார்கள். இருப்பினும்,. இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.





| J31 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Bukit Asahan, Bahagian 'D', 77100 Asahan, Melaka.* |



தோட்டத் தொழிலாளர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக, அவர்களின் வழிபாட்டிற்காக இந்த மாரியம்மன் கோயில் 1948-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. ரப்பர் மரத்திற்குப் பதில் செம்பனை நடப்பட்டப் பிறகு தோட்ட நிர்வாகம் அதன் தொழிலாளர்களைக் குறைக்க முடிவு செய்தது. தேவையுள்ள தொழிலாளர்களை மட்டும் 3 கி.மீ தூரத்தில் உள்ள ஹோம் டிவிஷனுக்கு தோட்ட நிர்வாகம் மாற்றியது. மற்றவர்களில் பெரும்பாலோர் அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களில் சொந்த வீடுகள் வாங்கியோ வாடகைக்கோ அசகான், சிம்பாங் பெக்கோ மற்றும், ஜாசின் போன்ற இடங்களுக்கு மாறிச் சென்றுவிட்டனர். பலர் மலாக்கா, ஜொகூர், சிறம்பான் மற்றும், கோலாலம்பூர் போன்ற நகரங்களுக்கு வேலை வாய்ப்பைத் தேடிச் சென்றுவிட்டனர்.

புக்கிட் அசகான் தோட்டம் மூன்று பிரிவுகளைக் கொண்ட ஒரு பெரிய தோட்டமாகும். முதலாவது ஹோம் டிவிஷன், இரண்டாவது ஆயர் தெக்கா டிவிஷன், மூன்றாவது டி டிவிஷன் ஆகியன. இந்தத் தோட்டம் தற்போது சைம் டார்பி நிறுவனத்திற்குச் சொந்தமாக உள்ளது.

இந்த டி டிவிஷன் தோட்டத்தில் உள்ள கோயிலைத் தவிர மற்றத் தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதிகளும் இடிக்கப்பட்டன. இங்கு யாரும் அதிகமாக வராததால் இந்தக் கோயில் தற்போது கிட்டத்தட்ட கவனிப்பாரற்ற நிலையில் இருக்கிறது. தோட்ட நிர்வாகம் குறிப்பிட்ட ஒரு சிலரை கோயிலைப் பார்த்துக்கொள்ள நியமித்துள்ளது. அவர்கள் அந்தக் கோயிலின் வளாகத்தைத் துப்புரவு செய்வதுடன் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அல்லது குறிப்பிட்ட சில சிறப்புத் தினங்களில் கோயிலில் விளக்கு ஏற்ற வேண்டும். தோட்ட நிர்வாகத்தின் அனுமதி இல்லாததால் இந்த நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுச் செய்ய இயலவில்லை.

வருடாந்திரத் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் ஜூன் மாதத்தில் (ஆடி மாதம்) மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. இந்தத் திருவிழாவில் கலந்து கொள்வதற்கு இந்தத் தோட்டத்தில் இருந்து வெளியே சென்றத் தொழிலாளர்கள், அவர்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் போன்றோர் ஒன்று கூடும் நிகழ்வாக இந்தப் பெருவிழா அமைகிறது. முன்பு இங்கு வாழ்ந்த வாழ்க்கையைப் பற்றியும் பழைய நினைவுகளையும் பகிர்ந்து கொள்வதற்கான ஒரு வாய்ப்பாக இந்த ஒன்று கூடல் அமைகிறது. ஹோம் டிவிஷனில் இருந்து இந்தக் கோயிலுக்குச் செல்லும் பாதை இன்னும் செம்மண் சாலையாகவே இருக்கின்றது.



| J32 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ldg Bukit Asahan, Ayer Tekah Division, 77100 Asahan, Melaka.* |

புக்கிட் அசகான் தோட்ட `டி' பிரிவில் உள்ள கோயிலைப் போலவே, இந்து மதத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் இங்கு இப்போது வசிக்கவில்லை. தொடக்கத்தில் இங்கு வாழ்ந்த தமிழர்கள் இந்தக் கோயிலை 1970-ஆம் ஆண்டுகளில் நிறுவி வழிபட்டு வந்தனர். தற்பொழுது, `டி' பிரிவில் போலல்லாமல், ஆயர் தெக்கா பிரிவில் உள்ள தொழிலாளர் வீடுகள் பராமரிக்கப்பட்டு வெளிநாட்டுத் தொழிலாளர்களான பங்களாதேஷ், இந்தோனேசியா மற்றும், மியான்மர் ஆகியோரை இங்குக் குடியமர்த்தியுள்ளனர்.



கோயில் நிர்வாக உறுப்பினர்களை 'ஹோம் டிவிஷன்' இந்து மதத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் மத்தியில் தோட்டம் நியமிக்கிறது. வழக்கமாக, தலைவர் அல்லது அவரது எந்தவொரு உறுப்பினரும் கோயில் வளாகத்தைச் சுத்தம் செய்ய வருவார்கள். அதோடு, ஸ்ரீ மஹா மாரியம்மன் தெய்வத்திற்கு வெள்ளிக்கிழமைகளிலும், பொங்கல், தீபாவளி போன்ற சிறப்பு நாட்களிலும் தீபத்தை ஏற்றுவார்கள். தோட்டத்தின் அனுமதி இல்லாததால் கோயில் நிர்வாகத்தை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுச் செய்ய முடியவில்லை.

ஒவ்வோர் ஆண்டும் மே மாதத்தில் விசாகத் தினத்தன்று இவ்வாலயத்தில் வழக்கம்போல் திருவிழா விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. டி டிவிஷன் ஆலயத் திருவிழா போன்று இங்கு இருந்து வெளியே சென்றத் தொழிலாளர்கள் மற்றும், அவர்களது பிள்ளைகள், உறவினர்கள் திருவிழாவின்போது இங்கு ஒன்று கூடுவார்கள். இந்தத் திருவிழா தோட்டத்தின் பழைய வாழ்க்கையை ஞாபகப்படுத்தும் ஒரு ஒன்று கூடல் நிகழ்ச்சியாக அமைகின்றது.



இந்தப் பகுதிக்கான பாதை இன்னும் செம்மண் சாலையாகவே உள்ளது. அசகானிலிருந்து சுமார் 5 கி.மீ. தூரத்தில் உள்ளது இந்தக் கோயில்.

## J33 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Ladang Nyalas, Mantai Division, 77100 Nyalas, Melaka.***

இந்தக் கோயில் 1950-ஆம் ஆண்டுகளில் ஞாலாஸ் ரப்பர் தோட்டத் தொழிலாளர்களால் தொடங்கப்பட்டது. தற்போது இந்தத் தோட்டத்தில் இந்துத் தொழிலாளர்கள் யாரும் இல்லை. தொழிலாளர்களின் வீடுகள் இங்கு இருந்தாலும், அவை வெளிநாட்டுத் தொழிலாளர்களால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளன. கிட்டத்தட்ட அனைத்து தொழிலாளர்களின் வீடுகளும் இடிக்கப்பட்டுள்ளன.




இங்குப் பணிபுரிந்த ஒரு சில இந்துக்கள் மட்டுமே வழிபாட்டிற்காகக் கோயிலுக்கு வர அனுமதிக்கப்படுகிறார்கள். இந்தப் பகுதியில் வெளியார் யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. கோயிலில் வழிபடுபவர்கள் குறைந்துள்ளதால் கோயில் கிட்டத்தட்ட வெறிச்சோடிய நிலையில் உள்ளது. கோயிலின் வழிபாடு மற்றும், தூய்மையை நிர்வகிப்பதற்காக ஞாலாஸ் பகுதியில் வசிக்கும் முன்னாள் தொழிலாளர்களில் சிலரைக் கொண்டு, இந்தத் தோட்ட நிர்வாகம் ஒரு குழுவை உருவாக்கியுள்ளது.

வருடாந்திரத் திருவிழா ஜூலை மாதத்தில் அதாவது, தமிழ் மாதம் ஆடி 5-ஆம் நாளில் நடைபெறுகிறது. இந்தச் சமயத்தில்தான் இந்தத் தோட்டத்தில் வாழ்ந்த குடும்ப உறுப்பினர்கள் ஒன்றுகூடி கடந்த காலத் தோட்டப்புற வாழ்வைப் பற்றிய நினைவுகளைப் பரிமாறவும், எண்ணி மகிழ்வதற்குமான வாய்ப்பைப் பெறுகின்றனர்.

தோட்ட நிர்வாகத்தின் அனுமதி இல்லாதக் காரணத்தால் இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுப் பெறவில்லை. நிலம் தோட்டத்திற்குச் சொந்தமாக இருப்பதாலும் மற்றும், கட்டிடம் தோட்ட நிர்வாகத்தால் பராமரிக்கப்படுவதாலும் இங்கு எந்தவித மாற்றமும் செய்ய இயலாது என்பதை இந்த ஆய்வின் சமயம் அறிய முடிந்தது.



| J34 | ஸ்ரீ மதுரை வீரன் ராஜ கரு மாரியம்மன், தோ பெக்கோங் கோயில் |
|---|---|
| | ***Batu 12, Bukit Tinggi A, Simpang Kerayong, Jalan Merlimau, 77000 Jasin, Melaka.*** |



இந்திய மற்றும், சீனச் சமூகத்தினரால் 1970-ஆம் ஆண்டுகளில் இக்கோயில் தொடங்கப்பட்டது. கோயில் நிலத்தின் பரப்பளவு சுமார் 1 ஏக்கர். இந்த நிலம் கோயில் அமைப்பின் பெயரில் உள்ளது. புதிய கட்டிடம் 2015-ஆம் ஆண்டில் கட்ட ஆரம்பிக்கப்பட்டு 2019-ஆம் ஆண்டில் கட்டி முடிக்கப்பட்டது சிம்பாங் கெராயோங், ஜாசின், செண்டெரா மற்றும், சின்-சின் போன்ற பகுதிகளைச் சுற்றியுள்ள வீடமைப்புப் பகுதிகளில் உள்ள இந்திய மற்றும், சீன சமூகத்தினர் இந்த ஆலயத்தை வழிபாட்டிற்காகப் பயன்படுத்துகின்றனர். இதன் நிர்வாகம் 2010-ஆம் ஆண்டு மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

மலேசிய இந்து மற்றும், சீனக் கலாச்சாரம் ஆகியவற்றுக்கு இடையிலான நம்பிக்கைகளின் கலவையின் அடிப்படையில் இந்தக் கோயில் தனித்துவமானது. இந்தக் கோயிலுக்கு வருகை தரும் இந்துக்கள் ஸ்ரீ மதுரைவீரன் மற்றும், ஸ்ரீ மஹா கருமாரியம்மன் ஆகிய தெய்வங்களை வணங்குகிறார்கள். அதே நேரத்தில், சீனர் சமூகம் துவா பெக் கோங்கை வணங்குவதற்காகக் கோயிலுக்கு வருகை புரிகின்றனர். ('துவா பெக் கோங்' என்பது மலேசிய-சிங்கப்பூர் தாவோயி சமயத்தின் ஒரு முக்கியத் தெய்வத்தின் பெயர். இது பினாங்கில் தோன்றியதாகும்). இந்தத் தெய்வங்கள் அனைத்தும் ஒரே கட்டிடத்தில் தனித்தனியாகப் பிரதிஷ்டை செய்து வைக்கப்பட்டுள்ளன. மேலும், ஸ்ரீ காசி விஸ்வநாதர், விநாயகர், முருகன், நவக்கிரகம் போன்ற தெய்வங்களும் உள்ளன.

வழக்கமாக மலேசியா மற்றும், சிங்கப்பூரில் இந்திய மற்றும், சீனச் சமூகத்தினரிடையிலான கலப்புத் திருமணங்களின் மூலம் உருவாகும் சந்ததியினரை 'சிண்டியன்' என்று அழைப்பர். ஆனால், இங்கு இதற்குச் சம்பந்தம் இல்லாவிட்டாலும் இந்த இரண்டு சமூகங்களும் இணைந்து வழிபடுவதால் இந்த ஆலயத்தை 'சிண்டியன் கோயில்' என்று அழைக்கிறார்கள்.



இந்த இரு சமூகத்தைச் சேர்ந்த குழுவினரால் வருடாந்திர விழா நாள் தீர்மானிக்கப்படுகிறது. பொதுவாக இவ்விழா ஜூலை மாதம் முதல் வாரத்தில் நடத்தப்படுகிறது. இந்தக் கோயிலில் உள்ள தேர் திருவிழாக் காலங்களில் அருகிலுள்ள வீடமைப்புப் பகுதிகளில் ஊர்வலமாகக் கொண்டு செல்லப்படுகிறது. கோயில் நிர்வாகம் எதிர்காலத்தில் ஒரு பல்நோக்கு மண்டபத்தை இங்கு அமைக்கத் திட்டமிட்டுள்ளது.

| J35 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Kempas (Dewon), Jalan Jasin-Merlimau, 77000 Jasin.* |

ஸ்ரீ அருள்மிகு மகா மரியம்மன் ஆலயம் 1910-ஆம் ஆண்டில் இத்தோட்டத்தை உருவாக்கிய இந்துத் தொழிலாளர்களால் நிறுவப்பட்டது. இந்தக் கோயில், முதலில் பிரிவு 6, கெம்பாஸ் தோட்டத்தில், அங்கு பணிபுரிந்த இந்துக்களால் கட்டப்பட்டது. 1970-ஆம் ஆண்டுகளில் செம்பனை மர நடவால் இந்தியத்



தொழிலாளர்கள் இத்தோட்டத்தை விட்டு வெளியேற வேண்டிய சூழல் ஏற்பட்டது. கோயிலும் நான்காம் பிரிவிற்கு மாற்றப்பட்டது.

தற்போதைய கோயில் 2008-ஆம் ஆண்டில் தோட்டத் தொழிலாளர்கள் குடியிருப்பு பகுதிக்கு அருகிலுள்ள ஒரு சிறிய மலையின் உச்சியில் அமைக்கப்பட்டது. அவ்வமயம் ஒரு சாரார், கோயிலை ஜாசின்-மெர்லிமாவ் பிரதான சாலைக்கு அருகிலுள்ள இடத்திற்கு மாற்றுவதற்கான யோசனையைத் தெரிவித்தனர். துரதிர்ஷ்டவசமாகக் கோயில் செயற்குழுவினர் இத்திட்டத்தைப் புறக்கணித்தனர். தற்போதைய கோயில் 2.5 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இந்தக் கோயில் கலையம்சம் கொண்ட அழகான கோயில். சமையலறை, உணவு மண்டபம் மற்றும், கழிப்பறை வசதிகளும் கொண்ட ஒரு வளாகம்.

இந்தக் கோயிலின் முக்கியத் தெய்வம் ஸ்ரீ அருள்மிகு மகா மாரியம்மன் ஆவார். மேலும், இந்தக் கோயிலின் வளாகத்தில் காளியம்மன் மற்றும், ஆஞ்சநேயர் அவர்களும் காட்சியளிக்கின்றனர். இக்கோயிலில் இந்துச் சமயப் பண்டிகைகள் அனைத்தும் அனுசரிக்கப்படுகின்றன. ஆண்டுக்கொரு முறை கொண்டாடப்படும்







திருவிழா, அன்னையர் தினத்தன்று கொண்டாடப்படுகின்றது. இந்தத் தோட்டத்தில் தற்போது பத்து குடும்பங்கள் மட்டுமே வாழ்கின்றன. எனினும், திருவிழாவின்போது முன்னர் தோட்டத்தில் வாழ்ந்தவர்கள், நூற்றுக்கணக்கில் கலந்து கொள்கின்றனர். காலையில் பால் குடம் மற்றும், காவடிகள் எடுக்கப்படுகின்றன. மதிய பூசைக்குப் பிறகு பக்தர்களுக்குச் சைவ உணவு வழங்கப்படுகிறது. இரவு அலங்கரிக்கப்பட்ட தேரில், ஸ்ரீ அருள்மிகு மகா மாரியம்மன், தொழிலாளர்களின் குடியிருப்புப் பகுதியை வலம் வருகிறாள்.

இன்றுவரை கோயிலுக்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கை கணிசமாகவே உள்ளது. கோயிலுக்கு வந்து செல்பவர்கள் பெரும்பாலும் இத்தோட்டத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். கோயிலில் வழிபாடு செய்ய விரும்பும் வெளியார் தோட்ட நுழைவாயிலில் உள்ள தோட்டக் காவலரிடம் அனுமதி பெற வேண்டும். இதுவரை தோட்ட நிர்வாகம் தாராளமாகவே செயல்பட்டபோதிலும், கோயிலைச் சொந்த நிலத்திற்கு இடமாற்றம் செய்யும் நோக்கில் இந்தக் கோயில் நிர்வாகம் உள்ளது. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர் சங்கமாக 2011-ஆம் ஆண்டு முதல் பதிந்துள்ளது.

| J36 | **தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம்** |
|---|---|
| | ***Batu 16 ½, J8451, Kampung India, 77000 Jasin, Melaka.*** |



தேவி ஸ்ரீ கரு மகா காளியம்மன் ஆலயம் 1965-ஆம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. இதன் நிறுவனர் என். கருப்பையா நல்லையா ஆவார். முதலில் ஜாசின் 16.5-ஆவது மைல் இந்தியர் கிராமத்தில் தனது வீட்டிற்கு அருகில் பலகை மற்றும், தகரக்கூரையினால் ஆன ஒரு சிறிய ஆலயத்தைக் கட்டினார். தேவைப்படுவோருக்கு அருள் வாக்குக் கூறி வந்தார். பீடித்த நோய்களுக்குப் பாரம்பரியச் சிகிச்சையும் அளித்தார். அவருக்குப் பிறகு அவரின் மகன் திரு. மகாலிங்கம் அதைக் கடைப்பிடித்து வருகிறார்.

அவரது சிகிச்சை மிகவும் பயனுள்ளதாக அமைவதால் ஆண்டுதோறும் ஸ்ரீ மகா காளியம்மன் தேவியின் கோயிலுக்கு வருபவர்களின் எண்ணிக்கை பன் மடங்கு வளர்ச்சி கண்டுள்ளது. பக்தர்களின் நல்ல வரவேற்பினால், 8' x 8' பரப்பளவில் இருந்த ஒரு சிறு குடில் பல தடவை சீரமைக்கப்பட்டு, 1985-ஆம் ஆண்டு கல் கட்டடமாகத் தரம் உயர்த்தப்பட்டது. பிறகு 2018-ஆம் ஆண்டு சிற்பக் கலை நயமிக்க ஆலயம் ஒன்று கட்டப் பெற்று கும்பாபிஷேகமும் நடந்தேறியது.





தேவி ஸ்ரீ வீரபத்ர காளியம்மன் தேவியை மூலத் தேவதையாகக் கொண்டது இவ்வாலயம். எனினும், முனீஸ்வரன், சங்கிலிகருப்பன், நாகம்மா, முருகன் ஆகிய தெய்வங்களும் இக்கோயிலின் வளாகத்தில் காணப்படுகின்றனர். ஆண்டுதோறும் மார்ச் மாதம், ஆண்டுவிழா ஐந்து நாட்களுக்குக் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. ஐந்து நாட்களும் கோயில் அருகில் உள்ள காலி நிலத்தில் கேளிக்கைச் சந்தைகள் நடைபெறுகின்றன. ஏறத்தாழ 100 கடைகள் ஆடை, நினைவுச் சின்னங்கள், பூசைப் பொருள்கள், உணவு வியாபாரத்தில் ஈடுபடுகின்றன.

இறுதி நாள், பால் குடம் மற்றும், காவடி எடுக்கப்படுகின்றது. சிறப்புப் பூசைக்குப் பின்னர் பக்தர்களுக்கு மதிய உணவு பரிமாறப்படுகிறது. நேர்த்திக்கடனாக விடப்பட்ட ஆடுகளையும், பக்தர்கள் திருவிழாவிற்காகக் அன்பளிப்பாகக் கொடுக்கும் ஆடுகளையும் பலி கொடுத்து, பக்தர்களுக்கு அசைவ உணவு பரிமாறப்படுகிறது. பத்தாயிரம் பக்தர்கள் வரை கூடும் இந்த விழாவின் இறுதி இரவில், அலங்கரித்த இரதத்தில், ஸ்ரீ மகா காளியம்மன் எழுந்தருளி, அருகில் உள்ள இந்தியப் புதுக் கிராமம் மற்றும், குடியிருப்புப் பகுதிகள் வழியாக, ஊர்வலம் செல்கிறாள்.

கோயில் தலைவர் என்.மகாலிங்கம் கோயிலுக்கு வருகை தரும் பக்தர்களுக்குப் போதிய வசதிகளை வழங்க வேண்டும் எனும் நோக்கில், பல்நோக்கு மண்டபம் ஒன்றைக் கட்ட எண்ணம் கொண்டுள்ளார். கோயிலின் எதிரில் உள்ள சீனருக்குச் சொந்தமான இரண்டு ஏக்கர் வெற்று நிலத்தை வாங்க எண்ணம் கொண்டுள்ளார். இந்தக் கோயில் நிர்வாகம் 2002-ஆம் ஆண்டு மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவாகியுள்ளது.



| J37 | **ஸ்ரீ பிரித்தியங்கரா தேவி சக்தி பீடம்** |
|---|---|
| | ***JA 3371, Jalan Ria Satu, Taman Ria, Kesang Pajak, 77000 Jasin, Melaka.*** |

இந்த நாட்டிலேயே முதல் ஸ்ரீ பிரித்தியங்கரா தேவி சக்தி பீடத்தை சிவஸ்ரீ டி.ஆர்.கே.எம். தினகேஸ்வர் சிவாச்சாரியார், P.J.K, Ph.d அவர்கள் 1999-ஆம் ஆண்டில் நிறுவினார். அவரின் கூற்றுப்படி, பிரித்தியங்கரா தேவியின் அழைப்பின் பேரில், படிவம் இரண்டிலேயே தன் பள்ளி வாழ்க்கையைத் துறந்து, தனது தந்தையின் அனுமதியுடன் தென்னிந்தியாவுக்குச் சென்று சமயக் கல்வியைக் கற்றார். இவர் 2002 - 2004 வரை திருச்சி பாண்டா மங்கல அக்ரகாரத்தில், வேதா ஆகம நயனா பாஸ்கரா விசாக ரத்னா சிவா ஸ்ரீராஜமணி சிவாச்சாரியாரிடம் வேதம் மற்றும், இந்து மதப் போதனைகளைப் பற்றி கற்றறிந்தார்.

அவர் இலங்கைப் பல்கலைக்கழகத்தில் தத்துவத் துறையில் முனைவர் பட்டம் பெற்றார். இவர் அன்னை ஸ்ரீபிரித்தியங்கரா தேவி ஆசியுடன், மனோவியல், பில்லி, சூனியம், பேய் பிசாசு, வணிக மற்றும், மாந்திரிகப் பிரச்சனைகளுக்கு, சிகிச்சையளிக்கும் திறன் கொண்டவர்.

ஆரம்பக் காலங்களில், எண் JA 3371, ஜாலான் ரியா சத்து, தாமான் ரியா, என்ற அவரது வீட்டிற்கு அருகில் ஒரு சிறிய குடிசையில் சக்தி பீடம் அமைந்தது. 2005-ல் சக்தி பீடம் தற்போதைய நிலைக்கு விரிவுப் படுத்தப்பட்டு, கோயிலின் பிரதான விக்ரகமான தேவி பிரித்தியங்கரா ஏழு அடி உயரத்தில், ஜைப்பூரிலிருந்து கொண்டுவரப்பட்ட கருங்கல்லிலான சிலை வடிவில் காட்சி அளிக்கிறார். இக்கோயில் வளாகத்தில், விநாயகர், முருகன், காளி, கருப்புசாமி, பைரவர் போன்றோரும் காணப்படுகின்றனர்.

தினமும் காலையும் மாலையும் பூசை நடைபெறுகிறது. ஒவ்வொரு மாதமும், பௌர்ணமி மற்றும், அமாவாசை அன்று சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. நாகபூசையும் மாதம் ஒரு முறை அல்லது பக்தர்களின் வேண்டுதலுக்கு ஏற்ப நடத்தப்படுகிறது. 19 அடி நீளம் கொண்ட ராஜநாகம், இவ்வழிபாட்டுக்குப் பயன்படுத்தப் படுகிறது. இந்த நாகத்தை, கோயில் விசேஷமாகப் பராமரித்து வருகிறது. இந்தக் கோயிலின் ஆண்டு விழா பிரித்தியங்கரா தேவி வருடாந்திர மகோற்சவமாகும். இவ்விழா செப்டம்பர் மாதத்தில் மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. இவ்விழா பத்து நாட்கள் உபயங்களுடன் நடைபெறுவதுடன், பத்தாம் நாளில் பால் குடம், காவடி எடுப்பதும், மாலையில், தேவி பிரித்தியங்கரா அலங்கரிக்கப்பட்டு ரதத்தில், அருகில் உள்ள குடியிருப்புப் பகுதிகளின் ஊடே ஊர்வலம் செல்வதும் உண்டு.






பிரித்தியங்காரா தேவி ஆசியுடன் செயல்படும், டாக்டர் தினகேஸ்வரை நாடி உள்ளூரிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் பல அரசியல், வணிக, திரையுலக, பிரமுகர்களை உள்ளடக்கிய பல பக்தர்கள் தினமும் வருகிறார்கள். டாக்டர் தினகேஸ்வர் மலாக்காவில் கப்பாம் என்ற பகுதியில் ஐந்து ஏக்கர் நிலப்பரப்பில் சக்தி பீடத்தை எழுப்ப சித்தம் கொண்டுள்ளார். இதன் உத்தேச செலவு சுமார் 3.6 பில்லியன் ரிங்கிட் எனவும் அதில் பல்நோக்கு அரங்குகள், தங்கும் அறைகள், சமய வகுப்புகள், பணிமனைகள் ஆகியவை அடங்கும் என்றும் அது ஒரு முக்கிய சுற்றுலாத் தளமாக விளங்கும் எனவும் கூறுகிறார். இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாக 2017-ஆம் ஆண்டு பதிவுச் செய்யப்பட்டுள்ளது. துரதிர்ஷ்டவசமாகக் கோயில் தலைவர் 2021-ஆம் ஆண்டு தொடக்கத்தில் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டதால், அவருடைய பெரும் திட்டங்களின் நிலைமை நிலுவையில் உள்ளன. அவரின் குடும்ப வாரிசுகள் கோயிலைத் தொடர்ந்து நடத்தும் பொறுப்பில் உள்ளனர்.

| J38 | **கைக்கொடுக்கும் ஸ்ரீ மகா காளியம்மன் கோயில்** |
|---|---|
| | ***J7520, Blok F, Rumah Awam, Simpang Kerayong, 77000 Jasin, Melaka. (Jalan Merlimau-Lipat Kajang)*** |

ஜாசின் மெர்லிமாவ் சாலையின் 22-ஆவது கல்லில் டத்தோ கான் சகோதரர்களுக்குச் சொந்தமான ரப்பர் தோட்டத்தில் வசித்த ஓர் இந்தியக் குடும்பத்தினரால் 1950-ஆம் ஆண்டில் இந்தக் கோயில் உருவானது. ஒரு சிறிய குடிசை வடிவத்தில், இந்தக் கோயில் அவர்களின் வீட்டிற்கு அருகில் அமைந்திருந்தது. குடிசையின் உள்ளே திரிசூலமும் காளியம்மன் படமும் ஒரு புத்தின் அருகில் வைக்கபட்டிருந்தது.













1970-ஆம் ஆண்டுகளில் இத்தோட்டத்தில் வசித்த இக்குடும்பத்தினர் மெர்லிமாவ் பட்டிணத்திற்குக் குடிபெயர்ந்தனர். சில ஆண்டுகளாக இக்கோயில் கைவிடப்பட்ட நிலையில் இருந்தது. இந்த நிலையை அருகில் அமைந்திருக்கும் சிம்பாங் கிராயோங் குடியிருப்புப் பகுதியில் வசிக்கும் இளைஞர்கள் கண்டனர். இக்கோயிலைப் புனரமைக்கும் பணிகளை மேற்கொள்ள முற்பட்டனர். 1988-ஆம் ஆண்டில் பலகையால் ஆன ஒரு சிறு கோயில் உருவாகியது. மேலும், 1990-ஆம் ஆண்டில் மதுரை வீரன், 1992-ஆம் ஆண்டில் ஆஞ்சநேயர், 1994-ஆம் ஆண்டில் கருப்பர் மற்றும், ரேணுகாதேவி சந்நிதானங்களும் கட்டப்பட்டன. பலருடைய இன்னல்களைத் துடைத்ததால் பக்தர்கள் இவருக்குக் கைகொடுக்கும் காளியம்மன் எனப்பெயரிட்டனர். அன்பு ததும்ப பரிவு காட்டியதால் ‘பாட்டி அம்மா’ என்றும் செல்லமாக அழைத்தனர்.

தினமும் மாலையில் தேவி காளியம்மனுக்கும் இதரத் தெய்வங்களுக்கும் பூசை நடைபெறுகிறது. வெள்ளிக்கிழமைகளிலும், மார்கழி மாதம், அமாவாசை போன்ற நாட்களிலும் சிறப்புப் பூசை நடைபெறுகிறது. இப்பூசை கோயில் தலைவர் தலைமையில் நடக்கிறது. குமரன் குப்புசாமி மற்றும், என்.சரவணன் சுப்ரமணியம் போன்ற பகுதி நேரப் பூசகர்களாலும் பூசை நடத்தப்படுகிறது. மனமுருக வேண்டினால் நல்லதே நடக்கிறது என்பது பக்தர்களின் நம்பிக்கை. உதாரணமாக, பதின்மூன்று ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியம் இன்றி இருந்த சிங்கப்பூர் தம்பதியினர், காளியம்மனை வேண்டி அருள் பெற்று இப்போது குழந்தையோடு நலமாக வாழ்வதாகக் கூறுகின்றனர்.

ஆண்டுத் திருவிழா, ஜூலை மாதத்தில் ஐந்து நாட்கள் நடைபெறுகிறது. பக்தர்கள் பால் குடம் எடுக்கின்றனர். நேர்த்திக்கடனாகச் செலுத்திய ஆடுகள் காளியம்மனுக்குப் பலி கொடுக்கப்படுகிறது. இக்கோயில் அமைந்துள்ள நிலத்தைக் கையகப்படுத்தி ஒரு கோயிலைக் கட்ட வேண்டும் என்பது செயற்குழுவின் அவா. இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2017-ஆம் ஆண்டு பதிவாகியுள்ளது.







## J39 ஸ்ரீ நாகேஸ்வரி அம்மன் கோயில்

***J7177, Blok O, Taman Chenderawasih, 77000 Jasin, Melaka.***



இந்தக் கோயில் 1890-ஆம் ஆண்டில் தோட்டத் தொழிலாளர்களால் கட்டப்பட்டது. அவ்வேளையில் ரீம் தோட்டத்தின் ஒரு பிரிவாகச் செண்டரா இருந்தது. இப்பிரிவில் சுமார் 30 குடும்பங்கள் குடியிருந்தனர். தங்களது ஆன்மீக தேவைக்காக ஒரு கோயில் தேவைப்பட்டது. அரவங்களின் தொல்லைகள் அதிகம். எனவே, தங்களைப் பாதுகாக்க அரவங்களின் அரசியான நாகேஸ்வரி தேவியைத் தெரிவுச் செய்தனர். எந்தவொரு மோசமான சூழ்நிலையிலும் அவர்களைப் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையில் அவர்கள் குடியிருப்புப் பகுதிக்கு மத்தியில் கோயிலை அமைத்தனர்.

இருப்பினும், 1970-ஆம் ஆண்டில் ரீம் தோட்டம் துண்டாடப்பட்டது. துண்டாடப்பட்ட நிலம் தனிப்பட்ட உரிமையாளர்களுக்கு விற்கப்பட்டது. கோயில் இருந்த இடம் சீனர் ஒருவரால் கையகப்படுத்தப்பட்டது. அங்கிருந்த தொழிலாளர்கள் அந்த இடத்திலிருந்து வெளியேறினர். 1980-ஆம் ஆண்டுகளில் செண்டராவின் ஒரு பகுதி வீட்டு மனைக்காக ஒதுக்கப்பட்டது. இவ்வீட்டு மனைப் பகுதியில் சுமார் 30 இந்துக் குடும்பங்கள் குடியேறினர். கோயிலிலிருந்து சுமார் ஒரு கிலோமீட்டர் தொலைவில் இக்குடியிருப்பு அமைந்திருந்தது. தங்களது தேவைக்காக இக்கோயிலைப் பராமரித்து அதைப் பயன்படுத்தத் துவங்கினர்.

ஒரு சிறியக் குடிசையாக இருந்த கோயில், 1990-ஆம் ஆண்டில் ஒரு மிதமான கோயிலாகப் புதுப்பிக்கப்பட்டது. இந்தக் கோயிலின் முக்கிய சன்னதி நாகேஸ்வரி அம்மன் தேவி. அதனைத் தவிர்த்து முருகன், விநாயகர், துர்கா மற்றும், நவக்கிரகம் போன்ற தெய்வங்களும் இக்கோயில் வளாகத்தில் காணப்படுகின்றன. தினமும் மாலையில் பூசை நடைபெறுகிறது. கோயில் தலைவர் திரு.செல்வநாதன் மற்றும், அவரது உதவியாளர்களால் பூசை நடத்தப்படுகிறது. விநாயகர் சதுர்த்தி, பொங்கல், இந்துப் புத்தாண்டு மற்றும், தீபாவளி ஆகிய தினத்தன்று சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

ஆண்டுத் திருவிழா ஆடிப்பூரம் அன்று மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. இந்தப் பகுதி மக்களுக்கு ஒரு கோயில் தேவை. நிலக்கிழார் கிம் யுன் நிறுவனத்திடமிருந்து 0.5 ஏக்கர் நிலத்தைப் பெற, செயற்குழுவினர் முயற்சி செய்து வருகின்றனர். 2016-ஆம் ஆண்டிலிருந்து, இந்தக் கோயில் நிர்வாகம் ஒரு பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகியுள்ளது.





## J40 | ஓம் ஸ்ரீ முனியாண்டி முனீஸ்வரர் காளி கருமாரியம்மன் கோயில்

***Jalan Bemban-Ayer Keroh, Gapam, 75450 Bemban, Melaka.***

பெம்பான் - ஆயர் குரோ சாலையிலிருந்து ஓர்னா கோல்ப் & கண்ட்ரி கிளப்பிற்குச் செல்லும் நுழைவு சாலையின் இடது புறத்தில் ஓர் ஆலயம் 1992-ஆம் ஆண்டு நிர்மாணிக்கப்பட்டது. இத்திருக்கோயில் காப்பாம் முக்கிம் எல்லைக்குள் அமைந்த முதலாவது இந்துக் கோயிலாகும். இக்கோயில் ஓர்னா கோல்ப் & கண்ட்ரி கிளப் மற்றும், அரசாங்க இருப்பு நிலத்தில் அமைந்துள்ளது.




1960-ஆம் ஆண்டு ஆரம்பத்தில், செட்டியார் ஒருவருக்குச் சொந்தமான 500 ஏக்கர் ரப்பர் தோட்டத்தில் சிறிய திருக்கோயில் ஒன்று அமைந்திருந்தது. பிறகு, சீனருக்கு விற்றுவிட்டார். அச்சமயம், அக்கோயில் உடைக்கப்பட்டு, கோயில் விக்கிரகங்கள் அனைத்தும் மலாக்கா கடலில் இறக்கப்பட்டது. கோயில் முகப்பிலிருந்த புற்றுமேடு மட்டும் தரைமட்டமாக்கப் படவில்லை. பல ஆண்டுகளுக்குப்பின் ஒருநாள், பழைய கோயில் அமைந்திருந்த நிலத்தருகில் வேலை செய்தத் தொழிலாளி ஒருவருக்கு அருள் வந்து, அவர் ஓர் இடத்தைக்காட்டி பழைய திருக்கோயில் முன் வீற்றிருந்த புற்றுமேட்டில் வாசம் கொண்ட முனீஸ்வரரின் புனித ஆத்மா தற்போது இவ்விடத்தில் குடிகொண்டிருப்பதாகக் கூறினார். அவர் வாக்குப்படி, பெம்பான் பகுதியில் வாழும் முனீஸ்வரரின் பக்தர் ஒருவர் பெருமானுக்கு கோயில் கட்டி வழிபடுவார் எனக் கூறினார். அன்றிரவு, திரு.முருகன் அர்ஜுணன் கனவில் முனீஸ்வரர் தோன்றி தன் கட்டளையை வெளிப்படுத்தினார். அதன் நிமித்தமே, அவர் இதர முனீஸ்வரர் பக்தர்களின் துணையோடு இத்திருக்கோயிலை நிறுவி இன்றுவரை நடத்திவருவதாகக் கூறுகிறார்.

இத்திருக்கோயிலின் மூலவராக ஓம் ஸ்ரீ முனியாண்டி முனீஸ்வரர் திகழ்கிறார். இப்பெருமானோடு, கருமாரியம்மன் மற்றும், காளியம்மன் சந்நிதியும் கால் ஏக்கர் நிலப்பரப்பு கொண்ட கோயில் வளாகத்தில் அருள்பாலிக்கிறார்கள். இத்திருக்கோயிலின் திருவிழா, ஆண்டுதோறும் செப்டம்பர் திங்களில் 2005-ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்று வருகிறது. இந்தக் கோயிலில் சற்றுப் பிரசித்திப் பெற்றது அருள்வாக்கு கூறுதலாகும். பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்க ஆலயத் தலைவர், சிறப்பு பூஜைகளுடன் அருள்வாக்குச் சொல்கிறார். உயிர் பலிகொடுப்பதும் மாமிச உணவும் அனுமதிக்கப்படுகிறது.



கோயில் நிர்வாகம் டத்தோ மகாதேவன் சன்னாசி அவர்களின் உதவியோடு கோயிலுக்குப் புதிய நிலத்தைப் பெம்பான் தாமான்

அஞ்சோங் காப்பாம் வீட்டுமனைத் திட்டத்தில் வாங்கத் திட்டமிட்டனர். சில காரணங்களால் அம்முயற்சி தோல்வியில் முடிந்தது. கடந்த ஆண்டு, ஓர்னா கோல்ப் & கண்ட்ரி கிளப், கோயில் நிலம் உள்ளடக்கிய தங்களின் ஒரு பகுதி நிலத்தை வேறொரு நில மேம்பாட்டு நிறுவனத்திற்கு விற்றுவிட்டனர். இந்தக் கோயில் நிர்வாகம் 2013-ஆம் ஆண்டு ஒரு பக்தர்கள் சங்கமாக மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவு செய்துள்ளது. 2019-ஆம் ஆண்டு, மலேசிய சங்கப் பதிவிலாகா, திருக்கோயிலை அவ்விடத்திலிருந்து அப்புறப்படுத்துமாறு கோயில் நிர்வாகத்திற்கு உத்தரவு பிறப்பித்துள்ளது. கோயில் நிர்வாகமோ, அத்திருக்கோயிலை அவ்விடத்திலேயே நிலை நிறுத்த கங்கணம் கட்டி முயற்சி எடுத்து வருகிறது.

| J41 | தேவி ஸ்ரீ மாரியம்மன் ஸ்ரீ முனியாண்டி கோயில் |
|---|---|
| | ***Ladang Merlimau, Bahagian Lanchang, 77300 Merlimau, Melaka.*** |




மெர்லிமாவ் தோட்ட லஞ்சாங் பிரிவில் வேலை செய்து வந்த தொழிலாளர்களால் 1945-ஆம் ஆண்டு இக்கோயில் கட்டப்பட்டது. மேலும், அவ்வப்போது இக்கோயில் பழுதுப் பார்க்கப்பட்டு மற்றும், புதுப்பிக்கப்பட்டு வந்துள்ளது. 1985-ஆம் ஆண்டில் தோட்ட நிர்வாகம் கோயிலை இடிக்க விரும்பியது. எனினும், பேச்சுவார்த்தைகள் மூலம் மீண்டும் 1986-ஆம் ஆண்டு இக்கோயில் செயல்பட்டது. தற்போது இந்த நிலம் சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமாக இருப்பதுடன் இந்தக் கோயிலுக்கு நீர் மற்றும், மின்சாரம் வழங்குவதற்கு அனுமதி அளித்துள்ளது.

இந்தத் தோட்டத்தில் வாழ்ந்த பெரும்பாலான இந்துக் குடும்ப உறுப்பினர்களும் மற்றும், வாரிசுகள் ஒவ்வோர் ஆண்டும் சித்திரை மாதத்தில் (ஏப்ரல்/ மே) 14 நாட்கள் தொடர்ச்சியாக நடைபெறும் மாரியம்மன் திருவிழாவின் போது இக்கோயிலுக்கு வருகின்றனர். திருவிழாவின் போது இந்தக் கோயிலில் நடைபெறும் தீமிதி நிகழ்வு ஒரு சிறப்பு ஈர்ப்பாக உள்ளது. திருவிழாவின் கடைசி நாளன்று அசைவ உணவு பரிமாற அனுமதிக்கப்படுகின்றது.



ஆய்வு செய்யும் சமயத்தில் இந்தத் தோட்டத்தில் வாழ்ந்த சுமார் பத்து

குடும்பங்கள் கோயில் நிர்வாகத்துடன் இணைந்து கோயிலுக்கு இன்றும் விசுவாசத்தோடு இருப்பதுடன் தங்களுடைய ஆதரவையும் வழங்கி வருகின்றனர். மேலும், இந்தக் கோயிலுக்கு நிலம் வாங்குவதற்கும் எதிர்காலத்தில் ஒரு புதிய கட்டிடத்தை அமைப்பதற்கும் இக்கோயில் நிர்வாகம் முயற்சி செய்து வருகின்றது. கடந்த 2015-ஆம் ஆண்டு இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் ஒரு பக்தர்கள் சங்கமாகப் பதிந்துள்ளது.



| J42 | **ஸ்ரீ முனியாண்டி கோயில்** |
| --- | --- |
| | ***7952, Jalan Bukit Tinggi A, Simpang Kerayong, 77000 Jasin, Melaka.*** |

ஜாசின்-சின்சின் சாலையில் அமைந்திருந்த பொதுப் பணித்துறையின் குடியிருப்புப் பகுதியில் (quarters) வசித்து வந்த தொழிலாளர்கள் 1930-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயிலைத் தொடங்கினர். குடும்ப உறுப்பினர்களும் பிறரும் தொடர்ந்து அந்த இடத்தில் வழிபாடுகளை நடத்தி வந்துள்ளனர். பிறகு, மாரா அறிவியல் கல்லூரி கட்டுவதற்காக இந்த இடத்தை அரசாங்கம் கையகப்படுத்தியது.



இதனால், 2004-ஆம் ஆண்டு கோயிலை இடமாற்றம் செய்ய வேண்டிய கட்டாயச் சூழல் உருவானது. சிம்பாங் கெராயோங் எனும் புதிய குடியிருப்புப் பகுதியில் தனது நிலத்தில் திரு. கோமதுரை குடும்பத்தினர், இக்கோயிலின் மூலத் தெய்வமாக விளங்கும் முனியாண்டி, தங்கள் குடும்பக் குலத் தெய்வம் என்பதால், இந்தக்கோயிலை இங்கு மாற்றினர். அங்கு வாழ்ந்த மற்றவர்கள் வெவ்வேறு இடங்களுக்கு மாறிச் சென்றனர்.



சொந்த நிலத்தில் கோயில் இருப்பதால், இந்தக் கோயிலின் நிர்வாகம் 2012-ஆம் ஆண்டு முதல் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாகப் பதிவாகியுள்ளது, ஒவ்வோர் ஆண்டும் மே மாதக் கடைசி ஞாயிற்றுக்கிழமையில் முனியாண்டி தெய்வத்திற்கு ஆண்டுத் திருவிழா நடத்தப்படுகின்றது. கோயிலின் ஆதரவாளர்களும் விசுவாசமானவர்களும் திருவிழாவின் போது தங்களது பங்களிப்பாக உயிர்ப்பலிக்கு ஆடுகளை வழங்குகின்றனர்.

| J43 | ஸ்ரீ மஹா சிவசக்தி ஆலயம் |
|---|---|
| | *No.3490, Taman Batang Melaka Baru, Batang Melaka, 77500 Selandar, Melaka.* |



இந்தக் கோயில் தாமான் பத்தாங் மலாக்கா பாரு, அழகிய ஜசின் அணைக்கட்டுக்கு அருகில் அமைந்துள்ளது. இவ்வீட்டு மனைத்திட்டத்தில், திரு கோபாலகிருஷ்ணன் குஞ்சு கண்ணன் வீட்டு வளாகத்தில் ஸ்ரீ மஹா சக்தி ஆலயம் எழுப்பப்பட்டுள்ளது.

ஒரு குடும்பத் திருக்கோயிலான இதன் அடிநாதம் திருமதி சரோஜினி அம்மையார். இவர் திருமணமாகி கம்போங் ஜசின்சிற்கு அருகிலுள்ள சோ சோன்னிங் தோட்டத்திற்குப் புலம்பெயர்ந்தார். புதிய வீட்டில் தான் தூங்கும்போது நாதஸ்வர இசையும், மேளச் சத்தமும் கேட்கும் அனுபவம் பெற்றார். இதற்கிடையில், அம்மையார் தான் வளர்ந்த டூரியான் துங்கல் தோட்டத் திருவிழாவிற்குச் சென்றபோது, அவருக்கு முதன் முதலாக அருள் வந்து, குறிச்சொல்லி, கரகம் எடுத்தார். இதுவே இவரின் சமயப்பணிக்கு ஆரம்ப கட்டமாக அமைந்தது.

சோ சோன்னிங் தோட்டத்தில் அம்மையார் குடும்பம் வீட்டுக்கு மிக அருகில் அமைந்துள்ள ஆலமர டத்தோவை வணங்க ஆரம்பித்தார்கள். இக்காலக் கட்டத்தில் அம்மையாருக்கு அருள் வருவது வழக்கமாகி, வருவோரின் பிரச்சனைகளைத் தீர்த்து வைத்தார். ஒரு முறை போர்ட்டிக்சனிலிருந்து இறைசக்தியுடைய வயோதிகர் அம்மையாரின் வீட்டுக்கு வரநேர்ந்தது. அக்கணம், அம்மையாரின் வீட்டிற்கு அருகில் ஆலமரத்தடியில் அம்மன் குடியிருப்பதாகக்கூறி, அதனை பராமரிக்கக் கேட்டுக்கொண்டார். மறுகணமே, அம்மையார் வெகுவேகமாக ஓடி அம்மரத்தை வணங்கினார்.



இச்சம்பவத்திற்குப்பின், அம்மையாரும் குடும்பத்தினரும் அங்குச் சிறிய கோயில் அமைத்து, பூஜைகளைச் செய்யத் தொடங்கினர். சில தினங்களுக்குப்பின், வழக்கம்போல் காலையில் பூஜை செய்யச் சென்ற அம்மையார், ஆலமரத்தடியில் மினுமினுவென்று ஒரு சிறிய புற்று தோன்றி இருப்பதைக்கண்டு வியந்தார். இச்சம்பவம் அவ்விடத்தில் அம்மன் குடிகொண்டிருப்பதை மேலும் உறுதிப்படுத்தியது. அதன்பின், அம்மையார் ஒவ்வோர் ஆண்டும் திருவிழாவை நடத்த ஆரம்பித்தார்.

அம்மையாரும் அவர்தம் குடும்பத்தினரும் 1993 ஆம் ஆண்டு தாமான் பத்தாங் மலாக்கா பாருவிற்குக் குடிபெயர்ந்தனர். கோயிலுக்கும் தற்போதைய வீட்டிற்கும் ஏறக்குறைய ஐந்து கிலோமீட்டர் தூரம். இதனால், அம்மையார் மோட்டார் வண்டியில் பழையத் தோட்டத்திற்குச் சென்று, சில ஆண்டுகள் பூஜைகள் செய்தார். அதன்பின், அம்மையார் தம் வயோதிகம் காரணமாக 1997 ஆம் ஆண்டு தம் வீட்டு வளாகத்தில் புதிய கோயில் கட்ட ஏற்பாடு செய்தார். பழைய ஆலமரத்தடியில் உருவான புற்றுமண்ணை எடுத்து புதிய கோயில் கருவறையில் 48 நாட்கள் பூஜை செய்தார். புதிய திருக்கோயில் ஶ்ரீ மஹா சிவசக்தி ஆலயம் எனத் திருநாமம் பூண்டு, சுற்றுவட்டார மக்கள் தலைவர்கள் ஆதரவுடன் மஹா கும்பாபிஷேகம் நடந்தேறியது.



இத்திருக்கோயிலின் பிரதான மண்டபத்தில் மூலவர் ஶ்ரீ மஹா சிவசக்தியோடு விநாயகப் பெருமானோடு முருகப் பெருமானும் காட்சியளித்து அருள்பாலிக்கின்றனர். பிரிதொரு சந்நிதி முனீஸ்வருக்கு உரியது. 1997 ஆம் ஆண்டு தொடங்கி கடந்த 2015 ஆம் ஆண்டுவரை அம்மையார் இக்கோயிலில் பூஜைகளையும் தன்னை நாடிவரும் பக்தர்களுக்கு அருள்வாக்கைக் கூறிவந்தார். ஆண்டுதோறும் ஆகஸ்ட் திங்களில் இக்கோயிலில் திருவிழா நடைபெறும். இவ்விழாவைத் தவிர்த்து, மற்றப் பூஜைகளையும் அம்மையார் தன்னால் இயன்றவரை செய்து வந்தார். "அருள்வாக்கு அம்மா" என்று அறியப்பட்ட அம்மையார் 2015 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சிவபதவி அடைந்தார். இவரின் மறைவுக்குப்பின், கோயிலின் பொறுப்புகள் அம்மையாரின் மூத்தமகன் திரு.கோபாலகிருஷ்ணனிடம் ஒப்படைக்கப்பட்டது. இவர், இவர்தம் உடன்பிறப்புகள் ஆண்டுதோறும் கோயில் திருவிழாவை உற்றார் உறவினர்கள் மற்றும், நண்பர்களுடன் ஒன்று சேர்ந்து மிதமான அளவில் நடத்தி வருகின்றனர். அருள்வாக்கு அம்மாவால் பயன்பெற்றோர் தொடர்ந்து இக்கோயிலுக்குத் தங்களின் வற்றாத ஆதரவை அளித்து வருகின்றனர். இக்கோயில் நிர்வாகம் ஒரு குடும்பக்கட்டுப்பாட்டில் இயங்குகிறது. இக்கோயில் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## J44 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Batu 21, Pondok Kempas, Selandar, 77500 Melaka.***



இந்தத் தோட்டத்தில் வேலை செய்த தொழிலாளர்களால் 1950-ஆம் ஆண்டில் கோயில் தொடங்கப்பட்டது. இந்தத் தோட்டம் முதலில் செட்டியார் சமூகத்திற்குச் சொந்தமாக இருந்தது. பின்னர் லியான் டெக் நிறுவனம் வாங்கியது.

தற்போது யாரும் இந்தத் தோட்டத்தில் தங்குவதில்லை. சிலாண்டார், போண்டோ கெம்பாஸ் போன்ற இடங்களிலிருந்து இந்த ஆலயத்தில் வழிபட வருகிறார்கள். இந்தக் கோயில் திரு.கே.அங்கப்பன் அவர்களின் குடும்பத்தினரால் பராமரிக்கப்படுகிறது. அவருடைய குடும்பம் 1950-ஆம் ஆண்டு முதல் இந்தத் தோட்டத்தில் வசித்து வந்தவர்கள். அதோடு, இக்கோயிலை ஆரம்பித்தவர்களும் இவர்களே.

தோட்ட நிர்வாகம் அனுமதி வழங்க மறுப்பதால் ஆலய நிர்வாகத்தை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிய இயலவில்லை. இருப்பினும், இந்தக் கோயிலில் ஸ்ரீ மஹா மாரியம்மனை வழிபட வருகின்ற வெளியார் யாரையும் தோட்ட நிர்வாகம் தடுப்பதில்லை.

ஆலய நிர்வாகம் ஒவ்வோர் ஆண்டும் ஜனவரி முதல் நாளன்று வருடாந்திர விழாவைக் கொண்டாடுகிறது.



| J45 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Lim Kok Wah Sdn Bhd, Kg Bukit Senggeh, Selandar, 77500 Melaka.*** |



கம்போங் புக்கிட் செங்கேயில் உள்ள லிம் கோக் வா நிறுவனத்திற்குச் சொந்தமான தோட்டத்தில் 1960-ஆம் ஆண்டு முதல் இக்கோயில் இயங்கி வருகிறது. தற்பொழுது சில வெளிநாட்டுத் தொழிலாளர்களைத் தவிர இங்கு உள்ளூர் தொழிலாளர்கள் யாரும் இல்லை.

இந்தப் பகுதி மலாய்க்கார வீடுகள் சூழப்பட்ட ஒரு மலாய்க் கிராமம் ஆகும். சிலாண்டார் வட்டாரத்தில் உள்ள வீடமைப்புப் பகுதியில் வசிக்கும் ஒரு சிலர் இந்தக் கோயிலுக்கு வருகை தருகின்றனர். இவர்கள் இந்தத் தோட்டத்தில் ஏற்கனவே பணிபுரிந்தவர்கள் ஆவர். கோயில் வளாகத்தைச் சுத்தம் செய்யவும், ஒவ்வொரு வாரமும் தீப விளக்குகளை ஏற்றவும் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

சிறப்புப் பூஜைகள் கிடையாது. ஆனால், வழக்கமாக ஏப்ரல் மாதத்தில் நடத்தப்படும் ஆண்டுத் திருவிழாக்களில் ஆடுகளைப் பலி கொடுப்பார்கள். வருடாந்திரத் திருவிழாக்களை நடத்த தோட்ட நிர்வாகத்தின் அனுமதி இருக்கவேண்டும்.

அதோடு, எந்தவொரு முன்னறிவிப்பும் இல்லாமல் அடையாளம் தெரியாத நபர்கள் இந்தப் பகுதிக்குள் நுழைய தோட்ட நிர்வாகம் அனுமதிக்காது. தோட்ட நுழைவு வாயில் எப்போதும் பூட்டப்பட்டிருக்கும். அங்குக் குடியிருக்கும் நியமிக்கப்பட்ட வெளிநாட்டுத் தொழிலாளர்கள் தெரிந்தவர்களை மட்டுமே உள்ளே நுழைய அனுமதிப்பார்கள். இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதியப் படவில்லை.



## J46 ஸ்ரீ அய்யனார் கோயில்
***Genting Bhd / SAMB, Taman Batang Melaka Baru, 77500 Batang Melaka.***



இங்கு வேலை செய்த, ரப்பர் மரத்தைச் சீவிய, தொழிலாளர்களால் இக்கோயில் உண்டாக்கப்பட்டது. நிர்வாகத்தின் கூற்றுப்படி, இக்கோயில் 1940-ஆம் ஆண்டு முதல் வழிபாட்டில் உள்ளது. இந்தத் தோட்டத்தில் தற்பொழுது தொழிலாளர்கள் வீடுகள் அல்லது குடியிருப்பாளர்கள் யாரும் இல்லை. இந்தத் தோட்டம் கெந்திங் நிறுவனத்திற்கு சொந்தமானது. இந்த தோட்டத்தின் ஒரு பகுதியை ஜூஸ் நீர் தேக்கத்திற்காக மலாக்கா நீர் வாரியம் (SAMB) கையகப்படுத்தியது.

கோயில் அமைந்திருக்கும் பகுதி நீர் வாரியதிற்குச் (SAMB) சொந்தமானதா அல்லது கெந்திங் நிறுவனத்திற்குச் சொந்தமானதா என்பதை (SAMB) நீர் வாரியம் இந்த நீர் தேக்கத்தைச் சுற்றி வேலி அமைக்கும் பணியை முடிக்கும்போதுதான் தெரியவரும். எனினும், இங்கு வந்து வழிபாடு செய்யும் நபர்களை யாரும் தடுப்பது இல்லை. இருப்பினும், வருங்காலத்தில் நிலவுடைமை ஒரு பிரச்சினையாக உருவாக வாய்ப்புள்ளது. இந்தக் கோயிலுக்கு அருகில் 1990-ஆம் ஆண்டுகளில் உண்டாக்கப்பட்ட பல இனமக்கள் வாழும் குடியேற்றப்பகுதி உள்ளது. இந்தப் பகுதியில் வாழும் சில இந்துக்கள் இந்தக் கோயிலுக்கு அடிக்கடி வருவது வழக்கம்.

இங்கு வழிபாட்டுத் தெய்வமாக ஸ்ரீ அய்யனார் உள்ளார். ஆண்டுத் திருவிழா மே 1-ஆம் தேதி நடைபெறுகின்றது. திருவிழாவின்போது ஆடுகள் பலி கொடுக்கப்படுகின்றன.

இந்தக் கோயிலை நிர்வகிக்க நிரந்தரக் குழு கிடையாது. என்றாலும், திருவிழா சமயங்களில் திருவிழாவை நடத்தவும் திருவிழா கணக்கு விவரங்களை அறிவிக்கவும் தற்காலிகமாக ஒரு குழு அமைக்கப்படும். இந்த நிலையில், இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.



அட்டவணை 5 : அலோர் காஜா மாவட்டத்தில் அமைந்திருக்கும் கோயில்கள்

| எண் | கோயில் பெயர் | முகவரி | தொடங்கிய ஆண்டு |
|---|---|---|---|
| AG1 | ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Ladang Bertam, 76100 Durian Tunggal, Melaka. | 1950 |
| AG2 | ஸ்ரீ அஸ்ட தச புஜ காளியம்மன் ஆலயம் | No.10817, Jalan Ayer Semubuk 2, 76100 Durian Tunggal, Melaka. | 1998 |
| AG3 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஸ்ரீ பால சுப்ரமணியர் ஆலய பரிபாலன சபை | Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1934 |
| AG4 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Sing Lian, Ayer Resam, 76100 Durian Tunggal, Melaka. (Scientex Corporation) | 1960 |
| AG5 | ஸ்ரீ வீர பத்ர காளி ஆலயம் | 14, Taman Sri Bukit Tambun, 76100 Durian Tunggal, Melaka. | 1994 |
| AG6 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Kemuning Kru, Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1890 |
| AG7 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Batu 18 ½, Simpang Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1911 |
| AG8 | ஸ்ரீ மகா பத்ர காளியம்மன் ஆலயம் | Lorong Balai Arshad, Jln Keretapi Lama, (PT638) Kampung Gangsa, 76100 Durian Tunggal, Melaka. | 2006 |
| AG9 | ஸ்ரீ சித்தி புத்தி விநாயகர் ஆலயம் | Batu 21, Ladang Sungei Baru, 78300 Masjid Tanah, Melaka. | 1924 |
| AG10 | ஸ்ரீ ஆதி கோட்டை முனீஸ்வரர் ஆலயம் | Batu 21, Ladang Sungei Baru, 78300 Masjid Tanah, Melaka. | 1950 |
| AG11 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Lendu (Klemak) 78000 Alor Gajah, Melaka. (Dulu: Ladang Lendu) | 1945 |
| AG12 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் (நாகக்கன்னி) | Ladang UMB Ramuan China Besar, Paya Lebar, 78300 Masjid Tanah, Melaka. | 1910 |
| AG13 | ஸ்ரீ மகா மாரியம்மன் தேவஸ்தானம் | Ladang Sungei Baru, Home Division, 78300 Masjid Tanah, Melaka. | 1930 |
| AG14 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Bukit Chempedak Estate, Kuala Sungai Baru, 78200, Melaka. | 1920 |

| AG15 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரரேஸ்வரர் ஆலயம் (இன்னும் கட்டிடம் இல்லை) | MT2521 Jalan 3, Taman Bandar Baru, 78300 Masjid Tanah, Melaka. (கோயில் நிலம் கையகப் படுத்தும் பணி) Lot 1716, GM154, Jalan Hujan Panas, Taman Harmoni, 78300 M.T. sedang dilakukan) | 2012 |
|---|---|---|---|
| AG16 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Genting Tebong (Tebong Estate) 76460 Tebong, Melaka. | 1919 |
| AG17 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kemuning, Home Division, 76460 Tebong, Melaka. | 1939 |
| AG18 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Renopinang Estate, 76460 Tebong, Melaka. (dulu Leong Watt Hin Estate) | 1960 |
| AG19 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Hor Ng Lih Yuan (KVL Rembia), 78000 Alor Gajah, Melaka. | 1961 |
| AG20 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Guthrie Rubber Sdn Bhd., 76460 Tebong, Melaka. | 1919 |
| AG21 | தேவ ஸ்ரீ பால தண்டாயுதபாணி ஆலயம் | Jalan Naning Lama, Kampung Kemus, Jalan Simpang Ampat, 73000 Alor Gajah, Melaka. (asal Ladang Gadek, Naning Division) | 1935 |
| AG22 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் ஆலயம் | FELDA Hutan Percha, 78000 Alor Gajah, Melaka. | 1980 |
| AG23 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | PS 1996, Taman Malinja Wangi, Pulau Sebang 73000 Alor Gajah, Melaka. (kuil asal Ladang Peguh) | 1936 |
| AG24 | தேவி ஸ்ரீ மாரியம்மன் ஆலயம் | Batu 27, Kampung Baru (Paya Mengkuang) 78200 Kuala Sungei Baru, Alor Gajah, Melaka. (dlm proses) (asal: Ladang Kempas, Bkt, Bachang Division) | 1910 |
| AG25 | ஸ்ரீ சுப்ரமணியர் ஆலயம் | Kampung Tersusun, (Yayasan Melaka) Melaka Pindah, 78000 Alor Gajah, Melaka. (asal: Ladang Bertam, Parit Melana Division) | 1936 |
| AG26 | ஸ்ரீ மீனாட்சி அம்மன் ஆலயம் | Ladang Yayasan, Jalan Satelit, Lendu, Bukit Hantu, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1945 |
| AG27 | ஸ்ரீ கருமாரியம்மன் ஆலயம் | Lorong Bukit Hantu, Jalan Lendu, Rembia 78000 Alor Gajah, Melaka. | 1930 |
| AG28 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang New Kru, Hutan Percha, 78000 Alor Gajah, Melaka. | 1948 |

| | | | |
|---|---|---|---|
| AG29 | ஸ்ரீ மகா துர்கையம்மன் ஆலயம் | Endau Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1920 |
| AG30 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | 89. Jalan Fairuz, Rumah Awam, Paya Datuk, 78000 Alor Gajah, Melaka. | 2010 |
| AG31 | ஸ்ரீ மகா கருமாரியம்மன் ஆலயம் | United Melaka Berhad, Machap Estate, 76100 Durian Tunggal, Melaka. | 1890 |
| AG32 | தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | UMRE Melaka Pindah Estate, Lesung Batu, 78000 Alor Gajah, Melaka. | 1890 |
| AG33 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lian Ho, Rantau Panjang, Ayer Paabas, 78000 Alor Gajah, Melaka. | 1960 |
| AG34 | ஸ்ரீ வீரபத்ர காளியம்மன் ஆலயம் | Jalan Machap, Sri Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1971 |
| AG35 | ஸ்ரீ வைத்தீஸ்வரர் தையல் நாயகி அம்மன் ஆலயம் | Jalan Keretapi, Pulau Sebang, 73000 Melaka. (Pengambilan tanah dlm.proses) | 1916 |
| AG36 | ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Gadek, 78000 Alor Gajah, Melaka. | 1913 |
| AG37 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Tebolang (d/a 118, Jln 5, Tmn Sri Chahaya, 76460 Tebong), Melaka. | 1920 |
| AG38 | ஸ்ரீ மூகாம்பிகை ஆலயம் | Jalan Kampung Pahla, Alam, Simpang Ampat, 78000 Alor Gajah, Melaka.<br>(asal: Ladang Pegoh, Home Division) | 1910<br>(2008) |
| AG39 | அருள்மிகு மகா கரு மாரியம்மன் தேவஸ்தானம் | No. RM 109, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1918 |
| AG40 | ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம் | Kampung Baru Vinayagar Lot 1530, Jalan Vinayagar, Batu 17, Ganun, 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG41 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | No.24, Ladang Kemuning, Bhg. Rembia, Rembia 78000 Alor Gajah, Melaka. | 1920 |
| AG42 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Ayer Paabas, Lendu 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG43 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Jalan Ayer Paabas, Lendu 78000 Alor Gajah, Melaka. | 2010 |

| AG44 | ஸ்ரீ வடபத்ர காளியம்மன் ஆலயம் | Jalan Batu Belaga, Rembia, 78000 Alor Gajah, Melaka. | 1960 |
|---|---|---|---|
| AG45 | தேவி ஸ்ரீ மகா அசா மலை முனியப்பன் ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் | Ladang Vinayagar PD64, Jalan 5, Taman Bukit Nangka, Sebang, 78000 Alor Gajah, Melaka. | 1969 |
| AG46 | ஸ்ரீ மகா வீர காளியம்மன் ஆலயம் | MC414, Taman Mawar Jaya, Machap Umboo,78000 Alor Gajah, Melaka. | 2001 |
| AG47 | ஓம் ஸ்ரீ சடைமுடி ஆலயம் | No.65, Rumah Awam Sri Lendu, Lendu, 78000 Alor Gajah, Melaka. | 1997 |
| AG48 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Kampung Bukit, Pulau Sebang, 78000 Alor Gajah, Melaka. (asal: Ladang Peguh) | 1945 (1996) |
| AG49 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Kempas, Bhg. Bukit Bachang, Lubuk China, 78300 Masjid Tanah, Melaka. | 1940 |
| AG50 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Lendu San, Lendu, 78000 Alor Gajah, Melaka. | 1940 |
| AG51 | ஸ்ரீ மகா காளியம்மன் ஆலயம் | Kampung Air Molek, 78200 Kuala Sungai Baru, Melaka. (Ladang Kuala Sungei Baru) | 1910 |
| AG52 | ஸ்ரீ முனீஸ்வரர் ஆலயம் | 389, Jalan Keretapi Lama, Kampung Pengkalan 78000 Alor Gajah, Melaka. | 2000 |
| AG53 | ஸ்ரீ சப்த கன்னி அம்மன் ஆலயம் | Lendu Estate, Jelawai, 78000 Alor Gajah, Melaka. | 1920 |
| AG54 | ஸ்ரீ கருப்புசாமி ஆலயம் (சங்கிலிக்கருப்பன்) | Ladang Lendu, Jelawai, 78000 Alor Gajah, Melaka. | 2003 |
| AG55 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Ladang Nam Bee Co. Sdn. Berhad, 76460 Tebong, Melaka. (Nama Lama: Ladang Batu Berkarat) | 1957 |
| AG56 | ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம் | Jalan Keretapi Lama, Pengkalan, 78000 Alor Gajah, Melaka. | 1931 |

| AG1 | ஸ்ரீ சுப்ரமணியர் கோயில் |
| --- | --- |
| | *Ladang Bertam, 76100 Durian Tunggal, Melaka.* |




1950-ஆம் ஆண்டுக்குப் பிறகு, பெர்த்தாம் தோட்டத்தின் தொழிலாளர்கள் ஸ்ரீ சுப்ரமணியரை மூலத்தெய்வமாக்கொண்டு இந்த ஆலயத்தைக் கட்டியிருக்கிறார்கள். இது வழக்கத்துக்கு மாறான ஒன்றாக இருப்பதற்குக் காரணம் பல ஆண்டுகளாக இந்தத் தோட்டம் செயல்படுவதாலும் மற்றத் தோட்டங்களில் பெரும்பாலும் காவல் தெய்வங்களையே மூலத் தெய்வங்களாகத் தேர்ந்தெடுக்கப்படும் வழக்கத்திற்கு இவர்கள் கட்டுப்படவில்லை என்பதைக் காட்டுகிறது. 1936-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட பெர்த்தாம் தோட்ட பாரிட் மெலானா பிரிவில் (AG25) ஏற்கனவே ஸ்ரீ சுப்பிரமணியரை மூலத் தெய்வமாகக் கொண்டு கோயில் அமைக்கப்பட்டிருந்தது.

தோட்டத்தின் தற்போதைய உரிமை கத்ரி குழுமத்திடம் இருந்து ஐ.ஓ.ஐ. குழுமத்திற்கு மாறி உள்ளது. மலாக்கா மாநில அரசின் உதவியுடன் இந்தத் தோட்டத்தில் உள்ள கோயிலுக்கு நிலத்தைக் கையகப்படுத்தக் கோயிலின் நிர்வாகக் குழு செயல்பட்டு வருகிறது. நிலம் கிடைத்தவுடன் கோயிலுக்கான மற்ற மேம்பாட்டுத் திட்டங்களைச் செயல்படுத்த இந்த நிர்வாகக் குழு திட்டமிட்டுள்ளது.

அருகாமையில் உள்ள வீடமைப்புக் குடியிருப்புகளில் வாழ்ந்து வரும் இந்துக்கள் இக்கோயிலை அடிக்கடி பயன்படுத்துகின்றனர். ஒவ்வொரு நாளும் மாலை வேளையில் பூஜை நடைபெற்று வருகிறது. முக்கிய இந்துப் பண்டிகை நாட்களின் போது இங்கு சிறப்புப் பூஜைகள் நடைபெறும்.

ஒவ்வோர் ஆண்டும் ஏப்ரல்/மே மாதங்களில் தொடர்ச்சியாக உபய நாட்களையும் சேர்த்து 11 நாட்கள் சித்ரா பவுர்ணமி அன்று திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. இதுபோன்ற பல கோயில்களைப் போன்று, திருவிழாவன்று இங்கு வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் ஒன்றுக் கூடுகிறார்கள். கடைசியாக 2014-ஆம் ஆண்டு நடந்த கும்பாபிஷேகத்தோடு இதுவரை இரண்டு முறை கும்பாபிஷேகங்கள் நடந்துள்ளன.

இக்கோயிலின் நிர்வாகம், மலேசிய சங்கப் பதிவகத்தில், பக்தர்கள் சங்கமாக 2011-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.





| AG2 | ஸ்ரீ அஷ்ட தச புஜ காளியம்மன் கோயில் |
|---|---|
| | ***No. 10187, Jalan Ayer Semubuk 2, 76100 Durian Tunggal, Melaka.*** |



இந்தக் கோயில் சுவாமிஜி ஸ்ரீ சண்முகநாதன் நடராஜா அவர்களால் 1998-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. இது ஆரம்பத்தில் அவருடைய வீட்டின் அருகில் அமைக்கப்பட்டிருந்தது. பிறகு, தற்போதுள்ள பிரத்தியேக இடத்திற்கு மாற்றப்பட்டது. தன்னுடைய சொந்த நிலத்தை அன்பளிப்பாக இந்தக் கோயிலுக்குக் கொடுத்துள்ளார் கோயிலின் ஸ்தாபகர். இந்த ஆய்வு நடந்த சமயம், இந்தக் கோயிலின் கட்டமைப்பு, முழு இந்து ஆகம முறைப்படி, இந்த வட்டாரத்திலேயே மிகப் பெரியதும், சகல நவீன வசதிகளையும் கொண்ட, சிறப்பான சிற்ப வேலைப்பாடுகளுடனும், உயரியக் கோபுரத்துடனும், கூடியதுமான அமைப்பை உள்ளடக்கி, வரும் 2024-ஆம் ஆண்டு திறப்பு விழாக் காணும் நாளை நோக்கிச் சீரான வளர்ச்சியைக் கண்டுவருவதைக் கண்டோம்.

இந்தக் கோயிலுக்கு மலேசியாவிற்கு உள்ளேயும் வெளியேயும் ஏராளமான பக்தர்கள் உள்ளனர். மேலும், பக்தர்கள் கோயிலுக்கு வருகை தரும்போது அங்கு நடைபெறும் வழிபாடுகளில் கலந்து கொள்வது மட்டுமின்றி வேறு பல சேவைகளைப் பெறுவதோடு, கோயிலின் பல்வேறு நடவடிக்கைகளிலும் பங்கெடுத்துக் கொள்கின்றனர். தொலை தூரம் மற்றும், அருகிலுள்ள பக்தர்கள் பெரும்பாலும் அடிக்கடி இந்தக் கோயிலுக்கு வருவதால் தினசரி பூஜை ஒரு நாளைக்கு மூன்று முறை நடைபெறுகின்றது.

கோயிலின் சிறப்பு, நம்பிக்கையோடு வரும் பக்தர்களுக்கு அதன் தலைவர் அருள்வாக்குக் கொடுப்பதாகும். அதோடு, அமாவாசை பூஜை, பௌர்ணமி பூஜை மற்றும், ஒவ்வோர் ஆண்டும் கடைசி வாரத்தில் நடைபெறும் பிரத்யங்கிரா தேவி யாகம் போன்றவை மிகவும் சிறப்பாக நடைபெறும். சுருக்கமாகச் சொன்னால், ஆண்டு முழுவதும் பக்தர்களுக்காகப் பல நடவடிக்கைகளை இந்தக் கோயில் செய்து வருகிறது. இந்தக் கோயிலின் நிறுவனர் சுவாமிஜி ஸ்ரீ சண்முகநாதன் நடராஜா அவர்களின் உடம்பில் அம்மன் இறங்கி அவரைக் காண வருவோருக்கு வாழ்க்கை செம்மையுற ஆலோசனைகளையும் வழிகாட்டுதலையும் தருவார். அதனால், பக்தர்கள் அவரை ‘அம்மா’ என்றே அழைக்கின்றனர். அரசியல், வணிகம், திரையுலகம், உயர் நிர்வாகம் எனப் பல துறைப் பிரமுகர்களும் பிற இடங்களிலிருந்து இவரைக் கண்டு ஆலோசனைப் பெறத் தொடர்ந்து வருகை தருகின்றனர்.

ஆரம்பம் முதல் ஒவ்வொரு வருடமும் ஜூலை மற்றும், ஆகஸ்ட் மாதங்களில் 48 நாட்கள் சிறப்புப் பூஜைகளுடன் ஆடித் திருவிழா கோயிலில் நடைபெற்று வருகிறது. கோயிலின் கும்பாபிஷேகம் 1999 இல் நடைபெற்றது. கோயிலில் நடைபெற்றுக்கொண்டிருக்கும் கட்டடத் திருப்பணிகள் முடிந்ததும் அடுத்த கும்பாபிஷேகம் நடைபெறும்.

கோயிலின் நடவடிக்கைகள் சீராக இயங்குவதை உறுதி செய்யப் போதுமான உதவியாளர்கள் இந்தக் கோயிலில் உள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கப் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2007 ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.





| AG3 | ஸ்ரீ சித்தி விநாயகர் ஸ்ரீ பால சுப்ரமணியர் ஆலய பரிபாலன சபை |
|---|---|
| | *Pengkalan, 78000 Alor Gajah, Melaka.* |



இந்தக் கோயில் 1934-ஆம் ஆண்டு ஸ்தாபகர் அமரர் ராஜு, மற்றும், அவரின் நண்பர்களால் நிறுவப்பட்டது. தொடக்கத்தில், தகரக் கூரையும், பலகையும், சிமெண்ட்டும் கொண்டு கட்டப்பட்டது. 1946-ஆம் ஆண்டில், திரு ராஜு, வட்டார அன்பர்களுடன் இணைந்து கூட்டம்போட்டு கோயிலுக்கு ஒரு நிர்வாகக் குழுவை ஏற்படுத்தினார். அதன்பிறகு, கோயில் தலைவர்களாக மறைந்த திரு. டி.வி.துரைசாமி ஐயர், மறைந்த திரு இலட்சுமணன் செட்டியார், மறைந்த திரு நம்பியார் போன்றவர்கள் தலைமையேற்று 1962-ஆம் ஆண்டுவரை கோயில் நிர்வாகத்தை நடத்தினர். 1951-ஆம் ஆண்டு கோயில் நிர்வாகம் அருகிலுள்ள நதியோரத்தில் ஒரு படிக்கட்டையும் மேடையையும் நிறுவியது. மற்ற வசதிகளையும் 1960-ஆம் ஆண்டுகளில் ஏற்படுத்தினர்.

தொடக்கத்தில் இந்தக் கோயிலில் பங்குனி உத்திரத் திருவிழா, ரத ஊர்வலத்துடன் நடைபெற்று வந்தது. அத்தருணத்தில் மலாக்கா மாநில முதலமைச்சராக இருந்த மாண்புமிகு டத்தோ ஸ்ரீ ஹாஜி தாலிப் பின் காரிம் இந்தக் கோயிலுக்கான நிலப் பட்டாவை வழங்கி உதவினார். அதன்பிறகு கோயிலின் வளர்ச்சி பல சமய நிகழ்ச்சிகளுடன் உத்வேகம் பெறத் தொடங்கியது. 1987-ஆம் ஆண்டு, கோயிலுக்கான புதிய கட்டடம், புதிய முகப்பு வளைவுடன் கட்டி முடிக்க, மறைந்த முன்னாள் மாநிலச் சட்டசபை உறுப்பினர், மாண்புமிகு டத்தோ அருணாசலம் தலைமையிலான குழு செயல்பட்டது.

1992-ஆம் ஆண்டிற்குப் பிறகு, இந்தக் கோயிலின் முதன்மைத் திருவிழாவாக ‘விநாயகர் சதுர்த்தி, ஆண்டுதோறும் பத்து நாட்கள் தொடர்ச்சியாக நடைபெற்று வருகிறது. 2013-ஆம் ஆண்டு ஒரு பல நோக்கு மண்டபம் கட்டப்பட்டது. வட்டார பக்தர்களின் ஆதரவுடன் பல்வேறு வசதிகளை கோயில் நிர்வாகம் ஏற்படுத்தியது.

இந்துச் சமய அட்டவணையில் காணப்படும் பல பண்டிகைகளையும், சிறப்புத் தினங்களையும் இந்தக் கோயில் கடைப்பிடிக்கிறது. இந்தக் கோயிலில் இதுவரை நான்கு தடவைகள் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளன - ஆகக் கடைசியாக 2019-ஆம் ஆண்டில். இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் நிர்வாகச் சங்கமாக 1980-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.

இந்தக் கோயில் பக்தர்கள், இங்கு வீற்றிருக்கும் தெய்வங்களின் சக்தி மீது பெரு நம்பிக்கை வைத்துள்ளனர். இங்கு மகா அபிசேகம் நடைபெறும்பொழுது மழை பெய்யும். அம்மை தொற்று





பீடித்தவர்களுக்கு, இந்தக் கோயிலில் வேப்பிலை, விபூதி, தீர்த்தம் எடுத்து சென்று பயன்படுத்தி, நிவர்த்திப் பெறுவது பல காலமாக இந்துச் சமயத்திற்கு வெளியிலுள்ளவர்களுக்கும் பழக்கமாக இருந்துவருகிறது. நதிக்கரையின் ஓரம் ஒரு புறம், பொதுச் சாலை மறுபுறம் என்று அருமையாக இந்தக் கோயில் அமைந்துள்ளது.

| AG 4 | ஸ்ரீ மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Sing Lian, Batu 11, Jalan Ayer Resam, 76100 Durian Tunggal, Melaka.* |



ஒரு சமயப்பற்றாளரான திரு என். பாலகிருஷ்ணன் என்பவரால் இந்த சிங் லியான் தோட்டத்தில் 1960-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது இந்தக் கோயில். பின்னர், படிப்படியாகப் பக்தர்களின் எண்ணிக்கை பெருகி இன்றைய அளவுக்குப் பெரிதாக மாறி இருக்கின்றது.

இந்தத் தோட்டம் முன்பு பிரிட்டிஷாரின் வசம் இருக்கும் பொழுது காரிங் தோட்டம் என வழங்கப்பட்டது. பின்னர், சீனர் வசம் மாறியப் பிறகு சிங் லியான் தோட்டம் எனப் பெயர் பெற்றது. இப்பொழுது இந்த நிலம் சைன்டெக்ஸ் நிறுவனத்திற்கு மாறி இந்த இடத்தில் வீட்டுமனைக் கட்டும் திட்டம் நிறைவேறிக் கொண்டிருக்கிறது. கோயில் நிர்வாகம் இந்த நிறுவனத்துடன் பேச்சுவார்த்தை நடத்தி நிலத்தைக் கோயிலிடம் ஒப்படைக்கக் கேட்டுக் கொண்டிருக்கிறது. தற்பொழுது கோயில் இருக்கும் இடத்திலேயே நிலத்தை ஒதுக்கிக் கொடுக்க நில உரிமையாளர் சம்மதித்து விட்டதாக இந்த ஆய்வு சமயத்தில் தெரிவிக்கப்பட்டது.

அருகில் உள்ள குடியிருப்புப் பகுதியில் வாழும் இந்துக்கள் இந்தக் கோயிலுக்கு வழிபாடு செய்ய வருகின்றனர். அதோடு மட்டுமல்லாமல், கட்டப்படவிருக்கும் புதிய வீடமைப்புத் திட்டத்தில் குடியேறவிருக்கும் இந்துக்களுக்கும் இது ஒரு முக்கிய வழிபாட்டுத்தலமாக அமையும் என்பது திண்ணம்.

ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மாதத்தில் (நவம்பர்/ டிசம்பர்) பத்து நாட்களுக்கு மாரியம்மன் திருவிழா வெகு விமரிசையாக் கொண்டாடப்படுகிறது. ஏற்கனவே இங்கு வாழ்ந்த மக்கள் இந்தத் திருவிழாவிற்கு வெளியே இருந்து வருகை தருகின்றனர். இந்தக் கோயிலில் கடைசியாக 2007-ஆம் ஆண்டில் நடைபெற்ற கும்பாபிஷேகத்தோடு சேர்த்து இரண்டு முறை கும்பாபிஷேகங்கள் நடைபெற்றுள்ளன. கோயிலுக்கு நிலம் கிடைத்தப் பிறகு அடுத்தக் கும்பாபிஷேகத்தை நடத்தலாம் என கோயில் நிர்வாகம் முடிவு செய்துள்ளது.







சாலையோரத்தில் இக்கோயில் அமைந்திருப்பது மிகவும் சிறப்பானதாகும். அதே வேளையில் இந்த ஆலயத்தை இங்கேயே நிரந்தரமாகத்தக்க வைக்க கோயில் நிர்வாகம் எல்லாவித முயற்சிகளையும் மேற்கொண்டு வருவதும் நல்லது. இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கப் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2000 ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.

| AG5 | ஸ்ரீ வீர பத்ர காளி கோயில் (ஸ்ரீ மகா துர்கேஸ்வரர்) |
| --- | --- |
| | *14,Taman Sri Bukit Tambun, Jalan Machap Umboo, 76100 Durian Tunggal, Melaka.* |

வீட்டின் அருகில் அமைக்கப்பட்ட இந்தக் கோயிலின் உரிமையாளர் திரு அரசு ஆவார். 1994-ஆம் ஆண்டு சிறிய அளவில் கட்டப்பட்ட இக்கோயில், இன்று பெரிதாக விரிவுப் படுத்தப்பட்டுள்ளது. குலத் தெய்வ வழிபாட்டிற்காக அமைக்கப்பட்ட இக்கோயிலின் நிர்வாகம் முழுக்க முழுக்கக் குடும்ப உறுப்பினர்கள் மற்றும், நண்பர்களை நிர்வாகிகளாகக் கொண்டதாகும்.



கோயிலின் உரிமையாளரே கோயிலின் தலைவரும் ஆவார். மற்றும், அவரது குடும்ப உறுப்பினர்கள் தினமும் பூஜைகளையும் நடத்திக் கொண்டிருக்கின்றனர். சிறப்புப் பண்டிகை நாட்களில் மட்டும் நண்பர்களை அழைப்பது உண்டு. கோயிலில் தலைவர் குறிப்பிட்டத் தினங்களில் இங்கு வழிபட வருவோருக்கும் மற்றும், தெய்வத்தின் உதவியை நாடி வருவோர்க்கும் அருள்வாக்குக் கூறுகின்றார்.

2002-ஆம் ஆண்டிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் ஆடி மாதத்தில், அதாவது, ஆகஸ்ட் மாதம் கடைசி ஞாயிற்றுக்கிழமை அன்று வீர பத்ர காளியின் பெயரில் திருவிழா ஐந்து நாட்களுக்கு நடைபெறுகிறது. இத்திருவிழாவில் கலந்து கொள்ள அருகில் மற்றும், வெளியே வசிக்கும் இந்துப் பெருமக்களுக்கு அழைப்பு கொடுக்கப்படுகின்றது. கோயிலின் கும்பாபிஷேகம் 2008-ஆம் ஆண்டு நடைபெற்றது. அடுத்த கும்பாபிஷேகம் 2021-ஆம் ஆண்டு நடைபெறவுள்ளது.

சங்கப் பதிவு அதிகாரியிடம் ஸ்ரீ மஹா துர்கேஸ்வரர் பக்தர்கள் எனும் பெயரில் 2014-ஆம் ஆண்டிலிருந்து பதிவுபெற்றக் கோயிலின் நிர்வாகக்குழுவினர் இந்தக் கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அதோடு, அசைவ உணவை மூலத்தெய்வத்திற்குப் படைக்கின்றனர்.

| AG6 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Kemuning, Bahagian Kru, Gadek, 78000 Alor Gajah, Melaka.*** |



“கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்” என்பதை உலக நீதியாய்க் கொண்டது தமிழ்ப் பெருங்குடி. அத்தமிழ்க் குடி இத்தோட்டத்தில் வேலையில் அமர்த்தப்பட்டப்போது, அங்கே அன்னையின் ஆலயத்தை அமைத்து, அவளைத் தொழுது, அருள் பெற்றனர். இத்திருக்கோயில் 1926-ஆம் ஆண்டில் நிறுவப்பட்டிருக்கலாம் என்பது கணிப்பு.

இக்கோயிலின் வரலாறு 1950-ஆம் ஆண்டுகளுக்குப் பிறகே தோட்டப்பாட்டாளி மக்களின் செய்திகளின் வழி நன்கு அறிய முடிகிறது. அப்போது, அமரர் திரு. சிதம்பரம் மண்டோர் கோயில் நிர்வாகத்திற்குத் தலைமை ஏற்றிருந்தார். கோயில் கட்டட அமைப்போ பலகையினால், விக்கிரகமோ சிமெண்டினால். ஆகம விதிகளை அறிந்தபின், அமரர் திரு.வீரப்பன் மற்றும், அமரர் திரு.சுப்பையாவும் கைக்கோர்த்து பெருமுயற்சி எடுத்து, கருங்கல் விக்கிரகத்தைத் தமிழ்நாட்டிலிருந்து வரவழைத்து இத்திருக்கோயிலில் பிரதிஸ்டை செய்தனர். அப்போது பிரதிஸ்டை செய்யப்பட்ட தேவி மாரியம்மன், விநாயகர், மற்றும், முருகப்பெருமானின் விக்ரங்களே இன்றுவரை பக்தர்கள் பூஜித்து வருகின்றனர். அதோடு, ஆஞ்சநேயர் மற்றும், முனீஸ்வரரின் சிலையும் இங்கே பூஜைக்கு வைத்து வழிபடுகிறார்கள். அமரர்கள் திரு.அந்தோணி, திரு. சற்குணம், திரு.கந்தசாமி, திரு.மணியம் கங்காணி, திரு.சாமி கங்காணி, திரு. மாமுண்டி கங்காணி போன்ற பெருமக்கள் இத்திருக்கோயிலுக்குத் தலைவர்களாக இருந்து சேவைச் செய்துள்ளார்கள்.



1960-ஆம் ஆண்டு ஆரம்பத்தில், இத்திருக்கோயிலில் திருவிழாவன்று தீமிதி வைபவம் நடைபெற்றது. திருமதி மாரிமுத்து என்பவரின் எண்ணத்தால் எழுந்த இவ்வைபவம், இவ்வட்டாரத்திலேயே முதன் முதலாக இக்கோயிலில் தான் நடைபெற்றது. இத்திருக்கோயிலின் திருவிழா ஆண்டுதோறும் ஆகஸ்ட் திங்களில் விமரிசையாக நடைபெற்று





வருகிறது. கடந்த 1994 மற்றும், 2014 ஆம் ஆண்டுகளில் இத்திருக்கோயிலில் மஹா கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்று முடிந்தது.

2000-ஆம் ஆண்டுகளில் ரப்பருக்குப் பதிலாகச் செம்பனை இத்தோட்டத்தில் பயிரிடப்பட்டதால் அதிகமான பாட்டாளிகள் வேலையை இழக்க நேரிட்டது. இதனால், காடேக் சிறுபட்டணத்திற்கு அருகில் கட்டப்பட்ட வீட்டுமனைத் திட்டத்தில் வீடு வாங்கி, அவர்கள் அங்கே குடிபெயர்ந்தனர். இருப்பினும், அவர்கள் இத்தோட்டக் கோயிலின் மீது வைத்துள்ள "பாசம்" வார்த்தையால் வர்ணிக்க இயலாது. கோயிலின் எல்லா சமய நிகழ்வுகளிலும் அவர்களின் பங்களிப்பு அபரிதமானது. இக்கோயிலில் பௌர்ணமி பூஜையும் சதுர்த்திப் பூஜையும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

27-10-2012-ஆம் நாளில் பூமி பூஜையோடு கோயிலின் திருப்பணி ஆரம்பமாகி புதியக் கோயில் கட்டடத்தைப் பெற்றது இத்திருக்கோயில். 4-7-2014-ஆம் நாள் மஹா கும்பாபிஷேகம் இக்கோயிலில் மிகவும் கோலாகலமாக நடைபெற்று முடிந்தது.

திரு.நாராயணன் செட்டி பெருமாள் தலைமையின் கீழ் இயங்கும் திருக்கோயில் நிர்வாகம், முக்கால் ஏக்கர் நிலப்பரப்பில் இயங்கிவரும் கோயில் நிலத்தைத் தோட்ட உரிமையாளர் சைம் டார்பி பெர்ஹாட் நிறுவனத்திடமிருந்து வாங்க எத்தணித்துள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கப் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாக 2013-ஆம் ஆண்டிலிருந்து பதிவாகியுள்ளது.

| AG7 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Batu 18½ , Simpang Gadek, 78000 Alor Gajah, Melaka.* |



ஆயர் பனாஸ் தோட்டத்தில் உள்ள இந்தக் கோயில் 1911-ஆம் ஆண்டு திரு. சின்னையா மண்டோர் அவர்களின் முயற்சியால் தொடங்கப்பட்டது. இந்தக் கோயில் மூன்று முறை அதே தோட்டத்தில் இடம்பெயர்ந்து உள்ளது. இந்தத் தோட்டம் இப்போது சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமாக உள்ளது. இந்த ஆய்வின் போது கோயில் நிர்வாகம் நில உரிமையாளர்கள் மற்றும், மாநில அரசின் ஒத்துழைப்புடன் கோயில் நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். தற்போது அந்தக் கோயிலின் புதிய கட்டிடத்திற்கான திருப்பணிகள் நடந்து வருகிறது.

இன்று பெரும்பாலான பக்தர்கள் தோட்டத்திற்கு வெளியே உள்ள







குடியிருப்புப் பகுதியில் வாழ்கின்றனர். இருப்பினும், வழிபாட்டிற்காகக் கோயிலுக்குத் தொடர்ந்து வருகிறார்கள். ஒவ்வோர் ஆண்டிலும் மார்ச் மாதத்தில் மாரியம்மன் திருவிழா விமரிசையாக நடைபெற்று வருகின்றது. இந்தத் திருவிழாவின் முக்கிய ஈர்ப்பாக விளங்குவது தீமிதி நிகழ்ச்சி ஆகும். கடந்த காலத்தில் இங்கு வாழ்ந்த தொழிலாளர்கள் மற்றும் அவர்களது குடும்ப உறுப்பினர்கள் வாரிசுகள், உறவினர்கள் போன்றோர் 11 நாட்கள் நடைபெறும் திருவிழா நிகழ்ச்சிகளில் கலந்து சிறப்பிக்கிறார்கள். இங்கு உறையும் மகா மாரியம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று இங்கு வந்து வழிபடும் பக்தர்கள் நம்புகின்றனர். அதனால், ஒவ்வொரு வருடமும் எங்கிருந்தாலும் இவர்கள் இந்தத் திருவிழாவிற்கு வந்து சேர்ந்து விடுகின்றனர்.

கும்பாபிஷேகம் 2007-ஆம் ஆண்டில் நடந்தது உட்பட, இதுவரை இரண்டு முறை நடைபெற்றுள்ளன. புதியக் கட்டடத்தின் திருப்பணிகள் முடிந்தவுடன் அடுத்தக் கும்பாபிஷேகம் நடைபெறும். கோயிலின் நிர்வாகம் 2013-ஆம் ஆண்டில் மலேசிய சங்கப் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது.

| AG8 | ஸ்ரீ மகா பத்ர காளியம்மன் கோயில் |
|---|---|
| | ***PT638, Lorong Bilal Arshad, Jalan Keretapi Lama, Kampung Gangsa, 76100 Durian Tunggal, Melaka.*** |



கோயில் தலைவரின் தகப்பனார் திரு சுப்பையா மாயாண்டி அவர்களால் குலத்தெய்வ வழிபாட்டிற்காக இந்தக் கோயில் வீட்டிற்கு அருகில் உருவாக்கப்பட்டுள்ளது. இதற்கு முன்னர் வேறு ஓர் இடத்தில் அமைந்திருந்த இந்தக் கோயில், 2006-ஆம் ஆண்டு வழிபாடு செய்வதற்கு ஏதுவாக இருக்கும் பொருட்டு தற்போது இருக்கும் இடத்திற்கு மாற்றப்பட்டது.



இவரது இந்தக் கோயிலின் சேவையை நாடி வருவோருக்கும் வழிபட வருவோருக்கும் கோயிலின் தலைவர் அருள்வாக்குக் கூறுகிறார். இக்கோயிலில் இருக்கும் காளியம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவர் எனக் கருதப்படுகிறது. அதனால், அதிகமான பேர் இந்தக் கோயிலுக்கு அருள்வாக்குக் கேட்க வருகின்றனர். குடும்ப உறுப்பினர்கள் மற்றும், நண்பர்களைக் கொண்டு இந்தக் கோயில் நிர்வாகம் அமைக்கப்பட்டுள்ளது.

இந்தக் கோயிலில் காளியம்மன் திருவிழா ஆண்டுதோறும் ஜூலை மற்றும், டிசம்பர் 11-ஆம் தேதிகளில் சிறப்பு விருந்துடன் நடைபெறுகிறது. இந்தக் கோயிலில் விலங்குகள் உயிர்ப்பலி கொடுக்கப்படுகின்றன. அதோடு, அசைவ உணவும் தெய்வத்திற்குப் படைக்கப்படுகின்றது. மலேசிய சங்கப் பதிவகத்தில் இந்தக் கோயில் நிர்வாகம் ஆய்வு நடைபெற்றச் சமயம் பதிவாகவில்லை.

| AG9 | ஸ்ரீ சித்தி புத்தி விநாயகர் கோயில் |
|---|---|
| | ***Batu 21, Ladang Sungai Baru, 78300 Masjid Tanah, Melaka.*** |

இந்தச் சிறியக் கோயில் 1924-ஆம் ஆண்டுகளில் சுங்கை பாரு தோட்டத்தில் வேலை செய்து வந்த சமயத்தில், மறைந்த திரு சம்புலிங்கம் மண்டோர் அவர்களால் உருவாக்கப்பட்டது. இருப்பினும், சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமான இந்தத் தோட்டத்தில் இன்றும் கோயில் நீடிக்கிறது.

கோயில் தொடங்கப்பட்ட காலத்திலிருந்து இன்று வரை ஒவ்வோர் ஆண்டும் ஆகஸ்டு மாதத்தில் தொடர்ச்சியாக ஐந்து நாட்கள் சிறப்புப் பூஜைகளுடன் திருவிழா நடத்தப்படுகிறது. இக்கோயிலில் இருக்கும் பிள்ளையார் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று நம்புவதால் இன்று வேறு இடத்திற்கு மாற்றலாகிச் சென்ற, முன்பு இங்கு வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் மற்றும், உறவினர்கள் திருவிழா சமயத்தில் இந்த இடத்தைப் பூர்வீக இடமாகக் கருதி இங்கு வருகை தருகின்றனர்.

இந்தக் கோயிலில் 2016-ஆம் ஆண்டில் ஒரு முறை கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. இருப்பினும், இந்தக் கோயிலின் நிர்வாகம் மலேசிய சங்கப் பதிவகத்தில் இதுவரை பதிவு செய்யப் படவில்லை.



| AG10 | ஸ்ரீ ஆதி கோட்டை முனீஸ்வரர் கோயில் |
|---|---|
| | ***Batu 21, Ladang Sungai Baru, 78300 Masjid Tanah, Melaka.*** |



இந்தக் கோயிலும் 1950-ஆம் ஆண்டுகளில் சுங்கை பாரு தோட்டத்தில் தங்கி வேலை செய்து வந்த இந்துச் சமயத்தைச் சார்ந்த தொழிலாளர்களால் உருவாக்கப்பட்டது. இன்றும் இங்குத் தொடர்ந்து வழிபாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. நிலம் சைம் டார்பி நிறுவனத்துக்குச் சொந்தமானதாக இருப்பினும், கோயில் நிர்வாகம் தொடர்ந்து கோயிலைப் பராமரித்து வருகின்றனர்.

கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவு அதிகாரியிடம் பதிவு செய்ய முயற்சி செய்தது. ஆனால், நிலம் கோயிலுக்குச் சொந்தமாக இல்லாததால் பதிவு செய்ய இயலவில்லை.

கோயில் நிர்வாகம் 2016-ஆம் ஆண்டில் தோட்ட நிர்வாகத்தின் அனுமதியோடு கோயிலைப் பெரும் செலவில் புனரமைப்புச் செய்து உள்ளது. முன்பு இங்கு வாழ்ந்து கோயிலில் வழிபாடு செய்தவர்கள் தற்போது அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களில் குடியேறியுள்ளனர். இருப்பினும், தொடர்ந்து இந்தக் கோயிலுக்கு அடிக்கடி வருகை தருவதில் தவறுவதில்லை.

கோயில் தொடங்கிய நாளிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் ஜூலை மாதத்தில் தொடர்ச்சியாகப் பத்து நாட்களும் ஸ்ரீ ஆதி கோட்டை முனீஸ்வரர் பெயரில் திருவிழா வெகு விமரிசையாக நடத்தப்படுகிறது. இங்கு இதுவரை, 2016-ஆம் ஆண்டு உட்பட, நான்கு முறை கும்பாபிஷேகங்கள் நடந்துள்ளன. கோயில் நிர்வாகம் சைம் டார்பி குழுமத்திடம் இருந்து கோயில் நிலத்தைக் கையகப்படுத்தும் முயற்சியில் இறங்கியுள்ளது.

| AG11 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Jalan Lendu (Klemak), 78000 Alor Gajah, Melaka. (Dahulu Ladang Lendu)*** |

லெண்டு தோட்ட அனுமதியோடு இந்துச் சமயத்தைச் சேர்ந்த தோட்டத் தொழிலாளர்களால் இந்தக் கோயில் 1945-ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. இப்போது, இந்தத் தோட்டம் சி.சி.பி. உணவு விநியோக நிறுவனத்திற்குச் சொந்தமாக இருக்கிறது. இருப்பினும், இந்நிறுவனம் இந்தக் கோயிலுக்கு நிலத்தை ஒதுக்கியுள்ளது. தற்போது இந்த நிலத்தைக் கோயில் பெயரில் கையகப்படுத்தும் முயற்சியில் நிர்வாகக்குழு ஈடுபட்டு வருகிறது.

ஸ்ரீ மகா மாரியம்மன் பெயரில் ஆண்டுதோறும் பிப்ரவரி மாதத்தில் தொடர்ச்சியாக 10 நாட்கள் தீமிதி மற்றும், வழுக்கு மரம் ஏறுதல் போன்ற நிகழ்ச்சிகளுடன் வெகு விமரிசையாகத் திருவிழா நடைபெறுகிறது. இந்தக் கோயிலில் கும்பாபிஷேகம் இதுவரை நடைபெற்றது இல்லை. இருப்பினும், நிலம் கோயிலுக்கு உரியதான பிறகு அங்குப் புதிதாக கட்டடத் திருப்பணிகள் மற்றும், பிற வசதிகளை ஏற்பாடு செய்தப் பிறகு கும்பாபிஷேகத்தை நடத்த கோயில் நிர்வாகம் தீர்மானித்துள்ளது.







முன்பு இந்தத் தோட்டத்தில் வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள் மற்ற உறவினர்கள் சுற்று வட்டாரத்தில் வாழும் பக்தர்கள் வருடாந்திரத் திருவிழாவில் கலந்துகொண்டு வழிபாடு செய்வதுடன் நண்பர்களையும் உறவினர்களையும் சந்தித்து மகிழ்ச்சி அடைகின்றனர்.

கோயில் நிர்வாகம் 2014-ஆம் ஆண்டில் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவுப் பெற்றுள்ளது.

| AG12 | **ஸ்ரீ மகா மாரியம்மன் (நாகக்கன்னி) கோயில்** |
|---|---|
| | ***Ladang UMB, Ramuan China Besar, Paya Lebar, 78300 Masjid Tanah, Melaka.*** |

இங்கு வேலை செய்து வந்த இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்களால் நூறு ஆண்டுகளுக்கு முன்பு நாகக்கன்னி எனும் இந்தக் கோயிலை ஒரு சிறு கொட்டகையில் தொடங்கினர். இந்தத் தெய்வத்திற்கு மிகுந்த சக்தி இருப்பதாக அங்குள்ளவர்கள் நம்புகின்றனர். இந்தக் கோயிலுக்கு அருகில் உள்ள ஒரு கிணற்றில் இருந்து ஒரு விக்ரகம் கண்டுபிடிக்கப்பட்டதால், 1991-ஆம் ஆண்டில் திரு அய்யாசாமி குழந்தை என்பவர் ஸ்ரீ மகா மாரியம்மனுக்கு ஒரு கோயிலை ஏற்படுத்த முயன்றார். இருப்பினும், இந்தக் கோயிலில் முக்கிய வழிபாட்டுத் தெய்வமாக இன்றும் நாகக்கன்னி விளங்குகிறது.



தோட்டத்தின் நிலம் வேறு ஒரு உரிமையாளருக்கு மாறி இருந்தாலும், கோயிலின் நிலம் இன்னும் தோட்டத்திற்குச் சொந்தமாகவே இருக்கிறது. இன்று இங்கு கிட்டத்தட்ட யாரும் குடியிருக்காதச் சூழ்நிலையிலும் இந்தக் கோயிலுக்கு வழிபட வரும் எவரையும் இந்தத் தோட்ட நிர்வாகம் தடுப்பதில்லை. திரு அய்யாசாமியின் குடும்பத்தினர்கள் இந்தக் கோயிலை நிர்வகித்து வருகின்றனர். அருகில் வசிக்கக்கூடிய இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் இந்தக் கோயிலுக்கு வந்து தொடர்ந்து தங்கள் வழிபாடுகளை நடத்தி வருகின்றனர்.

இந்தக் கோயிலில் திருவிழா 1996-ஆம் ஆண்டிலிருந்து ஒவ்வொரு ஜூன் மாதத்திலும் தொடர்ச்சியாகப் பல பூஜைகளுடனும், நடவடிக்கைகளுடனும் ஒன்பது நாட்கள் நடைபெற்று வருகிறது. கடைசியாக 2017-ஆம் ஆண்டு நடைபெற்ற கும்பாபிஷேகத்தோடு சேர்த்து இதுவரை இந்தக் கோயிலில் மூன்று முறை கும்பாபிஷேகங்கள் நடந்துள்ளன. இங்கிருந்து புலம்பெயர்ந்தக் குடும்பங்கள் மற்றும், அவர்களது வாரிசுகள் இதைப் பூர்வீக இடமாகக் கருதி திருவிழாச் சமயங்களில் இங்கு ஒன்றுக் கூடுகின்றனர். எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவாகவில்லை.









## AG13 ஸ்ரீ மகா மாரியம்மன் தேவஸ்தானம்

***Ladang Sungai Baru, Home Division, 78300 Masjid Tanah, Melaka.***



சுங்கை பாரு தோட்டத்தில் 1930-ஆம் ஆண்டுகளில் இங்கு வேலை செய்தத் தொழிலாளர்கள், அவர்களின் இருப்பிடத்திற்குச் சற்றுத் தொலைவில் இந்தக் கோயிலை உருவாக்கினார்கள். குன்றின் மீது அமைந்திருந்த இந்தக் கோயில் சிறிதாக இருந்தது. 1967-ஆம் ஆண்டு திரு சின்னசாமி மண்டோர் அவர்களின் முயற்சியால் இந்தக் கோயில் தோட்ட நிர்வாகத்தின் சம்மதத்தோடு இன்று இருக்கும் இடத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. சாலையோரத்தில் அமைந்துள்ளதோடு சகல வசதிகளும் பெற்று இருப்பதால் இதைத் தேவஸ்தானம் என்றும் அழைக்கின்றனர்.

கோயிலின் நிலம் இன்னும் சைம் டார்பி தோட்ட நிர்வாகத்திற்குச் சொந்தமாய் இருப்பதால் அந்த இடத்தைக் கோயிலின் பெயரில் பெறுவதற்குக் கோயில் நிர்வாகம் முயற்சி செய்து வருகிறது.

இந்தக் கோயிலின் நிர்வாகக் குழு மலேசிய சங்கப் பதிவு அதிகாரியிடம் பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆனால், ஒவ்வோர் ஆண்டும் சங்க விதிகளின்படி அனுப்பி வைக்க வேண்டிய ஆண்டு அறிக்கைகளை அனுப்பாததால் இந்தப் பதிவு ரத்து ஆகியது. மீண்டும் இக்கோயிலின் நிர்வாகத்தைப் பதிவு செய்வதில், கோயில் தோட்ட நிலத்தில் இருப்பதால், சிரமத்தை எதிர்நோக்கி இருக்கின்றனர்.

மாரியம்மன் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் ஏப்ரல் / மே மாதங்களில் தொடர்ந்து பதின்மூன்று நாட்கள் விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இந்தக் கோயிலில் இதுவரை 4 முறை கும்பாபிஷேகங்கள், கடைசியாக 2012-ஆம் ஆண்டில் நடந்த கும்பாபிஷேகம் உட்பட, நடந்து உள்ளன. பெரும்பாலான இந்துக்கள் இந்தத் தோட்டத்தில் இன்று வசிப்பதில்லை என்றாலும் அருகில் உள்ள குடியிருப்புப் பகுதிகளில் வசித்து வரும் இந்துச் சமயத்தைச் சேர்ந்தவர்கள் இந்தக் கோயிலுக்கு வழிபாட்டுக்காக அடிக்கடி வருகிறார்கள்.







திருவிழாக்களின் போது முன்புவேலை செய்தவர்களும் அவர்களின் குடும்ப உறுப்பினர்களும் வாரிசுகளும் உறவினர்களும் இந்த இடத்தைத் தங்களது பூர்வீகமாக எண்ணி, இங்கு வருகை தருகின்றனர். அதோடு, நண்பர்களையும் உறவினர்களையும் சந்திக்கக்கூடிய வாய்ப்பாகவும் இதை எண்ணுகிறார்கள்.

## AG14 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Ladang Bukit Cempedak, Kuala Sungai Baru, 78300 Melaka.***

இந்தக் கோயில் 1920-ஆம் ஆண்டுகளில் இந்துச் சமயத்தைச் சேர்ந்த தோட்டத் தொழிலாளர்களால் தொடங்கப்பட்டது. முதலில் பலகை மற்றும், தகரத்தால் ஆன சிறிய கொட்டகையில் மாரியம்மன் தெய்வத்தை இங்கு வணங்கினார்கள். கோயிலில் வழிபடுபவர்களின் முயற்சியால் 1960-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் பெரிதாக்கப் பட்டது. அப்போதிருந்து 2017-ஆம் ஆண்டு வரை கோயிலின் கட்டடத்தில் பல மாற்றங்கள் ஏற்பட்டு விரிவாக்கப்பட்டுள்ளன. மலாக்கா புக்கிட் செம்படாக் தோட்டம் கெந்திங் நிறுவனத்திற்குச் சொந்தமானது. கோயிலுக்கு நிலத்தைப் பெறுவதற்கு எந்தவித முயற்சியும் தற்போது நடைபெறவில்லை.

முன்பு இங்கு வாழ்ந்த இந்துக் குடும்பங்கள் பெரும்பாலும் அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களில் குடியேறியுள்ளனர். இருந்தும், கோயிலுக்கு வந்து தங்களுடைய வழிபாடுகளை நடத்துவதில் தவறுவதில்லை. 2017-ஆம் ஆண்டு இக்கோயில் அதிகச் செலவில் புனரமைப்பு செய்யப்பட்டிருப்பதால் உள்ளூர் மக்களை அதிகமாகக் கவர்ந்துள்ளது.









ஒவ்வோர் ஆண்டும் தொடர்ச்சியாக நான்கு நாட்கள், ஜூலை ஆகஸ்ட் மாதங்களில், அதாவது, தமிழ் ஆடி மாதத்தில், பெருவிழா மாரியம்மனுக்கு நடத்தப்படுகின்றது. 2017-ஆம் ஆண்டில் கோயில் புனரமைக்கப்பட்டச் சமயத்தில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. இந்தத் தோட்டத்தில் முன்பு வேலை செய்தக் குடும்பங்கள் மற்றும், வாரிசுகள் உறவினர்கள் இந்த இடத்தைப் பூர்வீக இடமாகக் கருதி ஒவ்வோர் ஆண்டும் திருவிழாவில் கலந்துகொள்ள வருகின்றனர். இதனால், தங்களுடைய நண்பர்களையும் உறவினர்களையும் சந்திக்கும் வாய்ப்பு அவர்களுக்குக் கிடைக்கிறது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG15 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் |
|---|---|
| | *78300 Masjid Tanah, Melaka.* |

கோயில் நிர்வாகக் குழு சங்கப் பதிவு அதிகாரியிடம் 2012-ஆம் ஆண்டு பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. புதியக் கோயிலை உருவாக்கும் அவர்களின் முயற்சி இன்னும் ஈடேறவில்லை. இருப்பினும், கோயிலுக்கான பொருத்தமான புதிய நிலத்தைக் கையகப்படுத்தும் பணியில் தற்போது ஈடுபட்டுள்ளனர். 2050 சதுர மீட்டர் பரப்பளவுள்ள நிலம் Lot 1716 GM 154 கோயிலுக்காக முடிவுசெய்து, அதற்கான நிலப்பட்டாவைப் பெறும் முயற்சியில் நிர்வாகம் உள்ளது.

இந்தக் கோயிலுக்கான நிலப் பட்டாவைப் பெற அரசிற்குக் கட்டணத்தை 2022 ஆண்டு செலுத்திவிட்ட நிலையில், ஏறக்குறைய எட்டு இலட்சம் ரிங்கிட் செலவில் கோயில் கட்டடப் பணிகள் 2025-ஆம் ஆண்டுக்குள் நிறைவு பெறும் என எதிர்பார்க்கப்படுகிறது.

## AG16 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Ladang Genting Tebong (Tebong Estate), Tebong, 76460 Melaka.***



திபோங் தோட்டம், திபோங் பிரிவு என்று முன்பு அழைக்கப்பட்ட இந்தத் தோட்டம் கெந்திங் திபோங் தோட்டம் என அழைக்கப்படுகிறது. கெந்திங் தோட்டக் குழுமத்திற்கு இந்தத் தோட்டம் சொந்தமாகியுள்ளது. இந்த ரப்பர்த் தோட்டம் அமைக்கப்பட்டக் காலத்தில் வேலைக்குக் கொண்டுவரப்பட்டவர்கள் அதிகம் தமிழர்கள். அவர்களின் வழிபாட்டிற்காக, ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயிலை, அவர்களின் முதலாளியின் அனுமதியுடன், 1919-ஆம் ஆண்டு நிறுவியுள்ளனர்.

அந்தச் சமயத்தில். தோட்டத் தொழிலாளர்கள் முழுமையாக இந்துக்களாக இருந்தனர். சுதந்திரத்திற்குப் பிறகு 1980-ஆம் ஆண்டுகள் வரை ஏறத்தாழ ஐநூறு இந்துக்கள், தோட்டத் தொழிலாளர்களின் வீடுகளில் வசித்து, இந்தக் கோயிலைப் பயன்படுத்தி வந்துள்ளனர். ஆனால், இன்று இரண்டு தமிழ்க் குடும்பங்களே இத்தோட்டத்தில் வசிக்கின்றன. ரப்பருக்குப் பதில் செம்பனை பயிரிட்டுள்ளதால், அதிக வேலையாட்கள் தேவையில்லை என்பதாலும், குறைந்தச் செலவில் வெளிநாட்டுத் தொழிலாளர்கள் பணியில் அமர்ந்துள்ளனர். இங்கு வசித்த பல தமிழ்க் குடும்பங்கள் அருகிலுள்ள கேமெஞ்சே, ஸ்ரீ ஹிலிர், ஒன் லோக் புதுக் கிராமம், திபோங் வட்டாரம் போன்ற இடங்களிலுள்ள வீடமைப்புத் திட்டங்களுக்குப் புலம்பெயர்ந்துள்ளனர்.

புதியத் தோட்ட நிர்வாகம், தோட்டத்தில் பணிபுரியாதவர்கள் கோயில் நிர்வாகத்தில் பங்குப் பெறக்கூடாது என்று விதியைப் போட்டுள்ளது. எனினும், பக்தர்கள் கோயிலுக்கு வருகை தந்து வழிபடுவதையும், திருவிழாவில் கலந்துகொள்வதையும் நிர்வாகம் தடுப்பதில்லை. செப்டம்பர் மாதம் மூன்று நாட்களுக்கு நடைபெறும் திருவிழாவில் ஐநூறுக்கும் மேற்பட்ட பக்தர்கள் கலந்து சிறப்பிக்கின்றனர். இந்தத் தோட்டத்தில் வசித்தவர்களின் இன்றைய தலைமுறையினர் இன்றும் வருகை தந்து, திருவிழாவிற்கான செலவை ஈடுகட்ட பண உதவியும் கொடுத்து வருகின்றனர். திருவிழாவின் பொழுது ரத ஊர்வலம் அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களை உள்ளடக்கி நடைபெற்று வருகிறது.

எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுப் பெறவில்லை.



## AG17 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Ladang Kemuning, Home Division. 76460 Tebong, Melaka.***




மலாக்கா நகரிலிருந்து நாற்பது கிலோமீட்டருக்கு அப்பால், கோலா சுங்கா கிராமத்தின் அருகில், திபோங்கிலிருந்து மூன்று கிலோமீட்டர் தூரத்தில், 1939-ஆம் ஆண்டு நிறுவப்பட்ட இந்தக் கோயில் கெமுனிங் தோட்டத்தின் முதன்மை பிரிவில் உள்ளது. இந்தத் தோட்டம் தற்பொழுது சாயம் டார்பி குழுமத்தின் சொத்தாக உள்ளது. இந்தத் தோட்டம் முதன் முதலில் தோன்றிய காலக்கட்டத்தில் நிறைய தமிழ்-இந்து குடும்பங்கள் இங்குத் தொழிலாளர்களாகப் பணிபுரிந்த சமயம், தோட்ட முதலாளியின் அனுமதியுடன் இந்தக் கோயிலைத் தங்கள் வழிபாட்டிற்காக, தங்கள் தோட்ட இருப்பிடத்திற்கு அருகில் அமைத்துள்ளனர்.

1957-1969-ஆம் ஆண்டு காலக்கட்டத்தில் இத்தோட்ட அலுவலகத்தில் தலைமைக் கணக்காயராகப் பணிபுரிந்த அமரர் திரு சி. கே. பரமேஸ்வரம் நாயர் ஐயா இக்கோயில் வளர்ச்சிக்கு அதிகம் பாடுபட்ட தர்மசீலர். இவரின் பெரும் முயற்சியால் கோயில் புனரமைப்பு நடந்தது. கோயிலைச் சுற்றி கற்சுவரும் எழுப்பப்பட்டது. இக்கோயிலுக்குப் பிரதான சந்நிதியில் விநாயகர், மாரியம்மன், சுப்ரமணியர் மற்றும், இராமர்-சீதை பிராட்டியார், லெட்சுமணன், ஹனுமான் அருள்பாலிக்கின்றனர். முனியாண்டி, ஸ்ரீ முத்தப்பனுக்குத் தனித்தனியே சந்நிதிகள் உண்டு. அமரர்களான திரு கணாரன் மண்டோர் - திரு குஞ்சுராமன் குடும்பத்தினரால் தோட்ட எல்லையில், கோலாசுங்கா அருகில் வழிபடப்பட்ட ஸ்ரீ முத்தப்பனுக்குப் பின்பு கோயில் வளாகத்தில் சந்நிதானம் அமைக்கப்பட்டது. இவ்விடப் பெயர்ப்பிற்கு வித்திட்டவர் திரு சி.கே. பரமேஸ்வரம் நாயர் ஐயா. அமரர்கள் திரு குஞ்சுராமன்-ஹம்மு குடும்பத்தினர் 2014-ஆம் ஆண்டு ரிங். 60,000.00 செலவில் இச்சந்நிதியைப் புனரமைப்புச் செய்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 15-ஆம் நாள் முத்தப்பன் வெள்ளோட்டம் சிறப்பாக நடத்தப்பட்டுவருகிறது.

1980-ஆம் ஆண்டுகளுக்கு முன் இத்தோட்டத்தில் நிறைய தமிழர்கள் இருந்ததால், கோயில் மிகவும் முனைப்பாகச் சமய நடவடிக்கைகளைச் செய்து வந்துள்ளது. பல சமய நிகழ்ச்சிகளில், சமயப் பெரியார்களின் உரைகளைக் கேட்கும் வாய்ப்பையும் ஏற்படுத்தினர். எடுத்துக் காட்டாக தமிழ் நாட்டிலிருந்து வாரியார் சுவாமிகள், ஹரிதாஸ் சுவாமிகள் ஆகியோரை இந்தக் கோயில் நிர்வாகம் அழைத்து உரையாற்ற ஏற்பாடு செய்துள்ளது. உள்ளூர் சமயப் பெரியார்களும் இந்தக் கோயிலில் உரையாற்றியுள்ளனர். சமய வகுப்புகளை மாணவர்களுக்காகத் தொடர்ச்சியாக ஐம்பது ஆண்டுகளாக, நல்லாசிரியர்களைக் கொண்டு இந்தக் கோயில் நிர்வாகம் நடத்தி வருகிறது.



இந்தக் கோயிலில் மாரியம்மன் திருவிழா, ஆண்டுதோறும் மே மதம் இரண்டாவது வாரம் வெள்ளி, சனி,

ஞாயிறு ஆகிய கிழமைகளில் நடைபெறும். ஏறத்தாழ ஐநூறு பக்தர்கள் திரண்டு விழாவில் கலந்து சிறப்பிப்பார்கள். இந்தத் தோட்டத்தில் முன்பு பணிபுரிந்தவர்களின் குடும்பத்தினரும், அவர்களின் பிள்ளைகளும் திருவிழாவிற்காக, தங்கள் பழைய இருப்பிடக் கோயிலுக்கு வருகை தந்து வழிபடுவதோடு, பழைய நட்பையும் உறவையும் புதுப்பித்துக் கொள்கின்றனர். திருவிழாவிற்கான செலவையும் பகிர்ந்து கொள்கின்றனர். இந்தத் தோட்டத்திலிருந்து வெளியேறி பல குடும்பங்கள் அருகிலுள்ள தாமான் கெஜோரா, கோலா சுங்கா கிராமம், தாமான் பெக்கான் திபோங் ஆகிய குடியிருப்புப் பகுதிகளில் வாழ்கின்றனர்.

தோட்ட நிர்வாகம் கோயில் நடவடிக்கைகளுக்கு நல்ல ஆதரவைக் கொடுத்து வருகிறது. பழையத் தொழிலாளர்களின் இளைய தலைமுறையினர் தற்பொழுது கோயில் நிர்வாகத்தில் இடம் பெற்று, தோட்ட நிர்வாகத்தின் ஒத்துழைப்புடன், கோயில் நடவடிக்கைகளை நடத்துகின்றனர். எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG18 | **ஸ்ரீ மகா காளியம்மன் கோயில்** |
|---|---|
| | ***Ladang Renopinang (dahulu Ladang Leong Watt Hin), 76460 Tebong, Melaka*** |



பிரதான சாலை அருகில், திபோங் கிராமத்திலிருந்து மலாக்கா நோக்கிச் செல்லும் வழியில் ஒரு கிலோமீட்டருக்கப்பால் இந்தக் கோயில் அமைந்துள்ளது. இது அமைந்துள்ள தோட்டத்தின் பழைய பெயர் லியோங் வாட் ஹின் தோட்டமாகும். தற்பொழுது தோட்ட உரிமம் ரெனோபினாங் நிறுவனத்திற்குச் சொந்தமானது. லியோங் வாட் ஹின் ரப்பர் தோட்டத்தில் அதிக தமிழ்த் தொழிலாளர்கள் பணிபுரிந்த சமயம், தோட்ட உரிமையாளரின் அனுமதியுடன் இந்தக் கோயில், தங்களின் வழிபாட்டிற்காகக் காலஞ்சென்ற திருமதி பாப்பா மாரியாயி எனும் தொழிலாளரால் 1960-ஆம் ஆண்டுகளில் தொடங்கப்பட்டது. தொடக்கத்தில், பலகை, தகரம், சிமெண்ட் ஆகியவற்றைக் கொண்டு இந்தக் கோயில் தோட்டத்தின் உட்புறத்தில் அமைக்கப்பட்டது.

பழையக் கோயிலை, சாலை அருகில் இடம் மாற்றி, புதியக் கட்டடத்திற்கு மாற்றி, 2019ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் நடத்தியுள்ளனர். ரப்பர்த் தொழில் மாறி, செம்பனை மரங்களைக் கொண்ட தோட்டமாகவும், கோழிப் பண்ணையாகவும் மாறியதால், பெரும்பாலான தமிழர்கள் தற்பொழுது தோட்டத்திற்கு வெளியே வசிக்கின்றனர். தற்பொழுது, தோட்டக் குடியிருப்பில் அந்நியத் தொழிலாளர்களே பெரும்பாலும் வசிக்கின்றனர். இருப்பினும், திரு மோகன் குடும்பத்தினர் இந்தக் கோயிலைத் தொடர்ந்து, தோட்ட நிர்வாகத்தின் அனுமதியுடன், நிர்வகித்து வருகின்றனர். தோட்ட நிர்வாகம் கோயிலுக்கு வெளியிலிருந்து பக்தர்கள் வந்து வழிபடுவதற்கு ஆதரவு வழங்கிவருகின்றனர்.



ஆகஸ்ட் மாதம் மூன்று நாட்களுக்குத் தொடர்ச்சியாக நடைபெறும் இந்தக் கோயிலின் ஆண்டுத் திருவிழாவான காளியம்மன் திருவிழாவின் பொழுது ஆயிரம் பேர் வரை கூடுவார்கள். பல இடங்களில் குடியேறியுள்ள முன்னாள் தொழிலாளர்களின் குடும்பங்களும், அக்கம்பக்கத்திலுள்ள குடியிருப்புப் பகுதிகளிலுள்ள இந்துக்களும் இந்த விழாவில் குதூகலத்துடன் கலந்து கொள்கின்றனர். திருவிழாச் செலவை அனைவரும் ஏற்றுக்கொள்கின்றனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## AG19 ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயம்

***Ladang Hor Ng Lih Yuan (KVL Rembia), 78000 Alor Gajah, Melaka.***



சனாதனத் தர்மத்தின் பிரிவுகளில் ஒன்றான சாக்தம் மார்க்கத்தின் மூலவர் பராசக்தி, அன்னை மாரியம்மனாகத் திருவுருவம் கொண்டு காட்சி தரும் திருக்கோயில் இதுவாகும். மூலவரை தவிர்த்து, விநாயகர், முருகப்பெருமான், முனியாண்டி, காளியம்மன் மற்றும், டத்தோ முனியன் போன்ற, தெய்வங்களும் பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றார்கள். இத்திருக்கோயில், இத்தோட்டத்தில் கங்காணியாகப் பணிபுரிந்த அமரர் திரு.கிருஷ்ணன் சங்கரன் அவர்களின் பெரும் முயற்சியால் 1961-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டதாகும். இத்தோட்டத்தின் உரிமையாளர் குடும்பம், ஹொர் ங் லிம் யுவன், கோயில் திருப்பணிக்கு முழு ஆதரவு கொடுத்தது மட்டுமின்றி, இன்றுவரை ஆதரவுக் கரத்தை நீட்டி வருகிறார்கள்.

ஆரம்பத்தில் இத்திருக்கோயில் சிறிய அளவில் மரப்பலகையால் ஆன கட்டடமாக அமையப்பெற்றிருந்தது. 2008-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் கோயிலின் கூரை மாற்றப்பட்டது. தொடர்ந்து, 2014-ஆம் ஆண்டு மீண்டுமோர் புனரமைப்புச் செய்யப்பட்டு, கல்கட்டடம் எழுப்பப்பட்டது. கடந்த 24-5-2015-இல் இத்திருக்கோயிலில் மஹா கும்பாபிஷேகம் சிறப்பாக நடந்தேறியது. இக்கோயிலின் திருவிழா, வைகாசி திருவிழாவாகும். இவ்விழா மே மாதம் 1970-ஆம் ஆண்டுமுதல் நடத்தப்பட்டு வருகிறது.

தற்போது, இத்தோட்டத்தில் மிகவும் குறைவான தொழிலாளர்களே உள்ளனர். பணி ஓய்வு பெற்ற தொழிலாளர்கள் ரெம்பியா பட்டணத்தைச் சுற்றி அமைந்துள்ள வீட்டுமனைத் திட்டங்களில் வாழ்ந்து வந்தாலும், கோயில் திருவிழா போன்ற முக்கிய சமய நிகழ்வுகளில் பங்கு கொள்கின்றனர். மாதந்தோறும் கொண்டாடப்படும் பௌர்ணமி பூஜையில் சற்று அதிகமான பக்தர்கள் கலந்து கொண்டு சிறப்புச் செய்கின்றனர்.

இத்திருக்கோயிலின் முகப்பின் வலதுபுறம் டத்தோ முனியன் சந்நிதி அமைந்துள்ளது. இச்சந்நிதி 2017-ஆம் ஆண்டு கட்டப்பட்டது. அந்த ஆண்டு ஒரு நாள், சீன வம்சாவளி கங்காணி ஒருவருக்கு அருள் வந்து, இக்கோயிலின் வளாகத்தில் டத்தோ முனியன் புனித ஆவிக்கு சந்நிதி கட்டவேண்டும் என அருள்வாக்கு



கொடுத்தார். அதன்படியே, அவரின் நன்கொடையோடும் பொதுமக்களின் பண உதவியோடும் அச்சந்நிதி அமையப்பெற்றது. இத்திருக்கோயிலின் தற்காலத் தலைவர் திரு. குணசேகரன் நல்லையா, இக்கோயிலின் மீது தனி பாசம் கொண்டுள்ளவர். இக்கோயிலைக் கட்டியது அவரின் மாமனார், ஆகவே, அவரின் குடும்பமும் நெருங்கியச் சொந்தமும் இக்கோயிலின் மேம்பாட்டில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்கின்றனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG20 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Guthrie Rubber Sdn Berhad, 76460 Tebong, Melaka.* |

மலாக்கா நகரிலிருந்து ஏறத்தாழ நாற்பது கிலோமீட்டருக்கு அப்பால், கோலா சுங்கா கிராமத்திற்கு அருகில், அலோர் காஜா மாவட்டத்தில், Gurthrie Rubber Processing Sdn Berhad எனும் நிறுவனத்திற்குச் சொந்தமான நிலத்தில், ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்கு முன் நிறுவப்பட்டக் கோயில் இது.

தொடக்கத்தில் கட்டப்பட்டக் கோயில் சில தடவை புதுப்பிக்கப் பட்டுத் தொடர்ந்து அங்கேயே இருக்கின்றது. 2007, 2019-ஆம் ஆண்டுகளில் கும்பாபிஷேகம் நடந்திருக்கின்றது. ஆகஸ்ட் மாதம் மூன்று நாள் மாரியம்மன் திருவிழா நடைபெறுகிறது. இங்கு வாழ்பவர்களுடன், முன்பு இங்குப் பணிபுரிந்து, பின்னர் வேறு இடங்களுக்குப் புலம்பெயர்ந்து சென்றவர்களின் குடும்பங்களும் திருவிழாச் சமயம் வருகை தந்து சிறப்பிக்கின்றனர்.



தற்பொழுது கோயிலை நிர்வகிக்கும் செயற்குழு, கோயில் அருகில், வசிப்பவர்களை உள்ளடக்கியது. கோலா சுங்கா கிராமத்தில் வாழ்பவர்கள் - தமிழர்கள், சீனர்கள் - இந்தக் கோயிலுக்கு ஆதரவு நல்குகின்றனர். நிர்வாகம் ஏற்பாடு செய்யும் சமய-சமூக கோயில் நடவடிக்கைகளுக்கு நல்ல ஆதரவு கிடைக்கின்றது. கோயிலின் அருகிலுள்ள கெமுனிங் தோட்டத் தமிழ்ப் பள்ளி ஆசிரியர்களும், மாணவர்களும் இந்தக் கோயில் நடவடிக்கைகளில் - குறிப்பாகத் தேவாரம் வகுப்புகளிலும், பக்திப் பாடல், பஜன் நிகழ்ச்சிகளிலும் - ஈடுபாடுடன் கலந்து சிறப்பிக்கின்றனர்.

கோயில் நிர்வாகமும், பள்ளியின் நடவடிக்கைகளுக்கு ஆதரவு வழங்கிவந்துள்ளது. பள்ளிப் போட்டி விளையாட்டு நிகழ்ச்சிகளுக்காகவும், பெற்றோர்-ஆசிரியர் சங்க நிகழ்ச்சிகளுக்காகவும் கோயில் நிர்வாகம் உதவிசெய்கிறது. திரு.டி.சேகர், இந்தப் பள்ளியின் முன்னாள் மாணவர். இவர் தற்பொழுது கோயில் அருகில் வசிக்கின்றார்; கோயில் குருக்களாகப் பயிற்சி பெற்றுள்ளார். இந்தக் கோயிலுக்காகத் தன்னார்வ ரீதியில் தம் சேவையை அர்ப்பணித்து வருகிறார். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## AG21 தேவ ஸ்ரீ பால தண்டாயுதபாணி கோயில்

***Kuil Naning Lama, Kg Kemus, Jln Simpang Ampat, 73000 Alor Gajah, Melaka.***



காடேக் தோட்டத்தில் (Naning பிரிவு) 1935-ஆம் ஆண்டில் இந்தக் கோயில் ஸ்ரீ முருகன் கோயில் என்ற பெயருடன் தொடங்கப்பட்டது. தோட்டத்தைச் சுற்றிலும் நடைபெற்ற துரித வளர்ச்சியின் காரணமாகத் தோட்டத் தொழிலாளர்கள் வெளியேற வேண்டிய கட்டாயச் சூழ்நிலை. இருப்பினும், தோட்ட நிர்வாகம் 1/2 ஏக்கர் நிலத்தைக் கோயில் நிர்வாகத்திடம் ஒப்படைத்திருக்கிறது. கோயில் நிர்வாகமும் மலேசிய சங்கப் பதிவகத்தில் கோயில் நிர்வாகச் சங்கமாக 2010-ஆம் ஆண்டு முதல் பதிவாகியுள்ளது.

2015-ஆம் ஆண்டில் இதே இடத்தில் புதிய கட்டடம் கட்டப்பட்டது. கோயிலின் சமய விவகாரங்களை நிர்வகிக்க இந்தியாவிலிருந்து வந்த தற்காலிகக் குருக்கள் ஒருவர் இருக்கிறார்.

தற்போது இந்தத் தோட்டத்தில் தொழிலாளர்களோ அல்லது குடியிருப்புப் பகுதிகளோ கிடையாது. பூலாவ் செபாங் மற்றும், அருகிலுள்ள குடியிருப்புப் பகுதியில் இருந்து ஸ்ரீ முருகனை வழிபட இங்கு வருகிறார்கள். இவர்களில் பெரும்பாலோர், முன்பு இங்கு வேலை செய்தவர்கள் ஆவர்

1990-ஆம் ஆண்டு முதல் வருடாந்திரத் திருவிழா தைப்பூசத்தன்று நடைபெற்று வருகிறது. வருடாந்திரத் திருவிழாவின் போது தேர் ஊர்வலமும் உண்டு. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், அருகிலுள்ள குடியிருப்புப் பகுதியிலிருந்து வரும் குழந்தைகளுக்காகத் தேவார வகுப்பும் நடத்தப்படுகிறது.

மேலும், 200,000.00 ரிங்கிட் மதிப்பில் திருமண நிகழ்ச்சிகள் மற்றும், இதர நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யும் வகையில் பல நோக்கு மண்டபத்தை அமைக்கக் கோயில் நிர்வாகம் உத்தேசித்துள்ளது.



| AG22 | ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில் |
| --- | --- |
| | ***FELDA Hutan Percha, 78000 Alor Gajah, Melaka.*** |



பெல்டா ஹூத்தான் பெர்ச்சா நிலக் குடியேற்றத்திட்டத்தில் குடியேறிய ஹூத்தான் பெர்ச்சா ம.இ.கா.வின் முன்னாள் தலைவர். திரு எல். கிருஷ்ணன் அவர்களால் 1980-ஆம் ஆண்டில் இந்தக் கோயில் உருவாக்கப்பட்டது. புதியக் கட்டட நிர்மாணிப்புப் பணி 2014-ஆம் ஆண்டு, ஜூன் மாதம், 8-ஆம் தேதி நிறைவடைந்தது. முக்கிய வழிபாட்டுத் தெய்வமாக ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் விளங்குகிறார். விநாயகர் மற்றும், முருகக் கடவுளர்களும் இங்குப் பிரதிஷ்டைப் பெற்று விளங்குகின்றனர்.

பெல்டா நிர்வாகம் இங்குள்ள இந்துச் சமயத்தைச் சேர்ந்த குடியேறிகளுக்கு அரை ஏக்கர் நிலத்தைக் கொடுத்து அதில் ஆலயத்தைக் கட்ட அனுமதி அளித்தது. அதோடு, அங்கு வாழும் இந்துக் குடியேற்றவாசிகள் இந்த ஆலயத்தைப் பயன்படுத்த ஊக்குவித்தும் வருகின்றது.

2000-ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 25-ஆம் தேதியில் ஆண்டுத் திருவிழா விமரிசையாக நடைபெற்று வருகிறது. திருவிழாவின்போது தேர் ஊர்வலமும் இங்கு உண்டு. இங்குக் குடியிருக்கும் இந்துக்களால் ஆலயத்தின் நிர்வாகக்குழு ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படுகிறது. இக்குழு ஆலயத்திற்கு மேலும், இரண்டு ஏக்கர் நிலம் கேட்டு பெல்டா நிர்வாகத்திடம் விண்ணப்பித்துள்ளனர். இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவுபெறவில்லை.



| AG23 | பூலாவ் செபாங் ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *20, Lot 1752, Bt 22 1/4, Kg Pulau Sebang, Jalan Simpang Empat, 73000 Tampin, Alor Gajah, Melaka.* |



பெகோ தோட்டத்தில் 1960-ஆம் ஆண்டில் உருவாக்கப்பட்ட கோயில் அங்கு வாழும் இந்துத் தொழிலாளர்களுக்கு முக்கிய வழிபாட்டுத் தலமாக விளங்கியது. 1994-ஆம் ஆண்டில் இந்தத் தோட்டம் மேம்பாட்டுத் திட்டங்களுக்காக PKNM எனும் மலாக்கா மாநில மேம்பாட்டுக் கழகத்தால் கையகப்படுத்தப்பட்டது. பின்னர், அந்த நிலம் நில மேம்பாட்டாளரிடம (Resort `A Famosa') ஒப்படைக்கப்பட்டது.

இந்த இரு தரப்பினரின் ஒத்துழைப்புடனும் உதவியுடனும் இந்தப் புதிய நிலம் ஆலயம் கட்டுவதற்காக வழங்கப்பட்டது. நிலத்தோடு உதவித் தொகையாக ரிங்கிட் ஒரு லட்சத்து 60 ஆயிரம் கொடுக்கப்பட்டது. அத்தொகையின் மூலம் புதிய ஆலயக் கட்டடம் 1996-ஆம் ஆண்டு கட்டப்பட்டது. மேலும், ஒரு புதிய தமிழ்ப் பள்ளியை அமைக்க இந்த இரு நிறுவனங்களும் மூன்று ஏக்கர் நிலத்தை இந்த ஆலயத்திற்கு அருகில் வழங்கியிருக்கின்றது.

ஆலய நிர்வாகம் 1990-ஆம் ஆண்டு மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவ்வாலயத்தின் சமய விவகாரங்களை உள்ளூர் குருக்களே நிர்வகிக்கிறார். ஒவ்வோர் ஆண்டும் ஆகஸ்ட் மாதத்தில் வரும் ஆடிப் பூரத் தினத்தன்று இவ்வாலயத்தின் திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகின்றது. ஊர்வலத்திற்குப் பயன்படுத்தத் தேர் வசதியும் இந்த ஆலயத்தில் உண்டு.

இந்த ஆலயத்தில் சமயம் மற்றும், சமூகம் சம்பந்தமான பல்வேறு நிகழ்ச்சிகளைக் கோயில் நிர்வாகம் அவ்வப்போது ஏற்பாடு செய்து வருகின்றது. ஒவ்வொரு வாரமும் தேவார வகுப்புகள் நடைபெறுகின்றது. இந்துச்



சமய கருத்தரங்குகளும் அவ்வப்போது ஏற்பாடு செய்யப்படுகின்றது. ஒவ்வொரு வருடமும் மேற்படிப்பிற்காகத் தேர்ந்தெடுக்கப்படும் சுற்று வட்டாரத்தில் இருக்கும் சிறந்த மாணவ மாணவிகளுக்குச் சிறப்பு ஊக்குவிப்புத் தொகை கொடுத்து உதவுகின்றனர். தீபாவளி போன்ற சிறப்பு நாட்களில் குறைந்த வருவாய் உடைய குடும்பங்களுக்குப் பொருள்களும் மற்றும், ரொக்கமும் அன்பளிப்பாகக் கொடுத்துதவுகின்றனர்.

மேலும், பொதுமக்களின் வசதிக்காக ஐந்து லட்சம் வெள்ளியில் இங்கு ஒரு பல்நோக்கு மண்டபம் ஒன்றையும் கட்டுவதற்குக் கோயில் நிர்வாகம் முடிவு செய்துள்ளது.

| AG24 | **தேவி ஸ்ரீ மாரியம்மன் கோயில்** |
|---|---|
| | ***Batu 27, Kampung Baru (Paya Mengkuang), 78200 Kuala Sungai Baru, Alor Gajah, Melaka. (dahulu: Ladang Kuala Kempas, Bukit Bachang Division, Lubuk China)*** |



1910-ஆம் ஆண்டுகளில் லுபோக் சீனாவில் உள்ள குவாலா கெம்பாஸ் புக்கிட் லஞ்சாங் தோட்டத்தில் தங்கி வேலை செய்து வந்தத் தொழிலாளர்களின் வழிபாட்டிற்காக உருவாக்கப்பட்டது இந்தக் கோயில். இந்தத் தோட்டம் மேம்பாட்டுத் திட்டங்களுக்காக மாநில அரசின்வழி மேம்பாட்டாளர் வாங்கியதால், 2018-ஆம் ஆண்டில் கோயில் நிர்வாகம் மாநில அரசிடம் பேச்சுவார்த்தை நடத்தி, கோயிலுக்கு 1.138 ஹெக்டர் பரப்பளவு கொண்ட நிலத்தைப் பாயா மெங்குவாங் பகுதியில் பெற்றுள்ளது. ஆய்வுச் சமயத்தில் மாநில அரசு கொடுத்த அந்த நிலப்பட்டாவைப் பெறும் முயற்சியில் இருந்தாலும், புதிய நிலத்தில் தற்காலிகப் பூஜைகள் நடைபெற பாலஸ்தாபனம் அமைத்துச் செயல்பட்டு வருகின்றனர்.

ஒவ்வோர் ஆண்டும் இந்தக் கோயிலில் மாரியம்மன் திருவிழா டிசம்பர் மாதத்தில் தொடர்ச்சியாக 11 நாட்களுக்கு நடைபெற்று வருகிறது. தோட்டத்தில் உள்ள கோயிலில் கும்பாபிஷேகம் 2008-ஆம் ஆண்டில் நடைபெற்றுள்ளது. கோயிலைப் புது இடத்திற்கு இடமாற்றம் செய்ய வேண்டிய சூழ்நிலையில் புதிய இடத்தில் கோயிலின் மூலத் தெய்வங்களுக்குப் பாலஸ்தாபனம் அங்கு ஆகம முறைப்படி அன்றாடப் பூஜைகள் நடைபெற்று வருகின்றது. நிலம் கையகப்படுத்தும் பணி முடிந்ததும் கோயில் கட்டடத் திருப்பணிகள் தொடங்கும்.

தற்போது கோயிலுக்கு அருகில் வசிப்பவர்கள் இங்கு அமைக்கப்பட்டிருக்கும் பாலஸ்தாபனத்தை வழிபட வருகிறார்கள். கோயிலின் திருப்பணிகள் முடிவுற்றதும் பெரிய அளவில் கும்பாபிஷேகம் நடத்தத் தீர்மானித்து உள்ளார்கள்.

இக்கோயிலின் நிர்வாகக்குழு 2017-ஆம் ஆண்டில் மலேசிய சங்கப் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது.





| AG25 | ஸ்ரீ சுப்ரமணியர் கோயில் |
|---|---|
| | *(Dahulu: Ladang Bertam, Bahagian Parit Melana, Melaka Pindah)* *Kampung Tersusun, Melaka Pindah, 78000 Alor Gajah, Melaka.* |



மலாக்கா பீண்டாவில் அமைந்திருந்த பெர்த்தாம் தோட்ட, பாரிட் மெலானா பிரிவு, இந்தத் தோட்டத் தொழிலாளர்களால் 1936-ஆம் ஆண்டு இந்த ஆலயம் துவக்கப்பட்டது.

இந்த இடத்தில் மலாக்கா மாநில அரசு ஒரு வீடமைப்புத் திட்டத்தைச் செயல்படுத்த விரும்பியதால் இந்தத் தோட்டத்தை யாயாசான் மலாக்கா மூலம் கையகப்படுத்திக் கொண்டது. இதனால், தோட்டம் மூடப்பட்டு அங்குள்ள தொழிலாளர்கள் வெளியேற வேண்டிய கட்டாயச் சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டார்கள். ஆலயமும் கைவிடப்பட்ட நிலையில் மோசமான நிலைக்கு ஆளானது. இதைக்கண்ட இப்பகுதியில் உள்ள இந்து மக்களும், முன்பு இங்கிருந்து வெளியேறியத் தொழிலாளர்களும் கேட்டுக்கொண்டதற்கிணங்க யாயாசன் மலாக்கா ஏறக்குறைய 11,000 சதுர அடியை ஆலயம் அமைந்திருந்த இடத்திலேயே கையகப்படுத்திக் கொடுக்க முன் வந்தது.

இங்கு வந்து வழிபடுபவர்கள் அனைவரும் இந்தத் தோட்டத்தில் ஏற்கனவே வேலை செய்த தொழிலாளர்களும் மற்றும், அவர்களது உறவினர் மற்றும், வாரிசுகளும் ஆவர்.




இந்த ஆலயம் தற்போது முறையாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றது. கோயில் நிர்வாகமும் சங்கப் பதிவு அதிகாரியிடம் கோயில் நிர்வாகச் சங்கமாக 2017-ஆம் ஆண்டு பதிவுச் செய்து கொண்டுள்ளது. தொடர்ந்து, ஒதுக்கியுள்ள நிலத்தையும் ஆலயத்தின் பெயரில் உரிமையை மாற்றக்கோரி நில உரிமையாளர்களிடமும் அரசிடமும் விண்ணப்பித்துள்ளனர்.

2006-ஆம் ஆண்டு முதல் ஆண்டுதோறும் ஜூலை மாதத்தில் வருடாந்திரத் திருவிழா நடைபெற்றுவருகின்றது.

## AG26 ஸ்ரீ மீனாட்சி அம்மன் ஆலயம்

***Ladang Yayasan, Jalan Satelit, Lendu, Bukit Hantu, Rembia, 78000 Alor Gajah.***




235 ஏக்கர் நிலப்பரப்புடைய யாயாசான் தோட்டம், ரெம்பியாவிற்கு அருகாமையிலுள்ள புக்கிட் ஹந்து எனும் இடத்திற்குப் பக்கத்தில் அமைந்துள்ளது. ரெம்பியா சிறு பட்டணத்தின் முச்சந்தியிலிருந்து லெண்டு சிற்றூர் செல்லும் வழியில் 2 கிலோமீட்டரைக் கடந்த பின், இடது புறம் பிரியும் உள்சாலையில் செல்லவேண்டும். அங்கிருந்து ஒரு கிலோமீட்டர் தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. 1945-ஆம் ஆண்டில் இரண்டாம் உலகப்போர் முடிந்த தறுவாயில், செட்டியாருக்குச் சொந்தமான இத்தோட்டத்தில், அவரின் அனுமதியோடு அத்தோட்டக் கங்காணி ஒருவரால் உருவாக்கப்பட்டதே இச்சிறியத் திருக்கோயில். அச்சமயம், தோட்டத் தொழிலாளர்கள் குடியிருப்பில் ஆறு வீடுகளில் ஏறக்குறைய 50 குடும்ப உறுப்பினர்கள் வசித்து, மீனாட்சி அம்மனை வழிபட்டு வந்தனர்.

1980-ஆம் ஆண்டு, திரு.ராஜசேகர் கணபதி என்பவர் நெகிரி செம்பிலான் மாநிலத்திலுள்ள லாபு என்ற இடத்திலிருந்து யாயாசான் தோட்டத்திற்கு இடம் பெயர்ந்தார். 1980-ஆம் ஆண்டு முதல் 1985-ஆம் ஆண்டு வரை அத்தோட்டத்தில் வேலை செய்தபோது, அக்கோயிலில் விளக்கேற்றுவது இவரின் திருப்பணியாக இருந்தது.

அச்சமயம், தோட்டப்பாட்டாளிகள் வேலையிழந்து வேறு இடங்களுக்குப் பிழைப்பைத் தேடிச் சென்றபோது, திரு.ராஜசேகரோ, பகாங் மாநிலத்திற்கு இடம் மாறினார். 1986-ஆம் ஆண்டு முதல் 2001-ஆம் ஆண்டு வரை அக்கோயில் பராமரிக்கப்படாத நிலையில் இருந்தது. திரு.ராஜசேகர், 2002-ஆம் ஆண்டு மீண்டும் கம்போங் புக்கிட் ஹந்துவிற்கே திரும்பி, ஒரு சீனர் தோட்டத்தில் தன் வாழ்க்கையை நகர்த்தினார். அன்னை மீனாட்சியின் அருளால் மீண்டும் தன் திருப்பணியை இவர் தொடர்ந்தார்.

திரு. ராஜசேகர். சாதாரணத் தொழிலாளியாக வாழ்வைத் தொடங்கி, தன் தகுதியை வளர்த்து வாழ்வில் சாதித்து, அன்னைக்கோர் ஆலயமும் அமைத்தார் இவர். 2014-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம், பழையக் கோயிலின் நிலத்திலேயே ரி.ம.44,500.00 செலவில் அழகான திருக்கோயிலை அமைத்தார். இத்திருக்கோயிலின் அளவு 36' x 25' சதுர அடிகளாகும். அப்போது பிரதிஸ்டைச் செய்யப்பட்ட சிமெண்டு சிலையே இன்றும் பூஜிக்கப்பட்டு வருகிறது. 2014-ஆம் ஆண்டு முதல் இன்று வரை திருக்கோயில் தலைவராகப் பொறுப்பில் இருந்து இறைச்சேவை செய்து வருகிறார். இவரின் குடும்ப உறுப்பினர்களும் இறைத் தொண்டுச் செய்து வருகின்றனர்.

இந்தக் கோயிலின் முதன்மைத் தெய்வம் ஸ்ரீ மீனாட்சி அம்மனாகும். அம்பாளோடு, விநாயகப்பெருமானும் முருகப்பெருமானும் திருக்காட்சி அளித்து பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். ஆடித் திருவிழா இக்கோயிலின் முதன்மையான விழாவாகும். இத்திருவிழா 1990-ஆம் ஆண்டு முதல் இன்று வரை ஆகஸ்ட் மாதம் 3-ஆம் திகதியில் நடைபெற்று வருகிறது. இத்தோட்டத்து மண்ணின் மைந்தர்களும் ரெம்பியா வட்டார இந்துப் பெருமக்களும் திரளாக இத்திருவிழாவில் கலந்து அன்னை மீனாட்சியின் அருளைப் பெற்று இல்லம் திரும்புவர். இத்தோட்டத்தை ஒட்டி தங்களின் சொந்த நிலத்தில் வாழும் சீன சகோதரர்களும் இக்கோயில் திருவிழாவிற்கு நன்கொடை அளித்து, அம்பாளின் அருளைப் பெறுவது சமூக நல்லிணக்கத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு. எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.



| AG27 | ஸ்ரீ கருமாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | *Lorong Bukit Hantu, Jalan Lendu, Rembia, 78000 Alor Gajah, Melaka.* |



மலாக்கா மாநிலத்தில் பழமையான ஸ்ரீ கருமாரியம்மன் கோயில்களில் இத்திருக்கோயிலும் ஒன்றாகும். சொத்துடைமையாளர் செட்டியாருக்குச் சொந்தமான இத்தோட்டத்தில் தொழிலாளர்களால் இக்கோயில் 1930-ஆம் ஆண்டு காலக்கட்டத்தில் உருவாக்கப்பட்டதாகும். இக்கோயிலுக்கு எப்படி செல்வது? ரெம்பியா முச்சந்தியிலிருந்து லெண்டு சிற்றூர் செல்லும் பாதையில், இரண்டு கிலோமீட்டர் கடந்த பின், இடது புறம் செல்லும் நுழைவுச் சாலையில் ஆறு கிலோமீட்டர் சென்ற பின் நம் கண்களுக்குத் தென்படுவது இத்திருக்கோயிலாகும். செம்மண் நுழைவுச்சாலை சீனர்களின் காய்கறித் தோட்டங்கள் மற்றும், செம்பனைத் தோட்டங்கள் ஊடே சென்று திருக்கோயிலை அடையும். சுங்கை ஊடாங் சிறைச்சாலை முன் உட்புகும் சாலை வழியாகவும் இத்திருக்கோயிலுக்கு குறுகிய நேரத்திலேயே சென்றடைய இயலும்.

ஆரம்பத்தில் இந்த ரப்பர் தோட்டம் 120 ஏக்கர் நிலப்பரப்பளவைக் கொண்டிருந்தது. இத்தோட்ட உரிமையாளர் தனது சொத்தினை டத்தோ அந்தஸ்துடைய பகாங் மாநிலத்தைச் சேர்ந்த மலாய் சொத்துடைமையாளரிடம் விற்றுவிட்டார். 1990-ஆம் ஆண்டுகளில் ரப்பரின் விலை வீழ்ச்சியடைந்ததால் தோட்ட நிர்வாகம் செம்பனையை அறிமுகம் செய்தது. அதிகமான தொழிலாளர்கள் வேலையை இழக்க நேரிட்டது. தோட்டத்தை விட்டு வெளியேறியவர்கள், ரெம்பியா சிறுநகர் பகுதியில் அடைக்கலம் புகுந்தனர். சொத்துடைமையாளர், முன்னாள் தொழிலாளர்கள் இக்கோயிலில் தொடர்ந்து தங்களின் வழிபாட்டைத் தொடர அனுமதி வழங்கினார். அதே தருணத்தில், அவர்கள் அங்குப் புதிய கோயிலைக் கட்டுவதற்கு அனுமதி மறுக்கப்பட்டது. இருப்பினும், சிறிய அளவிலான சீரமைப்புப்பணிகளைத் தொடர அவர்களுக்கு அனுமதி கொடுக்கப்பட்டது. 2007-ஆம் ஆண்டு, இத்திருக்கோயிலின் தலைவர் திரு.கோபாலகிருஷ்ணன் மணியம் அவர்களின் முயற்சியால், மேனாள் தோட்டப்பாட்டாளிகளின் ஆதரவோடு இக்கோயிலில் புனரமைப்பு மேற்கொள்ளப்பட்டது.



இத்திருக்கோயிலின் மூலவர் ஸ்ரீ கருமாரியம்மன். அம்பாளோடு இதரத் தெய்வங்களான விநாயகர், முருகன், மதுரை வீரன், வீரமுனி, சடைமுனி, சங்கலிக் கருப்பன், முனியாண்டி, காளியம்மா மற்றும், நாகம்மா, பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். கடந்த 2001-ஆம் ஆண்டு முதல் ஆகஸ்ட் மாதம் நடைபெறும் ஆடித் திருவிழாவிற்கு, முன்னாள் தோட்டத் தொழிலாளர்கள் திரளாக வந்து மாரி ஆத்தாவின் அருளைப் பெறுகின்றனர்.

சுற்றி மக்கள் வசிக்காத நிலை; மற்றும், வெகுத்தொலைவில் அக்கோயில் நிலைப்பெற்றிருக்கின்ற நிலை; இரண்டையும் கருத்தில் கொண்டு தற்போதைய கோயில் நிர்வாகம், திருக்கோயிலை ரெம்பியா சிறுபட்டணப் பகுதிக்கு இடம்பெயர்க்க எத்தனித்துள்ளனர். எனினும், இதுவரை இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG28 | ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயம் |
|---|---|
| | ***Ladang New Kru, Hutan Percha, 78000 Alor Gajah, Melaka.*** |

நம் நாடு சுதந்திரம் பெற்ற பின்பு, மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த அரசாங்கம் பல்வகைத் திட்டங்களை மேற்கொண்டது. அதில் ஒன்றுதான் 1962-ஆம் ஆண்டு மத்திய அரசால் தொடங்கப்பட்ட தேசிய நில மேம்பாட்டு வாரியம் (பெல்டா). மலாக்காவில் உருவாக்கப்பட்ட பெல்டா நிலத்திட்டங்களில் ஒன்றுதான் ஊத்தான் பெர்ச்சா துன் காப்பார் நிலத்திட்டம். இத்திட்டத்தை ஒட்டி அமைந்திருப்பது நியூ குரு தோட்டம். அத்தோட்டத்தில்தான் ஸ்ரீ மஹா மாரியம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது.




1948-1960-ஆம் ஆண்டு காலக்கட்டத்தில், இந்நாட்டில் அவசரக் காலம் பிரகடனம் செய்யப்பட்டு, கம்யூனிஸ்ட்டுகளை ஒடுக்க, மத்திய அரசாங்கம் மத்திய ஓம் கார்ட் பட்டாளத்தை அமைத்தது. கூர்க்கா வீரர்கள் அடங்கிய ஒரு குழு ஊத்தான் பெர்ச்சா பகுதியைக் காவல் காத்தது. பணியில் ஈடுபட்ட கூர்க்கா வீரர்கள் தற்போது அமைந்துள்ள கோயிலுக்கு அருகில் வளர்ந்திருந்த ஒரு மண்புற்றைத் தங்களின் பாரம்பரிய முறைப்படி சிகப்புத் துணியால் கட்டி, மஹா காளிக்குப் பூஜை செய்தனர். தங்களின் சம்பிரதாயப்படி, புனிதநாளில் தாங்கள் வணங்கும் மஹா காளிக்கு ஆட்டை உயிர்ப் பலி கொடுத்தனர். கூர்க்கா வீரர்களின் அரசாங்கக் காவல் பணி முடிவுற்றதும் அவர்கள் நாடு திரும்பினர். அதன் பிறகு, நியூ குரு ரப்பர்த் தோட்டத் தொழிலாளிகளும், பெல்டா நிலத் திட்டத்தில் பங்குபெற்ற ஆறு இந்துக் குடும்ப உறுப்பினர்களும் மஹா காளியை வணங்கினார்கள். இப்பக்தர்கள் அம்மண்புற்றுக்கு அருகில் சிறிய அளவுடைய மஹா காளியின்





சந்நிதியை அமைத்தனர். அதன் பிறகே, அவர்கள் அச்சந்நிதிக்கு அருகில் ஸ்ரீ முத்து மாரியம்மன் ஆலயத்தை நிறுவினர்.

ஆலயத்தலைவர், திரு.பாலையா சுப்ரமணியம் அவர்களின் சீரிய முயற்சியால் 2007-ஆம் ஆண்டு அரசாங்கம் கொடுத்த மான்யத்தால் அத்திருக்கோயில் புனரமைப்பு செய்யப்பட்டது. அம்மானியத்தில் ஒரு பகுதியை, வெளிச்சாலையிலிருந்து கோயிலுக்குச் செல்லும் நுழைவுச் சாலை சீர் செய்யப் பயன்படுத்தினர். நியூ குரு தோட்ட நிர்வாகி, கோயிலுக்கு முன் அமைந்துள்ள கிடங்கைக் கோயில் பயன்பாட்டிற்கு பயன்படுத்த அனுமதி அளித்தார். இக்கிடங்கைச் சுத்தம் செய்து, அதனை அன்னதான மண்டபமாகவும், ஒரு பகுதியைக் கோயில் தளவாடப்பொருட்களை வைக்கும் இடமாகவும் கோயில் நிர்வாகம் பயன்படுத்துகின்றது.

இக்கோயிலில் ஸ்ரீ முத்து மாரியம்மன் மூலவராக அருள்பாலிக்கிறார். விநாயகர், முருகன், மதுரை வீரன், ஐயா, மற்றும், நாகம்மா போன்ற தெய்வங்களும் திருக்காட்சி அளித்து அருள்பாலிக்கின்றனர். ஆண்டுதோறும் ஆகஸ்டு மாதத்தில் நடைபெறும் தீமிதி திருவிழா 2001- ஆம் ஆண்டிலிருந்து கொண்டாடப்பட்டு வருகிறது. கடந்தக் காலத்தில் இத்தோட்டத்தில் வாழ்ந்த மக்களும் சுற்று வட்டார மக்களும் ஒன்றிணைந்து கலந்துகொள்ளும் விழாவாக இது திகழ்கிறது.

1980-ஆம் ஆண்டுகளில் தோட்ட நிர்வாகம், அதிக லாபம் கொடுக்காத ரப்பருக்குப் பதிலாக, நல்ல வருமானம் ஈட்டும் செம்பனையைப் பயிர் செய்தனர். செம்பனைத் தோட்டத்தில் வேலை செய்யும் அனுபவம் இல்லாததாலும் அதிக வேலையாட்கள் தேவைப்படாததாலும் பலர் வேலையிழந்து வேறிடம் சென்றனர். தற்போது, சொற்ப எண்ணிக்கையிலான பக்தர்களே இப்பகுதியில் வாழ்கின்றனர். இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## AG29 ஸ்ரீ மஹா துர்க்கையம்மன் ஆலயம்

***Endau Rembia, 78000 Alor Gajah, Melaka.***

ரெம்பியாவைச் சேர்ந்த திரு. ஆ சோங் எனும் சீன வணிகக் குடும்பத்தின் 45 ஏக்கர் பரப்பளவு கொண்ட தோட்டத்தில் அமைந்துள்ளது இத்திருக்கோயில். ரெம்பியா பட்டண முச்சந்தியிலிருந்து லெண்டு சிற்றூர் செல்லும் வழியில், ஒன்றரை கிலோமீட்டர் கடந்த பின் நாம் பார்ப்பது செப்சிட்டி வாகனம் பயிலும் பள்ளி. அப்பள்ளியின் வளாகத்தைக் கடந்தபின், நாம் இடதுபுறம் நுழைவுச் சாலையில் ஒன்றரை கிலோமீட்டர் கெமுனிங் தோட்டம், பெகோ பிரிவின் செம்பனை மரத்தின் ஊடே சென்றால், நம் மனதைக் கொள்ளைக் கொள்வது இத்திருக்கோயிலாகும்.

1920-ஆம் ஆண்டுக் காலத்தில் இக்கோயில், தோட்ட உரிமையாளரான செட்டியாரின் அனுமதியோடு, தோட்டப்பாட்டாளி மக்களால் அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இத்திருக்கோயில் மூன்று தெய்வ மண்டபங்கள் கொண்டவையாகும். பிரதான மண்டபத்தில் முதன்மை விக்கிரகமாக ஸ்ரீ மஹா துர்க்கையம்மன் வீற்றிருக்க, அதே திருமண்டபத்தில் விநாயகர், முருகப்பெருமான், மற்றும், முனீஸ்வரர் போன்றோரும் அருள்பாலிக்கின்றனர். இதன் பரப்பளவு 40' x 24' சதுர அடிகளாகும். அருள்மிகு காளியம்மன் இரண்டாவது திருமண்டபத்திலும், நாகம்மா தேவி மூன்றாவது திருமண்டபத்திலும் காட்சியளிக்கிறார்கள். இத்திருக்கோயிலிலுள்ள அனைத்து விக்கிரகங்களும் சிமிண்டால் ஆனவை. இக்கோயிலின் திருவிழா, 1991-ஆம் ஆண்டு முதல், ஒவ்வோர் ஆகஸ்ட் திங்களில் நடைபெற்று வருகிறது.




ஆரம்பக் காலத்தில் இத்தோட்டம் செட்டியார் ஒருவருக்குச் சொந்தமானது. நம் நாட்டில் 13 மே 1969-ஆம் நாளில் நடந்த இனக்கலவரத்திற்குப் பின், அவர் தன் சொத்தைச் சீன வணிகரிடம் விற்றுவிட்டார். 1950-1954-ஆம் ஆண்டு காலக்கட்டத்தில் இத்தோட்டத்தில் 40 குடும்பங்கள் (150 குடும்ப உறுப்பினர்கள்) கோயிலை ஒட்டிய லயன்களில் வாழ்ந்துள்ளனர். அக்கோயிலே, அவர்களின் சமய, கலாச்சார மையமாகச் செயல்பட்டு வந்துள்ளது. 1980-ஆம் ஆண்டுகளில் ரப்பரின் வீழ்ச்சியால், செம்பனை இத்தோட்டத்தில் அறிமுகம் கண்டது. பலர் வேலையிழந்து வேறு இடங்களுக்கு இடம் பெயர்ந்து, தற்போது, அத்தோட்டம் மக்களின்றி கலையிழந்து இருக்கிறது.

1950-ஆம் ஆண்டுகளில் அத்தோட்டத் கங்காணியாகப் பணிபுரிந்தவர் திரு.பெரியசாமி சின்னையா. இவர் வீட்டின் முன்வாசல் கோயிலை நோக்கி மிக அருகாமையில் அமைந்திருந்தது. ஒரு நாள் நடுநிசியில், தன் மூத்தமகன், சின்னையா, தன் மனைவியை (தாய்) எழுப்பி சிறுநீர் கழிக்க வேண்டுமென்று கூறவே, வீட்டு முன் கதவு திறந்தபோது, அக்காட்சியை அவ்விருவரால் நம்பவே இயலவில்லை. இவர்களை நோக்கி,





அம்பாள் துர்க்கையம்மன் தலையில் அழகிய கிரீடத்துடன், ஜோதி பிழம்பாய் காட்சியளித்தாள். சில நொடிகளுக்குப் பின், அம்பாள் கோயிலை நோக்கி சென்று கருவறையில் மறைந்துவிட்டார். தற்போது ஜொகூர், குளுவாங்கில் வசித்து வரும் திரு.சின்னையா, தன் இளமைக்கால அற்புத நிகழ்வைப் பலரிடம் பகிர்ந்து உவகை கொள்கிறார்.

இத்தோட்டத்தின் மேனாள் தொழிலாளர்களான கோயில் தலைவர் திரு.ஜெயராமனும், செயலாளர் திரு.முருகையா குப்புசாமியும் இத்திருக்கோயிலைப் பராமரித்து வருகின்றனர். இவர்களுக்கு இங்கு வாழ்ந்த மக்களும் உதவிக்கரம் நீட்டுகின்றனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவுபெறவில்லை.

## AG30 ஸ்ரீ முனீஸ்வரர் கோயில்

***89, Jalan Fairoz, Rumah Awam, Paya Datuk, 78000 Alor Gajah, Melaka.***



இந்தக் கோயில் திரு.கலைச்செல்வம் நடராஜா என்பவரால் தனது வீட்டின் வளாகத்தில் 2010-ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. மேலும், 2016-ஆம் ஆண்டில் கோயில் நிர்வாகத்தை மலேசிய சங்கப்பதிவு அதிகாரி அலுவலகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்தார். சிறிய அளவில் தொடங்கப்பட்ட இந்தக் கோயில் பிறகு 'ஐயா' (முனீஸ்வரர்) பெயரில் அருள்வாக்கு கூறத் தொடங்கியதும் இங்கு வழிபட வரும் பலரும் 'ஐயா' மீது நம்பிக்கைக் கொண்டு நன்கொடைகளைக் கொடுத்ததன் மூலம் இன்றைய நிலைக்கு மேம்பாடு கண்டுள்ளது.

கோயில் நிர்வாகம் குடும்ப உறுப்பினர்களையும் நண்பர்களையும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. கோயில் தோற்றுவிக்கப்பட்டக் காலத்திலிருந்து முனீஸ்வரர் பெயரில் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் டிசம்பர் 25-ஆம் தேதி முதல் ஜனவரி முதல் நாள் வரை நடைபெற்று வருகிறது. முதல் கும்பாபிஷேகம் 2010-ஆம் ஆண்டு நடந்துள்ளது. அடுத்தக் கும்பாபிஷேகத்திற்கு முன்பாக கோயிலை வேறு ஒரு பொருத்தமான இடத்திற்கு மாற்றம் செய்ய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

இந்தக் கோயில் தற்போது வீடமைப்புப் பகுதியில் அமைந்திருப்பினும் பல இன சமய மக்களான அண்டை அயலார் மிகவும் ஒத்துழைப்புக் கொடுக்கின்றனர். திருவிழாக் காலங்களில் உணவு பரிமாறுதல் போன்ற உதவிகளையும் இவர்கள் செய்து வருகின்றனர். திருவிழாவின் போது ஆடு மற்றும், கோழி போன்றவற்றை உயிர்ப்பலி கொடுப்பதோடு அசைவ உணவைத் தெய்வத்திற்குப் படைப்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.



| AG31 | ஸ்ரீ மகா கரு மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | ***United Melaka Berhad, Ladang Machap, 76100 Durian Tunggal, Melaka.*** |



திரு சின்னகண்ணு மற்றும், திரு கந்தசாமி குடும்பத்தினரோடு இங்கு வேலை செய்து வந்த பிறத் தோட்டத் தொழிலாளர்களும் 1890-ஆம் ஆண்டில் இந்தத் தோட்டத்தில் கோயில் அமைய முக்கியப் பங்கு வகித்துள்ளனர். இந்த இரு குடும்பத்தினரின் வாரிசுகள் கோயிலை இன்றுவரை தொடர்ந்து பராமரித்து வருகின்றனர்.

கோயிலின் கட்டடம் ஆரம்பம் முதல் 2014-ஆம் ஆண்டு வரையில் பல முறை புனரமைக்கப்பட்டு வந்திருக்கின்றது. இன்னும் மாச்சாப் தோட்டத்தில் இருக்கும் இந்தக் கோயில் புதிய நிர்வாகத்தின் கீழ் 2019-ஆம் ஆண்டிலும் கட்டடம் பழுதுபார்ப்பு வேலை நடைபெற்றுள்ளது. இந்த நிர்வாகக்குழு சங்கப் பதிவு அதிகாரியிடம் பக்தர்கள் சங்கமாக 2019-ஆம் ஆண்டில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. அதற்குமுன், 2013-ஆம் ஆண்டு வேறொரு நிர்வாகம் இந்தக் கோயிலின் பக்தர்கள் சங்கமாகப் பதிவு செய்திருந்தது.



முன்பு இங்கு வேலை செய்தப் பெரும்பாலான தொழிலாளர்கள் அருகில் உள்ள குடியிருப்புப் பகுதிகளுக்கு மாறிச் சென்றுள்ளனர். தவிர்க்க இயலாத காரணங்களினால் 4 ஆண்டுகாலம் இந்தக் கோயிலில் எந்தவிதத் திருவிழாவும் நடைபெறவில்லை. மலாக்கா மாநிலத்தில் உள்ள மிக உயரமான, அதாவது, 21 அடி உயரத்தில், கருப்பர் தெய்வச்சிலை இங்கு 2019-ஆம் ஆண்டு கோயில் வளாகத்தில் அமைக்கப்பட்டுள்ளது. 1980-ஆம் ஆண்டுகளில் முதன் முதலாக நடைபெற்ற கும்பாபிஷேகத்திற்கு பிறகு, 2019-ஆம் ஆண்டில் இரண்டாவது முறையாகத் திருவிழாவோடு கும்பாபிஷேகமும் நடந்தேறியிருக்கிறது.





நில உரிமையாளர்கள் மற்றும் மலாக்கா மாநில அரசாங்கத்தின் ஒத்துழைப்புடன் இந்தக் கோயிலுக்கு நிலத்தைக் கையகப்படுத்தக் கோயில் நிர்வாகக் குழுவினர் தீர்மானம் கொண்டுள்ளனர்.

## AG32 தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***UMRE Melaka Pindah Estate, Lesung Batu, 78000 Alor Gajah, Melaka.***



1890-ஆம் ஆண்டுகளில் இந்தத் தோட்டத்தில் பணிபுரிந்த தோட்டத் தொழிலாளர்களால் உருவாக்கப்பட்டக் கோயில் இன்றுவரை பராமரிக்கப்பட்டு வருகிறது. இடையிடையே பல பழுதுபார்ப்புகள் மற்றும், மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டு இருப்பினும், இத்தோட்டத்தின் அனுமதியோடு 2019-ஆம் ஆண்டில் கோயிலின் புதிய கட்டடத் திருப்பணிகள் வேலியோடு சேர்த்து ஆரம்பிக்கப்பட்டு 2020-ஆம் ஆண்டு முடிவடைந்து, செப்டம்பர் மாதம் ஆறாம் நாள் கும்பாபிஷேகம் நடத்தியுள்ளனர்.

இந்தத் தோட்டத்தைப் பூர்வீகமாகக் கொண்ட திரு மோகனசுந்தரம் செட்டியார் அவர்கள், அலோர் காஜா- மாச்சாப் பாரு சாலையின் ஓரத்தில் அமைந்திருக்கும் இந்தக் கோயிலின் புனரமைப்புத் திருப்பணிக்கு முழுமையாக நன்கொடை அளித்துள்ளார். அங்கு வேலை செய்து வந்த தோட்டத் தொழிலாளர்கள் இரண்டு கிலோமீட்டர் தொலைவில் உள்ள குடியிருப்புப் பகுதிகளுக்கு இடம் பெயர்ந்துள்ளனர் என்றாலும் தினமும் இங்கு வந்து வழிபடத் தவறுவதில்லை.

ஆடி மாதத்தில் (ஆகஸ்ட்) தொடர்ச்சியாக 10 நாட்கள் நடைபெறும் மாரியம்மன் ஆண்டுத் திருவிழாவில் கலந்து கொள்ள அக்கம் பக்கத்தில் உள்ளவர்களும் வெவ்வேறு இடங்களில் இருந்தும் பலர் வருகின்றனர். இச்சமயத்தில் இங்கு நடைபெறும் தீமிதி நிகழ்ச்சி மக்களைக் கவர்கின்றது. இதற்கு முன்னர் இரண்டு முறை கும்பாபிஷேகங்கள் நடந்துள்ளன. புதியக் கட்டடத் திருப்பணிகள் முடிவுற்று மூன்றாவது கும்பாபிஷேகத்தை நடத்தியுள்ளனர். கடந்த காலங்களில் இங்கு வாழ்ந்த பல குடும்பங்கள் மற்றும், அவர்களது வாரிசுகள் இந்தக் கோயிலின் திருவிழாக்களிலும் சிறப்புப் பூஜைகளிலும் கலந்து கொள்ள வெவ்வேறு இடங்களில் இருந்து வருகை தருகின்றனர்.

மலேசிய சங்கப் பதிவு அதிகாரியிடம் இந்த நிர்வாகக் குழு 2015-ஆம் ஆண்டில் பக்தர்கள் சங்கமாகப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. தோட்ட உரிமையாளர் மற்றும், மாநில அரசாங்கத்தின் ஒத்துழைப்புடன் கோயில் நிலத்தை விரைவில் கையகப்படுத்த வேண்டும் என்ற தீர்மானத்தில் உள்ளனர் நிர்வாகக் குழுவினர்.





| AG33 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Jalan Air Punggai, Ladang Lian Ho, Rantau Panjang, 78300 Masjid Tanah, Melaka.* |




இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் 1960-ஆம் ஆண்டில் இந்தக் கோயிலை இங்கு நிறுவினர். காலத்துக்குக் காலம் கோயில் கட்டடம் பழுது பார்க்கப்பட்டும், புதுப்பிக்கப்பட்டும் வந்துள்ளது. ஒரு சிலர் மட்டுமே இந்தத் தோட்டத்தில் தற்போது வேலை செய்து வந்தாலும், அருகில் வசிக்கும் இந்துச் சமயத்தைச் சார்ந்தவர்கள் கோயிலில் நடைபெறும் சிறப்புப் பூஜைகளிலும் வழிபாட்டிலும் கலந்து கொள்ள வருகை தருகின்றனர்.

ஆயர் பூங்கை சாலையோரத்தில் அமைந்திருக்கும் இந்தக் கோயிலை நிர்வகிக்கும் பொறுப்பை மூன்று பேர்கள் கொண்ட நிர்வாகத்திடம் தோட்ட நிர்வாகத்தினர் ஒப்படைத்துள்ளனர். கோயிலுக்கு நிலத்தைச் சொந்தமாக்கும் முயற்சி எதுவும் இப்போது தென்படவில்லை. நிலத்தின் மீது சொந்தம் கொண்டாடாமல் தேவைப்படும் சமயத்தில் கோயிலைச் சரிசெய்ய தோட்ட நிர்வாகம் இவர்களுக்கு அனுமதி வழங்கியிருக்கின்றது. தோட்ட நிர்வாகத்தின் கீழ் இக்கோயில் இருப்பதால் சங்கப் பதிவதிகாரி அலுவலகத்தில் பதிவு செய்யும்








தேவை இதுவரை எழவில்லை என இந்தக் கோயில் நிர்வாகம் கருதுகிறது.

மாரியம்மன் திருவிழா தொடர்ச்சியாக 10 நாட்களுக்கு ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத்தில் நடைபெற்று வருகிறது. இங்கு வேலை செய்யும் தொழிலாளர்களோடு வேறு இடங்களில் வசிக்கும், முன்பு இங்கு வாழ்ந்த குடும்பங்களின் வாரிசுகள், மற்றும், உறவினர்கள் இத்திருவிழாவில் கலந்து கொள்ள வருகின்றனர்.

## AG34 ஸ்ரீ வீர பத்ர காளியம்மன் கோயில்

***Sri Pengkalan, Jalan Machap, 78000 Alor Gajah.***

1971-ஆம் ஆண்டில் ஒரு சீனர் தோட்டத்தில் வேலை செய்து வந்த திரு மாணிக்கம் மண்டோர் அவர்களால் தங்களுடைய குலத் தெய்வ வழிபாட்டிற்காக இந்தக் கோயில் உருவாக்கப்பட்டது. கோயில் உரிமையாளரும் அவரது குடும்ப உறுப்பினர்களும் காளியம்மன் தேவி தங்கள் உடலில் வந்து இறங்கும்போது அருள்வாக்குக் கூறி வந்தனர். இதில் நம்பிக்கை கொண்டவர்கள் தெய்வத்தின் உதவிக்காகவும் வழிகாட்டலுக்கும் அங்குத் தொடர்ந்து வந்தனர்.

மேம்பாட்டுத் திட்டங்களுக்காக இந்தத் தோட்டம் தற்போது நில மேம்பாட்டாளர் ஒருவரிடம் விற்கப்பட்டுவிட்டது. கோயில் உரிமையாளர், விலை அதிகமாக இருப்பினும், அந்த நிலத்தை வாங்குவதற்கு முயற்சி செய்து வருகின்றார். தற்போது இங்கு அருள்வாக்கு கூறுவது நிறுத்தப்பட்டுள்ளதால் கோயிலுக்கு வருபவர்கள் எண்ணிக்கை குறைவாக உள்ளது.

1971-ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத் தொடக்கத்தில், தொடர்ச்சியாக எட்டு நாட்கள் இந்தக் கோயிலில் காளியம்மன் திருவிழாவை விமரிசையாகக் கொண்டாடி வருகிறார்கள். திருவிழாவின்போது ஆடு கோழி போன்றவற்றை உயிர்ப்பலிக் கொடுப்பதுடன் அசைவ உணவைத் தெய்வத்திற்குப் படைக்கிறார்கள். அதனால், பல இன மக்களும் கூடுகின்றனர்.

திருவிழா நாட்களைத் தவிர்த்து மற்ற நாட்களில், இது ஒரு குடும்பக் கோயிலாகக் காட்சி அளிக்கிறது. இருப்பினும், இந்தக் கோயில் நிர்வாகம் 2018-ஆம் ஆண்டு மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பக்தர்கள் சங்கமாகப் பதிவாகியுள்ளது.



| AG35 | ஸ்ரீ வைத்தீஸ்வரர்-தையல்நாயகி அம்மன் கோயில் |
| --- | --- |
| | *Jalan Keretapi, Pulau Sebang, 78000 Alor Gajah, Melaka.* |



இந்தக் கோயில் கடந்த 1916-ஆம் ஆண்டு இந்த வட்டாரத்தில் பணிபுரிந்து வாழ்ந்த மலாயா ரயில்வே இலாகா ஊழியர்களால் நிறுவப்பட்டது. புலாவ் செபாங் (தம்பின்) ரயில் நிலையத்திற்கு அருகில், ரயில்வே இலாகாவின் அனுமதியுடன் இந்தக் கோயிலைக் கட்டியுள்ளார்கள்.

மலாக்காவில் மட்டுமல்லாமல், நாடு முழுவதும் இந்தக் கோயில் பெயர் பெற்றுள்ளது. கோயில் கட்டப்பட்டதிலிருந்து ரயில்வே துறை ஊழியர்கள் இந்தக் கோயிலை நிர்வகித்து வருகின்றனர். அண்மையில், தம்பின், புலாவ் செபாங் வட்டார இந்துப் பொதுமக்களையும் இணைத்து, செயற்குழு அமைத்து, இந்தக் கோயில் நிர்வகிக்கப்படுகிறது. 2017-ஆம் ஆண்டு தொடங்கி கோயில் செயற்குழுத் தலைவராகத் திரு எஸ்.கணேசன் பொறுப்பேற்றுள்ளார்.

கோயிலில் சமய, சமூக நடவடிக்கைகளை ஒவ்வொரு வாரமும் நடத்துகின்றனர். வெள்ளி, சனிக்கிழமைகளில் கோயிலுக்கு 200 பக்தர்களுக்குக் குறையாமல் வருகை தருகின்றனர். மற்ற சிறப்புப் பூஜைகளின் போதும், சிறப்புப் பிரதோஷம், மாதம் இருமுறை நடைபெறும் சமயங்களிலும், சிவராத்திரி சமயங்களிலும் 500-600 பக்தர்கள் கூடுகிறார்கள். ஏழ்மை நிலையிலுள்ள மக்களுக்கும், பள்ளி மாணவர்களுக்கும் இந்தக் கோயில் நிர்வாகம் உதவி வழங்கிவருகிறது. சமய வகுப்புகளும், உரைகளும் இந்தக் கோயிலில் 1980-ஆம் ஆண்டுகளிலிருந்து நடைபெறுகின்றன.

இந்துச் சமயப் பண்டிகைகளை இந்தக் கோயில் தவறாமல் கடைப்பிடிக்கின்றனர். அவற்றுள், சிவராத்திரி, பிரதோஷம், அமாவாசை, போன்றவற்றுடன் ஆண்டுத் திருவிழாவாக, நவராத்திரியையும், திருவெண்பாவைத் திருவிழாவையும் கொண்டாடுகிறார்கள்.

இந்தக் கோயிலின் முந்தைய நிர்வாகத்தின் முயற்சியில், இந்தக் கோயிலின் நிர்வாகம், மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் 1977-ஆம் ஆண்டு முதல், நிர்வாகச் சங்கமாகப் பதிவாகியுள்ளது. எனினும், கோயில் நிலம் இதுவரை கோயிலுக்குக் கிடைக்காத நிலையில், அதை மலாயன் ரயில்வே இலாகாவிடமிருந்து பெறுவதற்கான முயற்சி, இந்த ஆய்வு நடந்த சமயம், நடைபெற்றுவருகிறது.

## AG36 ஸ்ரீ மஹா முத்து மாரியம்மன் கோயில்

***Ladang Gadek, 78000 Alor Gajah, Melaka.***



இந்தக் கோயில், புலாவ் செபாங் காவல் நிலைய முச்சந்தியிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. 1913-ஆம் ஆண்டு, தோட்டத் தொழிலாளர்களால் கட்டப் பட்ட இந்தக் கோயில் தற்பொழுது சாலை ஓரத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இந்தத் தோட்டத்தின் உரிமம் தற்பொழுது Eksekutif Pesona Sdn.Bhd. எனும் நிறுவனத்திடம் உள்ளது.

ஸ்ரீ மாரியம்மன் தேவியின் பெயரில் அமைக்கப்பட்ட இந்தக் கோயிலில் ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ முருகன், ஸ்ரீ முனியாண்டி போன்ற மற்ற தெய்வங்களும் வீற்றிருக்கின்றன. தனி மண்டபத்தில் ஸ்ரீ முத்தப்பன் வீற்றிருகின்றார். இந்தத் தோட்டக் கண்காணிப்பாளர் திரு. கி. தேவேந்திரன் இந்தக் கோயிலின் தலைவராக, ஒன்பது பேர் கொண்டக் குழுவைக் கொண்டு செயல்படுகிறார். கோயில் நடவடிக்கைகள் சிறப்புற அனைவரும் துணை நிற்கின்றனர்.

காடேக் தோட்டத் தமிழ்ப் பள்ளி, கோயிலின் அருகிலிருப்பதால், அப்பள்ளியின் மாணவர்களும் ஆசிரியர்களும் கோயிலைப் பயன்படுத்தி சமய, பக்திப் பாடல் நிகழ்ச்சிகளைக் கோயில் நிர்வாகத்துடன் நடத்துகின்றனர். இந்தக் கோயிலின் முக்கியத் திருவிழா மாரியம்மன் திருவிழாவாகும். ஆண்டுதோறும் ஜூலை மாதம் மூன்று நாட்களுக்கு நடைபெறும் இந்த விழாவில் ஏறத்தாழ மூவாயிரம் பக்தர்கள் கலந்து சிறப்பிப்பார்கள். இந்தத் தோட்டத்தில் முன்பு பணிபுரிந்தவர்களின் குடும்பங்கள் திருவிழாவின் பொழுது நண்பர்களையும் உறவினர்களையும் சந்திக்கவும், தங்கள் தெய்வத்தை வணங்கவும் திரும்பி வருகின்றனர். இந்தக் கோயிலின் கும்பாபிஷேகம் 1995-ஆம் ஆண்டு நடைபெற்றுள்ளது. அடுத்து 2022-ஆம் ஆண்டு நடத்த எண்ணியுள்ளனர்.

இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை. கோயிலுக்கான நிலத்தை நில உரிமையாளரிடமிருந்து வாங்க கோயில் நிர்வாகம் உத்தேசித்துள்ளது.



| AG37 | ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Tebolang, 76460 Tebong, Melaka.*** |



மலாக்கா நகரிலிருந்து நாற்பது கிலோமீட்டருக்கு அப்பால் இருக்கும் திபோங் சிறுபட்டணத்தின் அருகில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. ஒரு காலத்தில் திபோலாங் தோட்டத்தில் நிறைய தமிழர்கள் பணிபுரிந்துள்ளார்கள். அவர்கள் கட்டிய கோயில் இது.

ரப்பர் மரங்களுக்குப் பதில் செம்பனை மரங்கள் வந்துள்ளதால், இன்று பெரும்பாலான இந்துத் தொழிலாளர்கள் இந்தத் தோட்டத்தைவிட்டு வெளியேறிவிட்டனர். திபோங் வட்டாரத்தில் வசிக்கும் சில குடும்பங்கள், தோட்டத்திற்குள் வீற்றிருக்கும் இந்தக் கோயிலில் வழிபடுகின்றனர். திரு. எஸ்.சிவசாமி 1989-ஆம் ஆண்டிலிருந்து இந்தக் கோயிலின் தலைவராக, தம் செயற்குழுவினருடன், செயல்படுகிறார்.

இந்தக் கோயிலின் கட்டடம் 1954-ஆம் ஆண்டு புதுப்பிக்கப்பட்டு, மேலும், சில தடவைகள் சில மேம்பாடுகளைக் கண்டுள்ளது. சித்திரை மாதத்தில் மூன்று நாட்களுக்கு இந்தக் கோயில் திருவிழா ஆண்டுதோறும் நடைபெற்று வருகிறது. 2010-ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் நடந்துள்ளது, அடுத்து, 2022-ஆம் ஆண்டு நடைபெறவுள்ளது. இந்தத் தோட்டத்தில் வசித்தப் பல குடும்பங்கள், தற்பொழுது எங்கு வாழ்ந்தாலும், திருவிழாக் காலத்தில் நண்பர்களைக் காணவும், தங்கள் 'கிராம' தெய்வத்தைத் தரிசிக்கவும் ஆர்வமுடன் திரும்புகின்றனர்.

இன்று, தோட்டத்தில் பணிபுரிபவர்கள் அனைவரும் அந்நியத் தொழிலாளர்கள். எனினும், திபோங் பட்டிணத்திற்கு அருகில் மற்ற இந்துக் கோயில்கள் இல்லாததால், இங்கு அமைந்துள்ள வீடமைப்புத் திட்டங்களில் வாழும் இந்துக்களுக்கு இந்தக் கோயில் பயன்படுகிறது. கோயிலைப் பொதுச் சாலையின் அருகில் இடம் பெயர்த்தால் சுற்று வட்டாரத்தில் வாழ்பவர்களுக்கு நன்மை தரும் என பக்தர்கள் நம்புகிறார்கள்.



கோயில் செயற்குழுவினர், கோயில் நிலத்தைக் கையகப்படுத்தித் தற்பொழுது இருக்குமிடத்திலேயே தக்கவைத்துக் கொள்ள எண்ணுகின்றார்கள். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதியவில்லை.

| AG38 | தேவி ஸ்ரீ மூகாம்பிகை ஆலயம் |
|---|---|
| | *Kampung Pahla Alam, Simpang Empat, 78000 Alor Gajah, Melaka.* |



பாரதத்திற்கு ஒரு மூகாம்பிகை. மலேசியாவிற்கும் ஒரு மூகாம்பிகை. மலாக்கா, சிம்பாங் அம்பாட்டில் வீற்றிருக்கும் தேவி ஸ்ரீ மூகாம்பிகை ஆலயமே, இந்நாட்டில் ஆகமப்படி எழுப்பப்பட்ட பிரதான திருக்கோயில்களில் ஒன்றாகும். கோயில் தலைவர் திரு.கணேசன் கருப்பையா, கோயில் கட்டட திருப்பணிக்குழுத் தலைவர் டத்தோ எஸ்.எம்.பெரியசாமி முனுசாமி மற்றும், நிர்வாகத்தின் பெரும் முயற்சியால் இத்திருக்கோயில் 27-01-2008-ஆம் நாள் முழுமைப் பெற்றது.

அலோர் காஜா மாவட்டத்தில் பெகோ தோட்டம், மையப் பிரிவில் ஸ்ரீ மஹா மாரியம்மன் திருக்கோயில் அமைந்திருந்தது. அத்தோட்டம், அ ஃபாமோசா கோல்ப் ரிசோர்ட் & ஹைகோம் பெகோ இண்டாஸ்திரியல் பார்க் நிறுவனங்களால் வாங்கப்பட்டது. தோட்டத் திருக்கோயில் அமைந்த பகுதி, அ ஃபமோசா கோல்ப் ரிசோர்ட் நிறுவனத்தால் கையகப்படுத்தப்பட்டது. கோயிலுக்கும் தமிழ்ப்பள்ளிக்கும் நஷ்ட ஈடாக ரி.ம.110,000.00 அந்நிறுவனம் வழங்கியது.

1997-ஆம் ஆண்டு, கோயிலின் தற்காலிக நிர்வாகம், சிம்பாங் அம்பாட் சிறுபட்டணத்தில் புதியக் கோயிலை நிறுவ முடிவெடுத்தது. அதன் தொடர் நடவடிக்கையாக, 1999-ஆம் ஆண்டு “ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம்” என மலேசிய சங்கப் பதிவிலாகாவில் நிர்வாகக் குழுவாகப் பதிவுச் செய்யப்பட்டது. 2002-ஆம் ஆண்டில், அக்கோயிலின் திருநாமம் “தேவி ஸ்ரீ மூகாம்பிகை கோயில்” என நிர்வாகத்தால் பெயர் மாற்றம் செய்யப்பட்டு, மலேசிய சங்கப் பதிவிலாகாவிலும் அதிகாரப்பூர்வமாகப் பதிவு செய்யப்பட்டது. உண்மையில், புக்கிட் புருவாங் ஸ்ரீ முத்து மாரியம்மன் கோயில் தலைமை சிவாச்சாரியார் சிவஸ்ரீ பாஸ்கரன் குருக்கள் தான் இப்பெயர் மாற்றத்திற்கான காரண கர்த்தா. முதல் காரணி, ஆரம்பத்தில், இத்திருக்கோயில் கட்டத் தேர்வு செய்யப்பட்ட நிலத்தைச் சுற்றி அழகான பல்வகை மரங்களும், சிறு ஆறும் அருகில் நெளிந்தோட, இச்சூழ்நிலை இந்தியாவில், கர்நாடக மாநிலத்தில் கொல்லூர் மூகாம்பிகை திருக்கோயில் சூழ்நிலையை ஒத்திருந்தது. இரண்டாவது, அந்நாளில் நம் நாட்டில் தேவி ஸ்ரீ மூகாம்பிகையின் மகிமையைக் கூற அம்பாளின் திருநாமம் கொண்டக் கோயில் இல்லாத நிலையில், இக்கோயிலைக் கட்டுவது தனிச்சிறப்பு. இக்கருத்தை ஏற்றது கோயில் கட்டடத் திருப்பணிக்குழு நிர்வாகம்.

கோயில் நிர்வாகம் ஒன்றே கால் ஏக்கர் நிலத்தை ரி.ம.110,000.00 செலுத்தி சீனர் ஒருவரிடமிருந்து வாங்கியது. அந்நிலத்தில், அரை ஏக்கர் நிலம் கோயில் கட்ட ஒதுக்கப்பட்டது. 2002-ஆம் ஆண்டில், பிரதான கோயில் கட்டமைப்பு கோயில் தலைவரும், வீடமைப்புத் தொழில் அதிபருமான திரு.கணேசன் கருப்பையாவால் அமைக்கப்பட்டது. கோயில் சிற்பக் கலை வேலைப்பாடுகள் அனைத்தும் தமிழ்நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட ஸ்தபதியால் கலைநயத்துடன் செய்யப்பட்டது. 2005-ஆம் ஆண்டு கோயில் கட்டப்பட்ட நிலம் கோயிலின் சொத்தெனப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. 2007-ஆண்டு இக்கோயில் கட்டி முடிக்கப்பட்டது. இக்கோயிலின் பிரதானக் கட்டடம், அன்னதானம் மண்டபம், குருக்கள் மனை மற்றும், அலுவலகம் கட்டச்

செலவான தொகை ரி.ம.230,000.00 ஆகும். 27-1-2018-ஆம் நாள் முதலாவது மஹா கும்பாபிஷேகம் சிறப்புற நடைபெற்றது.

இக்கோயிலில் மூலவர் அம்பாளோடு, விநாயகர், முருகனுடனாகிய வள்ளி தெய்வானை, வீரபத்திரர், மற்றும், நவக்கிரகம் பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றனர். இத்திருக்கோயிலின் திருவிழா 11 நாட்கள் பங்குனி மாதத்தில் நடைபெறும். கோயில் நிர்வாகத்தினர் தற்போது கோயிலின் கோபுரம் கட்டும் பணியில் ஈடுபட்டு வருகின்றனர். இத்திருக்கோயிலின் முதலாவது மஹா கும்பாபிஷேகம் 2008-ஆம் ஆண்டில் நடைபெற்றது. அடுத்த மஹா கும்பாபிஷேகம் 2021-ஆம் ஆண்டு நடைபெற்றிருக்க வேண்டும். ஆனால், கோவிட்19 காரணமாக ஒத்திவைக்கப்பட்டுள்ளது. இக்கோயிலில் எல்லா சமய நிகழ்வுகளும் இந்து நாட்காட்டி முறைப்படி நடைபெறும்.

| AG39 | அருள்மிகு மஹா கருமாரியம்மன் தேவஸ்தானம் |
|---|---|
| | ***No.RM109, Rembia, 78000 Alor Gajah.*** |



மலாக்கா மாநிலத்திலேயே பழமையான திருக்கோயில்களில் ஒன்றான இத்திருத்தலம், 1920-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. ரெம்பியா வட்டாரத்திலேயே மிகவும் புகழ்பெற்ற இத்திருத்தலம், வெளிப்படையான நிர்வாகம், சுற்றுப்புறச்சூழல் அழகு மற்றும், தூய்மைக்கு முன்மாதிரியான ஒரு கோயிலாகும். மலாக்கா - அலோர் காஜா நெடுஞ்சாலையின் இடது புறம், ரெம்பியா காவல் நிலையத்திற்கு அருகில் உயரமேற்றில் அமைந்துள்ளது. ஆரம்பக் காலத்தில் இத்தோட்டத்தில் வாழ்ந்த மதிப்புமிகு பெரியவர் திரு. வேலாயுதம் மாண்டோர், தோட்டத்தின் ஆங்கில உரிமையாளரின் அனுமதியோடு, சிறியக் கோயிலைக் கட்டினார். அவர், பாரதத்தேசத்திலிருந்து ஒரு பிடி மண்ணைக் கொண்டு வந்து, அதைக் கோயில் கட்டுமான நிலத்தில் பரவச்செய்து பலகையிலான கோயிலை நிறுவினார். இத்தோட்ட மக்களும் சுற்றுவட்டாரப் பொதுமக்களும் இத்திருக்கோயிலை சமய, சமுதாய நிகழ்வுகளின் மையமாகப் பயன்படுத்தினர்.

நாடு சுதந்திரம் பெற்ற பின், சீன வணிகர் இத்தோட்டத்தை வாங்கினார். தொழிலாளர்கள் நலனில் அக்கறையுள்ள இவர், 30’ x 60’ பரப்பளவு நிலத்தைக் கோயிலுக்கு நன்கொடையாக அளித்தார். இந்நிலம் கோயில் பெயரில் 27.10.1970 ஆம் நாள் மலேசிய சங்கப் பதிவிலாகாவால் பதியப்பட்டது. திரு.முனியாண்டி சின்னப்பன் அவர்கள் 15.2.1979 ஆம் நாள் ஏகமனதாகக் கோயில் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 26-3-1980-ஆம் நாள் முக்கால் ஏக்கர் நிலம் அலோர் காஜா மாவட்ட அலுவலகத்திடமிருந்து வாங்கப்பட்டது. புதியத் திருக்கோயிலைக் கட்ட தோட்ட உரிமையாளர் ரி.ம.5500.00 நன்கொடை வழங்கினார். 3-4-1986-ஆம் நாள் பூமி பூஜை நடத்தப்பட்டு, 1988-ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் கோயில் திருப்பணி முடிவுற்றது. 19-1-1989-ஆம் நாள் இக்கோயிலின் மஹா கும்பாபிஷேகம் நிறைவுப் பெற்றது. இத்திருக்கோயிலே மலாக்கா மாநிலத்தில் முதன் முதலாக ராஜகோபுரம் கொண்டத் திருக்கோயிலாக அமைந்த சரித்திரப் பெருமை கொண்டது.







சிவஸ்ரீ எ.பி.முத்துக்குமார சிவச்சாரியார் ஆலோசனையின் பேரில், இத்திருக்கோயிலின் திருநாமம் "அருள்மிகு மஹா கருமாரியம்மன் தேவஸ்தானம்" எனப் பெயர் மாற்றம் கண்டு, 15-03-1994-ஆம் நாள் மலேசிய சங்கப் பதிவதிகாரி இலாகா அங்கீகாரம் வழங்கியது. 1997-ஆம் ஆண்டு, இத்திருக்கோயில், காண வேண்டிய சமயத்திருத்தலம் பிரிவில், மலாக்கா மாநிலச் சுற்றுப்பயணக் காலண்டரில் இடம்பெற்றது. மூலஸ்தானக் கோபுரத்தில் ஏற்பட்ட பிளவின் காரணமாக அது சீர்செய்யப்பட்டு, 13-04-2003-ஆம் நாள் பாலஸ்தானம் செய்யப்பட்டது. அதனையடுத்து, 20-01-2008-ஆம் நாள், கோயிலின் மஹா கும்பாபிஷேகம் இரண்டாவது முறையாக மேற்கொள்ளப்பட்டது.

30,492 சதுர அடி பரப்பளவு கொண்ட இத்திருக்கோயிலில், மூலவரோடு, விநாயகப்பெருமான், சுப்பிரமணியர் மற்றும், பைரவர் அருள்காட்சி அளித்து அருள்பாலிக்கின்றனர். ஆடிப்பூரத் திருவிழா ஆண்டுதோறும் ஆகஸ்ட் மாதத்தில் நடைபெறும். இவ்விழா 1970-ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்று வருகிறது.

இத்திருக்கோயிலின் நிர்வாகம் பக்தர்களுக்கென சமய நிகழ்வுகளையும், கலை கலாச்சார, தொண்டு நடவடிக்கைகளையும் தொடர்ந்து செய்து வருகிறது. அலோர் காஜா-மலாக்கா பிரதான சாலை ஓரத்தில் சற்று உயர்ந்த இடத்தில் அமைந்துள்ள இந்தக் கோயில் பலரது கவனத்தையும் ஈர்க்கின்றது. இக்கோயிலின் வளர்ச்சிக்கு, மேனாள் தலைவர்களான திரு. நாராயணசாமி, ஆசிரியர் திரு வி.துரைசாமி, மற்றும் செயலாளராகப் பணிபுரிந்த திரு.என்.எஸ்.மணியம் ஆகியோரின் பங்கு அளப்பரியது.

| AG40 | **ஸ்ரீ பொய்யாத விநாயகர் மூர்த்தி ஆலயம்** |
|---|---|
| | ***Lot 1530, Kampung Baru Vinayagar, Jalan Vinayagar Batu 17½, Ganun, 78000 Alor Gajah, Melaka. (Dahulu Ladang Vinayagar)*** |



நம் சனாதன தர்மம் ஒரே கடவுளை அவரவர் மனோநிலைப்படி, அன்போடு நெருங்கி வழிபடுவதற்காக, பல ரூபங்களில் தெய்வ வடிவங்களாக நமக்குக் காட்டுகிறது. ஒன்றாக இருக்கிற பரமாத்வாவோடு இப்படி பல மகான்களுக்கு அம்மூர்த்திகள் தரிசனம் தந்திருக்கிறார்கள். அம்மூர்த்திகளில் ஒருவரான விநாயகப் பெருமானுக்குத் தான் வாங்கிய 300 ஏக்கர் தோட்டத்தில், 1940-ஆம் ஆண்டில் திருக்கோயில் ஒன்றினை அமைத்தார் அமரர் இராமநாதன் செட்டியார். 1969-ஆம் ஆண்டுக்கு முன் இத்தோட்டம் கோயிலின் மூலவர் பெயரில் அழைக்கப்பட்டது.

1950-ஆம் ஆண்டுகளில் இத்தோட்டத்தில் வாழ்ந்த 50 குடும்பங்களுக்கு இத்திருக்கோயில், சமயம் மற்றும், திருமணம் போன்ற கலாச்சார நிகழ்வுகளுக்கு மையமாக திகழ்ந்தது. ஆரம்பத்தில் மரப்பலகை கட்டடமாக இருந்த இக்கோயில், 1963-ஆம் ஆண்டில் கல் கட்டடத்திற்கு உருமாறியது. நம் நாட்டில் 13-5-1969-ஆம் நாள் நிகழ்ந்த இனக்கலவரத்திற்குப் பின், தன் சொத்துடைமையை ஒரு சீன வணிகருக்கு விற்றபின் கப்பலேறினார் செட்டியார். வாங்கியத் தோட்டத்தைத் துண்டுப் போட்டு, இவ்வட்டார மக்களுக்கு விற்றார் தோட்டத்தின் புதிய உரிமையாளர். அப்போது மக்களில் நிலம் வாங்கியவர்களில் ஒருவரே அமரர் திரு.செல்வதுரை கந்தர் வைரமுத்து. இவர் அப்போது திபோங், கெமுனிங் தோட்டத்தில் மேநிலை அலுவலராக இருந்தார். பணியில் இருந்து 1973-ஆம் ஆண்டு ஓய்வுபெற்றப் பின்பு, அவர் விநாயகர் தோட்டத்திற்குத் திரும்பி, தம் குடும்பக் கோயிலைக் கவனித்துக் கொண்டார். 1975-ஆம் ஆண்டு இத்திருக்கோயிலின் முதலாவது மஹா கும்பாபிஷேகம் நடந்தேறியது.

1999-ஆம் ஆண்டு அரசு மான்யம் ரி.ம.10,000.00 அக்கோயிலுக்கு வழங்கியதில் 30' X 18' சதுர அடி பரப்பளவு கொண்ட அன்னதான மண்டபம் கட்டப்பட்டது. அக்கட்டுமானப் பணிக்கு ஏற்பட்ட ரி.ம. 4,000.00 பற்றாக்குறையை, அமரர் திரு.செல்வதுரை குடும்பமே ஏற்றுத் திருப்பணியை நிறைவு செய்தனர். 2001-ஆம் ஆண்டில், கோயிலில் மேலும், புனரமைப்புப் பணிகள் தொடர்ந்தன. கோபுரம் கொண்ட முனீஸ்வரர் பீடம் தற்போதைய பிரதான கோயிலுக்குப் பக்கத்தில் அமைக்கப்பட்டது. சிமெண்டால் ஆன தரைக்குப் பதிலாகப் பளிங்குக்கல் தரை உருவானது. மூலவர் சிலையைத் தவிர்த்து இதர மூர்த்திகளின் சிலைகள், முருகன் மற்றும், அம்மன் சிலைகள், கருங்கல் சிலைகளாக மாற்றம் கண்டன. மலாக்கா மாநிலத்தில் புகழ்பெற்ற சிவச்சாரியார்களில் ஒருவரான அமரர் திரு.சுப்பையா அவர்கள் இக்கோயிலில் 15 ஆண்டுகள் இறைத்தொண்டு ஆற்றியுள்ளார். 2008-ஆம் ஆண்டு, தமது 93-ஆம் அகவையில் சிவபதம் அடைந்த திரு.செல்வதுரையின் கோயில் தலைமைப் பொறுப்பை, அவரின் மகன் திரு.பூபாலதுரை இன்றுவரை திறம்பட செய்து வருகிறார்.

செப்டம்பர் மாதத்தில் கொண்டாடப்படும் விநாயகர் சதுர்த்தியே இக்கோயிலின் பிரதான திருவிழாவாகும். 1975-ஆம் ஆண்டு முதல் கொண்டாடப்படும் இவ்விழாவிற்கு மலேசியக் கடல் கலைக்கூடம் (ALAM) இந்து மாணவர்கள் கேப்டன் சிவநந்தன் தலைமையில் கலந்து கொள்வது சிறப்பு அம்சமாகும்.

2020-ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் இக்கோயிலை உள்ளடக்கிய 2 ஏக்கர் நிலத்தைத் திரு இராமையா-அஞ்சலை குடும்பத்தினர் வாங்கினர். 2012-ஆம் ஆண்டு பதிவுப்பெற்றச் சாம்பசிவனார் நன்னெறிக் கழகம் இந்தக் கோயிலின்வழி இறைத்தொண்டு ஆற்றுகின்றது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இந்த ஆய்வு நடைபெற்ற சமயம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.





## AG41 ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம்

***No.24, Ladang Kemuning, Bahagian Rembia, Rembia, 78000 Alor Gajah, Melaka.***

மலாக்கா மாநிலத்தில் பழமையான திருக்கோயில்களில் இக்கோயிலும் ஒன்றாகும். இதன் தோற்றம் 1920-ஆம் ஆண்டு என இத்தோட்டத்தில் வாழ்ந்த முதியவர் ஒருவரின் கூற்றாகும். வழக்கம்போல், இத்தோட்ட மக்கள் தோட்ட நிர்வாகத்தின் அனுமதியோடு இக்கோயிலை அமைத்தனர்.

ரெம்பியா முச்சந்தியிலிருந்து லெண்டு சிற்றூர் செல்லும் வழியில், இரண்டாவது கிலோமீட்டரின் வலதுபுறத்தில் உள்வழி சாலையில், ஏறக்குறைய 100 மீட்டர் தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலைச் சுற்றியும் செம்பனை மரங்கள் சூழ்ந்து, ரம்மியமான காட்சி பார்ப்போர் மனதில் சிக்கெனப்பிடிக்கும். நம் நாடு சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கும் முன், இத்தோட்டத்தில் ஏறக்குறைய 150 தோட்டப்பாட்டாளிகள் வேலை செய்தனர். பலகையிலான சிறிய கோயிலே இத்தோட்ட மக்களின் எல்லா விதமான மங்கள நிகழ்வுகளுக்கும் மையமாய்த் திகழ்ந்தது. இன்றைய நிலையில், 16 நேப்பாளி இந்துத் தொழிலாளர்களுடன் மிகச் சிறிய எண்ணிக்கையிலான மலேசியர்களே இங்கு வேலை செய்கின்றனர். நேப்பாளி இந்துக்கள் மாதாந்திரச் சந்தா செலுத்திக் கோயிலில் நடைபெறும் அனைத்துப் பூஜைகளிலும் கலந்து கொள்கிறார்கள்.

1990-ஆம் ஆண்டில், இத்தோட்டத் கங்காணி திரு.மணியம் மற்றும், திரு.அர்ச்சுனன் பக்கிரிசாமி போன்றோரின் முயற்சியால் தற்போதைய 150' X 80' சதுர அடி பரப்பளவு கொண்ட கல் கட்டடக் கோயில் நிர்மாணிக்கப்பட்டது. இந்தக் கோயில் கட்டமைப்புக்கு அப்போது இருந்த 140 தொழிலாளர்களின் பங்கு அளப்பரியது. சிமெண்டால் செய்யப்பட்ட மூர்த்திகளான மாரியம்மன், விநாயகர் மற்றும், முருகப்பெருமான் அனைத்தும் நீக்கப்பட்டு, கருங்கல் விக்கிரகங்கள் பிரதிஸ்டை செய்யப்பட்டன. 1992 ஆம் ஆண்டில் முதலாவது மஹா கும்பாபிஷேகம் ஆகமப்படி நடந்தேறியது. 2000-ஆம் ஆண்டுகளில் இத்தோட்டம் முழுமையும் செம்பனை நடப்பட்டு, தொழிலாளர்கள் அதிக எண்ணிக்கையில் வேலையிழந்தனர். இருந்தபோதும், இக்கோயிலின் திருவிழாவின் போது, அழகியத் தேரில் அம்பாள் மூன்று கிலோமீட்டர் தூரம் ரெம்பியா பட்டணத்தைச் சுற்றியுள்ள வீடமைப்புத் திட்டங்களுக்குச் சென்று பக்தக்கோடிகளுக்கு அருள்பாலிப்பாள். இத்தேர் ஊர்வலம் வரும் வைபவம் 2001 ஆண்டு முதல் அமலில் உள்ளது.

2019-ஆம் ஆண்டில், திரு.மாணிக்கம் குழந்தை அவர்களின் தலைமையில் திரு.மாறன் அர்ச்சுனன், திரு.துரைராஜ் சிவலிங்கம், திரு.கண்ணன் சுப்பையா மற்றும், கோயில் நிர்வாக உறுப்பினர்களின் பெருமுயற்சியால், ரி.ம.70,000.00 செலவழித்து, பல புனரமைப்புப் பணிகள் செய்யப்பட்டன. கோயில் முழுமையும் சாயம் பூசுதல், மற்றும், கோயிலின் அகலத்தை விசாலப்படுத்துதலும் இதில் அடங்கும். தொடர்ந்து, கோயிலின் மஹா கும்பாபிஷேகம் மிகவும் விமரிசையாக நடந்தேறியது. இக்கோயிலின் முக்கியத் திருவிழா பங்குனி உத்திரம் ஆகும். இத்தோட்டத்தின் உரிமையாளர், சைம் டார்பி நிறுவனம், இன்னாள் மற்றும், மேனாள் தோட்டத் தொழிலாளர்களின் வற்றாத ஆதரவினால் இத்திருக்கோயிலின் பயணம் தொடர்கின்றது. இந்தக் கோயில் நிர்வாகம் இரு தடவை மலேசிய சங்கங்களின் பதிவகத்திற்கு விண்ணப்பித்தும் இதுவரை முறையாகப் பதிவாகவில்லை.



| AG42 | ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | ***Jalan Ayer Paabas, Lendu, 78000 Alor Gajah, Melaka.*** |



லெண்டு சிறு பட்டிணத்திலிருந்து சிம்பாங் அம்பாட் நோக்கி லெண்டு கிராமத்தைத் தாண்டியப் பிறகு இந்த ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயிலை, சாலை ஓரத்தில், வலது புறம் பார்க்கலாம். இந்தக் கோயிலை வேப்பிலைக்காரி மகா மாரியம்மன் கோயில் என்றும் வட்டார மக்கள் அழைக்கின்றனர். 1940-ஆம் ஆண்டுகளில் தோட்டத் தொழிலாளர்களால் இந்தக் கோயில் நிறுவப்பட்டது.

தொடக்கத்தில் இந்தக் கோயில் லெண்டு கெச்சில் தோட்டத்தில், தற்பொழுது கோயில் இருக்கும் இடத்திலிருந்து சுமார் ஐநூறு மீட்டர் உட்புறத்தில் அமைந்திருந்தது. சாயம் டார்பி நிறுவனத்திற்குச் சொந்தமான தோட்டத்தில் முன்பு நூறுக்கும் மேற்பட்ட தமிழர்கள் பணிபுரிந்தனர். இத்தோட்டம் பின்னர் சீனர் ஒருவரின் கைக்கு மாறியது. இதனால், தொழிலாளர்கள் வேலை இழந்து வெளியேறினார்கள். அந்தச் சமயத்தில்தான் இந்தப் பலகையிலான கோயில் சாலையோரமாகக் கட்டப்பட்டது.

ஒரு மரம் சாய்ந்த சமயம், கோயிலின் பிற பகுதிகள் சேதமடைந்தாலும், தெய்வ விக்ரகங்கள் பத்திரமாக இருந்தன. 2017-ஆம் ஆண்டு 15’ X 30’ அளவுள்ள இன்றைய கோயில் கட்டப்பட்டது. ஒரு சீனரின் நன்கொடையால், தரையில் பளிங்குக் கல் பொருத்தப்பட்டது. மஸ்ஜித் தானா ம.இ.கா, தலைவர் டத்தோ ஜி.கண்ணன் ஏற்பாட்டில் கிடைத்த அரசு மான்யம் பத்தாயிரம் ரிங்கிட் இந்தக் கோயில் புதுப்பித்தலுக்குப் பயன்படுத்தப்பட்டது. அதே ஆண்டு கோயில் தலைவர் திரு பிரபு ஞானசேகரன் தலைமையில் கோயிலின் முதல் கும்பாபிஷேகம் நடைபெற்றது.



இந்த மஹா மாரியம்மன் கோயிலின் முக்கியத் திருவிழா செப்டம்பர் மாதம், அருகில் அமைந்துள்ள ஸ்ரீ மகா காளியம்மன் கோயில் திருவிழாவோடு இணைத்து நடத்தப்படுகிறது. இரண்டு கோயில்களும் ஒரே செயற்குழுவால், 1997-ஆம் ஆண்டு முதல், நிர்வகிக்கப் படுகிறது. திரு.முனியாண்டி சுப்ரமணியம், இந்தக்

கோயிலின் முழு நேரப் பண்டாரம். இரண்டு கோயில்களின் சமய நடவடிக்கைகளுக்கு, செயற்குழுவிற்குத் துணை நின்று, செயல்படுகிறார். கோயில் நிர்வாகம், சொந்த இடத்தில் இரண்டு கோயில்களையும் இணைத்துக் கட்ட வேண்டும் எனும் அவாவில் முயற்சி செய்து வருகின்றது. எனினும், இதுவரை, கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG43 | ஸ்ரீ மஹா காளியம்மன் கோயில் |
|---|---|
| | *Jalan Ayer Paabas, Lendu, 78000 Alor Gajah, Melaka.* |



லெண்டு குக்கிராமத்தைச் சுற்றிப் பல ரப்பர்த் தோட்டங்கள் இருந்தன. அவற்றில் பெரும்பாலான தொழிலாளர்கள் தமிழர்களாகவே இருந்தனர். 'கோயிலில்லா இடத்தில் குடியிருக்க வேண்டாம்' எனும் பொது தத்துவத்திற்கேற்ப, அவர்கள் வாழ்ந்த இடங்களில் கோயில்களை நிறுவினர். அப்படி அமைக்கப்பட்டக் கோயில்களில் ஒன்றுதான் இந்த ஸ்ரீ மகா காளியம்மன் கோயில். லெண்டு சிறு பட்டிணத்திலிருந்து சிம்பாங் அம்பாட் செல்லும் வழியில் லெண்டு கிராமத்தைத் தாண்டிய பிறகு, சாலையோரத்தில் வலது புறம், ஸ்ரீ மகா மாரியம்மன் கோயிலுக்குப் பின் புறத்தில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. இரண்டு கோயில்களும் ஒரே நிர்வாகத்தின் கீழ் இருக்கின்றன.

இந்தக் கோயில் 2010-ஆம் ஆண்டு 20' x 10' பரப்பளவில் கட்டப்பட்டுள்ளது. தொடக்கத்தில் ஸ்ரீ காளியம்மன் தேவியின் படத்தை வைத்து வழிபட்டனர். பலருடைய பிரார்த்தனைகள் நிறைவேறியதால் பக்தர்களின் எண்ணிக்கை கூடியது. அவர்களின் நன்கொடைகளால் சிமேண்ட்டிலான ஏழு அடி விக்ரகம் எழுந்தருளியுள்ளது. தற்பொழுது, முதன்மைத் தேவியுடன், சுடுகாட்டுக் காளியம்மா, நாகம்மா, சங்கிலிகருப்பன், போன்றத் தெய்வங்களும் இடம்பெற்றுள்ளனர். இந்தக் கோயிலின் பின்புறம், டத்தோ ஹரிமாவ் பீடம் அமைந்துள்ளது. இந்தக் கோயிலில் உயிர்ப் பலி கொடுப்பதும், மாமிச உணவு பயன்பாடும் அனுமதிக்கப்படுகிறது.

இந்தக் கோயிலின் முக்கியத் திருவிழா அருகிலுள்ள ஸ்ரீ மஹா மாரியம்மன் கோயிலுடன் இணைந்தே செப்டம்பர் மாதம் நடைபெறுகிறது. கால் ஏக்கர் பரப்பளவில் இரண்டு கோயில்களும் இருக்கின்றன. கோயில் நிர்வாகம் இந்த இரண்டு கோயிலுக்காகவும் சொந்த நிலத்தைப் பெற்று ஒரே கோயிலாக நிர்மாணிக்க முடிவு செய்து செயல்பட்டுவருகின்றது. எனினும், இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இந்தக் கோயில் நிர்வாகம் பதியவில்லை.



| AG44 | ஸ்ரீ மகா வடபத்ர காளியம்மன் கோயில் |
| --- | --- |
| | *Jalan Batu Belaga, Rembia, 78000 Alor Gajah, Melaka.* |

ரெம்பியா சிறு பட்டணத்தில் அமைந்துள்ள பயணிகள் இளைப்பாறும் மையத்தின் முன் ஒரு சாலை ரெம்பியா தொழிற்பேட்டைப் பகுதிக்குச் செல்கிறது. அதில் ஒரு கிலோமீட்டர் சென்றால், கியாவ் மின் சீனப் பள்ளியைத் தாண்டி இந்த ஸ்ரீ மகா வட பத்ர காளியம்மன் கோயில் தென்படும். தொடக்கத்தில் இந்தக் கோயில் இங்கு அமைந்திருந்த டிராகன் தோட்டத்தில் வீற்றிருந்தது. அத்தோட்டத்தில் பணிபுரிந்த தொழிலாளர்கள், தோட்ட முதலாளியின் அனுமதியுடன் 1960-ஆம் ஆண்டுகளில் அமைத்த கோயில் இது. தொடக்கத்தில் இது ஒரு பலகையிலான கட்டடமாக இருந்தது.

1980-ஆம் ஆண்டுகளில் இந்த டிராகன் தோட்டத்தை, மலாக்கா அரசின் பொருளாதார மேம்பாட்டுப் பிரிவு வாங்கி ஒரு தொழிற்பேட்டையை உருவாக்க, ஜாரினா குழுமத்துடன் முற்பட்டது. புதிய நில உரிமையாளர், கோயிலை இடம் மாற்றிக் கொள்ளும்படி கோயில் நிர்வாகத்தை வலியுறுத்த, திரு விசுவநாதன் சின்னையா, தோட்டத்தில் கங்காணியாகப் பணிபுரிந்தவர், கோயிலைத் தேசிய மின்சார வாரியத்திற்குச் சொந்தமான நிலத்திற்கு மாற்றினார். தற்பொழுது 60’ X 60’ எனும் அளவுள்ள நிலப்பரப்பில், மின்சார வாரியத்தின் எழுத்துப் பூர்வமான அனுமதியுடன் இந்தக் கோயில் இருக்கின்றது. எனினும், கோயில், மிக சக்திமிகுந்த மின் கம்பிகள் செல்லும் வழியில் அமைந்துள்ளது.



எனவே, தேசிய மின்சார வாரியம் கோயில் நிர்வாகத்திற்குப் பல நிபந்தனைகளை விதித்தே அனுமதி வழங்கியுள்ளது. கோயிலுக்கு மின்சாரம் அளிக்கப்படாது. ஜெனரேட்டர் பயன்படுத்தித் திருவிழா போன்ற குறிப்பிட்டப் பூஜைகளைச் செய்யலாம்.



கோயிலுக்கான கட்டடம் இந்துச் சமயக் கோட்பாடுகளை ஒட்டி விரிவு படுத்தலாகாது. இத்தகைய நிபந்தனைகளுடன் இந்தக் கோயில் இயங்கிவருகிறது. எனினும், முறையான கோயில் வேண்டுமானால் இடம் மாறிச் செல்லவேண்டும்.

இந்தக் கோயிலின் தலைவரும், பண்டாரமுமான திரு கணேசன் ரத்தினம், சனிக்கிழமைகளில் இரவு எட்டு மணிக்கு உதவி தேடி வருபவர்களுக்கு அருள்வாக்குச் சொல்கிறார். ஸ்ரீ மகா வடபத்ர காளியம்மனுக்கான இந்தக் கோயிலில் ஸ்ரீ முனியாண்டி, ஸ்ரீ தேவி நாகம்மா, ஸ்ரீ சிவசக்தி, டத்தோ புலாவ் பெசார் ஆகியோருக்கும் இடம் அளிக்கப்பட்டுள்ளது. இந்தக் கோயில் திருவிழா, ஜூலை மாதத்தில், 1984-ஆம் ஆண்டிலிருந்து நடைபெற்று வருகிறது. உயிர்ப் பலி கொடுப்பதும் மாமிச உணவு படைப்பதும் இந்தக் கோயிலில் அனுமதிக்கப்படுகிறது.

அனேகமாக கோயிலின் நில நிலைமையால், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG45 | **தேவி ஸ்ரீ மகா அசாமலை முனியப்பன், ஸ்ரீமுத்து மாரியம்மன் கோயில்** |
|---|---|
| | ***Ladang Vinayagar PD64, Jalan 5, Taman Bukit Nangka, Sebang, 78000 Alor Gajah, Melaka.*** |

திரு.முனியாண்டி மாரி கவுண்டர் 1960-ஆம் ஆண்டுகளில் அலோர் காஜா லியோங் வாட் ஹின் தோட்டத்தில் பணிபுரிந்தவர். 1969-ஆம் ஆண்டு ஒரு சீனச் செல்வந்தர், மறைந்த திரு ராமநாதன் செட்டியாரிடமிருந்து விநாயகர் தோட்டத்தை வாங்கி, நிலத்தைக் கூறுபோட்டு விற்றச் சமயத்தில், ஐந்து ஏக்கர் நிலத்தைத் திரு முனியாண்டி வாங்கினார். திரு.முனியாண்டியின் மாமனார், மறைந்த திரு சின்னப்பன் கவுண்டர், தமிழ் நாட்டில் தம் உற்றார் உறவினரைச் சந்திக்கச் சென்றார்.

மாமனார் திரும்பி வந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு, திரு முனியாண்டி கனவு கண்டார். அதில், அவர்களுடைய குலத்தெய்வம் அவருடைய மாமனாரோடு வந்திருப்பதாகவும், மனிதனைப் போன்ற உருவமுள்ள ஒரு கல் அவரின் நிலத்திலுள்ள மண்புற்றின் அருகில் இருப்பதையும் காட்டியது. மறுநாள் அவரின் கனவு உண்மையென அறிந்தார். அதே 1969-ஆம் ஆண்டில் அவர்களின் குலத்தெய்வம் ஸ்ரீ அசாமலை முனியப்பனுக்காக ஒரு கொட்டகையையும், அருகில் ஸ்ரீ மகா மாரியம்மனுக்காக மற்றொரு கொட்டகையையும் எழுப்பினார்.

திரு.முனியாண்டியின் மறைவிற்குப் பிறகு, 1985-ஆம் ஆண்டு, அவரின் புதல்வர் திரு எம்.ராமன் கோயிலின் பொறுப்புகளை ஏற்றார். மறைந்த திரு.முனியாண்டியின் நான்கு பிள்ளைகளுக்கும் இந்தக் கோயிலும் நிலமும் சொந்தம். 2003-ஆம் ஆண்டு துர்க்கா தேவிக்கு ஒரு பீடமும், காளியம்மனுக்கு ஒரு



பீடமும் பிரதான கோயிலுக்கு அருகில் அமைத்துள்ளனர். நாகம்மா, ஆஞ்சநேயர், மதுரைவீரன், மற்றும், டத்தோ பூத்தே ஆகிய தெய்வங்களுக்குப் பிரதான கோயிலுக்குப் பக்கத்தில் பீடம் அமைத்துள்ளார்கள். கோயிலை 2004-ஆம் ஆண்டு புதுப்பித்துக் கட்டியுள்ளார்கள். சிவஸ்ரீ பாஸ்கரன் குருக்கள் 2005-ஆம் ஆண்டு துர்கை அம்மனுக்குச் சண்டி ஓமம் செய்தார்.

இன்று, திரு மு. ராமன் இந்தக் கோயிலின் பண்டாரமாக இருந்து ஒவ்வொரு மாதமும், முதல், கடைசி சனிக்கிழமைகளில் அருள்வாக்கு வழங்குகிறார்.





டத்தோ பூத்தே இறங்கினால், மலாய் மொழியிலும், 'ஐயா' இறங்கினால் தமிழிலும் அருள்வாக்கு வழங்குவார். இந்தக் கோயிலில் திருவிழா மூன்று நாட்களுக்கு, ஆகஸ்ட் மாதம் முதல் தேதியிலிருந்து பத்தொன்பதாம் தேதிக்குள் ஆண்டுதோறும் நடைபெறுகிறது. டத்தோ பூத்தேயிற்கான திருவிழா ஆண்டுதோறும் செப்டம்பர் மாதம் பதினெட்டாம் திகதி நடைபெறும்.

இந்தக் கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பதும், மாமிச உணவு பரிமாறுதலும் அனுமதிக்கப்படுகிறது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG46 | ஸ்ரீ மகா வீர காளியம்மன் கோயில் |
|---|---|
| | *MC 414, Taman Mawar Jaya, Machap Umboo, 78000 Alor Gajah, Melaka.* |

திரு மோகன் கோபாலின் குடும்பத்தினரால் இந்தக் கோயில் 2001-ஆம் ஆண்டில் ஒரு சிறிய கோயிலாகத் தொடங்கப்பட்டது. 2013-ஆம் ஆண்டு முதல் பெரிய செலவில் கோயில் கட்டடத்தின் விரிவாக்கம் நடந்துள்ளது. எனினும், இந்த இடம் மலாக்கா நீர் நிறுவனத்திற்குச் (SAMB) சொந்தமாக இருப்பதால் அந்த இடத்தைவிட்டு வேறு இடத்திற்கு மாறி செல்லுமாறு அரசாங்கம் அவர்களைக் கேட்டுக்கொண்டுள்ளது. மேல்முறையீடு செய்து இருப்பினும், அலோர் காஜா நகராட்சி மன்றம் அரசாங்கத்தின் முடிவில் உறுதியாக இருக்கின்றது. அதற்குக் காரணம் அங்குள்ள சீன சமூகத்தினர் அந்தக் கோயில் அங்கு இருப்பதை விரும்பவில்லை. அரசு மாற்று நிலம் கொடுத்தும் அங்கு மாறிச் செல்ல இந்தக் கோயில் நிர்வாகம் விரும்பவில்லை. ஆகையால், பிரச்சினையைத் தீர்க்கத் தொடர்ந்து சம்பந்தப்பட்டவர்களுடன் விவாதிக்கப்பட்டு வருகிறது.







கோயில் தலைவர் மேல் இறங்கும் வீரகாளியம்மன் தெய்வத்திடம் அருள்வாக்கு வேண்டி பலர் இங்கு வருகின்றனர். ஒவ்வொரு மாலையும் இங்கு அருள்வாக்கு கூறப்படுவதால் தங்களுடைய கஷ்டங்களை எடுத்துக் கூறவும் பிரச்சினைகளிலிருந்து விடுபடவும் வழிகாட்டலை வேண்டியும் இங்கு பலர் வருகின்றனர். இதில் நம்பிக்கை உள்ள பலர் இந்தக் கோயிலுக்கு நன்கொடைகளைத் தாராளமாக வழங்குவதால் இந்தக் கோயிலை விரிவாக்கம் செய்துள்ளனர். நன்கொடைகள் சில சமயம் கால்நடைகளின் வடிவிலும் கொடுக்கப்படுகிறது. அதனால், இந்த ஆய்வு நடைபெற்ற சமயம் இந்தக் கோயிலின் பராமரிப்பில் ஏறக்குறைய 50 மாடுகளும் 200 ஆடுகளும் இருந்தன.

இக்கோயிலின் ஆண்டுத் திருவிழா ஆடி மாதத்தில் (ஜூலை / ஆகஸ்ட்) தொடர்ச்சியாக ஏழு நாட்கள் நடைபெறும்போது ஏறக்குறைய 100 ஆடுகள் விருந்துக்காக உயிர்ப்பலி கொடுக்கப்படுகின்றன.



கோயில் நிர்வாகம் மலேசிய சங்கப் பதிவாளரிடம் 2019-ஆம் ஆண்டில் ஒரு பக்தர்கள் சங்கமாகப் பதிவுப் பெற்றுள்ளது. கோயில் சார்பாக நிதி திரட்டுவது ஒரு பிரச்சினை இல்லை. எனினும், கோயிலுக்கான நிலம், மற்றும், கோயில் கட்ட அனுமதி ஆகியவை ஆய்வு நடத்தப்பட்ட சமயம் ஒரு பிரச்சினையாகவே விளங்கியது.

| AG47 | ஓம் ஸ்ரீ சடாமுனி ஆலயம் |
|---|---|
| | ***No.65, Rumah Awam Sri Lendu, Lendu, 78000 Alor Gajah, Melaka.*** |



வாழ்க்கையே ஒரு பயணமாகும். அந்தப் பயணத்திற்குள் ஒவ்வொரு மனிதனும் பொருள் தேடியும் அருள் தேடியும் வெவ்வேறு பயணங்கள் மேற்கொள்கிறான். அம்மனிதன் தம் கருத்திற்கிசைந்த கடவுளை மனம், மெய், மொழிகளால் வழிபட்டு வாழும் செயல் மாண்புமிக்க அறமாகும். அத்தகைய பண்பின் வழி, திரு.விஜயன் முனியாண்டி அவர்கள் தான் வசிக்கும் ரூமா அவாம் ஸ்ரீ லெண்டுவில் தன் மனை வராந்தாவிலேயே, 10' X 8' பரப்பளவில் சிறுகோயிலைக் கட்டி வழிபடுகிறார். இது ஒரு குடும்பக் கோயிலாகும்.

ஓம் ஸ்ரீ சடாமுனி அல்லது பாமர மக்களிடையே 'ஐயா' என்று அன்பொழுக வழிபடும் இத்தெய்வம் திரு.விஜயன் குடும்பத்தின் குலத்தெய்வமாகும். அவர் கடந்து வந்த பாதையை நோக்குவோம். 1990 ஆம் ஆண்டுகளில் அவர் ஜொகூர் மாநிலத்திலுள்ள தங்காக் தோட்டத்தில் புல்டோசர் ஓட்டுநராகப் பணிபுரிந்தார். அப்போது, அத்தோட்டத்திலுள்ள கோயிலை உடைத்து, அதிலுள்ள தெய்வ விக்ரகங்களைக் கடலில் கிடத்தக் கோயில் நிர்வாகம் முடிவெடுத்தது. அதை அறிந்த திரு.விஜயன், தான் சடாமுனி பக்தரென்றும், அக்கோயிலில் வீற்றிருந்த நான்கு அடி சடாமுனி தெய்வச் சிலையைத் தமக்குக் கொடுக்கும்படி வேண்டினார். கோயில் நிர்வாகமும் பண்டாரமும் அவரின் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்தார்கள். அத்தெய்வச் சிலையை அவர் ஸ்ரீ லெண்டுவில் உள்ள தன் சொந்த வீட்டிற்குக் கொண்டு வந்து வழிபடலானார். 1997-ஆம் ஆண்டு தன் சொந்தச் செலவில் அழகிய சிறுக் கோயிலை அமைத்து, சடாமுனிவரோடு முனியாண்டி மற்றும், முனீஸ்வரர் தெய்வங்களையும் மானசீகமாகக் கும்பிட்டு வருகிறார். பக்தர்களின் வேண்டுகோளுக்கு இணங்க, இவர் வார இறுதியில் அருள்வாக்குக் கொடுக்கின்றார்.

இம்மனைத் திருக்கோயிலின் திருவிழா ஆண்டுதோறும் டிசம்பர் 25-ஆம் திகதி கொண்டாடப்பட்டு வருகிறது. இப்பாரம்பரியம் 2000-ஆம் ஆண்டு முதல் நடப்பில் உள்ளது. நூற்றுக்கும் அதிகமான அவரின் உறவுகள், நண்பர்கள், பொதுமக்கள் கலந்து சிறப்பித்து ஓம் ஸ்ரீ சடாமுனிவரின் அருளாசி பெறுகின்றனர். ஆங்கில, தமிழ்ப் புத்தாண்டு, பொங்கல், மற்றும், தீபாவளி நன்னாளிலும் இவ்வீட்டுக்கோயிலில் சிறப்புப் பூஜை நடைபெறும். ஸ்ரீ லெண்டு பொதுமக்கள் வீட்டுமனைத்திட்டத்தில் அதிகமாக வசிப்பது மலாய்ச் சகோதரர்கள் இனத்தவரே. இவர்கள் நம் இந்து மக்களின் இறை நம்பிக்கையை மதிப்பதோடு மட்டுமின்றி, புரிந்துணர்வோடும் வாழ்ந்து வருகின்றனர். இத்தகைய சகோதரப் பண்பு, பல்லினம் வாழும் நம் நாட்டில் மேலும், வலுப்பெற்றால், அதுவே நம் நாட்டின் சிறந்த அடையாளமாகும்.



இந்தக் கோயிலில் உயிர்ப்பலி கொடுப்பதும், மாமிச உணவுப் பரிமாறுதலும் அனுமதிக்கப்படுகிறது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

## AG48 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Lot 1752, Kampung Bukit, Pulau Sebang, 78000 Alor Gajah, Melaka.***



சைம் டார்பி நிறுவனத்திற்குச் சொந்தமான பெகோ தோட்டம் அ பாமோசா உல்லாசத் தளம் மற்றும், ஹொண்டா நிறுவனத்தின் மேம்பாட்டுக்கு நிலம் கைமாறிய போது இங்கிருந்தக் கோயில்களும் இடம் மாற வேண்டியச் சூழ்நிலை ஏற்பட்டது.

பூலாவ் செபாங் (AG23) மற்றும், சிம்பாங் அம்பாட் (AG38) இடங்களில் மாற்று இடம் பெற்றுக் கோயில்கள் நிறுவப்பட்டிருந்தாலும், பெகோ தோட்டத்தில் இருந்த மீதிக் கோயில் விக்ரகங்களை அங்கு குருக்களாகப் பணியாற்றிய திரு கிருஷ்ணன் குருக்களிடம் தோட்ட நிர்வாகம் ஒப்படைத்தது. இவற்றைத் தன் சொந்த நிலத்திற்குக் கொண்டு செல்லவேண்டியக் கட்டாயத்திற்கு ஆளாக்கப்பட்ட அவர் அங்கு ஒரு சிறியக் கோயிலை உருவாக்கி இது வரை பராமரித்து வருகிறார்.

இந்தக் கோயில் தற்போது இருக்கும் இடம் தற்காலிகமானதுதான் என்று கருதும் கோயிலின் நிர்வாகம் கோயிலுக்குச் சொந்தமான நிலம் பெற்று கோயிலை மாற்றுவதற்கு முயற்சி செய்து வருகின்றது.

கோயில் தலைவர் மீது மகாமாரியம்மன் வந்து இறங்கி அருள்வாக்குக் கூறுகிறார். நம்பிக்கை உடையவர்கள் மகா மாரியம்மன் உதவியையும் ஆலோசனையும் பெறுவதற்கு இங்கு வருகின்றனர்.

ஆரம்பத்தில் ஆடி மாதத்தில் மாரியம்மன் திருவிழா கொண்டாடப்பட்டு வந்தது. பிறகு புதிய இடத்திற்கு மாறியதும் செப்டம்பர் மாதத்தில், ஆவணியில், தொடர்ச்சியாக ஐந்து நாட்கள் மகா மாரியம்மனுக்குத் திருவிழா எடுக்கிறார்கள். திருவிழாவின் இறுதி நாளன்று ஆடு போன்ற உயிர்ப்பலி கொடுக்கப்பட்டு அசைவ உணவு பரிமாறப்படுகிறது. பெரும்பாலும் முன்பு பெகோ தோட்டத்தில் வேலை செய்தவர்கள் மற்றும், குடும்ப உறுப்பினர்கள், வாரிசுகள், உறவினர்கள் இந்தத் திருவிழாவின்போது இங்கு ஒன்றுக் கூடுகின்றார்கள். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.



| AG49 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
| --- | --- |
| | ***Ladang Kempas, Bahagian Bukit Bachang, 78100 Lubuk China, Melaka.*** |



கத்ரி குழுமத்தின் வசம் இருந்த கெம்பாஸ் தோட்டத்தில் வாழ்ந்த இந்துச் சமயத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் 1940-ஆம் ஆண்டு இந்தக் கோயிலைத் தொடங்கினர். இப்பொழுது இந்தத் தோட்டம் சைம் டார்பி குழுமத்திற்குச் சொந்தமாக மாறியுள்ளது. இந்தக் கோயிலில் ஒரு பகுதியாக ஆற்றங்கரையின் ஓரத்தில் அமைந்திருக்கும் கன்னிக் கோயில் மிகவும் சக்தி வாய்ந்ததாக வழிபாடு செய்பவர்களால் நம்பப்படுகிறது.

இந்தத் தோட்டத்தில் தற்போது எந்தத் தொழிலாளர் குடியிருப்புப் பகுதியும் இல்லை. முன்பு இங்கு வேலை செய்தத் தொழிலாளர்களின் குடும்பங்கள் மற்றும், வாரிசுகளும் அருகிலுள்ள வீடமைப்புப் பகுதிகளில் தங்கி இருப்பதால் அவர்கள் இந்தக் கோயிலுக்கு வழிபாடு செய்ய வருகின்றனர். திருவிழாச் சமயங்களில் முன்பு இங்கு வேலை செய்தத் தமிழ்க் குடும்பங்களைச் சார்ந்த அதிகமானோர் இங்கு வருகை புரிந்து தங்களுடைய நண்பர்கள் மற்றும், உறவினர்களுடன் கலந்து அளவளாவுகின்றனர்.

1970-ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் மாரியம்மன் திருவிழா தொடர்ச்சியாக ஏழு நாட்கள் செப்டம்பர் மாதத்தில் இங்கு நடைபெற்று வருகிறது. இக்கோயிலின் புதிய நிர்வாகம் இக்கோயிலைப் பொருத்தமான வேறு இடத்திற்கு மாற்ற முயற்சி மேற்கொண்டு வருகின்றது. இதனால், கோயிலுக்கு அருகில் வீடமைப்புத் திட்டங்களில் குடியேறியிருக்கின்ற இந்துச் சமயத்தைச் சேர்ந்த மக்கள் நன்மை பெரும் வகையில் சமயம் சம்பந்தமான நிகழ்ச்சிகள் மற்றும், நடவடிக்கைகளை நடத்தத் தீர்மானம் கொண்டுள்ளனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் இதுவரை பதிவாகவில்லை.



| AG50 | ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம் |
| --- | --- |
| | *Ladang Lendu San, Lendu, 78000 Alor Gajah, Melaka.* |



அலோர் காஜா மாவட்டத்தில் எங்கள் ஆய்வுக்குட்பட்ட 56 கோயில்களில் 24 கோயில்கள் 'ஸ்ரீ மஹா மாரியம்மன்' திருநாமம் கொண்டிருக்கின்றன. அவற்றில் ஒன்றே லெண்டு சன் தோட்ட ஸ்ரீ மஹா மாரியம்மன் ஆலயம். சீனருக்குச் சொந்தமான இத்தோட்டத்தில், அமரர் சீனிவாசன் என்பவரின் முயற்சியால் 1940-ஆம் ஆண்டுகளில் இக்கோயில் கட்டப்பட்டது. தோட்ட நிர்வாகத்தின் ஆதரவோடு அமைக்கப்பட்ட இக்கோயில் பலகையிலானது. கால் ஏக்கர் நிலப்பரப்பில் இத்தலம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

லெண்டு சிற்றூரிலிருந்து மஸ்ஜிட் தானா செல்லும் வழியில், மூன்றாவது கிலோமீட்டரில் அலோர் காஜா மாவட்ட ராக்கான் மூடா பயிற்சி மையம் அமைந்துள்ளது. அம்மையத்தை அடுத்து, இடது புறம் நுழைவுச் சாலையில் ஏறக்குறைய 300 மீட்டர் தூரத்தில் கம்பீரமாகக் காட்சியளிப்பது இத்திருக்கோயில். 1983-ஆம் ஆண்டு, இக்கோயிலில் புனரமைப்பு மேற்கொள்ளப்பட்டது. முன்பு, இக்கோயிலில் அனைத்து மூர்த்திகளும் ஒரே கோயில் திருமண்டபத்தில் பிரதிஸ்டைச் செய்யப்பட்டிருந்தன. கட்டமைப்பு மாற்றத்திற்குப் பின், தேவி மாரியம்மன், விநாயகப்பெருமான், முருகப்பெருமான் விக்கிரங்கள் பிரதானக் கோயிலிலும், முனீஸ்வரர் மற்றும், காளியம்மா பிரிதொரு கோயிலிலும் பிரதிஸ்டைச் செய்யப்பட்டன. இந்தக் கட்டட மேம்பாட்டிற்குப் பின், இத்தோட்டத்தில் வாழ்ந்த 150 குடும்ப உறுப்பினர்கள் நன்முறையில் தங்கள் வழிபாட்டினைச் செய்ய முடிந்தது.

2008-ஆம் ஆண்டு, மஸ்ஜிட் தானா ம.இ.கா. தொகுதித் தலைவர் டத்தோ ஜி.கண்ணன் அவர்கள் அரசாங்கத்திடமிருந்து ரி.ம.10,000.00 நன்கொடையாகப் பெற்றுத் தந்தார். அந்த மான்யத்தில் கோயிலின் கூரை மாற்றப்பட்டது. கோயில் சிமெண்டு தரை, பளிங்குத் தரையாக உருமாறியது. தொடர்ந்து, டத்தோவின் அரும்முயற்சியால், லெண்டு - மஸ்ஜிட் தானா சாலையிலிருந்து கோயிலுக்குச் செல்லும் நுழைவுச் சாலை சீர்செய்யப்பட்டு, இப்பொழுது நல்ல நிலையில் உள்ளது.



இத்திருக்கோயிலின் வருடாந்திரத் திருவிழா தமிழ் மாதமான ஆவணியில் நடைபெறும். இவ்விழா 1983-ஆம் ஆண்டு முதல் நடைபெற்று வருகிறது. இக்கோயில் ஸ்தாபகரின் மகன், திரு.ஆனந்தன் சீனிவாசன் தற்போது இத்திருக்கோயிலைத் தலைமையேற்று நடத்தி வருகிறார். அவரின் தாழ்மையான

வேண்டுகோள் யாதெனில், இதுகாறும் தோட்ட வளர்ச்சியில் பங்குகொண்ட இந்தியத் தொழிலாளர்களின் அர்ப்பணிப்பைக் கருத்திற்கொண்டு கோயிலுக்கு அரை ஏக்கர் நிலம், சொத்துடைமையாளர் நன்கொடையாகத் தந்தால் அவர்கள் நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள் என்பதே! தோட்ட உரிமையாளர் ஆய்வு நடைபெற்ற சமயம் வரை பதில் கூறவில்லை. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG51 | ஸ்ரீ மகா காளியம்மன் கோயில் |
|---|---|
| | ***Ladang Kuala Sungai Baru, Kampung Air Molek, 78200 Kuala Sungai Baru, Melaka.*** |



இங்குள்ளத் தோட்டத் தொழிலாளர்களால் 1900-ஆம் ஆண்டுகளில் இந்தக் கோயில் உருவாகியிருக்கலாம் என்று கருதப்படுகிறது. இது முதலில் கன்னிக் கோயில் என்றழைக்கப்பட்டது. பின்னர், ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் என்று பெயர் மாற்றம் கண்டது. இங்கு வாழ்ந்தவர்களின் கூற்றுப்படி இங்குள்ளவர்கள் ஒரு பெரிய கோயிலைக் கட்டி இந்தத் தேவதையைப் புதிய இடத்திற்கு மாற்ற இருந்தார்கள். ஆனால், இந்தச் சிறிய மூலக் கோயிலில் உள்ள அம்மன் நகர மறுத்துவிட்டார் என்பதால் இன்றுவரை பழைய இடத்திலேயே இங்குள்ள இக்கோயில் விசுவாசமிக்கப் பக்தர்களால் பராமரிக்கப்பட்டு வருகிறது.

சைம் டார்பி குழுமத்தில் இருக்கும் இந்தத் தோட்டத்தில் இன்று தமிழர்கள் யாரும் வேலை செய்யவில்லை. முன்பு வேலை செய்தவர்களின் குடும்பங்கள் இன்று அருகில் இருக்கக்கூடிய குடியிருப்புப் பகுதிகளில் வசிக்கிறார்கள். இருப்பினும், இக்கோயிலில் வந்து வழிபடுவதைத் தோட்ட நிர்வாகம் தடுக்கவில்லை. இங்கு வந்து வழிபடுபவர்கள் அனைவரும் இந்தக் கோயிலில் இருக்கும் தெய்வத்திற்குப் பெரும் சக்தி இருப்பதாக உணர்கிறார்கள். இந்தக் கோயில் தொடங்கப்பட்டதிலிருந்து, ஆண்டுதோறும் ஜூலை / ஆகஸ்ட் மாதங்களில், அதாவது, தமிழ் ஆடி மாதத்தில் இங்குள்ள ஸ்ரீ மகா மாரியம்மனுக்குத் தொடர்ச்சியாக மூன்று நாட்கள் திருவிழா நடைபெறுகிறது. முன்பு இங்கு வேலை செய்தக் குடும்பங்களின் வாரிசுகள், உறவினர்கள் மற்றும், நண்பர்கள் இந்தத் திருவிழாவின்போது இங்கு ஒன்று கூடுவது விசேஷமாகும்.

கோயிலின் நிர்வாகக்குழு புதிய நிலத்தை வாங்கி அங்கு கோயில் கட்டுவதற்காக நிதி திரட்டும் முயற்சிகளில் ஈடுபட்டு வருகின்றனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை, மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.



| AG52 | ஸ்ரீ முனீஸ்வரர் கோயில் |
| --- | --- |
| | *No 389, Jalan Keretapi Lama, Kampung Pengkalan, 78000 Alor Gajah.* |



முன்பு கே.டி.ம். எனப்படும் ரயில்வே இலாகாவின் நிலத்தில் வாடகைக்கு இருந்த திரு பத்திநாதன் அவர்களின் இடத்தில் திரு. சுரேஷ் என்பவரால் 2000-ஆம் ஆண்டில் இந்தக் கோயில் தொடக்கப்பட்டது. ஒவ்வொரு சனி மற்றும், ஞாயிற்றுக்கிழமைகளில் முனீஸ்வரன் பெயரில் அருள்வாக்கு வழங்கப்படுகிறது. இந்தச் சேவையைப் பெற்றுக்கொள்ள பல பக்தர்கள் இந்தக் கோயிலை நாடி வருகிறார்கள்.

கோயிலின் தலைவர் மற்றும், அவரது குடும்ப உறுப்பினர்களால் நிர்வகிக்கப்படும் இந்தக் கோயில் ஒரு குடும்பக் கோயிலாகத் தென்படுகிறது. ஒவ்வோர் ஆண்டும் பொங்கலுக்கு முன்பதாக தொடர்ச்சியாக 12 நாட்கள் முனீஸ்வரர் பெயரில் இங்குத் திருவிழாக் கொண்டாடப்பட்டு வருகிறது. திருவிழாவில் அதிகமான பக்தர்கள் கலந்து கொண்டு சிறப்பிக்கின்றனர். திருவிழாவின்போது இங்கு ஆடு போன்ற கால்நடைகளை உயிர்ப்பலிக் கொடுப்பதோடு இந்த அசைவ உணவை வருகை புரிபவர்களுக்குப் பரிமாறுகிறார்கள்.

கோயிலை வேற்று இடத்திற்கு மாற்ற பொருத்தமான நிலத்தைப்பெற கோயிலின் தலைவர் முயற்சி செய்து வருகிறார். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG53 | ஸ்ரீ சப்த கன்னி அம்மன் கோயில் |
| --- | --- |
| | *Ladang Lendu, Jelawai, 78000 Alor Gajah, Melaka.* |





லெண்டு தோட்டத்தில் 1900-ஆம் ஆண்டின் முற்பகுதியில் இந்தக் கோயில் உருவாகி இருக்கலாம் என்று அங்குள்ள மக்கள் நம்புகிறார்கள். காலத்திற்கேற்ப அவ்வப்போது இங்குள்ள மக்களின் வசதிக்கேற்ப பழுதுபார்த்தல் மற்றும், புதுப்பித்தல் போன்ற பல மாற்றங்களை இந்தக் கோயில் அடைந்து வந்துள்ளது. தோட்டம் தற்போது 'சோங் பீ' எனும் சீன நிறுவனத்திற்குச் சொந்தமாக உள்ளது. மேலும், இந்த இடத்தில் மேம்பாட்டுத் திட்டங்கள் அமல்படுத்தும் போது கோயிலுக்கான நிலம் ஒதுக்கித் தரப்படும் என நில உரிமையாளர் வாக்குறுதி அளித்து இருப்பதாகக் கோயில் நிர்வாகம் சொல்கிறது. இந்தக் கோயில் தற்போது தோட்டத்தின் உட்புறத்தில் அமைந்துள்ளது.

கோயில் தலைவர் அங்கு உள்ள பக்தர்களின் துணைக் கொண்டு இந்தக் கோயிலைப் பராமரித்து வருகின்றார். திருவிழாச் சமயத்தில் இங்கு முன்பு வேலை செய்தத் தொழிலாளர்களின் குடும்பங்கள் மற்றும், அவர்களுடைய வாரிசுகள், குடும்ப உறவினர்கள் போன்றோர் வெளியிலிருந்து வருகை தருகின்றனர். கோயில் தொடங்கப்பட்டச் சமயத்திலிருந்து இந்தக் கோயிலில் நடைபெறும் கன்னி அம்மன் திருவிழா தொடர்ச்சியாக ஏழு நாட்கள் ஜூலை மாதத்தில் நடத்தப்படுகிறது. திருவிழாப் போன்ற குறிப்பிட்டச் சிறப்புத் தினங்களில் இங்கு உயிர்ப்பலிக் கொடுக்கப்படுகின்றது. அதோடு, திருவிழாவிற்கு வருகை தரும் பக்தர்களுக்கு அசைவ உணவு பரிமாறப்படுகிறது.



இக்கோயிலுக்கு அருகில் இருக்கும் ஒரு மலையில் ஸ்ரீ கருப்பண்ணசாமி அல்லது சங்கிலி கருப்பன் எனும் பெயரில் ஒரு கோயில் இருக்கிறது. இந்தக் கோயிலையும் இதே நிர்வாகம் நிர்வகித்து வருகிறது. எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG54 | ஸ்ரீ கருப்பண்ணசாமி / சங்கிலி கருப்பன் கோயில் |
|---|---|
| | *Ladang Lendu, Jelawai, 78000 Alor Gajah, Melaka.* |



இந்தக் கோயில் ஒரு குன்றின்மீது அமைந்துள்ளது. ஸ்ரீ கன்னி அம்மன் கோயில் வழியாக இங்குச் செல்ல முடியும். ஸ்ரீ சப்த கன்னி அம்மன் கோயில் நிர்வாகமே இந்தக் கோயிலையும் பராமரிக்கிறது. தோட்டத்திற்கு அருகேயுள்ள அரசாங்க நிலத்தில் இந்தக் கோயில் அமைந்திருக்கிறது. 2003-ஆம் ஆண்டு திரு கன்னியப்பன் கோபால் என்பவரால் தொடங்கப்பட்டது. அவருடையக் கூற்றுப்படி, ஸ்ரீ கன்னி அம்மன் கனவில் தோன்றி இந்தக் கோயிலை அங்கு நிறுவி தொடர்ந்து வழிபட்டு வரும்படியும் கேட்டுக்கொண்டாராம்.



இருப்பினும், திருவிழாக் காலங்களைத் தவிர்த்து மற்ற நேரங்களில் இது குடும்பக் கோயிலாக மட்டுமே தென்படும்.

2003-ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டும் செப்டம்பர் மாதத்தில் கருப்புசாமிக்குத் திருவிழா தொடர்ச்சியாக மூன்று நாட்கள் நடைபெறும். அப்பொழுது, ஆடு போன்ற விலங்குகள் உயிர்ப்பலிக் கொடுக்கப்படுகிறது. அன்று வருகைத் தருவோர்க்கு அசைவ உணவு பரிமாறப்படுகிறது.

கோயிலுக்கு நிலம் கிடைக்கும்பொழுது ஒரே இடத்தில் இரண்டு கோயில்களையும் கட்டுவது என இந்தக் கோயில் நிர்வாகத்தினரும் மற்றும், இங்கு வழிபடுவோரும் தீர்மானித்துள்ளனர். எனினும், இந்தக் கோயில் நிர்வாகம் இதுவரை மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.

| AG55 | ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் |
|---|---|
| | *Ladang Nam Bee, 76460 Tebong, Melaka.*<br>*(Dahulu : Ladang Batu Berkarat ---> Ladang Tong Bee Chan)* |



இந்தக் கோயில் 1957-ஆம் ஆண்டுகளில் பத்து பேர்காராட் ரப்பர் தோட்டத் தொழிலாளர்களால் தொடங்கப்பட்டது. தற்போது இந்தத் தோட்டத்தின் உரிமை முதலில் தொங் பீ சான் மாறி பிறகு நம் பீ நிறுவனத்திற்கு மாறியுள்ளது. இப்போது இந்தத் தோட்டத்தில் இந்துத் தொழிலாளர்கள் யாரும் இல்லை. தொழிலாளர்களின் வீடுகள் இங்கு இருந்தாலும், அவை வேறு சமயத்தைச் சேர்ந்த வெளிநாட்டுத் தொழிலாளர்களால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ளன. தொழிலாளர்களின் வீடுகளில் சில இடிக்கப்பட்டுவிட்டன.

இங்குப் பணிபுரிந்த ஒரு சில இந்துக்கள் மட்டுமே வழிபாட்டிற்காக கோயிலுக்கு வர அனுமதிக்கப்படுகிறார்கள். இந்தப் பகுதியில் வெளியார் யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. கோயிலில் வழிபடுபவர்கள் குறைந்துள்ளதால் கோயில் கிட்டத்தட்ட வெறிச்சோடிய நிலையில் உள்ளது.

கோயிலின் வழிபாடு மற்றும், தூய்மையை நிர்வகிப்பதற்காகத் தற்போது இத்தோட்டதிற்கு அருகில் உள்ள குடியிருப்புப் பகுதியில், அதாவது, மாச்சாப் பகுதியில் வசித்து வரும் முன்னாள் தொழிலாளர் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவரைத் தோட்ட நிர்வாகம் நியமித்துள்ளது.



வருடாந்திரத் திருவிழாவைத் தவிர சிறப்புப் பூஜைகள் ஏதும் கிடையாது. திருவிழா மார்ச் மாதத்தில் வசதிக்கேற்ப சனி அல்லது ஞாயிற்றுக் கிழமைகளில் நடைபெறுகிறது. திருவிழா நடத்துவதற்கும் தோட்ட நிர்வாகத்திடம் அனுமதி பெற வேண்டும் எனும் விதி உள்ளது.



இந்தத் திருவிழாச் சமயத்தில் தோட்டத்திற்கு அருகில் வசிக்கும் சில குடும்பங்களைத் தவிர அதிகமான வருகையாளர்கள் வருவது இல்லை. இதற்குக் காரணம் இக்கோயில் அமைந்துள்ள பகுதிக்கு வெகு அருகில் உள்ள பிற கோயில்கள் வெகு விமரிசையாகத் தங்கள் திருவிழாக்களை நடத்துவதால் இந்தப்பகுதிகளில் முன்பு வாழ்ந்தவர்கள் இக்கோயில்களுக்கு வருகை தருவதையே அதிகம் விரும்புகின்றனர்.

தோட்ட நிர்வாகத்தின் அனுமதி இல்லாதக் காரணத்தால் இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவு பெறவில்லை. நிலம் தோட்டத்திற்குச் சொந்தமாக இருப்பதாலும் மற்றும், கட்டடம் தோட்ட நிர்வாகத்தால் பராமரிக்கப்படுவதாலும் இங்கு எந்தவித மாற்றமும் செய்ய இயலாது.

தற்போது இதைப் பராமரித்து வருபவர் அந்தப் பகுதியில் வாழும் பிற இந்துக்களுடன் இணைந்து கோயிலை மாச்சாப் பகுதிக்கு மாற்றம் செய்யும் முயற்சியில் அந்தப் பகுதியின் சட்டமன்ற உறுப்பினருடன் பேச்சு வார்த்தை நடத்தி வருகின்றனர்.

## AG56 ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில்

***Jalan Keretapi Lama, Pengkalan, 78000 Alor Gajah, Melaka.***

இந்தக் கோயில் 1931-ஆம் ஆண்டு பெங்காளான் பகுதியிலிருந்த லியான் ஹுவாட் ரப்பர் தோட்டத்தில், அங்குப் பணிபுரிந்த இந்துத் தொழிலாளர்களால் கட்டப்பட்டது. 2007-ஆம் ஆண்டு நில மேம்பாட்டாளருக்குத் தோட்ட உரிமையாளர் தோட்டத்தை விற்றுவிட்டார். நில மேம்பாட்டாளார் வீட்டுமனைகளைக் கட்டத் திட்டம் கொண்டிருந்ததால், கோயிலுக்கு நிலம் ஒதுக்கிக் கொடுக்க மறுத்து விட்டார்.



இறுதியில் செயற்குழுவினரின் தொடர் வேண்டுகோளுக்குச் செவிசாய்த்த நில மேம்பாட்டாளர், கோயில் நிர்வாகம் அதன் சொந்த முயற்சியில் மாற்று நிலத்தைக் காட்டினால், அங்குப் பழையக் கோயிலைக் கட்டிக் கொடுக்க ஒப்புக்கொண்டார். பல முயற்சிகள் செய்தும் முறையான மாற்று நிலம் கிடைக்கவில்லை. பெங்காளான் பகுதியில் மலாயன் ரயில்வேக்குச் சொந்தமான நிலம் அப்பொழுது மலாக்கா மாநில அரசின் நிர்வாகத்தின் கீழ் வந்திருந்ததால், அதில் பல குடும்பங்கள் ஆக்கிரமித்து வாழத் தொடங்கினர். மாநில அரசும் தற்காலிக அனுமதியைப் பல குடும்பங்களுக்குக் கொடுத்தது. அத்தகைய தற்காலிக அனுமதியை பெற்றிருந்த திரு. தமிழ்செல்வன் என்பவர், அவர் பெயரில் தற்காலிக அனுமதியைக் கொண்ட நிலத்தில் கோயிலை நிறுவிக்கொள்ள அனுமதி கொடுக்கவே, ஏறக்குறைய 5,000 சதுர அடி கொண்ட அந்த இடத்தில் கோயில் கட்டடத்தை, பழைய அமைப்பை ஒட்டியே, பழைய விக்ரகங்களையும் கொண்டு, நில மேம்பாட்டாளர் அமைத்துக் கொடுத்தார். எனினும், இந்தக் கட்டடத்திற்கு அலோர் காஜா மாவட்ட மன்றத்தின் அங்கீகாரம் கோரப்படவில்லை; காரணம் தற்காலிக அனுமதியிலுள்ள நிலத்தில் நிரந்தரக் கட்டடம் எழுப்ப இயலாது.

இன்றுவரை இந்தக் கோயில் அரசாங்க நிலத்திலேயே இருப்பதால் கோயில் நிர்வாகம் முறையான நிலப்பட்டாவைக் கோயில் பெயரில் எடுக்க, அலோர் காஜா மாவட்ட மன்றம், மலாக்கா மாநில அரசு ஆகியற்றின் வழி முயற்சி செய்துவருகின்றனர்.

தற்பொழுது ஏறக்குறைய முப்பது இந்துக் குடும்பங்கள் இப்பகுதியில் வாழ்வதால் இதை ஒரு இந்தியக் கிராமம் என சிலர் அழைக்கிறார்கள். அருகிலுள்ள வீடமைப்புத் திட்டங்களிலும் இந்துப் பக்தர்கள் வாழ்கிறார்கள். எனினும், இந்தக் கோயில், பெரிய கோயிலான பெங்காளான் ஸ்ரீ சித்தி விநாயகர், ஸ்ரீ பாலசுப்ரமணியர் ஆலயத்திற்கு (AG3) மிக அருகில் இருகின்றது. அத்துடன் இந்தக் கிராமத்தில் வாழும் சில குடும்பங்கள் தங்கள் வீட்டு வளாகத்திலேயே குடும்பக் கோயில்களைக் கட்டி வழிபடுகின்றனர். இதனால், இந்தக் கோயிலைத் தொடர்ச்சியாகப் பயன்படுத்துபவர்களின் எண்ணிக்கை சிறியதாக உள்ளது.

எனினும், இக்கோயிலில் சித்திரை மாதத்தில் பத்து நாட்களுக்கு நடைபெறும் ஆண்டுத் திருவிழாவான மாரியம்மன் திருவிழாவின் போது சுமார் ஐநூறு பேர் வரை குதூகலத்துடன் கலந்து கொள்கின்றனர். இந்தக் கோயிலை நிர்வகிப்பவர்கள், பழைய லியான் ஹுவாட் தோட்டத்தில் வாழ்ந்து, இன்று இந்த வட்டாரத்தில் வாழும் குடும்ப வாரிசுகளாக இருக்கிறார்கள்.

எனினும், இந்த ஆய்வு நடைபெற்றச் சமயத்தில் இந்தக் கோயில் நிர்வாகம் மலேசிய சங்கங்களின் பதிவகத்தில் பதிவாகவில்லை.



| 1 | ஸ்ரீ அம்பாஜி கோயில், மலாக்கா |
|---|---|
| | *No: 181, Jalan Ujung Pasir, 75050 Melaka.* |




பாரதத் தேசத்திலிருந்து தீபகற்ப மலேசியாவிற்கு இந்தியர்கள் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வந்ததாகச் சரித்திரப் பதிவுகள் பறைசாற்றுகின்றன. இவர்களின் வரவு பல காலக்கட்டங்களிலும் பல நோக்கங்களைக் கொண்டதாகவும் அமைந்துள்ளது. இந்தியா, குஜராத் மாநிலத்திலிருந்து வந்த குஜராத் வாசனைத் திரவிய வணிகர்களே மலாக்கா மண்ணில் காலடி பதித்த முதல் இந்தியர்கள் ஆவர். 14 ஆம் நூற்றாண்டில் வந்த இவர்கள், மலாக்காவைத் தங்களின் 'பாலைவனச் சோலையாகக் கருதினர். கால ஓட்டத்தில் இவர்களின் எண்ணிக்கை பன்மடங்காகியது. மலாக்காவில் வாழும் குஜராத் மக்களிடையே ஒற்றுமையை வளப்படுத்தவும், அவர்களின் கலை கலாச்சாரம் மற்றும், மதத்தை வளர்க்கவும் ஓர் அமைப்பு தேவை என உணர்ந்தனர். அந்நோக்கத்தை அடைய, 23-04-1972 இல் மறைந்த டத்தோ சி.எம்.சேத் அவர்களின் தலைமையில் ஒரு முன்னோடி செயலவை அமைக்கப்பட்டது. ஸ்ரீ பவஹர்ஜி ராம், ஸ்ரீ அஹன்திலால் மகன்லால் அங்வி, மற்றும், ஸ்ரீ கிம்ஜே பிம்ஜீ போன்ற குஜராத் சமூகத் தலைவர்கள் தங்களின் வற்றாத ஆதரவை இச்செயலவைக்குத் தந்தனர். இவர்களின் அயராத முயற்சியினால் 01-06-1974 இல் மலாக்கா குஜராத்தி சமாஜம் (மகுச) அதிகாரப்பூர்வமாக மலர்ந்தது.

இச்சமாஜம் நிறுவியபின் அதன் முக்கிய இலக்கு, மண்டபம் மற்றும், தங்கும் இருப்பிட வசதிக் கொண்ட ஸ்ரீ அம்பாஜி திருக்கோயிலைக் கட்டுவதாகும். இந்தியாவில் 52 பழமையான, புனிதமான அம்பாஜி கோயில்கள் அல்லது சக்தி பீடங்கள் உள்ளன. அவற்றில், அதிமுக்கியப் புனிதத் தலங்கள் 12 ஆகும். அதில் ஒன்று குஜராத், அனார்ட்டில் அமைந்துள்ள ஸ்ரீ அம்பாஜி கோயிலாகும். மலாக்காவின் குஜராத் சமூகம் அத்தகைய ஸ்ரீ அம்பாஜி கோயிலை இங்கு அமைக்கத் திட்டமிட்டதில் எந்த ஆச்சரியமும் இல்லை. குஜராத் சமூகத்தினரும் பொதுமக்களும் வாரி







வழங்கிய நன்கொடையில் கோயில் நிர்மாணப்பணிக்கு 19-01-1973 இல் ஒரு துண்டு நிலம் வாங்கப்பட்டது. 17-10-1982 இல் மண்டபத்தை உள்ளடக்கிய ஸ்ரீ அம்பாஜி கோயில் நிர்மாணப்பணி பூர்த்தியானது. இதுவே, மலேசியாவிலும் தென்கிழக்கு ஆசியாவிலும் அமையப்பட்ட, அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய முதல் ஸ்ரீ அம்பாஜி திருக்கோயிலாகும்.



நவராத்திரியும் படோட்சவ்வும் (Patotsav) இக்கோயிலில் கொண்டாடப்படும் மிக முக்கிய இரு விழாக்களாகும். ஆண்டுதோறும் செப்டம்பர் - அக்டோபர் மாதக் காலங்களில் 9 நாட்கள் விழாவாகக் கொண்டாடப்படுவது நவராத்திரியாகும். ஒன்பது நாட்களிலும் குஜராத் பக்தர்களும் பொதுமக்களும், குறிப்பாகச் சீன வம்சாவளியினரும் அதிகமாக இக்கோயிலுக்கு வந்து தங்கள் நேர்த்திக்கடனைச் செலுத்துவது சிறப்பு அம்சமாகும். தினமும் மாலையில் பூஜை பூர்ணம் அடைந்தபின் பக்தக்கோடிகளுக்கு பிரசாதம் வழங்கப்படும். இறுதி நாளன்று விசேஷப் பூஜை முடிவுற்றபின், பக்தப் பெருமக்களுக்கு மதிய உணவு வழங்கப்படும். அன்றைய தின இரவில் ஸ்ரீ அம்பாஜி திருவுருவச் சிலை ரதத்தில் ஊர்வலமாக மலாக்கா மாநகரை ஏறக்குறை 10 கிலோமீட்டர் வலம் வந்து பக்தப் பெருமக்களுக்கு ஆசி வழங்கும் காட்சி அற்புதமானது. கண்கொள்ளாக் காட்சியாகும். இரதம் வலம் வரும்போது வழிநெடுகிலும் குஜராத் மற்றும், குஜராத் அல்லாத பக்தர்கள், குறிப்பாகச் சீன பக்தர்கள் அம்பாளின் முன் சீர் எடுத்து வணங்கும் மாண்பு மெய்சிலிர்க்க வைக்கும். சீர் எடுக்கும் குடும்பத்தார் இரதத்தின் வடம் பிடித்து அன்னநடை போடும் பக்தர்களுக்குப் பல்வகை உணவு வகைகளையும் பானங்களையும் அன்பளிப்புச் செய்வர். ஏறக்குறைய 800 உள்நாட்டு




மற்றும், சிங்கப்பூர், தாய்லாந்து போன்ற அயல்நாட்டவரும் இவ்விழாவில் கலந்து அம்பாளின் ஆசி பெறுவர்.

படோட்சவ் விழா (Murti Consecration Anniversary Utsav) என்பது இக்கோயிலில் பகவான் பிரதிஸ்டை செய்யப்பட்டப் புனித நாளாகும். மகராஜ் எனும் புனிதஸ்தர் இவ்விஷேசப் பூஜையை முன்னெடுத்து செய்வார். பல்வகைக் கலை பண்பாட்டு சமய நிகழ்வுகள் இந்நன்னாளில் இடம்பெறும்போது இவ்விழா மேலும், களை கட்டும். ஸ்ரீ பி.தன்சுக்லால் கிர்ட்ஹர்லால், குஜராத் மாநிலத்திலிருந்து இக்கோயிலுக்கு வந்து சேவைச் செய்த முதல் உயர்நிலை மகராஜ்



ஆவர். இவர் 1998-1999, 2004-2006 மற்றும், 2013-2015 ஆகிய மூன்று தவணையில் இத்திருக்கோயிலில் பூசை காரியங்களைச் செய்து பக்தர்களின் அன்பைப் பெற்றவராவார். அவரின் புனிதச் சேவை என்றும் பக்தர்களின் மனதில் ரீங்காரமாய் ஒலிக்கும். பக்தர்களின் நன்மைக்காக இத்திருக்கோயில் தினமும் காலை 7.00 முதல் காலை 10.00 வரையிலும், மாலை 5.00 முதல் இரவு 9.00 வரை திறந்திருக்கும். சரித்திரப்புகழ் வாய்ந்த மலாக்கா மாநகரில் வீற்றிருக்கும் ஸ்ரீ அம்பாஜி மாதா திருக்கோயில், மலாக்கா மற்றும், மலேசிய குஜராத் சமூகத்தின் சமயம், கலை பண்பாடு மையமாகத் திகழ்வதோடு மட்டுமல்லாது அம்மக்களின் ஒற்றுமைச் சின்னமாகவும் பரிபூரணமாக விளங்குகிறது என்றால் அது மிகையாது.

**ஸ்ரீ அம்பாஜியே துணை.**

***(குறிப்புகளைக் கொடுத்துதவியவர்: திரு பாரத் கே. அஜ்மிரா, மலாக்கா ஸ்ரீ அம்பாஜி கோயில் தலைவர்)***

| 2 | **மலாக்கா சீக்கியர் கோயில்** |
|---|---|
| | *150-A, Jalan Temenggong, Kampung Banda Kaba, 75000 Melaka.* |

குர்டுவாரா என்பது சீக்கிய சமூகக் கோயில். 'சீக்கிய' என்பதன் பொருள் 'மாணவர்' அல்லது 'கட்டொழுங்கு' ஆகும். 'சீக்கியர்' எனும் சொல் சீக்கியச் சமயத்தைப் பின்பற்றுபவர் என்பதைக் குறிக்கும். இந்தச் சமயத்தின் புனித நூல் 'ஸ்ரீ குரு கிராந்த சாஹிப் ஜி' ஆகும். 'பஞ்சாபி' எனும் சொல் இனத்தைக் குறிக்கும். எல்லா பஞ்சாபியர்களும் சீக்கியச் சமயத்தைச் சார்ந்தவர்கள் அல்லர் என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.







மலேசியாவில் இன்று ஏறத்தாழ 119 சீக்கியச் கோயில்கள் இருக்கின்றன, அவற்றில் நாற்பதுக்கும் மேற்பட்டவை பேரா மாநிலத்தில் இருக்கின்றன. மலாக்காவில் அமைந்துள்ள ஒரே சீக்கியக் கோயில் உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் உள்ள சீக்கியச் சமூகத்தினர் மத்தியில் பிரசித்திப்பெற்று, ஆண்டுதோறும் மே மாதத்தில் நடைபெறும் கோயில் விழாவில் பெருமளவு கலந்து சிறப்பிப்பதையும், அந்தத் தருணங்களில் கோயில் அமைந்துள்ள தெமங்கொங் சாலையில் நெரிசல் ஏற்படுவதையும் மலாக்கா மக்கள் அறிவர்.

இக்கோயிலில் 3 நாட்கள் நடைபெறும் ஆண்டுத் திருவிழாச் சமயங்களில், குர்டுவாராவில் வணங்கவும் ஆசியைப் பெறவும் பல இடங்களில் இருந்து வரும் சீக்கியக் கோயில் பக்தர்களின் ஆக்கிரமிப்பில் மலாக்கா மாநகரிலுள்ள தங்கும் விடுதிகள் இருக்கும்.



அத்துடன், இந்தக் கோயிலில் காலை முதல் இரவு வரை அனைவருக்கும் சைவ உணவு வழங்கப்படுவது வழக்கமாக இருப்பதும் அனைவரையும் கவர்ந்துள்ளது. சமய-இன பேதம் பார்க்காமல் அனைவருக்கும் இந்தச் சேவை பயன்படுகிறது. இத்தகைய சேவை எல்லா சீக்கியக் கோயில்களிலும் வழக்கமாக இருக்கும்.

ஆங்கிலேயர்களின் காலனித்துவ ஆட்சியின்போது, இந்தியாவின் பஞ்சாப் மாநிலத்திலிருந்து சீக்கியர்களை மலாயாவிற்கு போலீஸ், ராணுவம், காவல் துறைகளுக்காக மலாயா வரவழைத்தார்கள். நாட்டுக் குடியுரிமையைப் பெற்ற அவர்களின் பிள்ளைகள் கல்வி வழி இன்று பல உயர்ப் பதவிகளிலும், தொழில்களிலும் இருக்கின்றனர். இன்று மலேசியாவில் ஏறத்தாழ ஒரு லட்சம் சீக்கியர்கள் பல இடங்களிலும் வசிக்கின்றனர். மலாக்காவிலும் வாழ்கின்றனர்.

மலாக்கா சீக்கியக் கோயிலின் வரலாற்றைப் பார்த்தால், 1900-ஆம் ஆண்டுவாக்கில் மலாக்கா பட்டணத்தில் போலீஸ் துறையில் பணிபுரிந்த சீக்கிய அலுவலர்கள் தாங்கள் தங்கியிருந்த

போலீஸ் இருப்பிடத்தில் ஒரு வீட்டில் சீக்கியர் புனித நூல் ஸ்ரீ குரு கிராந்த் சாஹிப் ஜி பீடத்தை நிறுவி வழிபடத் தொடங்கினர். மலாக்கா பட்டணத்தில் வசித்தச் சீக்கியக் குடும்பங்களும் இங்கு வந்து வழிபட்டனர்.

1909-ஆம் ஆண்டு, தெமொங்கொங் சாலையில், 32,780 சதுர அடி பரப்பளவுள்ள லாட் 99, நிலத்தை வாங்கினர். பலகை, அத்தாப் கொண்டு, போலீஸ் பணியாளர்களுடன் பொது மக்களாக விளங்கிய சீக்கியர்களும், தங்கள் சொந்த முயற்சியில் கட்டடம் எழுப்பி, சீக்கியர் புனித நூல் ஸ்ரீ குரு கிராந்த் சாஹிப் ஜி-பீடத்தை தங்கள் சொந்தக் கோயிலில் நிறுவி வழிபடத் தொடங்கினர்.

தொடக்கத்தில், போலீஸில் பணிபுரிந்த சீக்கியர்கள், மலாக்கா பட்டணத்தின் அருகில் வாழ்ந்த சீக்கியர்கள் மட்டும் பயன்படுத்தியக் கோயிலை, நாளடைவில் மெர்லிமாவ், ஜாசின், அலோர் காஜா, தம்பின், மூவார் போன்ற இடங்களிலிருந்தும் பக்தர்கள் வருகை தந்து வழிபடத் தொடங்கினர்.

1920-ஆம் ஆண்டுகளில் ஏறக்குறைய 200-250 சீக்கியப் போலீஸ் படையினர் மலாக்காவில் பணிபுரிந்தனர். பொது மக்களாக மேலும் பல சீக்கியக் குடும்பங்கள் குடியேறி மலாக்காவில் வாழ்ந்தனர். இதனால், 1924-ஆம் ஆண்டு சீக்கியப் பொதுமக்கள் மத்தியில் இன்னும் பெரிய கோயில் கட்டவேண்டும் எனும் எண்ணம் மேலோங்கியது. போலீசில் பணிபுரிந்த சீக்கியர்களும் ஆதரவு நல்கினர். இதற்கு நிதி திரட்டும் முயற்சியும் துவங்கப்பட்டது.

கோயில் செயற்குழுவினர் கோயில் எத்தகைய பரப்பளவில், எத்தகைய முறையில் கட்டப்படவேண்டும் என்பதைத் துல்லியமாகக் கணித்து, சீனக் குத்தகையாளரிடம் கட்டுமானப் பணியைச் செய்ய ஏற்பாடு செய்தனர். 1925-ஆம் ஆண்டு, அக்டோபர் மாதம் கோயில் நிர்மாணிப்பு வேலை $8,450.00 செலவில் பூர்த்தியடைந்தது. 1925-ஆம் ஆண்டு நவம்பர் மாதம், ஸ்ரீ குரு நானக் சாஹிப் ஜி பிறந்த நாளன்று கோயில் அதிகாரப்பூர்வமாகத் திறக்கப்பட்டது. இந்தத் திறப்பு விழாவின்போது மலாக்காவில் இருந்த சீக்கிய அன்பர்களுடன், மலாயா முழுவதும் இருந்தும், நிறைய சீக்கியப் பக்தர்கள் வருகை தந்தனர். நாட்டில் சீக்கியர்கள் மத்தியில் மலாக்காவில் தோன்றியுள்ள இந்தக் கோயில் ஒரு முக்கியமான இடத்தை இத்தருணத்திலிருந்து பெற்றது என்று சொல்லலாம்.

இந்தக் கோயிலில் பணிபுரிந்த முக்கிய சமயப் போதகர்களில், ஸ்ரீ சண்ட் பாபா சோகன் சிங் ஜி மிக முக்கியமானவராகத் திகழ்கிறார். இக்கோயிலுக்குப் பலமான சமய அடித்தளத்தையும் அதன் முன்னேற்றத்திற்கான வழியையும் வகுத்த இவரின் வழிகாட்டலில், 1927-ஆம் ஆண்டு, அக்டோபர் 24-ஆம் நாள் முதல், 1972-ஆம் ஆண்டு, மே 24 ஆம் நாள் வரை கோயில் வளர்ச்சி நடைபெற்றது என்பது வரலாறு. இவர் வாழ்க்கை இந்தக் கோயிலுடன் ஒன்றியுள்ளது என்பதையும் மறுக்கமுடியாது. இவருடைய அர்ப்பணிப்பையும் சேவையையும் ஒரு பொக்கிஷமாக அழகான நூல் வடிவில் வெளியிட்டுள்ளார்கள் கோயில் நிர்வாகிகளும், இவர் நினைவாக அமைக்கப்பட்ட சங்க உறுப்பினர்களும்.



SANT BABA SOHAN SINGH JI

இவர் பஞ்சாப் மாநிலத்தில் 1902-இல் பிறந்தவர், 1926-ஆம் ஆண்டு மலாயா வந்தவர், தம் மறைவு வரை மலாக்கா கோயிலை அடித்தளமாக அமைத்து, மலேசியாவிலுள்ள எல்லா மாநில சீக்கிய ஆலயங்களுக்கும், பக்தர்களுக்கும் நிறைந்த சேவை ஆற்றியவர். எல்லா பக்தர்களின் அன்பிற்கும் பாசத்திற்கும் ஆளானவர். 1972-ஆம் ஆண்டு அவர் மறைந்தது பெரிய இழப்பு. ஆனால், அவர் ஒரு சகாப்தம் என்பதை இந்தக் கோயிலைச் சார்ந்த யாரும் ஒருபோதும் மறக்கவில்லை.

இந்தக் கோயிலை மேலும் வலுப்படுத்தும் திட்டங்கள் தொடர்ந்தன. இப்பொழுது இந்தக் கோயிலுக்கு உரிய நிலப் பட்டாக்கள் - லாட் 96. 99. 100, 101,167, 168, 170, 171, 234 ஆகியவை. பரப்பளவு 86,914 சதுர அடிகள், அல்லது 1.995 ஏக்கர். இப்பொழுது Gurdwara Sahib Malacca, Kompleks Sant Baba Sohan Singh Ji, Sant Baba Sohan Singh Ji

Dharmak Vidyala, ஆகியவற்றுடன் ஸ்டோர், சமையல் அறை ஆகியவை உள்ளன.

எல்லாராலும் மதித்துப் போற்றப்பட்ட சமயக் குரு சண்ட் பாபா சோகன் சிங் ஜியின் மறைவிற்குப் பிறகு, அவர் நினைவாக நாடு தழுவிய நிலையில், சண்ட் பாபா சோகன் சிங் நினைவு இயக்கம் ஒன்றை அவரின் பற்றாளர்கள் நிறுவினர். மலாக்கா கோயில் நிர்வாகத்திடம் அனுமதி பெற்று, கோயில் நிலத்தில் ஒரு பகுதியில், இளைஞர்களுக்குச் சீக்கிய மார்க்க நெறிகளைப் போதித்து சீக்கியக் கோயில் சமயப் போதகர்களை உருவாக்கும் வகையில் வித்யாலயம் ஒன்றை நிறுவ எண்ணி, அதற்கான கட்டடத்தைக் கட்ட எண்ணினர்.

அதன் அடிப்படையில் 1974 ஆம் ஆண்டு, Sant Baba Sohan Singh Ji Dharmak Vidyala கட்டடம் கட்டத் திட்டம் போடப்பட்டது. 1976 ஆம் ஆண்டு, 23 ஆம் நாள், சண்ட் பாபா சோகன் சிங் ஜி மறைந்த நான்காம் ஆண்டு நிறைவு நாளன்று இக்கட்டடம் அதிகாரப்பூர்வமாகத் திறக்கப்பட்டது. எனினும், பல்வகையான காரணங்களால் திட்டமிட்டப்படி தற்பொழுது பயிற்சி நடக்கவில்லை என்பது வருத்தம்தான்.









1996-ஆம் ஆண்டு, மூன்று மாடிகள் கொண்ட சண்ட் பாபா சோகன் சிங் ஜி வளாகம் ஒன்றை நிறுவத் திட்டம் தீட்டப்பட்டது. இந்தக் கட்டடம் கட்ட இரண்டு மில்லியன் ரிங்கிட் தேவைப்பட்டது. நிதி சேர்க்க பல வியூகங்களைக் கையாண்டும், வேறு பகுதியில் இருந்த ஒரு கோயில் நிலத்தை விற்றும் இந்த வளாகக் கட்டடம் 1998-ஆம் ஆண்டு நிறைவானது. அதே ஆண்டு ஏப்ரல் மாதம் 13-ஆம் நாள் இந்த வளாகம் திறப்பு விழாக் கண்டது.

இந்த வளாகத்தில், கீழ்த்தளத்தில் அலுவலகம், langar உணவருந்தும் மண்டபம், சமையல் பகுதி, ஆகியவை இருக்க, முதல் தளத்தில் சமயத் தலைவரின் இருப்பிடம், மூன்று வகுப்பறைகள், இரண்டு வருகையாளர்களுக்கான அறைகள், Khalsa நூலகம் ஆகியவை உள்ளன. இந்த நூலகத்தில் சண்ட் சோகன் சிங் ஜி சேகரித்து வைத்திருந்த சில அரிய நூல்களும் வைக்கப்பட்டுள்ளன என்பது சிறப்பு.

இரண்டாவது மாடிக்கு வயதானவர்கள், நோய்வாய்ப்பட்டுள்ளவர்கள், ஊனமுற்றோர் போன்றோர் ஏறுவதற்கு வசதியாக மின் தூக்கி உள்ளது. இந்தத் தளத்தில் 5,000 சதுர அடி பரப்புள்ள

Darbar Sahib தொழுகை மண்டபமும், இந்தக் கோயிலுக்கான சீக்கியப் புனித நூல் ஸ்ரீ குரு கிராந்த் ஜி பீடத்துடன் கூடிய மற்றுமொரு தொழுகை மண்டபமும் இருக்கின்றன. இரண்டு பெரிய சமய நிகழ்ச்சிகள் ஏக காலத்தில் நடைபெற இயலும் என்பது இந்தக் கோயிலின் சிறப்பு.

1998-ஆம் ஆண்டு, பழைய கோயில் கட்டடம் புதுப்பிக்கப்பட்டது. பழைய கட்டடத்திலிருந்த பழைய சிற்ப வேலைப்பாடுகளை நிலை நிறுத்தி குவி மாடம், உட்கூரை ஆகியவை புதுப்பிக்கப்பட்டு, அதன் வரலாற்றைத் தக்கவைத்துள்ளது.

சமய அறிஞர் சண்ட் பாபா சோகன் சிங் ஜி அவர்கள் மறைந்த தினத்தை நினைவுகூரும் வகையில் ஆண்டுதோறும் மே மாதம் மூன்றாம் வாரத்தில் akhand path உடன் வழிபாட்டையும் கொண்டு சிறப்பாக விழா எடுக்க மலாக்கா சீக்கிய ஆலயம் முடிவெடுத்தது. சமயப் போதகர்கள், percheraks, kirtan jethas ஆகியோரைக் கொண்டு gurmat perchaar செய்யவும், குறிப்பாகச் சமய அறிஞர் சண்ட் பாபா சோகன் சிங் ஜி போதனைகள் குறித்த விளக்கவுரைகள் கொடுக்கவும் ஏற்பாடாகின. மலேசியா, சிங்கப்பூர், மற்றும், மற்ற நாடுகளிலிருந்தும் சீக்கிய அன்பர்கள் திரளாக வருகைத்தந்து அவர்களின் மனதில் நீங்காத இடம் பிடித்துள்ள சமய அறிஞரின் ஆசி பெற வருகின்றனர்.

இந்த விழா நடைபெறும்பொழுது உணவு-பலகாரங்கள், பாரம்பரிய உடைகள், அலங்காரப் பொருள்கள் போன்றவற்றை முன்வைத்து, பல கடைகள் தெமெங்கொங் சாலையில் போடப்பட்டு, வருகைத்தரும் பக்தர்கள் மட்டுமல்லாது, சீக்கியரல்லாத மற்ற உள்ளூர் வாசிகளும், சுற்றுப்பயணிகளும் அக்கடைகளை முற்றுகையிடுவதைக் காணலாம். இந்த semagam என்று அழைக்கப்படும் விழா மலாக்கா மாநிலச் சுற்றுப் பயணத் துறையின் கால அட்டவணையில் முக்கிய இடம் பதித்துள்ளது.

இன்று மலாக்காவில் நூறுக்கும் குறைவான சீக்கியக் குடும்பங்கள் வாழ்கின்றன. அவர்களுக்கு இந்தக் கோயில்தான் முதன்மையாகப் பயன்படுகிறது. தற்பொழுது ஏறத்தாழ முப்பது மாணவர்கள் பஞ்சாபி மொழியைக் கற்கின்றனர். அத்துடன் Gurmukhi, Gurbani எழுத்துகளையும் பயில்கின்றனர். சனி-ஞாயிற்றுக்கிழமைகளில் வாரந்தோறும் இரு வகுப்புகள் சண்ட் பாபா சோகன் சிங் ஜி வளாகத்தில் நடைபெறுகின்றன.

வாரந்தோறும் தொழுகை ஞாயிற்றுக்கிழமைகளில் காலை ஆறரை மணியிலிருந்து எட்டு மணிவரை Asa Di Waar Kirtan படிப்பதற்கும், Ardas எனும் ஆராதனை செய்வதற்கும், பிரசாதம் பெறுவதற்கும் ஒதுக்கப்பட்டுள்ளது; தொழுகை முடிந்தபிறகு, உணவருந்தும் மண்டபத்திற்கு (Langar) சென்று பசியாறலாம். தேநீர், Peronthay எனும் வெண்ணையுடன் கூடிய ரொட்டி, தயிர் அல்லது மாங்காய்/ எலுமிச்சம் ஊறுகாய் வழங்கப்படும்.

பெண்களுக்கு Isteri Satsang சமயக் கூட்டம் மாதம் ஒரு முறை சங்கராந்தியன்று நடைபெறும்.

எல்லா பத்துச் சீக்கியப் பிரதமச் சமயக் குருக்கள் சம்பந்தமான சிறப்புத் தினங்களையும், வைசாகி தினமும், Parkash Deharu Sri Guru Granth Sahib Ji தினமும் பெரிய அளவில் Akhad Paths Sehaj Paths, வழி அனுசரிக்கப்படுகின்றன. இந்த வைபவங்களின்பொழுது kirtan, ketha Gurbani, Gurmat Perchaar போன்றவற்றை வருகை தந்துள்ள percharaks, ragis போதகர்கள் ஓதுவர். பக்தர்களின் விருப்பப்படி, Jormelas படைக்கப்படும்.

கோயில் நிர்வாகிகள் சிறப்பாகக் கோயில் நடவடிக்கைகளை நடத்துவதுடன், தினசரி உணவு வழங்குவதற்குச் சராசரி நாளொன்றிற்கு அறுநூறு ரிங்கிட் செலவிடுகின்றனர். உள்ளூர் மற்றும், வெளியூர் பக்தர்களின் வற்றாத ஆதரவும், உதவியும் இத்தகைய சேவையைத் தொடர்ந்து ஆற்ற வகைச் செய்துள்ளது. இது சீக்கியச் சமயத்தில் வலியுறுத்தப்பட்டச் சேவையாகும். குறிப்பாகத் திருவிழாக் காலத்திலும், வழிபடும் சமயங்களில் உண்டியலில் போடப்படும் பணமும்தான் கோயில் செலவிற்குப் பயன்படுகிறது. உறுப்பினர்களிடமிருந்து வசூலிக்கப்படும் தொகை மிகக் குறைவே. அவ்வப்போது அரசிடம் இருந்தும் பணவுதவி கிடைக்கின்றது.

ஏறத்தாழ 270 உறுப்பினர்கள் இக்கோயிலில் இணைந்துள்ளார்கள். மலாக்காவில் பிறந்தவர்கள், இந்த மாநிலத்தில் தொடர்ந்து தங்கியுள்ளவர்கள் மட்டுமே உறுப்பினராக முடியும். சந்தா மாதம் ஒரு ரிங்கிட் மட்டுமே. நுழைவுக் கட்டணம் இரண்டு ரிங்கிட் தான்.



எல்லா சீக்கியக் கோயில்களையும் உள்ளடக்கிய மலேசிய சீக்கியச் சம்மேளனத்தில் இந்த மலாக்கா கோயிலும் இணைந்துள்ளது. இந்தச் சம்மேளனம் நாட்டில் சீக்கியச் சமய, பண்பாட்டு, வரலாற்று, பாரம்பரிய விவகாரங்களில் ஒருங்கிணைப்புச் செய்வதிலும், சீக்கியச் சமயம் சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் பிரதிநிதித்துவம் கொடுப்பதிலும் முன்னிற்கிறது,

இச்சம்மேளனம் மலேசிய சர்வ சமய மன்றத்திலும் (MCCBCHST) அங்கத்துவம் பெற்றுள்ளது. குர்துவாரா தேவைகளை அரசாங்கத்திற்குக் கொண்டு செல்லும் வழியாக இதைக் கையாள்கிறது.

இந்த மலாக்கா சீக்கியக் கோயில் பற்றிய வரலாற்றைக் காணும்பொழுது, இதன் வளர்ச்சிக்காக நிறைவானோர் ஈடுபட்டுள்ளனர் - அவர்களின் அர்ப்பணிப்பும், பொதுநல உணர்வும் இந்தக் கோயிலின் அபரிதமான வளர்ச்சிக்குத் துணை நின்றுள்ளது என்பது தெளிவு. மலாக்கா வாழ் சீக்கியச் சமூகத்திற்கு இந்தக் கோயில் பெருமை சேர்க்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை!

***(மலாக்கா சண்ட் பாபா சோகன் சிங் ஜி (1902-1972) வாழ்க்கையும் காலமும் எனும் தலைப்பில் மலாக்கா சீக்கிய கோயிலும், சண்ட் சோகன் சிங் ஜி நினைவு சங்கமும் இணைந்து 2007 ஆம் ஆண்டு வெளியிட்ட நூலிலிருந்தும், விக்கிப்பீடியா வழங்கிய விவரங்களிலிருந்தும், மலாக்கா சீக்கிய கோயில் செயலாளர் திருமதி மண்மீட் கோர் பி.ஜே.கே., கொடுத்த தகவல்களிலிருந்தும், - தொ.க. நாராயணசாமி தொகுத்தது).***

| 3 | **ஜைனிசம்-அகிம்சை அடிப்படையிலான ஆன்மிக சமயம் (சமணம்)** |
| --- | --- |
| | *d/a Bangunan Gujerati Vanik Sang, 107, Jalan Banda Kaba, 75000 Melaka.* |

***மூன்று இதய ரத்தினங்கள்: மெய்யான ஞானம், உண்மையான நம்பிக்கை, நேர்மையான நடவடிக்கை (SBE,45:123-மகாவீர்)***



சமண மதம் அல்லது ஜைன மதம், ஜைன தர்மம் என்றும் அழைக்கப்படுகிறது. தங்களுடைய சமயம் மிகவும் பழமையானது என்று ஜைனர்கள் நம்புகிறார்கள். இது வட இந்தியாவில் தோன்றிய மதம் என்பது சரித்திரச் சான்று. இம்மதப்பற்றாளர்களை ஜைனர் என்பர். இச்சொல்லின் மூலம் சமஸ்கிருதச் சொல்லான 'ஜினா'. இது ஆன்மிக வெற்றியாளர் எனப் பொருள்படும். ஜைனர்களின் ஆன்மிக ஞான வழித்தடம் 24 ஆன்மிகக் குருமார்களான தீர்த்தங்கர்களின் கருத்துகள் பொதிந்துள்ள மத நூல்களே! முதல் தீர்த்தங்கரான ரிஷபனந்த பல மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர். 23-ஆவது தீர்த்தங்கரான பரஸ்வனாத் சுவாமிகள் வாழ்ந்த காலமோ கி.மு. 900. அதிக பெருமையும் ஞானமும் பெற்ற 24-ஆவது தீர்த்தங்கரான மஹாவீரர் வாழ்ந்த காலம் கி.மு. 500. 25-ஆவது தீர்த்தங்கரானவர் கடந்த 2500 ஆண்டுகள் பூமிக்கும் மோட்ச உலகத்திற்கும் இடையில் இருக்கும் மஹாவிடே சேத்திரத்தில் வாழ்ந்துகொண்டு அருள்பாலிக்கிறார் என்பது சமணர்களின் அசைக்க இயலா நம்பிக்கை




***தென்கிழக்கு ஆசியாவின் முதலாவது சமண கோயில் - சிந்தாமணி பார்ஷ்வனாத், ஈப்போ***

அகிம்சை, பற்றின்மை, சத்தியம், நேர்மை, களவு செய்யாமை, ஆசையின்மை ஆகியன சமண மதத்தின் அடிப்படைக் கொள்கைகளாகும். ஆகையால், இவர்கள் பொதுவாகவே சைவ உணவு உட்கொள்பவர்களாகவே வாழ்கின்றனர். 'அகிம்சா பர்மோ தர்மா' எனும் நெறிக்கேற்ப அகிம்சாவே உயர்நிலைச் சமயம் என்று வாழ்கின்றனர். இச்சமயத்தின் மகா மந்திரமான 'நமோகர்மந்திரா' எல்லா சமய நிகழ்ச்சிகளிலும் தினசரி பூசைகளிலும் உச்சரித்து இவர்கள் வாழ்க்கையில் மேன்மை பெறுகின்றனர்.

ஏறக்குறைய 5 மில்லியனுக்கும் அதிகமான பக்தர்களைக் கொண்டது இம்மதம். அதில் அதிகமானோர் இந்தியாவைச் சார்ந்தவர்கள். இந்தியாவைத் தவிர்த்து, அதிகம் சமணர்கள் வாழும் தேசமாகத் திகழ்வது கனடா, ஐரோப்பா மற்றும், அமெரிக்கா ஆகும். தற்காலத்தில் இம்மதத்திற்கு ஜப்பான் மக்களிடையே அதிக வரவேற்பு கிடைத்துள்ளது. 15,000 க்கு மேற்பட்டோர் ஜப்பானில் இம்மதத்தைத் தழுவியுள்ளனர். பர்யுசான், அயம்பில், மகாவீர் ஜன்ம கல்யானக் (மகாவீர் அவதரித்த நாள்) மற்றும் தீபாவளி (மகாவீர் கேவல ஞானத்தையும் மோட்சத்தையும் உற்ற நாள்) ஆகியன ஜைன மதத்தின் முக்கியப் பண்டிகைகள்.



**சமணர் ஆலயம், ராணாக்பூர், ராஜஸ்தான், இந்தியா**

கலாச்சாரத்தையும் ஜைன அடியார்களின் வாழ்க்கை நெறிகளையும் நோக்குங்கால், பொதுவாக இம்மதம் விஞ்ஞானம் ததும்பிய நெறியாக நாம் ஏற்றுக்கொள்ளலாம். ஜைன அடியார்களின் பிரம்மச்சரியம், நடுநிசி காலவேளையில் மட்டும் உணவு நீர் கொள்வது, நாளொன்றுக்கு 10 முறை இடைவெளி விட்டு உணவுண்பது, கொதித்து அடங்கிய மெது உஷ்ணநீர் அருந்துவது, சமண மத நாட்காட்டி காட்டும் முக்கியச் சமய நாட்களில் விரதம் இருத்தல், தியானம் செய்தல், நிலத்தடியில் பயிராகும் கிழங்கு வகைகளையும் வெங்காயத்தையும் உண்ணாமை, மற்றும், உணவில் சைவராக இருத்தல் ஆகியன இச்சமயம் விஞ்ஞானத்தை அரவணைக்கும் மதம் என்பதற்கு சான்றுகோல்.



*திருமலை சமணர் கோயில் - குகைக்கோயில்*

இந்தப் பாரம்பரியத்தைப் பின்பற்றும் சமணர்கள், ஆரோக்கியத்திற்கும் உடல் திண்மைக்கும் சொந்தக்காரர்களாக வாழ்கின்றனர்.

இவர்கள் வாகனத்தையோ காலணிகளையோ பயன்படுத்துவது கிடையாது. இவர்கள் என்றும் எப்பொழுதும் நடராஜாக்களே. இயற்கையோடு இணைந்த வாழ்க்கையே இவர்களின் வாழ்க்கை நெறி.

சுறுங்கக்கூறின், ஆன்மாவைப் பாதுகாத்து, உலகியல் வாழ்விலிருந்து விடுதலைப் பெற்று, பிறப்பு இறப்பு வட்டத்திலிருந்து விடுபட்டு, மோட்சம் அடைவதே சமண மார்க்கத்தின் சாராம்சம்.




ஜைன்சமாஜ் அகிம்சா, ஈப்போ

**மலாக்காவில் ஜைன மத வரலாறு**

மலேசியாவில் ஏறக்குறைய 2500 சமணப் பக்தர்கள் உள்ளனர். இவ்வெண்ணிக்கையில் அதிகமானோர் மலாக்கா வாசிகள். கால ஓட்டத்தில், பொருளாதாரக் காரணியினால் இவர்கள் கோலாலம்பூருக்குப் புலம்பெயர்ந்ததால் எண்ணிக்கை சரிவு கண்டது. தற்சமயம் மலாக்காவில் சமணப் பக்தர்களின் எண்ணிக்கை 300-350 ஆகும். வரலாற்றுச் சான்றுகளின்படி, இவர்கள் மலாக்காவில் கால்பதித்தக் காலம் 1900 ஆரம்பம். வாழ்க்கையை மேம்படுத்திக்கொள்ள சமண மத குஜராத்தியர்கள் மியன்மார் மற்றும், சிங்கப்பூர் வழியாக மலாக்கா வந்தனர். ஜசானி, திம்பாடியா, டமானி, டோஷி, சேத், மற்றும், அவாலனி போன்ற பெரும்குடும்பங்கள் ஒருமித்த மனத்தோடு கட்டுக்கோப்பான சமணச் சமுதாயத்தை உருவாக்கினர். தொடர் முயற்சியால், 1958-இல் மலேசியாவில் முதலாவது சமணச் சங்கமான மலாக்கா குஜராத்தி வணிக சங்கம் (Gujrati Vanik Sangh Melaka: GVS) தோற்றம் கண்டது. சொந்தக் கட்டடத்தில் தங்களின் பாரம்பரியமான மதம், கலை கலாச்சார நடவடிக்கைகளை மேற்கொள்வதில் மலேசியாவில் உள்ள அனைத்துச் சமணர்களும் பெருமை கொள்கின்றனர்.

மலாக்கா குஜராத்தி வணிக சங்கத்தின் (மகுவச) முதலாவது தலைவர் அமரர் ஸ்ரீ சுன்னிலால் ஆர்.ஜசானி ஆவர். ‘லால் பாபா’ என இங்கு வாழ் குஜராத்தியினரால் அன்போடு அழைக்கப்பட்ட பெருமகனார். இச்சங்கத்தின் முதலாவது கட்டடம் வாங்கப்படுவதற்குத் தூண்டுகோலே இவர்தான். இக்கட்டடக் கொள்முதலுக்கு அதிக நன்கொடை அளித்தவரும் இவரே! இவரின் பணி ஓய்வுக்குப்பின், ஸ்ரீ பாய்சன்பாய் எம்.ஜசானி ‘மகுவச’-க்குத் தலைமை ஏற்றார். இவரின் தலைமைத்துவக் காலத்தில் மலேசிய அரசாங்க

மான்யம் கிடைத்து, 'மகுவச' கட்டடம் புதுப்பிக்கப்பட்டு, அந்நாளைய மலேசியத் துணைப்பிரதமர் அமரர் துன் காபார் பாபாவினால் அதிகாரப்பூர்வமாகத் திறந்து வைக்கப்பட்டது. அரசாங்கத்தின் இப்பெருநிதி கிடைக்க வழிகோலியவர் வணிகப்பெருமகனார் டத்தோ சந்திரகாந்த் எஸ்.அவாலனி ஆவார். இவரின் சேவையைக் குஜராத்தி மக்கள் என்றும் மறவார்.




ஸ்ரீ பாய்சந்த்பாய் மறைவிற்குப்பின், 'மகுவச' தலைமைப் பீடத்தை அலங்கரித்தவர் ஸ்ரீ ஈஸ்வர்லால் டி.மவானி. இவரைத் தொடர்ந்து, ஸ்ரீ காந்திலால் அஜ்மீரா தலைவரானார். தொடர்ந்து தலைவரான ஸ்ரீ ராஜேஷ் எ.மவானி சங்கத்தை அடுத்த கட்ட வளர்ச்சிப் படிநிலைக்குக் கொண்டு சென்றார். இன்று, இச்சங்கம் டாக்டர் மித்தேஸ் சந்த்ரகாந் அவாலனி தலைமைத்துவத்தில் பீடுநடை போடுகிறது.

ஜைன மக்களின் முக்கிய பண்டிகையான பர்யுஷான், மலாக்காவாழ் சமணர்களால் மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. எட்டு நாள் சமய விழாவான இது, ஆகஸ்ட்-செப்டம்பர் மாதக்

காலக்கட்டத்தில் கொண்டாடப்படும். சமயச் சொற்பொழிவு, விசேஷப் பூசைகள் மற்றும், விரதம் எடுத்தல் இக்காலக்கட்டத்தில் நடைபெறும். கடந்தக் காலங்களில் சமண அறிஞர்கள் பலர் இப்பண்டிகையில் கலந்து, தங்களின் மதப்போதனைகள் மற்றும், சுய அனுபவங்களைப் பக்தர்களுக்கு அருளிச் சென்றுள்ளனர். இவ்விழாவின் கடைசி நாளன்று, ஒருமித்த எண்ணப் பூசையுடன், 'சம்வட்சரி பிராத்திகம்மன்' எனும் தியான நிகழ்வும் நடைபெறும். உலகவாழ் ஜைனர்கள் இந்நாளைப் பாவங்களைக் கழுவும் திருநாளாகவும், எல்லா உயிரினங்களிடமும் மனதாலும் உடலாலும் மன்னிப்புக் கேட்கும் நன்னாளாகவும், சகோதர உணர்வை வெளிப்படுத்தும் இன்னாளாகவும் கருதிக் கொண்டாடுகின்றனர். 'மிச்சாமி டுக்கடம்' அல்லது 'கமட் கம்னா' என்று மனதார உச்சரித்து ஒருவரிடம் மன்னிப்புக் கேட்பது இவர்களின் பாரம்பரியம். இதன் பொருள் என்னவெனில், `அறிந்தோ அறியாமலோ, மனதாலோ, சொல்லாலோ, செயலாலோ, நான் தங்களின் மனதைக் காயப்படுத்தியிருப்பின், நான் வேண்டுவது மன்னிப்பு ஒன்றே! 'பர்யுஷான்' எனும் சொல்லின் நேரடி அர்த்தம் அடிபணிதல் மற்றும், ஒன்றுபட்டு விளைபயன் இலக்கை அடைதல் ஆகும்.

பகவான் மகாவீர் இப்பூவுலகில் அவதரித்த நாள், ஸ்ரீ மகாவீர் சுவாமி ஜன்ம கல்யனாக் எனப்படும். இப்புண்ணிய நாள், சமண நாட்காட்டியில் சாய்த்ரா திங்களில் 13-ஆம் நாளில் கொண்டாடப்படும். இக்கொண்டாட்டம் மார்ச் மாத மத்தியிலிருந்து ஏப்ரல் மாதத் துவக்கக் காலக்கட்டத்தில் வரும். மலாக்காவில் இவ்விழா மிகவும் கோலாகலமாகக் கொண்டாடப்படும். பகவான் திருமேனியை நன்நீராட்டி (பக்ஷால்), ஆரத்தி தீபம் காட்டி, திருவூஞ்சல் (ஜுலாவனு) தாலாட்டுவது முக்கிய அம்சமாகும். ஜைன பக்தர்கள்; ஆண், யுவதிகள் மற்றும், குழந்தைகள் தங்களின் பாரம்பரிய உடையணிந்து இவ்விழாவை வரவேற்பது கண்கொள்ளாக் காட்சியாகும். அழகிய வேலைபாடுகளும் வண்ண விளக்குகளும் ஜொலிக்க, பகவான் மகாவீரரின் திருமேனி இரதத்தில் பண்டார் காபாவைச் சுற்றி வந்து பக்தர்களுக்கு அருள்பாளிப்பார். 300 கிலோகிராம் எடை கொண்ட பகவானின் உருவச்சிலையை உடல்வாகுமிக்க 8 பக்தர்கள் தோளில் சுமந்து, முதல்மாடி பிரார்த்தனை மண்டபத்திலிருந்து கீழே கிடத்தி வைக்கப்பட்டிருக்கும் இரதத்திற்குக் கொண்டு வருவர். இவ்வேளையில், பாரம்பரிய இசை முழங்க, பகவானின் ஆராதனை கீதங்கள் பாடப்படும். சமண யுவதிகளும் பெண்டிரும் குஜராத்தியர்களின் பாரம்பரிய நடனமான 'ராஸ் கர்பா' ஆடி, விழாவிற்கு மேலும், சிறப்பைச் சேர்ப்பர். பல நேரங்களில், இளைஞர்களும் பெண்டீரோடு இணைந்து தங்களின் திறமையை ராஸ் கர்பா மூலம் காட்டுவர்.

'ஆயம்பில்' சமணர்களின் பிரிதொரு முக்கியப் பெருநாள். இவ்விழா, ஆண்டுதோறும் ஏப்ரல் மாதத்தில், குளிர்காலம் விலகி மழைக்காலம் பருவத்தில் கொண்டாடப்படும். ஒன்பது நாள் விழாவாகக் கொண்டாடப்படும் இப்பண்டிகையின்போது சமணச் சமூகத்தால் விசேஷ உணவு வகைகள் பரிமாறப்படும். விரதம் எடுப்போர் ஒருவேளை உணவோடு தங்களின் இறைக் கடமையை முடிப்பர். இவ்விழா மிகவும் புனிதமாகக் கருதப்படுகிறது. பச்சைக் காய்கறிகள் சமைப்பது கிடையா. சாப்பிடுவதும் கிடையா. பூண்டு வகைகளும் நிலத்தடி கிழங்கு வகைகளும்கூட சாப்பிடார். விரதம் எடுப்போர், எண்ணெய் மற்றும், நெய்யில் செய்த உணவு வகைகளை உட்கொள்ளமாட்டார்கள். இவர்கள் மிளகைத் தவிர்த்து, இதர வாசனைத் திரவியங்களைத் தங்களின் உணவில் சேர்த்துக்கொள்ள மாட்டார்கள். பொதுவாக இவர்களின் உணவு வகைகள் உப்பு அற்றதாகவும் சுவை இல்லாமையாகவும் இருக்கும். இக்கட்டுப்பாடு ஒன்பது நாட்களின்போது இவர்களின் உணவு நாட்டத்திற்கும் பக்திக்கும் விடப்பட்ட ஒரு சவாலாகும். மலாக்காவிலும் சரி, இதர இடங்களிலும் சரி, சமணர்கள் இவ்விழாவின்போது ஒன்றுகூடி ஒரு குழுவாக உணவு தயாரிப்பர். அவரவர் வீட்டில் உணவு தயாரிப்பதைத் தவிர்ப்பர். மகுவச மகளிர் பிரிவு, இவ்வுணவுத் தயாரிப்பில் தங்களின் வற்றாத உதவியைக் கொடுப்பர். இறுதியில், பத்தாவது நாளில் சிறப்புப் பூசையுடன் விரதம் முடிப்பர்.

மலாக்காவாழ் குஜராத்திக் குமுகாயம் ஒன்றுபட்டு, நல்லிணக்கத்தோடு ஜீவிக்கும் பெருங்குடி. சமணம், வைஷ்ணவம் மதத்தைத் தழுவிய குஜராத்தியர்கள் ஒற்றுமையுடன் தங்களின் சமயக் கலாச்சார விழாக்களைக் கொண்டாடி வருகின்றனர். 'ஆனந்தம், விமரிசை' இவர்களின் பண்டிகைகளின் சாராம்சம். இவ்விரண்டு சமயப் பிரிவினரிடையே கலப்புத் திருமணம் அதிகளவில் இடம்பெற்று, இவர்களின் பிணைப்பை மேலும், வலுவூட்டியது. சுருங்கக்கூறின், குஜராத்திச் சமுதாயம் மலாக்காவிலும் சரி, மலேசிய மண்ணிலும் சரி, பெருமைமிகுந்த, வளம் விழுமியச் சமுதாயமாக வாழ்ந்து கொண்டிருக்கிறது.

**(கட்டுரை: டாக்டர் மித்தேஸ் சந்தரகாந்த் அவாலனி,**
**தலைவர், குஜராத்தி வணிகர் சங்கம், மலாக்கா)**

| 4 | **மலாக்காவில் சிந்தி சமூகம்** |
|---|---|

### சிந்தி சமூகத்தின் வரலாறு

இந்த இந்திய-ஆரியப் பூர்வீகத்தைக் கொண்ட சமூகம் தமக்கென்று தனி மொழியையும் பண்பாட்டையும் கொண்டுள்ளது. சிந்தி மொழி பேசும் இவர்கள், இன்றைய பாகிஸ்தான் நாட்டில் அமைந்துள்ள சிந்து மாநிலத்தைப் பூர்வீகமாகக் கொண்டவர்கள். சிந்தி என்பது, சிந்து நதியின் பெயரிலிருந்து வந்தது. எட்டாம் நூற்றாண்டில், அரேபியர்கள் இந்த வட்டாரத்தை ஆக்கிரமித்து ஆண்ட சமயம், அவர்களால் இந்த நதியின் பெயர் சூட்டப்பட்டது. இந்த ஆக்கிரமிப்பால் இந்த வட்டார மக்கள் இஸ்லாமியச் சமயத்தைத் தழுவிய போதிலும், கணிசமான எண்ணிக்கையில் இந்துக்களும் சீக்கியர்களும் தத்தம் சமயங்களைத் தற்காத்து வாழ்ந்தனர். பல நூற்றாண்டுகள் இந்த நிலை நீடித்து, ஆங்கிலேயர்களின் காலனித்துவ ஆட்சிக்கு இந்தியா வந்தது. 1947-ஆம் ஆண்டு, ஆங்கிலேயர்களிடமிருந்து விடுதலைப் பெற்றப் பொழுது, நாட்டை இந்தியா - பாகிஸ்தான் என பிரித்தப்போது, இந்தச் சிந்தி மாநிலம் பாகிஸ்தான் எல்லைக்குள் அடங்கியது. இந்துச் சமயத்தைக் கடைபிடித்த பல சிந்திகள் தங்கள் உடைமைகளை எல்லாம் சிந்து மாநிலத்திலேயே விட்டுவிட்டு இந்தியாவை நோக்கி பயணித்தனர். இந்தியாவில் அவர்களுக்கென்று எந்த ஊரும் இல்லாத நிலையில், இவர்கள் நகர்ப்புறங்களில் ‘அனைத்துலக வணிகர்கள்’ எனும் முறையில் வாழத் தொடங்கினர். இத்தகையப் புலம் பெயர்ப்பால், பாகிஸ்தானிலுள்ள சிந்து மாநிலத்தில் இந்துக்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து, இன்று அந்த மாநிலத்தில் எட்டு விழுக்காட்டினரே இந்துக்களாக வாழ்கின்றனர்.

இந்தியாவிற்கு வந்த சிந்திகள், கடின உழைப்பின்வழி, தங்கள் வணிகத் தொழிலைக்கொண்டு முன்னேறி, பொருளாதாரத் துறையில் உயர்ந்த நிலைக்கு வந்துள்ளனர். ஜவுளி சம்பந்தப்பட்டத் தொழில்களில் இவர்களின் தாக்கம் பெரிது. இந்தியாவிலிருந்து மற்ற நாடுகளுக்கும் இவர்கள் சென்று தங்கள் வணிகத்தை வளர்த்தனர். ஆசியக் கண்டத்தில் ஏறக்குறைய எல்லா நாடுகளிலும் அவர்கள் வணிகர்களாக தடம் பதித்தனர். அவர்களில் ஒரு சிறு பகுதியினர் மலாயாவிற்கு வருகை தந்து வெற்றிநடை போட்டனர். தற்பொழுது, ஏறத்தாழ 30,000 சிந்திகள் மலேசியாவில் வாழ்வதாகக் கணிக்கப்படுகிறது.

### சிந்திகளின் பொருளாதார வெற்றி

இந்தியா-பாகிஸ்தான் சுதந்திரம் அடையும் முன்பே, பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்தே இந்து-சிந்திகள் பல நாடுகளிலும் தங்கள் வணிகத்தைப் பேணினர். எடுத்துக்காட்டாக, இந்தச் சமூகத்தின் வெற்றியை, அவர்களைச் சார்ந்த நிறுவனங்களின் அனைத்துலக நிலையைக் கொண்டு மதிப்பிடலாம். ‘Chortimal & Company எனும் நிறுவனம் பதினாறு நாடுகளில் கிளைகளைக் கொண்டு பீடு நடை போடும் வேளை, ஹறிலேலா குடும்பந்தினர் சீனா, Cantonஇல் ஜவுளி வியாபாரம் தொடங்கி, பின்னர், முதலீடு, சொத்துப் பரிமாற்றம், தங்கும் விடுதிகள், போக்குவரத்து போன்ற பல துறைகளில் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் ஆசியாவிலும் பரந்து வளர்ந்தனர்.

மலாயாவைப் பொறுத்தவரை, 1860-ஆம் ஆண்டு முதலே இந்த சமூகத்தைச் சேர்ந்தோர் Hassaram நிறுவனம் மூலம் தடம் பதித்துள்ளனர். 1920/30 ஆண்டுகளில் Wasiamal, B.H.T.Doulatram, Parmanand போன்ற நிறுவனங்கள் பினாங்கில் செயல்பட்டன. Phoomull சகோதரர்கள் நிறுவனம் கோலாலம்பூரில் (1920) தொடங்கப்பட்டது. 1930ஆம் ஆண்டு கிலோப் சில்க் ஸ்டோர் சிகமாட் நகரில் தொடங்கப்பட்டு, பின்னர் கோலாலம்பூர் மாநகரில் பீடு நடைபோட்டது. சில சிந்தியக் குடும்பங்கள் மலாக்கா, தைப்பிங், லங்காவி தீவு ஆகிய இடங்களிலும் தங்கள் வியாபாரங்களை நடத்தின.

இந்தியா-பாகிஸ்தான் பிரிவினை ஏற்படாதக் காலத்தில், சிந்திய ஆண்கள் மட்டுமே வெளிநாடுகளுக்குச் சென்று வணிகத்தில் ஈடுபட்டனர். பிரிவினைக்குப் பிறகு பெண்கள் உட்பட, குடும்பங்கள் வெளிநாடுகளில் குடியேறின. தொடக்கக் காலத்தில் தங்கள் நாட்டிலிருந்து கொண்டுவரப்பட்ட சிந்திகளையே இவர்களின் நிறுவனங்கள் சம்பளத்திற்காக அமர்த்தின. இத்தகைய ரீதியில் ஒப்பந்தமானவர்கள், தங்கள் ஒப்பந்தம் முடிந்த பிறகு, தங்கள் சொந்த வியாபாரத்தைத் தொடங்க எண்ணி செயல்பட்டதால், மற்ற மாநில, மாவட்டங்களில், மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் அவர்கள் பரவினர். இன்றைய நிலையில், இவர்களின் நிறுவனங்களில் மலேசியர்களை வேலைக்கு அமர்த்தியுள்ளனர்.

### மலேசியாவில் சிந்திகள்

மலேசியாவில் வாழும் சிந்திகளில் 93 விழுக்காட்டினர் இந்துக்கள். இவர்களின் முதல் சந்ததியினர் முதலீடு, சொத்துப் பரிமாற்றம், மின்னியல், பல்-பொருள் பேரங்காடி, உணவு, பொழுதுபோக்கு, நகை, ஜவுளி, தையல் ஆகிய துறைகளில் ஈடுபட்டு வெற்றிபெற்றனர். பின்வந்த சந்ததியினரில் சிலர், தங்கள் தந்தைமார்களின் தொழில்களைத் தொடர்ந்து செய்தாலும், பரந்த கல்வியின் வழி ஆண்களும் பெண்களும் ஆங்கில மொழியில் புலமை பெற்று வழக்கறிஞர்களாகவும், கணக்கர்களாகவும், நிர்வாகிகளாகவும் பணிபுரிவதோடு அத்தகைய நிறுவனங்களை நடத்தவும் செய்கின்றனர்.

Maya Khemlani David எனும் ஆய்வாளர் 'The Sindhis of Malaysia' (2001) எனும் நூலில் சிந்தி சமூகத்தின் அட்டவணையை மேற்கோள்காட்டி இந்த நாட்டில் ஏறத்தாழ 61 விழுக்காட்டு சிந்திகள் அல்லது 70 குடும்பங்கள் கோலாலம்பூர் வட்டாரத்தில் வாழ்வதாகவும், 27 விழுக்காட்டினர் அல்லது 31 குடும்பங்கள் பினாங்கில் வாழ்வதாகவும், எஞ்சியுள்ள 12 விழுக்காட்டினர் அல்லது 14 குடும்பங்கள் மற்ற நகரங்களில் வாழ்வதாகவும் குறிப்பிட்டுள்ளார். எனினும், Joshua Project (2020) கொடுத்துள்ள கணக்கின்படி தற்பொழுது ஏறத்தாழ முப்பதாயிரம் சிந்திகள் இந்த நாட்டில் வாழ்கின்றனர். மலாக்காவில் 1960-ஆம் ஆண்டுகளில் பத்திற்கும் மேற்பட்ட குடும்பங்கள் வாழ்ந்தபோதும், இன்று நான்கு குடும்பங்கள் மட்டுமே வாழ்கின்றன.

சிறிய எண்ணிகையில் இவர்கள் வாழ்வதால், ஒவ்வொரு நகரிலும் அருகருகில் வீடுகளைக் கொண்டு, குடும்பங்களுக்கிடையில் தொடர்ந்த தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள விழைவதைப் பார்க்கலாம். இதன்வழி, அவர்களுடைய கலாச்சாரம் காக்கப்படும் என அவர்கள் எண்ணுவதால், மற்றவர்களுடன் அதிகம் இவர்கள் பழகுவதில்லை.

### திருமணம்

மலேசியாவில் இவர்கள் சிறிய எண்ணிகையில் வாழ்ந்தாலும், திருமணம் என்று வரும்பொழுது, தங்கள் இனத்தைச் சார்ந்தவர்களையே இவர்கள் விரும்புகின்றனர். அதற்காக வேறு நாடுகளிலிருந்து கூட வரன்களைத் தேடுகின்றனர். தங்களின் கலாச்சாரம் தொடரவேண்டும் எனும் வேட்கையே இதற்குக் காரணம். எனினும், இன்றைய பரந்த கல்வியின் காரணமாகவும், பெண்களுக்கும் அத்தகைய வாய்ப்புகள் கிடைத்துள்ளதாலும், மற்ற இன ஆண்களையும் பெண்களையும் தேர்ந்தெடுக்கும் நிலை உருவாகியுள்ளதையும், இயன்றவரை தங்களின் கலாச்சாரம் பாதிக்கப்படா வண்ணம் பார்த்துக்கொள்ள பெரியவர்கள் முயற்சிப்பதையும் காணலாம்.

### சிந்தி மொழி

இந்தோ-ஆரிய மொழிக்குழுவில் ஒன்றான சிந்தி மொழி தாய்மொழியாக இருந்தாலும், இந்தச் சமூக மக்களின் எண்ணிக்கை சிறிதாக இருப்பதாலும், அவர்கள் மட்டும் உறவாடும் சமயங்கள் அதிகம் இல்லாதக் காரணங்களாலும், இதன் பயன்பாடு குறைவாக உள்ளது. இவர்கள் மத்தியில் ஆங்கிலம், மலாய் மொழிகள் பெரும்பாலும் பயன்படுகின்றன. வீட்டிலுள்ள பெண்களும் முதியவர்களும் சிந்தி மொழியை இன்றும் பேசினாலும், சிந்தி மொழியை முறையாகச் சொல்லிக் கொடுக்கும் வகுப்புகள் இல்லாத நிலையில், இளையோரிடையே அதிக வளர்ச்சியைக் காண இயலவில்லை. சமயச் சம்பிரதாயங்களில் இந்தச் சிந்தி மொழி பயன்படுகிறது. பக்திப் பாடல்கள் இந்த மொழியில் இருக்கின்றன, அவற்றை அனைவரும் பாடுகின்றனர், அந்த அளவிலேயே இந்த மொழிப் பயன்பாடு உள்ளது. என்றாலும், அவர்கள் மத்தியில் உறவாடும்பொழுது, அவர்கள் பயன்படுத்தும் ஆங்கில, மலாய் மொழிகளில் சிந்தி சொற்களும் கலந்து பயன்படுத்துவதைக் காணலாம். வரும் காலங்களில் இந்தக் கலவை மொழியின் வழியே இந்தச் சமூகம் மலேசியாவில் வாழக் கூடிய வாய்ப்பு உள்ளது.

### சிந்திகளின் இந்துச் சமயம்

இந்துச் சிந்திகளின் நம்பிக்கையில் இயற்கை இறையாண்மை, இஸ்லாமிய இறை மாண்பு, சீக்கிய நம்பிக்கைகள், இந்துச் சமய நம்பிக்கைகள் ஆகிய அனைத்தும் இணைந்து இருக்கின்றது. இந்த இனம் வாழ்ந்த சிந்து வட்டாரம் பல கட்டங்களைக் கடந்து வந்ததையும், ஒவ்வொரு கட்டத்தின் தாக்கத்தையும் அவர்களின் நம்பிக்கையில் நாம் பார்க்கலாம். சீக்கியர்களைப் போலவே வர்ணம் அல்லது ஜாதி இவர்கள் மத்தியில் இல்லை. இந்துச் சமயத்தில் பிராமணர்கள், ஷத்திரியர்கள், வைஷ்வர்கள், சூத்திரர்கள் என நான்கு

பிரிவுகள் இருந்தாலும், இவர்கள் மத்தியில் செய்யும் தொழில் நிமித்தமாக இரண்டு பிரிவுகள் தொடக்கத்தில் இருந்தன. 'அமில்' பிரிவினர், நிர்வாகிகளாகவும், அரசு ஊழியர்களாகவும் இருந்த வேளை, வணிகம் செய்வோரை 'பாய்புந்து' என அழைத்தனர். தற்பொழுது வேலை நிமித்தமான பிரிவுகளில் தெளிவில்லாத நிலை தோன்றியுள்ளதால், இந்தச் சமூகம் தற்பொழுது இத்தகைய பாரம்பரிய வேறுபாடுகளைத் திருமணம் போன்ற இரத்த பந்தங்களில் பார்ப்பதில்லை.



சிந்திச் சமூகம், 1907-ஆம் ஆண்டு, இந்திய அரசு வெளிட்ட அதிகாரப்பூர்வமான அறிக்கையில் கண்டுள்ள சிந்திச் பாரம்பரியச் சடங்குகள் கொண்ட அட்டவணையை இன்று வரை பயன்படுத்துகின்றனர். இந்த அட்டவணையில் காணப்படும் சடங்குகளும் பாரம்பரியமும் இந்த இனத்தை இணைத்து வைக்கும் என இவர்கள் திடமாக நம்புகின்றனர். உதாரணத்திற்கு, chati எனப்படும் சடங்கின்வழி, புதிதாகப் பிறந்த குழந்தையைச் சிந்துக் கலாச்சாரத்திற்குக் கொண்டு வருகின்றனர். குழந்தையின் ஜாதகம் கணிக்கப்பட்டு, சம்ஸ்கிருத மொழியில் மந்திரம் ஓதி குழந்தைக்குப் பெயர் சூட்டுகின்றனர். குழந்தைக்கு முதல் முடி இறக்கும் சம்பிரதாயம்



'munan' எனப்படுவது. பின்னர், பையன் பருவம் எய்தி பெரியவனாகும்பொழுது 'jario' எனும் சடங்கு நடைபெறும். இன்றையக் காலக் கட்டத்தில், இதைத் திருமணம் நடைபெறும் முன்பு செய்கின்றனர்.

நோன்பு அல்லது உண்ணாவிரதம் எடுப்பது சிந்தி மக்களிடையே வழக்கம். வேண்டுதல் நிறைவேற, நாள் முழுவதும், அல்லது குறிப்பிட்ட வேளை உண்ணாவிரதம் எடுப்பார்கள். பெண்கள், திங்கட்கிழமைகளில் தங்கள் கணவன், குடும்பம் நன்றாக வாழ வேண்டும் என்பதற்காகச் சிவன் பெயரில் உண்ணாவிரதம் இருப்பார்கள். சிந்தி மக்கள் இது போன்ற பல சடங்குகளையும், சம்பிரதாயங்களையும் தொடர்ந்து கடைபிடித்து வருகின்றனர். குடும்பங்களில் இத்தகைய சடங்குகள் நடைபெறும்பொழுது அவ்வட்டாரத்திலுள்ள அனைத்துச் சிந்திகளும் ஒன்று கூடுவதையும் அதன்வழி அவர்களிடையே ஒற்றுமை வளர்வதையும் இவர்கள் பெரிதும் விரும்புகின்றனர்.

சிந்திகளின் இந்துச் சமயம் பரந்த மனப்பான்மையைக் கொண்டது. அவர்களின் மிதமான போக்கு, எல்லாச் சமயங்களையும் அரவணைக்கக் கூடியது. எந்தச் சமயமும் தங்களுக்கு விரோதமானதாக இல்லை என நம்புகின்றனர். 'பல வழிகளில் ஒரே இலக்கை நோக்கிச் செல்கிறோம்' என நம்புகின்றனர். பல சமயத்தினருடனும் நல்லுறவை ஏற்படுத்திக்கொள்ள இத்தகைய தன்மை துணை நிற்கிறது. இதன் காரணமாகவே இவர்களின் பழக்கவழக்கங்களில் பல சமய நம்பிக்கைகளும் இணைந்திருப்பதைக் காணலாம்.

இவர்களின் முதன்மை தெய்வம் JOOLAY LA'AL-U (அதாவது, சிந்து தேசத்தைத் தன்வசம் வைத்திருந்த, palla மீன் மீது சவாரி செய்த, தேவர்). இந்த நம்பிக்கையின்படி Cheti-Chand எனப்படும் இந்தத் தேவர் தோன்றிய நாளை ஆண்டுதோறும் ஏப்ரல் மாதத்தில் கொண்டாடுவார்கள். அதுவே இவர்களுக்குப் புத்தாண்டு. ஒவ்வொரு மாதத் தொடக்கத்திலும் பூஜை செய்து, ஆரத்தி எடுத்து, அனைவருக்கும் உணவு வழங்கும் பழக்கம் இவர்களிடம் உள்ளது.

இந்தச் சமூகத்தினர், இலட்சுமி-நாராயணன், சீதை-ராமர், ராதா-கிருஷ்ணர், சிவன்-பார்வதி, குரு கோவிந்த், குரு நானக், ஆகிய தெய்வங்களை வழிபடுகின்றனர். வார நாட்களில் சிலவற்றைத் தெய்வங்களுக்காக அர்ப்பணம் செய்து வழிபடவும் செய்கின்றனர். எடுத்துக்காட்டாக, திங்கள் - சிவன்; செவ்வாய் - ஹனுமான்; வியாழன் - சாய் பாபா; வெள்ளி - தேவி; சனி - தேவர். இன்றையக் காலக் கட்டத்தில் இந்துக் குருமார்களின் பக்தர்களாகவும் சில சிந்திக்கள் இருக்கின்றனர்.

**வழிபடும் இடம்**

இவர்கள் பெரிய எண்ணிகையில் இல்லாததால், இவர்களுக்கென்று சிறப்புக் கோயில்கள் தனியாக மலேசியாவில் இல்லை. வட இந்திய இந்துக்களின் கோயில்கள், குறிப்பாகக் குஜராத்தி கோயில்கள், சீக்கிய சமயக் கோயில்கள் ஆகியவற்றையே இவர்கள் பெரும்பாலும் பயன்படுத்தி வழிபடுகின்றனர். நவராத்திரி போன்ற பெரிய இந்துச் சமய விழாக்களில் இவர்கள் கோயிலுக்கு வருகை புரிந்து மற்றவர்களுடன் இணைவதுண்டு. மற்றச் சமயங்களில் தங்கள் குடும்பங்களுக்கிடையில் வீடுகளிலேயே ஒன்றுகூடி கொண்டாடுவார்கள். கோலாலம்பூர், பினாங்கு சிந்திகள், பெரிய எண்ணிக்கையில் இருப்பதால், வட இந்திய இந்துக் கோயில்களிலேயே தங்கள் சிறப்புப் பிரார்த்தனைகளைச் செய்ய முற்படுகின்றனர்.



**முடிவுரை**

தற்பொழுது நான்கு குடும்பங்களாக, சிறிய எண்ணிக்கையில் இருந்தாலும், இந்த இந்து-சிந்திச் சமூகம் மலாக்கா மாநிலத்தில் இந்துச் சமயத்தின் மகத்துவத்தைப் பரப்ப வகை செய்துள்ளது என்பதை நாம் மறுக்கமுடியாது.

**மலாக்கா வழக்கறிஞர் டத்தோ அமர்தாஸ் ஜித்தானந்த் அவர்களின் துணையோடு, பின்வரும் மூலங்களின் வழி இக்கட்டுரையைத் தொகுத்தவர் தொ.க.நாராயணசாமி:**


Reference: 1. MAYA KHEMLANI DAVID (2001) The Sindhis of Malaysia, A Socio-Linguistic Study, Asean Academic Press, London

2. JOSHUA PROJECT (2020) - Sindhi in Malaysia, people_groups/14192/MY

3. WIKIPEDIA - Sindhis <https://en,wikipedia.org./wiki/Sindhis>

| 5 | கிருஷ்ணா பலராம் இந்தியக் கலை கலாச்சார மையம், மலாக்கா |
|---|---|
| | *Lot 2679, Jalan Sri Rama 3, Taman Muzaffar Shah, Ayer Keroh, 77350 Melaka.* |

**முகவுரை**

மலாக்கா மாநிலத்தில் அரசு சாரா இயக்கங்கள் பல உள்ளன. ஆலயங்களும் எண்ணில் அடங்கா. இவைகளுக்கு மத்தியில் ஓர் தன்னிகரற்ற இயக்கமாகவும், ஆன்மிக மையமாகவும் நின்று மலாக்கா மாநிலத்தில் கோலோச்சி வருகிறது கிருஷ்ணா பலராம் இந்தியக் கலை கலாச்சார மையம்.

இவ்வியக்கம் ஆரம்பிக்கப்பட்ட நாள் முதல் இக்கட்டுரையைப் பதிவாக்கும் நாள் வரை மலாக்கா மாநில இந்திய மக்களுக்கு நன்மை பயக்கும் அளவில் பெரிய திட்டங்களையும் அதற்கான செயல்பாட்டு முறைகளையும் நிபுணத்துவ முறையில் செய்து வருகிறது. எண்ணிக்கையிலடங்கா தனது நடவடிக்கைகளினால், மலாக்கா இந்தியச் சமூகத்திற்கு மிக அருகில் நிற்கும் இயக்கமாக கிருஷ்ணா பலராம் வளர்ந்துள்ளது.

**உண்மை விளக்கம்**

உண்மையான, நேர்மையான, தன்நலம் கருதாதச் சேவைகளின் வாயிலாக இவ்வியக்கத்தின் தோற்றத்திற்குக் கிடைத்த பெரும் வெற்றி என்பது இவர்கள் கை வைக்கும் திட்டங்கள் யாவும் வெற்றி பெறும் என்பதே. அதோடு நின்று விடாமல், சமூகம் இவர்களை நம்பிக்கையுடன் கவனிக்கிறது. நிறம், உயர்வு தாழ்வு எனும் வேற்றுமைக்குள் காற்றுக் கூடப் புகாத அளவிற்கு இடமளிக்காமல் அனைத்துச் சேவை மனங்களையும் அரவணைத்துச் சமமாக நடத்தும் மனித நேய நிர்வாகமாகக் கிருஷ்ணா பலராம் இயங்கி வருவதால் இவர்களுடன் பொது மக்களும் இணைந்து சேவைச் செய்வதில் ஆர்வம் காட்டுகின்றனர்.

பல்கலைக் கழக முனைவர்கள், மருத்துவர்கள், வழக்கறிஞர்கள், பொறியியலாளர்கள், அரசாங்க அதிகாரிகள் மற்றும், தனியார்த் துறைத் தொழில் அதிபர்கள் போன்றவர்கள் இவ்வியக்கத்தின் திட்டங்களில் தன்னார்வ முறையில் கலந்து கொண்டு ஆதரவளிப்பது என்பது கவனிக்கப்பட வேண்டிய விடயமாகும்.

**கிருஷ்ணா பலராம்- எனது உத்வேகத்தின் அச்சாணி**



ஏறக்குறைய 4 வருடங்கள், கிருஷ்ணா பலராம் இயக்கத்துடன் இணைந்து செயல்பட்ட அனுபவங்களின் மூலம் கிடைத்தக் கல்வி, என்னை அறிந்து கொள்ளும் கல்வியைக் கற்றுக் கொடுத்துள்ளது. இவ்வியக்கத்தின் வெற்றியின் பின்னால் இருக்கும் ரகசியம் என்ன என்று தேடிப்பார்க்கும் ஆவலில் அவ்வியக்கத்தோடு இணைந்து செயல்பட நான் களத்தில் இறங்கியபோது, எனக்குள் சிக்கிக் கொண்டிருந்த சிக்கல்களும், முட்டுக் கட்டைகளும் தவிடு பொடியானது. முடியாது என்ற பல பூட்டுகளுக்குத் திறவுக் கோல்களைத் தந்து கொண்டிருந்தது கோபி என்ற மாமனிதரின் மந்திரச் சொற்கள் எனக்குள் ஒரு நம்பிக்கையையே வளர்த்தார். புதிய சிந்தனையை விதைத்தார். என் உள்ளத்தைச் சேவைப் பண்புகளால் உழுதார்.

அதற்கும் மேலாக, தலைக்கனம் இல்லாதத் தலைமைத்துவம் எப்படி இருக்க வேண்டும் என்பதை முன்மாதிரியாக இருந்து வழிகாட்டினார். ஆன்மிகம் என்பது சோம்பேறித்தனமானது கிடையாது. அது உறங்கிக் கிடக்கும் ஆத்மாவுக்குப் புத்துயிர் அளித்து, புது வேகத்தைப் பாய்ச்சி, சேவை செய்யும் சக்தியைக் கொடுக்கவல்லது. இந்த உணர்வு இல்லாத ஆன்மிகம் மக்களைச் சிந்திக்கவிடாது செய்து, அவர்களை ஆட்டு மந்தையாக வழி நடத்திவிடும் என்பது ஸ்ரீ கோபி அச்சுதனின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

### தொடர்வண்டியைப் போல சாதனைகள்

கிருஷ்ணா பலராம் பூசாரிகளின் கூடமல்ல, காவிகளின் முகாம்கள் அல்ல. சடங்குகளின் சங்கமமல்ல. இவ்வியக்கம் சேவைகளின் அடிப்படையில் மனிதனின் தனித் திறமைகளைக் கண்டறிந்து, சத்தியமான ஆழமான, தெளிந்த ஞானபோதனைகளின் மூலம் ஒருவனை அடுத்தக்கட்டப் பயணத்திற்குத் தயாராக்கும் முயற்சிகளைக் கிருஷ்ணா பலராம் செய்து வருகிறது. இத்திட்டத்தின் மூலம் உருவாகும் தலைமைத்துவத்தை, சமூகத்திற்குச் சேவகனாக அறிமுகப்படுத்தி, செயல் வடிவத்தில் ஒரு முன்னுதாரணமாக இருந்து வெற்றி பெற்றுள்ளது.

இலக்குகளற்று சுற்றித் திரிந்த எத்தனையோ சிறுவர்களுக்குக் கடமையுணர்வைப் புகுத்தி, அவர்களைச் சிந்திக்கும் மாணவர்களாக உருமாற்றியுள்ளது கிருஷ்ணா பலராம். உருப்படமுடியாது என்று குடும்பத்தாரால் பட்டியலிடப்பட்ட எத்தனையோ சிறுவர்களை மேடையில் ஏற்றி அவர்களின் திறமைகளை வெளிக்கொணர்ந்துள்ளது கிருஷ்ணா பலராம். சிதைந்துப் போகும் இளையச் சமுதாயத்தின் சிதைவுகளைப் பேசிக் கொண்டிருக்காமல் அவர்களைத் தன்னை உணரும் விஞ்ஞான அறிவின் அடிப்படையில் வழி நடத்துவது எப்படி என்ற சூத்திரங்களை ஆன்மிக ரீதியிலும் தற்போது உள்ள நடப்புச் சூழ்நிலைகளுக்கு ஏற்பவும் தத்தெடுத்து நடைமுறைப்படுத்தி வெற்றிக் கண்டுள்ளது கிருஷ்ணா பலராம்.



ஆன்மிக நெறி, தன்னிகரற்ற தலைமைத்துவம், அறிவு நிலையிலிருந்து செயல்படும் திறன், தூய்மை மற்றும், சுற்றுச் சூழலைப் பேணுதல், தூரநோக்கு, எதனையும் எதிர்பார்க்காத சேவை பண்பு, என்று பல "ஆத்திச் சூடிகள்" கிருஷ்ணா பலராமில் போதனைச் செய்யப்பட்டு வருகிறது. முடியாது என்ற சொல்லை முடியும் என்று மாற்றி, பள்ளிக் கல்வியில் பின் தங்கியவர்களை, மேடையில் ஏற்றி, பல நூறு பேருக்கு முன்னால் ஆங்கிலத்தில் பேச வைத்து, நடிக்க வைத்து, வேதச் சாரங்களை ஓதி விளக்கம் கொடுக்கும் அளவிற்கு,

மண்ணுக்குள் புதைந்திருக்கும் கரியை வைரமாகப் பட்டைத் தீட்டி அதன் மவுசை உயர்த்துவதுபோல், மாணவர்களுக்குள் ஒளிந்து கிடந்த திறமைகளைத் திரையில் அரங்கேற்றிக் கொண்டாடியது.

**கிருஷ்ணா பலராமின் வெற்றியின் ரகசியங்கள்**

ஓர் இயக்கத்தின் மூலம் இவ்வளவு காரியங்கள் எப்படி சாத்தியப்படுகின்றன? கை வைக்கும் காரியங்கள் யாவும் மக்களின் பேராதரவுடன் எப்படி வெற்றிப் பெறுகின்றன? வெற்றிக் களிப்பைக் கொண்டாடும் நேரத்தைச் செலவிடாமல் அடுத்தக் கட்டத் திட்டங்களை இன்னும் பெரிய திட்டங்களாகத் தீட்டி களைப்புத் தெரியாமல் தொடர்ந்து பயணித்துக் கொண்டே இருக்க இவர்களால் எப்படி முடிகிறது? சிறு குழுவாக இருந்தாலும், "இமயமலைத் திட்டங்களைப்" பற்றி எப்படி இவர்களால் தைரியமாகச் சிந்திக்க முடிகிறது? இவர்கள் தீட்டும் திட்டங்கள் யாவும் பணத்தை முதலில் முன்நிறுத்தி செய்யப்பட்டது கிடையாது, இருந்தும் பொது மக்களின் பேராதரவு எப்படி இவர்களுக்குக் கிட்டுகிறது? போன்ற பல கேள்விகள், இவர்களின் செயல்பாட்டைக் கவனித்து வரும் பலருக்குப் புதிராகத்தான் இருந்து வருகிறது. ஆனால், இயக்கத்தின் தலைவர் கோபிக்கு இது புதிரல்ல. சரியான திட்டவரைவும், பலன் கருதாதச் சேவையும், உயர்ந்த சிந்தனையும், தூய்மையான எண்ணங்களும், தான் என்ற அகந்தையற்றச் செயல்பாடும், அன்பு நிறைந்த மனமும் எண்ணியதை எண்ணியாங்கு எய்தும் என்கிறார் கோபி அச்சுதன்.

**கிருஷ்ணா பலராம்: பொருள் தரும் புதிய வ்ரஜ பூமி**



2676, ஜாலான் ஸ்ரீராமா 3, தாமான் முஸாபார் ஷா, ஆயர் கேரோ, 75450 மலாக்கா எனும் முகவரி கிருஷ்ணா பலராம் எழுப்பிய "புதிய வ்ரஜ பூமி" எனும் பெயரில்கட்டப்பட்ட கட்டடத்தின் முகவரியாகும். 5000 ஆண்டுகளுக்கு முன், பரந்தாமன் கிருஷ்ணன் தனது குழந்தைப் பருவத்தில் நடத்திய தெய்வீக லீலைகளின் பாதச் சுவடுகள் பதிந்த மண்ணாக விளங்குகிறது இந்தியாவில் இருக்கும் பிருந்தாவனம். இந்தப் புனித பிரந்தாவனத்தின் பிம்பமாக விளங்க வேண்டும் எனும் நோக்கத்தில், மலேசிய மண்ணில், ஸ்ரீ ராமா சாலையில், முசாபர் ஷா தாமானில் அமைக்கப்பட்டதுதான் கிருஷ்ணா பலராம் இந்தியக் கலை கலாச்சார மையம். சிறிய கண்ணன், சுட்டிக் கண்ணன் பிருந்தா வனவாசிகளுக்குப் பிரியமானவனாகவும், பிருந்தாவனத்தின் வாசிகளை ஆபத்திலிருந்து காக்கும் கடவுளாகவும், அவர்களுக்கு உற்றத் தோழனாகவும், பக்தியைக் கொண்டாடியவனாகவும் மாயக்கண்ணன் தோற்றமளித்தான். இங்கே இவ்வியக்கமும் மலாக்கா சமூகச் சனாதன தர்மத்தைச் சேர்ந்தவர்களுக்குப் பிரியமான இயக்கமாகவும், தங்களின் பக்தித் தொண்டினால் இறை உணர்வை வளர்க்கும் ஆத்ம தரிசன மையமாகவும், உதவித் தேவைப்படுபவர்களுக்கு உற்றத் தோழனாகவும் தங்களுடைய அடையாளத்தை விரிவு படுத்தியுள்ளது. "புதிய வ்ரஜ பூமி" எனும் அடையாளத்தில் பக்தி

மார்க்கம், கலை கலாச்சாரம், சமூகத் தேவை ஆகியச் சேவைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு வருகிறது.

காடுகள் மண்டியிருந்த இடத்தைக் கீதை ராகங்கள் கேட்கும் "வீடாக" மாற்றி யமைத்த சிந்தனையின் திட வடிவமாக இந்த வ்ரஜ பூமி கட்டடம் எழிலுடன் காட்சித் தருகிறது. இந்த நிலத்தை நழுவ விட்டு விட்டோமே என்று அப்பக்கத்தின் வழியாகக் கடந்து செல்லும் நிலப்பிரபுக்களை யோசிக்க வைத்த கட்டடம்தான் புதிய வ்ரஜ பூமி. ரஷியா, அமேரிக்கா, இந்தியா போன்ற நாடுகளின் கட்டடக் கலையைக் கலவையாக்கி, கட்டப்பட்ட புதிய வ்ரஜ பூமி இவ்வியக்கத்தின் இருதயமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. பால் வெள்ளையும், காவி வர்ணமும் கொண்டு கம்பீரமாக நிற்கும் இக்கட்டடம், புதிய பார்வையாளர்களுக்கு ஓர் ஆச்சரியம்தான். "எளிமையான வாழ்க்கை; உயர்ந்த சிந்தனை" எனும் பொன் வாசகங்களைத் தந்து இந்த உலகத்துக்குப் பக்தியையும், சேவையையும் போதித்த குரு தெய்வத் திரு ஸ்ரீல ஸ்ரீஏ.ச பக்தி வேதாந்த சுவாமி பிரபு பா.தா. இவரின் பாதங்களைப் பற்றிக் கொண்டு மக்கள் தொண்டும் மகேசன் தொண்டு என்று செயல்பட்டு வரும் இவ்வியக்கம் தம்முடைய தூரநோக்குத் திட்டங்களைப் பையப் பைய நிறைவேற்றிக் கொண்டு வருகிறது.

**வளாகத்தின் உள்ளே**

நுழைவாயில் சுவர்களில் இயக்கத்தின் பெயர் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுதப்பட்டிருந்தாலும் தமிழே முதல் நிலையில் ஆட்சி புரிகிறது. அடுத்து வளாகத்தின் உள்ளே சென்றால், மலாக்கா வரைப்படத்தில் மேல் நின்று கொண்டு பசுவின் மடியை முட்டி கன்று பால் குடிக்கும் சிலை வடிவம். இந்தச் சிலை வடிவத்தைச் சுற்றி நான்கு சங்குகள். எந்த ஒரு வடிவத்திற்கும் பொருளைக் கற்பிக்கும் முறையில் இக்கட்டடம் எழுப்பப்பட்டுள்ளது. பரந்தாமன் கிருஷ்ணனிடமிருந்து பாலாகப் பெறப்படும் கீதா உபதேசத்தை அர்ஜுனன் கன்றாக இருந்து பருகுகிறார். குரு பரம்பரை வழி மனிதக் குலத்திற்குக் கொண்டு சேர்க்கப்பட்ட கீதை உபதேசத்தை மலாக்காவில் நான்கு திசைகளிலும் பரப்பும் உயர்ந்தச் சேவையானது கிருஷ்ணா பலராம் இயக்கத்தின் முதன்மைச் சேவையாகும் என்பதனை விளக்கும் வகையில் இச்சிலை இங்கே வடிவமைக்கப்பட்டுள்ளது.

கீழ்த் தளத்தில் 400 பேர் அமரக் கூடிய வசதி கொண்ட மண்டபத்தில் பல கல்வி நிகழ்ச்சிகளையும், ஆன்மிக நிகழ்ச்சிகளையும், சமூகநல நிகழ்ச்சிகளையும் நடத்தியுள்ளனர் இயக்கத்தினர். கொடை நெஞ்சர், டத்தோஸ்ரீ மோகன சுந்தரத்தின் பெயரைக் கொண்டிருக்கும் இம்மண்டபத்தில் நூல் வெளியீடு, அனைத்துலக கிருஷ்ணா பக்தி உணர்வு மாநாடு, நாடக அரங்கேற்றம், பொங்கல் கொண்டாட்டம், கிருஷ்ணா பக்தி இளைஞர் மாநாடு, மலேசியப் புத்தகச் சாதனையை ஏற்படுத்திய பெரிய அகல் விளக்குச் சாதனை, பெண்களுக்கான செயல் கல்விக் கருத்தரங்கு, மாணவர்களுக்கான சதுரங்கப் போட்டி விளையாட்டு, கல்வி வழிகாட்டிக் கருத்தரங்கு, தமிழ் இலக்கிய வகுப்பு போன்ற பல நடவடிக்கைகள் மண்டபத்திலும், மண்டபத்திற்கு வெளியேயும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. மலாக்கா மாநில அளவில் ஏற்பாடு செய்யப்பட்ட பொங்கல் விழா, 21 தமிழ்ப் பள்ளிகளையும் ஒன்றிணைத்து, "மினி ஒலிம்பிக்" என்ற பெயரில் ஹங் ஜெபாட் விளையாட்டு அரங்கத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட திடல் தடப் போட்டிகள், பரதக் கலையில் அனைத்துலகப் புகழ் பெற்ற தன்னிகரற்ற நாட்டியக் கலைஞர் பத்மஸ்ரீ டத்தோ ரம்லி இப்ராஹிமின் கலை படைப்புகள் போன்ற பெரிய நிகழ்ச்சிகளை ஏற்று நடத்திய பெருமை இவ்வியக்கத்தைச் சாரும். நாடகக் கலைக்கு உயிர் கொடுத்து வரும் இவ்வியக்கம், ஆசிரியர்களால் வகுப்புக்கு வெளியே நிற்க வைத்த மாணவர்களையும் மேடையில் ஏற்றி பாராட்டை வாங்கித் தந்துள்ளது.

**தன்னலமற்ற கோபி என்ற சேவகனும், நிர்வாகக் குழுவினரும்.**

கனவு காணுங்கள், அந்தக் கனவை நம்புங்கள், தினமும் அதற்கு உயிர்கொடுங்கள், உங்கள் கனவு நிச்சயமாக மெய்ப்படும். இதனை நான் செயல் வடிவில் கொண்டு வந்ததுதான் பல திட்டங்களின் வெற்றிக்குக் காரணம். இந்த வெற்றி என் தனிமனிதனின் வெற்றியல்ல. என்னுடன் இணைந்து செயல்பட்டவர்கள் வெற்றியும் கூட. "அவன் பெயரைச் சொல்லிக் கடமையைச் செய்கிறேன், அதன் விளைவுகளை அவனுக்கே அர்ப்பணம் செய்கிறேன். என்னை உள்ளிருந்து இயக்கும் கண்ணன் துணை நின்று வெற்றியைத் தந்து கொண்டிருக்கிறான். என்னை இயக்குவதும் அவனே, இதில் நான் அற்றவன்," என்கிறார் இயக்கத்தின் தலைவர் கோபி அச்சுதன்.

பதவி அளவில் மட்டுமே தலைவராகச் செயல்படும் கோபி பிரபு அவர்கள், நடப்பில் ஒரு சேவகனாகவே செயல்படுபவர். எளிமையான தோற்றத்துடன் காட்சித் தரும் இவர், பெரு நிறுவனங்களுக்கு ஆலோசகராக இருந்து வருபவர். ஊழியராகத் தனது பணி வாழ்க்கையைத் தொடங்கி, பிறகு பல பெரிய நிறுவன வெள்ளை முதலாளிகளுக்கு நிறுவன மேம்பாட்டு வியூக ஆலோசகராகத் தன்னை உயர்த்திக் கொண்டார். 27 வருடங்கள் தனியார் நிறுவனத்தில் பணியாற்றி வந்த இவர் தன்னார்வப் பணி நிறுத்தம் செய்தப் பிறகு, தாம் பெற்ற நிர்வாக அனுபவங்களைச் சமூகப் பணியில் ஈடுபடுத்தினார். தமது பணி அனுபவங்களில் 18 முறைகள் அமெரிக்காவுக்குச் செல்லும் வாய்ப்புகளைப் பெற்று, வியூக நிர்வாகத் திறனை வளர்த்துக் கொண்டவர். அமெரிக்காவில் உள்ள நிறுவனத் தலைவர்களுக்குப் பயிற்சிகள் அளித்து தமது பணி அனுபவங்களைக் கூர்மைப் படுத்திக்கொண்ட கோபி மலாக்காவில் உள்ள ஸ்ரீ சுந்தர மூர்த்தி ஆலயத்தின் கட்டுமானத்தை முன்னெடுத்து மரத்தடியில் இருந்த விநாயகரைக் கர்ப்பக் கிரகத்தில் அமர வைத்தார்.

வருடத் திருவிழாவுக்கு வளம் வரும் அழகியத் தேரையும் உருவாக்கினார். வாக்கில் சுத்தம், உள்ளத்தில் சத்தியம், நடத்தையில் நேர்மை, எல்லாம் இறைவனுக்கே எனும் சரணடையும் பணிவு ஆகிய நற்குணங்கள் சமூகச் சேவையிலும், இறைத்தொண்டிலும் இருந்தால் மட்டுமே பொதுவுடைமைகள் களவு போகாமல் அதனை மேலும், செழிப்புறச் செய்ய முடியும் என்பதே “இவர் தொட்டால் பொன்னாகும்“ எனும் அதிசயத்தின் ரகசியமாகும். எண் 336, ஜாலான் செத்தியா 9, ஆயர் குரோ ஹைட்ஸ் எனும் முகவரியைக் கொண்ட வீட்டில் இயங்கி வந்த கிருஷ்ணா பலராம் இயக்கத்திற்குக் கனவுகளைக் கொடுத்து, கண்களையும் கொடுத்து, உயிரையும் கொடுத்து, உழைப்பையும் கொடுத்து, சேவையில் நெருப்பாக இறங்கி, அந்த நெருப்பில், இது நடக்குமா? என்ற பலரின் கேள்விகளையும் ஐயங்களையும் எரித்துப் பொடிப் பொடியாக்கிக் காட்டியவர் கோபி.

சமூகத்திற்குச் சேவை செய்யும் கட்டுப்பாட்டில் களம் இறங்கிவிட்டால் அதனைச் செயல்பாட்டிற்குக் கொண்டுவர உறுதியான தளம் அவசியமானது என்று நம்பிய கோபி, களத்தில் இறங்கினார். இயக்கத்தின் ஆன்மிகப் பிரிவுத் தலைவர் முகுந்த தாஸா , செயலாளர் நாகேந்திர ராவ் ஆகியோர் முக்கியப் பொறுப்பாளாராகச் செயல்பட்டனர். கருத்து வேறுபாடுகளுக்கு இடங்கொடுக்காமல் ஒரே நோக்கத்துடன் செயல்பட்ட நிர்வாகக் குழுவும் அக்குழுவை வழிநடத்திய கோபியும், இவர்களுடன் இணைந்து செயல்பட்ட மலாக்கா இந்தியச் சமூகமும், பிப்ரவரி 23, 2012-இல் கட்டடத் திறப்பு விழாவை வெற்றி விமரிசையாகக் கண்டு களித்தனர். 9 வருடங்களாக சிறு வீட்டில் இயங்கி வந்த கிருஷ்ணா பலராம், புதிய-பெரிய மையத்திற்கு மாறிச் சென்ற பிறகு, அதனுடைய சேவைகள் இரட்டிப்பானது. சிறு குழுவாக இயங்கி வந்தவர்கள் பெரிய பெரிய நிகழ்ச்சிகளை மலாக்காவில் நடத்தி வந்தனர். நடத்தும் ஒவ்வொரு நிகழ்ச்சியும் உச்ச நோக்கத்தை அடையும் வரை, முன் ஏற்பாடு திட்டங்களும், தீட்டியத் திட்டங்களும் கொடுக்கப்பட்டப் பொறுப்புகளும் சரியாய் இயங்குகிறதா என்று கண்காணிக்கும் கோலாக ஒவ்வொரு வாரமும் நடத்தப்பட்டக் கூட்டங்கள் கோளாறுகளையும் பின்னடைவுகளையும் சரிசெய்தன. நிகழ்ச்சிகள் முடிந்த பிறகு, சரி செய்ய வேண்டிய தவறுகள் பின் ஆய்வுக் கூட்டங்களில் விவாதிக்கப்பட்டு அடுத்தக் கட்டத் திட்டங்களைச் சிறப்பாக அரங்கேற்ற அடுத்தக் கட்ட வேலைகளை நகர்த்துவது இவ்வியக்கத்தின் இயங்கும் பண்பாக இருந்து வருகிறது. அளவில் 20 பேர் கொண்ட சிறு கடுகாக இருந்தாலும், ஒவ்வொரு துறையிலும் நிபுணத்துவம் குறையாமல் தரம் சரியாமல் நிகழ்ச்சிகளை அரங்கேற்றி வருவது காரம் போகாத செய்தியாகும். இயக்கத்தின் ஆத்மாவாக இருந்து வருவது நோக்கமும், நோக்கத்தை அடையும் குறிப்பணிகளும், திட்டங்களை நகர்த்திக் செல்லும் வியூகக் குமிழிகளும் ஆகும். கிருஷ்ணா பலராம் இயக்கத்தின் ஆணிவேராக இருந்து வரும் வியூகக் குமிழிகளை உன்னிப்பாக கவனிப்போம்.

**நோக்கமும் குறிப்பணிகளும்**

நோக்கங்களற்ற இயக்கம் கண்களற்ற முகத்துக்கு ஒப்பாகும். ஓர் இயக்கத்தின் தெளிவான நோக்கத்தினால் அவர்களுடைய இலக்கு என்ன என்பதை தெளிவுப்படுத்த முடியும். இந்தத் தெளிவான இலக்கை அடைய, அதனை இயக்கும் குறிப்பணிகள் மிக அவசியம். ஆகவே, நோக்கத்தையும் அதன் குறிப்பணிகளையும் ஆங்கிலத்திலும் தமிழிலும் தயாரித்து, அதனை அச்சிட்டு, அதற்குக் கண்ணாடி சட்டமிட்டு, மண்டபத்தில் மாட்டி வைத்து, அதற்கு உயிர் கொடுத்து வைத்துள்ளனர் கிருஷ்ணா பலராம் இயக்கத்தினர்.

ஒருவனுக்கு வாழிகாட்டுவதற்கு முன், நமக்கு அந்த வழி குறித்த அறிவு இருக்க வேண்டும். தடைகளைக் கடந்து அங்கு எப்படிச் செல்வது என்ற அனுபவம் வேண்டும். நம்மோடு இலக்கை நோக்கிப் பயணிப்பவர்களில் சிலர் நடையில் தளர்ச்சி ஏற்படும் போது, அவர்களைத் தட்டிக் கொடுப்பதோடு நின்று விடாமல் அவர்களுக்கும் நடக்கும் சக்தியைப் பெற்றுத் தரும் பயிற்சிகளைக் கொடுப்பது எப்படி என்ற திறன் நிர்வாகத்திடம் இருக்க வேண்டும். கிருஷ்ணா பலராம் இயக்கத்தின் நோக்கங்கள், அதனை அடையும் குறிப்பணிகள், இந்தக் குறிப்பணிகளை இயக்கும் வகைப்படுத்தப்பட்ட குமிழிகள் அனைத்தும் ஒரு சங்கிலித் தொடராக இயங்கி வருகின்றன.

**கிருஷ்ணா பலராம் மையக் குறிப்பாணிகள் ஆறு**

### 1. சீர்மிகு வேதக் கலாச்சார மையம்

கிருஷ்ணா பலராம் இயக்கத்தின் வெற்றிக்குப் பின்னால் இந்த 6 குமிழிகள் முக்கியக் காரணமாகும். இயக்கத்தின் செயல் குமிழிகளில் முதல் குமிழியாக இருப்பது, 'தலைச்சிறந்த வேத கலாச்சார மையமாகத் திகழுதல் என்பதாகும். இறைவழிப்பாட்டில் வேத ஒழுங்குமுறையைக் கடைப்பிடித்தல், ஆலய ஆச்சாரங்களைக் கடைபிடித்தல், விக்ரக வழிபாட்டில் பக்தர்களை மேம்படுத்துவதும் அதற்கான பயிற்சிகளைக் கொடுப்பதும், பெரிய விழாக்களைத் திட்டமிட்டுச் செயல்படுத்துதல், அனைத்துத் துறையிலும் ஆன்மிக அடிப்படையிலான தலைமைத்துவப் பண்புகளைப் பதித்தல் ஆகிய செயல்பாடுகள் ஆன்மிக நோக்கங்களை அடைவதற்கான வழிகளாக கிருஷ்ணா பலராம் செயல்படுகிறது. இயக்கத்தின் ஆன்மிகத் தலைவர் முகுந்த தாசா பிரபு. இவர் கிருஷ்ணா பலராம் இயக்கத்தில் நடக்கும் ஆன்மிக நடவடிக்கைகளை வழி நடத்தி வருகிறார். சிறுவர்களுக்கும் பெரியவர்களுக்கும் பகவத் கீதை வகுப்புகள், மலாக்கா சிறைச்சாலையில் இருக்கும் கைதிகளுக்கு ஆன்மிகச் சொற்பழிவு, தாமோதரா மாதத்தில் தமிழ்ப் பள்ளிகளில் வழிபாடும், நெய் விளக்கேற்றல், வாழ்க்கைக்கான உணவு (பிரசாதம்) விநியோகம் போன்ற நடவடிக்கைகளைப் பல வருடங்களாகத் தவறாமல் நடத்தி வருகிறார். ஆன்மிக அறிவு மேம்பாட்டுக்கு இந்நிலையத்தில் புத்தக நிலையம் உண்டு. இதன் மூலம் இவ்வியக்கத்தினர் அறிவார்ந்த பக்தர்கள் சமுதாயத்தை உருவாக்கும் நோக்கத்தைக் கொண்டு செயல்படுகின்றனர்.

### 2. நிர்வாகமும் உபசரணையும்

உபசரணை மற்றும், உத்தம மேலாண்மை என்பது மற்றுமொரு செயல்முறை குமிழியாகும். இதன் கீழ் கிருஷ்ணா பலராம் இயக்க நிர்வாகத்தின் செயல்பாடுகள் கவனிக்கப்படுகின்றன. பொருளாதாரம் மற்றும், சொத்துடமை நிர்வாகம், விதிமுறைகளும் ஒழுங்குமுறைகளும் அமலாக்கம், வியூகத் திட்டம், பாதுகாப்பு, மாதாந்திர நிர்வாகக் கூட்டம், வருடாந்திர நிகழ்ச்சிகளையும், விழாக்களையும் ஆண்டுக் காலண்டரில் திட்டமிடுதல், ஆன்மிக விருந்தினருக்கான தங்கும் வசதிகளைக் கவனித்தல், சட்டப்படியான விவகாரங்களிலும் பொருளாதாரம் சார்ந்த நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுதல், செயல்விதிமுறைகளை மேம்படுத்துதல், கட்டடம் மற்றும், தூய்மைப் பராமரிப்பு, கட்டொழுங்கு ஆகிய கூறுகள் இயக்கத்தின் நிர்வாகத் துறையை மேம்படுத்துவதற்கு உறுதுணையாகவும், திட்டங்களின் வெற்றிக்கு வழித்துணையாகவும் இருக்கிறது.

### 3. சமயப் பரப்புரை, கல்வி & நூல் விநியோகம்

பிரச்சாரம், கல்வி மற்றும், புத்தக விநியோகச் செயல் குமிழி வழி பக்தர்களுக்கும் மாணவர்களுக்கும் ஆன்மிகக் கல்வியையும் லௌகீகத்திற்குத் தேவையான கல்வியையும் புகட்டிவருகின்றனர் கிருஷ்ணா பலராம் இயக்கத்தினர். வேதங்களை ஓதும் குழுவினரை உருவாக்குதல், வேதங்கள் அடிப்படையிலான பிரச்சாரங்களுக்குத் தேவைப்படும் அச்சிடும் ஏடுகளைத் தயார்ப்படுத்துதல், ஆன்மிக வகுப்புகளை நடத்துதல், இயக்கத்தின் நூலகத்தை நிர்வகித்தல், அச்சிடப்பட்ட கையேடுகளைப் பொதுப் பார்வைக்கு வைத்தல், கல்விச் சார்ந்த நிகழ்ச்சிகளை நடத்துதல், புத்தகம் மற்றும், ஆன்மிகச் சாதனங்கள் விற்பனை, நூல் வெளியீடு, யாத்திரைப் பயணங்களைத் திட்டமிடுதல், தர மேலாண்மை போன்ற கூறுகள் கல்வியைப் புகட்டி அறிவையும் ஞானத்தையும் வளர்க்கும் பணியைச் செய்து வருகின்றனர் இயக்கத்தினர்.




**4. கலை கலாச்சாரமும் விளையாட்டும்**

ஆன்மிகக் கீர்த்தனைகள், பஜனைகள், கைவினை மற்றும், அலங்காரங்கள், கலை கலாச்சாரம் மற்றும், விளையாட்டுத்துறைக்கான நடவடிக்கை காலண்டரை மேம்படுத்த, அதனைத் தொடங்க, நிகழ்ச்சி மேலாண்மை, கலாச்சார வாத்தியங்கள் இசைக்கும் வகுப்புகள் நடத்துவது போன்ற நடவடிக்கைகள் இயக்கத்தின் கலை, விளையாட்டு, மற்றும், கலாச்சாரச் செயல் குமிழி கீழ் செயல்படுவதாகும்.

வேத அடிப்படையிலான பல கலாச்சார நடவடிக்கைகளை ஏற்று நடத்திவரும் கிருஷ்ணா பலராம், மலாக்காவில் உள்ள 3 நகராண்மைக் கழகத்தில் பணிபுரியும் இந்தியர்களை ஒன்றுபடுத்தி மாநில அளவில் மாபெரும் பொங்கல் விழாவை நடத்தியது. இவ்விழாவில் ஒற்றுமையைக் குறிக்கும் பொங்கல் பாட்டை



இயக்கியது. நிகழ்ச்சிக்கு வந்திருந்தவர்கள் அப்பாட்டுக்குக் கோலாட்டம் ஆடி மகிழ்ச்சியில் திளைத்தனர். எல்லோராலும் கவனிக்கப்பட்ட அங்கமாக நெல் பயிரிடும் தொடக்கம் முதல் அது அறுவடை செய்து அரிசியாகும் வரையிலான முறை பழைய கருவிகள் கொண்டு செய்து காட்டப்பட்டது. விளையாட்டுத் துறையில் மாநில அளவில் திட்டத்தினை தீட்டிச் செயல்படுத்தியது இயக்கம். 21 தமிழ்ப்பள்ளிகளில் பயிலும் மாணவர்களுக்குத் திடல் தடப் போட்டியை, மினி ஒலிம்பிக் என்ற பெயரில் நடத்தி அனைவரையும் பிரமிக்க வைத்தது கிருஷ்ணா பலராம். ஹாங் ஜெபாட் விளையாட்டு மைதானத்தில் 100 விழுக்காடு இந்திய அதிகாரிகளைக் கொண்டு நடத்தப்பட்ட மினி ஒலிம்பிக் மாணவர்களின் பாதங்களுக்குப் புதுக் காலணி கிடைத்தது போன்ற மகிழ்ச்சியையும் உற்சாகத்தையும் கொடுத்தது என்பதை மெய்பித்துள்ளது இயக்கம்.

### 5. தன்னார்வப் பணிகள், சமூக நலன் பேணல் & சமுதாயத் தொடர்பு

தொண்டூழியம், சமூக நலன் மற்றும், வெகுஜனத் தொடர்பு பிரிவுகளின் கீழ் கல்வி நிறுவன சீர்திருத்தச் சிந்தனையைப் புகட்டி வருகிறது இயக்கம். சான்றிதழுக்கு அப்பால், மார்க்குகளுக்கு அப்பால், போன்ற சிந்தனைகளின் வழி கல்வியில் பின்னடைவு கண்டிருக்கும் மாணவர்களுக்குப் பல திட்டங்கள் வழி வீர நடையைப் பழக்கி கொடுத்துள்ளது கிருஷ்ணா பலராம். வறுமைக் கோட்டில் இருக்கும் குடும்ப மாணவர்களுக்குப் பள்ளிப் பாட வகுப்புகளை நடத்தி வருவதும் இக்குமிழி கீழ் இயங்கும் செயல்திட்டமாகும். தகவல் தெரிந்த சமுதாயத்தை உருவாக்கும் நோக்கில் வெகுஜனத் தொடர்புப் பிரிவின் வழி இயக்கத்தின் நடவடிக்கைத் தொடர்பான தகவல்களோடு, பயனுள்ள பொதுத் தகவல்களையும் பரிமாறி வருகிறது கிருஷ்ணா பலராம் .

### 6. பிரசாதம் தயாரிப்பும் விநியோகமும்

பிரசாதம் தயார் செய்தல் மற்றும், நிர்வகித்தல் செயல் முறை குமிழியின் கீழ் அன்றாடம் சமையல் தயாரிக்கும் உணவுப் பட்டியலைத் தயாரித்து தூய்மையான முறையில் உணவைத் தயார் செய்யும் விதிமுறைகளை இயக்கம் கடைப்பிடித்து வருகிறது. சமையல் அறையிலும் நிர்வாக மேலாண்மை கடைப்பிடிக்கப்படுகிறது. தயார் செய்யப்படும் உணவு இறைச் சிந்தனையுடன் தயாரிக்கப்பட்டு, இறைவனுக்கு நெய்வேத்தியம் செய்தப்பிறகு விருந்தோம்பலில் பரிமாறப்படுகிறது. இதன் அடிப்படையில் பிரசாதங்களைத் தயார் செய்வதற்கான உணவகத்தை உருவாக்கும் திட்டமும் இக்குமிழியின் கீழ் வரையப்பட்டுள்ளது.

மேற்கூறப்பட்ட இந்த 6 செயல்முறைக் குமிழிகள் இயக்கத்துக்கு உயிராக இருந்து செயல்படுபவையாகும். இவர்களின் நோக்கம் வெற்றி பெறுவதற்கும், கணக்கில் அடங்கா நிகழ்ச்சிகளை முன்னெடுப்பதும், அதனை வெற்றிக் கொள்வதும் இந்தக் குமிழிகளின் ஒன்றுபட்ட செயல்பாட்டின் தோற்றமாகும்.

**முடிவுரை**

இயக்கம் செவ்வென இயங்கத் தரக் கட்டுப்பாடு அவசியம் இருத்தல் வேண்டும். எதைச் செய்தாலும், சிந்தித்தாலும், அதற்கு முதல் நிலைத் தரம் வேண்டும். எந்த வகையிலும், சூழ்நிலையிலும் தரக்கட்டுப்பாட்டிலிருந்து கிஞ்சிற்றும் விலகாமல் இருக்க வேண்டும் என்பது கிருஷ்ணா பலராமின் உயர்ந்த சிந்தனைக் கோட்பாடாகும். கோபுரம் முதல் காலணி கழற்றி வைக்கும் இடம் வரை அனைத்தும் உயர்ந்த தரக் கட்டுப்பாடு சிந்தனையில் உதித்துக் கட்டப்பட்டவையாகும். கிருஷ்ணா பலராம் இயக்கத்தின் மற்றுமொரு வெற்றி என்பது சிறுவர்களுக்கான சிறுவர் இல்லம். இந்தச் சிறுவர் இல்லத்தில் மாணவர்களுக்கு வேத அடிப்படையிலான கல்வியும் பயிற்சிகளும், போதனைகளும் நடத்தப்பட்டு வருகின்றன.

ஒரு கடை வீட்டில் நடத்தப்படும் இந்தச் சிறுவர் இல்லத்தை நடத்தி வருபவர் கிருஷ்ணா பலராம் இயக்கத்தைச் சேர்ந்தவர். தனி மனிதனை உருவாக்கும் உத்திகளை மிகவும் நேர்த்தியாகப் பயன்படுத்தி வெற்றி கண்டு வரும் கிருஷ்ணா பலராம், அரசு சாரா இயக்கங்களுக்கு மத்தியில் அஸ்தமனமாகாத உதயச் சூரியனாகச் சமூக வானில் உதிக்கிறது

***(கட்டுரையாளர் : திரு இரா.சரவணதீர்த்தா பிரபு)***

| 6 | தெய்வீக வாழ்க்கை சங்கம் மலாக்கா உபகிளை |
|---|---|
| | *387, Jalan Dahlia 7, Taman Bunga Raya, Bukit Beruang, 75450 Melaka.* |

**தலைமையகம்:**




தெய்வீக வாழ்க்கை சங்கம் வட இந்தியாவின் உத்தரகாந்த் மாநிலத்திலுள்ள ரிஷிகேஷ் எனுமிடத்தில் அமைந்துள்ள சிவானந்தாசிரமத்தில் 1932-இல் தவத்திரு ஸ்ரீசுவாமி சிவானந்தா சரஸ்வதி மஹராஜ் (8.9.1887-14.7.1963) அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது.

இச்சங்கம் "ஆன்மீக அறிவைப் பரப்புதல்" எனும் நோக்கத்தைக் கொண்டது. இதன் தோற்றுனரான சுவாமி சிவானந்தா அவர்களின் ஆத்ம துடிப்பாகப் பின்வருபனவை அமைந்தன.


*சுவாமி சிவானந்தா*

- சேவை செய், நேசி, கொடு, பரிசுத்தமனாகு, தியானம் செய், அனுபூதி அடை.
- நல்லவனாய் இரு, நல்லதையே செய், அன்பாய் இரு, இரக்கப்படு
- "நான் யார்?" என்று ஆராய், ஆத்மனை அறி, விடுதலை பெறு.
- நீஅகிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம் ஆகியவற்றைக் கடைப்பிடி, இவையே யோகம், வேதாந்தம் ஆகியவற்றின் அடிப்படையாகும்.
- உடமை மீது பற்றற்றிரு, இறைவன் மீது பற்றுக் கொள்.


*சுவாமி பிரணவானந்தா*

**மலேசியக் கிளை:**

மலேசியாவில் இவ்வான்மீக இயக்கம் 1953-ஆம் ஆண்டில் பத்துமலை அடிவாரத்தில் அமைந்துள்ள சிவானந்தாஸ்ரமத்தில் தவத்திரு ஸ்ரீசுவாமி பிரணவானந்தா சரஸ்வதி மஹராஜ் (28.08.1908-28.03.1982) அவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. இதுவே மலேசியக் கிளையாகச் செயல்படுகிறது.

**மலாக்கா உபக்கிளை:**

தெய்வீக வாழ்க்கை சங்கம், மலாக்கா உபக்கிளை தவத்திரு சுவாமி பிரணவானந்தா அவர்களின் ஆசியோடு 11.06.1967-ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது.

1967-ஆம் ஆண்டு பிப்ரவரி மற்றும், ஜுன் மாதங்களில் தவத்திரு சுவாமிஜி அவர்களால் மலாக்காவில் நடத்தப்பட்ட இரண்டு அந்தர் யோகம் நிகழ்வுகள் இவ்வுபக் கிளையை மலாக்காவில் அமைக்கச் சில அன்பர்களுக்குக் தூண்டுகோலாக அமைந்தது.

ஸ்ரீமதி T.A. வானர் அவர்கள் தலைவராகவும், ஸ்ரீ K.S.மணியம் அவர்கள் துணைத் தலைவராகவும், ஸ்ரீ S. விஜயரத்தினம் அவர்கள் கௌரவச் செயலாளராகவும், ஸ்ரீ S. கந்தையா அவர்கள் கௌரவப் பொருளாளராகவும் பொறுப்பேற்று இவ்வுபக்கிளை தோற்றம் கண்டது.

தொடர்ந்து 17.04.1968-இல் இந்த உபக்கிளை சங்கப் பதிவகத்தில் அதிகாரப்பூர்வமாகப் பதிவு பெற்றது.

**நடவடிக்கைகள்:**

தொடக்கக் காலத்தில் உபக்கிளை சற்றுச் செயலற்றுக் காணப்பட்டாலும் வீடுகளில் தொடர்ந்து இல்லப் பிரார்த்தனைகள் மேற்கொள்ளப்பட்டு வந்தன. அதோடு, ஸ்ரீ குலசேகரம் அவர்கள் வீட்டில் ஞாயிற்றுக்கிழமைகளில் சமய வகுப்புகளும் நடைபெற்று வந்தன. நிர்வாகக் கூட்டங்கள் நிர்வாக உறுப்பினர்களின் இல்லத்தில் அவ்வப்போது நடைபெற்று வந்தன.

22.11.1970 முதல் ஸ்ரீ A. வேணுகோபால் அவர்களும், 9.3.1972 முதல் டாக்டர் K. தர்மரத்னம் அவர்களும், 28.03.1973 முதல் ஸ்ரீ K.S. மணியம் அவர்களும், 27.02.1975 முதல் ஸ்ரீ இ. குலசேகரம் அவர்களும், 21.03.1979 முதல் ஸ்ரீ S.N. காந்தி அவர்களும், உபகிளைத் தலைவர்களாகப் பொறுப்பேற்றுத் தங்கள் சேவைகளைச் செவ்வென வழங்கியுள்ளனர்.

இக்காலக்கட்டங்களில் மாதாந்திர இல்லப் பிரார்த்தனை, உறுப்பினர்களின் வீடுகளில் நடைபெற்று வந்தன. இந்துக்களின் சிறப்பு வழிபாட்டுப் பிரார்த்தனைகளில் சில, இல்லங்களிலும், மலாக்கா பட்டினத்தில் உள்ள சுற்று வட்டார ஆலயங்களிலும் ஏற்பாடு செய்யப்பட்டன.

அந்தர் யோக நிகழ்வுகள், ஆன்மீகச் சொற்பொழிவுகள், குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்தா அவர்களின் ஜெயந்தி மற்றும், மகாசமாதி பிரார்த்தனைகள் போன்ற நிகழ்வுகள் உபக்கிளையின் ஏற்பாட்டில் நகர மண்டபம், குஜராத் வணிக் சங்க மண்டபம், ஸ்ரீ திரௌபதை அம்மன் ஆலயம், சன்னாசி மலை ஆண்டவர் ஆலயம், மருத்துவமனை ஸ்ரீ சித்தி விநாயகர் ஆலயம், சுப்பிரமணியர் தேவஸ்தானம், உஜோங் பாசிர் ஸ்ரீ அம்பாஜி ஆலயம் போன்ற இடங்களில் சிறப்பாக நடைபெற்று வந்துள்ளன.

தைப்பூசத்தன்று பத்து பெரண்டாம் ஸ்ரீ சுப்பிரமணியர் தேவஸ்தானத்தின் ஆதரவோடு ஹென்றி கர்னி சீர்திருத்தப்பள்ளி இந்து மாணவர்களுக்கு அன்னதானமும், தீபாவளிச் சமயங்களில் டுசுன் டத்தோ முராட், ஹென்றி கர்னி ஆகியப் பள்ளிகளின் இந்து மாணவர்களுக்குப் புத்தாடைகள் பலகாரங்கள் மற்றும், காலைச் சிற்றுண்டி வழங்கப்பட்டு வந்தன.



*சுவாமி குகபக்தானந்தா*

தெய்வீக வாழ்க்கை சங்கம், மிலேசியக் கிளையின் தலைவர் ஸ்ரீ சுவாமி பிரணவானந்தா அவர்கள் மலாக்கா உபக்கிளையின் பல நிகழ்வுகளில் கலந்து கொண்டுள்ளார். 1989 முதல் மலேசியக் கிளையின் தலைமைப் பொறுப்பேற்ற ஸ்ரீ சுவாமி குகபக்தானந்தா அவர்கள் (27.10.1943- 02.05.2013) தொடர்ந்து உபக்கிளைக்கு ஆதரவு வழங்கி வந்தார். உலகத்தலைவர் ஸ்ரீ சுவாமி சிதானந்தா அவர்கள் 1970 முதல் 1999 வரை ஐந்து முறைகள் மலாக்கா உபகிளைக்கு விஜயம் செய்துள்ளார்.

**ஸ்ரீ ந. திருவேங்கடம் / உபக்கிளைக் கட்டடம்**

ஸ்ரீ ந. திருவேங்கடம் அவர்கள் மலாக்கா உபக்கிளையின் தலைவராக 11.08.1996 முதல் பொறுப்பேற்றார். புக்கிட் புருவாங், தாமான் பூங்கா ராயா வரிசை வீட்டுக் குடியிருப்பில் நிர்வாகத்தின் ஒத்துழைப்போடும் பல நல்ல உள்ளங்களின் ஆதரவோடும் உபகிளைக்கென்று ஒரு கட்டடம் 1998 இல் வாங்கப்பட்டது.

15.3.1999 அன்று “சிவானந்தா திவ்ய பிரேம ஆசிரமம்“ என்ற பெயரைச் சூட்டி உலகத்தலைவர் ஸ்ரீ சுவாமி சிதானந்தா அவர்கள் இக்கட்டடத்தைத் திறந்து வைத்தார். அன்று முதல் பெரும்பாலான உபக்கிளையின் நடவடிக்கைகள் இக்கட்டிடத்திலேயே மேற்கொள்ளப்பட்டன.



உறுப்பினர்களின் வேண்டுகோளுக்கிணங்க வீட்டுப் பிரார்த்தனைகளும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. பள்ளிகளிலும் கோயில்களிலும் அந்தர் யோகம், சமய முகாம் போன்றவை மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

2003-ஆம் ஆண்டு ஆசிரமக் கட்டடம் சற்று விரிவாக்கம் கண்டது.

*சிவானந்தா திவ்ய பிரேம ஆசிரமம்*





*சுவாமி சிதானந்தா*

**ஸ்ரீ சா.செல்லத்துரை**

ஸ்ரீ ந. திருவேங்கடத்தின் மறைவுக்குப் பிறகு ஸ்ரீ சா. செல்லத்துரை அவர்கள் 18.09.2005 முதல் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

2007-ஆம் ஆண்டு ஆசிரமக் கட்டடத்தில் குளிர்ச்சாதன வசதிகள் பொருத்தப்பட்டு மாணவர்களுக்கான ஆன்மீக முகாம்கள் ஆசிரமத்திலேயே நடத்தப்படுவதற்கு வழி வகுக்கப்பட்டது.

16.03.2008 அன்று இந்த ஆசிரமத்தில் குருதேவ் ஸ்ரீ சுவாமி சிவானந்தா மூர்த்தி பிரதிஷ்டை மகா கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. அன்று முதல் தினசரி காலை மாலை இரு வேளைகளிலும் பூஜை நடைபெற்று வருகின்றது.




*புதிய வசதிகள் கொண்ட ஆசிரமம்*

2013-ஆம் ஆண்டு முதல் கோயில்கள் மற்றும், மலேசியாவில் உள்ள தெய்வீக வாழ்க்கை சங்கம் இதர உபக்கிளைகளைச் சென்று காண வேண்டும் என்னும் நோக்கத்தில் பதின்ம வயதினர் முதல் முதியோர் வரை உட்படுத்திய தல யாத்திரை மற்றும், குடும்பத் தின நிகழ்வை இந்த உபக்கிளை 2013, முதல் மேற்கொண்டு வருகின்றது.



2013-ஆம் ஆண்டு முதல் மலேசிய கிளைக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ள தவத்திரு ஸ்ரீ சுவாமி ஸ்வயம்ஜயானந்தா அவர்கள் ஆண்டுதோறும் உபக்கிளையின் பொதுக்கூட்டத்தில் கலந்து கொள்வதோடு குறைந்தபட்சம் ஆண்டுக்கு ஒரு முறையாவது உபக்கிளை உறுப்பினர்களோடு 'சத்சங்கம்' மேற்கொண்டு வருகிறார்.



ஸ்ரீ சுவாமி முமுக்ஷுவானந்தா அவர்கள் 2015-ஆம் ஆண்டு முதல் உபக்கிளையின் ஆசிரமத்தில் தங்கி தமது சேவையை வழங்கி வருகின்றார். உபக்கிளையின் அனைத்து நடவடிக்கைகளுக்கும் தூண்டுகோலாகவும் ஆலோசகராகவும் இயங்கி வருகிறார்.

50 ஆண்டுகள் பூர்த்தி அடைந்ததை ஒட்டி கடந்த 14.12.2018 அன்று உபக்கிளை பொன் விழா நிகழ்வை வெற்றிகரமாக நடத்தியது.

**ஸ்ரீ மு. உதயசூரியன்**

23.02.2020 முதல் கடந்த 17 ஆண்டுகளாக உபக்கிளையின் செயலாளராகச் செயல் புரிந்த ஸ்ரீ மு. உதயசூரியன் அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்றார்.

ஒவ்வொரு தெய்வீக வாழ்க்கைச் சங்க உறுப்பினரும் சுவாமி சிவானந்தா காட்டிய வழியில் தங்கள் வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்னும் நோக்கில் இலவசப் புத்தக வெளியீடு, பள்ளி மாணவர்களுக்கான ஆன்மீக வழிகாட்டிப் பயிற்சி முகாம்களை நடத்துவது, சமய வழிகாட்டி வகுப்புகளை நடத்துவது எனும் இலக்கைக் கொண்டு தெய்வீக வாழ்க்கை சங்கம் மலாக்கா உபக்கிளையின் பயணம் தொடர்கின்றது.



**ஸ்ரீ சா.செல்லத்துரை & ஸ்ரீ மு. உதயசூரியன்**

***(கட்டுரையாளர்: திரு மு. உதயசூரியன்,***

***தலைவர், தெய்வீக வாழ்க்கை சங்கம், மலாக்கா)***

## 7 மலேசிய இந்துதர்ம மாமன்றம்

மலேசிய இந்துதர்ம மாமன்றம், 1982-ஆம் ஆண்டில் அரசு சாரா அமைப்பாகத் தோற்றுவிக்கப்பட்டது. நாடெங்கும் 35 அருள்நிலையங்கள் உள்ளன. அவ்வகையில் மலாக்கா மாநிலத்திலும் இந்துதர்ம மாமன்றம் தோற்றம் கண்டது. இப்பேரியக்கத்தைத் தோற்றுவித்தவர் சமயப் பேரறிஞர் அருட்திரு சங்கரதாசன் லெப்டினன் கர்னல் (R) அமரர் கரு சாத்தையா K.M.N., A.M.N. ஆவார். தமிழ்நாடு காஞ்சி காமக்கோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி அவர்களின் ஆசியோடு தொடங்கப்பட்டது. ஆன்மீக வளர்ச்சியின்




பிரதான அடிப்படை நோக்கமாகக் கொண்ட ஒரு பேரியக்கம் இந்துதர்ம மாமன்றமாகும். இப்பணியினைச் செவ்வனே செய்ய, கர்னல் கரு சாத்தையா அவர்கள் ஆன்மீக வளர்ச்சியினை மூன்று கூறுகளாகப் பிரித்தார். அவை, சாத்திரம், ஆகமம், தோத்திரம் என்பவையாகும். அவற்றுள் சாத்திரத்தைக் கர்னல் கரு. சாத்தையா அவர்களும், ஆகமத்தை முத்துக்குமார சிவாச்சாரியார் அவர்களும், தோத்திரப் பாராயணத்தை ஓதுவார் தொ. கா. சாம்பசிவனார் அவர்களும் வழி நடத்தினர்.

ஐயா ஓதுவார் தொ. கா. சாம்பசிவனார் அவர்கள் பல விருதுகள் பெற்றுள்ளார். அவற்றுள் சிறப்புக்குரிய விருதான ‘இசைப்பாவலர்’ எனும் விருது 2005-ஆம் ஆண்டு ஸ்ரீ பொன்னம்பலவானேஸ்வரர் இந்து சமயப் பாடசாலை, இலங்கை வழங்கிச் சிறப்பித்தது. ஐயா அவர்கள் மலேசிய இந்துதர்ம மாமன்றத்தின் தேசிய ஓதுவராகவும், அலோர்காஜா அருள்நிலையத்தின் தலைவராகவும், நடராஜர் கோட்டத் தலைவராகவும் மலாக்கா மாநிலப் பேரவைத் தலைவராகவும் பொறுப்புகளைச் செவ்வனே ஏற்றுப் பலத் திருமுறை நன்னெறி நிகழ்ச்சிகள், நன்னெறி வகுப்புகள் நடத்தி உளமாரச் சேவை செய்துள்ளார். மலாக்கா இந்துக் கோயில்களில் ஐயாவின் தொண்டு அளப்பரியது. “பெங்கலான்” ஸ்ரீசித்தி விநாயகர் ஆலயத்திலும் “பத்து பிரெண்டாம்” முருகன் ஆலயத்திலும் வாரந்தோறும் வெள்ளிக்கிழமைகளிலும், “சேங்” தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் ஆலயத்தில்

(குதிரைக் கோயில்) ஞாயிற்றுக்கிழமைகளிலும் பல வருடங்களாகச் சமய வகுப்பை முறையே நடத்திய அருந்தொண்டு ஐயா ஓதுவார் தொ. கா. சாம்பசிவம் அவர்களையே சாரும்.




அதுமட்டுமல்லாமல், மலாக்கா மாமன்றம் “பத்து பிரண்டாம்” முருகன் கோயிலிலும், ஸ்ரீ வனத்தாண்டவர் கோயிலிலும், ரெம்பியா ஸ்ரீ மாரியம்மன் கோயிலிலும், “சேங்” சன்னாசி மலை கோயிலிலும், ஜாசின் தேவி ஸ்ரீ மகா மாரியம்மன் கோயிலிலும், தம்பின் வைதீஸ்வரர் கோயிலிலும், “கெமுனிங்” ஸ்ரீ முத்து மாரியம்மன் கோயிலிலும் சமயப் பாராயண வகுப்புகள் நடத்தியுள்ளது. சிறியவர்கள் முதல் பெரியவர்கள்வரை இவ்வகுப்பில் இலவசமாகக் கலந்து கொண்டு பயன் பெற்றனர். மேலும், ஒவ்வொரு பள்ளித் தவணை விடுமுறையின் போதும் மூன்று முதல் ஐந்து நாட்கள் வரை அலோர்காஜா தமிழ்ப்பள்ளியில் சமய வகுப்புகள் நடைபெறும். இவ்வகுப்புகளில் முதன்மையாகத் திகழ்வது திருமுறைப் பாராயணம் கற்பிக்கும் அங்கமாகும்.

மேலும், மாணவர்களின் உடல் நலம் கருதி காலையில் மாணவர்களுக்கு யோகாசனம் பயிற்சியும், மாணவர்களின் நன்னடத்தைக் கருதி கட்டொழுங்குச் சொற்பொழிவுகளும் நடைபெறும். இதனைத் தொடர்ந்து, மலாக்கா இந்துதர்ம மாமன்ற உறுப்பினர்கள் பலர் ஒன்றிணைந்து மலாக்கா தோட்டப்புறக் கோயில்களில் பிரார்த்தனைச் செய்து அங்குள்ள மக்களுக்கு இலவசமாக உணவளிப்பர். ஓதுவார் மூர்த்தி ஐயாவின் மறைவிற்குப் பிறகு, 2012-ஆம் ஆண்டில் அலோர்காஜா அருள் நிலையம் திரு காளிமுத்து சாம்பசிவன் அவர்களால் சாம்பசிவனார் நன்னெறிக் கழகம் என்று நடத்தப்பட்டு வருகிறது. இக்கழகத்தில் ஆண்டுதோறும் பள்ளி விடுமுறைக் காலங்களில் சமயக் கருத்தரங்குகள் நடைபெறும். ஆக, இச்சமயக் கருத்தரங்குகள் இன்றளவும் மிகச் சிறப்பாக நடத்தப்பட்டு வருகிறது. மேலும், “பெங்கலான் பாலாய் ராயா”, “புக்கிட் நங்கா பாலாய் ராயா”, ஸ்ரீ கெலெமாக் தோட்டம் ஆகியப் பகுதிகளில் சமய வகுப்புகள் நடத்தப்பட்டுள்ளன. மேலும், “ஆயர் பானாஸ்” மகா மாரியம்மன் கோயிலில் ஒவ்வொரு வாரமும் சமய வகுப்புகள் நடைபெறுகின்றன.



இதன் வழி, இந்துதர்ம மாமன்றம் மலாக்கா இந்துக் கோயில்களுக்கும் மலாக்கா வாழ் மக்களுக்கும் அளப்பரிய தொண்டினை ஆற்றியுள்ளது என்பது புலப்படுகிறது.

இதன் தேசிய அமைப்பு கடந்த 2020 செப்டம்பர் 10-12 இல் மலாக்கா மாநிலத்தில் வருங்கால இந்துச் சமய ஆசிரியர்களுக்கான சிறப்புப் பட்டறை ஒன்றை பின்வருமாறு **(இந்து தர்ம ஆசிரியர் பயிலரங்கு)** ஏற்பாடு செய்துள்ளனர், இதில் 114 பங்கேற்பாளர்கள் கலந்து கொண்டனர், இதில் 85 அரசு பள்ளி ஆசிரியர்களும் மற்றும், மற்றவர்கள் கோயில்கள் மற்றும், பிற அமைப்புகளின் பிரதிநிதிகள் ஆவர். நாடு முழுவதும் அடிப்படை இந்துச் சமயக் கல்வியை வழங்க விரும்புவோருக்கு உதவும் முயற்சியாக இந்த அமைப்பு ஆசிரியர்களுக்குப்



பாடப்புத்தகங்கள் மற்றும், வழிகாட்டுதல் பொருட்களை வழங்கியுள்ளது. இந்த நாட்டில் இந்துக்களிடையே இந்துச் சமயக் கல்வியை வழங்குவதில் உள்ள இடர்பாடுகளை நீக்குவதற்கு, இந்தப் புத்தகங்கள் ஒரு முழுமையான ஆய்வுக்குப் பிறகு சமய அறிஞர்களால் தயாரிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.

**'ஒன்றே குலம்,' ஒருவனே தேவன், அன்பே தெய்வம்.'**

*(கட்டுரையாளர்: திரு காளிமுத்து சாம்பசிவன்)*

## மலேசிய இந்துதர்ம மாமன்றத்தின் ஆசிரியர் பயிலரங்கு

மலேசிய இந்துக்களுக்குக் கடந்த 39 ஆண்டுகளாகச் சமயம் தொடர்பான அனைத்து விசயங்களுக்கும் பிரதிநிதிக்கும் மலேசிய இந்துதர்ம மாமன்றம் ஓர் அரசுசாரா இயக்கமாகும். இம்மாமன்றத்தின் முதன்மைத்திட்டம் இந்துச் சமயக் கல்வித் திட்டமாகும். அவ்வகையில், மலேசிய இந்துதர்ம மாமன்றம், மலாக்கா மாநிலத் தமிழ்ப்பள்ளித் தலைமை ஆசிரியர்கள் மன்றம் ஒத்துழைப்போடும் மலாக்கா மாநிலக் கல்வி இலாகாவின் அனுமதியோடும் மூன்று நாட்கள், 10-9-2020 முதல் 12-9-2020 வரை, இந்துதர்ம ஆசிரியர் பயிலரங்கு ஒன்றினை மலாக்கா ஆயர் குரோவிலுள்ள பிரபல தங்கும் விடுதியில் நடத்தியது. மித்திராவின் (MITRA) நிதி உதவியோடு நடைபெற்ற இப்பயிலரங்கில் கலந்து கொண்ட ஆசிரியர்களுக்குப் பயிற்சிக்கான ஆவணங்கள், உணவு, உறைவிடம், போக்கு வரத்து செலவுக்கான கட்டணம் ஆகியவை வழங்கப்பட்டன. இப்பயிற்சி முற்றிலும் இலவசமாக நடத்தப்பட்டது.

**நோக்கங்கள்:**

அ) இந்துக் குழந்தைகளுக்கு இள வயது முதல் முறை சார்ந்த (Formal) நிலையில் சமயக் கல்வியை வழங்குதல்.

ஆ) இந்துச் சமயத்தை முறை சார்ந்த நிலையில் கற்பிக்கும் ஆசிரியர்களுக்குப் பயிற்சியளித்தல்.

இ) ஆசிரியர்கள் கற்பிப்பதற்குத் தேவையான ஆவணங்களை வழங்குதல்.

ஈ) இந்துச் சமயக் கல்வியை மகிழ்வூட்டும் வகையிலும் மாணவர்களை ஈர்க்கும் வகையிலும் கற்பிக்கும் அணுகுமுறைகளையும் உத்திகளையும் ஆசிரியர்களுக்கு அறிமுகம் செய்தல்.

உ) பள்ளியில் உள்ள அனைத்து மாணவர்களுக்கும் அவர்களின் வயதிற்கேற்ப பாடநூல்களை வழங்குதல்.







இப்பயிற்சி முகாமில், மாநிலத் தமிழ்ப்பள்ளி ஆசிரியர்கள் 67 பேரும், தேசியப் பள்ளி ஆசிரியர்கள் 18 பேரும் பங்குக் கொண்டனர். இவர்களைத் தவிர்த்து, கோயில் பிரதிநிதிகள், அர்ச்சகர்கள், தனியார் பாலர் பள்ளி ஆசிரியர்கள் மற்றும், தனிநபர்கள் என 29 பேர் கலந்து பயனுற்றனர். மொத்தப் பங்கேற்பாளர்கள் 114 பேர். திரு.இராதாகிருஷ்ணன் அழகுமலை (தேசியத் தலைவர்), திரு.சுப்பிரமணி சோணையா (துணைத்தலைவர்), திரு.இரமேஷ் ஆறுமுகம் (உதவித் தலைவர்), திரு.ரிஷிக்குமார் வடிவேலு (உதவித் தலைவர்), தர்ம சிகாமணி கை.குமரகுருபரன், திரு.பிரகாஷ் முனுசாமி மற்றும், திரு.நாகதேவன் ஆகியோர் பாடங்களைத் திறம்படக் கற்பித்தனர்.

இப்பயிற்சியின்போது, ஒவ்வோர் ஆசிரியருக்கும் இந்துச் சமயக் கல்விப் பாடத்திட்டம், ஆசிரியர் கையேடு, பிரார்த்தனைக் கோவை, இந்து தர்ம கற்பித்தலில், பல நிலைகளுக்கான பாட நூட்களும் வழங்கப்பட்டது. இப்பயிற்சி முகாமின் நிறைவு விழாவில் சிறப்புப் பிரமுகராகத் திரு.தொ.க . நாராயணசாமி அவர்கள் கலந்து கொண்டு, நவீன காலச் சவால்களை நம் மாணவச் செல்வங்கள் எதிர்கொள்ள இந்து தர்மத்தின் வழித்துணையும் ஆசிரியர்களின் பங்கும் பற்றி சிறப்பாகப் பேசி முகாமை அதிகாரப்பூர்வமாக முடித்து வைத்தார்.

*(கூடியத் தகவல்: ஆசிரியர் குழு)*

| 8 | **மலாக்கா மாநில இந்து சங்கம்** |
|---|---|
| | *657 M/1, Jalan Delima 1, Taman Bukit Melaka, Bukit Beruang, 75450 Melaka.* |

**முதல் கட்ட வரலாறு (1979 - 1995)**

1979 - 1995 இக்காலக்கட்டத்தில் மலாக்கா மாநில இந்து சங்கம் தோன்றுவதற்குக் காரணகர்த்தாவாக இருந்தவர் காலஞ்சென்ற திரு எஸ்.என். காந்தி அவர்கள் ஆவார்.



தொடக்கக் காலத்தில், இவருடன் காலஞ்சென்ற திரு என்.திருவேங்கடம், காலஞ்சென்ற திரு எஸ்.பக்கிரிசாமி, திரு இரத்தினசாமி ஆகியோர் இச்சங்கத்தை ஒரு சிறிய வட்டத்திற்குள் செயல்படுத்தி வந்தனர். பல தனியார் வீடுகளிலும், ஆலயங்களிலும் சமய வகுப்புகள், தேவார வகுப்புகள், பஜனைகள், சமயச் சொற்பொழிவுகள் முதலியவற்றைச் சிறப்பாக நடத்திவந்தனர். அத்துடன் சில ஆலயங்களில் சிவராத்திரி, நவராத்திரி, கிருஷ்ண ஜெயந்தி ஆகிய விழாக்களும் நடத்தினர். அவ்வப்பொழுது வெளியூர்களிலிருந்தும் பேச்சாளர்களை வரவழைத்துப் பொது மக்கள் பயனடைய சொற்பொழிவுகளும் ஏற்பாடு செய்துள்ளனர். திருமுறை ஓதும் விழாவும் சிறப்பாக நடத்தப்பட்டது.



அதன் பிறகு, மலாக்கா மாநில இந்துச் சங்கத்தில் ஒரு தொய்வு ஏற்பட்டு சங்கம் சில ஆண்டுகாலமாக முறையாக இயங்கவில்லை. இந்நிலையில் மீண்டும் இந்து சங்கம் சிறப்புடன் செயல்பட மத்திய செயலவை உறுப்பினர்கள் திரு எஸ்.சிங்கராஜு சுப்பய்யா அவர்களை அணுகி மாநிலத் தலைவர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டனர். எனவே, 1985-ஆம் ஆண்டில் அவர் மாநிலத் தலைவராகப் பொறுப்பேற்று 1995-ஆம் ஆண்டுவரை இப்பதவியில் இருந்து செயல்பட்டு ஓய்வு பெற்றார்.

1985 - 1995 இந்த பத்து ஆண்டுக் காலக் கட்டத்தில் மலாக்கா இந்து சங்கம் பல செயல் திட்டங்களைத் தீட்டி நடைமுறைக்குக் கொண்டுவந்துள்ளது. அவை:

- புதிய உறுப்பினர்களைச் சேர்ப்பது;
- சமய வகுப்பு;
- இந்து அனாதை சவ அடக்கம்;
- பரத நாட்டிய வகுப்பு;
- இந்துத் திருநாள் - ஒவ்வோர் ஆண்டும் மே 12ஆம் நாள் மாநில ரீதியில், ஆண்டுக்கு ஒரு கோயிலாகத் தேர்ந்தெடுத்து இந்தத் திருநாள் கொண்டாடப்பட்டது;
- ஈமக்கிரியை மண்டபம் - மாநில இந்து சங்கத்தின் முயற்சியாலும் மாநில அரசாங்கத்தின் ஒத்துழைப்பாலும் மலாக்கா கிளேபாங் பெசார் என்ற இடத்தில் ஈமக்கிரியை செய்வதற்கு ஒரு சிறிய இடம் தற்காலிகமாக ஒதுக்கப்பட்டது;
- புக்கிட் சிரண்டிட் இந்து-பஹாய் இடுகாடு மாற்றம் - இவ்விடுகாடு மேம்பாட்டுக் காரணமாகப் புக்கிட் சிரண்டிட்டிலிருந்து ஜெலுத்தொங் மயானத்திற்கு இடம் மாற்றவேண்டிய கட்டாயத்திற்குள்ளானது. அங்கிருந்த கல்லறைகளை இந்துச் சமய முறைப்படி மாற்றம் செய்ய இந்து சங்கம் பொறுப்பேற்று வெற்றிகரமாய் செய்து முடித்தது.

**இந்து சங்கத்தின் இதர சமயச் சமுதாயப்பணிகள்:**

- ஆலய குருக்கள், நாதஸ்வர - தவில் வித்வான்கள் ஆகியோரை வெளி நாட்டிலிருந்து வரவழைக்கக் கடப்பிதழ் ஏற்பாடு செய்தது;

- மலாக்காவில் பல ஆலயங்களில் குடிமைப் பயிற்சி வகுப்புகள் நடத்தப்பட்டன;
- திருமுறை ஓதும் போட்டிகளுக்குத் தேவையான நடுவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி வகுப்புகள் நடத்தப் பட்டன;
- மலாக்கா மாநிலத்தில் உள்ள பல தோட்டங்களில் 'மகிழ்ச்சியான குடும்பம்' என்ற கருப்பொருள் கொண்ட கருத்தரங்குகள் நடத்தப்பட்டன;
- மலாக்கா மாநில ரீதியில் இடைநிலை/ உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு இந்து சமய அறிவுப் புதிர் போட்டி சிறப்பாக நடத்தப்பட்டது.
- பூலாவ் செபாங், மேர்லிமாவ் ஆகிய பகுதிகளில் வட்டாரப் பேரவைகள் அமைக்கப்பட்டன.

**இரண்டாம் கட்ட வரலாறு (1996 - 2003)**



இக்காலக்கட்டத்தில், புதிய தலைமைத்துவத்தைச் சங்கபூசன் திரு கே.வி.சதாசிவம் ஏற்றார். அப்போது மாநில இந்து சங்கம் இரண்டு கிளைகளோடு மட்டுமே செயல்பட்டு வந்தது. பின்னர், புதிய பேரவைகளாகப் புக்கிட் புருவாங், உஜோங் பாசிர், ரெம்பியா, ஜாசின், புலாவ் செபாங், மெர்லிமாவ் ஆகிய வட்டார இந்து சங்கக் கிளைகளோடு சங்கம் செயல்பட்டது.

இந்தக் காலக்கட்டத்தில் உறுப்பினர் எண்ணிக்கையும் அதிகரிக்கப்பட்டது. திருமுறைப் போட்டிகள் வட்டார ரீதியில் அறிமுகப்படுத்தப்பட்டன. போட்டிகள் முறைப்படுத்தப்பட்டுப் பயிற்சி பெற்ற நடுவர்களும், ஆசிரியர்களும் ஈடுபட்டுச் செயல்படுத்தினர். இதன் விளைவாக நூற்றுக்கணக்கான இந்து மாணவர்கள் திருமுறைப் போட்டிகளில் பங்கேற்றனர். இதன் பிரதிபலிப்பாக மாணவர்கள், அவர்தம் பெற்றோர்கள், இந்துச் சமய ஆர்வலர்கள் மகிழ்வும் மனநிறைவும் கொண்டு மாநில இந்துச் சங்கத்திற்கு ஆதரவு அளிக்கத் தொடங்கினர்.

இவ்வித துரித வளர்ச்சியினால் நமது இந்து சங்கம் மேலும் சிறப்பாகச் செயல்படுவதற்கு ஒரு நிரந்தர அலுவலகத்தை அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில் உயர்திரு மருத்துவர் டத்தோஸ்ரீ சுப்ரமணியம் அவர்கள் தம்முடைய கிளினிக் மேல்மாடியில் சங்க அலுவலகத்தை அமைத்துச் செயல்பட பெருமனதுடன் இணங்கினார்.

இவ்வாறு வழங்கப்பட்டச் சங்க அலுவலகத்தில் மாதாந்திரச் செயலவைக் கூட்டங்கள் நடைபெறுவதற்குப் பேருதவியாக இருந்தது. இந்த மாற்றங்களினால் நமது சமுதாயத்தில் ஒருவாரான விழிப்புணர்வு ஏற்பட்டுச் சான்றோர்கள் பலர் சங்கத்தில் உறுப்பினர்களாக இணைந்தார்கள்.

**இதன்வழி பின்வரும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன:**

- 1999-ஆம் ஆண்டு, குஜராத்தி வணிக் சங்க மண்டபத்தில் ஒரு சமயக் கருத்தரங்கு நடத்தப்பட்டது;
- 2002-ஆம் ஆண்டு மலாக்கா மணிபால் மருத்துவக் கல்லூரியில் இந்துச் சமய ஆசிரியர் பயிற்சி பட்டறை வெற்றிகரமாக நடத்தப்பட்டது. இதில் கர்னல் சாத்தையா, முனைவர் என்.எஸ். ராஜேந்திரன், தேசியத் தலைவர் டத்தோ அ.வைத்திலிங்கம், தொ.கா.சாம்பசிவம், தொண்டர்மணி திரு அ.கிருஷ்ணன் ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.
- 2003-ஆம் ஆண்டு தேசியத் திருமுறை ஓதும் விழாவில் மலாக்கா மாநிலத்தைப் பிரதிநிதித்த எஸ்.கணேஷ்ராவ் என்ற போட்டியாளர் நான்காம் பிரிவில் முதல் பரிசு பெற்றதோடு தங்கப் பதக்கத்தையும் வென்று மலாக்கா மாநிலத்திற்குப் பெருமை சேர்த்தார்.
- இக்காலக்கட்டத்தில்தான் இந்துச் சங்கக் கட்டட நிதி துவக்கப்பட்டு, ஏறத்தாழ 85,000.00 ரிங்கிட் சேமிக்கப்பட்டது. இத்தொகை, பின்னர் கட்டடம் வாங்கியபோது முன்பணமாகச் செலுத்தப்பட்டது.

**மூன்றாம் கட்ட வரலாறு ( 2004 - 2012 )**



சங்கரத்னா திரு அ.கிருஷ்ணன் அவர்களின் தலைமையில் இக்காலக்கட்டத்தில் மலாக்கா இந்து சங்கம் புதிய பரிணாம வளர்ச்சி கண்டது. இந்துச் சமய, கலை, பண்பாட்டு நிகழ்வுகள் மாநில அளவிலும், தேசிய அளவிலும் நடத்தப்பட்டன. தேசிய அளவிலான '2020ஐ நோக்கி இந்துச் சமயம்' என்ற சமய மாநாடு ஒன்று வெற்றிகரமாக நடத்தப்பட்டது.

மலேசிய இந்து சங்கத்தின் 32-ஆவது ஆண்டுத் தேசியப் பொதுக் கூட்டத்தை இம்மாநிலத்தில் நடத்தி சரித்திரம் படைத்தது. இக்கூட்டத்தின் வழி நடப்புத் தலைவர் டத்தோ மோகன் ஷான் அவர்கள் கடும் போட்டியிருந்தும் வெற்றிபெற்று முதல் முறையாக இந்து சங்கத்தின் தேசியத் தலைவராகப் பொறுப்பேற்றார் என்பது குறிப்பிடத்தக்கது.

திருமுறைப் போட்டிகள் வட்டாரப் பேரவைகளிலும், மாநிலப் பேரவையிலும் தொடர்ந்து நடத்தப்பட்டன.

மாநிலப் பேரவை சொந்தக் கட்டடம் வாங்கும் எண்ணம் கொண்டு அதற்கான முயற்சியில் இறங்கியது. அவ்வேளையில், தாமான் புக்கிட் மலாக்கா, புக்கிட் புருவாங் பகுதியில் இரண்டு மாடி கடை வீடு ஒன்று 280,000.00 ரிங்கிட் விலைக்கு வர, அதைச் சங்கம் வாங்கியது. இதரச் செலவுகளுடன் ஆகமொத்தம் RM310,000.00 ரிங்கிட் ஆக முழுத் தொகையையும் செலுத்தி, கட்டடப் பட்டாவைப் பெற்று, தேசியப் பேரவையிடம் ஒப்படைக்கப்பட்டது.

இதற்காக மலாக்கா மாநிலச் செயலவை உறுப்பினர்கள், வட்டாரப் பேரவைகளின் அயராத உழைப்பினாலும், இறைவனின் திருவருளாலும் போதிய நிதியை வசூல் செய்ய முடிந்தது. இது மலாக்கா இந்து சங்கத்திற்கு ஒரு பெரிய சாதனையே ஆகும்.

அதே வேளை, பாலர் பள்ளி வகுப்பு ஒன்று துவக்கப்பட்டு ஆரம்பத்தில் ஒன்பது மாணவர்களுடன் செயல்பட்டது. படிப்படியாக இருபது மாணவர்கள் சேர்ந்தனர். இரண்டு ஆசிரியர்கள் பணிபுரிந்தனர். இந்த வகுப்பு சிறப்பாக நடத்தப்பட்டது.

அடுத்து மின்சுடலை விவகாரம். முன்னாள் அமைச்சர் மாண்புமிகு மருத்துவர் டத்தோஸ்ரீ ச. சுப்ரமணியம் அவர்களின் முயற்சியில், ஜெலுத்தொங்கில் கட்டப்பட்ட மின்சுடலை, 2006-ஆம் ஆண்டு மலாக்கா இந்து சங்கத்திடம் பராமரிப்பு வேலைகளைச் செய்ய ஒப்படைக்கப்பட்டது. அதனைச் சிறப்பாக மலாக்கா இந்து சங்கம் நிர்வகித்தது.

மலாக்கா மாநில ஆலயங்களின் நிர்வாகத்தினருக்கும் பொது மக்களுக்கும் ஒரு சமயக் கருத்தரங்கு நடத்தப்பட்டது. அத்துடன், தலைவரின் சொந்த முயற்சியில், மலாக்கா இந்து சங்க அலுவலகத்திற்குப் பல தளவாடப் பொருள்களை நன்கொடை வழி வாங்கி சொத்து சேர்க்கப்பட்டது. ஒரு புது கணினி, போட்டோஸ்டாட் கருவி, சோபா செட், குளிர்ச்சாதனக் கருவிகள், மேசை நாற்காலிகள், மின்சார விசிறிகள், போன்றவை இவற்றில் அடங்கும்.

இத்தகைய சேவைகளை ஆற்றி, 2012 ஆம் ஆண்டு தலைவர் பொறுப்பிலிருந்து சங்கரத்னா திரு அ,கிருஷ்ணன் பதவி ஓய்வு பெற்றார்.

**நான்காம் கட்ட வரலாறு (2013 முதல்)**

இக்காலக்கட்டத்தில் தொண்டர்மணி திரு பெ.வேலாயுதம் தலைமைப் பொறுப்பை ஏற்றார். அவருக்குத் துணையாக பேராசிரியர் சங்கபூஷன் மருத்துவர் திரு மு.நாச்சியப்பன், இணைப் பேராசிரியர் தொண்டர்மணி மருத்துவர் டத்தோ மு.சுவாமிநாதன், தொண்டர்மணி திரு மா.கிருஷ்ணன், தொண்டர்மணி திரு ஜி.இராமன், திரு ரவிச்சந்திரன் போன்ற மேலும், சிலரும் பொறுப்பை ஏற்றனர்.

இக்காலக்கட்டத்தில், ஆறு வட்டாரப் பேரவைகள் இயங்கி வந்தன. அதன் பின்னர் ஏழாவது வட்டாரப் பேரவையாகப் புக்கிட் காஜாங் - பெம்பான் வட்டாரப் பேரவை 2016-ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது.



வாடகை வீட்டில் செயல்பட்ட இந்து சங்க அலுவலகம் 2018-ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்து சங்கத்திற்குச் சொந்தமான இரண்டு மாடி கடை வீட்டின் மேல் மாடியில் செயல்படத் தொடங்கியது.

சங்கம் பள்ளிகள், ஆலயங்கள், சிறைச்சாலைகள் மற்றும், போதைப் பித்தர் மறுவாழ்வு மையம் போன்றவற்றில் மொத்தம் 33 சமய வகுப்புகளை நடத்திவருகிறது. இதனைத் தவிர்த்து ஆலயங்களில் சமயச் சொற்பொழிவு, மாணவர்களுக்குச் சமயக் கருத்தரங்கு, வசதிகுறைந்த குடும்பங்களுக்குப் பொருளுதவி, நோயாளிகளுக்கு உதவி நிதி, சமய ஆசிரியர்களுக்குப் பயிற்சி, திருமுறை விழா, நால்வர் விழா, ஆலய மாநாடு, மற்றும், இல்லங்களில் கூட்டுப் பிரார்த்தனைகள் போன்ற நிகழ்ச்சிகளை ஏற்று நடத்தி வருகிறது.



இதுவரை மலாக்கா இந்து சங்கத்தில் 1,200 பேர் உறுப்பினர்களாக இருக்கின்றனர். 2017-ஆம் ஆண்டு சங்க வளர்ச்சி நிதிக்காக மாபெரும் விருந்து நிகழ்ச்சி நடத்தப்பட்டது. இந்த நிகழ்வில் ஐநூறுக்கும் மேற்பட்டவர்கள் கலந்து சிறப்பித்தனர். அன்றைய மலேசிய சுகாதார அமைச்சராக இருந்த மதிப்பிற்குரிய டத்தோஸ்ரீ ச.சுப்ரமணியம் அவர்கள் சிறப்பு விருந்தினராக வந்து ஆதரவு நல்கினார்.

மேலும், முதன் முறையாக 2018 ஆம் ஆண்டு 300 கலசாபிஷேகம் நிகழ்வு சிவாச்சாரியார் ஸ்ரீ முத்துக்குமார குருக்களின் தலைமையில் நடத்தப்பட்டு, சங்க வளர்ச்சி நிதி திரட்டப்பட்டது.

வருங்காலங்களில் சங்கம் அனைத்துப் பள்ளிகளிலும் சமய வகுப்பு, மற்றும், அனைத்து ஆலயங்களிலும் சமய வகுப்பு, நடத்தத் திட்டமிடப்பட்டுள்ளது. இறைவன் திருவருளால் இவை நடைபெற பிரார்த்திப்போமாக!






தேசிய நிலையிலான மலேசிய இந்து சங்கம், மலேசியவாழ் இந்துக்களைப் பிரதிநிதித்து, மலேசியச் சர்வ சமய மன்றத்தில் (MCCBCHST) அங்கத்துவம் பெற்றுள்ளது. இந்துச் சமயம் பற்றிய தேவைகளை மலேசிய அரசுக்குத் தெரிவிக்கும் ஊடகமாக இது செயல்படுகிறது.

***(கட்டுரையாளர்: திரு பெ.வேலாயுதம்,***

***தலைவர், மலாக்கா இந்து சங்கம்)***

| 9 | **ஸ்ரீ காமாட்சி பிருந்தாவனம் பக்தர்கள் சங்கம், மலாக்கா** |
|---|---|
| | *No: 15 & 17, Jalan Murni 18, Taman Malim Jaya, 75250 Melaka.* |

குருஜி V.சுப்ரமணியம் வேலு அவர்களின் தலைமையில் 19 ஸ்ரீ காமாட்சி அம்பாளின் பக்தர்கள் 25-02-2013-ஆம் திகதி ஒன்று கூடி, ஒருமித்தக் கருத்தோடு மேற்கண்டச் சங்கத்தை உருவாக்க முடிவெடுத்தனர். இவர்களின் விண்ணப்பத்தை மலேசிய சங்கப் பதிவிலாகா ஏற்று, சங்கம் செயல்பெற அனுமதி அளித்தது. இச்சங்கத்தின் பதிவு எண் PPM-028-04-04042013. இச்சங்கம் நான்கு வகையான அங்கத்தினர் பிரிவைக் கொண்டுள்ளது. சாதாரண உறுப்பினர், ஆயுட்கால உறுப்பினர், கூட்டு உறுப்பினர் மற்றும், இளைஞர் உறுப்பினர் ஆகும். 18 வயதிற்கு மேற்பட்ட மலேசியக் குடியுரிமைப் பெற்றவர்கள் இனம் மற்றும், பால் பேதமின்றி உறுப்பியம் பெறலாம். இவர்கள் கண்டிப்பாக மலேசியாவில் வசிப்பவர்களாக இருத்தல் அவசியம்.

**சித்தாந்தமும் இலக்கும்**



இச்சங்கத்தின் அமைப்பாளர் அம்பாளின் பக்தர்களால் ‘குருஜி’ என்று அன்போடு அழைக்கப்படுகிறார். புரிந்துணர்வு, குழு உணர்வு, உதவும் மனப்பான்மை இவற்றோடு பரம்பொருளின் அருளும் இருப்பின் பரிபூர்ண வாழ்வை நாம் சுவாசிக்கலாம். ‘மனிதநேயத்தின் வழி உலக ஒற்றுமை’ என்பதே இச்சங்கத்தின் சீரியச் சித்தாந்தமாகும்.

‘மாதா, பிதா, குரு, தெய்வம்’ என்பது சம்ஸ்கிருத மொழியில் உள்ள சக்தி வாக்காகும். இவ்வரிசையில், ‘தெய்வம்’ இறுதியில் வந்தாலும், அதில் முக்கியப் பொருள் பொதிந்துள்ளது. ஒரு தனி மனிதனின் பரிபூர்ண வாழ்க்கையின் அடித்தளம் முறையான, சிறந்த வழிகாட்டலேயாகும். அதற்கு ஒருவர் முன்னேற வேண்டும் என்ற சிந்தனை மிக முக்கியம். அவ்வகையில் குருஜி ஆணித்தரமாகக் கூறும் கருத்து, நெறியான வழிகாட்டலும் அன்பான வளர்ப்பு முறையும் வீட்டிலிருந்து தொடங்கப்பட வேண்டும். குழந்தைகளுக்கு அம்மாவே முதல் ஆசான். அன்னையின் அரவணைப்பில் ஒரு குழந்தைக்கு முறையான உணவு, அன்பு மற்றும், இதர அத்தியாவசியத் தேவைகள் குறைவின்றி கிடைக்கப்படுகின்றது. அன்னையே அக்குழந்தையின் உணர்ச்சியைப் புரிந்து கொள்பவள். குடும்பத்தின் தூணாகக் கருதப்படும் தந்தையோ, வெளிவாழ்க்கையில் குழந்தை பண்பாக வளர வழிகாட்டுகிறான். பெற்றோர்கள் குழந்தைக்கு நன்மை தீமைகளை உணர்த்தி அவர்கள் வாழ்வில் தடம்புரளாமல் இருக்கத் துணை புரிகின்றனர். பள்ளியில் ஆசிரியர்கள் அக்குழந்தையின் வளர்ச்சியைத் தொடர்ந்து வளப்படுத்துகின்றனர். உன்னத ஆன்மாவை உருவாக்குவதே ஆசான்களின் தலையாய இலக்கு. இவர்கள் குழந்தையின் பலவீனத்தை அறிந்து, களைந்து, அவர்களை வெற்றியின் உச்சிக்கு இட்டுச் செல்கின்றனர். இல்லத்தில் தொடங்கப்பட்ட பண்புநெறி, பள்ளியில் மேலும் சீர்மையாக்கப்படும்போது அக்குழந்தை பரம்பொருளை நாடி நல்வழியில் செல்வதைக் காண முடியும். ஒரு குழந்தையின் உயர்நிலைப் பண்புநெறி இறையருள் இன்றி ஒருபோதும் துலங்காது. மாதா, பிதா, குரு ஆகியோரின் வழிகாட்டலோடு இறைவனின் கருணையும் அருளும் ஒன்றிணையும்போது, அக்குழந்தை லட்சியத்தோடு கடின உழைப்பை விதைக்கும்போது வெற்றியின் விளிம்பிற்கே செல்லும். மானிடர்களிடையே உதவும் மனப்பான்மை நலிந்து வருகிறது. ஆனால், தூய எண்ணத்தோடு ஒருவர் இப்பிருந்தாவனம் ஸ்ரீ காமாட்சி அம்பாளிடம் வேண்டும்போது, அம்பாள் இனம், மதம், வாழ்க்கை தரம் கருதாமல் அவர்களின் எண்ணத்தை நிறைவேற்றுவாள். இது சத்தியம். இப்பிருந்தாவனம் தொடங்கிய நாளிலிருந்து இன்று வரை எங்களின் சித்தாந்தம், ‘மனிதநேயத்தின் வழி உலக ஒற்றுமை’ என்பதாகும். இது ஒன்றே எங்களின் பயணம்.

**ஆண்டுதோறும் நடைபெறும் நடவடிக்கைகளும் பக்தர்களின் பங்களிப்பும்.**

வாரந்தோறும் சமய நிகழ்வுகள் நேர்த்தியாக இப்பிருந்தாவனத்தில் நடைபெறுவது இறைவியின் அருளேயாகும். 'துர்கா பூஜை' செவ்வாய்க்கிழமை தோறும் 5-10 பெண்கள் கலந்துகொள்ளும் நிகழ்வாகும். குடும்பத்தின் மேன்மையையும் அமைதியையும் வலுப்படுத்துவதே இதன் நோக்கமாகும். ஒவ்வொரு குடும்பத்தின் தலைவி இப்பூஜைக்குத் தலைமை ஏற்பார். லலிதா திரிசாஸ்தி ஸ்தோத்ரம் பாடப்பெற்று, 'குங்குமம் அர்ச்சனை' புதன்கிழமை தோறும் ஸ்ரீ காமாட்சி அம்பாளுக்கு நடைபெறும். வியாதியுற்றோர் அதிலிருந்து மீளவும், தனிநபர் பிரச்சனை கலையவும் இவ்வர்ச்சனை இங்கு விஷேசமாக நடைபெறுகிறது. ஒவ்வொரு வியாழனன்றும் 15-20 பக்தர்கள் பங்குகொள்ளும் 'ராகு கேது பூஜை' சிறப்புற நடைபெறும். வியாபாரச் சிக்கல்கள், பணப்பிரச்சனை, மற்றும், மனித உறவுகள் விரிசல்கள் தொடர்பாகப் பக்தக்கோடிகளின் விண்ணப்பத்தைச் சீர்செய்யும் நோக்கத்தைக் கொண்டது இப்பூஜை. வெள்ளிக்கிழமை புனிதநாளாக எல்லா சமயங்களிலும் போற்றப்படுகிறது. இந்நன்னாளில் 'அம்பாள் பூஜை' மங்களகரமாக நடைபெறும். அம்பாளின் திருவருள்' பக்தர்களுக்குக் கிடைப்பதோடு மட்டுமல்லாமல், அம்பாளிடம் சாத்தப்பட்ட பூவும் பக்தர்களுக்குக் கொடுக்கப்படும். இப்பிருந்தாவனத்தில் நடைபெறும் ஒவ்வொரு பூஜையும் குருஜியின் தலைமையிலும் கண்காணிப்பிலும் நடைபெறும். குருஜியின் கூற்றின்படி, இங்கு நடைபெறும் ஒவ்வொரு பூஜையும் பக்தர்களின் நலனுக்கே, மேன்மைக்கே அர்ப்பணமாகும். பூஜையின்போது குருஜியின் ஈடுபாடு பக்தர்களுக்கு முறையான பூஜையின் நடைமுறையை தெளிவுபடுத்தவே. இங்கு நடைபெறும் சமய நிகழ்வுகளில் சீன வம்சாவளி பக்தர்களின் எண்ணிக்கை 90 சதவீதமாகும். இம்மையம் தொடங்கப்பட்டதிலிருந்து இன்றுவரை இத்தனித்துவம் நிலைத்திருப்பது இங்கு மட்டுமே காணக்கூடிய காட்சியாகும். சாட்சியாகும்.

**சிறப்புச் சமயக் கொண்டாட்டங்கள்**

ஒவ்வோர் ஆண்டும் இரண்டு முக்கியச் சமய நிகழ்வுகள் இப்பிருந்தாவனத்தில் மிக விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. ஒன்று, ஏப்ரல்-மே மாதக் காலத்தில் கொண்டாடப்படும் சித்ரா பௌர்ணமி விழாவாகும். பத்து நாட்கள் கொண்டாடப்படும் இவ்விழாவின் இறுதி நாளில் பக்தர்கள் பால்குடம் மற்றும், கலசம் ஏந்தி தங்களின் காணிக்கையை அம்பாளுக்குச் செலுத்துவார்கள். இரண்டாவது, நவராத்திரி விழாவாகும். இந்நிகழ்வு செப்டம்பர் - அக்டோபர் மாதக் காலத்தில் நடைபெறும். இப்பிருந்தாவனத்தின்



செயலவையினர், பக்தக்கோடிகள் குடும்பமாகவோ, குழுவாகவோ அல்லது சங்கத்தைச் சார்ந்தோ தின உபயத்தை ஏற்றுக்கொண்டு நடத்த ஊக்கமளிக்கப்படுகின்றனர். அவ்வுபயத்தின்போது, பக்தர்கள் பூஜைக்கான பொருட்களையும் பிரசாதங்களையும் அளித்து அம்பாளின் கருணையையும் நல்லாசியையும் பெறுவர்.





இவ்விரண்டு சிறப்புச் சமய விழாக்கள் இம்மையத்தில் தங்குதடையின்றி நடைபெற பக்தர்களின் பங்களிப்பும் ஒத்துழைப்பும் நம்மை மெய்சிலிர்க்க வைக்கும். இவ்விழாக்களின்போது ஆயிரத்திற்கும் மேற்பட்ட பக்தர்களின் வருகையை நோக்குங்கால் அம்பாளின் சிறப்பை நாம் உணரலாம்.

### தொடர்வண்டியைப் போன்றச் சிறப்புத் திட்டங்கள்

மலாக்கா ஸ்ரீ காமாட்சி பிருந்தாவனம் மாதந்தோறும் தனித்து வாழும் தாய்மார்களின் பள்ளிச் செல்லும் குழந்தைகளுக்குக் கல்விச் செலவு வழங்குகின்றது. பி40 மற்றும், எம்40 பிரிவு ஏழைக் குடும்ப மாணவர்களுக்குப் பள்ளிக் கட்டணத்தைச் செலுத்துகின்றது. இதன்வழி அவர்களின் குடும்பச்சுமை குறைகின்றது. அதோடு, மட்டுமின்றி, மாதந்தோறும் இம்மையம் அந்திமக் கால வயதானோர் இல்லம், அனாதைக் குழந்தைகள் பராமரிப்பு இல்லம் மற்றும், சிறப்புப் பாதுகாப்பு இல்லங்களுக்கு நிதி உதவி வழங்கி தம் பங்கினை ஆற்றி



வருகின்றது. இவ்வில்லங்களில் இருப்போர் இப்பிருந்தாவனத்தில் கொண்டாடப்படும் இரண்டு முக்கியக் கொண்டாட்டங்களில் கலந்து கொண்டு, அம்பாளின் ஆசி பெற்று, வழங்கப்படும் பிரசாதத்தைப் பெற்றுச் செல்வர்.

**அனைத்துலகத் தொடர்பு உறவு**



பிருந்தாவனத்தின் குருஜி 2007-ஆம் ஆண்டு முதல் வெளிநாடுகளுக்குச் சென்று தம் பக்தர்களைச் சந்தித்து அருளாசி வழங்கி வந்தார். குருஜியின் உடல்நிலைக் காரணமாக 2017 முதல் அவர் வெளிநாட்டுப் பயணங்களை வெகுவாகக் குறைத்துக் கொண்டார். குருஜிக்கு வெளிநாடுகளில் பதிவுப்பெற்ற சங்கங்கள் கிடையாது. ஆனால், தம் பக்தர்களைச் சந்திக்க வெளிநாடுகளில் சந்திப்பு முனையம் பல நகரங்களில் உள்ளன. குருஜிக்கும் வெளிநாட்டுப் பக்தர்களுக்கும் நேர்முக இடைவெளி நீண்டு இருப்பினும், தொலைத்தொடர்பு சாதனங்களினால் அவர்களின் உறவு வெகு அருகில் இருக்கின்றது. இரு சாராரும் நேரிடையாகப் பேசிக்கொள்வதோடு இயங்கலை வழி பிருந்தாவனத்தின் நிகழ்வுகளில் கலந்து பயனும் பெறுகின்றனர்.

குருஜி தம் சீடர்களை வெளிநாடுகளில் சந்திக்கக் கீழ்க்கண்டச் சந்திப்பு முனையங்கள் இருக்கின்றன. அவை: நெதர்லாந்து (ஆம்ஸ்டர்டாம்), பிரான்சு (பாரிஸ்), ஸ்பெயின், கனடா (டொரோண்டோ, மாண்ட்ரியல், நியாகாரா நீர்வீழ்ச்சி), அமெரிக்கா (வாஷிங்டன் டிசி, லாஸ் ஏஞ்சல்ஸ், சந்தியாகோ), ஜெர்மனி (டஸ்சல்வ்), இங்கிலாந்து (லண்டன்), அயர்லாந்து (டப்லின்), ஆஸ்திரேலியா (மெல்பர்ன், பெர்த், விக்டோரியா), சிங்கப்பூர், இந்தோனேசியா (ஜாகர்த்தா), தாய்லாந்து, தைவான், ஜப்பான் மற்றும், தென் அமெரிக்கா ஆகும். சந்திப்பு முனையங்களில் குருஜியிடம் வழங்கப்படும் நன்கொடைகள் தேர்ந்தெடுக்கப்பட்ட பக்தரிடம் வழங்கப்பட்டு, சம்பந்தப்பட்ட நாடுகளில் இயற்கைப் பேரிடர்கள் நிகழுமானால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வழங்கப்படும். அதோடு, அந்நிதி வாழ்வாதாரச் சிக்கலில் தத்தளிக்கும் ஏழை மக்களுக்கும் உரிய நேரத்தில் கொடுக்கப்படும்.

**எதிர்காலத் திட்டங்கள்**

மலாக்கா பிருந்தாவனத்தில் இதுகாறும் மேற்கொள்ளப்பட்டு வரும் சமூகச் சேவைகள் தொடர்ந்து நிலைநாட்டப்படும். ஏழைமக்களுக்கு வழங்கப்படும் நிதியுதவியோடு அவர்களுக்குத் தேவையான உணவு, மற்றும், அத்தியாவசியப் பொருட்கள் தேவைப்படும் சமயத்தில் தொடர்ந்து கொடுக்க ஆவன செய்தலாகும்.

**பொதுமக்களுக்கு ஒரு நற்செய்தி**

நம் ஒவ்வொருவரின் எதிர்காலம் அவரவர் கைகளில். நம் பிள்ளைகளைப்போல் மனிதநேயமும் சரியக்கூடியது. இல்லாமல் போகும். பெற்றோர்கள் பிள்ளைகளை நன்கு வளர்த்து, நற்பண்புகளை விதைக்க வேண்டும். அவர்கள் பொருளாதார மேன்மைக்கு மட்டும் உழைக்கும் ஜீவன்களாக உருவாக்கக்கூடாது. அவர்கள் பொருளாதாரத் தேடுதலோடு, அன்பு, புரிந்துணர்வு, இலக்கு கூடிய முன்னேற்றம் மற்றும், கடின உழைப்புப் பண்புகளை அவர்கள் வாழ்வின் ஆதாரமாகக் கொள்ள வேண்டும்.

குழந்தைகள் பாதை தவறி வாழ்வை இழக்கும்போது பெற்றோர்கள் மற்றவர்கள் மீது வீண்பழி சுமத்தக்கூடாது. குழந்தைகள் வளரும்போது அதிகமான நேரம் பெற்றோர்களோடுதான் கழிக்கின்றனர். அவர்களின் கண்காணிப்பில்தான் வளர்கின்றனர். 'உலகத்தில் மாற்றம் ஏற்பட குழந்தைகளை நன்முறையில் வளர்க்க வேண்டும்' என்பது அமரர் நெல்சன் மண்டேலாவின் அமுத வாக்கு. சத்திய வாக்கு. ஆகவே, 'அன்பின் வழி குழந்தை வளர்ப்பே பிரதானம்' என்பது குருஜியின் அசைக்க இயலாத நம்பிக்கை. பெற்றோர்களே குழந்தைகளுக்கு முதல் குரு. அவர்களே குழந்தைகளுக்கு உலகின் சிறந்த குரு.

**குருஜி சுப்பிரமணியம் வேலுவின் தொடர்பு எண்: 0133759371.**
**மின்னஞ்சல் முகவரி: subra1182003@yahoo.com**

***(கட்டுரை: மலாக்கா ஸ்ரீ காமாட்சி பிருந்தாவனம் பக்தர்கள் சங்கம்)***

| 10 | **மலேசிய மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி ஆன்மிக அறப்பணி தொண்டர் இயக்கம், மலாக்கா மன்றம்** |
| --- | --- |
| | *No.169, Pengkalan Rama Pantai, 75400 Melaka.* |

“ஓம்சக்தியே! பராசக்தியே! ஓம்சக்தியே! ஆதிபராசக்தியே! ஓம்சக்தியே! மருவூர் அரசியே! ஓம்சக்தியே! ஓம் விநாயகா! ஓம்சக்தியே! ஓம்காமாட்சியே! ஓம்சக்தியே! ஓம் பங்காரு காமாட்சியே!”

தமிழ்நாடு, மேல்மருவத்தூரில் வீற்றிருக்கும் சுயம்பு அருள்மிகு ஆதிபராசக்தி சித்தர் பீடத் திருக்கோயிலின் கீழ் இயங்கும் சமயம், மருத்துவம், கல்வி, தொழிற்கல்விக் கழகம் மற்றும், தொண்டு அறவாரியம் வழி பாமர மக்களுக்குச் சேவையாற்றியதன் மூலம் 2019 இல் பாரத அதிபரிடமிருந்து பத்மஸ்ரீ விருதினைப் பெற்று நமக்கெல்லாம் பெருமை சேர்த்தவர் ஆன்மிககுரு அருள்திரு பங்காரு அடிகளார். பூர்ண அவதார புருசரான இவரை “அம்மா” என்று அன்பொழுக அழைக்கும் பக்தர்கள், நம் நாட்டிலும் பல்லாயிரக்கணக்கில் உள்ளனர். அதில் ஒன்றே, தமிழ் நெஞ்சர் ஓம்ஸ் பா.தியாகராஜன் தலைமையில் நற்சேவை புரிந்துவரும் மலேசிய ஆதிபராசக்தி அறப்பணி இயக்கம். இவ்வியக்கத்தின் அடிச்சுவட்டைப் பின்பற்றி, மலாக்காவில் ‘அம்மாவின்’ பக்தர்கள் 1983-இல் மேல்மருவத்தூர் ஆன்மிக அறப்பணி தொண்டர் இயக்கத்தை நிறுவினர். இவ்வியக்கம் மலர்வதற்குக் காரணகர்த்தாக்களாக விளங்கியவர்கள் திரு.செல்வநாதன் மாங்குடி, JKR பொறியியலாளர் திரு.ஆர்.கணேசன், திரு.செல்வகுமார் சாத்தையா, திரு.கணேசன் முத்தையா மற்றும், டத்தோ S.அசோஜன் போன்றோர்.



*அருள்திரு பங்காரு அடிகளார்*



"ஆதிபராசக்தி வார வழிபாட்டு மன்றங்கள் ஆன்மிகம், பக்தியை வளர்ப்பதோடு தான தர்மங்களையும் செய்து கொண்டே வரவேண்டும்". இது அன்னையின் அருள்வாக்கு. இத்தெய்வீக வாக்கினை இரு கண்களாகக் கருதி வீரநடைப்போட்டு வலம் வருகிறது மலாக்காவில் இவ்வியக்கம். ஆரம்பநிலையில், இவ்வியக்கம் தமது மக்கட்சேவையைத் தோட்டப்புறங்களில் தொடங்கிற்று. ஜாசின் லாலாங், பெர்த்தாம் போன்ற தோட்டங்களில் ஆரம்பநிலைப்பள்ளி மாணவர்களுக்கு இலவச வகுப்புகள், திருவிழாவின்போது பால்குடம் எடுத்தல் போன்ற நிகழ்வுகளை நடத்தியுள்ளனர். அதோடு, மட்டுமின்றி, 108 விளக்குப் பூசை, வீட்டு வழிபாடு, கண்சிஷ்டி கழித்தல், ஓம்சக்தி மந்திரம் பாராயணம், தியானம் போன்ற இறை நிகழ்ச்சிகள் அன்று தொடங்கி இன்று வரை தொடர்ந்து அவர்களின் களப்பணிகளாக அமைந்துள்ளன. புக்கிட் லிந்தாங் மற்றும், ரும்பியா தமிழ்ப்பள்ளிகளில் இவ்வமைப்பின் தொண்டர்கள் யோகா கலையை மாணவர்களுக்குப் பயிற்றுவித்து, சுவாமி விவேகானந்தர் எண்ணம்போல திடகாத்திர ஆன்மாக்களை உருவாக்கி வருகின்றனர்.

மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி ஆன்மிக செவ்வாடைத் தொண்டர்கள் அனைவருக்கும் அம்மா அவர்கள் முதலில் கற்றுத் தருவது அன்பைத்தான். அதாவது, பிறரிடத்தில் அன்பாகவும், பிறரை மதித்து வாழும் பண்பையும் வளர்த்துக் கொள்ளவே அம்மா தொண்டர்களை எந்த விழாவாக இருந்தாலும், தான தர்மங்களைச் செய்; அன்னதானம், ஆடைதானம் போன்ற அனேகத் தானங்களைச் செய் என அருளாணை இட்டுள்ளாள். அந்த அன்புக் கட்டளையைச் சிரமேற்கொண்டு செவ்வாடைத் தொண்டர்கள் இம்மியளவும் பிசகாமல் இந்நாள் வரை செய்து வருகின்றனர். இந்த அறப்பணி கோவிட் 19-இன் விளைவாக நடமாட்ட கட்டுபாடு உத்தரவினால் பாதிப்புற்ற குருபோங் பி40 மக்கள் மனைத் திட்டத்தில் வாழும் 42 குடும்பங்களுக்கு மளிகைச் சாமான்களைக் கொடுத்து உதவினர். அதோடு, மட்டுமின்றி, புக்கிட் பாருவில் செயல்படும் ஆதரவற்றக் குழந்தைகள், பெரியோர்கள் இல்லங்களுக்கும் இவர்களின் உதவிக்கரம் நீண்டது.



"அம்மாவின்" அமைப்பில் பெண்களுக்கு முதல் மரியாதை வழங்கப்பட்டு வருகிறது. அவ்வகையில் மலாக்கா மையத்தின் தலைவி திருமதி சிவமணி அம்மையார் ஆவர். இவரோடு, திரு.நாகசுரேஷ், திரு.செல்வநாதன் மாங்குடி மற்றும், இதரத் தொண்டர்கள் தோள் கொடுத்து இவ்வியக்கத்தை வழி நடத்துகின்றனர். மலேசிய மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி ஆன்மிக, அறப்பணி மன்றத்தில் அங்கம் பெற்றுள்ள இவ்வியக்கம், மக்கள் மனதில் தன்னலமற்றச் சேவையினால் ஆழமாகப் பதிவுப் பெற்றுச் செயல்படுவதை 'அம்மாவின்' அருள் என்றே சொல்ல வேண்டும்.

**"ஒரே தாய் ! ஒரே குலம் ! ஒரே குணம் ! ஒரே செயல்"**

***(கட்டுரை: மலேசிய மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி ஆன்மீக அறப்பணி தொண்டர் இயக்கம், மலாக்கா மன்றம்)***

| 11 | மலாக்கா நால்வர் மன்றம், மலாக்கா கிளை |
|---|---|
| | *JA 5154, Jalan Medang, Taman Maju 77000, Jasin, Melaka.* |

மலேசியத் தமிழர்கள், சைவத்தின் மேன்மையினையும் திருமுறைகளின் மாண்பினையும் உய்த்துணர்ந்து நெறிமிக்க வாழ்க்கை வாழ வேண்டும் என்ற உன்னத நோக்கத்தில் மலேசிய நால்வர் மன்றம் 2013-ஆம் ஆண்டு அதிகாரப்பூர்வமாகத் தோற்றுவிக்கப்பட்டது. மலாக்காவிலும் அவ்வமையமே அதன் கிளை ஒன்று உருவாக்கப்பட்டது.







வீட்டுக்கொரு சமய ஆசிரியரை உருவாக்கும் வண்ணம், தோற்றுவிக்கப்பட்ட இம்மன்றம் சமய ஆசிரியர்களுக்கான ஐந்து படிநிலை பயிற்சிளை வழங்குகின்றது. அவை முறையே திருமுறைப் பயிற்சி பயிலரங்கம், இளையோருக்கான வாழ்வியல் திறன் முகாம், இளையோர் எழுச்சி முகாம், அறுபத்து மூன்று நாயன்மார்களின் குருபூசைகள், இல்ல வழிபாடுகள், மற்றும், தமிழ் மறையாம் திருமுறை மாநாடு, ஆன்மீகச் சொற்பொழிவுகள், மகளிர்க்கான வாழ்வியல் பட்டறைகள், சைவச் சமய வகுப்புகள் போன்ற நிகழ்ச்சிகளை மலேசிய நால்வர் மன்றம்







நாடளவில் நடத்தி வருகின்றது. `வாழ்தலே வழிபாடு' என்ற உயரியச் சிந்தனையை அடிப்படையாகக் கொண்டு மேற்கண்ட நிகழ்ச்சிகள் யாவும் செவ்வனே நடைபெற்று வருகின்றன.




சைவமும் தமிழும் நமதிரு விழிகள் என்பதை மலேசியத் தமிழர்கள் மறந்துவிடக்கூடாது என்பதற்காக அனைத்து நிகழ்ச்சிகளும் அன்னைத் தமிழிலிலேயே நடைபெறுகின்றன. சைவச் சமயத்தின் கருவூலமாகிய சைவச் சித்தாந்தம், திருமுறைகளின் இறைக் கொள்கையும் சமுதாயச் சிந்தனையும் தமிழர்களைச் சென்றடைய வேண்டும் எனும் வேட்கையில் மலேசிய நால்வர் மன்றம் பல நூல்களையும் இதுவரை வெளியிட்டுள்ளது.

ஜாசின் மையம் மேலே குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து நிகழ்ச்சிகளையும் மலாக்கா மன்ற உறுப்பினர்களுக்காகச் சிறப்புடன் செயலாக்கம் செய்து வருகின்றது. சமயக் கல்வி பெற்ற உறுபினர்கள், பல பள்ளிகளில் சமய வகுப்பு நடத்தி வருகின்றனர். வருடாந்திர நிகழ்வுகளான நால்வர் குரு பூசை மற்றும், நால்வர் விழா மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

*(கட்டுரை : மலாக்கா நால்வர் மன்றம்)*

| 12 | மலாக்கா ஶ்ரீ சத்திய சாயி பாபா நிலையம் |
| --- | --- |
| | *No: 659-D, Jalan Delima 12, Taman Bukit Melaka, Bukit Beruang, Melaka.* |

**"அனைவரையும் நேசிப்போம், அனைவருக்கும் தொண்டு செய்வோம்"**
**-பாபாவின் சத்தியவாக்கு**

**முன்னுரை: ஓம் சாய் ராம்**

பகவான் ஶ்ரீ சத்திய சாயி பாபா அவர்கள் ஓர் இந்திய ஆன்மிக குருவாகவும் உலக மக்களின் போதகராகவும் போற்றப்பட்டவர் ஆவார். இவரின் வாழ்க்கையும் பொன்மொழிகளும் உலக அளவில் பல மில்லியன் மக்களைப் பரம்பொருளின்பால் ஈர்த்ததோடு மட்டுமின்றி, கட்டொழுங்குமிக்க பொருள் பொதிந்த வாழ்க்கை முறையை வாழ வழி வகுத்தது.

பகவான் ஶ்ரீ சத்திய சாயி பாபா, பாரததேசத்தின் ஆந்திர மாநிலம் அனந்தபூர் மாவட்டத்திலுள்ள சிற்றூரான புட்டபர்த்தியில் 23-11-1926 இல் அவதரித்தார். பகவானின் இயற்பெயர் சத்திய நாராயண ராஜு. 1940-இல் தம் 14-ஆவது அகவையில் பகவான் தாம் அவதரித்த நோக்கத்தை அறிவித்தார். அன்று முதல், உலக மானிடர்களுக்கு உண்மை, ஒழுக்கமிகு நன்நடத்தை, அமைதி, அன்பு, மற்றும், அகிம்சை பண்புகளை உபதேசித்தார். அதன்படி, வாழ்ந்தும் காட்டினார். அதனால்தான் "என் வாழ்க்கை நான் தரும் நற்செய்தி" என்ற சத்திய வாக்கினை பகவான் அடிக்கடி கூறுவார். இவரது அடியார்களினால் "இறை அவதாரம்" எனப் போற்றப்படும் பகவான் 24-4-2011-இல் சமாதி நிலை அடைந்தார்.

பார் போற்றும் பகவான், இந்தியா மட்டுமல்லாமல் வெளிநாடுகளிலும் தம் பெயரில் இயங்கிவரும் தொண்டு நிறுவனங்களின் மூலம் சேவைகள் புரிந்து வந்தார். "பிரசாந்தி நிலையம்" பகவானால் புட்டபர்த்தியில் நிறுவப்பட்ட ஆசிரமமாகும். "அமைதியின் உச்சம் சூழ்ந்த இடம்" எனும் பொருள் கொண்ட இந்நிலையமே பகவானின் தலைமையகம். இனி, இந்நிலையத்தின் முக்கியத் திட்டங்களைப் பார்ப்போம்.

**1. கல்வி**

பகவான் ஶ்ரீ சத்திய சாயி பாபா, எப்பொழுதுமே இதர நடைமுறைப் பாடங்களோடு மனித நற்பண்புகளைப் போற்றும் முழுமையான கல்வி முறைக்கு முக்கியத்துவம் கொடுப்பார். மாணாக்கர்கள் நல்லொழுக்கம் மற்றும், ஆன்மிகம் தொடர்பான பாடங்களைக் கற்பதோடு வாரத்தில் சிலமணி நேரங்கள் சமுதாயத் தொண்டும் செய்யக் கோரப்படுகின்றனர். பகவான் கூற்றுப்படி, கல்வியின் அறுவடை சிறந்தப் பண்புகளாகத்தான் இருத்தல் வேண்டும்.

பகவான் ஶ்ரீ சத்திய சாயி பாபா சிறந்தக் கல்வி முறையை ஆரம்பப்பள்ளி, இடைநிலைப்பள்ளி மற்றும், பல்கலைக்கழகம் அளவில் உருவாக்கினார். மூன்று பல்கலைக்கழக வளாகங்களில் இளங்கலை, முதுகலை மற்றும், முனைவர் பட்டப்படிப்பு பயிற்றுவிக்கப்படுகிறது. இங்குக் கல்விக்கட்டணம் கிடையாது. அனைத்தும் இலவசமே! இனம், மதம் மற்றும், குடும்பப் பொருளாதார நிலையைக் கடந்து அனைவரும் இங்குக் கல்விக் கற்க இயலும். உலகம் முழுமையும், மலேசியா உற்பட, இயங்கும் பகவானின் நிலையங்களில் நன்னெறிக் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது.

**2. சுகாதாரப் பராமரிப்பு**

பகவானின் பெரும் முயற்சியால் 1991 ஆம் ஆண்டு 300 படுக்கைகள் கொண்ட அதிநவீன இலவச மருத்துவமனை, பல்கலைக்கழகம் மற்றும், ஆசிரம் அருகாமையில் நிறுவப்பட்டது. இம்மருத்துவமனையில் திறந்த அறுவை சிகிச்சை மற்றும், சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை போன்ற அதிநுணுக்கமான அறுவை சிகிச்சைகள் வழக்கமாக மேற்கொள்ளப்படுகின்றன. தேவையைக் கருதி, 2001-ஆம் ஆண்டில் இதே போன்ற தனித்தன்மை வாய்ந்த பிரிதொரு மருத்துவமனை நிர்மாணிக்கப்பட்டது. "குணமாக்கும் கோயில்கள்" (Temples Of Healing) என்ற அடைமொழியோடு இம்மருத்துவமனைகள் புகழப்படுகின்றன. ஏனெனில், இங்கு வணிகவாதம் கிடையாது. சுகாதாரப் பராமரிப்போ, ஆன்மிகச் சூழலில் வழங்கப்படுகிறது. இங்கு அந்திமகால வயோதிகர்கள், உடல்பேறு குறைந்தோர் மற்றும், நோயாளிகளுக்கு அன்பான பராமரிப்பு நல்கப்படுகின்றது.

அதோடு, மட்டுமின்றி, மருத்துவமனையிலிருக்கும் நோயாளிகளைக் கண்டு, அவர்களுக்கு நம்பிக்கையும் ஆறுதலும் கொடுக்க அனைவரையும் இங்கு ஊக்குவிக்கப்படுகிறார்கள். இதுதானே உண்மையான இறைச் சேவைகளில் ஒன்று.

### 3. தேவைப்படுவோருக்குச் சேவை

அன்பு அடிப்படையிலான சமுதாயத் தொண்டினை பகவான் எப்பொழுதும் வலியுறுத்திக் கூறுவார். "வாயால் உச்சரிக்கப்படும் பிரார்த்தனையை விட மற்றவர்களுக்கு உதவும் கையே மேன்மையானது" என்பது பாபாவின் அமுதவாக்கு. உலகில் இயங்கும் பாபாவின் எல்லா நிலையங்களிலும் இது அடிநாதமாக விளங்குகிறது.

### 4. தேச நிர்மாணிப்பு

தேச நிர்மாணிப்பின் ஆரம்பமே, அடித்தலமே தனிமனிதன் தான் என்பதில் பாபாவுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. தம் சீடர்களுக்கு அவர், கூறும் அன்புரை, இதோ!

உள்ளத்தில் நீதி பரிணமித்தால் அழகிய குணம் மலரும்.
அழகிய குணம் மலர்ந்தால் இல்லத்தில் மங்களம் உண்டாகும்.
இல்லத்தில் மங்களம் நிறைந்தால் தேசத்தில் கட்டொழுங்கு அரும்பும்.
கட்டொழுங்கான தேசம் பிறந்தால் அமைதி உலகைத் தழுவும்.

### அனைத்துலக சத்திய சாயி பாபா அறநிறுவனம்

180 நாடுகளில் 1,200 க்கும் மேற்பட்ட சத்திய சாயி பாபா நிலையங்கள் திறம்பட இயங்கி வருகின்றன. ஸ்ரீ சத்திய சாயி சேவா அறநிறுவனம் இந்தியாவில் கையெடுக்கப்படும் நடவடிக்கைகளுக்குப் பொறுப்பு ஏற்கும். ஸ்ரீ சத்திய சாயி நடுவண் திரஸ்ட்டு பகவானால் 1972-ஆம் ஆண்டு பொதுமக்கள் தொண்டு அறநிறுவனமாகத் தொடங்கப்பட்டது. இதன் நோக்கம் என்னவெனில், ஏழை எளியோருக்கு உதவிக்கரம் நீட்டுதல், குறிப்பாகக் கல்வி, சுகாதாரத் துறை மற்றும், இதரப் பொது பயன்பாடுகளாகும்.

இந்தியாவிற்கு வெளியே செயல்படும் ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையங்கள், அனைத்துலக கட்டமைப்பின் கீழ் உறுப்பியமாக்கப்பட்டுள்ளன. அது ஒன்பது நிலப்பரப்பு சோன் பகுதிகளாக (Zone) பிரிக்கப்பட்டு, அதிலிருந்து 94 ரீஜன் உபப்பிரிவுகளாக (Region) வரையறுக்கப்பட்டுள்ளது. மலேசியா, 4-ஆவது சோனில், 41-ஆவது ரீஜன் உட்பிரிவில் அமைந்துள்ளது. தூரத் தென்கிழக்குப் பிரிவு என அழைக்கப்படும் இப்பிரிவில், மலேசியா, சிங்கப்பூர், இந்தோனிசியா, பிலிப்பின்ஸ் மற்றும், புருணை இணைக்கப்பட்டுள்ளது.

### மலேசிய ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையங்கள்

மலேசியாவில் 80க்கும் மேற்பட்ட ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையங்களும் பஜனை பிரிவும் செயல்பட்டு வருகின்றன. இவை அனைத்தும் மலேசிய சத்திய சாயி பாபா நடுவண் மன்றத்தில் (The Sathya Sai Baba Central Council Of Malaysia) அங்கம் பெற்றுள்ளது. இம்மன்றம் அரசு சார்பற்ற, குறுங்குழுவாத அமைப்பாகும். வறியோர், நோயுற்றோர் மற்றும், தேவையுள்ளோர் பிரிவினருக்குத் தன்னலமற்ற தொண்டினைச் செய்வதே இதன் இலட்சியம். அதோடு, தெய்வீகத் தன்மை மற்றும், தேசிய ஒற்றுமை மணம் பரப்புவதும் இவற்றின் குறிக்கோளாகும்.

ஸ்ரீசத்திய சாயி பாபா நிலையங்கள் அமைப்பதற்கான அடிப்படைக் கோட்பாடு பகவானின் எண்ணத்திலிருந்து புரிந்துகொள்ளலாம். நிலையங்கள் பக்தர்களுக்கு இணக்கமான இடமாகத் திகழ்ந்து, அவர்களின் ஆன்மிக வளர்ச்சிக்குத் துணை புரிவதன்வழி நல்லொழுக்கத்தை மேன்மைப்படுத்துவதோடு, அகங்காரத்தை வேரறுக்க வேண்டும்."

### மலாக்கா ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையம்

1970-ஆம் ஆண்டுகள் மத்தியில் பகவானின் ஆத்ம தொண்டர் குடும்பங்களே மலாக்கா நிலையம் அமையப் பிள்ளையார் சுழி போட்டவர்கள். மலாக்கா மின்சார வாரியத்தின் மேல்நிலை தொழிற்நுட்பரான



திரு.கண்ணன் 1975-ஆம் ஆண்டு கோலாலம்பூர், பிரிக்பீல்ட்ஸ் விவேகாநந்தா ஆசிரமத்தில் நடைபெற்ற முதலாவது மலேசிய அளவிலான ஸ்ரீ சத்திய சாயி பாபா கருத்தரங்கில் கலந்து கொண்டார். பாபாவின் போதனையால் ஈர்க்கப்பட்ட அவர், அக்கருத்தரங்கில் வாங்கிய பாபாவைப் பற்றிய புத்தகங்கள் வழி, மலாக்கா கல்வி இலாகா மேனாள் தமிழ்ப்பள்ளி அமைப்பாளர் திரு ஜெகதீசன் அவர்களுக்குப் பாபாவை அறிமுகம் செய்தார். அவரோ, பாபாவை மலாக்கா கால்நடை இலாகா மேனாள் அதிகாரி டாக்டர் சேஷாகிரி மற்றும், இடைநிலைப்பள்ளி முதல்வர் அமரர் திரு நாராயணன் போன்றோருக்கு அறிமுகம் செய்தார். இவர்களின் குடும்பங்கள் ஒருமித்த கருத்தோடு வாரந்தோறும் வியாழனன்று, வாரம் ஒருவர் இல்லம் எனும் சுழற்சியில் பஜனை நிகழ்ச்சியை நடத்தினர். இந்நிகழ்ச்சியில், பஜனையோடு பகவானின் போதனைகள், சட்சங்கம், போதிக்கப்பட்டது.

பாபாவின் போதனைகள் மணம்பரப்ப, பக்தர்களின் எண்ணிக்கையும் அதிகரித்தது. பாபாவின் வாராந்திரப் பஜனை மலாக்கா பெரிய மருத்துவமனை பிள்ளையார் கோயிலில் நடைபெற்றது. சாய் பக்தர்கள் அதிகமாக, இடப்பற்றாக் குறையின் காரணமாக, பின்பு பஜனை இடம் ஊஜோங் பாசிரில் உள்ள அம்பாஜி கோயிலுக்கு மாறியது. சிலகாலம் சென்ற பின்பு, அக்கோயிலின் நிகழ்ச்சிகள் அதிகரிக்க, கோயில் விரிவாக்க வேலைகள் நடைபெற, அங்கிருந்து வேறிடம் போகவேண்டியக் கட்டாயம் ஏற்பட்டது. ஒரு குழுவினர் காஜா பெராங் கைலாசநாதர் கோயிலுக்குச் சென்றனர். அதன்பின், மாரியம்மன் செட்டி கோயிலுக்குப் புலம்பெயர்ந்தனர். பிரிதொரு குழுவினர், பாச்சாங்கில் அமைந்துள்ள மலேசியக் கல்வி, சமூகம், ஆராய்ச்சி அறவாரியம் (EWRF) கட்டடத்திற்கு மாறினர்.

1987-ஆம் ஆண்டு, இரு பஜனை குழுக்களும் சங்கமமாகி, முதலாவது பொதுக்கூட்டத் தேர்தலின் வழி டாக்டர் சேஷாகிரி தலைவரானார். இவரின் தலைமையின் கீழ் பல நடவடிக்கைகள் முடுக்கிவிடப்பட்டன. அவற்றில் ஒன்றுதான் பால்விகாஸ் வகுப்பு. இவ்வகுப்பின் வழி, குழந்தைகளிடையே அன்பு, நன்னெறி, சேவை மற்றும், தொண்டு போன்ற நற்பண்புகள் விதைக்கப்பட்டன. இதனோடு, பஜன் பயிற்சியும், இந்து மதநூற்கள் மற்றும், விக்ரகங்கள் பற்றியும் போதிக்கப்பட்டன.

இக்காலக்கட்டத்தில், மலாக்கா ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையம், அகில மலேசிய சத்திய சாயி பாபா கருத்தரங்கை மிக விமரிசையாக ஆயர் கூரோவில் நடத்தி சரித்திரம் படைத்தது. அதில் 700க்கும் மேற்பட்ட




பாபா பக்தர்கள் கலந்து கொண்டனர். இன்னொரு சாதனை என்னவெனில், இந்நிலையம் தனது சொந்தக் கட்டடத்தை 1995-ஆம் ஆண்டு வாங்கி, தனது நிரந்திர நிலையமாக உருவாக்கிக் கொண்டது. பக்தர்களின் தாராள நன்கொடையும், ஐயா திரு துரைசாமி அவர்களின் பெரும்பான்மையான நன்கொடையும் இத்திட்டம் நிறைவேற சாத்தியமாகியது. அதன்பொருட்டே, அவரின் பெருந்தன்மையை நினைவுகூர, நிலையத்தின் மண்டபத்திற்கு அவரின் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**மலாக்கா ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையத்தின் கட்டமைப்பு**

இந்நிலையத்தின் அறங்காவலர்களாக ENT மருத்துவ நிபுணர் டாக்டர் தர்ஷன் குமார் கண்ணா, மற்றும், டாக்டர் பிரபா சுப்பிரமணியம் ஆகியோர் சேவையாற்றி வருகின்றனர். இம்மையத்தின் தலைமைப் பொறுப்பை வகிப்பவர் திரு. கோவிந்தசாமி அருணாசலம். நிலையத்தின் செயலாளராகத் திரு குணசைஹல் கோவிந்தசாமியும், நிதியாளராகத் திருமதி சோனியா பின்வாணியும் இறைச் சேவை செய்கின்றனர்.

இந்நிலையத்தின் செயல்பாடுகளை முடுக்கிவிட 7 பிரிவுகள் ஒருங்கிணைப்பாளர்களால் அமலாக்கம் செய்யப்படுகின்றன. அவை: கல்வி, தொண்டு, மகளிர், ஆன்மிகம், இளைஞர், சீனப் பக்தர்களின் விவகாரம் மற்றும், ஆய்வு வட்டம் போன்றவை.

**மலாக்கா ஸ்ரீ சத்திய சாயி பாபா நிலையத்தின் செயல்திட்டங்கள்**

இந்நிலையத்தின் வழக்கமான அடிப்படையில் செயல்படுத்தப்படும் நடவடிக்கைகள் பல.

- வியாழன் தோறும் பஜன், பிரார்த்தனையோடு ஆன்மிகச் செய்தி.
- ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் பெரியவர்களுக்கான ஆன்மிக வகுப்பு. (SSE: Sai Spiritual Education)



- வெள்ளிக்கிழமை தோறும் சிறுவர்களுக்கான பால் விகாஸ் ஆன்மிக வகுப்பு. (Bal Vikas Spiritual Classes)
- இருவாரங்களுக்கு ஒரு முறை பஜனைப் பயிற்சி வகுப்பு.
- சமயங்களின் முக்கியப் பண்டிகைகள்/ விழாக்கள் பற்றிய முக்கியத்துவம், மற்றும், நோக்கம் அறிந்து கொண்டாடுதல்.
- குரு பூர்ணிமா, ஸ்ரீ சத்திய சாயி பாபா அவதரித்த நாள் மற்றும், சமாதி நிலையுற்ற நாள் கொண்டாட்டங்கள்.
- காயத்ரி மந்திரம் பாராயணம் மற்றும், அகண்ட பஜனை நிகழ்வு.
- மாணாக்கர்களுக்கான கல்வி யாகமும் வறிய மாணவர்களுக்கான பள்ளிச்சீருடை வழங்குதலும்.
- ஆதரவற்றோர் இல்லம் வருகை.
- மிருகவதை எதிர்ப்பு சங்கம் (SPCA) வருகை.
- பெற்றோரியல் மற்றும், மனிதம் மேம்பாடு திட்டங்கள்.
- இருவாரங்களுக்கு ஒருமுறை வேத இலக்கிய ஆய்வு மற்றும், கலந்துரையாடல் வட்டம்.
- பக்திப்புரட்சி (Bhakthi Revolution) வழி தொண்டுகள்.
- மாதந்தோறும் வறியவர்களுக்கு மளிகைச்சாமான்கள் வழங்குதல்.
- மகளிருக்கான பகவத்கீதை மற்றும், யோகா வகுப்புகள்.
- குடும்பத்தின கொண்டாட்டம்.
- நோயாளிகளைக் காண மருத்துவமனை வருகை.




இந்நிலையத்தின் எல்லா நடவடிக்கைகளும் வட்டார மற்றும், நடுவண் ஒருங்கிணைப்பாளர்களுக்கு வரையறுக்கப்பட்டக் காலக்கட்டத்தில் தவறாது அனுப்பி வைக்கப்படும்.

**(கட்டுரையாளர்: டாக்டர் வி. நாச்சியப்பன் முருகவடிகள்)**

## 13 ஷீர்டி சாய் பாபா

### அறிமுகம்

யோகிகள் அல்லது இறைத்தூதர், தங்கள் வாழ்க்கையில் இறைவனின் புனிதமான பண்புகளைக் கொண்டிருப்பர். அத்தகையோரில் பன்முகத்தன்மை கொண்ட மனிதநேய பண்பாளர்கள் சிலரே. அவர்களில் ஒருவர் ஷீர்டி சாய் பாபா.

இந்நவீன காலத்தில் இறைவன் மானுட சட்டையணிந்து ஷீர்டி சாய் பாபாவாக அவதரித்தது பேருண்மையாகும். அத்தகைய இறைத்தூதர் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்தது பெருமைப்பட வேண்டும். நன்றி பாராட்ட வேண்டும். அவர், நம்மோடு நடைபயின்றார். நம்மோடு பேசினார். நம் தாய்க்கு மேலாக நமக்கு அன்பைப் பரிமாறினார். எல்லாவற்றிலும் மேன்மையானது, அவர் நம்மை எப்பொழுதும் காத்தார். காப்பார்.

ஷீர்டி சாய் பாபாவின் ஆரம்பக்கால வாழ்க்கை மர்மம் நிறைந்ததாக இருந்தது. ஏனெனில், ஷீர்டி சாய் பாபாவின் பிறப்பு, அவர் பெற்றோரின் பின்புலம் எதுவும் எழுத்துப்பூர்வமான பதிவில் இல்லை. பாபாவின் பிறந்த காலக்கட்டம் 1838-1842-இல் இருக்கலாம் என்றும் இவர் அவதரித்தது மத்திய இந்தியாவின் மஹாரத்வாடா என்ற பகுதியிலுள்ள பத்ரி என்ற குக்கிராமம் என்றும் கூறப்படுகிறது.



தனது 16-ஆம் அகவையில், பாபா சீர்டிக்கு வந்து, புனிதமான ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கை வாழ்ந்தார். சிக்கன வாழ்வும் அவரின் சீரிய பண்பாகத் திகழ்ந்தது. அங்கு அவர், பாபுல் எனும் காடுகள் நிறைந்தப் பகுதியில் வாழ்ந்தார். அங்கு பாபா நீண்ட நேரம் வேப்பிலை மரத்தடியில் தியானம் செய்வது வழக்கமாகக் கொண்டிருந்தார். சில ஆண்டுகள் கடந்தபின், தற்போது துவார்கமாய் என அறிமுகப்படுத்தப்பட்ட இடத்தில் உள்ள பழமையான மசூதிக்குப் புலம் பெயர்ந்தார் பாபா.

தமது ஆரம்பக் கால இறைவாழ்வின்போது, பாபா தமது சீடர்கள் தம்மை இறைவனாக ஆராதிப்பதைக் கொஞ்சமும் விரும்பவில்லை. கால ஓட்டத்தில், பாபாவின் இறைத் தன்மையும் பேராற்றலும் பெருமளவில் அதிகரிக்கவே அதிகமான பக்தர்கள் அவர்பால் ஈர்க்கப்பட்டனர். மனிதன் தன்னையறியும் நிலையை உயர்த்த வேண்டும். தரம் குறைந்த, இலகுவாகக் கெடும் பொருட்களின் மீது ஆசை வைக்கக்கூடாது என்பது பக்தர்களுக்கான பாபாவின் அன்புரை. அனுதினமும் பாபா பொதுமக்களின் வீடுகளுக்குச் சென்று யாசகம் பெற்று

வந்தார். பாபா அன்றாடம் பெறும் யாசகத்தின் சூட்சுமம் என்ன? பாபா தினமும் அணுகும் மக்களின் கர்மத்தை நீக்கி அவர்களை மேன்மைப்படுத்துகிறார். "டுனி" எனப்படும் இறைதீ வாயிலாகப் பாபா மக்களின் கர்மாக்களை நீக்குகிறார். ஒவ்வொரு நிலையிலும் மக்களின் வேதனைகளுக்குச் சிகிச்சை அளித்து அவர்களுக்கு நல்வழிக் காட்டுகின்றார்.



தமது வாழ்நாளில் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு அதிசயங்களை நிகழ்த்தி மானிடகுல நல்வாழ்வுக்கு வழிகாட்டியுள்ளார் பாபா. மகாசமாதி நிலையுற்றபின்பும் பாபா எண்ணிக்கையில்லாத அதிசயங்களைச் செய்து காட்டினார். பாபா ஜீவசமாதி அடைந்தது 1918-ஆம் ஆண்டு. பாபாவின் இறைத் தன்மையும் வழிகாட்டலும் உலகமெங்கும் பரவியுள்ள அவரின் சீடர்களுக்கு உற்றத் துணையாக இருந்தது. பாபாவின் உயர்ந்தப் பொன்மொழிகளில் நீ என்னைப் பார். நான் உன்னைப் பார்ப்பேன்" என்பதாகும். (Look to Me, and I shall look to you) ஸ்ரீ ஷிர்டி சாய் பாபாவின் புனித நூல் "ஸ்ரீ சாய் சட்சரித்திரா" ஆகும். பாபா வாழ்ந்தக் காலத்தில், அவரும் அவர்தம் சீடர்களின் இருவழி உரையாடலும் அனுபவமும் நிறைந்த தொகுப்பாகும். இதனை புத்தக வடிவில் கொண்டு வந்தவர் ஸ்ரீ அன்னா சாஹிப் டபோகர்-ஹேமட்பன்ட்.



இன்று, பாபா ஜீவசமாதி அடைந்து நூறு ஆண்டுகள் கடந்தபின்பும், பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் சீர்டி சென்று அவரின் தரிசனம் பெற்று வருகின்றனர். தமது உண்மையான சீடர்களுக்கு அவரின் சத்தியமான வாக்கு என்னவெனில்; "என்னை பரிபூரணமாக நம்புங்கள். நான் ஜீவசமாதி உற்றாலும், சமாதியில் உள்ள எனது எலும்புகள் தங்களுக்கு நம்பிக்கையைக் கொடுக்கும். என்னிடம் முழுமையாகச் சரணாகதி அடைந்தவர்களுக்கு எனது தூயசமாதியும் பேசும்" என்பதாகும். பாபாவின் பக்தர்களால் உலகமெங்கும் பாபாவின் மையங்களும் திருக்கோயில்களும் உருவாக்கப்பட்டுள்ளன. பாபாவின் மலாக்கா வாழ் பக்தர்களும் பாக்கியம் செய்தவர்களே! இங்கு அழகிய இரண்டு மையங்கள் உருவாகி பாபாவின் போதனைகளும் ஆசியும் பக்தர்களுக்குச் சென்றடைய உறுதுணையாக இருக்கின்றன.

| 13.1 | **மலாக்கா ஷீர்டி சாய் பாபா சமாஜம்** |
|---|---|
| | *No.27 & 25, Jalan KNMP 2 A, Kompleks Niaga, Melaka Perdana, 75450 Bukit Katil, Melaka.* |



ஓம் சாய் ராம். மலாக்கா ஷீர்டி சாய் பாபா சமாஜம் 2008-இல் அமைக்கப்பட்டது. இந்தியா, மஹாராஷ்டிரா மாநிலத்தில் உள்ள ஷீர்டி சாய் பாபா அருள்நிலையத்திற்கு யாத்திரா சென்று மலேசியா திரும்பியபின், திரு.விஜயகுமரன் பாலகிருஷ்ணனுக்கு மலாக்காவில் பாபாவின் அருள் நிலையத்தை அமைக்க எண்ணம் உதித்தது. இவர் தமது குடும்பம் மற்றும், உற்ற நண்பர்களின் உதவியோடு மலாக்காவின் முதல் ஷீர்டி சாய் பாபா அருள்நிலையத்தை அமைத்தார்.

பாபாவின் பக்தர்களுக்கு ஆன்மிக நடவடிக்கைகளில் கலந்து கொள்வதற்கும் பூஜையில் கலந்து ஆசி பெறுவதற்கும் அதிக வாய்ப்புகள் வழங்கப்படுகின்றன. தினமும் இரு காலவேளைகளில் இம்மையம் திறக்கப்படுகிறது. காலை 7.00 மணி முதல் நண்பகல் 12.00 வரையில் முதல் காலவேளை. பின்பு, இரவு 7.00 மணி முதல் இரவு 9.00 மணி வரை இம்மையம் திறக்கப்படும். ஸ்ரீ சிவா குருக்கள் அன்றாடம் முறையோடு பூஜைகளைச் செய்கிறார். குருவுக்கு உகந்த தினமான வியாழன் அன்று சிறப்புப் பூஜையோடு பஜனையும் இடம்பெறும். ஆரத்திக்குப்பின் பக்தர்களுக்கு சாய் பிரசாதம் வழங்கப்படும். ராம நவமி, குரு பூர்ணிமா மற்றும், இம்மையம் அமைக்கப்பட்ட நினைவு நாள் பூஜை, இங்கு நடைபெறும் முக்கிய விழாக்கள். சமய நடவடிக்கைகளுக்கு அப்பால், இம்மையம் சமுதாயத்திற்குத் தொண்டுகள் செய்வதில் கவனம் செலுத்துகிறது. இச்சமாஜத்தின் செயலவையினர் பி40 வர்க்க குடும்பப் பிள்ளைகளின் நலனில் அக்கறைக் கொண்டு பல்வகைத் திட்டங்களைத் தீட்டிச் செயல்பட்டு வருகின்றனர்.

**சமாஜத்தின் தூரநோக்குச் சிந்தனை:**

**1. வறியநிலை குடும்பங்களுக்கு உணவு தானம்**

தினமும் இலவசக் காலை சிற்றுண்டி வழங்கப்படுகிறது. ஒவ்வொரு வியாழன் குரு பூஜைக்குப்பின் பிரசாதம் வழங்கப்படும். முக்கியப் பெருநாளான தீபாவளி, புத்தாண்டு போன்ற நாட்களில் அனாதைக் குழந்தைகள் மற்றும், உடல்நலப்பேறு குறைந்தோருக்குச் சமாஜத்தில் சைவ உணவு மற்றும், திண்பண்டங்கள் வழங்கப்படும். அவர்கள் மகிழ்ச்சி அடைய பல விளையாட்டு நிகழ்வுகளையும் ஏற்பாடு செய்வர்.

**2. வறியநிலை குடும்பங்களுக்குத் துணிமணிகள் தானம்**

ஒவ்வோர் ஆண்டு இறுதியில், சமாஜம் ஏழ்மை வளையத்தில் வாழும் சிறார்களுக்குப் பள்ளிச்சீருடை வழங்கும். அதோடு, பள்ளிப் புத்தகப்பை, காலணி, காலுறை மற்றும், எழுதுகோல் போன்ற இதரப் பொருட்களும் வழங்கப்படும். இவர்களுக்குத் தீபாவளியின்போது புத்தாடைகளும் கொடுக்கப்படும்.

**3. மருத்துவச் சிகிச்சை உதவிகளும் மளிகைச் சாமான்கள் அன்பளிப்பும்**

ஏழ்மைக் குடும்பங்களின் தேவைகளை உணர்ந்த சமாஜம், மருத்துவச் சிகிச்சை உதவிகளையும் மளிகைச் சாமான்கள் அன்பளிப்புகளையும் கொடுக்கிறது. சில வேளைகளில் பண உதவிகள் செய்தும் உதவுகிறது. வயது முதிந்தோருக்கு அணையாடையும் வழங்கப்படுகிறது.









**4. வறியநிலை குடும்பச் செல்வங்களுக்குக் கல்வித்திட்டம்**

கல்வி வழி முன்னேற்றம் எனும் தாரக மந்திரத்தைத் திடமாக நம்பும் சமாஜம், ஏழ்மைக் குடும்ப ஆரம்பப்பள்ளிச் செல்வங்களுக்குப் பலவகையான கல்வித்திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தி வருகிறது. மேற்கண்ட நான்கு நோக்கங்களைத் தவிர்த்து, இச்சமாஜம் வாய்ப்புக் கிட்டும் போதெல்லாம் சமய வகுப்பினையும் சனாதன தர்மப் பேருரைகளையும் நடத்தி வருகிறது. இச்சமாஜம் உள்நாட்டு வெளிநாட்டு சமய அறிஞர்களையும் தன்முனைப்புப் பேச்சாளர்களையும் வரவழைத்து பாபா பக்தர்களுக்கு அறிவும் தன்முனைப்பும் ஊட்டுகின்றது.

**இச்சமாஜத்தின் பொறுப்பாளர்களோடு தொடர்புகொள்ள விரும்புவோர் பின்குறிப்பிட்டுள்ளவர்களுடன் தொடர்பு கொள்ளலாம்:**

**ஸ்ரீ சிவா குருக்கள்**
**(011-26224944)**

**ஸ்ரீ வசந்தன்**
**(012-6070263)**

**திரு.விஜயகுமாரன் பாலகிருஷ்ணன், தலைவர்**
**(019-3553458)**

| 13.2 | **சீர்டி சாய் பாபா சமாஜம் மலேசியா** |
| --- | --- |
| | *No.34, Jalan Bendahara, 75100 Melaka.* |

**"ஓம் சாய் நமோ நமோ,ஶ்ரீ சாய் நமோ நமோ, ஜெய ஜெய சாய் நமோ நமோ, சற்குரு சாய் நமோ நமோ"**

சமூகச் சேவை அமைப்பான சீர்டி சாய் பாபா சமாஜம் மலேசியா, சீர்டி சாய் பாபாவின் போதனைகளையும் சித்தாந்தையும் உலகளவில் மணம்பரப்ப நோக்கம் கொண்டது. இச்சமாஜம் மலேசியாவில் முக்கிய நகரங்களில் 18 கிளை அருள்நிலையங்களைக் கொண்டு இயங்கி வருகின்றது. வெளிநாட்டில் பிரிட்டனிலும் இந்தியாவிலும் தம் கிளை சமாஜங்களைக் கொண்டுள்ளது. சீர்டி சாய் பாபா சமாஜம் மலேசியாவின் ஸ்தாபகர், பாபாவின் அருட்சீடர் ஶ்ரீ எஸ்.பி.கண்ணன் அவர்கள். இவர் தலைமையில் இயங்கும் எல்லா உள்நாட்டு வெளிநாட்டு மையங்கள் பாபாவின் பக்தர்களால் சீர்மிகு முறையால் பராமரிக்கப்பட்டு வருகின்றது.




சீர்டி சாய் பாபா சமாஜம் மலேசியா தற்போது சீர்டி சாய் பாபா திருக்கோயிலைக் கிள்ளானில் உள்ள போட்டானி கார்டனில் நிறுவத் திட்டமிட்டுச் செயலில் இறங்கியுள்ளனர். ரி.ம.5.4 மில்லியன் செலவில் உருவாகவிருக்கும் இத்திருக்கோயில், மலேசியாவில் மட்டுமின்றி தென்கிழக்காசியாவிலும் அமையப்போகும் முதல் சீர்டி சாய் பாபா திருக்கோயிலாகும். மலாக்காவாழ் பாபா பக்தர்கள் பாபாவின் அருளைப் பெற்றவர்களாகக் கருதப்படுகின்றனர். ஏனெனில், சரித்திரப்புகழ் வாய்ந்த மலாக்கா மாநகரில் லிட்டல் இந்தியா என்ற பகுதியில் பெண்டஹாரா சாலையில் சீர்டி சாய் பாபாவின் சமாஜத்தை அமைத்து பக்தர்களின் நெஞ்சங்களில் இடம் பெற்றார் ஶ்ரீ எஸ்.பி.கண்ணன் அவர்கள்.

மலாக்கா நகரின் மத்தியில் அமைந்துள்ள இச்சமாஜம், சீர்டி சாய் பாபாவின் சீரிய போதனைகளை மக்கள் மனதில் பதித்து, அவர்கள் ஆன்மநெறியில் லயிக்க இலக்காகக் கொண்டுள்ளது. இம்மையம் நாள்தோறும் காலை 7.00 மணி முதல் இரவு 9.00 மணி வரை பக்தர்களின் வருகைக்காக திறந்திருக்கும். காலை ஆகாரம், மதிய உணவு மற்றும், இரவு உணவு தினமும் பக்தர்களுக்கும் வறியவர்களுக்கும் பரிமாறப்படுகின்றது.

குருவிற்கு உரிய நாளாக வியாழன் போற்றப்படுகின்றது. அந்நன்நாளில் விஷேசப் பூஜையும் பஜனையும் இம்மையத்தை அலங்கரிக்கும். ஆரத்திக்குப்பின், கலந்து கொண்ட பக்தக் கோடிகளுக்குப் பிரசாதம் வழங்கப்படும். ஆன்மீக நடவடிக்கைகள், கலை கலாச்சார பண்பாட்டு நிகழ்வுகள், கல்வி சம்பந்தமான செயல்பாடுகள் மற்றும், வழிபாடு சம்பிரதாயங்களும் இங்குத் தொடர்ந்து நடபெற்று வருகின்றது. ஒவ்வோர் ஆண்டும் இம்மையம் கோலாகலம் பூண்டு மக்கள் மனதில் நீங்கா இடம் பிடிக்கும் விழாக்கள் ராம நவமி, குரு பூர்ணிமா மற்றும், நவராத்திரி ஆகும். மாதபௌர்ணமி பூஜை இச்சமாஜத்தில் மாதந்தோறும் நிச்சயமாக நடைபெறும் பூஜையாகும். இன்றைய நாளில் பக்தர்கள் பால் அபிஷேகமும் பன்னீர் அபிஷேகமும் செய்து பாபாவின் அருளாசியைப் பெறுவர். அதோடு, காயத்திரி மந்திரமும் சீர்டி சாய் பாபா மந்திரமும் பக்தர்களால் உச்சரிக்கப்பட்டு மையமே பாபாவின் அருளால் நிறைந்திருக்கும்.









சுருங்கக்கூறின், சீர்டி சாய் பாபா சமாஜம் மலேசியா, உலக மக்களுக்கு உரிய பாபாவின் ஆன்மீக சிந்தனைகளை மணம் பரப்பும் மையமாகத் திகழ்கிறது என்றால் மிகையாகாது. இங்கு எவரும் பிறந்தநாள், குடும்ப ஒன்றுகூடல், மற்றும், இதர மகிழ்வூட்டும் நிகழ்வுகளை ஏற்பாடு செய்து, வந்தோர் அனைவருக்கும் அன்னதானம் கொடுத்து மகிழலாம். இதன்வழி, நிச்சயமாகப் பாபாவின் அருளாசி ஏற்பாட்டாளருக்குக் கிட்டும். ஏனெனில், தானங்களிலேயே சிறந்த தானம் அன்னதானமே!

**இத்தகைய நிகழ்ச்சியை இங்கு ஏற்பாடு செய்ய நீங்கள் அணுக வேண்டிய பொறுப்பாளரின் தொடர்பு எண்: 06-282 0306.**

**(கட்டுரையாளர் : திரு புவனேந்திரன் எம். சின்னையா)**

| 14 | பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண சமூக நல இயக்கம், மலாக்கா |
| --- | --- |
| | *No: 451, Jalan Tengkera, 75200 Melaka.* |

ஸ்ரீ ராமகிருஷ்ணா ஆசிரமம், மலாக்கா என இவ்வியக்கம் ஆரம்பத்தில் அழைக்கப்பட்டது. இதன் அமைப்பாளர் திருமிகு டாக்டர் ராமா அவர்கள். தேசிய சங்கங்களின் பதிவிலாகாவில் (ROS) இவ்வாசிரமம் PPM-001-04-11021961 எனும் பதிவு எண்ணின் கீழ் பதிவு செய்யப்பட்டது. 1973-இல் தலைமைத்துவ மாற்றம் ஏற்பட்டபின்பு, ஸ்ரீ ஆர்.கோவிந்தசாமி அவர்கள் தலைமைப் பொறுப்பை ஏற்று, சனாதன தர்மம் அடிப்படையிலான இவ்வியக்கத்தை மலாக்கா லிம்போங்கானில் உள்ள தமது இல்லத்திலிருந்து வழிநடத்தினார். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பக்தர்களின் எண்ணிக்கை அபரிமிதமாக உயர்ந்தது. தலைவரின் மனையில் இல்லப் பூஜை நடைபெற்ற வேளையில் இம்மையத்தின் பணி தோட்டப்புற இந்து மக்களை அரவணைத்தது. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் போதனைகள் இதர மாநிலங்களுக்குப் பரவி, அவரின் சித்தாந்தம் மலேசிய அளவில் மிளிர்ந்தது.



அரசாங்கப் பள்ளியில் நனிசிறந்த ஆசானாகப் பயணித்த ஸ்ரீ ஆர்.கோவிந்தசாமி அவர்கள், மாலை வேளையில் இவ்வரிய ஆன்மீகப் பணியைத் தொடர்ந்தார். இவரின் இப்பணி நம் நாட்டில் மட்டுமல்லாது சிங்கப்பூரிலும் சிறகடித்துப் பறந்தது. பகவானின் பக்தர்கள் எண்ணிக்கை அதிக அளவில் உயர்ந்தது.

பக்தர்களின் எண்ணிக்கை அதிகரிக்க, இல்லபூஜையின்போது இடவசதி நெருக்கடி தொடர, விசாலமான இடம் ஒன்று தேவையென உணரப்பட்டது. ஜூலை மாதம் 1990 இல் தெங்கேரா சாலையில் தமது இல்லத்திலிருந்து ஏறக்குறைய 500 மீட்டர் தூரத்தில் ஒரு வசதியான பங்களா ஒன்று அடையாளங் காணப்பட்டது. தேசிய நில நிதிக் கூட்டறவுச் சங்கத்திற்குச் (NLFCS) சொந்தமான அக்கட்டடம் வாங்கப்பட்டு, அது புதிய செயல் நடவடிக்கை மையமாக பரிணமித்தது. சுவாமிஜி என்று பக்தர்களால் அழைக்கப்படும் ஸ்ரீ ஆர்.கோவிந்தசாமி அவர்கள் முன்னோக்குச் சிந்தனைவாதி. பெற்றோர்களை இழந்து வாடிய பிள்ளைகளும் வறிய நிலையில் தள்ளாடியச் சிறார்களும் இம்மையத்தில் அடைக்கலம் புகுந்தனர். அதிகமான ஆண் பெண் சிறார்கள் இங்குப் புதிய வாழ்க்கையைத் தொடங்கினர். இப்பொழுது இவ்வியக்கம் வேதம் பரப்பும் நிலையமாக மட்டும் அல்லாது பி40 வர்க்க குடும்பச் செல்வங்களுக்கு இரண்டாவது வீடாகவும் திகழ்கிறது.

ஆண் பெண் இரு பாலரும் ஒரே கூரையின் கீழ் வாழும்பொழுது சில சமூகப் பிரச்சனைகள் உருவெடுக்கும் சூழ்நிலை ஏற்பட்டது. செயலவையினரின் துரித நடவடிக்கையினால் மடுகளவு வளர்ந்த பிரச்சனைக்கு நிரந்தரத்




தீர்வு காணப்பட்டது. பெண் பிள்ளைகள் சிலாங்கூர் ரவாங்கில் அமைந்துள்ள இதன் கிளை அமைப்பான ஸ்ரீ சாரதா இல்லத்திற்குப் புலம் பெயர்ந்தனர். 40 ஆண் பிள்ளைகள் இங்கேயே நிரந்தரமாகத் தங்கி மாற்றாந் தகப்பனாகத் திகழும் சுவாமிஜியின் அன்பில் வாழ்வில் பயணித்தனர். இவ்வியக்கம் பெரும் புகழ் அடைய அதன் உன்னத நோக்கமும் வெளிப்படையான செயலாக்கமும்தான். அதன் பொருட்டு, அதிகமான பொதுமக்கள் இவ்வியக்கத்தில் அங்கத்துவம் பெற்றனர். சுவாமிஜியின் கீழ் திறன்மிக்க செயலவையினர் செயல்பட இப்பொழுது ஏறக்குறைய 2500 அன்பர்கள் இவ்வியக்கத்தில் அங்கத்துவம் பெற்றுள்ளனர் என்பது போற்றுதலுக்குரியது. இம்மையத்தின் எல்லாத் தேவைகளையும் செயலவையினர் பூர்த்திச் செய்கின்றனர். அங்கத்தினர்கள் மற்றும், பொது மக்களின் கருணையும் வற்றாத நிதியுதவியும் இவ்வியக்கம் சிறப்புறச் செயல்பட உற்ற துணையாக உள்ளன.

மார்ச் மாதம் 1997இல் இவ்வியக்கத்தின் தலைமகன் சுவாமிஜி ஆர்.கோவிந்தசாமியின் அகால மறைவு ஒரு பேரிடராகக் கருதப்பட்டது. ஏறக்குறைய 15,000 பக்தர்கள் சுவாமிஜியின் இறுதிச்சடங்கில் கலந்து கொண்டது மலாக்கா மாநகரையே முடக்கச் செய்தது. அன்னாரின் மறைவுக்கு முன்பு, மலேசியாவிற்கான ஸ்ரீலங்கா தூதர் மேதகு ஸ்ரீ ராசதுரை அவர்கள் சுவாமிஜிக்கு "சுவாமி ஸ்ரீல ஸ்ரீ பரமஹம்சர் தாசர்" எனும் திருநாமத்தை வழங்கிச் சிறப்புச் செய்தார். இந்தச் சிறப்பு சுவாமிஜி வாழ்ந்த வாழ்க்கைக்கு ஏற்புடையது. சுவாமிஜியின் அரும்பணி காலத்தை வென்று என்றும் நீடித்து நிலைத்து நிற்கும் என்பது வெள்ளிடைமலை.



சனாதனத் தர்ம பரப்புரை, மனிதநேயத்தை அடிப்படையாகக் கொண்ட சமுதாயச் சேவை மற்றும், அன்பின் அடிப்படையில் மனித உறவு எனும் கொள்கைகளுக்கு அடித்தலமிட்டு இயக்கத்தை வழிநடத்தினார் சுவாமிஜி. இதனால், 2013-இல் இவ்வியக்கம் சமூக நல இலாகாவின் கவனத்தை ஈர்த்தது. இயக்கத்தின் பெயர் "பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண சமூக நல இயக்கம் மலேசியா" என மாற்றம் கண்டது. தேசிய சங்கங்களின் பதிவு இலாகா அதிகாரப்பூர்வமாக இவ்வியக்கத்தை பதிவு செய்தது. சமூக நலன் இலாகா இவ்வியக்கத்தின் செயல்பாடுகளைக்



கவனித்து, பகுப்பாய்வு செய்து மனநிறைவுக் கொண்டது. அதனால், இங்கு தஞ்சம் புகுந்தப் பிள்ளைகளுக்குச் சாப்பாட்டுச் செலவிற்காக வருடாந்திர மான்யம் வழங்கியது. சமூக நல இலாகாவின் இவ்வுதவித் திட்டம், இயக்கம் நல்முறையில் செயல்பட உதவியது. அவர்களின் மாண்பை என்றும் நினைவில் கொள்வோம்.

இன்று பல நடவடிக்கைகளில் இங்குள்ளப் பிள்ளைகள் கலந்து கொண்டு பயனடைகின்றனர். பள்ளி சம்பந்தமான நடவடிக்கைகளைத் தவிர்த்து, ஆசிரமச் செல்வங்களின் எல்லாத் தேவைகளையும் நிறைவாகச் செய்கின்றனர். இவ்வியக்கத்தின் செயலவையினரும் ஊழியர்களும். ஆசிரம் வாழ் செல்வங்களுக்கு, அவர்கள் புறப்பாட நடவடிக்கை, வளம் சேர்க்கும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பார்த்தல், படிப்பு மற்றும், இறை வழிபாடு போன்றவற்றில் ஈடுபட போதுமான நேரம், தினக் கடமை அட்டவணையில் ஒதுக்கப்பட்டுள்ளது. புறப்பாட நடவடிக்கைகளான மனமகிழ் நிகழ்வு, மிருகக்காட்சி சாலைக்குச் செல்லல், உணவகங்களில் சாப்பிடுவது, அண்டை மாநிலங்களுக்கான கல்விச் சுற்றுலா, சமுதாயச் சேவை போன்றவற்றில் அவர்களை ஈடுபடுத்தி அவர்களின் அறிவையும் அனுபவத்தையும் மேம்படச் செய்கிறது இம்மையம். தினமும் பள்ளிக்கூடம், நிகழ்ச்சி நடைபெறும் வெளியிடங்களுக்குச் செல்ல வாகன வசதியையும் இங்குள்ள செல்வங்கள் பெற்றுள்ளனர்.

அனுபவமிக்க, தன்னலமற்றச் செயலவையினரால் இவ்வியக்கத்தின் செயல்பாடு மனநிறைவு அளிக்கும் வகையில் உள்ளது. அதிகமான ஆதரவற்றச் செல்வங்கள் இங்குத் தஞ்சம் புகுவதே இதற்குச் சான்று. வாழ்க்கைச் செலவினம் அதிகரிப்பும் பொது நிறுவனங்களின் உதவிகள் சரிவும் இப்பொழுது இவ்வியக்கம் எதிர்நோக்கும் முக்கியச் சவால்கள். இதனை எதிர்கொள்ள பரம்பொருள் எங்களுக்கு அசைக்க இயலாத நம்பிக்கையையும் கருணையையும் தருவான் என்பது செயலவையினரின் எதிர்பார்ப்பு. டிசம்பர் 2020க்குள் 45 செல்வங்களை அதிகரிக்க செயலவையினர் இலக்காகக் கொண்டுள்ளனர்.





கடந்த ஆகஸ்ட்டு மாதம் 2019 முதல் “வீட்டில் படிப்பு” எனும் திட்டத்தைச் செல்வங்களின் கல்வி மேன்மைக்காக இவ்வியக்கம் தொடங்கியுள்ளது. 07-01-2020-இல் இது அதிகாரப்பூர்வமாகப் பிரகடனம் செய்யப்பட்டது. இதன்வழி இடைநிலைப்பள்ளிகளில் பயிலும் இவ்வியக்கச் செல்வங்கள் கல்வியிலும் ஒழுக்கத்திலும் சிறந்து விளங்க இது துணை புரியும். இத்திட்டத்தின் வழி செல்வங்கள், சிலம்பம், மனித இயந்திரக் கல்வி, கணினி, யோகா மற்றும், உடல் திண்மை பயிற்சி போன்றவற்றைப் பெற்று நன்குடிமக்களாகத் திகழ முடியும். முறையான கல்வியைப் பெறுவதோடு இவர்கள் இன்றைய உலகமய சூழ்நிலைக்குத் தேவையான கணினி அறிவையும் தற்காப்புக் கலையையும் கற்றுச் சாதனை வீரர்களாக மிளிர முடியும். இவ்வாண்டு செயலவையினர் செல்வங்களுக்காகத் தொழிற்நுட்பக் கல்வி மற்றும், நடைமுறையில் தேவைப்படும் கல்வியையும் தொடங்கத் திட்டம் தீட்டியுள்ளனர். உலகமய இலக்கமுறை சந்தைப்படுத்துதல் பயிற்சி படிவம் 3,4,5-இல் பயிலும் மாணவர்களுக்குத் தொடங்கப்படும். இடைநிலைப்பள்ளியை விட்டு விடைபெறும்போது, இவர்கள் எஸ்.பி.எம்.தகுதி சான்றோடும் மேற்கூறப்பட்ட சான்றிதழ்களோடும் செல்லும்போது நிஜவாழ்க்கையில்









வெற்றிபெற இயலும். இவர்கள் உயர்க்கல்வியையும் தொடரப் பயனுள்ளதாக இருக்கும். தடைகளின்றிச் செல்லும் “வீட்டில் படிப்பு” திட்டத்தினால் செல்வங்களின் கல்வித்தரம் உயர்வு கண்டுள்ளது. இத்திட்டத்திற்கு ஒரு வருடத்திற்கு ரி.ம.140,000.00 செலவானாலும், அது செல்வங்களின் வருங்கால வாழ்வுக்கான மூலதனம். அச்சாணி.

இன்றையச் சூழலில், பொருளாதார மந்தநிலை, நிலைத்தன்மை அற்ற அரசியல், மற்றும், கோவிட் 19 பெரும்தொற்று இவ்வியக்கத்தின் சீரான பயணத்தைச் சற்றுத் தள்ளாட வைத்துள்ளது. இயக்கச் செல்வங்களுக்கான அடிப்படை வசதிகளைக் கொடுப்பதில் சற்றுச் சிக்கல்கள் ஏற்பட்டுள்ளது. பொதுநிறுவனம் மற்றும், தனிநபர், பொதுமக்களின் நிதி உதவியை நாங்கள் பெரிதும் எதிர்பார்க்கிறோம். வழங்கப்படும் நிதி நன்கொடைகளுக்கு மலேசிய வருமான வாரியம் விலக்குக் கொடுக்கும் எனும் உத்திரவாதத்தை நாங்கள் தருகிறோம். இவ்வியக்கத்தின் மாதாந்திரச் செலவினம் தங்களின் கவனத்திற்குக் கொண்டு வருகின்றோம். கூடுதல் வகுப்பு : ரி.ம.10,500; புத்தகங்கள் & மீறப்பயிற்சி நூல்கள்: ரி.ம. 350.00; போக்குவரத்து வசதி: ரி.ம.500.00; உணவு: ரி.ம.8000.00; மருந்துகள்: ரி.ம.500.00; நிரந்தர ஊழியர்கள் & தொண்டூழியர்கள் சம்பளம் & அலவன்ஸ்: ரி.ம.7,200.00 ( 1 சமையல்காரர், 2 பாதுகாவலர், 1 சாரதி, 1 கணக்காய்வாளர்);







அத்தியாவசியப் பயன்பாடு: ரி.ம.2000.00 (மின்சாரம், டெலிகாம் & நீர்க் கட்டணம்) மற்றும், இதரச் சில்லரைச் செலவுகள். இவ்வியக்கத்தை நடத்த ஒரு மாதத்திற்கான மொத்த செலவு ரி.ம.29,000.00 ஆகும். செல்வங்களின் எதிர்காலத்தை உறுதிப்படுத்தும் வீட்டில் படிப்பு திட்டத்திற்கு நாங்கள் மாதந்தோறும் தொகையை தயார் செய்யவேண்டும் என்பதே எங்களின் தலையாயச் சவால்.



அன்பான சகோதர சகோதரிகளே! தங்களின் நன்கொடையே இவ்வியக்கத்தை நாங்கள் வழிநடத்தப்போகும் அச்சாணி. ஆதரவற்ற, வறியநிலை ஆன்மாக்களின் வாழ்வாதாரத்திற்கு உங்களின் வற்றாத நன்கொடையைப் பெரிதும் எதிர்பார்க்கிறோம். தங்களின் தயாள உள்ளத்திற்குப் பரம்பொருள் என்றும் துணை நிற்பான். தங்களின் எல்லா நன்கொடைகளுக்கும் வருமான வரி வாரியத்தின் வரிவிலக்கு கிடைக்கும். உங்கள் பார்வைக்கு எங்களின் வரி விலக்கு எண் இதோ: 01/35/42/51/1796-7036.

மேலும், விளக்கம் பெற எங்களைத் தொடர்பு கொள்ளலாம். எல்லா நன்கொடையும் “Pertubuhan Kebajikan Bhagawan Sri Ramakrishna” என்ற பெயரில் Public Bank, Cawangan Tengkera, Melaka” வில் செலுத்தலாம். வங்கி எண்: 3081855332. இயங்கலை/ஓன்லைன் வழி நன்கொடை செலுத்தும் அன்பர்கள் அதன் விவரத்தை மின்னஞ்சல் அல்லது புலனம் வழி எங்களுக்குத் தெரிவித்தால், நன்கொடைக்கான பற்றுச்சீட்டை அனுப்ப ஏதுவாக இருக்கும். எங்களின் புனிதமான நோக்கத்திற்குத் தங்களின் ஆதரவு என்றும் இருக்கும் எனும் நம்பிக்கையில் கைகூப்பி விடைபெறுகிறோம். எங்களுடன் தொடர்பு கொள்ள:

**திரு.பாலமுரளி கோவிந்தசாமி: 06-2843236 அல்லது 012-6186556 அல்லது bhagawansrg@gmail.com.**

**(கட்டுரையாளர்: திரு பாலமுரளி கோவிந்தசாமி)**

| 15 | **மலாக்கா நுண்கலைக் கோயில் & சிவா குடும்பம்** |
|---|---|
| | *No.5392 C, Jalan Datuk Palembang, Bukit Baru, Melaka.* |

அரசு சாரா அமைப்பான மலாக்கா நுண்கலைக் கோயில் (TFA), மலேசியக் கலைக்கழகம் (Perbadanan Kesenian Malaysia) எனவும் அழைக்கப்படுகின்றது. மேன்மை கொண்ட இந்தியக் கலை மற்றும், கலாச்சாரத்தை உய்த்துணர்ந்து போற்றும் சமுதாயத்தை உருவாக்குவதே இதன் பிரதான இலக்காகும். இக்கலைக்கோயில் 1996-ஆம் ஆண்டில் மலாக்கா மாநகரில் தவத்திரு சுவாமி சாந்தானந்த சரஸ்வதி அவர்களால் உருவாக்கப்பட்டது. இவரின் பூர்வீகம் தமிழ்நாடு, இந்தியா. இவ்வமைப்பு மலேசியாவில் மட்டுமின்றி அயல்நாடுகளிலும் தன் சிறகை விரித்துள்ளது. பிரிக்பீல்ட்ஸ், மலேசியாவில் தன் தலைமை வளாகத்தைப் பெற்றுள்ள இவ்வமைப்பு பினாங்கு, மலாக்கா மற்றும், ஜொகூர்பாரு மாநகரங்களிலும் தன் கிளைகளைக் கொண்டுள்ளது. சிங்கப்பூர், சென்னை, கோயம்புத்தூர் (தமிழ்நாடு), கொழும்பு ஸ்ரீலங்கா) மற்றும், பெர்த் (ஆஸ்திரேலியா) ஆகிய அயல்நாட்டு நகரங்களில் இம்மையம் தம் கலைப்பணியைத் திறம்பட ஆற்றிவருகிறது.




இந்தியக் கலைகலாச்சாரத்தின் கூறுகளில் ஆடல் மற்றும், பாடல் கலைகள் முக்கியத்துவம் வாய்ந்தன. அதனை, இப்பூமிதன்னில் நிலைபெறச் செய்து, தலைதூக்கச் செய்வதே இக்கலைக்கோயிலின் உன்னத நோக்கமாகும். ஞாயிறுதோறும் பலதரப்பட்ட கலைஞர்களுக்குப் பல்வகை நடனங்களும் பாடல்களும் இங்கே கற்றுத்தரப்படுகின்றன. இந்தியக் கலையின் மகத்துவத்தைப் பறைசாற்றவும், இளையோரின் மனதை இக்கலையின்பால் ஈர்க்கவும் இம்மையம் கலைப்படைப்புகளை அவ்வப்போது அரங்கேற்றம் செய்து வருகின்றது. ஆரம்பக் காலத்தில் இக்கலைக்கோயிலில் ஏறக்குறைய 100 மாணவர்கள் பயின்றனர். பின்னாளில் இவ்வெண்ணிக்கை சரிவு கண்டதிற்கான காரணிகள் பல உள்ளன. அதன் முதன்மையான காரணம் நிரந்தரமான பயிற்றுநர் இல்லாததே! இக்கலைக்கோயிலின் நோக்கத்தை மாணவர்களின் பெற்றோர்கள் புரிதலின்மையும் ஒரு முக்கியக் காரணமாகும். இங்கு நடத்தப்படும் பாடங்களுக்கு கட்டணம் வசூலிப்பது கட்டாயமானதாகும். இலவசம் அன்று.

இக்கலைக்கோயில்களில் 1977-ஆம் ஆண்டு ஜூன் மாதம் சிவா குடும்பம் (Shiva Family) எனும் கொள்கை தவத்திரு சுவாமி சாந்தானந்த சுவாமிகளால் ஆரம்பிக்கப்பட்டது. இதன் அடிப்படை நோக்கம்



யாதனில், இங்குப் பயிலும் மாணாக்கர்கள் சுலோகங்களைப் பொருள் அறிந்து, தெளிவாகவும் உச்சரிப்போடும் சொல்வதாகும். ஆரம்ப நிலையில், சிவா குடும்பம் ஞாயிறுதோறும் காலை 6.00 மணிக்கு தத்தம் இல்லங்களில் ஆராதனையும் பஜனையும் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அதன்பின், வெள்ளிக்கிழமை இரவு 7.00 மணிக்கு ஒன்று கூடி ஆராதனையும் பஜனையும் செய்வர். அச்சமயம், இத்தெய்வீகப் பயணத்தில் பயணித்தவர்கள் ஏறக்குறைய 150 குடும்பங்களாகும். காலஓட்டத்தில் இவ்வெண்ணிக்கை சரிவுக் கண்டு இன்று எஞ்சி நிற்பதோ 11 குடும்பங்களே! வேறிடம் புலம்பெயர்ப்பு, பணியிடம் மாற்றம் மற்றும், கல்விக்கற்கச் செல்லல் போன்ற முக்கியக் காரணங்கள் இந்நிலைக்கு வித்திட்டன.



இன்றைய பரபரப்பான வாழ்க்கைச் சூழ்நிலையிலும், சிவா குடும்பம் தங்களின் பாரம்பரியத்தைக் கைவிடவில்லை. ஞாயிறுதோறும் காலை வேளையில் எண் 5392 சி, டத்தோ பலேம்பாங் சாலை, புக்கிட் பாரு, 75150 மலாக்காவில் அமைந்துள்ள மலாக்கா நுண்கலைக் கோயிலில் ஒன்று கூடி, தாங்கள் வீட்டிலிருந்து கொண்டுவந்த சிவன் மற்றும், சக்தி விக்ரகத்திற்குப் பூசையும் பஜனையும் செய்கின்றனர். அதன்பின், அவ்விக்ரகங்களைத் தத்தம் வீட்டிற்கு எடுத்துச் சென்று தினமும் பூசையும் பஜனையும் செய்து, மறு ஞாயிறன்று மீண்டும் நுண்கலைக் கோயிலுக்குக் கொண்டு வந்து பூசையும் பஜனையும் செய்கின்றனர்.

இது ஒரு தொடர்நிலை இறை நடவடிக்கையாக நடைபெற்று வருகிறது. இத்தகு ஆராதனையின் வழி, சிவா குடும்ப உறவுகளிடையே வலுவான நெருக்கம் ஏற்படுவதோடு, கட்டொழுங்கோடு இறைபக்தியும்,



சுலோகங்களையும் பொருள் அறிந்து உச்சரிக்கவும் வாய்ப்பு ஏற்படுகின்றது. குழுவாகப் பஜனையோடு வழிபாடும் நடைபெறுவது ஆன்மவளர்ச்சிக்கு வித்திடுகிறது. இப்பரம்பொருள் வழிபாடு இம்மையத்தில் சீராக நடைபெற உந்துசக்தியாகத் திகழ்ந்தவர்கள் இம்மையத்தின் ஆலோசகர்களாக சேவையாற்றிய மறைந்த திரு. K.P. பாலகிருஷ்ணன் மற்றும், மறைந்த திரு. K.V. சதாசிவம் ஆகியோர். இவர்களின் பலன்கருதா சேவை என்றும் போற்றப்படும். இன்று, மலேசிய முன்னாள் மனிதவள அமைச்சர் டத்தோஸ்ரீ டாக்டர் ச.சுப்பிரமணியம், திரு. S. பழனிவேல் மற்றும், குமாரி N. அமுதா ஆகியோரின் வழிகாட்டலில் இம்மையம் தொடர்ந்து தம் கலைச்சேவையை மலாக்கா மண்ணுக்கு வழங்கி வருகின்றது.



மலாக்கா நுண்கலைக்கோயிலின் ஆரம்பக்காலச் சரித்திரத்தை நோக்கினால், சாந்தானந்த இலவச சிகிச்சையகம் செயல்பட்டதை அறியலாம். சிவா குடும்ப உறுப்பினரிடையே மருத்துவர்கள் பற்றாக்குறையினால் இத்திட்டத்திற்குப் பாதியிலேயே முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. அதோடு, அன்று தொடங்கி இன்றுவரை வருடந்தோறும் இலவச மருத்துவ முகாம் புறநகர்ப்பகுதிகளில் நடத்தப்பட்டுப் பாமர மக்களுக்குச் சேவையை வழங்கி வருகிறது. வருடந்தோறும் 7 ஏப்ரல், நுண்கலைக்கோயிலின் எல்லா மாணவர்களுக்கும் ஒரு பொன்னான நாள். மங்களகரமான திருநாள். ஆம். இக்கலைக்கோயிலின் அமைப்பாளர் தவத்திரு. சாந்தானந்த சுவாமிகளின் அகவை நன்னாள். கலைமகளுக்கு அவர் ஆற்றிய அரிய சேவையை நினைவுகூறும் வகையில், உலகெங்கும் உள்ள அவரின் கலைக்கோயில்களில் ஆடல்பாடல் மற்றும், பல்வகை உணவுகளோடும் மிகவும் விமரிசையாக அந்நாள் கொண்டாடப்பட்டு வருகின்றது.

**“வாழ்க அவரின் திருநாமம். தழைத்தோங்குக நம் கலைகலாச்சாரம்”**

**(கட்டுரையாளர்: டத்தின் டாக்டர் L.காந்திமதி பரமசிவம்)**

## 16 மலாக்கா வள்ளலார் சன்மார்க்கம்

மலாக்கா மாநிலத்தில் வள்ளலாரின் போதனைகளைப் பின்பற்றுபவர்கள் இவரின் பெயரில் பின்வருமாறு இரண்டு மையங்களை உருவாக்கி தொடர்ந்து சேவைகளைச் செய்து வருகின்றனர்

### 16.1 மலாக்கா வள்ளலார் சன்மார்க்கம்

*42-1, Jalan PJ 14, Taman Pengkalan Jaya, 75450 Bukit Katil, Melaka.*

**"அருட்பெருஞ்ஜோதி, அருட்பெருஞ்ஜோதி,**
**தனிப்பெருங்கருணை, அருட்பெரும்ஜோதி" மகாமந்திரம்**

என் கால்கள் மெல்ல அடியெடுத்து, உள்ளே சென்றபோது, திருவருட்பிரகாச வள்ளலாரின் மகாமந்திரம் காதில் ஒலிக்க, மையத்தின் தலைவர் திரு.இராஜமாணிக்கம் பாக்கியம் அன்போடு வரவேற்றார். என் முன்னே, "எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க " என திருவாக்கு அளித்த கருணைக் கடவுள் அருட்பிரகாச வள்ளலாரின் திருவுருவப்படம். அம்மகானுக்கு அவர் அருளிய "அம்பலத்தரசே அருமருந்தே" எனும் திருவருட்பாவைக் காணிக்கையாகச் செலுத்தினேன். பின்னர், மையத்தின் தலைமகனின் விவரங்களைச் செவிமடுத்தேன்.



சித்தர் வழிபாட்டில் ஈடுபாடுடைய திரு.இராஜமாணிக்கம் பாக்கியம் மற்றும், அவரின் சகாக்கள், 1998-இல் லக்ஷுமணா செங் ஹோா சாலையில் அமைந்திருந்த ஒரு கட்டடத்தில் மலாக்கா அகஸ்தியர் சன்மார்க்கத்தை அமைத்தனர். இவ்வமைப்பு மலாக்கா ராயாவிற்கு இடம்பெயர்ந்து, பின் செமாபோக் பெர்டானாவுக்கு மாறியது. 2002-இல் அது, மலாக்கா சன்மார்க்கம் எனப் பெயர் மாற்றம் கண்டு, மலேசிய நிறுவன ஆணையம் கீழ் பதிவுபெற்றது. 2010-இல் ஏற்பட்ட தலைமைத்துவப் பிரச்சினையினால் அதிலிருந்து விலகி, புக்கிட் கட்டிலில் புதிய அமைப்பை அவரும் அவரின் நண்பர்களும் உருவாக்கினர். சுவாமி தர்மலிங்கம் ஆலோசனையின் பேரில் இம்மையம் மலேசிய நிறுவன ஆணையம் கீழ் பதிவு செய்யப்பட்டது. இதே கட்டடத்தில், சூரிய யோகா மையமும் திரு.இராஜமாணிக்கம் பாக்கியம் தலைமையில் இயங்கி வருகிறது. இம்மையத்தில் 60 உறுப்பினர்கள் உறுப்பியம் பெற்றுள்ளனர்.

இம்மையத்தில் குருபூசையும் யோகா வகுப்பும் வியாழன் தோறும் நடைபெறுகிறது. வாய்ப்பு வரும்போது, சுவாமி தர்மலிங்கம், தமிழக வள்ளலார் பற்றாளர்கள் பொதிகை பிரியன், சாது ஜானகிராமன், சண்முகம் ஐயா போன்றோரின் அற்புதச் சொற்பொழிவுகள் இம்மையத்தில் நடைபெறுவது வழக்கம். அதோடு, மட்டுமின்றி, மாதத்தில் ஒரு ஞாயிறன்று தியானம், முத்திரை மற்றும், நோய் தீர்க்கும் முறைகள் பற்றிய விளக்கம் உறுப்பினர்களுக்கு வழங்கப்படுகிறது.



திருவருட் பிரகாச வள்ளலார் என்று அழைக்கப்படும் இராமலிங்க அடிகளாரின் கொள்கைகளில் ஜீவகாருண்யமும் பசியாற்றலும் முக்கியமானது. இம்மையப் பொறுப்பாளர்கள் இக்கொள்கைகளுக்கு முன்மாதிரியாக விளங்குகின்றார்கள். ஏழ்மை மக்களுக்கு மளிகைப் பொருட்களும் ஆசிரமம் வாழ் குழந்தைகளுக்கு உணவும் வழங்குவது இவர்களின் சமூகப் பங்கு. சன்னாசிமலை ஆண்டவர் வருடாந்திரத் திருவிழாவின்போது அன்னதானம் வழங்கும் நிகழ்வு பல ஆண்டுகளாகத் தொடர்கிறது.

மலேசியாவிலும் தமிழகத்திலும் யோகா கலையை நன்கு கற்றுத் தேர்ந்தார் திரு. இராஜமாணிக்கம். தொடர்ந்து, இவர் தமிழக யோகி இராமலிங்கத்திடம் மூன்றாண்டுகள் யோகா கலையைக் கசடறக் கற்றார். இவரை இக்கலையில் முழுமைப் பெறச் செய்த மையம் மதுரையிலுள்ள சுவாமி சிவானந்தா யோகா ஆராய்ச்சி மையம். இன்று ஜொகூர், மலாக்கா மற்றும், நெகிரி செம்பிலானில் நம் பாரம்பரியக் கலையைக் கற்றுக்கொடுக்கும் இம்மையத்தின் தலைவர் திரு.இராஜமாணிக்கம் பாக்கியத்தின் பங்கு போற்றுதலுக்குரியது. காலத்தை வென்ற வள்ளலார் மகானின் நெறியானது இன்றைய தொழிற் புரட்சி 4.0 உலகிற்குப் பெரிதும் ஏற்புடையனவாகும். அந்நெறியை மலாக்கா வாழ்மக்களின் வாழ்க்கை நெறியாக்க, இம்மையத்தின் நோக்கத்தை நாம் வணங்குகிறோம்.



**“மனித இனத்திற்கு செய்யும் தொண்டே மோட்சத்தை அடைவதற்கான வழி”**

**வள்ளலார் அருள்மொழி.**

## 16.2 மலாக்கா வள்ளலார் சன்மார்க்கம்

*No: 19-1, SP 1, Taman Semabok Perdana, 75150 Melaka.*



**“அருட்பெருஞ்ஜோதி, அருட்பெருஞ்ஜோதி, தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி”**

**மகாமந்திரம்**

மனிதன் மாமனிதனாக வாழ்ந்து மரணமிலாப் பெருவாழ்வு வாழ வேண்டும் எனும் புனித நோக்கத்திற்காக இறைவனால் வருவிக்கவுற்றவர் திருவருட்பிரகாச வள்ளலார். வாழையடி வாழை என வந்த திருக்கூட்ட மரபில் வந்தவர், திருவருட் பிரகாச வள்ளலார் என்று அழைக்கப்படும் இராமலிங்க அடிகளார். இம்மகானின் போதனைகளை மலாக்கா மக்களின் அடிநாதமாக்க, அவரின் பக்தர்கள் வள்ளலார் சன்மார்க்க மையத்தை 7-11-2017 இல் மலாக்கா மாநகரில் நிறுவினர்.

“நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து, மறைமொழி காட்டி விடும்” (திருக்குறள்-28) என்பதற்கொப்ப வள்ளலார் பெருமான் அருளியப் போதனைகளைப் பாமர மக்களிடம் கொண்டு செல்லும் ஊடகமாகத் திகழும் இம்மையம் அமைய பல நல்லுள்ளங்கள் கரம் கோர்த்துள்ளனர் என்பது மகிழ்ச்சியான செய்தி. அவ்வரிசையில் திரு.மணிமாறன் பெரியசாமி தலைமைத்துவத்திற்குப் பக்கபலமாக இருந்தவர்கள் திருமதி பத்மா, திருமதி சாந்தி சுப்ரமணியம், திருமதி மகேஸ்வரி செல்வம், திருமதி உமாதேவி, திருமதி பரமேஸ்வரி, திரு. மணிமன்னன், திரு.மேகநாதன், திரு. நீலகண்டன், திரு. முத்துசாமி மற்றும், டாக்டர் சி. பிரேமஜோதி போன்றோர். இவர்களின் எல்லையில்லா உதவிகள், இம்மையம் தொடர்ந்து பீடுநடைபோட உந்துச் சக்தியாக உள்ளன.



இம்மையத்தில் இரு பெரும் நிகழ்வுகள் சுத்த சன்மார்க்க சங்கத்தைச் சார்ந்தவர்களும் பொதுமக்களும் கலந்து கொண்டு அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் அருளைப் பெறுவர். ஒன்று, திருஅருட்பிரகாச வள்ளலார் இப்பூவுலகிற்கு வருவுற்ற நாள் விழா (5-10-1823). பிரிதொன்று, அம்மகான் ஜோதியான நாள் விழா (30-1-1874). இத்திங்கள்களில் சிறப்புப் பூசையோடு ஆன்மிகச் சொற்பொழிவும் நடைபெறும். வள்ளலாரின் சீரியத் தொண்டர்களான தவத்திரு தர்மலிங்க சுவாமிகள், திரு.செல்வம் மற்றும், ஆய்நர் திருச்செல்வம் போன்றோரின் தெய்வீகத் தன்மை அருளுரை வந்தோரின் மனதைப் பக்குவப்படுத்தும் சாதனங்களாகும். வியாழன் தோறும் மாலையில் நடைபெறும் குருபூசையும், ஞாயிறுதோறும் நடைபெறும் சிறப்புப் பூசையோடு கூடிய அன்னதானமும் வள்ளலார் பெருமகனின் சீடர்களுக்கு அருட்பிரதாசமாகும். மக்களின் மிகுந்த துயரங்களில் ஒன்றான பசியைப் போக்கிட வள்ளலார் வழிவகுத்தார். அந்நெறிக்கொப்ப, ஆண்டுதோறும் இம்மையம் புக்கிட் லிந்தாங் தமிழ்ப்பள்ளி மாணவர்களுக்கு ஒரு நாளில் வள்ளலாரின் போதனையோடு பசியாற்றல் நிகழ்வையும் செய்து வருகின்றனர்.

மக்கள் தொண்டே மகேசன் தொண்டு அல்லவா! இதுகாறும் ஏழு முறை இம்மையத்தின் உறுப்பினர்கள் தமிழ்நாட்டில் கடலூர் மாவட்டத்தில் வடலூர் அருகே அமைந்துள்ள சமரச சன்மார்க்கச் சங்கத்திற்கு யாத்திரை சென்றுள்ளனர். வள்ளலார் வாழ்ந்த அப்புண்ணிய பூமியைத் தரிசனம் செய்ததில் அனைவருக்கும் பேரானந்தம்.



திருஅருட்பிரகாச வள்ளற் பெருமானாரின் உபதேசங்கள் அனைத்தும் அருட்தன்மை உடையனவாகவும் உள்ளங்கை நெல்லிக்கனி போல உண்மை நிலையை உணர்த்தக் கூடியனவாகவும் உள்ளன. மேலும், எளியோரும் ஏற்றம் பெற நல்வழி முறைகளைக் குன்றின் மேலிட்டத் தீபம் போன்று வெளிப்படக் காட்டுவனவாகும். இதனை மலாக்கா வாழ் மக்களிடம் கொண்டு சேர்ப்பதே எங்களின் லட்சியம் எனக் கூறுகிறார் மன்றத்தின் தலைமகன்.

**“ என்னை பின்தொடருங்கள்! உங்களை இறைவனின் பிள்ளையாக மாற்றிக் காட்டுகிறேன்” வள்ளலார்.**



**(கட்டுரையாளர்: திரு செல்வராஜன் ரெங்கசாமி)**

| 17 | ஸ்ரீ கணேசர் பு தி யுவன் பக்தர்கள் சங்கம் |
|---|---|
| | *BB 400, Jalan Melaka Baru, Melaka Baru, 75350 Batu Berendam, Melaka.* |



ஸ்ரீ கணேசருக்கு அர்ப்பணிக்கப்பட்டுள்ள இந்த அமைப்பு மிகுந்த சிறப்பு வாய்ந்தது. காரணம் மிக அதிகமான சீன அன்பர்கள், புத்தச் சமயத்துடன் ஸ்ரீ கணேசர் பக்தர்களாகவும் இந்த அமைப்பில் வலம் வருகிறார்கள். கணேசருக்கு உரியச் சடங்குகளைச் செய்து வழிபடுகின்றனர். புத்தர்-இந்துச் சமயங்கள் ஐக்கியமாகிச் செயல்படுவதை இங்குப் பார்க்கலாம்.

ஸ்ரீமதி செரீனா ஹோ எனும் மாது இதன் அமைப்பாளர். சமயத் தலைவராக இருந்து பஜன், தியானம் மற்றும் பூஜைகளை முன்னின்று நடத்துகிறார். ஒவ்வொரு புதன்கிழமை இரவு எட்டு மணிக்கு எல்லா பக்தர்களும் கூடி பஜன் மற்றும் தியானத்தில் ஈடுபடுகிறார்கள். பக்தர்களுக்குத் தேவையென்றால், அவர்களுக்கு வழிகாட்டவும், ஆலோசனை கூறவும் நேரத்தை ஒதுக்கி தனிப்பட்ட முறையில் உதவிகளைச் செய்கிறார். இது அவர்களின் மன அழுத்தங்களைக் குறைக்க மிகவும் உதவுவதாக அவர் கூறுகிறார். பக்தர்கள் விரும்பினால் மற்ற நாட்களிலும், மையம் திறந்திருக்கும் சமயம், இரவு பத்து மணிவரையில் வருகைத்தந்து வழிபடலாம்.

ஸ்ரீமதி செரீனா ஹோ, ஒரு பாபா-நியோன்யா வழிவந்தவர்; புக்கிட் ரம்பையைச் சேர்ந்தவர். 2000-ஆம் ஆண்டு வாக்கில் அவரின் நண்பரின் வற்புறுத்தல் காரணமாக மலாக்கா செட்டி ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் கோயிலில் நடைபெற்ற மாரியம்மன் திருவிழாவிற்குச் சென்று, அதன்வழி உதித்த ஈடுபாடு காரணமாகச் சில ஆண்டுகள் காவடி எடுத்துள்ளார். அச்சமயம் அவரினுள் ஒருவித இனம்புரியா உணர்வு ஏற்பட்டதை உணர்ந்ததாகக் கூறுகிறார். இதன் அடிப்படையிலேயே, அக்கோயிலில் அவர் இருந்த ஒரு சமயம், திடீரென்று அவரினுள் ஸ்ரீ கணேசர் புகுவதுபோன்ற உணர்வு ஏற்பட்டதாகவும், அவர் யானை நடப்பது போன்ற பாவனையில் நடந்ததாகவும், சமஸ்கிரத மொழியில் மந்திரங்களை உச்சரித்ததாகவும், அதைக் கண்டு அருகில் இருந்தவர்கள் ஆச்சர்யப்பட்டதாகவும் கூறுகிறார். இந்தச் சம்பவமே அவர் வாழ்க்கையில் பெரிய மாற்றத்தைக் கொண்டு வந்தது எனக் கூறுகிறார்.



இந்த அனுபவத்திற்குப் பிறகு, அவரின் சமயக் குரு, ஜோகூர், பத்து பஹாட் புத்தர் கோயிலைச் சேர்ந்த மாஸ்டர் லிம் அவர்களிடம் இந்த அனுபவத்தை விளக்கியபிறகு, அவர் இவருக்கு ஆலோசனை கூறினார். ஸ்ரீமதி செரீனா ஹோ ஸ்ரீ கணேசரின் ஆசீர்வாதம் பெற்றிருப்பதால், அவரின் வழிகாட்டல்படியே நடந்து பக்தர்களுக்கு உரிய சேவைகளைச் செய்யத் தூண்டினார்.





அத்தருணத்திற்குப் பிறகு ஸ்ரீமதி செரீனா ஹோ ஸ்ரீ கணேசரின் பக்தையாக முழு நேரமும் செயல்படலானார். தம்மை நாடிவரும் பக்தர்களுக்குப் பலவழிகளிலும் முன்னுதாரணமாகத் திகழ்ந்தார். புத்த-இந்துச் சமய நடைமுறைகளை ஐக்கியமாக்கி ஒரே கூரையின் கீழ் கொண்டுவந்தார். பக்தர்கள் எண்ணிக்கை கூடவே, தமது வீட்டில் போதுமான வசதிகள் இல்லாததால், தற்பொழுதுள்ள மையத்திற்கு 2015-ஆம் ஆண்டில் இந்த அமைப்பைக் கொண்டுவந்தார்.

இந்த அமைப்பை 'ஸ்ரீ கணேசர்-பு தி யுவன் பக்தர்கள் சங்கம்' எனும் பெயரில் சங்கப் பதிவகத்தில் பதிந்துள்ளார். பெரும்பாலான பக்தர்கள் சீன வம்சாவளியினர். பெரும்பாலும் வெளி மாநிலங்ககளைச் சேர்ந்த ஒரு சிறு எண்ணிகையில் மட்டுமே இந்திய வழிவந்த இந்துக்கள் பக்தர்களாக இருக்கிறார்கள். வெளி மாநிலங்களிலிருந்து புத்த-இந்து சமயத்தினர் இந்த மையத்திற்கு ஆர்வத்துடன் வருகை தருகின்றனர். குறிப்பாக இந்த அமைப்பின்வழி நடைபெறும் சமய நடவடிக்கைகளில் காணப்படும் கட்டொழுங்கு, நேரம் தவறாமை, ஒழுங்கு நிறைந்த பக்தர்களின் ஆடைகள், ஒற்றுமை, அமைதியையும் சுத்தத்தையும் பாதுகாக்கும் பாணி பலரையும் கவர்ந்து இந்த அமைப்பை நாட வைக்கிறது என்று கருதப்படுகிறது.



இந்த அமைப்பு விநாயகர் சதுர்த்தி, விசாகத் தினம், ஜூலை மாதத்தில் அமைப்பின் தோற்ற ஆண்டுத் திருவிழா போன்றவற்றுடன். தீபாவளி, பொங்கல் போன்ற சில இந்துத் திருவிழாக்களையும் அதன் வசதிக்கேற்ப கொண்டாடுகிறது.

இந்த அமைப்பின் சிறப்பு, ஒவ்வொரு புதன் இரவு பக்தர்களின் பஜன், தியான நிகழ்வுடன் கூடிய பூஜையாகும். இத்துடன் தேவைப்பட்டோருக்கு தனிப்பட்ட முறையில் கொடுக்கப்படும் ஆலோசனைகள்; வண்ணம் மிகுந்த திருவிழாக்கள்; அனைவற்றிலும்





பக்தர்கள் கட்டொழுங்கைக் கடைபிடிக்கும் பாணி பலரையும் கவர்ந்துள்ளது. திருவிழாச் சமயங்களில் மட்டுமே ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் கோயில் குருக்கள் சடங்குகளை நடத்த அழைக்கப்படுகிறார். மற்ற எல்லா சமயங்களிலும் ஸ்ரீமதி செரினா ஹோாவே சமயத் தலைவராகப் பொறுப்பேற்று நடத்துகிறார்.

இத்தகைய தலைமையைக் கொடுப்பதற்குத் தம்முள் வீற்றிருக்கும் ஸ்ரீ கணேசரின் அருளே காரணம் எனவும், வேறு எத்தகைய பயிற்சியும் பெற்றதில்லை எனவும் அவர் கூறுகிறார். அவருடைய புத்த சமய குரு மாஸ்டர் லிம்மின் ஆசியுடன் நடந்து கொள்வதாகக் கூறுகிறார். தற்பொழுது அவரின் குடும்பத்தில் அனைவரும் இவரின் தலைமையில் இந்த அமைப்பில் ஒற்றுமையாக இணைந்து, மற்றவர்களுக்கு முன்மாதிரியாக, பணியாற்றுகின்றனர்.

ஸ்ரீமதி செரீனா ஹோ அவருடைய எதிர்காலத் திட்டத்தைப் பற்றி சொல்லும் பொழுது, இந்த அமைப்பில் உள்ளவர்களுக்கும், பல இடங்களிலிருந்தும் தம்மை நாடி வருபவர்களுக்கும், நல்வழி காட்ட ஸ்ரீ கணேசரின் ஆசி தமக்குத் துணையாக இருக்கும் எனவும், வருங்காலத்தில் புத்தர் - கணேசர் இணைந்துள்ள கோயில் ஒன்றைக் கட்டும் எண்ணம் ஈடேறவும் ஆசி கிடைக்கும் எனவும் நம்பிக்கை தெரிவித்தார்.

இந்த அமைப்பின் நடவடிக்கைகள், மலாக்கா செட்டிகளின் ஸ்ரீ மகா முத்து மாரியம்மன் ஆலயம், மலாக்கா பாபா-நியோன்யா சமூகம், உள்ளூரில் நீண்ட நாட்கள் வசித்துவரும் சீனர்கள் ஆகியவற்றின் சங்கமமாகவே நாம் பார்க்கலாம். எத்தகைய கட்டாயமும் இல்லாமல் இயல்பாகவே பல வண்ணங்களையும் உள்ளடக்கிய இத்தகைய சங்கமம் மலாக்காவிற்கு மிகப் பெரிய தனித்துவமான சிறப்பாகும்.

**(கட்டுரை: திரு தொ.க.நாராயணசாமி)**

| 18 | **இந்து மின் சுடலை** |
| --- | --- |
| | *JELUTONG, BATU BERENDAM, MELAKA.* |

மலாக்கா இந்தியர்களின் நீண்ட கால கோரிக்கையை நிறைவேற்றும் வகையில் 2006-ஆம் ஆண்டு மலாக்கா மாநகர் மன்றம் ஜெலுத்தோங்கில் மின் சுடலையை அமைக்க அனுமதியை வழங்கியது. ஆரம்பத்தில் மின் சுடலையை நிர்வகிக்கும் பொறுப்பை மலாக்கா இந்து சங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டது.




டத்தோ எஸ்.கே.ஆர்.எம். துரைராஜ், திரு. கிருஷ்ணன் மற்றும், இந்து சங்க பொறுப்பாளர்கள் மின் சுடலையின் நிர்வாகத்தைத் திறம்பட கவனித்துக் கொண்டனர். அவர்களது முயற்சியால் மேக்னம் போன்ற அமைப்புகளும் பிரமுகர்களும் ஆரம்பக் கட்டப் பணிகளுக்கு வேண்டிய நிதி ஆதாரத்தை வழங்கி உதவினர். இதனைத் தொடர்ந்து முன்னாள் அமைச்சர் டத்தோஸ்ரீ எஸ்.சுப்ரமணியம் அவர்களின் பெரு முயற்சியால் மின் சுடலைக்கான கட்டடமும் பிற வசதிகளும் கிடைக்கப்பெற்றன.







சில காலத்துக்குப் பிறகு, மின் சுடலையை நிர்வகிக்க தனி ஒரு அமைப்பு இருப்பது சிறப்பாக இருக்கும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டதால் 2010 ஆம் ஆண்டு PERTUBUHAN PENGURUSAN RUMAH PEMBAKARAN MAYAT, JELUTONG, MELAKA என்ற ஓர் அமைப்பு பதிவு செய்யப்பட்டது. இந்த அமைப்புக்கு அப்போதைய மாநில ம.இ.கா தலைவர் டத்தோ வீரா ஆர்.இராகவன் தலைமையில் டத்தோ வீரா ஆர்.பெருமாள், டத்தோ ஜி.கண்ணன் டத்தோ கே. இராஜன், மறைந்த டத்தோ எஸ்.கே.ஆர்.எம். துரைராஜ், டத்தோ சந்திரகாந்த் அவலானி, திரு ஏ.கிருஷ்ணன் ஆகியோரை உள்ளடக்கிய ஒன்பது பேர் கொண்ட செயற்குழு தேர்வு செய்யப்பட்டு மின்சுடலை நிர்வகிக்கப்பட்டது.

காலப்போக்கில் கொண்டு வரப்படும் சடலங்களின் எண்ணிக்கை அதிகரித்ததால் காத்திருக்கும் நேரமும் அதிகரித்தது. இதனைத் தவிர்க்கும் பொருட்டு மேலும், ஒரு தகன இயந்திரத்துக்கான வேண்டுகோள் அப்போதைய பிரதமர் டத்தோ ஸ்ரீ நஜிப் ரசாக் அவர்களிடம் முன் வைக்கப்பட்டது. நிர்வாகத்தின் வேண்டுகோளை ஏற்ற அவர், 2014-ஆம் ஆண்டு RM 450,000 வழங்கி உதவினார். இந்தப் பணத்தைக் கொண்டு மேலும், ஒரு தகன இயந்திரம் வாங்கப்பட்டதோடு கேஸ் சிலிண்டர்கள் திருடப்படும் சம்பவங்களைத் தவிர்க்க மின் சுடலையைச் சுற்றி உயரமான சுவர் எழுப்பப்பட்டதுடன் சடலத்தைச் சுத்தப்படுத்துவதற்கான கூடுதல் அறை, வருகையளிப்போருக்கான கூடுதல் வசதிகள் ஆகியவற்றுடன் மேலும், சில மேம்பாடுகளும் மேற்கொள்ளப்பட்டன. இந்தச் செலவுகளுக்காக நிர்வாகம் சொந்தப் பணத்தில் ஏறக்குறைய 4,000.00 ரிங்கிட்டைச் செலவழிக்க நேர்ந்தது. இதன் பின் மின் சுடலை சீராக இயங்கியது.













2019-இல் புதிய அரசாங்கம் பொறுப்பேற்ற போது, மின் சுடலை நிர்வாகம் புதிய பொறுப்பாளர்கள் வசம் ஒப்புவிக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை எழத் துவங்கியது. அதற்கேற்ப, ஆகஸ்ட் மாதத்தில் மின்சுடலை அதன் உரிமையாளரான MAJLIS PERBANDARAN HANG TUAH JAYA வசம் ஒப்படைக்கப்பட்டது. அதற்கு முன் மின் சுடலையில் இருந்த சில சில்லறை குறைபாடுகள் சரி செய்யப்பட்டதுடன் அலுவலகத்தின் வசதிகளும் மேம்படுத்தப்பட்டன..

**(கட்டுரை : டத்தோ வீரா ஆர். இராகவன்)**

## நன்றியுரை

இந்த ஆய்வு முழுமைப் பெற பலருடைய உழைப்பும் ஒத்துழைப்பும் தேவைப்பட்டது. அவர்கள் அனைவருக்கும் இங்கே தனித்தனியாகக் குறிப்பிட்டு நன்றி கூறவியலாது.

எனினும், இந்த ஆய்விற்கு ஒத்துழைப்புக் கொடுத்த கோயில் தலைவர்களுக்கும், நிர்வாகத்தினருக்கும் எங்களின் முதல் நன்றி உரித்தாகுக. சிலரின் ஒத்துழைப்பு சொற்பமாக இருந்தாலும், எங்கள் ஆய்வாளர்களைச் சந்திக்கச் சம்மதித்ததே பெரிய அனுகூலம். மிகப் பலர் தரவுகளையும், படங்களையும் அன்புடன் கொடுத்துதவினர் என்பதே சிறப்பு.

இந்த ஆய்வு சம்பந்தமாக சில அரசு நிர்வாகிகளுடன் சந்தித்துப் பேச முடிந்தது. ஒத்துழைப்புக் கொடுத்து எங்கள் ஆய்வாளர்களைச் சந்திக்க முன்வந்த அலுவலாளர்களுக்கு நன்றி. குறிப்பாக மலாக்கா மாநில சங்கங்களின் பதிவகத்தின் இயக்குனர் அருமையான ஒத்துழைப்பு கொடுத்தார்.

மலாக்கா மாநில அரசு அளவில், தொடக்கத்தில் இந்த ஆய்விற்கு முழு ஆதரவு வழங்கிய முதல்வர் மாண்புமிகு அட்லி சஹாரி அவர்களுக்கும், சட்டமன்ற உறுப்பினர் மாண்புமிகு திரு.ஜி.சாமிநாதன், இன்ஸ்டிடுட் துன் பெராக் முதன்மை அதிகாரி திரு. சைபுல் அன்வார், ஆகியோரை மறக்க முடியாது. மாண்புமிகு ஜி.சாமிநாதன் மாநில அரசு சார்பில் ரி.ம.6,000 இந்த ஆய்வின் தொடக்கத்திற்காகக் கொடுத்ததையும், தொடர்ந்து ஆதரவுக் கொடுப்பதாக வாக்களித்ததையும் மறக்க இயலாது. இவர் அலுவலத்தில் பணிபுரிந்த உதவியாளர்கள் குமாரி ஜெயசுதா, குமாரி தனம், குமாரி தமிழ்ச்செல்வி போன்றோரின் உதவியும் அளப்பரியது.

மாநில அரசு மாற்றலாகிய பிறகு, புதிய முதல்வர் மாண்புமிகு டத்தோஸ்ரீ உத்தாமா ஹாஜி சுலைமான் முகமது அலி அவர்களையும், இந்திய நலனைப் பிரதிநிதிக்கும் டத்தோ ச.மகாதேவன் அவர்களையும் சந்தித்து இந்த ஆய்வு சம்பந்தமாக விளக்கம் கொடுத்தோம்; எழுத்து மூலமான விண்ணப்பங்களைக் கொடுத்தோம்; எனினும் தார்மீக ஆதரவு மட்டுமே கொடுத்ததற்காக அவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளோம்.

இந்த ஆய்வைத் தொடங்குமுன், கருத்துப் பரிமாற்றத்திற்காக மலாக்கா மாநிலத்திலுள்ள இந்து, தமிழ் அமைப்புகளின் தலைவர்களையும், தனி ஆர்வலர்களையும் அழைத்து சில சந்திப்புகளை வைத்தோம். வருகை தந்து கருத்துகளைக் கூறிய அனைவருக்கும், குறிப்பாக எதிர்மறையான கருத்துகளை கூறி எங்களை முன்னெச்சரிக்கையுடன் நடந்துகொள்ளத் தூண்டியவர்களுக்கும் நன்றி நவில்கிறோம்.

எங்கள் கூட்டங்களை நடத்த மனுமுவந்து தங்கள் அலுவலகத்தில் அமைந்துள்ள கூட்டம் நடத்தும் வசதிகளை இலவசமாகக் கொடுத்துதவிய, மலாக்கா இந்து சங்கத்தினருக்கும், மலாக்கா இந்தியர் கல்வி பண்பாட்டு விளையாட்டு இயக்கத்திற்கும் சிறப்பான நன்றியை நவில்கிறோம்.

சில கோயில் தரவுகள், படங்களை அனுப்பி உதவிய திரு. சிதம்பரம் பிள்ளை, திரு சந்துரு போன்றவர்களுக்கும், கோயில்களுக்கு அழைத்துச் சென்றும், படங்களை அனுப்பியும், உதவிய திரு.சரவணன், திரு கிருஷ்ணன் குட்டி, திரு தாஸ், போன்றோருக்கும் நன்றி உரித்தாகுக. இந்துச் சமயம் சார்ந்த அமைப்புகளின் கட்டுரைகளை எழுதி கொடுத்தவர்களுக்கும் அவற்றின் தலைவர்களுக்கும், கட்டுரைகளை எழுத உதவியவர்களுக்கும், ஆய்வாளர்களைத் தங்கள் மையங்களுக்கு வருகைதந்து கலந்துரையாட வழிசெய்த தலைவர்களுக்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். கோயில்களில் குருக்களின் பங்கைப் பற்றிய கட்டுரையை எழுதிக் கொடுத்த சிவஸ்ரீ சு.குமார் சிவாச்சாரியார் அவர்களுக்கும் நன்றி.

மலேசிய இந்துதர்ம மாமன்றத் தலைவர்களுக்கும் மலாக்காவில் சமய ஆசிரியர்களுக்கான சிறப்பு பட்டறைகளை, இந்த ஆய்வு நடத்தப்பட்ட சமயம், நடத்தியதற்காக நன்றி நவில்கிறோம். குறிப்பாக இம்மன்ற நிர்வாகத்தைச் சேர்ந்த திரு. சோ. சுப்பிரமணி அவர்கள் சில மலேசிய ரீதியிலான தரவுகளைக் கொடுத்துதவியதை மறக்கவியலாது.

இந்த ஆய்விற்கு முதல் வித்திட்டவர் டத்தோ பேராசிரியர் முனைவர் பரமசிவம் முத்துசாமி அவர்கள்தான். அவர் தலைமையில் ஆய்வுக் குழுவை அமைத்து நடவடிக்கையில் ஈடுபட்ட சமயம், தரவுகளைச் சேர்க்க கோயில்களுக்குச் சென்று கோயில் தலைவர்களையும், நிர்வாகிகளையும் சந்தித்து ஆய்வுப் பாரங்களைப் பூர்த்திசெய்து உதவியவர்களை இங்கு குறிப்பிட்டே ஆகவேண்டும். திரு.தொ.க.நாராயணசாமி (55); திரு.செல்வராஜன் ரெங்கசாமி (35); டத்தோ வீரா இரா.பெருமாள் (14); திரு. கிருஷ்ணன் கெங்கன் (11); திரு. வெ.ஆனந்தகுமார் (8); டத்தோ மேஜர்(R) சேகர் (8); திரு. சு.குணசேகரன் (6); திரு.ரெ.கணேஷ் (2); திரு பெ.வேலாயுதம் (2); திரு.ராமன் (2); திரு.குமார் ஆறுமுகம் (2); திரு மதியழகன் (1); ஆகியோர் இப்பணியைச் செய்து உதவினர். கோயில்களைப் பற்றிய குறிப்புகளையும், படங்களையும் இவர்கள் திரட்டிக் கொடுக்கப் பெரிதும் உதவினர்.

டத்தோ பேராசிரியர் முனைவர் மு.பரமசிவம் அவர்களை ஆலோசகராகக் கொண்ட மலாக்கா இந்துக் கோயில்களைப் பற்றிய புத்தக வெளியீட்டுக்குழு கோயில் தரவுகளின் அடிப்படையிலான ஆய்வைச் செய்து, இந்த நூலுக்குத் தேவையான முறையில் எழுத்துப் படிகளில் திருத்தங்களைச் செய்தும் உதவியவர்களில் முக்கியமானவர்கள் திரு.தொ.க.நாராயணசாமி, டத்தோ வீரா இரா.பெருமாள், திரு.ரெ.செல்வராஜன் ஆகியோர். கோயில் புகைப்படங்களைச் சேகரித்து உதவியவர் திரு.கிருஷ்ணன் கெங்கன். படிகளையும், படங்களையும் கணினியில் முறையாக அமைத்துக் கொடுக்கும் பணியை டத்தோ வீரா இரா.பெருமாள் செய்துப் பேருதவி புரிந்தார்.

இந்தப் பணியைச் செய்து முடிக்க எங்கள் ஆய்வுக் குழுவிற்கு பலர் தன்னார்வ ரீதியில் உதவியுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் நன்றி. ஆய்வுக் குழுவினர் அனைவரும் தன்னார்வ ரீதியில் இந்தப் பணிகளைச் செய்து முடித்துள்ளார்கள் என்பதே சிறப்பு.

எனினும், இந்த ஆய்வு 2020-ஆம் ஆண்டு மத்தியிலேயே முடிந்து, அந்த ஆண்டு இறுதிக்குள் எழுத்து வேலைகளெல்லாம் முடிவுற்ற போதும், இந்த நூலைப் பிரசுரிப்பதில் தாமதம் ஏற்பட்டது. கோவிட் 19 தொற்றும் அதனால் அமலாக்கப்பட்ட நடமாட்டக் கட்டுப்பாடுகளும் ஒரு புறம் நம் நடவடிக்கைகளை ஒடுக்கிய வேளை, மறுபுறம் நூலை அச்சடிக்கப் போதுமான நிதியைத் தேடுவதிலும் சறுக்கல் இருந்தது. நாங்கள் அணுகிய பலர் தயக்கம் காட்டினர் என்பதாலும் இந்தத் தாமதம் ஏற்பட்டது. இப்பொழுது, எங்களின் முயற்சியைக் கைவிடாமல், எங்களின் சொந்த முயற்சியிலேயே, 2022-ஆம் ஆண்டு தொடக்கத்தில், இந்த நூலை தமிழிலும், மலாய் மொழியிலும் வெளியிடுகிறோம்.

இடைப்பட்ட காலக் கட்டத்தில், சில கோயில்கள் சம்பந்தமான விஷயங்கள் நடந்தேறின. கோவிட் 19 பெருந்தொற்றின் காரணமாக மிகக் கடுமையான விதிகளுடன் கூடிய நடமாட்டக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டதால் கோயில்கள் வழக்கமான முறைகளில் செயல்பட முடியவில்லை. பல கோயில்கள் பெரும் முடக்கத்திற்குள்ளாயின. பலவற்றால் குருக்களுக்கும் மற்ற பணியாளர்களுக்கும் ஊதியம் முறையாகக் கொடுக்க முடியவில்லை. பல நிர்வாகச் செலவுகளையும் ஈடுகட்ட முடியாத நிலைமை நிலவியது.

மலேசிய அரசாங்கம், தனது ஒற்றுமைத் துறை அமைச்சின் வழி சிறிய உதவித் தொகையை, மலேசிய இந்து சங்கத்தின் துணையோடு, மலேசிய சங்கப் பதிவகத்தில் பதிவாகியுள்ள கோயில்களுக்கு மட்டும், பெரிய-நடுத்தர-சிறிய கோயில்களின் நிலைமைகளுக்கேற்ப ஒவ்வொரு கோயிலுக்கும் RM1,500 முதல் RM2,600 வரையிலான மான்யங்களை வழங்கியது. வரலாற்றில் இத்தகைய உதவி கொடுக்கப்பட்டது இதுவே முதல் முறை. எனினும் அறங்காப்பாளர்களைக் கொண்ட கோயில்களுக்கு இந்த உதவி கிடைக்காதலால், வறிய நிலையிலுள்ள மலாக்கா செட்டிச் சமூகத்தின் பத்து கோயில்களுக்கும் இந்த உதவி கிட்டவில்லை! அறங்காப்பாளர்களைக் கொண்ட கோயில்கள் அனைத்தும் செல்வம் கொழித்த கோயில்கள் என எண்ணுவது, குறிப்பாகக் கடுமையான நடமாட்டக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ள காலத்தில், சரியாகாது.

அடுத்து, மலாக்கா மாநிலத்தில், மாநில அரசைத் தேர்ந்தெடுக்க பொதுத் தேர்தல் கடந்த 20.11.2021 ஆம் நாள் நடைபெற்று, தேசிய கூட்டணி மாபெரும் வெற்றியை, அதாவது சட்டமன்றத்திலுள்ள 28 இடங்களில் 21 இடங்களில் வென்று, ஆட்சி அமைக்கும் வாய்ப்பைப் பெற்றுள்ளது. இந்த வெற்றியினால், மாநில இந்துக் கோயில்களைச் சார்ந்த பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுவதற்கும், பொதுவாக இந்துக்களைச் சூழ்ந்துள்ள பல இன்னல்களைக் களையவும் மாநில அரசு அக்கறை காட்டி தீர்வுகளைக் காணும் என நாம் நம்புவோம்.

இறுதியாக, இந்த ஆய்வு முயற்சிக்கு உறுதுணையாக இருந்து பல இன்னல்களைக் கடந்து வெற்றிபெற வழிகாட்டிய இறைவனுக்குச் சிரம் தாழ்த்தி எங்கள் நன்றியைச் சமர்ப்பிக்கிறோம். நல்ல தாளில், வண்ணத்தில் இரு மொழிகளில் வெளிவந்துள்ள இந்த நூல் நம் சமுதாயத்திற்கு ஓர் ஆவணமாக நீண்ட நாட்களுக்குத் திகழ்ந்து கோயில் மேம்பாட்டிற்கும் மட்டுமல்லாது, இந்துச் சமய வளர்ச்சிக்கும் துணை நிற்கும் என நம்புகிறோம். இந்த நூல் வெளிவர எத்தகைய சிறு உதவிகளையும் வழங்கிய அனைவருக்கும் எங்கள் நன்றி உரித்தாகுக!

***மலாக்கா இந்துக் கோயில் ஆய்வுக் குழு,***
***மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கம்,***
***மலாக்கா.***
***ஏப்ரல், 2022***

# நன்றி

மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கத்தின் அறைகூவலுக்குச் செவிசாய்த்து, இந்த ஆய்வு நூலைத் தமிழிலும், மலாய் மொழியிலும் அச்சடிக்க, 31.3.2022 க்குள் நிதி உதவி வழங்கி துணை நின்ற பின்வரும் நன்கொடையாளர்களுக்கு எங்களின் இதயங்கனிந்த நன்றியைப் பதிவு செய்கிறோம்

1. YB Tuan Khoo Poay Tiong, Ahli Parlimen Kota Melaka ........ RM 10,000.00
2. Yayasan Kemajuan Insan Malaysia ........ RM 5,000.00
3. YB Datuk Seri Shamsul Iskandar Md Akin, Ahli Parlimen Hang Tuah Jaya ........ RM 5,000.00
4. Y.Bhg. Tuan M.Thankaraju, Kuala Lumpur ........ RM 3,000.00
5. Y.Bhg. Dr.Selva, Melaka ........ RM 3,000.00
6. Pacific Food Productions Sdn.Bhd, Melaka ........ RM 2,000.00
7. Y.Bhg. Datuk V.Subramaniam, Melaka ........ RM 1,000.00
8. Y.Bhg. Tuan R.Selvarajan, Melaka ........ RM 1,000.00
9. Penderma Ikhlas, Melaka ........ RM 1,000.00
10. Y.Bhg. Tuan Ilhangkannan Narinasamy, Melaka ........ RM 1,000.00
11. Kumar Urology & Stone Centre Sdn. Bhd., Melaka ........ RM 1,000.00
12. Gujarati Vanikh Sangh, Melaka ........ RM 1,001.00
13. Y.Bhg. Tuan Kalaichelvan Muniandy untuk mendiang Muniandy Mottayan ........ RM 601.00
14. Y.Bhg. Tuan Nadarajan T.R.Murugayan, Negeri Semblan ........ RM 500.00
15. Y.Bhg. Kuppusamy Chellappan, Petaling Jaya ........ RM 500.00
16. Y.Bhg. Dato' Dr.S.Ravih Subramaniam, Melaka ........ RM 500.00
17. Y.Bhg. Tuan Nagarajan, Ajuntha Textiles, Melaka ........ RM 500.00
18. Y.Bhg. Datuk Dr.Pandurangan, Melaka ........ RM 500.00
19. Y.Bhg. Tuan Hasmukhary Chotalal, Melaka ........ RM 500.00
20. Y.Bhg. Datuk Dr. T.R.Ramu, Melaka ........ RM 500.00
21. Y.Bhg. Datuk Dr.Mahinder Singh, Melaka ........ RM 500.00
22. Y.Bhg..Lt.Col (R) Datuk Dr.Senasi Annamalai, Melaka ........ RM 500.00
23. Star Kris Trading Sdn Bhd, Melaka ........ RM 500.00
24. Y.Bhg. Tuan Rangiah Muthusamy ........ RM 500.00
25. Penderma Ikhlas, Melaka ........ RM 500.00
26. Persatuan Penganut Sri Maha Samayaburam Mariyamman, Melaka ........ RM 500.00
27. Y.Bhg. Tuan Ananthakumar Vellasamy, Melaka ........ RM 400.00
28. Y.Bhg. Datuk Dr.K. Ramaswami, Melaka ........ RM 300.00
29. Y.Bhg. Datuk Dr.Peraba Subramaniam, Melaka ........ RM 300.00
30. Y.Bhg. Datuk Dr.Amaranathan V Pathamanathan, Melaka ........ RM 200.00
31. Y.Bhg. Dr.Dharmalingam Muthiah, Sabah ........ RM 200.00

## மலாக்கா மாநில இந்துக் கோயில்கள் நூல் வெளியீட்டுத் துணைக் குழு

**ஆலோசகர்:**

Datuk Prof. Dr. Paramasivam Muthusamy

**ஆய்வு, எழுத்து, மொழி பெயர்ப்புப் பொறுப்பாளர்கள்**

En.Tho.Ka.Narayanasamy

Datuk Wira R. Perumal

En. Selvarajan Rengasamy

**படங்கள் சேகரிப்பு:**

En.Krishenam Gengan

**கணினி பயன்பாடு:**

Datuk Wira R.Perumal

**கோயில் ஆய்வு உதவியாளர்கள்:**

En.Tho.Ka. Narayanasamy (55)

En.Selvarajan Rengasamy (35)

Datuk Wira R.Perumal (14)

En.Krishenam Gengan (11)

En.Ananthakumar Vellasamy (8)

Datuk Mejar (B) Sekar (8)

En.S.Gunasekharan (6)

En.Ganes Rethnam (2)

En.P.Velayutham (2)

En.Raman Govindasamy (2)

En.Kumar Arumugam (2)

En.E.Mathialagan (1)

## மலாக்கா தன்னார்வச் சமூக ஆய்வாளர் சங்கம்
சங்கப் பொறுப்பாளர்களும் உறுப்பினர்களும்



**Datuk Prof. Dr. Paramasivam Muthusamy**
*PENGERUSI*



**Datuk Wira R.Perumal**
*NAIB PENGERUSI*



**En. Tho.Ka.Narayanasamy**
*SETIAUSAHA*



**En. Krishenam Gengan**
*PENOLONG SETIAUSAHA*



**En. Selvarajan Rengasamy**
*BENDAHARI*



**Dr. Nachiappan Murugavadigal**
*AJK*



**En. Ananthakumar A. Vellasamy**
*AJK*



**En. Saravanan Kuppusamy**
*AJK*



**En. S.Gunasekharan**
*Ahli*



**En. Ganes Rethanam**
*Ahli*



**En. Rangiah Muthusamy**
*Ahli*



**En. Mathiyalagan Elloo**
*Ahli*



**En. Kumar Arumugam**
*Ahli*



**En. P.Velayutham**
*Ahli*



**En. Raman Govindasamy**
*Ahli*